20

# அகத்திணைக் கொள்கைகள்

பேராசிரியர். டாக்டர்.

ந.சுப்பு ரெட்டியார்

First Edition, December, 1981



AKATTINAI-K-KOLKAIKAL

PRICE: RS 50-00

Selvi. R. Mirunalini
Selvi. R. AnuRatha } Publication

Printed at:

Novel Art Printers,
137, Jani Jan Khan Road
Madras-600 014. Phone: 82731



சித்தாந்த கலாநிதி, உரை வேந்தர்,
பேராசிரியர் ஔவை துரைசாமி பிள்ளை

## அன்புப் படையல்

சங்கநூற் கடலில் தோய்ந்தெழு கொண்டல்,
சைவசித் தாந்தத்தின் திலகம்;
மங்கலத் தமிழ்த்தாய் இதயத்தை மலர்த்தும்
வான்சுடர்; வள்ளலார் நூலின்
இங்கிதம் தேரும் அஞ்சிறைத் தும்பி;
இமயத்தைப் புலமையால் தாழ்த்தும்
துங்கமார் ஔவை-நம்-துரை சாமித்
தோன்றலுக் குரியதிந் நூலே.

# அணிந்துரை

(பேராசிரியர் வ. சுப. மாணிக்கம், துணைவேந்தர், மதுரை-காமராசர் பல்கலைக் கழகம், மதுரை-625 021)

நண்பர் பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் துறை பல வல்ல ஒரு பெருந்தமிழ்ப் பேராசிரியர் என்பதனை நாடறியும். ஐம்பூத நுட்பவியலை அழகான தமிழில் ஆற்றலுடன் எழுத முடியும் எனத் தமிழின் மொழியாண்மையைக் காட்டி மூன்று பரிசு பெற்றவர். பாடநூலாகப் பழைய அறிவியலை எழுதித் தமிழைப் பிற்படுத்தாமல் புத்தம் புதிய அறிவியற் பிடிப்புக்களை வளருந் தமிழில் வரையாது எழுதிவரும் ஆக்க எழுத்தாளர்; இத்தனிச் சிறப்பு இத்தமிழ்ப் பேராசிரியர்க்கே உண்டு.

எழுதுந்துறை எதுவாயினும் அறிவியல் உறவாடுவதை இவர்தம் கைவண்ணத்திற் காணலாம். 'அகத்திணைக் கொள்கைகள்' என்ற இவ்வகல நூலிலும் அறிவியல் உண்மைகள் படிந்துள. கபிலரின் 'குறிஞ்சிப் பாட்டு'ப் பிறப்பினைக் கூறுங்கால் "அறிவியலாசிரியர் தாமே தம் செய்திறனால் கருவியொன்று சமைத்துச் சில அறிவியல் மெய்ம்மைகளை விளக்குவதுபோல் ஆசிரியப் பெருந்தகையான கபிலரும் தாமே பாவியற்றி அதனைக் கொண்டே அகத்திணை நெறியின் உயிரனைய கருத்தினை அவ்வரசனுக்குத் (ஆரியவரசன்பிரகத்தனுக்குத்)தெளிவுறுத்தினர்" என்று உவமங்காட்டுவர். கண்ணும் கண்ணும் சேர்வதால் காமத் தீ பிறப்பதைச் சிக்கிமுக்கிக் கற்கள் இரண்டும் சேர்ந்து தீ உண்டாகும் அறிவியல் கருத்துக்கு ஒப்பிடுவர். ஆண்-பெண் பாலியல்களை எடுத்துத் தந்து அகத்திணைமைகளை விளக்கும் இடங்கள் இந்நூலில் பலவுள. இவையெல்லாம் ஆசிரியரின் அறிவியற் பயிற்சியையும் பயன்கோளையும் காட்டுவதோடு கழகச் சான்றோர்களின் இலக்கியப் படைப்புக்கள் இன்றைய அறிவியலுக்கும் வாழ்வுக்கும் பொருந்துவன என்னும் மெய்ப்பிக்கின்றன.

அகத்திணையாய்வு, அறிஞர் ரெட்டியார்க்குப் பழகிய துறையேயாகும். 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை', 'காதல் ஓவியங்கள்', 'முத்தொள்ளாயிர விளக்கம்', 'இல்லறநெறி' 'கவிதையநுபவம்' என்ற இவர் முன்னைய நூல்கள் இப்பொருள் சார்ந்தன; எனினும் 'அகத்திணைக் கொள்கைகள்' என்ற இப் புதிய உரைநடைப் பனுவல் அகலிருவிசும்புபோல அனைத்து அகக் கூறுகளையும் தன்னுள் அடக்கியும் சித்திரக் கம்பளம்போல மடிப்பின்றி வனப்புற விரித்தும் காட்டும் பெரு நூலாகும்.

இந்நூலைக் கற்பவர் தொன்மை முதல் இன்றுவரை எழுந்த அகத்திணைக் கோட்பாட்டின் தொகைகளையும் உடன்பாடு களோடு மறுப்புக்களையும் மறுமறுப்புக்களையும் ஒருங்கே கற் கலாம்; சங்க விலக்கியத்தோடு பின் வந்த இலக்கியங்கள் அகத் துறையில் உறவாடுவதையும் வழிமாறுவதையும் கற்கலாம் ஆசிரியர்க்கு அன்பிலும் ஆய்விலும் பிறப்பிலும் ஈடுபாடான; ஆழ்வார் பிரபந்தங்களில் அகத்துறைகள் தெய்வச்சாயல் பெறு வதையும் கற்கலாம்; 'மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத' என்ற நாச்சியார் திருமொழி தமிழ் நாகரிகத்தின் கரணச் சான்றா தலையும் கற்கலாம்.

நூலின் தலைப்புக்கள் மரபான வரிசையான கோவைத் தலைப்புக்களாக இருந்தாலும் ஒவ்வொரு பகுதியின் கீழும் விரிந்த விளக்கமும், பரந்த மேற்கோளும் முரண் அறுக்கும் சான்றும், காலச் சாயலும் நீரோட்டம்போல் தொடர்ந்து வரு கின்றன.

'தமிழ்' என்ற சொல்லுக்கு அகத்திணை என்ற பொருள் உண்டெனின், 'தமிழன்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? பாரதத்திற்கே உரிய தனிமலை இமயமலை என்று அறிபவன் 'பாரதன்' ஆவான். தமிழுக்கே உரிய தனியிலக்கியம் அகத்திணை என்று அறிபவன் 'தமிழன்' எனப்படுவான். தமிழின் பெருமையும் அருமையும் உணர்ந்த புலவர்கள் தமக்காக எழுதுவதில்லை; தமிழர்க்காக எழுதுகின்றனர். பிறப்பால் தமிழர்களைச் சிறப்பா லும் தமிழராக்க எழுதுகின்றனர். இச்சிறந்த நோக்கோடு எழுதிய இனிய பெரிய இந்நூலைக் கற்றுப் பயனடைய வேண்டுகின்றேன்.

மதுரை-625 621
7-12-1981

வ. சுப. மாணிக்கம்

# நூல்முகம்

மின்இலங்கு திருவுருவும், பெரிய தோளும்,
கரிமுனிந்த கைத்தலமும், கண்ணும், வாயும்,
தன்அலர்ந்த நறுந்துழாய் மலரின் கீழே
தாழ்ந்துஇலங்கு மகரம்சேர் குழையும் காட்டி;
என்நலனும், என்நிறையும், என்சிந்தையும்
என்வளையும் கொண்டு;என்னை ஆளும் கொண்டு
பொன்அலர்ந்த நறுஞ்செருந்திப் பொழிலி னூடே
புனல்அரங்கம் ஊர்என்று போயி னாரே.[1]

—திருமங்கையாழ்வார்

உலக மொழிகளனைத்திலுமுள்ள இலக்கியங்களிலெல்லாம் காதல் கூறு இன்றியமையாதுஇருப்பினும் நந்தமிழ்மொழியில் அது திணை, துறை என்று வரையறையில் ஒருநெறிப்பட்டு வாழ்க்கை நெறியாக அமைந்திருந்தல் தனிப் பெருஞ்சிறப்பாகும். இக் காதல்பற்றிய இலக்கியம் அகப்பொருள் என்ற திருநாமமும் பெற்றது அகப்பொருள் என்றால் தமிழ், தமிழ் என்றால் அகப்பொருள் என்று பேசும் அளவுக்குச் சிறப்பினையும் பெற்றுத் திகழ்வது தமிழ் மொழிக்குக் கிடைத்த தனிப்பெருஞ் சிறப்பாகும். சங்க இலக்கியம் முதல் பிற்கால இலக்கியம் வரை அகப்பொருள் கூறுகளமைந்த இலக்கியம் பெருகி இருத்தலும் இத்தகைய இலக்கியத்திற்கு இலக்கணமும் அமைந்து அதனை நெறி பிறழாதிருக்கச் செய்திருத்தலும் அந்த இலக்கிய வகையின் பெருமையை மேலும் உயர்த்துகின்றது.

அகஇலக்கியத்தின் கொள்கைகள் எல்லாம் அடங்கிய ஒரு தனி நூல் முழு நூலாக எழுதவேண்டுமென்ற என் நீண்ட நாள் அவா திருப்பதியில் நிறைவேறியது. ''பைந்தமிழ்ப் பின்சென்ற

1. திருநெடுந்தாண்டகம்-25

பச்சைப் பசுங்கொண்டலாகிய'' ஏழுமலையான் எழுந்தருளி யிருக்கும் திருத்தலத்தில், அவன் திருவடிவாரத்தில் நிறுவப் பெற்றுள்ள பல்கலைக் கழகத்தில் அவனருளால் பணியாற்றிய போது அவனருளாலேயே தமிழ்த் துறையை நிறுவும் பேறும், அத் துறையின் தலைமையை ஏற்று அதனைச் செவ்வனே நடாத்தும் பேறும் பெற்றபோது தமிழ் எம். ஏ. பயிலும் மாணாக்கர்கட்கு 'அகவிலக்கியம்' கற்பிக்கும் பொறுப்பினை யானே வலிந்து மேற் கொண்டேன்; கிட்டத்தட்டப் பத்தாண்டுகள் இப்பணி தொடர்ந்து நடைபெற்றது. வாரந்தோறும் நடைபெற்ற கருத் தரங்குகளில் இந்த இலக்கியத்தின் கிட்டதட்ட எல்லாப்பகுதி களும் மாணாக்கர்கள் ஆசிரியர்கள் இவர்களுடன் கலந்து ஆயப் பெற்றன; ஆய்வில் சூடும் பிறந்தது; ஒளியும் தோன்றியது. ஓரளவு தெளிவும் ஏற்பட்டது. இந்த முயற்சியின் விளைவாக எழுந்ததே 'அகத்திணைக் கொள்கைகள்' என்ற இந்நூல். இந்த நூலின் விரிவான 'உள்ளுறை' ஆய்வின் போக்கினை ஒருவாறு தெளிவுறுத்தும்.

இந்த நூலைச் சிறிது கோவைச் சாயலோடு அமைத்துள்ளேன். புதிதாக அகத்திணை உலகில் புகுவோருக்கு ஓரளவு இவ்வமைப்பு துணை செய்யக்கூடும் என்றும், அகத்திணைக் கூறுகளை அடிப் படையுடன் அறிந்து கொள்வதற்குத் துணையாகவும் இருக்கலாம் என்றும் கருதியே இவ்வமைப்பினை மேற்கொண்டேன். அகத் திணையை ஆழ்ந்து கற்போருக்கும் ஆராய்வோருக்கும் பல புதிய தடங்களையும் அமைத்துள்ளேன். நூலில் 'நுழைந்து செல்வோர்' இவற்றை நன்கு அறியலாம். பல்வேறு இலக்கியங்களிலிருந்தும் தரப்பெற்றுள்ள காட்டுகள் அவ்வவ் இலக்கியங்களைப் பயில வேண்டும் என்ற காதலையும் 'களவியல்' போக்கில் எழுப்பும்; உடனே அவற்றுடன் 'கற்பியல்' போக்கில் ஊடாடவும் வழியமைக் கும். படிப்போரிடம் எனது இந்நோக்கங்கள் செயற்படுமாயின் 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற குறிக்கோள் நிறைவேறும் என்பது என் அதிராத நம்பிக்கை.

இந்நூலை விரைந்து அழகுற அச்சிட்டு உதவிய நாவல் ஆர்ட் பிரிண்டர்சின் அதிபர் கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்கட்கும், மேலுறையைக் கண்கவர் வனப்புடன் அச்சிட்டுக் கட்டமைத்துத் தந்த கந்தன் அடிமை எஸ். பி. சண்முகம்பிள்ளை அவர்கட்கும்

(உரிமையாளர் Ganesh Printing and Binding, 6, பிலிப்ஸ் தெரு, சென்னை-600 001) என் உள்ளார்ந்த நன்றியைப் புலப்படுத்துகிறேன்.

'வெள்ளையப்பன் இல்லாது வேலை யொன்றும் நடவாது' என்பது எல்லோரும் வாழ்வில் காணும் அநுபவம். இந்நூலை வெளியிடத் தமிழக அரசு ஐந்து ஆயிரம் வெண்பொற்காசுகளை மானியமாக வழங்கியது. எனது சிறிது சேம நிதியில் இவ்வெளியீடு மேலும் பல ஆயிரம் வெண்பொற்காசுகளை விழுங்கியது. தாள்கள் விலையும், அச்சுக் கூலியும், கட்டமைப்புச் செலவும் பெருகியுள்ளமையே இதற்குக் காரணம். நூற்படிகளைப் பொறுப்புடன் பாதுகாப்பாக வைக்கவும், நன்முறையில்விற்கவும்கணிசமான கழிவு தரவேண்டியுள்ளது. நூலில் மூழ்கின பல்லாயிரமும் என் கைக்கு (வட்டி இல்லாவிட்டாலும்) என்று வரும் என்ற கவலை அவ்வப்போது தோன்றுகின்றது. தமிழகத்தின் நூலக அமைப்புகளும், பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகங்களும், முதுகலைப் பட்டத்திற்கு முனைபவர்களும், ஆய்வு மாணாக்கர்களும் எனக்குத் தோன்றும் துணையாக இருப்பார்கள் என்றும், இதற்குத் தோன்றாத் துணையாக எம்பெருமான் நிற்பான் என்றும், என் உழைப்பையும் தமிழுலகம் ஏற்க ஒரு வாய்ப்பு தரவேண்டும் என்றும் நம்பியே இவ்வெளியீட்டில் இறங்கினேன். ஏமாற்றம் இருக்காது என்றே கருதுகின்றேன். செலவில் ஒரு பகுதிக்கு நிதி உதவிய **தமிழக அரசுக்கு** மிகவும் கடமைப்பட்டுள்ளேன். தமிழ் வளர்ச்சி இயக்கத்தின் மூலம் என் நன்றியைத் தமிழக அரசுக்குப் புலப்படுத்துகிறேன்.

பேராசிரியர் டாக்டர் **வ. சுப. மாணிக்கம்** என் நெடுநாளைய நண்பர்; பண்டிதமணியுடன் வைத்தெண்ணக் கூடிய பெரும் பேராசான் 'தமிழ்க் காதல்' கண்டவர்; அத்ததலைப்பில் ஆய்ந்து டாக்டர் பட்டமும் பெற்றவர். தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் ஆழங்கால்பட்டு மூழ்கி முத்தெடுப்பவர். 'வள்ளுவத்தை' வாழ்க்கையுடன் பொருத்திக் காட்டி வான்புகழ் பெற்றவர். இவர் படைத்த நூல்களில் 'தமிழ்க் காதலும்' 'வள்ளுவமும்' சிந்தனைக் களஞ்சியங்கள். இத்தனைக்கும் மேலாக நேர்மையும் தூய்மையும் இவர்தம் 'அக, புற வாழ்க்கை'யின் குறிக்கோள்கள். இத்தகைய தூய உள்ளத்திடமிருந்து 'அணிந்துரை' பெற்றது இந்நூலின் பெரும் பேறு; என்னுடைய பேறுமாகும். அணிந்துரை வழங்கிய அன்பருக்கு அகங்குளிர என் நன்றி உரித்தாகும்.

சித்தாந்த கலாநிதி உரைவேந்தர் பேராசிரியர் ஔவைதுரைசாமி பிள்ளையை அறியாத தமிழர்கள் இரார். இவர்தம் தமிழ்ப் பணி பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பெறவேண்டிய ஒன்று. நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் போன்ற உரையாசிரியர்கள் வரிசையில் வைத்து எண்ணக்கூடியதகுதி பெற்றவர். இவர்தம் புறநானூற்றுரை, பதிற்றுப்பத்து உரை திட்பமும் நுட்பமும் நுணுக்கமும் கொண்டவை என்பதைத் தமிழறிஞர்கள் நன்குஅறிவர். ஐங்குறு நூறு, நற்றிணைஎன்ற அகஇலக்கியங்களின் உரை அகத்திணையின் நுட்பங்களையெல்லாம் எடுத்துக்காட்டக் கூடியவை என்பதை அகஇலக்கியம் கற்போர் நன்கு அறிவர். அகத்திணைக் கொள்கைகளை எடுத்து விளக்குவார்க்குப் பெரிதும் துணை நிற்பவை. சில சித்தாந்த நூல்களைப் பதிப்பித்தும் நுணுக்க உரைகளைக் கண்டும் பெரும்புகழ் பெற்ற பெருமகனார் இவர். இவர் சிவப்பேறு பெறுவதற்கு முன்னர் நோயுடன் போராடிக் கொண்டிருந்த காலத்திலேயே இந்நூலை இவருக்கு அன்புப் படையலாக்கி இவர்தம் ஆசி பெறத் துடித்தேன். பல்வேறு காரணங்களால் நூலை அச்சேற்றி வெளிக் கொணர முடியவில்லை. எனினும் இந்நூலை அமரர் ஔவை துரைசாமி பிள்ளையவர்கட்குப் படைத்துப் பெருமிதம் கொள்கின்றேன். இவர்தம் ஆசியால் யானும் என்போன்ற அகஇலக்கிய ஆய்வாளர்களும் மேலும் மேலும் தெளிவு பெறுவோம் என்பது என் திடமான நம்பிக்கை.

திருப்பதியில் யான் பணியாற்றியபோது என்னைப் பல்வேறு வகைகளில் துன்பத்தில் உழலச் செய்தும்,பணியில் மகிழச்செய்தும், மனஉறுதியை நல்கியும் என்னைச் செயற்படுத்திய திருவேங்கடவாணனை நினைவுகூரும் பாங்கில் திருமங்கை யாழ்வாரின் பாசுரம் ஒன்று என் மனத்தில் குமிழியிடுகின்றது.

காதில் கடிப்பிட்டுக் கலிங்கம் உடுத்து
தாது நல்லதண்அம் துழாய்கொடு அணிந்து
போது மறுத்து, புறமே வந்துநின்றீர்—
ஏதுக்கு? இதுஎன்? இதுஎன்? இதுஎன்னோ?[2]

இஃது ஆய்ச்சி ஒருத்தி கண்ணனோடு ஊடி உரைக்கும் பாசுரமாகும். வேங்கடவாணனும் வேங்கடகிருஷ்ணன்தானே. நல்ல உடல்

2. பெரிய திருமொழி 10.8:1

நலனும் மனவளமும் பல்வகைத் திறனும் எனக்குப் பாங்குடன் நல்கிய அப்பெருமான் தான் பைந்தமிழ்க் காதலனாக இருந்தும் என்னை நன்முறையில் தமிழ்ப்பணி புரியவொட்டாது தடுத்து நிறுத்திக்கொண்டிருக்கும் நிலையை எண்ணி ஆழ்வார் நாயகி நிலையை எய்தி யானும் அவனோடு ஊடாமல் என் செய்வது? அடிக்கடி அவன் என் மனக்கண் முன்வந்து நிற்கின்றான். "காதில் கடிப்பு (குண்டலம்) இட்டுவர வேண்டுகையாலும் அரையில் கலிங்கம் உடுத்துக்கொண்டு வரவேண்டுகையாலும் நல்ல தண்ணந்துழாய் அணிந்துகொண்டு வரவேண்டுகையாலும் இவற்றுக்குத் தாமதமாயிற்றேயன்றி உன்னையொழிய மற்றொருத்தியிடத்தே போயிருந்தேனாய்த் தாமதித்து வந்தேனல்லேன்" என்று சூசிப்பிக்கின்றான். நாயகி நிலையில் 'இதுவென்? இதுவென்? இதுவென்?' என்று சொல்லத் தோன்றுகின்றது. அதாவது "[இதுவென்?] வெறுங்காதே அநுபவிக்கலாம்படிப் பரமபோக்கியமாயிருக்கக் காதிலே கடிப்பு இடுவானேன்? [இதுவென்?] 'பூணித்தொழுவினிற்'புக்குப் புழுதியளைந்த பொன்மேனியைக் காணப் பெரிதும் உகப்பார்' நாங்களிருக்கக் கலிங்கம் உடுத்து அத்திருமேனியை மறைப்பானேன்? [இதுவென்?] 'சர்வகந்த:'என்கிறபடியே திருமேனிதானே பரிமளம் பொருந்தியிருக்கத் திருத்துழாய் பரிமளம் ஏறிடுவானேன்? இருந்தபடியே உகக்கிற எங்களுக்காக அலங்கரித்து வரவேண்டுமா?" என்று சொல்லத் தோன்றுகின்றது. "[எதுக்கு இது?] கொடும் பசி வேளையிற் கிடையாத சோறு ஏதுக்கு? உம்மழகை நீரே கண்டுகொண்டு உம்முடம்பையும் நீரே தொட்டுக்கொண்டு நீரே மோந்துகொண்டு நீரே கட்டிக்கொண்டு நீரே மகிழ்ந்திரும்; எங்களுக்கேதுக்கு? வேண்டா வேண்டா" என்று கதவடைக்கத் தோன்றுகின்றது.

எது எப்படியாயினும் அவன்தானே மாதா பிதா குரு தெய்வம் எல்லாம்.

அரிசினத்தால் ஈன்றதாய்
அகற்றிடினும் மற்றுஅவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி;
அதுவேபோன்று இருந்தேனே.[3]

---

3. பெருமாள் திருமொழி 5:1

என்ற குலசேகராழ்வாரின் திருவாக்கினையொட்டி அவனைத் தானே பற்றவேண்டும்? எனவே, எனக்கு எல்லா நலன்களையும் ஈந்து (ஈயும்) என்னைக்கொண்டு இந்நூலை எழுதுவித்து, தமிழக அரசினிடமிருந்து மானியமும் பெறச்செய்து, இந்நூல் வெளிவரக் காரணமாயிருக்கும் ஏழுமலையப்பனை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

இன்றுஆக, நாளையே ஆக, இனிச்சிறிது
நின்று ஆக, நின்அருள் என்பாலதே; நன்றாக
நான்உன்னை அன்றிஇலேன் கண்டாய்; நாரணனே,
நீஎன்னை அன்றி இலை.[4]

—திருமழிசையாழ்வார்

சென்னை-40
திசம்பர் 21, 1981

ந. சுப்புரெட்டியார்

4. நான்காம் திருவந்தாதி-7

## சுருக்க-விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| அகத்திணை | தொல்காப்பியம் அகத்திணையியல் |
| அகம். | அகநானூறு |
| இளம். | இளம்பூரணம் |
| இளம்.உரை. | இளம்பூரணர் உரை |
| இறை கள. | இறையனார் களவியல் |
| உவம. | தொல்காப்பியம் உவமவியல் |
| ஐங்.ஐங்குறு, | ஐங்குறு நூறு |
| ஐந். எழு. | ஐந்திணை எழுபது |
| கம்பரா. கம்ப. | கம்பராமாயணம் |
| கலிங்.பரணி | கலிங்கத்துப்பரணி |
| கலி. கலித். | கலித்தொகை |
| களவியல் | தொல்காப்பியம் களவியல் |
| கற்பியல் | தொல்காப்பியம் கற்பியல் |
| குறள் | திருக்குறள் |
| குறுந். | குறுந்தொகை |
| சிந்தா. சீவகசிந். | சீவகசிந்தாமணி |
| சிலப். | சிலப்பதிகாரம் |
| சிறுபாண் | சிறுபாணாற்றுப்படை |
| செய்யுளியல் | தொல்காப்பியம் செய்யுளியல் |
| தஞ். கோ. | தஞ்சைவாணன் கோவை |
| திருக்கோ. திருக்கோவை | திருக்கோவையார் |
| திருவாய். | திருவாய்மொழி. |
| திருவிருத். | திருவிருத்தம் |
| தொல். பொருள். | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நச். | நச்சினார்க்கினியம் |
| நச்.உரை. | நச்சினார்க்கினியர் உரை |
| நம்பி. அகப். | நம்பி அகப்பொருள் |
| நற். | நற்றிணை |
| நாச். திரு. | நாச்சியார் திருமொழி |
| நாலடி. | நாலடியார் |
| நீதி.விள. | நீதிநெறி விளக்கம் |
| பட்டின. | பட்டினப்பாலை |
| பத்துப்பா | பத்துப் பாட்டு |
| பரிபா. | பரிபாடல் |
| புறத்திணை | தொல்காப்பியம் புறத்திணையியல் |
| புறம். | புறநானூறு |
| பெரு திரு. | பெருமாள் திருமொழி |
| பேரா. | பேராசிரியம் |
| பேரா.உரை | பேராசிரியர் உரை |
| பொருளியல் | தொல்காப்பியம் பொருளியல் |
| மணிமே. | மணிமேகலை |
| மதுரைக். | மதுரைக் காஞ்சி |
| மரபியல் | தொல்காப்பியம் மரபியல் |
| முல்லைப். | முல்லைப் பாட்டு |
| மெய்ப். | தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் |

# உள்ளுறை

# I. அகத்திணைத் தோற்றம்

உலகிலுள்ள மொழிகளில் தமிழ்மொழியில் மட்டி லும் பொருள் இலக்கணம் அமைந்திருப்பது அதன் சிறப்பு; அகத்திணை மேலும் தனிச்சிறப்பு. அகத்திணை 'தமிழ்' என்னும் சொல்லுக்கு மறுபெயராய் அமைந் துள்ளது. அகத்திணை நெறியில் மொழிவரம்பு உண்டு. இது மூவகையாகப் பகுத்துப் பேசப்பெறும்; இது விரித் தும் நுவலப் பெறும். மேலும், அகத்திணையை எழு திணைகளாகத் — எழுவகை ஒழுக்கங்களாகத்—தொல் காப்பியம் வகைப்படுத்திக் காட்டும். அகத்திணை வடித் துக் காட்டும் காதற்பாங்கு தனித்தூய்மை கொண்டது. இந்தக் காதற்பாங்கு ஐந்திணை நெறி என்று போற்றப் பெறும். ஐந்திணை நெறி ஐவகை நிலங்களில் நடப்ப தாகச் சான்றோர் நாடக வழக்காகக் கவிதை புனைவது அவர்தம் புலனெறி வழக்காகும். திணைக்குப் புறநடை யும் உண்டு. ஒருதிணைக்குட்பட்ட கூறுகள் பிறிதொரு திணையின் கட்டுக்கோப்போடு கலந்து நிற்கும் பாங்கு 'திணை மயக்கம்' என்று வழங்கப்பெறும். இதற்கும் தொல்காப்பிய நெறியில் இடம் உண்டு. இன்னோரன்ன கருத்துகள் இப்பகுதியில், ஆறு இயல்களில், விளக்கம் பெறுகின்றன.

# தோற்றுவாய்

அமிழ்தினும் இனிய தமிழ் மொழியின் தனிச் சிறப்பு அதில் அமைந்துள்ள பொருள் இலக்கணம் ஆகும். பிற மொழிகள் எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் கொண்டனவேயன்றி மக்கள் வாழ்வியலை ஆராய்ந்த பொருள் இலக்கணமும் கண்டவை அல்ல. பொருள் இலக்கணமும் அகம் புறம் என்றும் இருதிணை வடிவு அமைந்ததாகத் தமிழ் மொழி ஒன்றின் கண்ணே தான் நின்று இலங்குவதாகப் பன்மொழி அறிஞர்களும் ஒரு முகமாக ஒப்புக் கொண்டுள்ளனர். இந்த இருதிணையுள்ளும் புறத்திணைப் பொருளான வீரம், கொடை முதலியவை மக்களுள்ளும் சிலரிடமே காணப் பெறுபவை. அகத்திணைப் பொருளான காமமோ பருவம் நிரம்பிய உயர்திணை அஃறிணை உயிர்க்கெல்லாம் பொதுவாய் அமைந்து கிடப்பது.

> எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
> தான் அமர்ந்து வரூஉம் மேவற் றாகும்[1]

என்று ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியர் சுட்டியவாறு பிறவியிலேயே உடம்போடு ஒட்டிய இயல்புடையது. இத்தகைய இன்ப உணர்வை—காமத்துடிப்பை—நெறிப்படுத்திய பொருளாகக் கொண்டவை அகத்திணைப் பாடல்கள். வாழ்க்கை நெறியுடன் வாழ்ந்த சங்கப் புலவர்கள் மன்பதையை அந்நெறியில் வாழ்விக்க விரும்பியே உலகம் நீடுநின்று வாழ உயிர்க் கொடையாகத் திகழும் காம உணர்ச்சியைச் சிறப்புடைய பொருளாகக் கொண்டு பாடல்களை யாத்தனர். 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற குறிக்கோள் நெறியுடன் வாழ்ந்தவர்கள் சங்கப் புலவர்கள்.

அகத்திணையின் இன்றியமையாமையையும் சிறப்பினையும் புலப்படுத்தவே பொருளிலக்கணம் கண்ட தொல்காப்பியர்

---

1. பொருளி-27 (இளம்)

புலப்படுத்தலையும் கண்டு தெளியலாம். அகத்திணைப் பாடல் **அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல்** என நான்கு இயல்கள் வகுத்து, அகத்திணை நெறியினைத் தெளிவு பட விளக்கியுள்ளார். புறத்திணைப் பொருளை ஒரே இயலில் அவர் விளக்கியதும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது. ஆரிய அரசன் **பிரகத்தனு**க்குத் தமிழின் தனிச் சிறப்பை அறிவுறுத்த விரும்பிய சங்கப் புலவராகிய **கபிலர்** பெருமான் அவனுக்கென்றே **குறிஞ்சிப் பாட்டு** என்ற அகத்திணைப் பாவினை யாத்தனரேயன்றி புறப் பாட்டொன்றை யாத்தனர் அல்லர். காரணம் என்ன? தமிழ் மொழியின் தனிவீற்றினைப் பிற மொழியாளர் உணர வேண்டு மேல் அவர்கள் முதலில் அறிய வேண்டும் பொருள் அகப்பாட்டே என்று கருதியதேயாகும். அறிவியலாசிரியர் தாமே தம் செய் திறனால் கருவியொன்று சமைத்துச் சில அறிவியல் மெய்ம்மை களை விளக்குவதுபோல் ஆசிரியப் பெருந்தகையான கபிலரும் தாமே பாவியற்றி அதனைக் கொண்டே அகத்திணை நெறியின் உயிரனைய கருத்தினை அவ்வரசனுக்குத் தெளிவுறுத்தினார்.

அகத்திணையின் சிறப்பு வேறு சில குறிப்புகளாலும் அறியப் பெறும். ''ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் **தமிழ்** அறிவித்தற்குப் பாடியது'' என்ற குறிஞ்சிப் பாட்டின் துறைக்குறிப்பும், ''இந்நூல் என் நுதலிற்றோ எனின், **தமிழ்** நுதலியது''[2] என்ற இறையனார் களவியலுரையாசிரியன் குறிப்பும் ''ஒண்தீந் **தமிழின்** துறைவாய் நுழைந்தனையோ?''[3] என்ற **திருக்கோவையார்** பாடலடியும் இதன் சிறப்பினைப் புலப்படுத்துவதைக் காணலாம். இந்த மூன்று இடங்களிலும் **தமிழ்** என்னும் சொல் அகத்திணைக்கு மறுபெயராய் நிற்றல் அறியப்பெறும். ஒரு மொழியின் பெயர் அம்மொழியின்கண் தோன்றியுள்ள பல்வகை இலக்கியங்களுள் ஒருவகை இலக்கியத்திற்கு மட்டிலும் பெயராய் ஆளப்பெறு மாயின் அந்த இலக்கிய வகை அம்மொழியிலன்றிப் பிற எம்மொழி யிலும் காண்டற்கில்லை என்பது தெளிவாகின்றதன்றோ? இதனால் உலகில் நின்று நிலவும் மொழிகளுள் தண்டமிழ் மொழியின் தனிச் சிறப்பும் தமிழிலக்கிய வகைகளுள் அகத் திணையின் முதற் சிறப்பும் வெள்ளிடை விலங்கலெனத் தெரி கின்றதல்லவா?

**குன்றம் பூதனாரின்** செவ்வேள்பற்றிய பாடலொன்றின்,

---

2. இறை. கள. முதல் நூற்பாஉரை-பக் 14
3. திருக்கோ-20

தள்ளாப் பொருளியல்பின்
தண்டமிழாய் வந்திலார்
கொள்ளார்இக் குன்று பயன்.[4]

[தள்ளா-குன்றாத; பொருள் இயல்பின்-பொருளிலக்கணத்தையுடைய; தண்தமிழ்-இனியதமிழ்.]

என்றஅடிகளால்இதுமேலும்வலியுறுகின்றது. ஈண்டு 'குன்று பயன்' என்றது குன்று தரும் பயன்; அதாவது களவுப் புணர்ச்சியின்பம்; குறிஞ்சி நிலத்து ஒழுக்கமாதலின், இவ்வாறு கூறப்பெற்றது. தமிழின் பொருளிலக்கணத்தைக் கல்லாத அறிவுக் குறையுடையார் காதற் களவினைக் குறை கூறுவர் எனவும், தமிழை ஆய்ந்தவர் களவு நெறியை உடன்படுவர் எனவும் இப்பரி பாடல் தெளிவிக்கின்றது. இங்கு இவ்வாசிரியர் களவிற்புணர்ச்சியை உடைமையான்வள்ளி சிறந்தவாறும்,அத்தமிழை ஆய்ந்தமையான் முருகன் சிறந்தவாறும் உணர்த்துவர்.

பன்னீராண்டு வற்கடம் நீங்கிப் பாண்டிநாடு செழித்த பின்னர் பாண்டிய மன்னன் தமிழ்ப் புலவர்களைத் தேடிக் கொணரச் செய்தனன் என்றும், எழுத்தும் சொல்லும் அறிந்தவரே காணப்பட்டனராக, பொருளில் வல்ல புலவர் யாரும் காணப்பட்டிலர் என்றும், அதனால்பாண்டியன்மிகவும் கவன்றனன் என்றும் இறையனார் களவியலுரையில் ஒருவரலாற்றுக் குறிப்பு உளது. பின்னர் ஆலவாய் அவிர்சடை அண்ணலின் தண்ணருளால் அறுபது நூற்பாக்கள் அடங்கிய அகப்பொருள் நூலைப் பெற்றான் எனவும், இதுவே பொருளதிகாரம் என மகிழ்ந்து உரை வகுக்க ஏற்பாடு செய்தனன் எனவும் அறிகின்றோம். இவ்வரலாற்றால் **பொருள்** என்பது பண்டு அகத்திணையையே நினைக்கச் செய்த சிறப்பு நிலை புலனாவதையும் தெரிந்து கொள்ளுகின்றோம்.

சங்கத் தமிழ்ப் பாடல்களின் தொகை 2381 என்றும், அவற்றுள் அகத்திணை நுதலியவை 1862 என்றும்[5] நாம் அறிவோம். இவற்றைப் பாடிய 473 சங்கச் சான்றோர்களுள் அகம் பாடியவர்கள் மட்டிலும் 378 பேர்களாவர். அகப்பாடல்களின் மிகுதியான எண்ணிக்கையும், அப்பாடல்களைப் பாடியவரின் மிகுதியான தொகையும் அகத்திணையின் சிறப்பையும் ஒருவாறு

4. பரிபா-9 அடி. (25-26)
5. அகம்-400; நற்-400; குறுந்-401; ஐங்குறு-500 (129, 130 கிடைக்கவில்லை); கலித்-149; பரிபா-8; பத்துப்பா-4; ஆகமொத்தம் 1862காண்க.

தொகையும் பாடினோர் தொகையும் புறத்திணைப் பாடல் தொகையினும் பாடினோர் தொகையினும் மும்மடங்கு மிக்கிருத் தலை நோக்குங்கால் சங்கப் புலவர்கள் அகம் பாடுவதையே சிறந்த புலமையென மதித்திருந்தனர் என்ற கருத்து வெளிப்படு கின்றதல்லவா?

சங்கத்துச் சான்றோரின் அகத்திணைப் பாடல்களைப் பயிலுங் கால் ஒவ்வொரு பாடலிலும் ஆண் பெண் உள்ளங்களைக் காண் கின்றோம். இப்பாடல்களில் காதல் தலைமையுடைய தலைவன் தலைவியரைப்பற்றிப் பாங்கன், ஊரார், கண்டோர், அறிவர் முதலியோர் நினைத்த செய்திகளும் புலனாகின்றன. இவற்றை யெல்லாம் நுணுக்கமாக அறியுங்கால் மனித உள்ளங்களின் பல் வேறு நிலைகள் நமக்குத் தெரிகின்றன; உளவியல் மதிநுட்பத் துடன் இவற்றை ஆயவேண்டும் என்ற தெளிவும் நமக்கு ஏற்ப கின்றது.

தொல்காப்பியமும், சங்க இலக்கிய அகப்பாடல்களும், வள்ளுவர் காமத்துப் பாலும் அகத்திணை கொள்கைகளைத் தெளிவுறுத்தும் அரிய மூலமுதல் (Sources) நூல்களாகும். இவற்றை நுணுகிக் கற்குந்தோறும் அகஇலக்கியம் கூறும் உண்மை யான வாழ்க்கை நெறியை இனங்கண்டுகொள்ள முடிகின்றது. அகத்திணை வாழ்க்கை நாடகத்தில் காணப்பெறும் தலைவன் தலைவியரும், பாங்கன், கண்டோர், அறிவர் முதலிய பாடல் மாந்தரும் நெறியுடன் ஒழுகுவதையும், அகப்பாடல்களை யாத்தவர்களும் அவற்றை நெறிதழுவிய முறையுடன் யாத்திருப் பதையும் காணமுடிகின்றது. அகப்பாடல்கள் பண்டைத் தமிழரின் அகவாழ்க்கையையும் நாகரிகச் சிறப்பையும் சித்திரித்துக் காட்டும் பாங்குடன் திகழ்வதைக் கண்டு மகிழலாம்.

## முப்பொருள் பாகுபாடு

அகத்திணை நெறியில் பொருள் வரம்பு உண்டு. உலகியல் வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் பயின்று வரும் பொருள்களை மூவகையாகப் பிரித்துப் பேசுவது அகத்திணை நெறி. அவை **முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள்** என்று வரையறைப் படுத்திப் பேசப்பெறும்.

முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுள் பயின்றவை நாடுங் காலை.[1]

[நுவலுதல்-செல்லுதல்; முறை-முறைமை (Order of preference)]

என்று தொல்காப்பியர் இதற்கு விதி செய்து காட்டுவர். இவை செய்யுளில் பயின்று வருங்கால் ஒன்று ஒன்றனிற் சிறந்து வருதலுடையது. இதற்கு நச்சினார்க்கினியர் தரும் விளக்கம்: ''முதலிற் கருவும், கருவில் உரிப்பொருளும் சிறந்து வரும். இவை மூன்றும் பாடலுட் பயின்று வருமெனவே வழக்கினுள் வேறுவேறு வருவதன்றி ஒருங்கு நிகழா என்பதூஉம், நாடுங்காலே எனவே புலனெறி வழக்கிற் பயின்றவாற்றான் இம்மூன்றையும் வரையறுத்துக் கூறுவதன்றி வழக்கு நோக்கி இலக்கணம் கூறப்படா தென்பதூஉம் பெறுதும். 'நல்லுலகத்து வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின்' (தொல். பாயிரம்) என்று புகுந்தமையிற் பொருளும் அவ்விரண்டினாலும் ஆராய்தல் வேண்டுதலின்.'' என்பது. முதல் கரு உரிப்பொருள் கொண்டே வருவது திணை. இளம்பூரணர் தரும் விளக்கம்: 'முறைமையாற் சிறத்தலாவது; யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும் கருப்பொருளும்

1. அகத்திணை.-3 (இளம்)

உரிப்பொருளும் வரின், முதற் பொருளால் திணையாகும் என்பதூஉம்; - முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டும் வரின், கருப்பொருளால் திணையாகும் என்பதூஉம்; உரிப்பொருள் தானே வரின், அதனால் திணையாகும் என்பதூஉம் ஆம்....... ஒரு பொருட்கு ஒரு காரணம் கூறாது மூன்று காரணம் கூறியது என்னை எனின், உயர்ந்தோர் என்ற வழிக் குலத்தினால் உயர்ந் தாரையும் காட்டும்; கல்வியால் உயர்ந்தாரையும் காட்டும்; செல்வத்தினான் உயர்ந்தாரையும் காட்டும்; அது போலக் கொள்க.'' என்பது.

**முதற்பொருள் :** முதற்பொருள் நிலம் காலம் என இரு வகைப்படும். இதனை,

முதல்எனப் படுவது நிலம்பொழுது இரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே.[2]

என்று கூறுவர் தொல்காப்பியர். ஒரு செயல் செவ்வனே நடை பெறுவதற்கு இடமும் காலமும் இன்றியமையாதவை. இவ்வுண்மையை வள்ளுவப் பெருந்தகை,

ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்.[3]

[ஞாலம்-உலகம்]

எனக் கூறுவர். இடமும் காலமும் இன்றியமையாமை கருதியே அவை முதற்பொருள் என்று தொல்காப்பியரால் வழங்கப் பெற்றுள்ளன. நிலம் இல்லாத இடத்து மக்கள் எவ்வாறு வாழ முடியும்? இயற்கை அன்னை விளைபொருள்களை விளைவித்து உயிர்களைக் காப்பாற்றுவதற்கும், பொருளாதார உலகம் சரியாக இயங்குவதற்கும் முறையே-கால மாறுபாடும் கால்க் கடப்பும் பெருந்துணை புரிவது கண்கூடு.

**நிலப் பாகுபாடு :** முதற்பொருளின் ஒருபகுதியாகிய நிலத்தினை நான்கு பகுதியாகப் பிரித்துக் கூறுவர் தொல்காப்பியர். காடும் காடுசார்ந்த இடமும் **முல்லை** என்றும், மலையும் மலைசார்ந்த இடமும் **குறிஞ்சி** என்றும், வயலும் வயல் சார்ந்த இடமும் **மருதம்** என்றும், மணலும் மணல் சார்ந்த இடமும் **நெய்தல்** என்றும்

2. அகத்திணை.-4 (இளம்)
3. குறள்-484

பெயரிட்டு வழங்கினர் தமிழ்ச் சான்றோர். தொல்காப்பியர் இவற்றை முறையே காடுறை உலகம், மைவரை உலகம், தீம்புனல் உலகம், பெரும்புனல் உலகம் என்று குறிப்பிடுவர். இவற்றைத் தவிர ஐந்தாவது நிலம் ஒன்று உண்டு. இதனைப் **பாலை** என்று நூல்கள் வழங்கும். தமிழ்நாட்டில் இவ்வகை நிலம் இல்லை. இயற்கை மாறுபாட்டால், பருவமழை பெய்யாது வளங்குன்றிய காலத்தில், முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் தம் இயல்பை இழந்து புதியதொரு தன்மையைப் பெறும். இத்தன்மையுடைய நிலத்தைத் தமிழர்கள் பாலை என்று வழங்கினர்.

முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும்.[4]

என்று சிலப்பதிகாரம் கூறுவதாலும் இது நன்கு விளங்கும். மயர்வற மதிநலம் அருளப் பெற்ற நம்மாழ்வாரும்,

நானிலம் வாய்க்கொண்டு நன்னீர்
அறமென்று கோதுகொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்துஉமிழ்
பாலை.[5]

[வாய் கொண்டு-கிரணமுகத்தால் வாயில் பெய்து கொண்டு; அற-அறும்படி; கோது-சுவையற்றபகுதி: சுவைத்து-உருசிபார்த்து; உமிழ்-வெறுத்துக் கழித்த.]

என்று இந்நிலத்தை மிக அழகாகக் குறிப்பிடுவர். ஆழ்வாரும் **நானிலம்** என்ற மரபினையே தழுவினர்.

தொல்காப்பியரும் நான்கு நிலத்தைப் பற்றியே கூறுவர். இதனை,

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெரும்புனல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் பெறுமே.[6]

4. சிலப். காடுகாண்.அடி (64-66)
5. திருவிருத். 26
6. அகத்திணை. 5.

[மாயோன்-திருமால்; சேயோன்-முருகன்: வேந்தன்-இந்திரன்.]

என்று விதியும் செய்து காட்டுவர். தமிழகத்தில் ஐந்தாவது நிலமாகிய பாலை இல்லாததால் அதைப்பற்றி ஆசிரியர் குறிப்பிடவில்லை என்பது ஈண்டு அறியத்தக்கது. நானிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற முறையில் தொல் காப்பியர் குறித்தற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறும் காரணம் அமைதியுடையதாகக் கருதலாம்.[7] ஐந்திணை ஒழுக்கம் எல்லாம் இல்லறம்பற்றி நிகழ்வது. கணவன் சொற்படி நடந்து கற்பொடு பொருந்தி வீட்டிலிருந்து கொண்டு இல்லறமாகிய நல்லறத்தில் ஒழுகுவது மகளிரின் இயல்பாதலால் முல்லை முதலில் கூறப்பட்டது; முல்லை என்ற சொல்லுக்கே **இருத்தல்** என்பது பொருளாகவும் வந்து விட்டது. குறிஞ்சி நில ஒழுக்கமாகிய புணர்தலின்றி இல்லறம் நிகழாதாதலின், முல்லைக்குப்பின் குறிஞ்சியைக் கூறினர் ஆசிரியர். புணர்ச்சிக்குப் பின்னர் இயல்பாக நிகழ்வது ஊடலாதலின் அவ்வொழுக்கத்திற்குரிய மருதத் திணையை அடுத்து வைத்தார். **மருதம்** என்ற சொல்லே ஊடியும் கூடியும் போகம் நுகர்தலைக் குறிக்கும். 'மருதம் சான்ற மருதம் தண்பனை,' என்ற சிறுபாணாற்றுப்படைக்கு (அடி 186) நச்சினார்க்கினியர் இப்பொருளையே வழங்கி யிருத்தல் ஈண்டு நினைக்கத்தக்கது. பரத்தையிற் பிரிவு போலப் பிரிவு ஒப்புமை நோக்கி நெய்தலை இறுதியில் வைத்துள்ளார். நெய்தற்பறை இரங்கற் பறையாதலின் நெய்தல் இரக்கத்தைக் குறிக்கும்.

இந்த முல்லை முதலிய பெயர்கள் அந்தந்த நிலப்பகுதி களில் காணப்பெறும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற மலர்களின் பெயர்களால் வழங்கப்படுவன என்றும், நாளடைவில் அவற்றில் வழங்கும் ஒழுக்கத்திற்கும் அப்பெயர்களே வழங்க லாயின என்றும் கருதுவர் இளம்பூரணர். ஆனால், நச்சினார்க் கினியர் முதலில் ஒழுக்கத்திற்கே அப்பெயர்கள் அமைந்தன என்று கூறுவர். இதனைப் பின்னர் விளக்குவோம்.

**காலப் பாகுபாடு :** முதற்பொருளின் மற்றொரு பகுதியாகிய காலத்தைப் **பெரும் பொழுது** என்றும், **சிறுபொழுது** என்றும் தமிழ்நூலார் பகுத்துப் பேசுவர். பெரும் பொழுது என்பது,

---

7. அகத்திணை-5 இன் உரை.

ஓராண்டினை ஆறு பிரிவாகக் கூறிட்ட பகுதிகள். அவை: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பவை. கார் என்பது, மழைபெய்யும் காலம்; அஃது ஆவணித் திங்களும் புரட்டாசித் திங்களும். கூதிர் என்பது, குளிர்காலம்; அஃது ஐப்பசித் திங்களும் கார்த்திகைத் திங்களும். முன்பனிக்காலம் என்பது, மார்கழித் திங்களும் தைத் திங்களும், பின்பனியாவது மாசித் திங்களும் பங்குனித் திங்களும். இளவேனில் என்பது, சித்திரையும் வைகாசியும் சேர்ந்த காலப்பகுதி. ஆனியும் ஆடியும் சேர்ந்த காலப்பகுதி முதுவேனிலாகும்.[8]

சிறு பொழுது என்பது, ஒரு நாளினை ஆறு கூறிட்ட பகுதிகள். இவற்றை வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல், மாலை, யாமம் என்று குறிப்பிடுவர். வைகறை என்பது இராப் பொழுதின் பிற்கூறு; விடியலாவது, பகற்பொழுதின் முற்கூறு; எற்பாடு என்பது, பகற்பொழுதின் பிற்கூறு; நண்பகலாவது, பகற் பொழுதின் நடுக் கூறு; யாமம் என்பது இராப் பொழுதின் நடுக் கூறு. ஒவ்வொரு பகுதியும் பப்பத்து நாழிகை கொண்டவை. ஆசிரியர் சிவஞான யோகிகள் வைகுறு விடியல் என்பது ஒருபொழுது எனவும், எற்பாடு[9] என்பது விடிந்த பின்னுள்ள காலைப் பொழுதைக் குறிக்கும் எனவும் கொண்டுள்ளார். இதுபற்றி அவர்கூறும் தடைவிடைகளை அவருடைய **முதற் சூத்திர விருத்தி** என்னும் நூலில் விரிவாகக் காணலாம். இவர்கள் யாவரும் சொற்களின் அடிப்படையில் வாதத்தைத் தொடங்கி மலைகின்றனர் என்றே கொள்ள வேண்டும்.

---

8. ஆறு பருவங்களாக எண்ணுவது இந்திய நாட்டின் பொதுவான பருவநிலையே யன்றித் தமிழகப் பருவ நிலையன்று என்றும், இம்மாதப் பெயர்களும் வட மொழிப் பெயர்களாதலின், வடமொழி வழக்கினையே தொல்காப்பியர் பயன்படுத்தியுள்ளார் என்றும் கூறுவர் டாக்டர் ப. அருணாசலம். பார்க்க: **தொல்காப்பியர்**-பக் (59-60). இஃது ஆராயத்தக்கது.

9. எற்பாடு-எற்பாட்டைப் பிற்பகல் என்று உரைப்பர் நச்சினார்க்கினியர். எல்-சூரியன்; பாடு-படுதல்; சூரியன் படுகின்ற காலம். சிவஞானமுனிவர் எற்பாட்டை ‘ஞாயிறு உதயமாகும் நாள் வெயிற்காலை’ எனக் கூறுவர். எற்பாடு-உண்டாதல் என்பது இவர் கூறும் பொருள். இவர்க்குச் சிறு பொழுது ஐந்தென்பதே கொள்கையாகும்.

இங்ஙனம் ஐந்திணைக்கும் பெரும் பொழுது சிறு பொழுதுகள் பகுக்கப்பட்டது. அவ்வந் நிலத்திற்கேற்ப இப்பொழுதுகள் தலைவன் தலைவியர் மாட்டுத் தோன்றும் காமக் குறிப்பைச் சிறப்பித்தல் பற்றியாகும் என்பது உணர்தற்பாலது. இதுபற்றி இளம்பூரணர் கூறுவது: ''இவ்வறுவகைப் பருவமும் அறுவகைப் பொழுதும் இவ்வைந்திணைக்கு உரியவாறு என்னை எனின்; முல்லையாகிய நிலனும், வேனிற் காலத்து வெப்பம் உழந்து மாறும் புதலும் கொடியும் கவினழிந்து கிடந்தன புயல்கள் முழங்கக் கவின் பெறும் ஆதலின், அதற்கு அது சிறந்ததாம். மாலைப் பொழுது இந்நிலத்திற்கு இன்றியமையாத முல்லை மலரும் காலமாதலானும், அந்நிலத்துக் கருப் பொருளாகிய ஆனிரை வருங் காலமாதலானும், ஆண்டுத் தனியிருப்பார்க்கு இவை கண்டுழி வருத்தம் மிகுதலின், அதுவும் சிறந்ததாயிற்று. குறிஞ்சிக்குப் பெரும்பான்மையும் களவிற் புணர்ச்சி பொருளாதலின், அப்புணர்ச்சிக்குத் தனியிடம் வேண்டுமன்றே, அது கூதிர்க் காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் இலராம் ஆகலான், ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற்கு அது சிறந்தது. நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. மருதத்திற்கு நிலன் பழனஞ் சார்ந்த இடமாதலான், ஆண்டு உறைவார் மேன்மக்களாதலின், அவர் பரத்தையிற் பிரிவுழி அம் மனையகத்து உறைந்தமை பிறர் அறியாமல் மறைத்தல் வேண்டி, வைகறைக்கண் தம் மனையகத்துப் பெயரும் வழி, ஆண்டு மனைவி ஊடலுற்றுச் சார்கிலளாமாதலால், அவை (வைகறையும் விடியலும்) அந்நிலத்திற்குச் சிறந்தன. நெய்தற்குப் பெரும்பான்மையும் இரக்கம் பொருளாதலின், தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற்பொழுதினும் இராப் பொழுது மிகு மாதலின், அப்பொழுது வருதற்கேதுவாகிய எற்பாடு கண்டார் இனிவருவது மாலையென வருத்தமுறுதலின், அதற்கு அது சிறந்ததென்க. பாலைப் பொருளாவது, பிரிவு; அப்பிரிவின்கண் தலைமகற்கு வருத்தமுறுமென்று தலைமகள் கவலுங்கால் நிழலும் நீரும் இல்லாத வழி ஏகினார் எனவும் கவலுமாதலின், அதற்கு அது சிறந்தது என்க.''[10] இவ்வாறே நச்சினார்க்கினியரும் ஏற்புடைய காரணங் கூறிச் செல்லலை அப்பொழுதுகளின் உரிமை கூறும் நூற்பா உரைகளால் அறிந்து கொள்ளலாம்.

10. அகத்திணை 12-இன் இளம்பூரணர் உரை.

**கருப்பொருள் :** முதற்பொருளிலிருந்து தோன்றுவது கருப் பொருள். அஃது இடத்திலும் காலத்திலும் தோன்றும். அது தெய்வம், உணவு, விலங்குகள், பறவைகள், பறை, தொழில், பண், பூ, நீர் போன்றது. இதற்குத் தொல்காப்பியர்,

> தெய்வம், உணாவே மாமரம் புள்பறை
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> அவ்வகை பிறவும் கருவென மொழிப.[11]

என்று விதி செய்து காட்டுவர். இப் பொருள்கள் வெவ்வேறு விதமாக இருக்கும். மலை நாட்டில் இருக்கும் பொருள்கள் வேறு; சமவெளிகளில் காணும் பொருள்கள் வேறு. மலைப்பகுதியில் காணும் விலங்குகளையும் பறவைகளையும் சாதாரணமாகக் கடலையொட்டிய பகுதிகளில் காண்பது அரிது. அப்பகுதியிலுள்ள மக்கள் அவற்றை வீட்டில் வைத்து வளர்க்கலாமேயன்றி இயற்கையில் அங்குக் காணப்பெறா. ஒவ்வொரு பகுதியிலும் கடவுள் வழிபாடு மாறுபட்டிருப்பதையும் நாம் காண்கின்றோம். நாகரிகம் அடைந்த மக்களிடம் (Sophisticated people) இம் மாறுபாடுகள் அதிகம் காணப்பெறுவிடினும் சாதாரண மக்களி டையே இன்றும் இவ்வேற்றுமையை நன்குக் காணலாம்.

**உரிப்பொருள் :** உரிப்பொருளாவது மக்கட்கு உரிய பொருள். உரிப்பொருள் மக்கள் வாழ்க்கையை யொட்டி இருக்கும்; அவர்கள் வாழும் வாழ்க்கை நெறியே—ஒழுக்கமே—உரிப் பொருள் என்று கூறினும் தவறாகாது. உரிப்பொருளைத் தமிழர்கள் ஐந்து பகுதியாகப் பிரித்துக் காட்டுவர். ஐந்து திணைக்கும் தனித்தனி யாக ஐந்துவகை ஒழுக்கத்தை வரையறை செய்துள்ளனர். திணை என்ற சொல்லுக்கே ஒழுக்கம் என்ற பொருள் உண்டு. ஐந்துவகை யொழுக்கத்தை ஆசிரியர் தொல்காப்பியர்,

> புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
> ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
> தேறுங் காலைத் திணைக்குரிப் பொருளே.[12]

என்ற நூற்பாவால் குறிப்பிடுவர். புணர்தல் தலைமகனும் தலை மகளும் இணைந்து வாழ்தல். இருத்தல் என்பது பிரிவுற்ற தலை மகன் வருந்துணையும் தலைவி 'தலைவன் வந்து விடுவான்' என்று ஆற்றியிருத்தல்; அதாவது நம்பிக்கையுடன் பொறுத்

11. ஷை-20 (இளம்)
12. ஷை-16.

திருத்தல். இரங்கல் என்பது, ஆற்றாமை. ஊடல் என்பது தலைவன் தலைவியரிடையே நேரிடும் சிறு பிணக்கு.

**உரிப்பொருளின் இன்றியமையாமை :** ஒரு நாடகத்தைப் பற்றிப் பேசும்பொழுது இன்ன இடம் என்றும், இன்ன காலம் என்றும், இன்ன பாத்திரங்கள் என்றும் ஒவ்வொரு காட்சிக்கும் குறிப்பிடுவர் அறிஞர்கள். அவ்வாறே அகப்பொருள் நிகழ்ச்சிகட்கு இந்த முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் உறுப்புகளாக அமைகின்றன. ஒவ்வொரு திணைக்கும் தனித்தனியே இவை அமைதல் வேண்டும் என்று வரையறை செய்துகாட்டுவர் தொல் காப்பியர். உரிப்பொருள்தான் இவற்றின் உயிர் நாடியாக இருப்பது. காதல் நாடகத்தின் இயக்கம் இதுவே என்று கூடத் துணிந்து கூறிவிடலாம். உரிப் பொருளாகிய காதல் நிகழ்ச்சியை இன்ன நிலத்தில் இன்னபொழுதில் இன்ன பொருள்களைச் சூழ் நிலையாக அமைத்துக் கவிஞர்கள் கவிதையை ஆக்கும் பொழுது இந்த மூவகைப் பொருள்களும்அதில்காட்சி அளிக்கும்,ஒருபாடலில் இந்தப் பொருள்கள் அனைத்தும் வரவேண்டும் என்ற வரையறை இல்லை. சில வரவும் கூடும்; சில வராமல் இருத்தலும் கூடும். உரிப் பொருள் மட்டிலும் கட்டாயம் வருதல் வேண்டும். சுருங்கக் கூறின, அகத்திணைப் பாடல்களில் உரிப்பொருள் சிறந்து விளங்க, முதற் பொருளும் கருப் பொருளும் பின்னணியாக அமைகின்றன என்று தெளியலாம்.

# அகத்திணைப் பாகுபாடு

அகத்திணையைத் தொல்காப்பியம் கைக்கிளை, குறிஞ்சி, முல்லை மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்ற ஏழு திணைகளாகப் பகுத்துப் பேசும். இவற்றுள் குறிஞ்சி முதல் பாலை ஈறாகவுள்ள ஐந்து திணைகளும் **ஐந்திணை** என்று ஒரு தொகுதியாக வழங்கப் பெறும். இங்ஙனம் ஏழு பிரிவுகளாகப் பிரித்தமைக்கு அடிநிலைக் காரணம் இன்னதெனக் காண்போம்.

(1) கைக்கிளையை ஒருதலைக் காமம் என்றும், ஐந்திணைய ஒத்த காமம் என்றும், பெருந்திணையை ஒவ்வாக் காமம் என்றும் உரையாசிரியர்கள் கூறுவர். இங்ஙனம் இப்பிரிவுகட்கு காமத் தன்மையை அடிப்படையாகக் கொள்ளின், ஐந்திணையை ஒரே பிரிவாகக் கொண்டு அகத்திணைப் பிரிவுகள் மூன்றெனல் பொருந்துமே யன்றி ஏழெனக் கூறுதல் பொருந்தாது. மேலும், கைக்கிளை பெருந்திணை என்னும் பெயர்க் குறியீடுகள் தம் காமத் தன்மையைச் சுட்டும் 'கை', 'பெரு' என்னும் அடைகளைப் பெற்றுள்ளன. இவற்றையொட்டி ஐந்திணை அன்புத்திணை என்று சுட்டப்பெறுவதன்றோ முறை? அங்ஙனமின்றி ஐந்திணை என்று எண்ணடை கொண்டு திகழ்வதால் அகப்பிரிவுகட்குக் காமத் தன்மையை அடிப்படையாகக் கொள்ளல் பொருந்தாது என்பது பெறப்படும்.

(2) தமிழ் அகத்திணை நுவலும் பல்வேறு காதற் கூறுகள் தமிழகத்தின் பல்வேறு நிலக் கூறுகளின் அடிப்படையாக எழுந்தவை என்ற ஒரு கோட்பாட்டினை எழுப்புவர் திரு எஸ். கே. பிள்ளையவர்கள்[1]. நம் தமிழகத்தில் பாலை என்று சுட்டிக் காட்டத் தக்க நிலப்பிரிவு இல்லை என்பதை தொல்காப்பியமே

---

1. *The Ancient Tamils*-Part I பக். 43.

சுட்டிப் போதல் அறியப் பெறும்.[2] குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு திணைகட்கு இயல்பான நிலப்பாங்குகள் இருத்தல் போல, பாலைக்கு இயல்நிலம் இல்லையாயினும் முன்னர்க் காட்டப் பெற்ற திரிநிலம் உண்டு என்று சிலம்பு தெளிவு படுத்தும். இங்ஙனம் பாலைக்கு ஒருவகையான நிலம் உண்டென்று கொண்டாலும், கைக்கிளை பெருந்திணைகட்கு எவ்வாற்றானும் நிலம் இல்லை என்பது நூல் முடிபு. எனவே, எழுதிணை என்ற அகப்பிரிவு நிலத்தினை அடிப்படையாகக் கொண்டெழுந்தது என்ற கோட்பாடும் பொருந்தாது என்பது அறியப்படும்.

(3) திணை ஏழாயினமைக்கு உண்மையான காரணம் எழு வகைக் காதல் ஒழுக்கங்களேயாகும் என்பது டாக்டர் வ. சுப. மாணிக்கனாரின் துணிபாகும். காதல் ஒழுக்கங்களை இலக்கணம் உரிப்பொருள் என வழங்கும். இவ்வொழுக்கங்கள் தனி நிலை கொண்டவை என்றும், தம்முள் தொடர்பு வேண்டி நில்லாதவை என்பது நீள நினையத்தகும் இவற்றின் ஒரு சிறப்பியல்பு என்றும், ஆதலால்தான் குறிஞ்சி முதலிய ஐந்தும் ஒத்த காமத் தன்மை யால் ஒன்றாயினும், ஐந்திணை என்த் தனி நிலை குறிக்கும் எண்ணுப் பெயர் பெற்றன என்றும் அறுதியிட்டுக் காட்டுவர் அந்த அறிஞர். 'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய் எழுதிணை' என்பதில் நிலமில்லாக் கைக்கிளை பெருந்திணை களோடு நிலமுள்ள ஐந்திணை வைத்து எண்ணப்படுதலின், இவற்றுக்கு நிலப்பொருள் செய்தல் ஆகாது, உரிப்பொருள் கோடலே முறை என்று தெளிவுடன் வற்புறுத்துவர். மேலும், சங்கப்பாடல்களில் முதல் கருப் பொருள்களைச் சிறிதும் கூறாமல் உரிப்பொருள் மட்டும் கூறும் அகப்பாடல்கள் பல உள என்பதை எடுத்துக் காட்டியும், அப்பாடல்கள் குறிஞ்சித்திணை பாலைத் திணை எனச் செவ்விதின் பெயர் பெற்றிருப்பதைச் சுட்டிக் காட்டி யும் தம் கொள்கைக்கு அரண் அமைத்துக் கொள்வர். எனவே, அகத்திணை எழுமைப் பகுப்பு காதலர்களின் கைக்கிளை, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல், பெருந்திணை என்னும் காம ஒழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டது என்று தெளிவுடன் அறியத்தகும்.

அகத்திணைப் படைப்பில் கைக்கிளை பெருந்திணைகளைவிட ஐந்திணை பல்லாற்றானும் மேலாயது என்று சொல்லத் தேவை

2. அகத்திணை -5.
3. தமிழ்க் காதல். பக்.35

இல்லை. தொல்காப்பியரும் கைக்கிளை பெருந்திணைகளின் பொருள்களை இருவேறு தனிச் சிறு நூற்பாக்கள் அளவில் அமைத்துக்கொண்டார். 'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்'[5] என அத்தொல்லாசிரியர் எண்ணுங்கால் முதலிடம் பெற்ற கைக்கிளையும், பொருள் கூறுங்கால் அந்த இடம் பெறாதது சிந்திக்கத் தக்கது. 'கைக்கிளைக் குறிப்பே', 'பெருந்திணைக் குறிப்பே' என்று அவ்விருதிணைகளின் சிறு நிலைதோன்ற அவற்றினைக் கூறும் நூற்பாக்களை முடித்துக் காட்டுவர். 'குறிப்பு' என்ற சொல் அவ்விருதிணைகளும் விரித்துப்பாடும் தகுதியுடையன அல்ல என்று சுட்டிக் கூறுவர். ஐந்திணையின் இலக்கணக்கூறுகள் மட்டிலும் பல நூற்பாக்களில் விரித்துக் கூறப்பெற்றிருத்தல் காணலாம். தொல் காப்பியப் பொருளதிகார அகத்திணையியல் 55 நூற்பாக்களை யுடையது. இஃது 'அகத்திணை' எனப் பொதுப் பெயரைத் தாங்கியிருந்தும் இதன் 50 நூற்பாக்கள் ஐந்திணையின் நெறி களையே விரித்து மொழிகின்றன. புறத்திணை இயலுக்கு அடுத் துள்ள களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல் என்ற நான்கு இயல்களும் கூட ஐந்திணை நுதலும் அமைப்பினையே கொண்டிலங்குகின்றன. ஐந்திணைக் காதல் அறத்தின் அடிப் படையில் செல்வதாலும், உலகோர் ஒப்புக்கொள்ளும் பெற்றியை யுடையதாலும், மக்கட்கு இயல்வதாக இருப்பதாலும், இலக்கியத் திற்கு இசைந்ததாக உள்ளதாலும் சங்கத்துச் சான்றோர்கள் ஐந்திணைத் துறைகளையுடைய பாடல்களையே மிகுதியும் யாத்தனர். தொல்காப்பியரைப் பின்பற்றியே இப்பெரு மக்களும் கைக்கிளைப் பெருந்திணைகளை விரித்துப் பாடாது ஒதுக்கிடம் நல்கினர்.

அகத்திணை பெருந்தலைப்பு; அதில் அடங்கியது ஐந்திணை. அகத்திணை, ஐந்திணை என்ற சொற்கள் ஒரு பொருட் பன்மொழி யன்று. எழுதிணைகளையும் ஒருங்கு சுட்டுங்கால் **அகத்திணை** என்னும் பொதுக் குறியீட்டை ஆளுதல் தொல்காப்பிய வழக்கா கும். அகத்திணைப் பொதுப் பெயரை ஐந்திணைப் பிரிவின் மறு பெயராகத் தொல்காப்பியம் யாண்டும் ஆண்டதில்லை. ''**மக்கள்** நுதலிய அகன் ஐந்திணை'',[7] ''அன்பொடு புணர்ந்த ஐந்திணை''[8]

4. அகத்திணை 53-54 (இளம்)
5. ஷை-1
6. ஷை-58 (இளம்)
7. ஷை-57 (இளம்)
8. களவியல்-1

என்ற இடங்களில் உரிய, பிரிவுப் பெயரால் விதந்து ஓதுவதைக் காண்டல் தகும். **அகன் ஐந்திணை** என்ற பொது அடையால் ஐந்திணை அகத்திணையுள் ஒருவகை என்பதும், அகக் கைக்கிளை அகப்பெருந்திணை எனப் பிறவகைகளும் உள என்பதும் கொள்ளக் கிடத்தல் நினைக்கத் தக்கது. 'அன்பின் அகத்திணை களவெனப் படுவது' என்று கூறாமல் 'அன்பின் ஐந்திணை களவெனப்படுவது' என்று இறையனார் அகப்பொருளாசிரியரும், 'அவிஅகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவி'[9] எனக் கம்பநாடரும் விழிப்புடன் ஆளும் சொல்லாட்சி நோக்கத் தகும். தொல்காப்பியருக்குப் பின் வந்த ஆசிரியர்கள் இந்நுட்பத்தை ஓராது அகத்திணை, ஐந்திணை களை ஒன்றெனக் கருதியும் கைக்கிளை பெருந்திணைகளை அகத்தின் வேறெனக் கருதியும் பிழைபட்டனர். திருக்கோவை யாரின் உரையாசிரியர் இவற்றை 'அகத்தைச் சார்ந்த புறம்'[10] என்று குறித்திருப்பது இப்பிழையிடங்களுள் ஒன்றாகும்.

கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப[11]

என்ற தொல்லாசிரியர் கூறிய நெறியினை அறவே கெட்டொழித் தார் இந்த ஆசிரியர். ஐந்திணையை நோக்க இவ்விரண்டு திணை களும் சிறப்பில என்பது உண்மையேயாயினும், இவை எழுதிணை எனப்பட்ட அகத்திணையாதற்கு இழுக்கில்லை என்பது அறியத் தக்கது. ஒரு குடியில் பிறந்த பலருள் சிலர் சிறப்புற்றும் சிலர் சிறப்பின்றியும் இருப்பின் அன்னோர் ஒரு குடிபிறப்பிற்கு இழுக்கில்லையாதல் போன்றே, இவற்றையும் அகத்திணையில் அடக்குவது இழுக்கில்லை எனக் கொள்ளல் வேண்டும். கைக்கிளை பெருந்திணைகளின் சிறப்பின்மை எவ்வாறாயினும் அவற்றை அகத்திணையினின்றும் நீக்கமுடியாமைக்கும், ஐந்திணையோடு வைத்து எண்ணுவதற்கும் குருதியொப்பன்ன பண்பொப்பினை தமிழ்ச் சான்றோர் கண்டிருத்தல்வேண்டும். இவற்றை அகத் திணையில் சேர்த்துக் கொள்ளாவிடின் முழுவனப்புடைய அமைப்பில் ஒரு குறை தட்டுப்படும். எனவே, தொன்னெறி வழுவாத தமிழ் மரபினை அறிய விரும்புவோர் இதனைக் கருத் தினில் இருத்துதல் வேண்டும்.

9. கம்பரா. ஆரணி சூர்ப்ப-1
10. திருக்கோ. பாடல் 4 இன் உரை.
11. அகத்திணை-1

சுருங்கக் கூறின், அகத்திணையின் உட்பிரிவான கைக்கிளை ஒரு குறுவடிவமாகும். தடுமாறு காட்சியால் ஆணிடை எழுந்த பாலுணர்ச்சியின் நிலையா மனப் பதத்தைப் புலப்படுத்துவது கைக்கிளையின் உட்கிடையாகும். இதில் ஒருத்தியைக் கண்ட ஆடவனுக்கும் அவனால் காணப்பெற்ற நங்கைக்கும் யாதொரு பழியும் இல்லை. மாசும் இல்லை. பெருந்திணையோ தூய காதலர்களிடையே அளவு கடந்து போகும் சில பால்வினைகளைப் புலப்படுத்துவதாகும். ஆகவே, இந்த மனநிலைகளைப் புலப் படுத்துவனவே இத்திணையின் நான்கு துறைகளும்; இவை தனி நிலையுடையன அல்ல; சில ஐந்திணைத் துறைகளின் சார்புடை யனவே. பெருந்திணை அகத்திணையின் முதிர்ந்து வீழ்கரு எனலாம். ஐந்திணையோ அகத்திணையின் இயல்பான வளர் கருவாகும். காமக்கிளர்ச்சியை ஒருவகைக் கட்டுப்பாட்டுடன் உள்ளத்தோடு உடம்பிடை உணரவல்ல பருவம் வந்தெய்தின ஆடவர்-பெண்டிரின் தூய மனக் கூறுகளையும் பல்வேறு நிலை களில் புலப்படுத்துவதாகும். ஐவகை ஒழுக்கங்களாகப் பேசப் பெறும் இதன் பல்வேறு துறைகளும் எளிய மெல்லிய சால்பின வாகும்; இவை நெஞ்சம் கலந்த காதலர் பற்பலரின் வாழ்க்கையில் வெவ்வேறு காலத்து வெவ்வேறு சூழ்நிலையில் ஆங்காங்கு நிகழ்ந்து வரும் தனி நிகழ்ச்சிகளின் ஒரு கோவையாகும். சங்கப் பாடல்கள் இத்தனி நிகழ்ச்சிகளையே சித்திரித்துக் காட்டுபவை. இந்த எழு திணைகளையும் இணைக்கும் அடிப்படையே—பாலமே —உள்ளமும் உடலும் இரண்டுறவும் இரண்டறவும் கலந்த இன்பச் செவ்வியாகும். இதுவே அகம் என வழங்கப்பெறும். எழுதிணை களும் தமக்கியைந்த முறையில் தலையாய அகம் என்ற குறிக் கோளை உடன்பாட்டு எதிர்மறை முகங்களால் புலப்படுத்து கின்றன. உடன்பாட்டு முகம் உடைய ஐந்திணை இயல்பும் விரிவும் பெற்று அகத்திணையின் குறிக்கோளைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றது.

அகத்திணை வடித்துக் காட்டும் காதற்பாங்கு தனித் தூய்மை கொண்டது. மனித சமுதாயம் முழுவதையும் நோக்கும் பான்மையது. இறைமையுடைய இக்காதற் பாங்கு சாதி சமய அரசு மொழி நாடு தொழில் செல்வம் என்பன போன்ற புறச்சார் பின்றி இலங்குவது. இரண்டு உயிர் மெய்களின் ஒருமையைக் காணும் பெற்றியதாகலின் இது மக்களாய்ப் பிறந்தார் அனை வர்க்கும் உரியதாகும்.

## ஐந்திணைச் சூழல்

குறிஞ்சி முதலான ஐந்தும் ஒத்த காமத் தன்மையால் ஒன்றாயினும், ஒழுக்கவகையால் தனிநிலை குறிப்பதற்காக 'ஐந்திணை' என்று எண்ணுப் பெயர் பெற்றன என்பதை முன்னர்க் குறிப்பிட்டோம். 'திணை' என்ற சொல்லுக்கே 'ஒழுக்கம்' என்ற பொருள் உண்டு. ஐந்து வகை ஒழுக்கங்களையும் தொல்காப்பியர்,

புணர்தல் பிரிதல் இருத்தல் இரகங்ல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.[1]

என்று குறிப்பிடுவர். இங்ஙனம் ஒழுக்கங்கள் ஐந்து வகையாகப் பிரித்துப் பேசப்பெறுவதால் இவற்றை **ஐந்திணைநெறி** என்றும் குறிப்பிடும் வழக்கமும் உண்டு. இந்த ஐந்து ஒழுக்கங்களும் எல்லா நிலத்து மக்களிடமும் நிகழும் பொதுவான நிகழ்ச்சிகளே எனினும், மலைநாட்டில் புணர்தல் நிகழ்வதாகக் கூறுவது இலக்கிய மரபு. இவ்வாறே பாலை நிலத்தில் பிரிதல் நிகழ்வதாகவும், முல்லை நிலத்தில் இருத்தல் நிகழ்வதாகவும், மருதநிலத்தில் ஊடல் நிகழ்வதாகவும், நெய்தல் நிலத்தில் இரங்கல் நிகழ்வதாகவும் இலக்கணம் வகுக்கப்பெற்றுள்ளது. இந்த முறையில் கூறினால் தான் சிறப்பு என்பதை எண்ணியே பண்டைய ஆசிரியர்கள் ஒழுக்கத்தின் பெயர்களையே நிலத்திற்கும் கொடுத்தனர்.[2]

---

1. அகத்திணை - 16. (இளம்)
2. குறிஞ்சி முதலாய குறியீடுகள் அவ்வந் நிலத்திற்கு உரிய மலர்களின் பெயர்களே என்றும், பின்னர் இப்பொருள்கள் களைப் புலப்படுத்தும் குறியீடுகளாயின என்றும் கருதுவார் ஒரு சாரார். அற்றன்று என மறுத்துக் குறிஞ்சி முதலானவை புணர்தல் முதலாய உரிப் பொருள்களை முதற்கண் தருவன எனவும், பின்னரே மலர்களையும் நிலங்களையும் குறிக்கப் போந்தன எனவும் கருதுவர் மற்றொரு சாரார்.

எடுத்துக்காட்டாக, குறிஞ்சி ஒழுக்கம் நிகழும் இடம் குறிஞ்சி நிலம்; இம்மாதிரியே பிறவற்றிற்கும் கூறப்படும். அந்தந்த நிலத்தில் அந்தந்தச் சூழ்நிலைகளில் அந்தந்த ஒழுக்கந்தான் நடைபெறுதல் வேண்டும் என்று வரையறை செய்த கருத்துதான் யாதென்பதை ஆராய்வோம்.

**மலை சார்ந்த இடம் (குறிஞ்சி) :** மலையையும் மலை சார்ந்த இடத்தையும் பண்டையோர் புணர்ச்சிக்குரிய இடமாகத் தேர்ந்தெடுத்தனர். குறிஞ்சி இயற்கை வளம் செறிந்தது. மஞ்சு சூழ் மலையில் ஆசினியும் அசோகும் மலையை அழகு செய்யும்; தேமாவும் தீம்பலவும் மலைக்குத் தெய்விகக் காட்சியை நல்கும். சந்தனமும் சண்பகமும் மலையை மாண்புறுத்தும். கோங்கும் வேங்கையும் மலைக்கு வனப்பூட்டும். மற்றும் பல மரங்கள் விண்ணைத் தழுவி முத்தமிடும். குறிஞ்சி, கோங்கு, மாதவி, மல்லிகை, முல்லை போன்ற மலர்கள் எம் மருங்கும் மலர்ந்து மணம் பரப்பி மனத்தை ஈர்க்கும்.

மற்றும், மலைப் பகுதிகளில் தேமாங்கனி பழுத்துக் கொத்துக் கொத்தாகக் காட்சியளிக்கும்; வருக்கைப் பலா கொம்புகளில் பழுத்துத் தொங்கும்; வாழைக் கனிகள் குலை குலையாகப் பழுத்துத் தொங்குவதை அங்குக் காணலாம். கேரளம், கொடைக் கானல், உதகை போன்ற பகுதிகளில் இச்சூழ்நிலையை இன்றும் காணலாம். ஆண் குரங்குகள் வெடித்த பலாவின் தீஞ்சுளை களைக் கடித்துக் கடித்துத் தம் பெண் குரங்குகளுக்கு ஊட்டும். பைங்கிளிகள் தம் செம்பவள வாயால் தேமாங்கனிகளைக் கொத்திக் கொத்தித் தம் துணைகட்குக் கொடுக்கும். பொன்னிற வண்டுகள் மலரினை ஊதிக் கொடுத்துப் பெண் வண்டைத் தேன் உறிஞ்சத் தூண்டும். ஆண் யானை மூங்கில் களை ஒடித்துப் பெண்யானைக்குக் கவுள் நிறையக் கொடுக்கும்.

இத்தகைய குறிஞ்சி நிலச்சோலை பசுமை நிறத்தால், தீந் தேனால், நறுமணத்தால், வண்டொலியால், பசுமையான புல் தரையினால் ஐம்புலன்கட்கும் இன்பம் அளிக்க வல்லதாக விளங்கும். இச்சோலையை இன்பம் அளிக்க ஏற்ற சூழ்நிலை யாகக் கவிஞன் கற்பனை செய்தல் இயற்கைக்கு ஒத்துள்ள தல்லவா? ஆகவே, பண்டைய ஆசிரியர்கள் இத்தகைய இடத்தைக் காதலர்கள் சந்தித்து இன்பம் அநுபவிக்கும் இடமாகத் தேர்ந் தெடுத்தனர். கூதிர் காலம் என்ற பெரும் பொழுதையும் யாமம்

என்ற சிறு பொழுதையும் புணர்ச்சிக்கு உரிய காலமாகக் கூறுவர் அன்னோர்.[3] முன் பனிக் காலத்தையும் இதற்கு உரியதாகக் கொள்ளினும் அஃது அத்துணைச் சிறப்பன்று.[4] குறிஞ்சித் திணையைப் பாடுவதில் **கபிலர்** என்ற சங்கப்புலவர் தலைசிறந்தவராகத் திகழ்வதை அவர்தம் அகத்திணைபற்றிய பாடல்களால் அறியலாம். இவர் பாடிய அகப்பாடல்கள் 197. இவரே மிகுதியான அகப்பொருள் பாடல்களை யாத்தவர். இவற்றுள் 182 களவிற்கும், 12 கற்பிற்கும், 3 கைக்கிளைக்கும் உரியவை.

**பாலை நிலம் :** காதலால் கூடிக் கலந்த இருவரது பிரிவு ஒழுக்கத்தினைக் குறிப்பது பாலைத் திணை. பிரிந்து செல்லும் இடத்தின் இடர்ப்பாடுகளை அதிகமாகக் காட்டக் காட்டப் பாட்டின் சுவை பன்மடங்கு அதிகமாகும். எனவே, அதற்கேற்ற நிலைக்களத்தை, சூழ்நிலையைக் கவிஞர்கள் தேர்ந்தெடுக்கின்றனர். கோடைக்காலத்தில் எங்கும் வெப்பம் பொறுக்க முடியாத நடுப்பகலில் மரங்களெல்லாம் காய்ந்து கரிந்து நிற்கும் வெஞ்சுரம்; மழையே இல்லாத கொடிய நிலம். குடிநீர் என்பது அங்குக் குதிரைக் கொம்பு. பாலை நிலத்தின் கொடுமையை அசதிக் கோவையாசிரியர் மிக நயமாகக் காட்டுவர்:

முத்தமிழ்நூல்
கற்றார் பிரிவும்கல் லாதார்
இணக்கமும் கைப்பொருளொன்(று)
அற்றார் இளமையும் போலக்
கொதிக்கும் அருஞ்சுரமே.

என்று கூறியிருக்கும் அருமைப்பாட்டைச் சுவைத்து இன்புறுக. இத்தகைய கொடிய பாலை நிலத்தில் கானலை நீர் என்று மயங்கி யானைகள் அதைப் பருக ஆசைப்படும். கொழுத்திருந்த யானைகள் இளைத்து நிலத்தை உழும் கலப்பைபோல் மருப்பு ஊன்றி நிலத்தில் கிடக்கும். கொடிய வேடர்கள் அங்கு இருப்பர். அவர்கள் கட்டமைந்த உடலை யுடையவர்கள். சுற்றுகள் பொருந்திய வில்லையேந்திய கையினை உடையவர்கள்; வழிப்போக்கர்கள் வரும் சமயம் பார்த்துக் கொண்டு வழிமேல் விழியை வைத்துக் காத்திருப்பவர்கள். அவர்களிடம் பொருள் இல்லாவிட்டாலும் அவர்கள் உடல் துடித்துச் சாதலைக் கண்டு மகிழ்ச்சி கொள்பவர்கள். பாலைக்குப் பெரும் பொழுது இளவேனிலும்

3. அகத்திணை - 7 (இளம்)
4. ஷை 8 (இளம்)

முதுவேனிலும்; சிறுபொழுது நண்பகல்.[5] இதற்குப் பின் பனியும் உரித்து என்றும் கூறுவர் தொல்காப்பியர்.[6] இந்தச் சூழ்நிலையை யுடைய காட்டில் தன் ஆருயிர்க் காதலன் பிரிந்து செல்வதை எண்ணித் தலைவி வருந்துவதாகப் பாடப்பெறும் பாடல்கள்பிரிவுத் துன்பத்தை மிகைப் படுத்திக் காட்டும்; அவலச்சுவை சிறப்பாக அமையும். இத்தகைய திணையை அமைத்துச் சிறந்த பாடல் களைப் பாடிப் பெரும்புகழ் பெற்ற **பெருங்கடுங்கோ** என்ற புலவர் 'பாலை பாடிய' என்ற சிறப்புத் தொடரை அடையாகப் பெற்றுத் திகழ்கின்றார். இவர் பாடிய அகப்பாடல்கள் 67. இவற்றுள் களவில் வருவன 7; கற்பொழுக்கில் வருவன 60. பெரும்பாலும் பாலைப் புலவர்கள் உடன்போக்குத் துறையை மிகவும் விரும்பிப் பாடுவர்.

**காடு சார்ந்த இடம் (முல்லை) :** ஊருக்குச் சற்றுப் புறத்தே இருப்பது காடும் காடு சார்ந்த இடமும். காடுகளில் கார் காலத்தில் மேகங்கள் கருக்கொண்டு ஒலித்துக் குன்றும் காடும் குளிரப் பெய்யும்; பெரிய கரிய மயில்கள் தோகையை விரித்துக் கொண்டு ஆடும். குருந்த மரத்திலுள்ள கிளிகள் மகளிர் போலக் கூவும். மழை பெய்த கானிலத்தில் வெப்பமும் அதிக மிராது; தட்பமும் மிக்கிருக்காது. நீரும் நிழலும் மலிந்து கிடக்கும். எம்மருங்கும் முல்லை மலர்கள் பூத்துக் குலுங்கி நிற்கும்; அவற்றில் வண்டுகள் மொய்த்துக் கொண்டு இன்னோசையை எழுப்பும். மான் தன்பிணையுடன் கூடிப் பள்ளங்களில் நிற்கும் நீரைப் பருகி இன்புற்றுத் திரியும். முல்லை நிலத்து மக்களாகிய ஆயர்கள் காட்டிடத்தே கன்று காலிகளை மேய்த்துக் கொண்டு மர நிழலில் தங்கியிருந்து குழல்களில் இனிய பாக்களை இசைத்து ஊதுவர். மாலை நேரத்தில் கன்றும் கறவையும் கொண்டு ஆயர்கள் வீட்டிற்குத் திரும்புவர். அவற்றின் கழுத்தில் கட்டியுள்ள மணி அசைந்து அவ்வோசையால் மாலைப் பொழுதின் மாண்பினைக் காட்டி மகிழ்விக்கும். இந்த நிலத்திற்குரிய பெரும் பொழுது கார் காலம்; சிறு பொழுது மாலை நேரம்.

காரும் மாலையும் முல்லை[7]

என்பது தொல்காப்பியம். இங்குப் பெரும்பாலும் மாலை தொடங்கி நள்ளிரவு முற்றும் மழை பெய்வது இயல்பு. இந்தச்

5. ஷை 11 (இளம்)
6. ஷை 12 (இளம்)
7. ஷை - 6 (இளம்)

சூழ்நிலையில் தலைவி தன் பிரிவை எண்ணி ஆற்றாது வருந்து வாள் என்று தலைவன் கலக்கமுற்றுப் பிறகு தேறித் தெளிவ தாகவும் தலைவி தன் கூந்தலில் முல்லை மலர்களையும் சூடாது தலைவன் வந்து விடுவான் என்று ஆற்றியிருப்பதாகவும், வினை முற்றிய தலைவன் இக்காலம் தனித்திருப்பார்க்கு வருத்தத்தைத் தரும் என்று வீட்டிற்கு விரைந்து வருவதாகவும் பொருள் அமைத்துக் கவிதைகளைப் புனைவர் புலவர் பெருமக்கள். ஐங்குறு நூற்றில் **பேயனார்** பாடிய 100 பாடல்களும் கலித்தொகையில் **சோழன் நல்லுருத்திரன்** பாடிய 17 பாடல்களும் முல்லைத் திணை யொழுக்கத்தைக் கற்பார்க்கு நல்விருந்தாக அமைவன.

**வயல் சார்ந்த இடம் (மருதம்)** : வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம். என்றும் வற்றாத நீரையுடைய ஆறு, கால் வாய்களாகப் பிரிந்து பாயும் நிலத்தையுடையது இப்பகுதி. நிலம் விளைபொருள்களைக் குன்றாது நல்கும். இங்கு வாழும் உழவர் கட்கு ஓய்வு நேரம் அதிகம் இருக்கும்; ஓய்வு நேரத்தை அவர்கள் இன்பத்திலும் களியாட்டத்திலும் கழிப்பர். மணிமேகலை ஆசிரியர் ''போகம் புரக்கும் உழவர்'' என்று இவர்களைக் குறிப் பிடுவர். இந்தப் பகுதியில் காணப்பெறும் குளங்களில் நீர் நிறைந்து அதில் செவ்வாம்பலும் தாமரையும் அழகு பெறத் தோன்றும். நீரில் சிறுமீன்கள் துள்ளிப் பாயும். கொக்குகள் கூம்பியிருந்து மீன்களைப் பிடித்துச் செல்லும். எருமைக்கடாக்கள் குளத்துள் பாய்ந்து நீந்தித் தம் களைப்பை ஆற்றிக் கொள்ளும். ஆங்குள்ள செங்கழுநீர் இலைகளையும் உணவாகக் கொள்ளும். ஊர்களில் உள்ள வீடுகளின் முற்றங்களில் கன்றுகள் வரிசையாகக் கட்டப்பெற்றிருக்கும். அவை செங்கழுநீர், நெய்தற் பூக்களைத் தின்னும்; அவை தின்று மீந்தவற்றை உழுது திரும்பிவரும் எருமைகள் தின்னும். வெட்ட வெளியில் மணற்பரப்பில் நெற் சூடு வைக்கப் பெற்றிருக்கும். உழைத்த எருமைகள் மருதமரத்து நிழல்களில் படுத்து இருக்கும். நெல் அரிபவர்களின் பறையொலி கேட்டுப் பறவைகள் கலைந்து பரந்து செல்லும். இத்தகைய வளம் நிறைந்த மருத நிலத்தில் வாழ்பவர்களிடையே விலை மகளிருடன் இன்பம் நுகரும் வழக்கமும் இருக்கும். இதைக் கேட்ட தலைமகள் தன் கணவன் இல்லம் திரும்புங்கால் ஊடல் கொள் வாள்; அவனுடன் பிணங்கிக் கொள்வாள். அவளுடைய பிணக்கைத் தீர்ப்பதற்காக வாயில்களாகச் சிலர் தோன்றுவர். இவ்வாறு சூழ்நிலையை ஏற்படுத்திக் கொண்டு மனக்களிப்பிற்காக

நாடக வழக்காகக் கவிஞர்கள் பாடல்களை அமைப்பர். தலைவன் இரவில் யாதாவது ஒருவினையின் நிமித்தம் தங்கிக்காலம் தாழ்ந்து வரினும் தலைவி அவன் பரத்தை வீடு சென்றான் என்று படைத்து மொழிந்து ஊடுவதாகவும் கவிதைகள் ஆக்கப்பெறும். இப் பகுதிக்குப் பெரும் பொழுது எது என்பதைத் தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. எனவே, உரையாசிரியர்கள் பெரும் பொழுது ஆறும் இதற்கு உரியவை எனக் கொண்டனர். வைகறை, விடியல் என்ற சிறுபொழுதுகள் இரண்டும் இதற்கு உரியவை.

வைகறை விடியல் மருதம்[8]

என்பது தொல்காப்பியம். மருதத்திணைபற்றிப் பாடுதலால் சிறப் புற்ற பெயருடையோர் இருவர். ஒருவர் **மருதம்பாடிய இளங்கடுங் கோ;** மற்றொருவர் **மருதனிளநாகனார்,** பின்னவர் மருதக் கலியின் ஆசிரியர். ஐங்குறு நூற்றுப்புலவர்களுள் ஒருவராகிய **ஓரம்போகி யார்** என்பவர் 100 பாடல்களால் மருதத்திணை பாடியவர். பரத் தமைத் துறைகளை வகை வகையாகப் பாடிய பெருமை இவருக்கு உண்டு. மருதத் திணைப் புலவருக்குஉள்ளுறை என்னும் இலக்கியக் கருவி மிகவும் இன்றியமையாதது.

**கடல் சார்ந்த இடம் (நெய்தல்):** நெய்தல் என்பது கடலும் கடல் சார்ந்த இடமும். நெய்தல் நிலத்தில் பல கானற்சோலைகள் இருக்கும். புன்னை, தாழை, ஞாழல், நெய்தல், பனை முதலிய மரவகைகள் அங்குச் செறிந்து காணப்பெறும். நாரை, அன்றில், கொக்கு கடலிலுள்ள மீனைக் கொத்தி உண்ணும். கடல் அலை உயர்ந்து தாழ்தல், மிகுந்த துயரம் குறைந்தகாலை ஏற்படும் இரக்கத்தினை ஒத்திருத்தலால் அச்சூழ்நிலையைத் தலைவி கண்ணுறும்போது அவளிடம் இரக்க உணர்ச்சியைத் தோற்றுவிக் கும். இதற்குரிய சிறுபொழுது எற்பாடு ஆகையால், அந்நேரம் இவ்விரக்க உணர்ச்சியை மிகுதிப்படுத்திக் காட்டும்.

எற்பாடு,
நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்[9]

என்பது தொல்காப்பியம். எற்பாடென்பது பகற்பொழுதின் பிற கூறு. தொல்காப்பியர் இதற்கும் பெரும் பொழுது குறிப்பிட வில்லை. ஆனால், உரையாசிரியர்கள் பெரும்பொழுது ஆறினை யும்இ தற்கு உரியனவாகக் கொண்டனர்.

8. ஷை-9 (இளம்)
9. ஷை-10 (இளம்)

மேற்குறிப்பிட்ட ஐந்து ஒழுக்கங்களையும் அவை இன்ன இன்ன நிலத்திற்குரியவை என்பதையும்,

போக்கெல்லாம் பாலை; புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம்;—நோக்குங்கால்
இல்லிருத்தல் முல்லை; இரங்கல் நறுநெய்தல்
சொல்லிருத்த நூலின் தொகை.

என்ற பழம்பாட்டால் அறியலாம். இவ்வாறு சீரும் சிறப்புடனும் வாழ்ந்த நம் முன்னையோரின் வாழ்க்கை முறை அறிந்து இன்புறற்பாலது.

இந்த அறுவகைப் பருவமும் அறுவகைப் பொழுதும் இந்த ஐந்து திணைக்கு அமைந்த முறையை இளம்பூரணர் இங்ஙனம் புலப்படுத்துவர்: "இவ்வறுவகைப் பருவமும் அறுவகைப் பொழுதும் இவ்வைந்திணைக்கு உரியவாறு என்னையெனின்: சிறப்புநோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின், முல்லையாகிய நிலனும், வேனிற்காலத்து வெப்பம் உழந்து மரனும் புதலும் கொடியும் கவினழிந்து கிடந்தன புயல்கள் முழங்கக் கவின் பெறும் ஆகலின், அதற்கு அது சிறந்ததாம். மாலைப்பொழுது இந்நிலத்திற்கு இன்றியமையாத முல்லை மலரும் காலமாதலானும், ஆண்டுத் தனித்திருப்பார்க்கு இவை கண்டுழி வருத்தம் மிகுதலின், அதுவும் சிறந்தது ஆயிற்று. குறிஞ்சிக்குப் பெரும்பான்மையும் களவிற் புணர்ச்சி பொருளாதலின், அப்புணர்ச்சிக்கு, தனி இடம் வேண்டுமன்றே, அது கூதிற் காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் இலராம் ஆதலான் ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற்கு அது சிறந்தது. நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. மருதத்திற்கு நிலன் பழனஞ் சார்ந்த இடமாதலின், ஆண்டு உறைவார் மேன்மக்களாதலின் அவர் பரத்தையிற் பிரிவுழி அம்மனையகத்து உறைந்தமை பிறர் அறியாமை மறைத்தல் வேண்டி வைகறைக்கண் தம் மனையகத்துப் பெயரும் வழி, ஆண்டு மனைவி ஊடலுற்றுச் சார்கிலளாமாதலால் அவை அந்நிலத்திற்குச் சிறந்தன. நெய்தற்குப் பெரும்பான்மையும் இரக்கம், பொருளாதலின், தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற் பொழுதிலும் இராப் பொழுது மிகுமாதலின், அப்பொழுது வருதற்கேதுவாகிய எற்பாடு கண்டார் இனி வருவது மாலையென வருத்த முறுதலின் அதற்கு அது சிறந்தது என்க."[10]

10. ஷை-12 (இளம்பூரணர் உரை).

## நிலங்களும் ஒழுக்கங்களும்

ஐவகை ஒழுக்கங்களுக்கும் ஐந்து நிலங்கள் உரியவை என்றும் அவை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்றும் முன்னர்க் கண்டோம்; இவற்றிற்கு இப்பெயர்கள் ஏற்பட்டதன் காரணத்தையும் ஆய்ந்து காண்போம். இப் பெயர்கள் மரம் அல்லது பூக்களின் சிறப்புக்கு உரியவை என்பதும், முல்லை முதலியவற்றின் மிகுதி அல்லது சிறப்பு பற்றியே இந்நிலங்கட்கு இப்பெயர்கள் வழங்கலாயின என்பதும் பண்டையோர் கொள்கை. இளம்பூரணரும் ''மாயோன் மேய''[1] என்ற நூற்பாவின் உரையில் குறிஞ்சி முதலிய நிலங்கள் குறியிட்டாளப் பட்டன என்று கூறுவர். அவர் கூறுவது: ''முல்லை குறிஞ்சி என்பன இடு குறியோ காரணங் குறியோ எனின், ஏகதேசம் காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்று கொள்ளப்படும். என்னை காரணம் எனின்:

'நெல்லொடு
நாழி கொண்ட, நறுவீ முல்லை
அரும்பு அவிழ் அலரி தூஉய்-[2]

என்றமையால், காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது ஆகலானும்,

கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.[3]

என்றவழி மைவரை உலகிற்குக் குறிஞ்சிப்பூ சிறந்தது ஆகலானும்,

---

1. அகத்திணை-5.
2. முல்லைப். அடி (8-10)
3. குறுந்-3

இறாஅல் அருந்திய சிறுசூரல் மருதின்
தாழ்ச்சினை உறங்குந் தண்துறை ஊர[4]

என்ற வழி தீம்புனல் உலகிற்கு மருது சிறந்தமையானும்,

பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்[5]

என்ற வழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும் இந் நிலங்களை இவ்வாறு குறியிட்டார் என்று கொள்ளப்படும்.

''பாலை என்பதற்கு நிலம் இன்றேனும், வேனிற் காலம் பற்றி வருதலின் அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின், அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறியிட்டார்'' என்பது. மேலும்,

'கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பு'[6]

'மருதம் சான்ற மருதத் தண்பணை'[7]

'முல்லை சான்ற முல்லையம் புறவு'[8]

'பாலை சான்ற சுரம்'[9]

என்று சான்றோர் செய்யுட்களிலும் பூ அல்லது அதன் முதற் பொருளின் சிறப்புப்பற்றி அந்நிலங்கள் கூறப்பெறுதலை அறிக.

இறையனார் களவியலுரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் இந்நிலப் பெயர்கள் அவற்றின் ஒழுக்கமாக-உரிப் பொருள்களின் அடியாக-வழங்கலாயின என்று கூறுவர். அதாவது, முல்லைக் குரியதாகப் புலனெறி வழக்காகச் செய்யப்பட்ட ஒழுக்கம் 'இருத்தல்' என்பது; இவ்விருத்தற்கே 'முல்லை' என்பது ஒரு பெயர் என்பதாகும். களவியலுரையாசிரியர், ''ஒழுக்கமே திணை எனப்படும். குறிஞ்சியாகிய ஒழுக்கம் நிகழ்ந்த நிலமும் குறிஞ்சி எனப்பட்டது. என்னை? விளக்காகிய சுடர் இருந்த இடனும் 'விளக்கு' எனப் பட்டது போல என்பது'' என்று கூறியுள்ளதைக் காண்க.[10] ஏனைய நிலங்கட்கும் இவ்

4. அகம்-286
5. குறுந்-9
6. மதுரைக். அடி 300
7. சிறுபாண். அடி 186
8. ஷை. அடி 169
9. மதுரைக். அடி. 314
10. இறை. கள. 1-இன் உரை

வாறே கூறிக் கொள்ளலாம். இவற்றால் முல்லை குறிஞ்சி என்று கூறப்பெற்ற ஒழுக்கங்களால் காடு மலை முதலியவை அப் பெயர் பெற்றன என்பது அவ்வுரையாளரின் கருத்தெனத் தோன்றினும் அவ்வொழுக்கத்தான் அவ்வாறு பெயர் பெற்றதன் காரணம் என்னை? என்ற வினா திரும்பவும் எழக்கூடியதாகின்றது. அதனால் நிலங்கள் முற்குறித்தபடி பூக்களின் அடிப் பெயர் பெறாது போயினும், அந்நிலத் தொழுக்கங்களேனும் அவையடியாக வழங்கலாயின என்று கூறுதல் வேண்டியதாகின்றது. ஆயின், நச்சினார்க்கினியர், "இவ்வாறன்றி முல்லை முதலியபூவாற் பெயர் பெற்றன இவ்வொழுக்கங்களெனின், அவ்வந் நிலங்கட்கு ஏனைய பூக்களும் உரியவாகலின், அவற்றால் பெயர் கூறுதலும் உரிய எனக் கடாயினாக்கு விடையின்மை உணர்க" என இக்கொள்கையை மறுத்திட்டனர். ஆயினும், ஒவ்வோர் ஒழுக்கத்தை உணர்த்தற்கு ஒவ்வொரு பூவை அடையாளமாகக் கொண்டொழுகுவது பண்டைத் தமிழரது பழக்கமே யாகும். இது புறத்திணையொழுக்கமாகிய நிரை கவர்தல், மீட்டல் முதலியவற்றிற்கு வெட்சி, கரந்தை முதலாகிய பூக்களை அறிகுறியாகக் கொண்டமையானும் உறுதிப்படும். நச்சினார்க்கினியரும், "இதற்கு (வெட்சிக்கு) அப்பூச் சூடுதலும் உரித்தென்று கொள்க" என்றும்.[11] "தும்பை என்பது பூவினாற் பெற்ற பெயர்" என்றும்,[12] கூறுதல் ஈண்டுஅறியத்தக்கவை. எனவே, அகத்திணை ஒழுக்கங்கட்கும் அங்ஙனம் பூக்களை அடையாளமாகக் கொண்டு முன்னோர் வழங்க, அவற்றினடியாக 'இருத்தல்' முதலிய ஒழுக்கங்கள் 'முல்லை' முதலாகப் பெயர் பெற்றன என்று கொள்ளுதல் அமைவுடையதேயாகும். 'லில்லி' என்ற வெள்ளை மலரைக் கற்புக்குக் குறியாக வழங்கி வருதலானும், இயேசுப் பெருமானின் அன்னையின் கரத்திலுள்ள 'லில்லி' மலர் அவளது கற்பின் தூய்மையைக் குறிப்பதாலும், ஐரோப்பியரிடையேயும் பண்டும் இன்றும் பூவால் கருத்துகளை குறிக்கும் வழக்கம் இருப்பதை உணரலாம். அன்புடையார் இருவர் பிரியுங்கால் அப் பிரிவைக் குறிக்க 'பர்கெட்-மீ-நாட் (Forget-me-not) என்ற பூவைக் கொடுத்தலும், துக்கமிகுதியை 'வீப்பிங்-வில்லோ' (Weepinig willow) என்ற பூவாற் குறித்தலும் இன்றும் ஐரோப்பியர் வழக்கங்களாக இருத்தல் ஈண்டு ஒப்பு நோக்கி அறியத் தக்கவை.

11. புறத்திணை-1 இன் உரை.
12. ஷை-14 இன் உரை.

ஒவ்வொரு நிலத்திற்கும் இலக்கிய வழக்காக ஒழுக்கம் அமைந்ததற்குக் காரணம் என்ன? என்பதையும் ஆராய்ந்து காண்பாம். பண்டையோர் நூல்களிலேனும் அவற்றிற்கு வகுக்கப் பெற்ற உரைகளிலேனும் இதற்குரிய ஏற்புடைக் காரணம் காண்டல் அரிதாகும். அடியிற் கண்டவாறு கூறுதல் பொருந்துமா என்பது சிந்திக்கத் தக்கது.

முற்காலத்து மலை நாட்டு மகளிர் இக்காலத்து மலையாள நாட்டு மகளிர் போல வளமும் எழிலும் வாய்ந்து விளங்கினர். தமிழ்த் தலைவர்கள் அன்னாரைப் பெரிதும் காமுற்று வந்தனர். களவிற்குச் சிறந்த பானாட்கங்குலில் (இடையாமத்தில்) மாவும் புள்ளும் பரந்து வழங்காது துணையுடன் மகிழ்ந்து வந்தன. மலையின் இயற்கை வளமும் காமத்தை வளர்க்கும் சூழ்நிலையாக அமைந்தது. குறிஞ்சி நிலத்திற்குச் சிறந்த கூதிராகிய ஐப்பசி கார்த்திகைத் திங்கள்களும் (பெரும் பொழுது), இடையாமமும் (சிறு பொழுது) இருள் தூங்கித் துளி மிகுவதால் தலைவனுக்குக் களவில் சேர்தல் அரிதாகும். இதுபற்றித் தலைவன் தலைவியர்களிடையே காமத் துடிப்பு பெருகும். எனவே, களவுக் கூட்டம் குறிஞ்சி நிலத்திற்கு வைக்கப்பெற்றது; புணர்ச்சிக்குச் சிறந்த நிலைக்களன் குறிஞ்சியாயிற்று. இங்குப் பெறும் இன்பம் பன்மடங்கு சிறக்கும் என்பது பண்டையோர் கருத்து.

தலைவியுடன் கூடிய தலைவன் பிரிந்து செல்லும் இடம் ''முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து-நல்லியல் பிழந்த'' நிலமேயாதலின் பிரிதல் பாலைக்கு ஆயிற்று. பிரிந்து செல்லும் இடத்தின் இடர்ப்பாடுகளைப் பன்மடங்கு பெருக்கிக் காட்டுதற்கு ஏற்ற இடம் பாலை நிலமாகும். பிரிவுத்துன்பம் மிகைப்படுத்திக் காட்டப்பெறுவதற்குத் தகுந்த நிலைக்களம் இது.

தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லும் பொழுது உறவினர் அறிந்து தடுத்தால், அவன் அவளை உடன் கொண்டு செல்வான். அவளைத் தன் ஊரில் மணந்து இல்வாழ்க்கை நடத்துவான். இங்ஙனம் பெரும்பாலும், உடன் கொண்டு செல்பவன் நாட்டுத் தலைவனே யாவான். இல்வாழ்க்கை நடத்தும் பொழுது தலைவன் பரத்தமை காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிவான். இப்பொழுது தலைவியிடம்

ஊடல் நிகழும். உழைப்பு அதிகமின்றி வளம் மிக்க மருத நிலத்திலுள்ள மக்களிடமே, ''காதல் மாதர் முலையினொடும் பொழுது போக்கும்''[13] பழக்கம் இயல்பாக அமையும். எனவே ஊடல் மருத நிலத்திற்காயிற்று.

இல்வாழ்க்கைக் காலத்தில் பகை களைதல்பற்றிப் பிரிந்து வினைமுற்றி மீள்வோன் பெரும்பாலும் ஊர் நோக்கி வருங்காலம் கார்ப் பருவமாகிய ஆவணி புரட்டாசி மாதங்களாகும். இக் காலத்தில் வெப்பமும் தட்பமும் மிகாது நீரும் நிழலும் பெறுதல் எளிது. ஊர்ப்பக்கத்திலும் காடும் சோலையும் காட்சி பெருகும்; மாவும் புள்ளும் மகிழ்ந்து விளையாடும். மாலையில் பசுக்கள் மன்றில் புகும்; கோவலரின் குழலோசை எங்கும் இனிக்க எழும். இச்சூழ்நிலை காமக் குறிப்பை மிகுவித்துப் பிரிவாற்றிக் கொண்டு தனித்திருக்கும் தலைவியது கற்பு நிலையைப் பெருகக் காட்டும். எனவே, இருத்தல் முல்லைக்காயிற்று.

தலைவனைப் பிரிந்த கிழத்திக்குக் கடலும் கழியும் கானலும் காணுந்தோறும் ஆற்றாமையைத் தோற்றுவிக்கும். ஆள் அரவம் இல்லாத கடற்கரையிலிருந்து தனிமையில் நாம் நின்று பார்த்தால் நம்மிடமும் இவ்வாற்றாமை தோன்றக் காணலாம். இச்சூழ்நிலை இரங்கலைப் புலப்படுத்துவதற்கு மிகவும் ஏற்றது. ஆகவே, இரங்கலுக்கேற்ற நிலைக்களன் நெய்தலாயிற்று. இவ்வாறு இவற்றிற்கு இன்னும் ஏற்புடைய காரணங்கள் உளவேனும் அவற்றையும் கூறிக் கொள்ளலாம்.[14]

13. கலிங். பரணி-277
14. இராகவய்யங்கார், மு: தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி. பக் (23-24)

# திணைமயக்கம்

அகத்திணை நிகழ்ச்சிகளைப் புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனப் பாகுபாடு செய்து அவ்வொழுக்கத்திற் கேற்ற இயற்கைச் சூழலைப் பாகுபடுத்தும் முயற்சியே திணைப் பாகுபாட்டில் உள்ளது. இத்திணைப் பாகுபாட்டில் உரிப் பொருளே பாடற்பொருளாக அமைந்து கிடப்பதைக் காண் கின்றோம். முதற் பொருளும் கருப் பொருளும் அவ்வுரிப் பொருளுக்குச் சிறப்புத் தந்து நிற்கப் பின்னணியாகப் பயன் படுவனவாகும். அவ்வாறிருப்பினும் இம் மூன்றும் பிணைந்த பிணைப்பினையே **திணை** என்று கூறும் மரபே பெருவழக்காக உள்ளது. ஆகவே, ஒவ்வொரு திணைக்கென்று தனித்த அமைப்பு உண்டு என்பதும், முதற்பொருள் முதலிய மூன்றும் அதன் கூறுகளே என்பதும், இவற்றின் பிணைப்பு ஐந்திணைப் பாடல் கட்கு இன்றியமையாதது என்பதும் தெளிவாகும். இப்பிணைப் பினை வற்புறுத்தும் நிலையில் பிறிதோர் உண்மையும் விளக்கம் அடைகின்றது. முல்லை, குறிஞ்சி என்பனவற்றை அகத்திணைக் கூறுகளாகக் கூறினும், அவை தம்மளவில் பகுதிகளல்ல; முழுமை பெற்று நிற்பன என்பதே அது. ''திணை என்பது, அம்மூன்றனை யும் கொண்டே நிற்றலின்'' என்ற நச்சினார்க்கினியரின் உரையும்[1] இதற்கு அரண் செய்கின்றது. உரிப் பொருள்களைக் காமத்தின் வெவ்வேறு தோற்றங்களாகக் கூறிவந்தாலும் முதல், கரு, உரி இவற்றின் அடிப்படையில் ஒவ்வொரு திணையும் தனித்தன்மை உடையன; முழுமை பெற்று நிற்பன.

**திணைமயக்கம்** என்பது மேற்கூறிய இப்பிணைப்புக்கு அல்லது முழுமைக்குக் கூறும் ஒரு புற நடையாகும். ஒருதிணையின் எல்லைக்கு உட்பட்ட சில கூறுகள் பிறிதொரு திணையின் கட்டுக்

---

1. தொல். அகத்திணை. 2 (நச். உரை)

கோப்போடு கலந்து நிற்கவும் கூடும் என்பதே அப்புறநடையாகும். இவ்வாறு கலப்பதற்கும் ஒரு வரையறை கூறுவர் தொல்காப்பியர். இவ்வரையறையும் திணை உணர்ச்சியைக் காப்பதற் கென்றே ஏற்படுத்தப்பட்டதாகும். இங்குத் திணை உணர்ச்சி என்பதும், தமிழ் இலக்கிய மரபால் ஏற்பட்டஒன்றுஎன்பதும் சிந்திக்கத் தகும். உலக இயற்கையில் அமைந்து கிடக்கும் ஒன்று இஃதுடன் ஒட்டிவராது. திணைப் பாகுபாடு ஒரு கவிஉலக உண்மை; கவிதை அநுபவத்திற்கென நல்லிசைப் புலவர்களால் அமைத்துக் கொள்ளப்பெற்ற ஒரு கற்பனைப் பாகுபாடு. எனவே, ஓர் உரிப் பொருள் அல்லது வாழ்க்கை ஒழுக்கம் ஒரு குறிப்பிட்ட நிலைத்தில் ஒரு குறிப்பிட்ட கருப்பொருள் சூழலில் நிகழும் என்றல் ஒரு கற்பனைப் படைப்பாகும். இஃது உலகியலளவில் அடங்கிய ஓர் உண்மையன்று. ஆகவே, வெவ்வேறு திணைக் கூறுகள் கலந்து வரப் பாடுதல் என்பது—அதாவது திணைமயக்கம் என்பது—இயற்கை உண்மைக்கு மாறான தன்று. ஆயின், இது கற்பனைப் படைப்புக்கு, அமைத்துக்கொண்ட இலக்கிய நெறிக்கு, மாறானதாகும். கற்பனைப் பாகுபாடாகிய திணை உணர்ச்சிக்குக் கூறப்படும் புறநடையே திணைமயக்கமாகும். **மயக்கம்** என்பது இரண்டு அல்லது இரண்டற்கு மேற்பட்ட பொருள்கள் கலந்து நிற்றலாகும்,

இதுபற்றித் தொல்காப்பியரின் கருத்தைக் காண்போம்.

> திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே
> நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப
> புலன்நன் குணர்ந்த புலமை யோரே.[2]

ஈண்டுத் **திணை** என்பது நில ஒழுக்கம். முல்லை முதலிய ஒழுக்கம் அவ்வந் நிலத்திற்கே உரித்தாயொழுகாது தம்முள் மயங்கியும் வரும்; இது நீக்கப்படாது. ஒரு நிலத்தின்கண் இரண்டு ஒழுக்கம் தம்முள் மயங்கி வரும். ஆயின், இரண்டு நிலம் ஒரோ வொழுக்கத்தின்கண் மயங்கி வருதல் இல்லை. முதற் பொருளில் ஒரு திணைக்குரிய காலம் பிறிதொரு திணையுடன் கலந்து நிற்றல் உண்டு. அடியிற்காணும் எடுத்துக்காட்டுகளால் இதனைத் தெளியலாம்.

2. அகத்-12 (நச்).

புலிகொல் பெண்பால் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பின் கேழல் புரக்கும்
குன்றுகெழு நாடன் மறந்தனன்
பொன்போல் புதல்வனோடு என்நீத் தோனே.[3]

[பெண்பால்-பிணவு (பெண் பன்றி); குருளை-குட்டி; மருப்பு-கொம்பு; கேழல்-ஆண் பன்றி; நீத்தனன்-பிரிந்தனன்.]

இது கருப்பொருளாலும் முதற்பொருளாலும் குறிஞ்சி; ஆயின் புணர்ச்சி நிகழ வேண்டிய இடத்து ஊடல் நிகழ்ந்தது. ஆகவே இது குறிஞ்சிக்கண் மருதம் ஆகும்.

அன்னாய் வாழிவேண் டன்னைஎன் தோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயின் என்னதூஉம்
அறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே.[4]

[பசந்தனள்-நிறம் மாறினாள்; சிவந்த கண்ணை-சினத்தால் சிவந்த கண்ணையுடையாய்; கடவுதி-வினவா நின்றாய்.]

இது பூத்தரு புணர்ச்சியால் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. இது பாலையில் குறிஞ்சி. கருப்பொருளால் பாலை; ஒழுக்கத்தால் குறிஞ்சி. இதில் உரிப்பொருளோடு உரிப்பொருள் மயங்கிற்று.

கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லையல்லை நெடுவெண் நிலவே.[5]

[வீ-பூ; துறுகல் - குண்டுக்கல்; எல்லி - இரவு;
நல்லை அல்லை - நன்மை தருவாய் அல்லை]

இது கால மயக்கம். குறிஞ்சியில் வரவேண்டிய கார் காலத்திற்குப் பதிலாக வேனில் வந்தது. வேங்கை பூத்து உதிருங்காலம் வேனிலாதலின் இங்ஙனம் உரைத்தார்.

---

3. ஐங்குறு-265
4. ஷை-366.
5. குறுந். 47

சிதர்சினை தூங்கும் அற்சிர அரைநாள்
காய்சின வேந்தன் பாசறை நீடி
நம்நோ யறியா அறனி லாளர்
இந்நிலை களைய வருகுவர் கொல்லென
ஆனால் தெறிதரும் வாடையொடு
நோனேன் தோழியென் தனிமை யானே''[6]

[சிதர் - வண்டுகள்; அற்சிர அரைநாள் - முன் பனிக்காலத்து நள்ளிரவில்; காய் சினம் - சினம் மிக்க; நீடி - நெடிது மேவி; நோய் - துன்பம்; களைய - நீக்க; ஆனாது - அமையாது; எறி தரும் - வீசும்; நோனேன் - பொறேன்.]

இது பருவ வரவின்கண், வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி கூறியது. இதில் முல்லையுள் முன்பனி வந்தது. நிலமும் கருவும் மயங்கிற்று.

இவற்றை அடக்கியது போல்,

உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே.[7]

என்றுவிதியும் அமைத்துக் காட்டுவர் தொல்காப்பியர். அஃதாவது, ஐந்து திணைகளும் தம் முதல், கருப்பொருளில் மயங்கி வரலாம் எனக் கொள்ள வேண்டியவர்களாகின்றோம். ஆயின், உரிப் பொருளைப் பாடற் பொருளாகப் விளக்கும்போது இரண்டுதிணை களுக்குரிய உரிப் பொருள்கள் கலந்து ஒருபாட்டில் வரமுடியாது. எனவே, இரண்டு உரிப்பொருள்கள் தம்முள் மயங்கி வரும் என்றல் பொருந்தாது. ஆயின், முதலும் கருவும் ஒரு திணைக்குரியன வாகவும் உரிப்பொருள் பிறிதொரு திணைக்குரியதாகவும் அமையலாம்.

இங்ஙனம் விளக்குங்கால் ஒரு திணைக்கு நிலமே மாறுதல் இல்லாத முதன்மையான கூறு ஆகின்றது. இதனாலேயே நிலம் முதற்பொருளாகக் கொள்ளப்பட்டது என்பது அறியப்படும். காலத்தை விடவும் நிலத்திற்கு முதன்மையும் தரப்பெற்றது. அகப் பாடல் ஒன்று இன்ன திணையைச் சார்ந்தது என்று வரையறை செய்வதற்கும் திணை மயக்கம் பற்றித் தொல் காப்பியர் கூறும் கருத்துகள் நமக்குப் பெருந்துணையாக உள்ளன. அகப்பாடல் ஒன்று முதல் கரு உரிப் பொருள்கள்

6. அகம். 294
7. அகத்திணை - 13 (நச்.)

பிணைந்து மயக்கமின்றி வரின் அஃது இன்ன திணைப்பாடல் என்று வரையறை செய்தல் எளிதாகும். ஆயின் முதல் கரு உரிப் பொருள்கள் மயங்கி வருமானால் எவ்வாறு திணைப் பாகுபாடு செய்வது என்பதைத் தொல்காப்பியர்.

முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை[8]

என்ற நூற்பாவில் குறிப்பிடுவர். இந்த முறையினால்தான் திணைப்பாகுபாடு செய்யவேண்டும் என்பதையே 'முறை சிறந் தனவே' என்ற தொடர் விளக்குகின்றது. இதற்கு இளம்பூரணர் தரும் விளக்கம்: ''யாதானும் ஒரு செய்யுட்கண் முதற் பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் வரின் முதற்பொருளால் திணை யாகும் என்பதூஉம், முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டும் வரின் கருப்பொருளால் திணையாகும் என்பதூஉம், உரிப்பொருள் தானே வரின் அதனால் திணையாகும் என்பதூஉய் ஆம்'' என்பது. எனவே, திணைப் பாகுபாட்டில் முதற்சிறப்பு முதற்பொருளுக்கும் அடுத்த சிறப்பும் கருப்பொருளுக்கும், அதற்கடுத்த சிறப்பே உரிப் பொருளுக்கும் தரப்பெறுகின்றன என்பது ஈண்டு அறியத் தக்க தொன்று.

திணை உணர்ச்சிக்கு, மயங்காது வரும் முதற்பொருளாகிய நிலமே அடிப்படையாகும். நிலம் அடிப்படையாக அமையுங்கால் அந்நிலத்திற்கு முற்றிலும் மாறாகக் கருப் பொருளைக் கொண்டு அந்நில உணர்ச்சியை ஏற்படுத்துதல் அரிது.[9] ஒரு நிலத்துப்பூவும் புள்ளும் பிறிதொரு நிலத்தோடு வந்து கலந்து நிற்கலாமேயன்றி அந்நில உணர்ச்சியைத் தரமுடியாது.

எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொரு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்.[10]

என்ற நூற்பாவும் இதனையே விளக்கும். இத்தகைய இயற்கைச் சூழலில் இன்ன உரிப்பொருள் புலனெறி வழக்கில் தோன்றும்

---

8. ஷை - 3 (இளம்).
9. இளமரக்காக்களிலும் உயிர்க்காட்சிச் சாலைகளிலும் நில உணர்ச்சியை ஏற்படுத்த மேற்கொள்ளும் முயற்சி ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.
10. அகத்திணை-21 (இளம்)

என்பதற்காக முதல் கரு உரிப்பொருள்களின் பிணைப்பை ஆசிரியர் கூறினாரேயன்றி இன்ன இயற்கைச் சூழலில் இன்ன உரிப் பொருளே இயற்கை எனக் கூற முன் வந்திலர் என்பது ஈண்டு அறியத்தக்கது.

முதல் கரு உரி என்பதன் பிணைப்பு ஓர் இலட்சியப்படைப்பே' புலனெறி வழக்காக நல்லிசைப் புலவர்களால் மேற்கொள்ளப் பெற்ற ஓர் இலக்கிய நெறியே. இதனை சங்க இலக்கிய அகப் பாடல்கள் அனைத்திலும் கண்டுவிட முடியாது. காரணம், உல கியல் வழக்காகப் பாடப்பெற்ற பாடல்களும் ஆங்குக் காணப் பெறுகின்றன. எடுத்துக்காட்டாக நெடுந் தொலையிலுள்ள 40 நெய்தற் பாடல்களில் மூன்று பாடல்களே[11] நெய்தல் உரிப் பொருளைக் கூறுகின்றன. ஏனைய 37 பாடல்களும் களவு நெறி யில் அமைந்து குறிஞ்சி ஒழுக்கத்தைப் பேசுவனவாகும். எனினும், நாற்பது பாடல்களிலும் உள்ள முதற் பொருளும் கருப் பொருளும் நெய்தலுக்கு உரியவையே யாகும். இங்ஙனமே, கலித் தொகை யில் முல்லைத் திணைப்பாடல்களாகவுள்ள 17 பாடல்களில் ஒன்றேனும் முல்லை உரிப்பொருளை நுவலவில்லை. ஆயினும், அவண் வரும் முதற்பொருளும் கருப்பொருளும் முல்லைக் குரியன வாகவே அமைந்துள்ளன. முதற்பொருளைச் சிறப்பாக நிலத்தை அடிப்படையாகக் கொண்டு பாடல்கள் பாகுபடுத்தப்பட்டதன் விளைவாகவே கைக்கிளைப் பெருந்திணைப் பாடல்கள் தனித் தனியாகப் பாகுபடுத்தப்பெறாது அவ்வந் நிலத்தை யொட்டியே பாகுபடுத்தப்பெற்றன.[12] இவற்றை எண்ணுங்கால் முதலில் நிலப் பாடல்களை குறிஞ்சிநிலப் பாட்டு, முல்லைநிலப்பாட்டு, மருதநிலப் பாட்டு, நெய்தல் நிலப்பாட்டு என்று தோன்றியிருக்க வேண்டும் என்றும், அங்ஙனம் தோன்றுங்கால் அப்பாடல்களில் காமத்தின் பல கூறுகளும் அமைந்து கிடத்தல் இயல்பே என்றும் இருக்க வேண்டும் என்பதாக நினைக்கத் தோன்றுகின்றது.

புலனெறி வழக்காக இன்ன நிலத்தில் இன்ன ஒழுக்கந்தான் நிகழ்தல் சிறப்பு என்று வரையறை செய்யப்பெற்றாலும், உலகியல் வழக்கில் அங்ஙனம் நிகழ்தல் இயலாததொன்று. உலக வியற்கைக்கும் அது முற்றிலும் மாறானதாகும். ஏனென்றால்,

11. அகம்: 40, 50, 70.
12. அகத்திணை - 13 (நச்.) இதன் உரையில் நச்சினார்க் கினியர் காட்டும் எடுத்துக்காட்டுகள் இக்கருத்தினை விளக்கும்.

குறிஞ்சி நிலமல்லாத முல்லை மருதம் நெய்தல் நிலங்களில் வாழும் ஆண் பெண் பாலார் தமக்குக் கூட்டம் வேண்டும் பொழுதெல்லாம் அக்கூட்டம் நிகழ்தற்குரிய குறிஞ்சி நிலத்திற்கே வரற்பாலர் ஆத லாலும், அங்ஙனம் அவர் வருதல் என்பது எப்பொழுதும் இயலாத தொன்றாகலானும், குறிஞ்சி நிலத்தில்தான் அக் குறிஞ்சி யொழுகத்திணை நிகழ்த்துதல் வேண்டுமென்பது இயற்கையொடு பொருந்தாத செயலாதலாலும் அது பொருந்தாது. இங்ஙனமே நெய்தல் நிலத்தில் நெய்தல் ஒழுக்கமும், மருத நிலத்தில் மருத ஒருக்கமும், ஏனைய நிலங்களில் ஏனை யொழுக்கங்களும் நிகழ்தல் வேண்டும் என்று எதிர்பார்த்தலும் பொருத்தமன்று. இது கருதியே உரையாசிரியர்கள் ''சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும்'' என்றும், ''உரி மயங்கி வருதல், கலி முதலிய செய்யுளகத்துக் கண்டு கொள்க''[13] என்றும் கூறிப் போந்தனர்.

13. ஷை (இளம்), உரை காண்க.

# II. ஐந்திணை-களவியல்

அகத்திணை யொழுக்கத்தில் மிகவும் விறுவிறுப்புடையது களவியல் பகுதியாகும். இக்கள வொழுக்கக் காலம் இரண்டு திங்கள்தான் நடைபெறும் என்பது அகத்திணை மரபு.

களவினுள் தவிர்ச்சி வரைவின் நீட்டம்
திங்கள் இரண்டின் அகமென மொழிப.[1]

என்று இந்த வரையறையை எடுத்துக் காட்டும் இறையனார் களவியல். அதற்குமேல் மகப்பேறு உண்டாகி விட்டால் குழப்பம்'ஏற்படும் என்று இவ்வரையறை செய்தனர் போலும், இக்களவு முறை இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம் என்று நான்கு வழியில் நடைபெறுவதாகக் குறிப்பிடுவது தொல்லாசிரியர் கூறும் மரபு. இவை இப்பகுதியில் ஆராயப்பெறுகின்றன. | இங்ஙனம் நடைபெறுவதாகக் கவிதைகள் யாப்பது அகவிலக்கிய மரபு. இவற்றுள் தோழியிற் கூட்டம் மிக விரிந்த நிலையில் நடைபெறுவது. இதில் பல்வேறு நிலைகள்—கட்டங்கள்—உண்டு. இந்தக் கட்டங்களில் முக்கியமானவை பாங்கி மதியுடன்பாடு, பகற்குறி, இரவுக்குறி, அலர், மடலேறுதல், வெறியாட்டு, நொதுமலர் வரைவு, வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல், ஒருவழித் தணத்தல், உடன்போக்கு என்பவையாகும். இவை சற்று விரிவாக ஆராயப்பெறுகின்றன. இறுதியாக, களவு ஒழுக்கத்தில் இன்றியமையாதனவாகக் கொள்ளப் பெறும் சில மரபுகள் பட்டியலிட்டுக் காட்டப்பெறுகின்றன இப்பகுதியில். இப்பகுதியில் ஏழு இயல்கள் அடங்கியுள்ளன.

---

1. இறை. களா. நூற். 32

## களவு பற்றிய விளக்கம்

**க**ளவாவது, ''பிணி* மூப்புகளின்றி, எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய், உருவும் திருவும் பருவ்மும் குலனுங் குலமும் அன்பும் முதலியவற்றால் ஒப்புமையுடையராய தலைமகனும் தலைமகளும், பிறர் கொடுப்பவும் அடுப்பவுமின்றி, ஊழ்வகை யால் தாமே எதிர்பட்டுக் கூடுவது.'' தமது மகள் பிறர்க்கு உரியள் என்று இரு முதுகுரவரால் (பெற்றோரால்) கொடை எதிர்தற் குரிய தலைவியை, அவர் கொடுப்பக் கொள்ளாது, இருவரும் கரந்த உள்ளத்தோடு எதிர்பட்டுப் புணர்தலின், **களவு** எனப் பெயர் பெற்றது. இக்களவு அன்பொடு புணர்ந்த காதலின் 'காமக் கூட்டம்' என்றும் வழங்கப்பெறும். இன்னும் இதனை 'மறைந்த ஒழுக்கம்', மறை அரும்மறை என்ற சொற்களாலும் தொல்காப்பியர் குறிப்பர்.

**களவு** என்பதற்குப், பிறர்க்குரிய பொருளை மறையிற் கோடல் என்று பொருள் கூறுவர் இளம் பூரணர்.[1] வேதத்தை 'மறை நூல்' என்று சொல்வது போலவே, அறநிலை வழுவாமல் காதலர்கள் கரந்து ஒழுகும் இதனைக் 'களவு' என்று பண்டை யோர் குறித்தனர் என்பது அறியத்தக்கது. ''களவு என்னும் சொற் கேட்டுக் களவு தீதென்பதூஉம், காமம் என்னும் சொற் கேட்டுக் காமம் தீதென்பதூஉம் அன்று; மற்று அவை நல்ல ஆமாறும் உண்டு''[2] என்று களவியலுரையாசிரியர் கூறுவதையும், அதற்கு அவர் கூறும் சான்றுகளையும் இவ்விடத்தில் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஒரு பெண் தன் உறவினரோடு சண்டையிட்டுக் கொண்டு நஞ்சுண்டு சாவதற்குத் தீர்மானம் செய்து, சமயம்

1. களவியல்-1 (உரை)
2. இறை. கள. 1 இன் உரை.

பார்த்து உண்பதற்கு நஞ்சைத்தேடி வைத்திருந்தாள். அருளுடையான் ஒருவன் அந்த நஞ்சினை எடுத்து மறைத்து விட்டான். அப்பெண் நஞ்சினைத் தேடும்போது அஃது அவளுக்குக் கிடைக்கவில்லை. அவளும் அதனை உண்டு சாகாமல் உயிர் தப்பினாள். இவ்வாறு அவளை உயிர் தப்புவிக்கச் செய்யப் பெற்ற களவு நல்லதாயிற்று. காமம் நல்லது என்பதற்கும் அவர் ஓர் எடுத்துக்காட்டு தருகின்றார். காமம் என்பது ஆசை. ஒருவர் சுவர்க்கத்தின் சென்று போகம் துய்ப்பல் என்று கூறுவதும், உத்தரகுருவின்கண் சென்று போகம் துய்ப்பல் என்று மொழிவதும், நன்ஞானம் கற்று வீடு பெறுவல் என்று செப்புவதும், தெய்வத்தை வழிபடுவல் என்று சொல்லுவதும் காமத்தின் பாற்பட்டவையே. இவ்வகைக் காமம் இம்மையில் மேன்மக்களாற் புகழப்படுகின்றது; மறுமைக்கும் உறுதி பயக்கின்றது ஆகவே, இது நல்லது. இளம் பூரணரும், "களவு என்னும் சொற் கண்டுழியெல்லாம் அறப்பாற் படாதென்றல் அமையாது. களவாவது பிறர்க்குரிய பொருளை மறையிற் கோடல். இன்னதன்றி, ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது, கன்னியர் தம் இச்சையினால் தமரை மறைத்துப் புணர்ந்து பின்னும் அறநிலை வழாமல் நிற்றலால் இஃது அறமெனப்படும்"[3] என்று விளக்குவர்.

காமப் பருவம் எய்திய நங்கையொருத்தியும் குமரப்பருவம் எய்திய நம்பி ஒருவனும் சந்திக்கின்றனர். இருவர் கண்களும் நட்புக் கொள்ளுகின்றன; காதலாடுகின்றன; காமத்தீ பற்று கின்றன. கண்டதும் காதல் என்று மக்கள் கூறுவதும் இதுவே யாகும். குப்பைக் கோழியார் என்ற குறுந்தொகைப் புலவர் இதனைக் "கண் தரவந்த காம ஒள்ளெரி"[4] என்று காமத்தின் பிறப்பிடமாகக் கண்ணைக் கூறுவர். சிக்கிமுக்கிக் கற்கள் இரண்டும் சேர்ந்து தீ உண்டாவதாகக் கூறுவர் அறிவியலார். அதுபோலவே கண்ணும் கண்ணும் சேர்ந்து காமத்தீயை உண்டாக்குவதாகக் குறிப்பர் இச் செந்நாப் புலவர். கல்லில் பிறந்த தீ பஞ்சு முதலான விரைவில் தீப்பற்றும் பொருள் இல்லையாயின் வளராது. கண்பிறப்பித்த காமத் தீயோ தானாகவும் வளரவல்லது என்பதை 'ஒள்ளெரி' என்ற சொற்றொடர் குறிக்கின்றது. தொல் காப்பியரும்,

3. களவியல்—அவதாரிகை.
4. குறுந். 305

நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும்.[5]

[அறிவுடம்படுத்தல்-இருவரது அறிவினையும் ஒருப் படுத்தல்]

என்ற நூற்பாவால் குறிப்பர். ஒன்றுபட்ட உள்ளக் குறிப்பினை இருவர் கண்களும் பரிமாறிக் கொள்ளுகின்றன. காதற்களத்தில் கண்ணுக்குரிய மதிப்பு வாய்க்கு இல்லை. "வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல"[6] என்று இதனைச் சுருக்கமாக விளக்குவர் வள்ளுவப் பெருந்தகை.

பருவம் நிரம்பிய ஆண்மையும் பெண்மையும் பார்த்ததும் உள்ளம் ஒன்றிக் காமப் பித்தேறுவதன் காரணம் யாது? உளவியலார் 'பாலுந்தல்' (Sex drive) என்று கூறுவர். எண்ணற்ற நம்பியரும் நங்கையரும் நாடோறும் சாலையிலும் சோலையிலும் இளமரக் காவிலும் சினிமாக் கொட்டகையிலும், பிற இடங் களிலும் காண்கின்றனர். என்றாலும், யாரோ ஒருவன் ஒருத்தியைக் காதலிக்கின்றான்; யாரோ ஒருத்தி ஒருவன்மீது கண் வீசுகின்றாள். பலரை விலக்கி ஒருவரைத் தேர்ந்து விழையும் இச்சிறப்புப் பார்வை ஆய்தற்குரிய அரிய சிக்கலாகும். எனினும், நம் முன்னோர் இதற்குக் காரணம் காணவும் முனைந்தனர்.

ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப.[7]

[பால்-ஊழ்]

என்ற நூற்பாவால் காரணம் காட்டி விளக்குவர் தொல்காப்பியர். நல்லூழின் ஏவலால் காட்சி நிகழும் என்பது அப்பேராசிரியரின் கருத்தாகும். 'கிழவனும் கிழத்தியும் காண்ப' என்று இருவரையும் எழுவாயாக வைத்துக் காட்டும் சிறப்பால் முன்னதாகக் காதலித்தவர் யார் என்ற வினாவுக்கு இடம் வைக்கவில்லை என்பது சிந்திக்கத் தக்கது. இப் 'பாலதாணையை' சங்கப் புலவர் களும் ஒப்புக் கொண்டதைக் காண்கின்றோம்.

5. களவியல்—5
6. குறள்—1100
7. களவியல்—2.

பால்வரைந் தமைத்தல் அல்லது அவர்வயின்
சால்பளந் தறிதற்கு யாஅம் யாரோ.[8]

[பால்-ஊழ்வினை; வரைந்து அமைத்தல்-வரையறுத்துப் பொருத்தப்படுதல்; சால்பு-தகுதி; அளந்து-வரையறுத்து.]

என்று கூறுவர் பேரி சாத்தனார். 'காப்பு மிக்கதனால் வேறுபட்ட தலைவியின் நிலைகண்டு அதற்குக் காரணம் கேட்ட செவிலிக்குத் தலைவி கூறுவது இது: அறத்தொடு நிற்றல் என்பது துறை. அம்மூவனாரும்,

பிறிதொன் றாகக் கூறும்
ஆங்கும் ஆக்குமோ வாழிய பாலே.[9]

[பால்-ஊழ், தெய்வம்; பிறிதொன்று ஆக-வேறொரு வகையாக]

என்று மொழிவர். இது நொதுமலர் வரைவின்கண் தோழி அறத்தோடு நின்றதாகும். ஊழ் குலமகளிர்க்கு ஒருவனைத் தலைவனாக்கிய பின்னர் மற்றொருவனைத் தலைவனாக்கும் ஆற்றலுடையதன்று என்கின்றாள் தோழி.

காதற் பாங்கை அழுந்த ஆய்ந்த மோதாசனார் என்ற மற்றொரு குறுந்தொகைப் புலவர்,

இவனிவள் ஐம்பால் பற்றவும் இவளிவன்
புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்
காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிராது
ஏதில் சிறுசெரு உறுப மன்னோ
நல்லைமன் றம்ம பாலே மெல்லியல்
துணைமலர் பிணையல் அன்ன இவர்
மணமகிழ் இயற்கை காட்டி யோயே.[10]

[ஐம்பால்-கூந்தல்; ஓரி-ஆண்தலைமயிர்; வாங்குநள்-வளைத்து இழுப்பாளாய்; பரியவும்-ஓடவும்; தவிர்ப்பவும்-தடுக்கவும்; செரு-சண்டை; துணைபிணையல்-இரட்டை மாலை; இயற்கை-இயல்பு; நல்லை-நன்மையை யுடையாய்]

8. குறுந். 366.
9. ஐங்குறு-110
10. குறுந். 229.

என்று கண்டோர் கூற்றாகக் கூறுவர். இவர் கருத்துப்படி காதலர் வெவ்வேறு இடத்தவராக இருக்க வேண்டும் என்பதில்லை. முன்பின் அறியாத புதியவராகல் வேண்டும் என்பதுவும் இல்லை. நாடோறும் பல்கால் பழகிவரும் இளையானும் இளையாளும் என்றோ ஒருநாள் திடீரெனக் காதல் தோன்றப் பார்த்தல் இயல்பேயாகும். பாலைநிலத்தின் உடன்போக்கில் காதலரைக் கண்டவர்கள் இவ்வாறு கூறுகின்றனர். இவர்கள் சிறுபருவம் தொட்டு இவர்களை அறிந்தோராதலின் பாலாற்றலை வியந்து கூறுகின்றனர். இப்பாடல் தொல்காப்பியரின் "பாலதாணையின்" என்பதற்கு நல் விளக்கமாக அமைந்து கிடத்தல் கண்டு மகிழத் தக்கது.

**களவு தமிழர் முறை** : களவினை ஆரியரது எண்வகைப்பட்ட மணவகைகளுள் கந்தர்வத்தின்பாற்படும் என்று தொல்காப்பியர் கூறினும்,[11] கந்தருவம் இன்னதென்பதை,

அதிர்ப்பில்பைம் பூணாரும் ஆடவரும் தம்மில்
எதிர்ப்பட்டுக் கண்டியைதல் என்ப—கதிர்ப்பொன்யாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தன்காட்சிக்
கந்திருவர் கண்ட கலப்பு.[12]

என்ற வெண்பாவால் கந்தர்வகுமரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டு மனமியைந்து கூடுதல் என்று நச்சினார்க்கினியர் விளக்கினாலும் தமிழர்க்கு அவ்வொழுக்கம் ஆரியரிடமிருந்து வந்ததென்பது அவர் கருத்தன்று. இஃது எல்லோரும் அறிந்த ஒன்றினைக் காட்டி அரிய கருத்தினை விளக்கினதாகும் ஒற்றுமையில் வேற்றுமை காண்டற்கே "தமிழ் கூறு நல்லுலகத்து வழக்கும் செய்யுளுமே" ஓதிய ஆசிரியரால் கூறப்பட்டதாகும் என்பதை நாம் உணர்தல் வேண்டும்.

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே.[13]

---

11. களவியல்—1.
12. ஷை நூற்பா உரை. (நச்)
13. களவியல்—1.

[மறையோர் தேஎம்-அந்தணரது வேதம்; மன்றல்-திருமணம்; துறையமை நல்யாழ்த்துணையோர்-கந்திருவர்.]

என்ற தொல்காப்பியனாரின் நூற்பா மேற்கூறிய கருத்துகளைத் தெளிவாகப் புலனாக்கும். சிந்தாமணி ஆசிரியரும் இது தமிழ் வழக்கே என்பதை,

இலைபுறங் கண்ட கண்ணி
யீன்றமிழ் இயற்கை இன்பம்[14]

தேவர் பண்ணிய தீந்தொடை இன்சுவை
மேவர் தென்றமிழ் மெய்ப்பொருள் ஆதலின்[15]

என்ற கூற்றுகளால் தெளிவுபடுத்தி உள்ளார்.

ஒருவனும் ஒருத்தியுமாக எதிர்ப்பட்டார் இருவர் புனலொடு புல் சாய்ந்தாற்போலத் தம் தலைமைக் குணங்களை இழந்து, மெய்யுறு புணர்ச்சியிற் கூடி மகிழும் இயல்பே கந்தர்வ மணம் என்பது. இங்ஙனம் கூடினோர் தம் வாழ்நாள் முழுவதும் கூடி வாழ்வர் என்ற உறுதி இல்லை. எதிர்ப்பட்ட அளவில் வேட்கை மிகுதியால் கூடிப் பின் அன்பின்றிப் பிரிந்து மாறும் வரம்பற்ற நிலையும் இவ்வகை மணத்திற்கு உண்டு. இன்று உலகியல் வழக்கில் இத்தகைய நிகழ்ச்சிகளை நாம் காணத்தான் செய்கின்றோம். ஆனால், தமிழர் கூறும் களவொழுக்கமோ, இருவருள்ளத்தும் உள்நின்று சுரந்த அன்பின் பெருக்கினால், 'தான், அவள்' என்ற வேற்றுமையின்றி, இருவரும் ஒருவரா யொழுகும் உள்ளப் புணர்ச்சியாகும். இதனை இறையனார் களவியல்,

அதுவே,

தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்[16]

என்று குறிப்பிடும். இவ்வுள்ளப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர் ஒருவரை யொருவர் இன்றியமையாதொழுகும் உயிரோரன்ன செயிர்தீர் நட்பே சாந்துணையும் நிலைபெற்று வளர்வதாகும். உள்ளப் புணர்ச்சி நிகழ்வுற்ற பின்னர், ஒருவரை யொருவர் பிரிவின்றியொழுகும் அன்பின் தூண்டுதலால் உலகறிய மணந்து

14. சிந்தா. சுரமஞ்சரி—9
15. ஷை பதுமையார்—163
16. இறை. களு—2.

வாழும் கற்பென்னும் திண்மை தமிழர் ஒழுகலாறாகிய களவொழுக்கத்தின் முடிந்த பயனாகும். உலகியலில் நேரிடும் பலவகை இடையூறுகளால், ஒருவரையொருவர் மணந்து கொள்ள இயலாமல், உள்ளப் புணர்ச்சியளவே கூடிவாழ்ந்து, பின்னர் இறந்த காதலரும் தமிழகத்தில் இருந்தனர் என்பதற்குத் தருமதத்தன்—விசாகை என்பாரின் வரலாறே சான்றாகும்.[17] இவர்கள் இருவரும் யாழோர் மணமுறையில் பொருந்தியவர்கள் எனத் தம்மை நோக்கி ஊரார் கூறும் பழிமொழியை விலக்கித் தம்வாழ்நாள் முழுவதும் மெய்யுறு புணர்ச்சியை விரும்பாது, உள்ளப் புணர்ச்சியளவில் நின்று உயிர் துறந்த வரலாறு நாம் நினைவு கூர்தற்பாலது.

கந்தர்வ வழக்கில் மெய்யுறு புணர்ச்சி முதற்கண் தோன்றும். அதன் பயிற்சியால் உள்ளப் புணர்ச்சி நிலைபெற்றுச் சாகுமளவும் காதலர்கள் கூடி வாழ்தலும் உண்டு; உள்ளப் புணர்ச்சி தோன்றாது, தம் எதிர்ப்பட்டாரைக் கூடி மாறுதலும் உண்டு. சிந்தாமணியில் காணும் சீவகன்—தேசிகப் பாவை கூட்டம் இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.[18] என்றும் பிரியாநிலையில் நிறை கடவாது அன்பினாற் கூடும் உள்ளப் புணர்ச்சியே களவொழுக்கத்தின் சிறப்பியல்பாகும். இதுவே தமிழியல் கூறும் களவு மணத்திற்கும், வடநூல் குறிப்பிடும் கந்தர்வ மணத்திற்கும் உள்ள உயிர் நிலையாய வேற்றுமையாகும். இதனால்தான் தொல்காப்பியனார் இதனை 'அன்போடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற் காமக் கூட்டம்[19] என்று குறிப்பிட்டார்; குறுந்தொகைப்புலவரும் 'அன்புடை நெஞ்சம் தாங்கலந்தனவே'[20] என உணர்த்தினார்.

ஆரிய மணமாகிய கந்தர்வத்திற்கும் தமிழரின் களவு மணத்திற்கும் உள்ள வேற்றுமையையும், தமிழியல் வழக்கமெனச் சிறப்பித்து உரைக்கப் பெறும் களவொழுக்கத்தின் தூய்மையினையும், ஆரிய அரசன் பிரகத்தனுக்கு அறிவிக்கும் நோக்கத்துடன்தான் கபிலரின் 'குறிஞ்சிப் பாட்டும்' எழுந்தது. இது, தலைவியின் வேற்றுமை கண்டு வருந்திய செவிலிக்குத் தோழி அறத்தொடு நிற்கும் சொல்லோவியமாகும். ''சமயக் கணக்கர் மதி வழி கூறாது,

17. மணிமே. சிறைசெய். வரி (82-142)
18. சிந்தா. பதுமையார் இலம்பகம்
19. களவியல். 1
20. குறுந். 40

உலகியல் கூறிப் 'பொருள் இது' என்ற''[21] திருவள்ளுவரின் 'காமத்துப்பாலும்' தமிழர் மணமுறைப்படி அமைந்துள்ளதை ஊன்றி நோக்குவார்க்குப் புலனாகும்.[22] இவற்றையெல்லாம் நச்சினார்க்கினியரும் யாழோர் கூட்டத்திற்கும் தமிழர் கூட்டத்திற்கும் உள்ள வேற்றுமையை ''கந்திருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும். ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாது''[23] என விளக்கியுள்ளார்.

இறையனார்களவியலுரையாசிரியர் 'களவு' என்னும்பெயர்க்குக் கூறியுள்ள காரணத்தையும் ஈண்டு அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது. அவர் கருத்துப்படி மக்கள் தலையாய மக்கள், இடையாய மக்கள், கடையாய மக்கள் என்று மூவகைப்படுவர். எல்லாச் சமயத்தாரும் பெண் இன்பம் தீது என்றே கூறியுள்ளனர். அந்த இன்பம் உண்டாயின் சுற்றத் தொடர்ச்சி உண்டாகும்; அத்தொடர்ச்சியால் கொலை, வெகுளி, செருக்குப் போன்ற குற்றங்கள் நிகழ்தல் கூடும். இவற்றை எண்ணிப் பார்த்தே தலையாய மக்கள் பெண் இன்பத்தினின்றும் நீங்குவர். இடையாய மக்கள், பெண்களைப்பற்றி நூல்கள் மூலம் அறிவர். பெண் என்பது ஓர் எலும்புச் சட்டகம்; நாற்றமுள்ள கூடு; புழுப்பிண்டம். அது பீளை, மலம், குடல், கொழுப்பு, மூத்திரம் முதலியவற்றின் சார்புடையதேயன்றி ஒரு சிறந்த பொருளன்று; அது சிறந்த பொருளாயின் பூ, சாந்து, எண்ணெய் முதலிய அணிகலன்களை அதற்குப் புனைய வேண்டியதில்லை. இவ்வாறு அவர்கள் உடம்பின் அசுபத் தன்மையை எண்ணிப் பெண்ணின்பத்தினின்று, அகன்று போவர். கடையாயினார், எத்திறத்தானும் அவ்வின்பத்தை விட்டு நீங்கார். காரணம், அனாதி காலந் தொட்டுப் பல பிறப்பிடை ஆணும் பெண்ணுமாகப் பழகிப் போகந் துய்த்து வருவதேயாகும். இவர்களையும் பேரின்பத்துக்குச் செலுத்த வேண்டியது அவசியம். எனவே, இவர்கள் ஆணும் பெண்ணுமாக, இவன் பதினாறாட்டைப் பிராயத்தனாய், இவளும் பன்னீராட்டைப் பிராயத்தளாய் ஒத்த பண்பும், ஒத்த

21. கல்லாடம்-14 வரி(20-23)
22. 'காமத்துப் பாலைப் பெரும் பாலும் வடநூல் வழக்குப் பற்றியும், சிறுபான்மை தமிழர் வழக்குப் பற்றியும் வள்ளுவர் கூறினார்', என்ற பரிமேலழகரின் கருத்து ஏற்கத் தக்கதன்று.
23. களவியல். (நச்.உரை)

நலனும், ஒத்த செல்வமும், ஒத்த கல்வியும் உடையராய்ப் பிறிதொன்றிற்கும் ஊனமின்றிப் போகம் துய்ப்பர். அப்போது, அவர்களிடம் இதை விடப் பேரின்பம் என்பதொன்றுண்டு என்று கூறினால், ''அதனை எங்ஙனம் பெறுவது?'' என்று வினவுவர். அப்போது அதனைத் தவத்தால் பெறலாம் என்பதாகக் கூறல் வேண்டும். உடனே, அவர்கள் தாமும் தவம் செய்து பெற வேண்டும் என்று தவத்தில் ஈடுபடுவர். அப்போது வீடு பேற்றின் பெருமையை விரிந்துரைத்தல் வேண்டும். அப்பேறு பிறப்பு, பிணி மூப்பு, சாக்காடு அவலக் கவலை முதலியவையின்றி உள்ளது என்று கேட்டுத் தவமும் ஞானமும் புரிந்து, அதனைப் பெறுவர். இவ்வாறு அவர்களை வஞ்சித்துக் கொண்டு சென்று நன்னெறிக் கண் செலுத்துவதால் இம் முயற்சிக்குக் **களவு** என்று பெயரிடப் பட்டது. 'களவியல்' கற்க அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் பெறலாம் என்பது இறையனார் களவியலுரை யாசிரியரின் கருத்தாகும்.

தமிழ் வழக்காகிய இக்களவு என்னும் கைகோள் நான்கு வகை யாக நடக்கும் என்று இலக்கண ஆசிரியர்கள் கூறுவர். தொல் காப்பியர்,

காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வுமென்று
ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு,
மறையென மொழிதல் மறையோர் ஆறே.[23]

[பாங்கொடு தழாஅல்-பாங்கற் கூட்டம்; தோழியிற் புணர்வு-தோழியிற் கூட்டம்; மறை-களவு.]

என்று இதற்கு விதி வகுத்துக் காட்டுவர். காமப் புணர்ச்சி, இடந் தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம் என்ற நான்கும் காதல் ஒழுக்கத்தில் வரும் நான்கு கட்டங்கள். ஒவ்வொரு கட்டத்திலும் பல நிகழ்ச்சிகள் உண்டு. தனித்தனி நிகழ்ச்சியைத் **துறை**யென்று குறிப்பர் இலக்கண நூலார். இந்த நான்கு கட்டங் களையும் அடுத்துக் காண்போம்.

களவுத் திணையை மட்டிலும் பாடிய புலவர்கள் 145 பேர்; களவுத்திணைப் பாடல்கள் 882. இவற்றுள் 41 களவுப் பாடல் கட்கு ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்தப் பாடல்களில் பாடிய புலவோர்தம் அறிவுக் கொழுமுனைக்குத் தக்கவாறு சொல் நயம் பொருள் நயம் கொழிக்கும் பல புனைவுகளைக் கண்டு மகிழ லாம்.

23. செய்யுளி. 178.

# இயற்கைப் புணர்ச்சி

அன்பின் ஐந்திணைக்குரியதாய 'காதல்' உணர்ச்சிதான் இன்பத்திற்கு அடிப்படையாக இருப்பது. இத்தகைய உணர்ச்சியைச் சிறந்த முறையில் படைத்துக் காட்டும் இன்ப வாழ்வில் முதன் முதலாக நடைபெறுவது இயற்கைப் புணர்ச்சி; அஃதாவது தலைவனும் தலைவியும் ஊழ்வலியால் ஒருவரை யொருவர் கண்டு காதல் கொள்வது. இதனை இலக்கண நூல்கள் '**எதிர்ப்பாடு**' என்று குறிப்பிடும். இந்த இயற்கைப் புணர்ச்சியை 'தெய்வப் புணர்ச்சி' என்றும் 'முன்னுறு புணர்ச்சி' என்றும் இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடுவர். இவையெல்லாம் காரணப் பெயர்கள். புலவரால் கூறப்பெற்ற இயல்பினால் புணர்ந்தாராதலானும், கந்தர்வ வழக்கத்தோடு ஒத்த இயல்பினால் புணர்ந்தாராதலானும் இஃது 'இயற்கைப் புணர்ச்சி' எனப்பட்டது. இருவரும் தெய்வத் தன்மையால் புணர்ந்ததாலும், முயற்சியும் உளப்பாடும் இன்றிப் புணர்ந்ததாலும் 'தெய்வப் புணர்ச்சி' என்று கூறப்பட்டது. இவள் நலம் இவனால் முன்னுற எய்தப் பெற்றமையாலும், இவன் நலம் இவளால் முன்னுற எய்தப் பட்டமையாலும் 'முன்னுறு புணர்ச்சி' என்று குறியீடு செய்யப்பட்டது. இந்த இயற்கைப் புணர்ச்சியை இலக்கண நூலார் காட்சி, ஐயம், தெளிதல், தேறல் என்று நான்கு நிலைகளில் நடை பெறுவதாகக் கூறுவர்.

தலைவனும் தலைவியும் ஊழ்வலியால் ஒன்றுபட்ட உறவினை விளக்கும் ''ஒன்றே வேறே''[1] என்னும் நூற்பாவிற்கு தொல்காப்பியத்தின் முதல் உரையாசிரியராகிய இளம் பூரணர் தரும் விளக்கம் மிகவும் பொருத்தமுடையதாகும்; அது நேரிய உரையுமாகும். 'பாலதாணையின். ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' என்பதன் உரை; ''ஒருவரை யொருவர் கண்டுழியெல்லாம் புணர்ச்சி

1. களவியல்-2

வேட்கை தோற்றாமையின், பாலதணையான் ஒருவரை யொருவர் புணர்தற் குறிப்போடு காண்ப என்றவாறு'' என்பது. கண்டதும் காதல்—கண்ட முதற்பார்வையிலே காதல் கொண்டு விடுதல்—என்ற கோட்பாடுஒருபால் மறுத்திருப்பது ஈண்டுக்காணத் தக்கது. ஆண் பெண் என்ற இருபாலாரையும் சந்திக்க வைத்தது விதியின் செயலன்று. அவர்கள் முதன்முறை சந்திக்கலாம்; எத்தனையோ முறை இதற்கு முன்னும் சந்தித்தும் இருக்கலாம். இச்சந்திப்பு எல்லாம் பாலதாணையில்லை. முதல் நாள் பார்வை யிலோ பின்னாள் பார்வையிலோ காதலோடு பார்க்கச் செய்வதே விதியின் ஆணையென்று தெளிவிப்பர் இளம் பூரணர். இக்காதற் புணர்ச்சியே ஊழ் கூட்டிய இயற்கைப் புணர்ச்சி என்று பொது வாகப் பெயர் பெறும். தலைவியும் தலைவனும் ஆகிய விதி முன்னரே இருப்பினும் தோன்றாது. காலம் பார்த்து அடங்கிக் கிடக்கும். காலம் என்பது ஈண்டு இருவரும் காமம் நுகர்தற்குரிய குமரப் பருவம். அப்பருவம் எய்தாமல் கண்ணில் காதல் நோக்கம் அரும்பாது; பிறர் கண்ணில் எழும் காதல் நோக்கத்தைப் புரிந்து கொள்ளும் ஆற்றலும் இராது. ஆகவே, அடங்கிக் கிடக்கும் ஊழ், புணர்தற்குரிய இருவரும் ஆளான பின்னர்த்தான் வெளிப்படுவது முறை; பயனும் அதுவே. இது கருதியே தொல் காப்பியர் இக்கூட்டத்தைக் 'காமக் கூட்டம்' என்றும், இறை யனார் களவியலுரையாசிரியர் 'காமப்புணர்ச்சி' என்றும் குறியீடு செய்து வழங்கினர். பின்னவர் தலைமகனும் தலைமகளும் தமிழராய் ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டுத் தம் உணர்வினரன்றி வேட்கை மிகுதியால் புணர்வது என்று இதனை விளக்குவர். இருவருடைய சிறந்த குணங்களும் வேட்கை மிகுதியால் புனல் ஓடு வழி புல் சாய்ந்தாற் போல் அமைந்து கிடக்க, இருவரும் புணர்தல் காமப்புணர்ச்சி என்று பெற வைப்பர். ஏனைய இரண்டு குறியீடு களினும் இது சிறந்தது; விரும்பத் தக்கது.

காதலர்தம் மனவொற்றுமையே அகத்திணையின் உயிர்ப் பண்பு. இவ்வொற்றுமையை 'உள்ளப் புணர்ச்சி' என்று அக விலக்கணம் குறியீடு செய்து காட்டும். அகத்திணைப்பாடலுக்கும் அகத்துறைப் பாடலுக்கும் இந்த உள்ளப்புணர்ச்சி இன்றியமை யாதது; புறநடை இல்லாதது; இறைமை சான்றது. அகம் பாடும் புலவர்கள் இந்த அடிப்படையை நினைந்தே பாடுவர். உள்ளப் புணர்ச்சி ஏற்பட்ட நிலையில் ஒருவரோ டொருவர் உரையாடுதல் முறையன்று; கண்களே அக் காமக் குறிப்புரையை நிகழ்த்து

வதற்குத் துணை புரிபவை. 'காமஞ் சொல்லா நாட்டம்' இவ்வுலகில் இல்லையாதலானும்,[2] பெண்மைக்கே இயல்பாகவுள்ள நாணமும் மடமும் நிலைபெற்ற தலைவியிடம் 'காமத் திணை' குறிப்பினாலும் இடத்தினாலும் அல்லது வேட்கை புலப்பட நிகழாது ஆதலானும்[3] கண்களையே துணையாகக் கொள்ளல் வேண்டும். கண்டவுடன் வேட்கை தோன்றி ஒருவரது உள்ளக் குறிப்பினை மற்றவர் ஏற்றுக் கொண்ட நிலையில்தான் கண்ணினால் வரும் குறிப்பு நிகழும். இதனையே தொல்காப்பியர்,

> நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
> கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்.[4]

> [நாட்டம் - கண். அறிவுடம்படுதல் - இருவரது அறிவினையும் ஒருப்படுத்தல்; கூட்டி - தமது வேட்கையொடு கூட்டி]

என்று கூறுவர். இவ்விதிக்குத் திருவள்ளுவனாரின்,

> கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
> என்ன பயனும் இல.[5]

என்ற குறளை இலக்கியமாகக் கொள்ளலாம். இங்ஙனம் இருவர் குறிப்பும் ஒத்து நிற்றலே 'உள்ளப் புணர்ச்சி' யாகும். 'வழிநிலைக் காட்சி' என்றும் இது பெயர் பெறும். இவ்வுள்ளப் புணர்ச்சியே மெய்யுறு புணர்ச்சிக்கு நிமித்தமாகும்.

காமப் பருவம் எய்திய காதலர்கள் உள்ளம் புணர்ந்த பின்னர் மெய்யுறு புணர்ச்சிக்கு அவாவுதல் முறையே. மனம் ஒன்றியவர் உடல் ஒன்றுதற்குத் தக்க தனியிடம் தேர்வர். இடம் வாய்ப்பின் ஒன்றுதற்குப் பின்வாங்கார். களவுக் காலத்து உடல் உறவே இல்லை என்றும், அது அறவே கூடாது என்றும் கூறுவோர் கொள்கை பிழை என்றும், அஃது இயற்கைக்கு முரண் என்றும் அறுதியிடுவர் மாணிக்கனார்.[6] "உள்ளத்தான் வேட்கை செல்லினும் மெய்யுற்றாராயிற்று"[7] என்று இறையனார் களவியலுரையாசிரியரின் கூற்றையும் தமது கொள்கைக்கு அரணாக அமைத்துக் கொள்வர். களவுக்காலத்து மெய்யின்பம் துய்த்தமை

---

2. ஷை - 19
3. ஷை - 20
4. ஷை - 5
5. குறள் - 1099
6. **தமிழ்க்காதல்** - பக் 47. இது உளவியல் உண்மையுமாகும்.
7. இறை. கள. நூற்பா - 2-இன் உரை.

பற்றிய அகப்பாடல்கள் பல உள்ளன என்றும், மெய்யுறும் செய்கை இன்றாயின் 'பகற்குறி' 'இரவுக்குறி' முதலான பல துறைகள் பயனிலவாய் ஒழியும் என்றும் அறுதியிட்டுக் காட்டுவர்.

**மெய்யுறு புணர்ச்சிக்குரிய நிமித்தங்கள் :** தலைவன் பெருமையும் உரனும் உடையவன். பெருமையாவது, பழியும் பாவமும் அஞ்சுதல். உரன் என்பது அறிவு. இங்ஙனமே, நிறை காவலுக்கு இடையூறு நேருமோ என்ற அச்சமும், பெண்ணியல் பாகிய நாணமும், தான் மேற்கொண்ட கொள்கையை நெகிழ விடாமையாகிய மடனும் தலைவியின் சிறப்பியல்புகளாகும். இக்குணங்களையுடைய இவ்விருவரும் தம்மைக் காவாது, வேட்கை மீதூரார்ந்த நிலையில் தத்தம் பண்புகளை நெகிழ விடாதல் கூடாமையின், தாம் எதிர்ப்பட்ட முதற் காட்சியிலேயே மெய்யுறு புணர்ச்சிக்கு உடன்படாது, உள்ளப் புணர்ச்சியளவே ஒழுகி, மணந்து கொண்ட பின்னரே கூடுதல் முறையாகும் என்பது தொல்காப்பியனாரின் கருத்து. மெய்யுறு புணர்ச்சி நிகழ்வதற்கு முன்னர் நடைபெறும் சில நிலைகளை அவர்,

வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றிச்
சிறப்புடை மரபினை களவென மொழிப[8]

விதி செய்து காட்டுவர். இங்கு வேட்கை என்பது, ஒருவரை யொருவர் பெறல் வேண்டும் என்னும் உள்ள நிகழ்ச்சி. ஒருதலை உள்ளுதலாவது, இடைவிடாது நினைதல், மெலிதலாவது, உண்ணாமையால் உண்டாகும் உடல் மெலிவு. ஆக்கஞ் செப்பலாவது, யாதானும் ஓர் இடையூறு கேட்ட வழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக் கூறிக்கொள்ளுதல். நாணுவரை இறத்தலாவது, ஆற்றுந் துணையும் நாணி அல்லாதவழி அதன்வரையிறத்தல். (நாண் நீங்குதல்). நோக்குவ எல்லாம் அவையே போதல் என்பது, பிறர் தம்மை நோக்கிய நோக்கெல்லாம் தன் மனத்துக் கரந்து ஒழுகுகின்றவற்றை அறிந்து நோக்குகின்றாரெனத் திரியக் கோடல். மறத்தலாவது, விளையாட்டு முதலியவற்றை மறத்தல். மயக்கமாவது, செய்திறன் அறியாது கையற்றுப் புள்ளும் மாவும் முதலியவற்றோடு கூறல். சாக்காடு என்பது, மடலேறுதலும்

8. களவியல் - 9.

வரைபாய்தலும் போல்வன கூறல். இந்த ஒன்பது நிலைகளும் முன்னர்க் குறிப்பிட்ட காட்சி, ஐயம், துணிவு என்ற மூன்றும் சேர்ந்த இப்பன்னிரண்டும் அன்புற்றார் இருவர் துணையாகக் கூடுவதற்குரிய நிமித்தங்களாகும் என்பது தொல்காப்பியரின் கருத்தாகும். இவை நிகழ்ந்த பின்னரே மெய்யுறு புணர்ச்சி நிகழும் என்பது அவர்தம் கொள்கை. ஒருவர் காதல் வாழ்க்கையில் இத்தனையும் நிகழ்தல் வேண்டும் என்ற கட்டாயமும் இல்லை.

மெய்யுறு புணர்ச்சியிலும் ஒரு வரையறை உண்டு. தலைவி தன் வேட்கையைத் தலைவனிடம் முன்னதாகச் சொல்லுதல் வழக்கம் இல்லை. எனினும், அவள் வேட்கையை ஆராயின் அது புதுக்கலத்தின்கட் பெய்த நீர் புறத்துப் பொசிந்து காட்டுமாறு போன்று உணர்வினையுடைத்து என்று கூறுவர் தொல்காப்பியர்.

தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்
பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்
பெய்ந்நீர் போலும் உணர்விற் றென்ப.[9]

என்பது அவர் கூறும் விதி. மேலும், இக்களவு கூட்டி வைப்பார் பிறரின்றித் தனிமையாகவும் பொலியும். ஆதலின், தலைவன் தலைவி இருவரும், தத்தம் உள்ளக் கருத்தைத் தாமே புலப் படுத்தும் தூதுவராக நின்று கூடுதலும் உண்டு என்பது பெறப் படும். எனவே பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம் ஆகியவை யாவர்மாட்டும் நிகழவேண்டும் என்ற வரையறை இல்லை என்பதை அறிதல் வேண்டும்.

**மெய்யுறு புணர்ச்சிக்கு முன் :** இவ்விடத்தில் இன்னோர் உண்மையும் சிந்திக்கத் தக்கது. தலைமகளை தனிமையில் எதிர்ப் பட்ட தலைமகன், தனது பெருமையும் அறிவும் நீங்க வேட்கை மீதூர்தலால் மெய்யுறு புணர்ச்சியை விரும்பினானாயினும் தலை மகள் மாட்டு நிற்கும் அச்சமும் நாணும மடனும் அதற்குத் தடை யாக நிற்கும். அவை நீங்குதற் பொருட்டுத் தலைவன் தலை மகளை முன்னிலைப் படுத்திச் சிலபல கூறுதல் உண்டு. தொல் காப்பியர் இவற்றை,

9. ஷெ - 28

முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்தல்
நன்னயம் உரைத்தல் நகைநனி உறாஅ
அந்நிலை யறிதல் மெலிவுவிளக் குறுத்தல்
தன்னிலை யுரைத்தல் தெளிவகப் படுத்தலென்று
இன்னவை நிகழும் என்மனார் புலவர்.[10]

என்று தொகுத்துக் கூறுவர். இவற்றுள் முன்னிலையாக்கல் என்பது, முன்னிலையாகாத வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக் கோடல். சொல்வழிப்படுத்தலாவது, தான் சொல்லுகின்ற சொல்லின்வழி அவள் நிற்குமாறு படுத்துக் கூறுதல். நன்னயம் உரைத்தலாவது, மேற்கூறிய வண்டு முதலியன சொல்லுவனவாக அவற்றிற்குத் தன் கழிபெருங்காதல் கூறு வானாய்த்தன்னயப்பு உணர்த்துதல். நகைநனி உறாஅது அந்நிலை அறிதலாவது, தலைமகன் தன் நன்னயம் உரைத்தலைக் கேட்ட தலைவிக்கு இயல்பாக அகத்து உளவாகும் மகிழ்வால் புறந் தோன்றும் முறுவற் குறிப்பு மிகத் தோன்றா; அந்நிலையினைத் தலைவன் அறிதல். மெலிவு விளக்குறுத்தலாவது தலைவன் அகத் துறும் நோயால் புறத்து நிகழும் தளர்வினைக் குறிப்பான் எடுத்துக் கூறுதல். தன்னிலையுரைத்தலாவது, தன் உள்ளத்து வேட்கை மீதூர்தலை நிலைப்படச் சொல்லுதல். தெளிவு அகப்படுத்த லாவது, தலைமகள் உள்ளப் பண்பினைத் தான் அறிந்த தெளிவி னைத் தன் மனத்தகத்தே தேர்ந்து வெளிப்படுத்தல். இவை ஏழும் இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னர் நிகழும் உரையாடல் வகைகளாம் என்பது ஆசிரியர் கருத்து. இவற்றிற்கு உரையாசிரியர்கள் காட்டும் மேற்கோள் பாடல்கள் இவற்றைத் தெளிவாக விளக்கும்.

இதற்குமேல் இயற்கைப் புணர்ச்சியாகிய மெய்யுறு புணர்ச்சி நிகழத் தொடங்குவதற்கு முன்னும் சில நிகழ்ச்சிகள் நிகழும். அவற்றை ஆசிரியர்,

மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம் பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந் திரங்கல் கூறுத லுறுதல்.[11]

என்று தொகுத்துக் கூறுவர். மெய்தொட்டுப் பயிறலாவது, தலைவியின் மெய்யைத் தீண்டிப் பழகுதல். நச்சினார்க்கினியர் புலையன் தீம்பால் போல் மனம் கொள்ளுதலும் கொள்ளாமையு மாகித் தலைவி நிற்கின்ற காலத்தே தொட்டான் என்பர். மெய்

10. ஷை - 10.
11. ஷை - 11

என்பது ஈண்டுத் தோள். பிற்காலத்தார் இக்கிளவியை **வண்டோச்சி மருங்கணைதல்** என்று வழங்குவர். அஃதாவது தலைமகளைச் சார எண்ணிய தலைவன், அவள் குழலை நோக்கி வந்த வண்டையோட்டுவது போல நெருங்கி ஓட்டுமிடத்துத் தன் கை பட்டது போலத் தொடுதலாகும் இது. பொய்பாராட்டலாவது, அங்ஙனம் தீண்டி நின்றுழித் தலைவியின் குறிப்பறிந்து அவளை ஓதியும் நுதலும் நீவிப் பொய்யாக ஒரு காரணம் உரைத்துப் பாராட்டல் இடம் பெற்றுத் தழாஅல் ஆவது, பொய் பாராட்டல் காரணமாகத் தலைவி மாட்டு அணிமையிடம் பெற்றுத் தழுவக் கூறல். இடையூறு கிளத்தலாவது,அவள் பெரு நாணினளாதலின் இங்ஙனம் கூறக் கேட்டுக் கூட்டத்திற்கு இடையூறாகக் கண் புதைத்தல், கொம்பர்களிலும் கொடிகளிலும் மறைந்து நிற்றல் போன்றவற்றைத் தலைவி நிகழ்த்தியதைத் தலைவன் கூறுதல். நீடு நினைந்து இரங்குதலாவது, தலைவியை மெய்யுறுதற்கியலும் காலம் வாய்க்காமையை எண்ணி வருந்துதல், கூடுதலுறுதலாவது, புணர்ச்சி எய்துதல். இங்ஙனம் மெய்யுறு; புணர்ச்சி நடைபெறும் என்பது ஆசிரியர் கருத்தாகும்.

இயற்கைப் புணர்ச்சியை விளக்கும் துறையில் அமைந்த குறுந்தொகைப் பாடல்.

யானயந் துறைவோ டேம்பாய் கூந்தல்
விளங்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை
நுண்மணல் அறல்வாரிந் தன்ன
நன்னெறி யவ்வே நறுந்தண் ணியவே[12]

[நயந்து - விரும்பி; தேம்பாய் - வண்டுகள் தாவுகின்ற; அறல் - மணலில் காணப்பெறும் ஒருவகை நெளிவு; வார்ந்தன்ன - நீண்டு படிந்தாற் போன்ற; நெறிப்பு - படிப்படியாய் நீரோட்டத்தினால் மணலில் உண்டாகும் சுவடு]

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன், தலைவியின் கூந்தலாகிய மெல்லணையில் துஞ்சி இன்புற்றவனாதலின் அக்கூந்தலின் இயல்புகளை நினைந்து இவற்றால் பெறும் இன்பத்தை இடைவிடாமல் நுகரும்பேறு பெற்றிலோமே என்னும் இரக்கக் குறிப்புப் பட தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்தது இப்பாடல். தலை

12. குறுந் - 116.

வியைச் சேய்மையிற் கண்டபொழுது தோற்றத்தால் இன்பத்தைத் தரும் என்பான் 'நல்நெறியவ்வே' என்றுமுதலில் கூறினான். நெருங்கும்போழ்து மணத்தால் இன்பத்தைத் தரும் என்பான் 'நறுமையுடையன்' என்று அடுத்துக் கூறினான். பின்னும் நெருங்கி அளவளாவிய பொழுது ஊற்றின்பம் தரும் என்பான் 'தண்ணிய' என்று அதற்கடுத்துக் கூறினான்.

வள்ளுவர் காட்டும் தலைமகன் தான் தலைவியிடம் பெற்ற புணர்ச்சியினை,

> கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே உள.[13]

என்று மகிழ்ந்து கூறுவான். இயற்கைப் புணர்ச்சியால் பெற்ற இன்பம் பற்றிக்கூறும் பாடல்களில் பல்வேறு வகை அநுபவச் சாயல்களைக் கண்டு மகிழலாம்.

---

13. குறள் - 1101

# இடந்தலைப்பாடு

'பாலதாணையால்' தற்செயலாகச் சந்தித்த இருவர் அடுத்தடுத்துச் சந்திக்க விழைகின்றனர். முதல் நாள் சந்தித்த அதே இடத்தில் மறு நாளும் இருவரும் எதிர்ப்படுதலையே இடந்தலைப்பாடு என இலக்கண நூலார் குறியீடு செய்வர். தலைப்பாடு—தலைப்படுதல்—கூடுதல். இஃது இரண்டொரு நாள் கழித்து நடைபெறினும் மறுநாளே நடப்பதாகக் கூறுதல் புலனெறி வழக்கமாகும். தலைவனும் தலைவியும் வினையினால் தலைப்படுதலால் இப்பெயர் பெற்றது.

இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்து இருவரும் பிரிந்த பின்னர், அப்பிரிவாற்றாது வருந்தி நின்ற தலைமகன் தலைவியை மறு நாளும் கூட எண்ணி ''யான் நெருநல் இவளை எய்தியது விதியானே; இன்றும் அவ்விதி கைதருமேல் காண்பல்'' என்று தன் தோழனுக்குக் கூறாது முன்னை நாளில் அவளைக் கண்ணுற்ற பொழிலில் புகுவான். தலைவியும் பிற்றை ஞான்று அங்ஙனமே தன் ஆய வெள்ளத்தோடும் வந்து, தான் நெருநல் விளையாடின இடத்தைக் குறுகி ''நேற்று நின்னிற் பிரியேன்; பிரியின் ஆற்றேன் என்று சொல்லிச் சென்றவன் அறியாது இவ்வாயத்துள்ளே வருவான் கொல்லோ?'' என்னும் பெரு நாணினாலும், ''நம் பிரிவு ஆற்றாமையால் இறந்து பட்டான் கொல்லோ?'' என்ற அச்சத்தினாலும் மீதூரப்பட்டுத் தன் தன்மையளன்றி நிற்பாள். ஆயங்களும் முன்னை நாளில் பிரிந்தாற் போன்று ''தழைவிழை தக்கன தொடுத்தும் என்றும், கண்ணி தண்ணறு நாற்றத்தன செய்தும் என்றும், போது மேதக்கன கொய்தும் என்றும், இவ்வாறு விளையாட்டு விருப்பினால் பிரியும்.'' இந்நிலையில் தலைமகன், தலைமகள் தனிமையாக நிற்கும் இடத்தை நோக்கிச் சென்று தலைமகளை எதிர்ப்படுவான். தலைவியும், ''இவன் நம்பால் அன்பிலனோ?''

என்று முன்பு நிகழ்ந்த ஐயம் நீங்கிப் பெரியதொரு மகிழ்ச்சி அடைவாள். ஆயினும், தன் இயற்கைக் குணங்களாகிய நாண் முதலியன அம்மகிழ்ச்சிக் குறிப்பை வெளிப்படுத்தா வகையில் தடுத்து நிற்கும். உடனே தலைவன், "இக்கள வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாக, அதனால் இங்ஙனம் வேறுபட்டாளோ?" என்றும், அன்றி, "களவு வெளிப்படுதலால் இனி மணம் செய்து கொள்ளின் அல்லது, இக் கூட்டத்திற்கு உடம்படாள் கொல்லோ?" என்றும் கருதுவான். உடனே, "மெய்தொட்டுப் பயிறல்" என்ற செயலால் அவளை மெய்யுறத் தீண்டிக் குறிப்பறியத் தொடங்குவான். இதன் பின்னர், இயற்கைப் புணர்ச்சியில் கூறியவாறே தலைமகன் தலைமகளைப் புணர்வான். இக்கூட்டம் நிகழ்ந்தபின் பெரிதும் மகிழ்ந்தவனாய்த் தலைவியைப் பிரிதற் கெண்ணி, அவளைத் தேற்றுதற்கு 'எஞ்ஞான்றும் இனிப் பிரியேன்' எனத் தெய்வத்தோடு சார்த்திச் சூளுரைப்பான். பின்னர், 'இனி, இவளைக் கூடுவது அரிதாமோ?' என்றிரங்கி, அச்சோலையை விட்டு நீங்குவான்.

தொல்காப்பியர்,

மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந் திரங்கல் கூடுத லுறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்.[1]

என்று தலைவன் கூற்றாகக் கூறும் எட்டுக் கிளவிகளையும் நச்சினார்க்கினியர் இடந்தலைப் பாட்டில் அடக்குவர். இளம் பூரணர் முதல் ஆறு கிளவிகளை இயற்கைப் புணர்ச்சிக்குரியவை யாகவும், இறுதி இரண்டு கிளவிகளையும் இடந்தலைப்பாட்டிற் குரியவையாகவும் கூறுவர். அன்றியும்,

பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலும்[2]

என்ற இரண்டையும் இடந்தலைப் பாட்டில் சேர்த்துக் கூறுவர். முன் கூறிய ஆறு கிளவிகளையும் முன்னர் விளக்கினோம்.[3] ஏனைய நான்கையும் ஈண்டு விளக்குவோம். சொல்லிய நுகர்ச்சி

1. களவியல்—11.
2. ஷை—11 (அடி-11)
3. இந்நூல்—பக்கம்-(53-54)

என்பது, இயற்கைப் புணர்ச்சியின்பொழுது பெற்ற இன்பம் நினைத்தல். தீராத் தேற்றம் என்பது, எஞ்ஞான்றும் பிரியாமைக்குக் காரணமாகிய சூளுறுதல். பெற்றவழி மகிழ்ச்சி என்பது, சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி அவன் அடையும் மகிழ்ச்சி. பிரிந்தவழிக் கலங்கல் என்பது, தலைமகள் தன்னை விட்டுப் பிரிந்த பின்னர்க் கலக்க முறுதல். எனவே, இளம்பூரணர் கருத்துப் படி இவை நான்கும் இடந்தலைப் பாட்டிற்குரிய கிளவியாயிற்று. இக்கிளவிகளை விளக்குவதற்கு உரையாசிரியர்கள் காட்டியுள்ள பாடல்களையெல்லாம் படித்துணர்ந்தால் இவை நன்கு விளக்கம் பெறும். நாற்கவிராச நம்பி முதலியோர் 'மெய் தொட்டுப் பயிறல்' முதலியவற்றை இயற்கைப் புணர்ச்சியின் வகைகளாகக் கொண்டு விளக்குவர்.

**இடந்தலைப்பாடு இருவகை :** தலைவன் தானே சென்று கூடுவது, பாங்கனாற் கூடுவது என்று இடந்தலைப்பாடு இரு வகைப்படும் என்று நச்சினார்க்கினியர் கூறுவர்.[4] பேராசிரியரும் ''துணையின்றி நிகழும் களவு சிறப்புடைத்தாகலாயினும், ''பாங்கன் கழறும்' (இடித் துரைப்பன்) என்று அஞ்சி அவனை முந்துறத் தலைவன் மறைந்தொழுகுமாதலின் தன்னாற் கூடும் இடந்தலைப்பாடு நிகழ்ந்த பின்பே பாங்கனைத் துணையாக வேண்டுவன்'' என்று கூறினர்.[5] இவ்விடத்தில் நாம் ஒன்றினை எண்ணி உணர்தல் வேண்டும். இடந்தலைப்படுவார் பெரும்பாலும் பாங்கனை இல்லாதாரும், பாங்கனை உடையரானாலும் நாணத்தைக் கடவாமல் அதன்கண் நிற்கும் நிறையுடையாரும், அல்லது அப்பாங்கனிடத்துக் கூறினால் அவன் மறுத்துக் கூறுவானே என்றெண்ணும் அச்சமுடையாரும், பாங்கனுமிருந்து நாணமுமில்லாரான விடத்தும் வினைவழியே நிற்றல் வேண்டு மென்று நினைக்கும் நீரருமாகவே இருப்பர். இவரல்லாத ஏனையோர் பாங்கற் கூட்டம் பெறுவர்.

இறையனார் களவியலாரும் இவ்விடந்தலைப்பாடு இருவகைப் படும் என்றே கூறுவர்.

> ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன் தன்வயின்
> பாங்க னோற் குறிதலைப் பெய்தலும்

4. களவியல்—11. (நச். உரை)
5. ஷை—186 (பேரா. உரை)

பாங்கிலன் தமியோள் இடந்தலைப் படலுமென்று
ஆங்க இரண்டே தலைப்பெயல் மரபே.[6]

[ஆங்ஙனம்புணர்ந்த கிழவோன்-இயற்கைப் புணர்ச்சியின் பின் பிரிந்த தலைமகன்; பாங்கனோற் குறிதலைப் பெய்தல்-பாங்கனால் குறியிடத்துத் தலைப்பெய்தல்; பாங்கிலன் தமியோள்-பாங்கனையின்றித் தனியவளாக; இடந்தலைப் படல்-இடத்து எதிர்ப்படல்]

என்பது அவர் கூறும் விதி. இதன் உரையாசிரியர்; ''பாங்கற் கூட்டம் நிகழில் இடந்தலைப்பாடு நிகழாது; இடந்தலைப்பாடு நிகழின் பாங்கற் கூட்டம் நிகழாது; என்னை? அத்துணையாகத் தலைவி எளியள் அல்லள் ஆகலான்'' என்று கூறுவர். மேலும், அவர் இந்நூற்பாவிற்குத் தடைவிடைகளான் விளக்கும் முறை நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. மேற்கூறிய உரைப்பகுதியைத் தொடர்ந்து அவர் கூறுவது; ''அஃதேயெனின், 'பாங்கிலன் தமியோள் இடந்தலைப் படலும் பாங்கனோரிற் குறி தலைப் பெய்தலும்' என்று எழற்பாற்று இச்சூத்திரம்; என்னை? இடந்தலைப்பாடு தெய்வப் புணர்ச்சியோடு ஒக்கும் ஆகலான். அஃதே, அங்ஙனம் சொன்னானே எனினும் மொழிமாற்றிக் கொள்க என்பது; அது பொருந்தாது. மொழி மாற்றுதல் என்பது, செய்யுள் கிடந்தவாறு செய்யலாகாத வழிச் செய்வது. அவ்வாறு செய்யும் சூத்திரம் இனியதாய்க் கிடப்ப மொழிமாற்றுச் சூத்திர மாகச் செய்தல் வேண்டுமோ என்றாற்குப் பெரும்பான்மையும் பாங்கனான் ஆம் என்று சிந்திக்கும்; சிறுபான்மை விதியினான் ஆகும் என்று சிந்திக்கும். ஆகலான், அவன் சிந்தித்த வாற்றானே சூத்திரம் செய்யப்பட்டது; மொழிமாற்றுச் சூத்திரம் அன்று என்பது. உலகத்தோர் இடுக்கண் உற்றால் விதியானே தீரும் என்று இரார். முன்னம் தீர்த்தற்குச் சுற்றத்தாரையும் நட்டாரையும் நினைப்பர். ஆகலானும் அவ்வாறே சொல்லப்பட்டது. அஃதேயெனின், புறத்து யாரானும் உணர்ந்தார் உளர் என்பது உணர்ந்த ஞான்று இவள் இறந்து படும் என்னும் கருத்துடையான், பிற்றை ஞான்றே சென்று பாங்கற்கு உணர்த்தற்பாலனோ எனின், குற்றம் குணம் என்பது தெருளாது உணர்த்தும் என்னும் **ஒருவன்**. அது பொருந்தாது; அங்ஙனம் தெருளாது உணர்த்தின் பாங்கற்கே உணர்த்தக் கடவனோ வழிப்போவார்க்கு உணர்த்த அமையாதோ என்பது. மற்றென்னோ எனின், தான் உணர்ந்தானன்றே இவ்

6. இறை. கள—3.

வொழுச்சத்தினை! தான் உணர்ந்ததோடு ஒச்குபன்றே இவன் உணர்ந்தது! அவனைத் தன்னின் வேறல்லன் என்று கருதினமை யான் அமையும்.'' திருக்கோவையார் உரையும் இக்கொள்கை யினையே, ''பாங்கற்கூட்டம் நிகழாதாயின் இடந்தலைப்பாடு நிகழும்; இடந்தலைப்பாடுநிகழாதாயின்பாங்கற்கூட்டம் நிகழும்'' என்று கூறுதலையும் காண்க.[7]

**ஐயமும் தெளிவும் :** மேற்கண்டவாறு இறையனார் களவியலில் கூறப் பெற்றிருக்க, ஆசிரியர் தொல்காப்பியனார் 'மெய் தொட்டுப் பயிற்றல்' என்னும் நூற்பாவில்[8] இடந்தலைப் பாட்டிற்குரியவையாக எட்டுக் கிளவிகளை முதலிற் கூறி, அதன் பின்னர்ப் பாங்கற் கூட்டத்தின் துறைப் பொருள்களைக் கூறு தற்குக் காரணம் யாதோ என்ற வினா எழலாம். இவ்விரு பேராசிரியன்மாரும் இவ்வாறு முற்றும் நேர் முரணாகக் கூறும் பொருள் முறையுண்மையைப் பேராசிரியர் என்னும் உரையாசிரியர் இனிது இணக்கி உண்மைப்பொருள் கிளந்து மயக்கம் தெளிவிப்பர். ஆசிரியர் தொல்காப்பியனார் 'களவு' என்னும் கைகோளை உணர்த்துவதற்கு,

காமப் புணர்ச்சியும் இடந்தலைப் பாடும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்(று)
ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே.[9]

என்று கூறும் செய்யுளியல் நூற்பாவிற்குப் பொருள் எழுதும் பேராசிரியர், ''காமப்புணர்ச்சி நிகழ்ந்தன்றி இடந்தலைப்பாடு நிகழாதெனவும், அவ்விடந்தலைப்பாடு பிறர்பயத்தல் அரிதென்பது அவள் ஆயத்தோடுங் கூடிய கூட்டத்தான் அறிந்த தலைமகன் பாங்கனை உணர்த்தி அவனாற் குறை முடித்துக் கோடலும், தன் வயிற் பாங்கன் அவள்வயிற் பாங்கு செய்யானாகலின் அதன் பின்னர்த் தோழியாற் குறை முடித்துக் கோடலுமென இந்நான்கு முறையான் நிகழும் களவொழுக்ககம் என்றவாறு'' என்று உரை கூறுவர்.

இதனுள் 'காமப்புணர்ச்சி' நிகழ்ந்தன்றி 'இடந்தலைப்பாடு' நிகழாது என்ற குறிப்பு காணப் பெறுதலை அறிக. ஆனால், இடந்தலைப்பாடு நிகழ்ந்தன்றிப் 'பாங்கற்கூட்டம்' நிகழாது என்ற

7. திருக்கோவை — 49 இன் உரை.
8. களவியல் - 11
9. செய்யுளி - 186

தொரு குறிப்பு காணப் பெறவில்லை. ஆகவே, 'இடந்தலைப் பாடு' நிகழாமலே 'பாங்கற் கூட்டம்' நிகழ்தலும் உண்டு என்பது பெறப்படுகின்றது. மேலும், 'காமப் புணர்ச்சியை' அடுத்து நிகழ்வதென்று கூறப்பெற்ற அவ் 'இடந்தலைப் பாட்டினைத்' தலைவன் தன் பாங்கனைப்கொண்டு குறை முடித்துக் கொள் வான் என்றதொரு குறிப்பும் அதனில் தொனிக்கின்றது. எனவே, பாங்கன் என்பான் அவ் 'இடந்தலைப் பாட்டிற்கு' வாயிலாவான் என்பது தெளிவாகின்றது. பாங்கன் வாயிலாகவே, அவ்வாற்றான் அவன் கூட்டமாகிய 'பாங்கற் கூட்டமும்' அதற்கு வாயிலாக அமைகின்றது என்பதும் உடன் தெளிவாகின்றது. எனவே, 'பாங்கற் கூட்டம்' நிகழ்ந்தாலும் அக் கூட்டம் ஒரு கருவியின் அளவாகவே நிற்ப, ஆண்டும் நிகழ்வது 'இடந்தலைப்பாடே' யாகும் என்பது போதருகின்றது. ஆகவே, இப்பொழுது 'காமப் புணர்ச்சியை, அடுத்து 'இடந்தலைப்பாடு' நிகழும்; அது பாங்கன் துணையின்றி விதியே துணையாக நிகழ்ந்தாலும் நிகழும்; அங்ஙனம் நிகழாதாயின், அது விதியின் துணையோடு பாங்கன் துணையும் பற்றி நிகழும் என்பது பெறப்படுகின்றது.

**இறையனார் - தொல்காப்பியர் கருத்தொற்றுமை :** இந்த இருவருடைய நூற்பாக்களின் பொருள்களில் திணைத்துணையும் முரண்பாடு இல்லை என்பதை மேலே கண்டோம். இவர்கள் கூற்றுகளில் கருத்தொற்றுமையையும் காண்போம். தொல் காப்பியர் காமப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம் என்ற முறையில் களவு நடைபெறும் என்று கூறினார். இடந்தலைப்பாடு விதித்துணைபற்றியே நிகழாதா யினும் பாங்கற்கூட்டத்தால் நிகழ்ந்திடுமென்று கருதி அதனைத் காமப்புணர்ச்சிக்கு அடுத்து நிகழ்வதாக வைத்தார்; அதன் பின்னர் இன்னும் தன் குறைகளையெல்லாம் முடித்துக் கொள்ளும் பொருட்டுத் தோழியைத் துணையாகக் கொள்வான் என்று கொண்டு தோழியிற் கூட்டத்தை அதற்கடுத்து வைத்தார்.

ஆசிரியர் இறையனார் காமப்புணர்ச்சி புணர்ந்த தலை மகனுக்கு அதனை அடுத்து நிகழவேண்டுவதான இடந்தலைப் பாடு பெரும்பாலும் உலகில் பாங்கன் துணைபற்றியே நிகழ்த லன்றி விதித்துணையே பற்றி நிகழ்தல் அரிதாகிச் சிறுபான்மை யாய் முடிதலின், அப்பெரும்பான்மை சிறுபான்மை வேற்றுமை தெரிதற் பொருட்டுப் பாங்கற்கூட்டத்தைக் காமப்புணர்ச்சிக்கு

அடுத்ததாக நிறுத்தி, அது நிகழாதாயின் விதித்துணையே பற்றிய இடந்தலைப்பாடேனும் நிகழும் என்னும் கருத்துடன் நூற்பா செய்தார்.

எனவே, காமப்புணர்ச்சியின்பின் இடந்தலைப்பாட்டினை நிறுத்திய தொல்காப்பியர் கருத்துப்படி அக்காமப்புணர்ச்சியை அடுத்து இடந்தலைப்பாடே நிகழ்வதாம் என்பதும், காமப் புணர்ச்சியின்பின் பாங்கற் கூட்டத்தை நிறுத்தி அதன் பின்னர் இடந்தலைப் பாட்டினை எடுத்துக் கூறிய இறையனார் கருத்துப் படி காமப்புணர்ச்சியை அடுத்து நிகழும் இடந்தலைப்பாடு பெரும் பான்மையும் பாங்கற்கூட்டத்தினாலேயே நிகழ்வதாம் என்பதும் புலப்படுகின்றன. இவற்றைத் தவிர, தினையளவேனும் வேறு விதமான முரண்பாடு புலப்படாதிருத்தலை உய்த்து உணர்க. எனவே, இருபேராசிரியரின் கருத்துகளும் ஒரு முகமாக அமைந் திருத்தலைக் கண்டு மகிழ்க.

மேலும் இடந்தலைப்பாடு பாங்கற்கூட்டம் என்ற இரண்டு பகுதிகளுடன் ஏதேனும் ஒன்று மடிலுமே தலைவனுக்கு நிகழு மாதலின், இவற்றுள் எது முன்னர் நிகழ்வது எது பின்னர் நிகழ்வது எனும் ஐயப்பாடு நிகழ்வதற்கே இனிச் சிறிதும் இடமே இல்லை என்பதையும் நாம் கருத்தில் இருத்துதல் வேண்டும்.

இடந்தலைப்பாடு பற்றி மூன்று பாடல்களே சங்க இலக் கியத்தில் காணக்கிடக்கின்றன. நற்றிணையில் ஒரு பாடல்: இது நெய்தல் திணை பற்றியது. முதல் நாள் புணர்ந்த தலைவியைக் கடற்கரையில் காண்கின்றான் தலைவன். அவள் காதற் பெருக்கை உணர்ந்த தலைவன், ''பாவையைக் கொண்டு ஆய மகளிருடன் ஆடாதும், நெய்தல் மாலையைப் புனையாதும் கடலருகிலுள்ள சோலையில் தனித்து நிற்கும். நங்கையே! நீ யாரோ? கண்டவர் கண்ணைப் பறிக்கும் அழகினையுடையவனே நின்னை வணங்கிக் கேட்கிறேன். கடற்பரப்பின்கண் விரும்பி யுறைகின்ற நீரக மகளோ? அல்லது இருங்கழியருகில் நிலைத்து வாழும் பெண்ணோ அல்லது வேறு யாரோ?'' என்று வினவுகின் றான்.

''ஒள்ளிழை மகளிரொடு ஓரையும் ஆடாய்
வள்ளிதல் நெய்தல் தொடலையும் புனையாய்
விரிபூங் கானல் ஒருசிறை நின்றாய்
யாரையோநின் தொழுதனம் வினவுதுங்

கண்டோர் தண்டா நலத்தை தெண்டிரைப்
பெருங்கடல் பரப்பின் அமர்ந்துறை அணங்கோ
இருங்கழி மருங்கு நிலைபெற் றனையோ
சொல்லினி மடந்தை.''[10]

[இழை - அணிகலன்; ஓரை - பாவை; வள்இதழ் - பெரிய இதழ்; தொடலை - மாலை; கானல் - கடற் கரைச் சோலை; ஒருசிறை - ஒருபக்கம்; தண்டா - கெடாத; திரை - அலை.]

என்ற பாடலில் காதல் மொழி பேசுவதைக் காண்க. அவளை அழகு தெய்வமாகவே தொழுகின்றதையும் காண்க.

ஐங்குறு நூற்றில் ஒரு நிகழ்ச்சி : இதுவும் நெய்தல் திணை பற்றியதே.

''இலங்குவளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி
முகம்புதை கதுப்பினர் இறைஞ்சிநின் றோளே
புலம்புகொள் மாலை மறைய
நலங்கே ழாக நல்குவன் எனக்கே.[11]

[தெளிர்ப்ப-ஒலிப்ப; அலவன்-நண்டு; ஆட்டி-அலைத்து ஓட்டி; கதுப்பு-கூந்தல்; புலம்பு-தனிமைத் துயரம்; நலம்-இன்பம்; ஆகம்-மார்பு]

தலைநாள் புணர்ந்த இடத்தே இடந்தலைப்படும் தலைவன் தன்னுள்ளே மகிழ்ந்து கூறியதாகும் இது. கடற்கரையில் மணலைத் துளைத்து உறையும் நண்டுகள் காலால் மணலைக் கிளைத்தவுடன் வெருவிக் கடல் நீரில் புக விரையும். அங்ஙனம் அஞ்சி ஓடும் நண்டுகளை மேலும் அச்சுறுத்தற் பொருட்டுத் தன் வளையலை ஒலித்து விளையாடுகின்றாள் நெய்தல்நிலத் தலைவி. ஆயினும், அவள் அடிக்கடித் தலைவன் வருகையை எதிர்நோக்கு கின்றாள். தலைவனைத் தொலைவில் கண்டதும் நாணித் தலை குனிந்து தன் முகத்தைக் தன் அடர்ந்த கூந்தலில் மறைத்துக் கொள்ளுகின்றாள். இதனைக் கண்ணுறும் தலைவன் அவளுடைய நாணுடைமையும், அவள் நிற்கின்ற நிலையின் தோற்றத்தையும் கண்டு மகிழும் நிலையில் மாலைப் பொழுது மறைந்ததும் அவள் முயக்கம் தனக்குக் கிடைக்கும் என்று வாயூறி நிற்கின்றான்.

நற்றிணையில் மேலும் ஒரு பாடல்:

10. நற்-155.
11. ஐங்குறு-197

சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்
திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமம் கைம்மிகின் தாங்குதல் எளிதோ?''[12]

[சொல்லின் - கூறின்; சொல்லெதிர்க்கொள்ளாய்- சொல்லை எதிரேற்றுக் கொள்ளாமல்; நாணுதி-நாணு கின்றனை; கதுமென - விரைவாக; கைம்மிகின் - கை கடந்து மிகுபாயின்].

இது குறிஞ்சி நிலக் காட்சி. இடந்தலைப்பட்ட தலைமகன் ''என் சொல்லுக்கெல்லாம் மறுமொழி பகராது நாணி நிற்பவளே! நின் நாணம் என் காமத்தை அதிகரிக்கச் செய்தால் அதனைத் தாங்கு வது எப்படி?'' என்று தானே பன்னி நிற்கின்றான்.

இந்த மூன்று பாடல்களிலும் புணர்ச்சி வேட்கை புலப்படுகின்ற தேயன்றிப் புணர்ந்த குறிப்புச் சிறிதும் காணப் பெற்றிலது. இயற்கைப் புணர்ச்சி, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம் என்ற குறியீடுகள் காதலரிடைப் புணர்ச்சி உண்டு என்பதை வெளிப் படையாகக் காட்டுதல் போல, 'இடந்தலைப்பாடு' என்னும் குறியீடு காட்டவில்லை. ''கண்டால் முயங்குதல், முயங்கிதற்கே காணுதல் என்பது ஆசைக் காமம் ஆகுமின்றி அன்புக் காமம் ஆகாது. காதலர்கள் புணர்வு விருப்பின்றியும் கண்டு கொள்வர். காணுந்தோறும் புணர்வு மேற்கொள்ளார் என்பது (கீழான பருவ எழுச்சிக்கு இடங்கொடா) உயர்ந்த காதலாகும். இயற்கைப் புணர்ச்சியில் கண்டு கலந்த தலைவனுக்கும் தலைவிக்கும் அவ்வள வில் மனநிறைவு ஏற்படுமா? பிரிந்தபின் புணர்ந்த நினைவும் புணர்ந்தார் உருவமும் நெஞ்சை அரித்தன. புதிய பெரிய உறவை மீண்டும் ஒருமுறை களித்துக் காண்பதே இடந்தலைப்பாடு. இத் தலைப் பாட்டால் ஆரா இளைய நெஞ்சங்கள் வேகந்தணி கின்றன; நம்பிக்கை கொள்கின்றன'' என்று உட்கோள் காண்பர் மாணிக்கனார்.[13] தொல்லாசிரியர்கள் யாவரும் இடந்தலைப் பாட்டில் புணர்ச்சி நடைபெற்றதாகக் கூறியிருக்க, குறியீட்டில் புணர்ச்சிக் குறிப்பு இல்லை என்ற ஒரே காரணத்தைக் கொண்டு புணர்ச்சி நடைபெறவிலலை என்பதாகக் கொள்வது பொருத்த மாகத் தோன்றவில்லை. விரிந்து செல்லும் கற்பனை வளத்துக் கேற்றவாறு பாடல்கள் பாட இத்துறை வாய்ப்பு நல்கவில்லை

12. நற். 39
13. **தமிழ்க் காதல்.** பக் 49

யாதலின் ஒரு சிலபாடல்கள்தாம் யாக்கப் பெற்றிருத்தல் கூடும். அவற்றுள் இம் மூன்று பாடல்களைத் தவிர வேறு சிலவும் இருந்து மறைந்து போயிருத்தல் கூடும். தொகை நூல்கள் தோன்றிய காலத்திலேயே அவை அழிந்துபட்டிருத்தல் கூடும் என்றும் கருதலாம். தொல்காப்பியர் இடந்தலைப்பாட்டுக் கிளவிகளாகக் கூறும் எட்டுக் கிளவிகளில் 'கூறுதலுறுதல்' என்ற கிளவியால் புணர்ச்சி நடைபெறுவதாகத் தெரிகின்றது. இது மேலும் ஆராயத் தக்கது.

## பாங்கற் கூட்டம்

இடந்தலைப் பாட்டின் பின்னர் தலைவனைக் காண்கின்றான் அவன் ஆருயிர்த் தோழன். தலைவியை நினைந்து ஆற்றா நிற்கும் தலைவனின் முகவாட்டத்தையும் சோர்வையும் கண்டு, அவனை அடியிற் கொண்டு முடிகாறும் நோக்கி, 'வளர் ஒளி இள ஞாயிற்றின் வனப்புடைய திருவொளி மழுங்கும் படி, எம்பெரு மாற்கு இன்று நேர்ந்த வாட்டம் என்னையோ?' என்று உசாவு கின்றான். இதனைப் மணிவாசகப் பெருமான் 'உயர் மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்தீந் தமிழின் துறைவாய் நுழைந்தனையோ? அன்றி ஏழிசைச் சூழல் புக்கோ?'[1] என்று உணர்த்துவர். இது 'தலைவனைப் பாங்கன் வினாதல்' என்ற துறையின்பாற் படும். காமத்தைப் பற்றி வெளிப்படையாக உரையாடுதல் ஆண் நண்பர் களின் இயல்பாக இருப்பினும் மணிவாசகப் பெருமான் உயர்ந்த கலைப் பண்புடனும் நாகரிகப் பண்புடனும் இதனைப் புலப்படுத் துவர்.

தோழனின் இந்த வினாவுக்குத் தலைவன் சிறிதும் மறை வின்றிப் பெருமிதம் தோன்றத் தன் நிலைமையை எடுத்துரைக் கின்றான். 'நெருநல் இத்தகைய வனப்புடைய ஒருத்தியைக் கண்டு என் உள்ளம், பள்ளத்து வழி வெள்ளம் போல் ஓடி இவ் வகைத்தாயிற்று' என்று நடந்த வரலாற்றைக் கூறுவான். இஃது 'உற்ற துரைத்தல்' என்ற துறையின்பாற் படும். நற்றிணைத் தலைவன் ஒருவன் இவ்வாறு கூறுவான்:

> கழைபாடு இரங்கப் பல்லியம் கறங்க
> ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று,
> அதவத் தீங்கனி அன்ன செம்முகத்
> துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்க,

1. திருக்கோவை. 20

கழைக்கண் இரும்பொறை ஏறிவிசைத் தெழுந்து
குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும்அக்
குன்றகத் ததுவே, குழுமிளைச் சீறூர்;
கொடிச்சி கையகத் ததுவே, பிறர்
விடுத்தற் காகாது பிணித்தஎன் நெஞ்சே![2]

[கழை-குழல் வாத்தியம்; இரங்க-ஒலிக்க; பல்லியம்-பலவகை வாத்தியங்கள்; கறங்க-முழங்க; கொடும்புரி-முறுக்குண்ட புரி; அதவத் தீங்கனி-அத்திப்பழம்; துய்த்தலை-பஞ்சு போன்ற தலை (துய்-பஞ்சு); வன்பறழ்-வலிய குட்டி; குறக்குறு மாக்கள்-குறவரின் சிறுவர்கள்; மிளை-காவற்காடு; நாறு மயிர்-நறுமணங் கமழும் கூந்தல்; கொடிச்சி-மலைநாட்டுப் பெண்; பிணித்த-பிணிப்புண்ட]

தன்னுடைய நெஞ்சு பிறரால் விடுவிக்க முடியாதபடி மலை நாட்டு நங்கை ஒருத்தியின் கையில் சிக்கிக் கொண்டதாகக் கூறு கின்றான் தலைவன். அவள் அருள் செய்து விடுவித்தாலன்றி பாங்கன் போன்றார் விடுவித்தற் கரிதென்பது குறிப்பு, பாடலின் முதல் ஏழு அடிகள் மலை நாட்டுச் சூழ்நிலையை அழகாக எடுத் துரைக்கின்றன. 'கூத்தி நடந்த கயிற்றின்மேல் மந்தியின் பறழ் ஏறியாடக் கண்ட குறமாக்கள் தாளங் கொட்டா நிற்கும்' என்பது இறைச்சிப் பொருள். இது 'காப்பன காத்துக் கடிவன கடிந்து மன் பதை ஓம்புதலை மேற்கொண்ட என்னுள்ளத்து ஒரு கொடிச்சி சென்று தங்குவதனை யறிந்த நீ கைகொட்டி நகையாடி அழுங்கச் செய்தனை' என்ற பொருள் தோன்ற நிற்பது கண்டு மகிழத் தக்கது.

இதே நிலையைக் குறுந்தொகைத் தலைவன் ஒருவன் இவ் வாறு கூறுவான்;

மால்வரை யிழிதருந் தூவெள் ளருவி
கன்முகைத் ததும்பும் பன்மலர்ச் சாரல்
சிறுகுடிக் குறவன் பெருந்தோட் குறுமகள்
நீரோ ரன்ன சாயல்
தீயோ ரன்னன் உரன்அவித் தன்றே.[3]

---

2. நற்-95,
3. குறுந்-95.

[மால் வரை-பெரிய மலை; இழிதரும்-வீழும். தூ-தூய்மையான; கல்முகை-பாறைகளின் வெடிப்புகள்; ததும்பும்-ஒலிக்கும்; சிறு குடி-சிற்றூர்; நீர் ஓரன்ன-நீரைப் போன்ற; சாயல்-மென்மை; தீ ஓரன்ன-தீயை ஒத்த; உரன்-வலி; அவித்தன்று-கெடச் செய்தது.]

இவனும் மலைநாட்டுக் குறமகள் ஒருத்தியின் நீரை யொத்த மென்மை, தீயை யொத்த தன் வலியைக் கெடச் செய்தது என்கின்றான். 'பெருந்தோட் குறுமகள்' என்றது, தன் உரன் அவிதற்கு அவள் தோளும் காரணமாயது என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றது. குறுமகள் என்றது, பெருந் தலைமையை யுடைய தன் உரன் அவியச் செய்தாள் என்னும் வியப்புத் தோன்ற.

ஐங்குறுநூற்றுத் தலைவன் ஒருவன் தான் கண்ட தலைவியின் இயல்பை இவ்வாறு கூறுவான்:

குன்றக் குறவன் காதன் மடமகள்
வரையற மகளிர்ப் புரையும் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே[4]

[மடமகள் - இளையோள்; புரையும் - ஒத்த; ஐ-அழகு ஐயள் - அழகினையுடையவள்; செய்ய - சிவந்த; சுணங்கு- தேமல்]

இதில் 'அரும்பிய முலையள், செய்ய வாயினள் சுணங்கு மார்பினள்' என்னும் அடையாளங்களால் தனக்கும் அவட்கும் கூட்டமுண்மையைக் குறிப்பாக உணர்த்துவதைக் கண்டு மகிழ்க.

இத்தகைய நிகழ்ச்சிகள் தொல்காப்பியரின்,

''குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்''[5]

என்ற விதியினால் பெறப்படும். இதற்கு இளம்பூரணர் தரும் விளக்கமும் ஈண்டு உளங்கொள்ளத் தக்கது. ''குற்றங் காட்டிய வாயிலாவது-தலைமகன் மாட்டுச் சோர்வானும் காதல் மிகுதியானும் நேர்வுற்ற பழி பாவங்களை எடுத்துக்காட்டும் பாங்கன். பெட்பினும்-அத்தகைய பாங்கன் இவ்வியல் பண்டைப் பால் வழியது என எண்ணி இவ்வாறு தலைமகன் மறுத்த வழி அதற்கு

4. ஐங்குறு-255
5. களவியல்-11

உடன்படல். அவ்வழி, நின்னாற் காணப் பட்டாள் எவ்விடத்தள்? எத்தன்மையள்? எனப் பாங்கன் வினாவுதலும், அதற்குத் தலைமகள் இடமும் உருவும் கூறுதலும், அவ்வழிப் பாங்கன் சென்று காண்டலும், மீண்டு தலைமகற்கு அவள் நிலைமை கூறலும் எல்லாம் உளவாம். அவ்வழிப் பாங்கன் வினாதலும் தலைமகன் உரைத்தனவும் உளவாம்' என்பது காண்க.

இங்ஙனம் எல்லாம் தலைவன் கூறியதைக் கேட்ட பாங்கன் தன் அன்பனான தலைவனிடம், தீயன கண்டால் அன்பில் தலைப் பிரியாத சொற்களால் இடித்துக் கூறுபவனாதலின், 'இஃது இவன் தலைமைப்பாட்டிற்குச் சிறிதும் தகாது' என்று உட்கொண்டு 'அன்பனே, 'நின்உள்ளம் நின்வரைத்தன்றிக் கைமிக்கோடுமே எனின், பின்பு நின்னைத் தெளிவிப்பவர் யாவர்? இப்பெற்றித் தாய நீ, இன்ன விடத்து இன்ன உருக்கண்டு என் உள்ளம் அழியப் போந்தேன் என்றல் நின் கற்பனைக்குப் போதாது' என்று கழறி யுரைப்பான்.

''சூழ்பொழில்வாய்
எய்கின்ற ஆயத் திடையோர்
இளங்கொடி கண்டெனுள்ளம்
தேய்கின்ற தென்பது அழகிய
தொன்றோ சிலம்பனுக்கே''[6]

[சிலம்பன்-மலை நாட்டுத் தலைவன்]

என்ற பாடற் பகுதியால் இதனை அறியலாம். காதற் பாங்கன் இங்ஙனம் கழறவும் கேளாது பின்னும் வேட்கை வயத்தனாய் நிற்கும் தலைவன் 'நண்ப, என்னாற் காணப்பட்ட வடிவை நீ கண்டிலை; கண்டனையாயின் இங்ஙனம் கழறாய்' என்று மறுத் துரைத்து வருந்தா நிற்பான். இதனை,

பூணிற் பொலிகொங்கை யாவியை
ஓவியப்பொற் கொழுந்தை
காணிற் கழறலை கண்டிலை
மென்தோள் கரும்பினையே.[7]

என்ற திருக்கோவைப் பகுதியால் அறியலாம். நற்றிணைத் தலைவன் ஒருவன் இவ்வாறு கூறுவான்:

6. பாண்டிக் கோவை-28 (இறை. களா.-3)
7. திருக்கோவை-231

நயனும் நண்பும் நாணும்நன்கு உடைமையும்
பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்
நும்மினும் உடையேன் மன்னே கம்மென
எதிர்த்த தித்தி ஏரிள வனமுலை
விதிர்த்துவிட் டன்ன அம்நுண் சுணங்கின்
ஐம்பால் வகுத்த கூந்தல் செம்பொன்
திருநுதல் பொலிந்த தேம்பாய் ஓதி
முதுநீர் இலஞ்சி பூத்த குவளை
எதிர்மலர்ப் பிணையல் அன்னவிவள்
அரிமதர் மழைக்கண் காணா ஊங்கே.[8]

[நயன்-கலந்து பழகும் தன்மை; நண்பு-நட்பு; நாணும்-நாணமும்; கொடை-ஈகை; பண்பு-தீச்செயலில் செல்லாத உள்ளம்; பாடு-உலக நெறி; கம்மென-மேன்மேலும்: தித்தி-வயிற்றில் தோன்றும் தேமல்; விதிர்த்து விட்டன்ன-அள்ளித் தெளித்தாற் போன்ற; சுணங்கு - கொங்கையின்மீது தொன்றும் தேமல்; இலஞ்சி-பொய்கை; காணா ஊங்கே-காண்பதற்கு முன்னர்]

''இவை யெல்லாம் உன்னைவிட எனக்கு நன்கு தெரியும். அவள் குவளைக் கண்ணைப் பார்ப்பதற்குமுன் பேசவேண்டிய பேச்சுகள்'' என்று எதிர் உரைக்கின்றான்.

அறிவு நிலையில் நின்று பேசும் இளந்தோழன்,

'மலையுறை குறவன் காதல் மடமகள்
பெறலருங் குரையள் அருங்கடிக் காப்பினள்
சொல்லெதிர் கொள்ளாள் இளையள் அனையோள்
உள்ளல் கூடாது''[9]

[அருங்குரையல்-அரியள்; அருங்கடிக் காப்பினள்-அரிய காவலையுடையள்; சொல்லெதிர் கொள்ளாள்-நீ கூறிய மொழிகளை ஏற்காள்; உள்ளல்-நினைத்தல்]

என்று மேன்மேலும் தடுத்துக் கூறுகின்றான். அதற்குத் தலைவன், ''நண்பனே, காற்று மோதியடித்தாலும் வலிய மழை வீசினாலும் சினங்கொண்டு இடிமுழங்கி மோதினாலும் வேறு பல ஊறுகள் தோன்றினாலும் தன் அழகிய நல்ல வடிவம் கெடாத இயல்பினை

8. நற்-160
9. நற்-201

யுடைய மலைச் சாரலில் திகழும் பாவை போல் இக்குறமகள் என் நெஞ்சினை விட்டு அகல்கின்றனளல்லள். ஆதலின் இவளை எவ்வாறு மறந்துய்வேன்?'' என்கின்றான். இடித்துரைக்கும் பாங்கனை நோக்கிக் குறுந்தொகைத் தலைவன் கூறும் மறுமொழி நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. இவன் காமக் கிறுக்கனாய்க் காதற்பித்தனாய்க் கைகடந்து பேசுகின்றான்.

> கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
> நெஞ்சுபிணிக் கொண்ட அஞ்சில் ஓதிப்
> பெருந்தோட் குறுமகள் சிறுமெல் லாகம்
> ஒருநாட் புணரப் புணரின்
> அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே.[10]
>
> [கேளிர்-நண்பர்; நாளும்-எப்பொழுதும்; நெஞ்சு பிணி கொண்ட-நெஞ்சினைப்; பிணித்துக் கொண்ட; ஓதி-கூந்தல்; ஆகம்-மேனி]

'இறைவனைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று பத்தன் கருதுவான். போர்க்களம் புக்குப் புண்படாத நாளெல்லாம் புறங்கொடுத்த நாளாகக் கருதுவது மறவன் இயல்பு; இக் குறுந்தொகைத் தலைவன் தன் அகம் புகுந்தவளின் மெல்லிய ஆகத்தை மேவாத நாளெல்லாம் வாழாத நாளாகக் கருதுகின்றான். இதுவரை வாழ்ந்ததை இவன் வாழ்க்கையாக மதிக்கவில்லை. இனியும் இங்ஙனம் கொன்னே செல்வதை இவன் விரும்பவில்லை. நினையத் தக்க செயல் சிறப்புடைய ஒரு நாளாவது வேண்டும் என்றும், அந்நாள் தன் உள்ளம் கவர்ந்த கள்வியின் மேனியைத் தழுவும் நாளே என்றும், அதன்பின் வீண் வாழ்க்கை சிறிதும் வேண்டாம் என்றும் ஆராக் காதலால் தன் தோழன் அதிர்ந்து போகும் குறிக்கோளை எடுத்தியம்புகின்றான். உண்மை நட்பு மறுப்பறியாத நட்பு; காமத்துக்கும் கண்ணில்லை. காதல் நோய் பற்றியவருக்கு உறக்கமும் வராது. ''இரவினானும் இன்றுயில் அறியாது, அரவுறு துயரம் எய்துப''[11]

தலைவனது உரையைக் கேட்டு அவன் இயல்பை நன்கு அறிந்த பாங்கன், 'நம் அன்பனுக்குக் கவர்ச்சி பெரிதாயிற்று. இனியானும் இவனுடன் கூட வருந்தினால் இவனை ஆற்றுவிப்பார் இலராம்' என்று ஒருவாறு தன்னைத் தேற்றிக்கொண்டு

---

10. குறுந்-280; பாடல் 132யும் காண்க.
11. ஐங்குறு-173

தலைவன் கூறிய குறியிடம் செல்லுகின்றான். அங்ஙனம் செல்பவன், முன்போல ஆயவெள்ளம் விளையாட்டு விருப்பால் பிரியத் தனியளாகி நிற்கும் தலைவியைத் தன்னை அவள் காணாமல், தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண் மறைந்து நின்று அவளைக் காண்கின்றான். உடனே, 'இச் சோலையே எம் பெருமானால் காணப்பட்ட இடம்; ஈண்டு நிற்கும் இந்நங்கையே எம் இறைவனை வருத்தியவள்' என்று துணிகின்றான். மேலும் 'இத்தகைய பேரெழிலுடையாளைக் கண்டு, பிரிந்து, இங்குநின்று, அங்குவந்து யான் கழறவும் ஆற்றி, அத்தனையும் தப்பாமல் சொன்ன அண்ணலே திண்ணியான்' என்று தலைவனை வியந்து நிற்கின்றான். மீண்டும் தலைவனிடம் விரைந்து சென்று நிலைமையை உணர்த்துகின்றான். தலைவனும் அந்த இடம் சென்று தனியளாய் நிற்கும் தலைவியை எதிர்ப்பட்டுக் கலந்து மகிழ்கின்றான். இங்ஙனம் பாங்கனால் தலைவனுக்குத் தலைவியுடன் ஒரு கூட்டம் நிகழ்கின்றது. இதுவே 'பாங்கற் கூட்டம்' என்று பெயர் பெறுகின்றது,

இங்ஙனம் மகிழ்ந்து தலைவியைப் பிரிவாற்றுவித்து நீங்குங் கால், 'இனி நீ வருங்கால் நின் காதல் தோழியோடும் வருக' என்று அவளுக்கு உணர்த்தி, அவளை முன் போல ஆய வெள்ளத்தை அடையச் செய்து பிரிவான். ஐங்குறுநூற்றுத் தலைவன் ஒருவன்,

> ''எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோள்
> நன்னுதல் அரிவையொடு மென்மெல இயலி
> வந்திசின் வாழியே மடந்தை
> தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே[12]
>
> [பணை - மூங்கில்; நுதல் - நெற்றி; அரிவை - பெண் (தோழி); இயலி - நடந்து; வந்திசின் - வந்தருள் வாயாக]

கூறுவதனால் இஃது அறியப்பெறும்.

பாங்கற் கூட்டம்பற்றிச் சங்க இலக்கியத்தில் 27 பாடல்கள் உள்ளன. இவற்றுள் பாங்கன் கூற்றாய் வருவன இரண்டே.[13] எஞ்சிய இருபத்தைந்தும் தலைவன் கூற்றாகவே வருவன. பாங்கனுடைய தொடர்பால் அகத்தலைவனின் காமச் சுரம்

12. ஐங்குறு-175
13. குறுந்-78, 204.

தணிகின்றது; அறிவு திரியாதிருத்தற்குந் துணையாகின்றது. அவனிடம் தன் தலைவியைப்பற்றி மனம் விட்டுப் பேசுந்தோறும் தலைவனின் மனம் வேகம் தணியவும் அவனும் தன் சுய அறிவு நிலைக்கு வரவும் காண்கின்றோம். தலைவன் கூற்றாக 25 பாடல்கள் இருப்பதற்கு இந்த உளவியலே காரணமாகும் என நினைக்கத் தோன்றுகின்றது.

இங்கே கூறப்பெற்ற பாங்கற் கூட்டம், இதற்கு முன்னர்க் கண்ட இடந்தலைப்பாடு இந்த இரண்டினுலும் நாம் அறிய வேண்டியதொன்று உண்டு. இடந்தலைப்பாடு என்பது, பாங்கற் கூட்டத்தின்கண் அடங்கியதொரு பகுதியாய் நிகழ்தலால், பாங்கற் கூட்டத்தைக் கூறவே இடந்தலைப்பாடும் நன்கு தெளி வாகிவிடும். இக்காரணத்தால்தான் இறையனார் அகப் பொருள், திருச்சிற்றம்பலக் கோவையார் முதலான அகப்பொருள் நூல் களில் பாங்கற் கூட்டமே விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. இங்குப் பாங்கன் என்பவன் பார்ப்பனனாவான். நச்சினார்க்கினியரும், 'இவன் பெரும் பான்மை பார்ப்பானாரும்' என்று கூறுவர்.[14] எனவே, சிறுபான்மை மற்றையோரும் பாங்கனாதல் உண்டென்று கொள்ளுதலால் தவறொன்றும் இல்லை. இனி அடுத்து நிகழும் தோழியிற் கூட்டம் மிக விரிவுடையது. ஆகவே அதனைத் தனியாக ஆராய்வது இன்றியமையாத தாகின்றது.

14. களவியல்-11 (நச். உரை).

# தோழியிற் கூட்டம்

அகவொழுக்கத்தின் ஒரு பகுதியாகப் பண்டையோர் குறிப்பிட்ட களவியலில் பெருவரவிற்றுயுள்ளது தோழியிற்கூட்டமாகும். சங்க இலக்கியத்துள் காணப் பெறும் 882 களவுப் பாடல்களில் 40 பாடல்களே முற்கூறிய இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்ற மூன்று வகைக்கும் உரியன. எஞ்சியுள்ள 842 பாடல்கள் தோழிற் கூட்டம் என்னும் இந்த வகைக்கு மட்டிலும் உரியவையாகும். இப் புலனெறி வழக்கம்[1] இல்லையாயின் காதலர்களின் களவொழுக்கம் நீளாதாதலின் ஐந்திணை இலக்கிய உலகில் தோழி என்னும் பாத்திரம் மிக இன்றியமையாதது என்பதை அறிகின்றோம். அகத்திணை நாடகத்தைப் பொறுப்புடன் நடத்தும் பெருவிசை போன்ற இவள் செவிலியின் மகளாகக் கூறப்பெறுகின்றாள்.

'தோழி தானே செவிலி மகளே.[2]

என்பது தொல் காப்பியம்.

இவளுடைய உலகியலறிவும், சதுரப் பாடமைந்த இவளது பேச்சும் அகத்துறைபாடல்களின் சுவையை மிகுதிப் படுத்தும் தன்மையனவாக இருக்கும். தோழியிற் கூட்டத்துறைகள் புலவர்களின் நெஞ்சினை மிக்குக் கவர்ந்தனவாதலின் இத்தன்மையனவான பாடல்கள் மிகவும் அதிகமாக எழுந்தனவாகக் கருதலாம். தோழியின் தொடர்புக்குப் பிறகு தலைவனின் காதல் வாழ்க்கையில் நிகழும் செய்திகள் அளவற்றவை. இவையெல்லாம் சங்கப்பாடல்களிலும் கோவைச் செய்யுட்களிலும் கண்டு இன்புறத் தக்கவை;

1. புலனெறி வழக்கம் என்பது, சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறும் நாடக வழக்கும், உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வரும் உலகியல் வழக்கும் விரவிருவதாகப் பாடப்பெறும் அகப் பொருள் மரபாகும்.
2. களவியல்—35 (இளம்)

உளவியல் நுட்பங்களையெல்லாம் ஆண்டுக் கண்டு மகிழலாம். அகத்திணை நாடகத்தில் இவளுடைய பங்கினை இந்நூலின் வேறோர் இடத்தில் இயல்-22 சற்று விரிவாகக் காணலாம்.[3]

காதலியைத் தற்செயலாகக் காணும் இடந்தலைப்பாடும் பாங்கன் துணையால் ஏற்படும் சந்திப்பும் அடிக்கடி நிகழக்கூடியவை அல்ல. நினைத்தவிடமெல்லாம் விரும்பியவாறெல்லாம் சுற்றித் திரியும் போக்குரிமை ஆடவரைப் போன்று குமரியர்க்கு இல்லை. தாய் தந்தையரின் கடுங்காப்பு இல்லக் குமரியர்க்கு என்றும் உண்டு.

யாயே கண்ணினும் கடுங்கா தலளே
எந்தையும் நிலனுறப் பொறாஅன்[4]

என்று கூறும் அகநானூற்றுத் தலைவியின் வாக்காலும், 'யானும் ஓர், அம்மனைக் காவலுளேன்'[5] என்ற முத்தொள்ளாயிர நங்கையின் கூற்றாலும் இதனை அறியலாம். ஒருகால் பெற்றோர் இசைவு பெற்று வெளியிற்சென்றாலும் தோழியும் உடன்செல்வாள்.

யாமே,
பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயிர் அம்மே.[6]

என்ற கபிலரின் பாடலால் இந்த இணை பிரியாக் கேண்மையை நன்கு அறியலாம். இன்றும் கன்னி மாடத்திலும், கல்லூரியைச் சார்ந்த மகளிர் விடுதிகளிலும் இளங்குமரியர் இருவர் அல்லது மூவராகச் செல்லும் மரபு வழக்கிலுண்மையைக் காணலாம் ஆகவே, தலைவியினுடைய ஆருயிர்த் தோழியின் உதவியின்றித் தலைவியைச் சந்திக்க முடியாது என்று கருதுகின்றான் தலைவன். இதனை,

புணர்ந்த பின்றை ஆங்ஙனம் ஒழுகாது
பணிந்த மொழியால் தோழி தேஎத்து
இரந்துகுறை யுறுதலும் கிழவோன் மேற்றே[7]

3. இயல்-22.
4. அகம்—12
5. முத்தொள்ளாயிரவிளக்கம்—44.
6. அகம் - 12
7. இறை. கள. - 5

[புணர்ந்த பின்றை- பாங்கன் மூலமாகவும், இடைந்தலைப் பாட்டாலும் கூட்டம் நிகழ்ந்த பிறகு; பணிந்த மொழி - இழிந்த சொற்கள்; தோழிதேஎத்து - தோழி மாட்டு இரத்தல் - குறையுடையார் செய்யும் செய்கை; குறை யுறுதல் - பசந்து ஒழுகுதல்]

என்று விதி செய்து காட்டுவர் இறையனார் களவியலுரையாசிரியர்.

தலைவியின் ஆருயிர்த்தோழியை எங்ஙனம் இனம் காண்பது என்பதனை உரையாசிரியர் இங்ஙனம் விளக்குவர்: ''இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னர்த் தன்னை அவள் காணாமைத் தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண் நின்றானாக, மற்றையா ரெல்லாம் தலைமகட்குச் செய்யும் வழிபாடும், இவள் விசேடத் தாற் செய்யும் வழிபாடும், எல்லார்க்கும் தலைமகள் அருளிச் செய்யும் அருளிச் செய்கையும் இவட்கு விசேடத்தாற் செய்யும் அருளிச் செய்கையும் கண்டமையான், 'இவளாம் இவட்குச் சிறந்தாள்; இதுவும் எனக்கோர் சார்பு' என்பதனை உணர்ந் தான். உணர்ந்தமையான், அவளுழையே செல்லும் என்பது. அஃதேயெனின், அவளுழைச் செல்கின்ற ஆயங்கள் ஐயுறாவோ எனின், எங்ஙனம் ஐயுறும்; தழையும் கண்ணியும் கோடற் பொருட்டாக வேறோரிடத்துத் தனியளாய் நின்ற நிலைமைக் கண் செல்லும் என்பது. அவள் இண்ணனம் தனியளாய் நிற்பது அறிந்து செல்லுமோ எனின், செல்லான்; விதியே கொண்டுசென்று தலைப்படுவிக்கும் என்பது.''[8]

குறுந்தொகைப் புலவர் ஆருயிர்த் தலைவியை இனங் காண்டலை இங்ஙனம் புலப்படுத்துவர்: ஒருநாள் தோழியும் தலை வியும் நீராடலைக் கண்ணுறும் தலைவன் அவர்தம் கடுநட் பதனைத் தெளிகின்றான். 'தெப்பத்தின் தலைப்பகுதியைத் தோழி பற்றினால், தலைவி அப்பகுதியையே பற்றுகின்றாள்! அவள் அதன் கடைப்பகுதியைக் கைக்கொண்டால், தானும் அப் பகுதியையே பிடித்துக் கொள்ளுகின்றாள். தோழி தெப்பத்தைக் கைசோரவிட்டு நீரோடு மூழ்கிச் சென்றால் இவளும் அங்ஙனமே மூழ்கிச் செல்வள் போலும்'[9] எனத் தன் கண் சான்றாகத் தலைவன் கண்டுகொள்வதாகக் காட்டுவர். தோழி தலைவியை விட்டு நீங்காத ஓர் இடையூறு என்றும், தோழியின் கேண்மையை அடைந்தாலன்றித் தலைவியின் தோளைப் பற்றுதல் அரிது என்றும் இவன் அறிகின்றான்.

இறை. கள. 5 (உரை)
9. குறுந். 222

இனி, தலைவன் தலைவியுடன் தன் களவுத் தொடர்பைத் தோழிக்கு உணர்த்துதல் வேண்டும். இதனை எங்ஙனம் செய்வது? நாளொடு பிறந்து நாணிலே வளர்ந்த தலைவி தன் புதிய உறவைத் தோழியிடம் கூறாள். கூறும் பொறுப்பு தலைவனிடமே உள்ளது. தோழியும் ஒரு பெண் தானே; தனிமையில் அவளைச் சந்தித்து எங்ஙனம் தன் நிலைமையை எடுத்துரைப்பது? தலைவன் இதனைத் தன் மதிநுட்பத்தால் செயற்படுத்துகின்றான். தலைவியும் தோழியும் ஒருங்கு சேர்ந்திருக்கும்போது சென்று வெளிப்படையாகவோ குறிப்பாகவோ தன் களவை மிக நயமாகப் புலப்படுத்துகின்றான்.

ஒன்று,

இரப்பான்போல் எளிவந்தும் சொல்லும்; உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்;
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்,
நல்லோர்கட் டோன்றும் அடக்கமும் உடையன்;
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வதோர் வன்மையும் உடையன்;
அன்னான் ஒருவன் தன் ஆண்டகை விட்டென்னை
சொல்லும்சொற் கேட்டி சுடரிழாய்.[10]

[எளிவந்து - தாழ்ந்து; மதுகை - பலம், வலி; வல்லார் - மெய்ப்பொருள் வல்லார்; புன்கண் - வறுமை; ஆண்தகை - ஆளும் தன்மை; விட்டு - கைவிட்டு]

என்று கபிலர் இச்செயலை மிக அருமையாகப் புலப்படுத்துவர். தோழி தலைவிக்கு உரைப்பதுபோல் இதனை அமைத்துக் காட்டுவர். "எளிமை பெருமிதம், அறிவு அடக்கம், அருள் ஆற்றல் உடைய நம்பி ஒருவன் எவ்வன்மையும் இல்லாத என்னிடம் போந்தான். நின்னையின்றி என் வாழ்க்கை இல்லை, என்றான்; ஒரு நங்கை பொருட்டுத் தன் ஆண் தகுதிகளை யெல்லாம் கைவிட்டான். இவன் சொல் நம்பத் தக்கதோ? தனி ஒரு பெண்ணால் ஆராய்ந்து உண்மை காணும் தகுதி உடையதோ?" எனத் தலைவனின் தோற்றத்திலும் பண்பிலும் தோழி ஈடுபட்டு அவன் குறையைத் தீர்த்து வைக்கவும் எண்ணுகின்றாள்.

எனினும், தலைவியிடம் இதனை எங்ஙனம் உரைப்பது? முதலில் அவளை எப்படி இதற்காக அணுகுவது? தன் களவு

10. கலி - 47

நிகழ்ச்சி தோழி அறிந்து கொண்டாள் என்று தலைவி அறிந்தாலும் பொறுக்காத நாணமுடையளல்லவா இவள்? இதற்குத் தொல்காப்பியரே வழியமைத்துக் காட்டுகின்றார்.

மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்[11]

என்பது அவர் காட்டும் நெறி. மெய்யான நிகழ்ச்சியைக் கூடுயோ[12] பொய்யான நிகழ்ச்சியைக் கற்பித்தோ[13] இருபொருள் படும்படி தொடர் அமைத்து எவ்வகையானும் தலைவியின் மெல்லிய நாணம் ஊறுபடாதவாறு தலைவியின் நெஞ்சத்தை அறிய முயலவேண்டும் என்கின்றார். மகளிரின் நாணுணர்ச்சி மிகக் கூரியது. ஒரு பெண்ணின் காதலுள்ளத்தை அவளுடன் நெருங்கிப் பழகும் மற்றொரு தோழிப்பெண் வினவத் துணியாள். ஐங்குறு நூற்றில் கபிலர் தலைவியின் நாணுணர்வை "என் தோழி நனி நாணுடையள்"[14] என்று தோழியின் கூற்றாகப் புலப்படுத்துவர். ஈன்று வளர்த்த தாய்கூட தன் ஒரு மகளின் கரவு ஒழுக்கத்தைக் உசாவ மிகவும் அஞ்சுவள். அகநானூற்றுத் தாய் ஒருத்தியின் கூற்றால் இதனை அறியலாம்.

உவக்குந ளாயினும் உடலுந ளாயினும்
யாயறிந் துணர என்னா தீவாய்
அலர்வினை மேவல் அம்பற் பெண்டிர்
இன்னள் இனையள்நின் மகளெனப் பன்னாள்
எனக்குவந் துரைப்பவும் தனக்குரைப் பறியேன்
நாணுவள் இவளென நனிகரந் துறையும்
யான்[15]

[உவக்குநள் - உவப்பு அடைவாள்; உடலுநள் - மாறு படுவாள்; என்னார் - கருதாராய்; அவர் வினை -அவர் கூறும் தொழில்; உரைப்பு - உரைத்தல்].

"தன் மகள் ஒழுகும் நெறியைத் தாயே அறிந்து கொள்ளட்டும். இது பற்றி நமக்கென்ன கவலை? என்று வாளா இராது அலர்வாய்ப் பெண்கள் பல நாளாக ஓய்வு ஒழிவு இன்றி 'நின்மகள் இன்னள், இனையள்' என்று அலட்டுகின்றனர். நானோ அவளிடம் அதுபற்றி வாய்கூடத் திறப்பதில்லை.

---

11. களவியல் - 24.
12. கலி - 60 இல் இதன் விளக்கம் காண்க.
13. கலி - 37, அகம் - 32; இவற்றில் விளக்கம் காண்க.
14. ஐங்குறு - 205
15. அகம் - 203.

ஏதாவது கேட்டால் நாணம் அவளைக் கொன்று விடும். ஆகவே, அப்பெண்டிர் கூறும் செய்தியை மறைத்து வைத்துக் கொள்ளு கின்றேன்'' என்று ஒரு தாய் கூறுவதை இதில் காண்க. இதுவும் கபிலர் காட்டும் தலைவியின் நாணச் செவ்வியே. பருவம் நிரம்பிய நங்கையர் தம் காம உணர்வைச் சொல்லாலும் வெளிப்படுத்து வதில்லை; எண்ணத்தாலும் அறிய இடம் தருவதில்லை என்பது ஓர் உளவியல் உண்மை. ஆகவே, அன்னவர் அக மனத்தை அறிவ தற்கு தோழிக்கு எழுவழி அமைத்துக் காட்டுவர் தொல்காப்பியர்.

நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி எதிர்ப்பாடு உள்ளுறுத்து வருஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை[16]

[நாற்றம் - புணர்ச்சியில் தலைவனிடம் பெற்ற புதிய மணம்; தோற்றம் - புதிய களை; ஒழுக்கம்-புதிய ஒழுக்கம்; உண்டி-உண்ணும் அளவில் குறைவு; செய்வினை மறைப்பு-செயலை மறைத்தல்; செலவு - தனியே செல்லல்; பயில்வு-ஓரிடத்து இருத்தல்]

என்ற அவர் கூறும் விதி காண்க. தலைவியின் நற்குறிப்பு அறிந்த பிறகு தோழி காதலர்கள் மீண்டும் கூட வழி அமைத்துத் தரு வாள். இங்ஙனம் தோழியின் உதவியால் நிகழும் 'கூட்டம் தோழியிற் கூட்டம்' என வழங்கப்பெறும். இயற்கைப் புணர்ச்சி முதலான முன்னைய கூட்டங்கள் நிகழ்ந்த இடத்தே நிகழும்; புணர்ச்சிக் களம் மாறுவதில்லை. தோழி கூட்டுவிக்கும் கூட்டங்க களோ பல்வேறு இடங்களில் நிகழும். இன்ன இடம் என்று களம் சுட்டுவது தோழியின் பொறுப்பாகும். இத் தோழியிற் கூட்டம் என்ற பகுதி மிக விரிவுடையது என மேலே கூறினோம். இதுவும் பல சிறு பகுதிகளாக முன்னோரால் மொழியப் பெற்றுள்ளது. இனி அச்சிறு பகுதிகளை ஒவ்வொன்றாகத் தனித்தனியே அடுத்துக் காண்போம்.

16. களவியல் - 24 (இளம்)

## தோழியிற் கூட்ட மரபுகள்

### (i). பாங்கி மதியுடன்பாடு

தோழியின்மூலம் தன் குறையை முற்றுவித்துக் கொள்ளலாம் எனக் கருதும் தலைவன் அவளை மதியுடம்படுத்தபின் னல்லது தன் குறையை முடிக்க வேண்டும் என்று அவளுக்குத் தன் கருத்தைக் கூறான். மதி என்பது, அறிவு; உடம்பாடு என்பது, உடம்படச் செய்தல்; அஃதாவது தன் கருத்துக்கு ஒப்ப அவளை ஒழுகச் செய்தல். மதியுடம் படுதலை இளம்பூரணர் 'புணர்ச்சி யுணர்தல்' என்று கூறுவர்.[1] தலைவன் தோழியிடம் தன் குறை யைத் தெளிவாகக் கூறாது கரந்த மொழியால் கூறுவானாத லாலும், அங்ஙனம் களவொழுக்கத்தால் தலைவியிடம் தோன்றும் வேறுபாட்டின் காரணமும் புலப்படாததாலும் அந்த இரண் டையும்-இருவர் கருத்தினையும்-தன் மதியுடன ஒன்று படுத்தி உணர்வாள். இவ்வாறு தலைவன் மதி, தலைவி மதி, தோழி மதி என மூவர் மதியினையும் ஒற்றுமைப்படுத்தி உணர்தல்பற்றி இது மதியுடம்படுத்தலாயிற்று என்று உரைப்பர் நச்சினார்க்கினியர்,[2]

இங்ஙனம் தோழியைத் தலைவன் மதியுடம் படுத்துதலுக்கு ஏற்ற நேரத்தையும் அக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. தோழியை மதியுடம் படுத்தற்கு எண்ணிய தலைமகன் அவள்பாற் செல்லுதல் 'பாங்கியிடைச் சேறல்' என்னும் துறையாகவும், தான் சென்றபோது தன் தலைவியும் அத்தோழியும் மட்டும் தனித் தொருங்கு ஓரிடத்து இருந்தமையின் இதுவே தன் குறையெடுத்துக் கூறுவதற்கு ஏற்ற நேரம் என்றும் எண்ணித் தன் குறை கூறத் துணிதல் 'குறையுறத் துணிதல்' என்னும் துறையாகவும் திருக் கோவையாருள் கூறப்பெறுகின்றன. தலைவியும் தோழியும்

1. களவியல்-37 (உரை).
2. ஷை-36 (நச்-உரை).

ஒருங்கு இருக்கும் நேரமே, தலைவன் குறையுறுதற்கு ஏற்ற தாகும். ஏனெனில், அவன் குறையுறும் நேரத்தில் அவன் குறிப் பையும் அக்குறைபாடு கேட்ட அவள் குறிப்பையும் தோழி ஒப் பிட்டுணர்ந்து ஐயம் கொள்ளுதற்கு வாய்ப்பினை நல்கும். இதனாற்றான்,

> இரந்து குறையுறாது கிழவியும் தோழியும்
> ஒருங்கு தலைப்பெய்த செவ்வி நோக்கிப்
> ..........................................................
> மதியுடம் படுத்தற்கு உரியன் என்ப[3]

என்று இறையனார் களவியல் ஆசிரியர் கூறிச் சென்றார். 'செவ்வி நோக்கி' என்பதற்கு அதன் உரையாசிரியரும் 'அன்னதோர் பதம் நோக்கி' என்று விளக்கமும் தந்தார். திருச்சிற்றம்பலக் கோவை யாரும் இங்ஙனமே தலைவியும் தோழியும் தலைப்பெய்த செவ்வி யையே கூறும். ஆசிரியர் நச்சினார்க்கினியர் "தலைவியும் தோழியும் ஒருங்கு தலைப் பெய்த செவ்வி பார்த்தாயினும், தோழி தனித்துழியாயினும்" (தனித்தபோதாயினும்) என்று கூறுவதால் தோழியை மட்டும் தனியே இருப்பக் கண்டு தலைவன் குறையுறு தலும் உண்டு என்று கொள்ளலாம். எனினும். முன்னதே சிறப்பாகும். தலைவன் தினைப்புனம் செல்லும் நேரத்தில் தலைவியும் தோழியும் ஒன்றாய்க் கூடித் தனியே ஓரிடத்தி லிருத்தல் அரிதினும் அரிதன்றோ எனின், அஃது அரியதே யாயினும், விதி இவர்களைக் கூட்டுதலிலேயே முனைந்து நிற்ற லால், இவர்கட்கு உற்ற இடையூறுகள் யாவும் விலகிப் போக அஃது எளிதாகவே முடியும் என்று கொள்ளல் வேண்டும்.

இங்ஙனம் பணிப்பெண்ணாகிய தோழி மாட்டுச் சென்று இரந்து நிற்றல் இவனுடைய வரம்பிகந்த பெருந்தகைமைக்கு இழிவன்றோ என்று வினவலாம் தலைவியைக் கூடுதல் வேண்டு மென்று மிக்கெழுந்த காமவிருப்பத்தின்முன் ஏனைய தன்மைகள் யாவும் தலையெடுத்து நில்லாது வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிய வழிச் சாய்ந்து படுத்த புல்லைப்போல மடிந்து கிடக்குமாதலின் தலைவன்வேறொன்றும் தோன்றப் பெறாமல் அக்காதல் எழுச்சி ஒன்றிற்கே ஆற்றானாய் அவள்பாற் சென்று குறையிரப்பானாத லால், அதனால் ஓர் இழிவு உண்டாம் என்று அவன் கருதுதல் இல்லை இங்ஙனம் செல்பவன்,

3. இறை. கள-6.

நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டேர்
ஊர்ந்த பழிசிதைய ஊர்ந்தாய்வாழி கடலோதம்
ஊர்ந்த வழிசிதைய ஊர்ந்தாய்மற் றெம்மோடு
தீர்ந்தாய்போல் தீர்ந்திலையால் வாழி கடலோதம்[4]

[நேமி-சக்கரத்தையுடைய; கடல் ஓதம்-கடல் நீர்.]

என்று ஆன்றோர் இலக்கியங்களில் கூறப்பெறுதலால், தலைவன் தன் தேர் முதலியவற்றோடு தோழிமாட்டுச் செல்லுதலும் உண்டு என்பது அறியப்படும். இன்னும் தலைவன் அப் பெண்டிர்க்குத் தலையும் மாலையும் கையுறையாகக் கொண்டு செல்லுதலும் உண்டு என்று அகப்பொருள் நூல்கள் நுவலும்.

இம்மதியுடன் பாட்டை ஆசிரியர் தொல்காப்பியனார்,

குறையுற உணர்தல் முன்னுற உணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர உணர்தல்என
மதியுடம் படுத்தல் ஒருமூ வகைத்தே.[5]

என்று குறிப்பர். எனவே, மதியுடம்பாடு குறையுற உணர்தல், முன்னுற உணர்தல், இருவரும் உள்வழிஅவன்வர உணர்தல் என்று மூவகைத்தாக நடக்கும் என்பது அறியப்படும். 'இம் மூன்றினும் ஒன்று கண்டுழி அவரவர் குறிப்பினால் புணர்ச்சி உணரும்' என்பர் இளம்பூரணர்.[6] இனி, இம் மூன்றையும் ஒவ்வொன்றாக விளக்குவோம்.

**குறையுற உணர்தல்:** தலைவன் தன்பால் வந்து குறையுற்று நிற்க, அவன் உள்ளக் கருத்தினை தோழி உணர்தல் 'குறையுற உணர்தல்' ஆகும். அஃதாவது, தலைவியும் தோழியும் ஒருங்கு தலைப்பெய்த செவ்வி பார்த்தாயினும், தோழி தனித்துள்ள இடத்தாயினும், தலைவன் புதியவன் போலப் புகுந்து, 'இங்கே சில விலங்கு போந்தன உளவோ?' 'இளையர் போந்தனர் உளரோ?' எனவும், 'நும்பதியும் பெயரும் யாவை?' எனவும் தலைவன் உசாவ, 'எம்மினாயதோர் குறையுடையவன் இவன்' எனத் தோழி கருதுதல்.

4. சிலப்-கானல்வரி. 36
5. களவியல்-37 (இளம்). 'முன்னுற உணர்தல்' (7) என்னும் இறையனார் அகப்பொருள் நூற்பா பெரும்பாலும் இந் நூற்பாவோடு ஒப்புமை உடைத்தாதல் காண்க.
6. ஷை-37 (இளம். உரை).

நறைபரந்த சாந்தம் அறஎறிந்து நாளால்
உறையெதிர்ந்து வித்தியஊழ் ஏனல்-பிறைஎதிர்ந்த
தாமரைபோல் வாள்முகத்துத் தாழ்குழலீர்! காணீரோ
ஏமரை போந்தன கண்டு.[7]

[நறை-மணம்; சாந்தம்--சந்தனமரம்; உறை-மழை பெய்யும் காலம்: ஊழ்-முதிர்ந்த; ஏனல்-தினை; ஏ-அம்பு;மரை-மான்]

என்ற பாடலில் இச்செய்தியைக் காணலாம்.

பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினும்
ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்
நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியும் தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்[8]

என்ற நூற்பாவின் பகுதியாலும் அதற்கு உரையாசிரியர்கள் காட்டிய மேற்கோள் செய்யுட்களாலும் அறியலாம். இறையனார் களவியலும்,

பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப்
புதுவோன் போலப் பொருந்துபு கிளந்து[9]

[பதி-ஊர்]

என்று இதனை விதி செய்து காட்டும். இவை யெல்லாம் அக இலக்கியங்களில் 'வேழம் வினாதல்', 'கலைமான் வினாதல்' 'வழி வினாதல்', 'பதி வினாதல்', 'பெயர் வினாதல்', 'மொழி பெறாது கூறல்' எனனும் துறைகளாகப் பேசப் பெறும்.[10] இங்குக் 'கெடுதி' என்று கூறப்பெறுவது தலைமகனால் அம்பு விட்டுக் கெடுக்கப் பெற்ற வேழம், கலைமான் முதலியவை. 'அவற்றைக் கண்டீரோ?, என்று கேட்டல் 'கெடுதி வினாதல்' ஆகும். இதனை மணிவாசகப் பெருமான்.

இருங்கண் அனைய கணைபொரு
புண்புணர் இப்புனத்தின்

7. திணைமாலை-1.
8. களவியல்-11( இளம்).
9. இறை. கள-6.
10. இவற்றிற்கு மேற்கோள் செய்யுட்களை நூற்பா 6 இன் உரையில் காண்க.

மருங்கண் அனையதுண்டோ? வந்த(து)
ஈங்கொரு வான்கலையே.[11]
[கணை—அம்பு; கலை—ஆண்மான்]

என்று மிக அழகாகக் கூறுவர். 'உங்கள் கண்களைப் போன்ற அம்பு தைத்தலால் உண்டான புண்ணோடு இங்கு மான் வந்ததா?' என்று கேட்பதில் 'தான் தன் தலைவியின் கண்ணம்பினால் புண் பட்டு வந்தமைபற்றிப் பையக் குறித்திருத்தல்' கண்டு இன்புறத் தக்கது.

**முன்னுறை உணர்தல் :** இதனை இளம் பூரணர் 'தலைவன் குறையுறா வழித் தலைவி குறிப்புக் கண்டு உணர்தல்' என்று பொருள்கூறுவர். 'இருவரது குறிப்பானேமிகவும் உணர்தல்'என்பர் நச்சினார்க்கினியர். முன்னுற உணர்தல்-முன் உற உணர்தல்-முன்னம் உணர்தல் ('முன்' என்பது குறிப்பு). அஃதாவது, முன் கூட்டங்களில் தலைவனைக் கலந்த தலைமகள் தோழியின் முன்னர் வந்தபோது அவளது கண்சிவப்பு, நுதல் வேறு பாடு முதலிய மெய் வேறுபாடு கண்டு, 'இவ்வேறுபாடு இங்குப் பலகாலும் வந்து செல்லும் ஆண் மகனோடு கூட்டமுண்மையால் இவட்கு வந்தது போலும்' என உட்கொண்டு அதனைப் பல்வேறு வகையால் சொல்லாடித் தோழி ஆராய்ந்தறிதலாகும். இவ்வாராய்ச்சியில் தலைமகளிடம் நிகழும் குறிப்பு வேறுபாடுகளால் தோழிக்குத் துணிவு பிறக்கும். இவ்வாராய்ச்சியை இறையனார் களவியலுரை ஆசிரியர் இவ்வாறு குறிப்பர்: "கரவு நாடி எங்ஙனம் உணருமோ எனின், 'எம் பெருமாட்டிக்குப் பண்டைத் தன்மைத் தன்றால் இவ்வேறுபாடு, இஃது எற்றினான் ஆயிற்று, எனக்குச் சொல்லாய்' என்னும்; என, 'நெருநல் நின்னின் நீங்கி மேதக்கதோர் சுனை கண்டு ஆடினேன், நெடுங்காலமும் நின்றாடினேற்கு ஆயிற்று; ஆகாதே, கண்சிவப்பும் நுதல் வேறு பாடும்' என்னும்; 'அஃதேல், சுனையாடினோர்க் கெல்லாம் இக் காரிகை நீர்மை பெறலாமெனின், யானும் ஆடிக் காண்கேன்' என்னும்; எனக் கேட்டுத் தலைமகள் தலைசாய்த்து நிலங்கிளையா நிற்பத் தோழி புணர்ச்சி யுண்டென்றுஉணர்ந்து கொள்வாளாவது. அல்லதூஉம், அங்ஙனம் வேறுபட்ட வேறுபாடு கண்டு ஐயுற்று நின்றாள், அந்தி வானகட்டுச் செங்கோட்டு மதர்வைக் குழவித் திங்களைக் கண்டு தான் தொழுது, 'நீயும் தொழுது காண்' என்னும்; எனக் கேட்டுத் தலைமகள் தொழாது நிற்கும், கற்பழி

11. திருக்கோவை—53

யும் என்பதனான்; அது கண்டு புணர்ச்சி யுண்மை அறிந்து கொள்ளும் என்பது. அஃதன்றி, அவளை வரையணங்காகவும் சொல்லும். இவை யாவும் **நாண நாட்டம்** ஆகும். இங்ஙனமே தோழி தலைவியை நோக்கி, 'நம்புனத்து உதிரம் அளைந்த கொம்புடையதோர் களிறு போந்தது' என்னும்; அது கேட்டுப், 'பல்காலும் இவ்விடத்து வந்தியங்குவான் எம்பெருமானாதலான், அவனைக் களிறு ஓர் ஏதம் செய்தது கொல்லோ?' என்று நடுங்கு வாளாம். இது **நடுங்க நாட்டம்** ஆகும். அது கேட்டுக் கூட்ட முண்மை உணரும்'' மேலும், அவ்வுரைகாரர் 'முன்னுற வுணர்தல்' என்பதற்கு முன் உறவு உணர்தல்—முன் கூட்ட முண்மை உணர்தல்' எனவும் பொருள் கூறுவர்[12]

தொல்காப்பியனாரும் தோழியின் இவ்வாராய்ச்சியை,

நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்[13]

என்ற நூற்பாவின் பகுதியால் உணர்த்துவர். இதனை உரை யாசிரியர் இளம்பூரணர் இவ்வாறு விளக்குவர்: ''நாற்றம் என்பது, பூவினானும் சாந்தினானும் தலைவன் மாட்டுளதாகிய கலவியாற் தலைவி மாட்டுளதாய் நாறுதல். தோற்றம் என்பது, புணர்ச்சியான் வரும் பொற்பு. ஒழுக்கம் என்பது, ஆயத்தாரோடு வேண்டியவாறு ஒழுகுதலின்றித் தன்னைப் பேணியொழுகுதல்' உண்டி என்பது, உண்ணும் அளவில் குறைதல். செய்வினை மறைத்தல் என்பது, பூக் கொய்தலும் புனலாடலும் போலும் வினைகளைத் தோழியை மறைத்துத் தனித்து நிகழ்த்துதல். அன்றியும், தலைவன் செய்த புணர்ச்சியாகிய கருமத்தினைப் புலப்படவிடாது தோழியை மறைத்தலும் என்றுமாம். செல வினும் என்பது, எத்திசையினும் சென்று விளையாடுவாள் ஒரு திசையை நோக்கிச் சேறல். பயில்வினும் என்பது, ஓரிடத்துப் பயிலுதல். புணர்ச்சி எதிர்ப்பாடு என்பது, புணர்வதற்கு முந்துற்ற காலம். உள்ளுறுத்தல் என்பது, உட்கோடல். நாற்றம்

12. இறை. கள.-9 (உரை காண்க)
13. களவியல்—24 (இளம்).

முதல் பயில்வு ஈறாகவுள்ள இந்த உணர்ச்சி ஏழினாலும் எழும் மன நிகழ்ச்சியை ஒன்றோடொன்று ஒவ்வாத வேறுபட்டனவாகி இருபொருள் பயக்கும் சொற்களாலே ஆராய்வாள் தோழி என்பது.[14] இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் நயமான உரையும் அறிந்து உளங் கொள்ளத் தக்கது.[15]

**இருவரும் உள்வழி அவன் வர உணர்தல் :** தலைவியும் தோழியும் ஒருங்கிருந்த வழித் தலைவன் வருதலால் தலைவன் குறிப்பும் தலைவி குறிப்பும் கண்டு உணர்தல். அஃதாவது, தலைவியும் தோழியும் தினைப்புனங் காத்து நின்ற விடத்துத் தலைவன் கையுறை கொண்டுவந்து நின்று, 'இத்தழை நுமக்கு உடையாதற்கு ஏற்றது' எனவும், 'இவ்வணி நீவிர் அணிதற்கு உரியது' எனவும் கூறி அவள்பாற் குறை வேண்டுவான்போல நிற்க, தோழி அப்போது நிகழும் அவ்விருவர் மெய்ப்பாடுகளையும் உணர்ந்து அவ்விருவர்க்கும் கூட்டமுண்மை துணிவள்.

ஏனல் காவல் இவளும் அல்லள்;
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்;
நரந்தங் கண்ணி யிவனோ டிவனிடைக்
கரந்த உள்ளமொடு கருதியது பிறிதே;
எம்முன் நாணுநர் போலத் தம்முள்
மதுமறைந் துண்டோர் மகிழ்ப;
சொல்லும் ஆடுப, கண்ணி னானே.[16]

என்ற பாடலிலும்

இவள்வயிற் செலினே இவற்குடம்பு வறிதே
இவன்வயிற் செலினே இவட்கும் அஃதே
காக்கை யிருகணின் ஒருமணி போலக்
குன்றுகெழு நாடற்குங் கொடிச்சிக்கும்
ஒன்றுபோல் மன்னிய சென்றுவாழ் உயிரே.[17]

என்ற பாடலிலும் தோழியின் உய்த்துணர்வு கூறப்பெறுதலைக் கண்டு மகிழ்க.

மேற் கூறிய மூன்று முறையாலும் முறையே ஆராய்வதற்கு இளம்பூரணர் தரும் விளக்கம் இது: ''இம்மூன்றினுள் ஒன்று

14. ஷை—24 (இளம்.உரை)
15. ஷை—23 (நச். உரை)
16. ஷை—23 (நச்-உரையில் வரும் மேற்கோள் பாடல்.)
17. ஷை உரையில் வரும் மற்றொரு பாடல்.)

கண்டுழி அவரவர் குறிப்பினாற் புணர்ச்சி யுணரும் என்றவாறு. 'குறையுணர்தல்' முன் வைத்தார் நன்கு புலப்படுதலின். 'முன்னுறவுணர்தல்' அதன் பின் வைத்தார், தலைவி வேறுபாடு கண்டு பண்டையிற் போலாள் என்னும் நிகழ்ச்சியான் முற்றத் துணிவின்மையின். 'இருவரும் உள்வழி அவன் வர உணர்தல்' அதன்பின் வைத்தார், ஆண்டுப் புதுவோன் போலத் தலைவன் வருதலானும் தலைவி கரந்த உள்ளத்தளாய் நிற்குமாதலானும் அத்துணைப் புலப்பாடின்மையின். இக்கருத்தினானே மேற் சொல்லப் பெற்ற தோழி கூற்று மூவகையாகப் பொருள் உரைத்த தென்று கொள்க."[18] இம்மதியுடம் பாட்டின் வகை மூன்றும் இறையனார் களவியலுரையிலும் நம்பியகப்பொருளிலும் வேறு படவும் கூறப்பெற்றுள்ளன. அவற்றை ஆண்டுக் கண்டு தெளிக.

## (ii) பகற்குறி, இரவுக்குறிகள்

ஐந்திணை ஒழுக்கத்தில் தோழியின் உதவியால் காதலர்கள் சந்திக்கும் இடம் 'குறியிடம்' என்று வழங்கப்பெறும். அது 'பகற்குறி', 'இரவுக்குறி' என இருவகைப்படும். இதனைத் தொல் காப்பியர்,

> குறியெனப் படுவது இரவினும் பகலினும்
> அறியக் கிளந்த ஆற்ற தென்ப.[19]

என்று கூறுவர். பகற்குறி என்பது பகலில் சந்திக்கும் இடம்; இரவுக் குறி என்பது இரவில் சந்திக்கும் இடம். இந்தக் குறி யிடங்கள் தலைவியாலும் தோழியாலும் காட்டப்பெற்று அவ் விடங்களில் பகலிலும் இரவிலும் தலைவன் சந்திப்பான். களவு நீட்டிக்க வேண்டும் என்பதும், காதலாயினார் இருவகைக் குறிகள் நிகழ்த்த வேண்டும் என்பதும் அகத்திணையின் நோக்கம் இல்லை. பால தாணையால் தாமே கண்டு தம்முட் புணர்ந்த களவுக் காதலர்கள் வெளிப்படையாக மணந்து இல்லறம் நடத்த

---

18. ஷை—37 இன்உரை (இளம்)
19. ஷை-40 (இளம்). இந்நூற்பாவை இறையனார் களவிய லாசிரியர் சிறிது மாற்றத்துடன் தன் நூலில் அமைத்துக் கொண்டார் (நூற். 18).

வேண்டும் என்பதே அதன் நோக்கம். இந்த நோக்கம் நிறைவேறத் தக்க காலம் வாயாவிடின் களவு நீடிக்கும். களவு நீளுங்காலத்தில் பகற்புணர்ச்சி இரவுப்புணர்ச்சிகள் நடைபெறும். இத்தகைய குறிகளை அமைத்தற்கும் ஒரு வரையறையை உணர்த்துவர் தொல்காப்பியர்.

**பகற்குறி:** ஊரின் மதிற்புறமாய்த் தலைமகள் அறிந்து சேர்தற்குத் தகுதியுடையதாகிய இடமே பகற்குறியாகும்.

பகற்புணர் களனே புறனென மொழிப
அவளறி வுணர வருவழி யான.[20]

என்பது அவர் கூறும் விதி. பெரும்பாலும் தலைவன் தலைவியைச் சந்திக்கும் காலம்வெயிலுறைப்பேறிய உச்சிக் காலமாக இருக்கும். ஆகவே, அக் கூட்டத்திற்குக் குறிக்கப்பெறும் இடம் நீர்த்துறை அருகே இருக்குமாறு அமையும். குறுந்தொகைத் தோழியொருத்தி தலைவனுக்குப் பகற்குறி அமைத்துத் தருதலைக் காட்டும் பாடல் இது:

ஊர்க்கும் அணித்தே பொய்கை; பொய்கைக்குச்
சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே:
இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும்
துன்னல்போ கின்றாற் பொழிலே: யாம்என்
கூழைக்கு ஒருமண் கொணர்கஞ் சேறும்
ஆண்டும் வருவள் பெரும்பே தையே.[21]

[அணித்து-அருகிலுள்ளது; சேய்த்தும் அன்று-தொலைவிலுள்ளதன்று; கான்யாறு-காட்டாறு; குருகு-நாரை: துன்னல்-நெடுங்குதல்: கூழை-கூந்தல்]

இதில் தோழி ஊர்க்கும் அணித்தே பொய்கை, அப்பொய்கைக்குக் கான்யாறு அருகிலுள்ள தென்றதனால் 'யாங்கள் வரல் எளிது' என்பதைக் குறிப்பித்தாள். இங்ஙனம் வருதற்கு எளியதாகிய இடத்துத் தனியிடமும் உண்டாங் கொல்லோ என்னும் ஐயம் நிகழாதபடி 'வேறு எவ்வுயிரும் ஆங்கு நெருங்குதல் ஒழிந்ததாகும் அப் பொழில்' என்கின்றாள். தான் வருவது தன் கூந்தலுக்கு எருமண் கொணர்தற்கே யாதலின் தானும் கான்யாற்றங்

20. ஷை-42 (இளம்.)
21. குறுந்-113.

கரையிலே நிற்றலன்றிப் பொழிலில் புகும் வேலை தனக்கு இல்லை என்பதையும் அறிவிக்கின்றாள்.

தோழியின் முடியும் இடனுமா ருண்டே [22]

என்னும் விதிபற்றித் தோழி குறியிடங் கூறினாள் என்பது அறியத்தக்கது.

இறையனார் களவியலாசிரியர், 'பகற்குறிதானே இகப்பினும் வரையார்'[23] என்று பகற்குறி கூறுவர். அஃதாவது, பகற்குறி பல இடங்களில் அமையும் என்பது கருத்து. அதன் உரையாசிரியரும். ''இகத்தல் என்பது ஒன்றின் இறத்தல்...பலவாதல் என்றவாறு. ஒருஞான்று வேங்கைப் பொதும்பினுள் ஆம்; ஒருஞான்று கோங்கம் பொதும்பினுள் ஆம், குறிஞ்சி நிலமாயின். ஒருஞான்று புன்னைறம் கானலுள் ஆம்; ஒருஞான்று கைதை (தாழை)யங் கானலுள் ஆம், நெய்தல் நிலமாயின். இவ்வகை ஏனை நிலத்திற்கும் ஒக்குமாறு அறிந்து உரைக்க. 'பகற்குறிப் புணர்வுகள் பலவாகும்மே' என்றாராகலின்'' என்று விளக்குவர். சங்க இலக்கியங்களிலும் கோவை இலக்கியங்களிலும் பயின்று வரும் பகற்குறிபற்றி வரும் பாடல்களைச் சுவைத்து மகிழ்க.

பகற்குறியின் பொழுது ஒரு தலைவி படும் துன்பத்தை அகநானூறு மிக அழகாகப் பேசுகின்றது.

கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்
நெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம் பட்டெனக்
காணிய செல்லாக் கூகை நாணிக்
கடும்பகல் வழங்கா தாஅங்கு இடும்பை
பெரிதால் அம்ம இவட்கே.[24]

[கடும்பரி-கடிய செலவினையுடைய; எயினன்-ஓர் அரசன்; களம் பட்டென-களத்தில் இறந்தனனாக; கூகை-கோட்டான் (பகற்குருடு உடையது இது); நாணி-நாணுதலுற்று; வழங்காதாங்கு-இயங்காதவாறுபோல;இடும்பை-துன்பம் ]

ஆய் எயினன் என்பான் புட்களுக்குப் பாது காவலனாக இருந்தான் என்பதும் அவன் மிஞிலியொடு பொருது இறந்து வீழ்ந்தபொழுது புட்களெல்லாம் வானிலே நெருங்கி வட்டமிட்டு அவன்மீது

22. களவியல்-31 (இளம்)
23. இறை. கள. 20.
24. அகம்-148

வெயில் படாதவாறு மறைத்தன என்பதும் வரலாற்றுச் செய்திகள். ஏனைப் பறவைகளெல்லாம் செல்லவும் தான் செல்ல லாற்றாமையின் கூகை நாணி வருந்தியிருந்ததைப்போல் தலைவியும் பகலில் வெளியிலே வர நாணுகின்றனள் என்பதைத் தோழி தலைவனிடம் கூறுவதைப் பாடலில் காணலாம். வர லாற்றுச் செய்தியை அகத்திணையில் அருமையாக இணைத்துக் காட்டும் பரணர் திறம் போற்றத் தக்கது.

மணிவாசகப் பெருமான் பகற்குறி தலைவிக்கு இயலாததை மிக அருமையாகக் கூறுவர்.

மாதிடம் கொண்டுஅம் பலத்துநின்
றோன்வட வான்கயிலைப்
போதிடம் கொண்டபொன் வேங்கை
தினைப்புனம் கொய்கவென்று
தாதிடம் கொண்டுபொன் வீசித்தன்
கள்வாய் சொரிய நின்று
சோதிடம் கொண்டிதெம் மைக்கெடு
வித்தது தூமொழியே.[25]

[மாது-பார்வதி; அம்பலம்-சபை; பொன் வேங்கை-பொன் போலும் மலரையுடைய வேங்கை; தாது-மகரந்தம்; பொன் வீசி-பொன் போலும் மலரைக் கொடுத்து; கள்-தேன்; சோதிடம்-நிகழவேண்டியதை முற்கூறுதல்; கெடு வித்தது-கெடுத்தது]

தினைமுதிர்தலும் வேங்கை பூத்தலும் ஒரே காலத்தில் நிகழ்வன. வேங்கை பூத்தது என்பதால் தினை அறுவடையாகும் என்பதும், இனி தினைப்புனங்காவலுக்கு தலைவி வாராள் என்பதும் குறிப் பிட்டவாறு காண்க. மேலும் இது தலைவியின் இற்செறிப் பினையும் அறிவிக்கின்றது. இதில் தற்குறிப்பேற்றமாக வேங்கை தினை கொய்யச் சோதிடங் கூறுவதாகச் செப்பியது மகிழ்ச்சி அளிக்கின்றது. வேங்கை சோதிடங் கூறுவதாகச் சங்க இலக்கியங் களிலும் கூறப்பெற்றுள்ளது.

**பகற்குறி இடையீடு:** பகலில் பழக நேரிடும் தடைகள் 'பகற்குறி இடையீடு' என வழங்கப்பெறும். பெரும்பாலும் தோழி தினைப் புனங்காவலில் இருக்கும்பொழுதுதான் பகற்குறி

25. திருக்கோவை-136

நேர்வதற்கு வாய்ப்புகள் உண்டாகும். தினைமுற்றி அறுவடையானதும் புனக் காவல் நின்று விடும். தலைவி வீட்டினின்றும் வெளிவருதற்கியலாது. அஃதன்றி அவளுக்கு வீட்டிலும் காவல் (இற்செறிப்பு) கடுமையாக இருக்கும். ஆகவே, 'பகற்குறி வாரற்க; இரவுக்குறி வருக' எனத் தோழி இயம்புவள். தோழியின் மொழி அவள் உள்ளன்பைக் காட்டும். அகநானூற்றில் இத்தகைய ஒரு நிகழ்ச்சி தோழி. பேசுகின்றாள்: "தலைவ, பகலில் வாரற்க. ஏன் எனில் தாய் கண்ணினும் கடுமையான அன்புடையளாகித் தலைவியைக் காக்கின்றாள். தந்தையோ தன் மகள் வெளியில் ஏகுவதற்கு ஒருப்படாமல் 'இளைய மகளே, நின் சிறடி சிவக்க எங்குச் செல்கின்றாய்?' என்கின்றான். தலைவியோ ஒருயிர் ஈருடல் கொண்ட இருதலைப் புள்ளைப்போல் நின்னிடம் நிறைந்த அன்புடையளாய் இருக்கின்றாள்.' என்று இதனை,

யாயே, கண்ணினும் கடுங்கா தலளே;
எந்தையும், நிலனுறப் பொறாஅன்; சிறடிசிவப்ப
எவனில குறுமகள் இயங்குதி? என்னும்;
யாமே பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே[26]

என்ற பாடற்பகுதியில் கண்டு மகிழ்க.

**இரவுக் குறி:** மனையினுட் புகாது அங்குள்ளோர் கூறும் சொற்கள் காதலர்க்குக் கேட்கும் அணிமைக்கண் அமைவது இரவுக்குறி. இதனைத் தொல்காப்பியர்,

இரவுக் குறியே இல்லகத் துள்ளும்
மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே
மனையகம் புகாஅக் காலை யான.[27]

என்ற விதியால் காட்டுவர். இளம்பூரணர் 'மனைக்கும் எயிற்கும் நடுவணதோரிடம் கொள்ளப்படும்' என்பர்; நச்சினார்க்கினியர் "அகமனையிற் புகாக் காலையெனவே, இரவுக்குறி அங்ஙனம் (அகமனைக்கும் புறமனைக்கும் நடுவே) சிலநாள் நிகழ்ந்த பின்னர், அச்சமின்றி உள் மனையிற் சென்று கூடவும் பெறுவர் என்பதும் கூறியதாம்"[28] என்று உரைப்பர்.

---

26. அகம் - 12
27. களவியல் - 41(இளம்)

இரவுக்குறிபற்றிய நற்றிணையில் ஒரு பாடல். பகற்குறி இடையீடுபட்ட தலைமகன் ஒருவன் இரவுக்குறி நேருமாறு தோழியை வேண்டுகின்றான். அவளும் அவனை நோக்கிச், 'சேர்ப்பனே, எம் மூர் இனிமையுடையதே. நீவருதலால் யாதொரு தவறும் இல்லை; தம் தம் உறவினரை ஒருவரையொருவர் இன்னார் இன்னார் என்று அறியாத மிகப் பெரிய ஊராகும் அது. ஆகவே அயலாராக வருவாரை எவரும் அறிதல் இயலாது. எனவே நீ தாராளமாக வரலாம்' என இரவுக்குறிக்குப் பச்சை விளக்கு காட்டுகின்றாள்.

"..............................................
இனிதே தெய்யஎம் முனிவில் நல்லூர்
இனிவரின் தவறும் இல்லை எனையதூஉம்
பிறர் பிறர் அறிதல் யாவது
தமர்தம் அறியாச் சேரியும் உடைத்தே.[29]

[முனிவு - வெறுப்பு; தவறு - ஊறுபாடு; தமர் - உறவினர்; எனையதும் - எவ்வளவேனும்]

இவண் நும்மூர் போன்ற தென்பாள் 'எம்மூர் இனிதே' என் கின்றாள். அன்னை முதலாயினோார் ஐயமின்றி இருக்கின்றன ராதலின் 'குறிவயின் தவிராது வருதும்' என்பாள் 'தவறும்இல்லை' என்கின்றாள். 'நீ பிற நிலத்தினர் போன்ற கோலத்தோடு வரினும் எமர் அறிபவர் அல்லர்' என்பாள் 'தமர்தம் அறியாச் சேரி' என்கின்றாள். பகற்குறி இடையீடுபட்ட தலைவன் மேலும் களவில் ஒழுகாது உடனே தலைவியை மணந்து கொள்ளுதலே முறை. அங்ஙனம் ஒழுகாது மேலும் களவொழுக்கத்தையே விரும்பி நிற்பானாயின் அஃதறிந்த தோழி அவன் பகல்வரவினைத் தடுத்து இரவுக்குறி நேர்வாள். மேற்கூறிய செய்யுள் இதுபற்றி வந்த தாகும்.

இரவுக்குறியில் தலைமகன் தலைமகளை நுகர்ந்தும் நுகர் வித்தும் மகிழ்ந்து மலர்விக்கும் நிகழ்ச்சியொன்றினை திருச் சிற்றம்பலக் கோவையாசிரியர் மிக அழகாகக் குறிப்பிடுவர்.

---

28. ஷ - 40 (நச். உரை). இவ்வுரை இறையனார் களவியல் 'இரவு மனை இகந்த' (நூற்.21) என்ற நூற்பாப் பொருளுடன் முரணுகின்றது.
29. நற். - 331

அழுந்தேன் நரகத் தியானென்
　　றிருப்பவந் தாண்டுகொண்ட
செழுந்தேன் திகழ்பொழில் தில்லைப்
　　புறவிற் செறுவகத்த
கொழுந்தேன் மலர்வாய்க் குமுதம்
　　இவள்யான் குருஉச்சுடர்கொண்டு
எழுந்தாங்கு அதுமலர்த் தும்உயர்
　　வானத்து இளமதியே.[30]

[புறவு - இளங்காடு; செறுவகத்த - வயலின் உற்றன வாகிய ; குருஉச்சுடர்-நிறத்தையுடைய நிலா; மலர்த்தும்- விகசிக்கும்]

கூட்டத்தின் இறுதியில் நலனுகர்ந்த தலைவியின் மலர்ந்த முக மலர்ச்சி கண்டு, ''என் காதற் களஞ்சியமே, இந் நள்ளிராப்போதில் நீ குமுத மலராகின்றனை; யான் அதனை மலர்த்தும் வெண்மதி யாகின்றனன்'' என்று நலம் புனைந்துரைக்கின்றான். இங்ஙனம் கூறி மகிழும் தலைவன் உடனே அவளைத் 'தோழியொடு சேர்ந்து ஆயஞ் சென்று பள்ளியிடத்தே துயில்வாயாக; இரவு நேரமாதலால் இங்கு நெடிது பொழுது இராதே' என்று கூறிப் பிரிவான்.

இறையனார் அகப்பொருளாசிரியர் 'இரவுக்குறியே இல்வரை இகவாது'[31] என்று இரவுக்குறியை உணர்த்துவர். இக்குறி இல்லத்தைச் சார்ந்த இடத்தை விட்டு அகலாது என்பது கருத்து. இரவுக் குறிகள் இல்வரைப் பகத்தே நிகழும் என்பது குறிப்பு. அவ்வுரையாசிரியர் சில குறிகளையும் காட்டுவர்: ''அட்டில், கொட்டகாரம், பண்டசாலை, கூடகாரம், பள்ளியம்பலம், உரிமையிடம், கூத்தப்பள்ளி என இவற்றுள் நீங்கிச், செய்குன்றும் இளமரக்காவும், பூம்பந்தரும் விளையாட்டிடமும், அவற்றைச் சார்ந்தனவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் ஆக என்றவாறு. எனவே, பகற்குறியிடம்போல வேறுபட்டது ஆகற்க இரவிற்குறியிடம் என்றவாறு. அஃதேயெனின், மனையகத்து ஆக வழியுண்டோ எனின், குரவர்கள் உறையும் இடமாதலின் தெய்வத் தானம்

30. திருக்கோவை - 166
31. இறை. கள. 19,

என்று கருதப்படும். அல்லதூஉம், புகவும் போகவும் அருமையுடைமையாகலானும் ஆகாது என்பது'' என்று விளக்குவர்.

காதலர்களின் குறியிடச் சேர்க்கைக்கு இராப்பொழுதே பகற் பொழுதினைவிடப் பெரிதும் பொருந்துவதாகும். மக்களின் நெஞ்சறிவினை அது வெளிப்படுவதற்குரிய வாயில்களாகவுள்ள ஐம்பொறிகளுள்ளும் கட்பொறி யொன்றே மிகுதியும் இழுத்து வெளிப்படுத்து வதாகும். எனவே, கட்பொறியொன்று மட்டிலும் அவ்வைம்பொறிகளுள்ளும் அடங்கி நிற்குமாயின், மக்கட்குப் புறப்பொருள் வாயிலாகக் கழியும் நெஞ்சறிவு ஒருபெரிது புறம் படாது உள்ளடங்கும். கட்புலன் அடங்க அடங்க உள்ளுணர்ச்சியும் மிகுந்து கொண்டேயிருக்கும். மிகுதலோடன்றி, அது செறிதலும் செய்யும். செய்யவே, இவ்வாற்றால் கட்புலன் அடங்கிப் புறப்பொருளுணர்ச்சி ஒடுங்கி அகமடங்கும் காலம், பொழுது சாய்ந்து மாலை கவியும் இராக் காலமேயாகும். அதுவே, அகப் பொருளுணர்ச்சி மக்களுள்ளத்தில் உதித்தெழுந்து செறியும் காலமாகும். இவ்வுண்மையினைத் தெளிய வைத்தற்கே வள்ளுவப் பெருந்தகை,

> காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
> மாலை மலரும் இந் நோய்.[32]

என்று கூறினார். இதனால் மக்களுள்ளத்தில் எழும் அகப் பொருளுணர்ச்சி என்னும்மலர் காலைநேரத்தில் மொட்டாயிருந்து நடுப்பகலெல்லாம் மலரும் தகுதி பெற்று மாலை பொழுதில் முழுதும் மலர்ந்து மலராகும் என்னும் அரும்பொருள் விளக்கம் பெறுவது கண்டு மகிழத் தக்கது. ஆகவேதான், அகப் பொருளுணர்ச்சி இயற்கையாகவே மிக்கெழுந்து விம்மும் இராக் காலம் குறியிடப் புணர்ச்சி விழைவுக்குக் காதல் மக்களால் பெரிதும் விரும்பப்பெறுகின்றது என்பது அறியத் தக்கது. இக்காரணத் தாற்றான் இறையனார் அகப்பொருளுரையாசிரியரும், ''களவொழுக்கம் மறைத்தலைத் தனக்கு அணிகலமாக உடைத்தாகலான் இரவுக்குறி பொருந்தியதுணைப் பகற் குறிபொருந்திற் றன்று''[33] என்று உணர்த்தினார் என்பதும் சிந்திக்கத் தக்கது.

**அல்லகுறிப்படுதல் :** மேற்கூறிய இருவகைக் குறிகளுள் இரவுக்குறியில் தலைவன் வருமிடத்துப் பற்பல அடையாளங்கள்

---

32. குறள் - 1227 (பொழுது கண்டிரங்கல்).
33. இறை.கள. —சூத்திரம்—18 (உரை)

தலைவளால் நிகழ்த்தப்பெறும். அவை: புனலொலிப்படுத்தல், புள்ளெழுப்புதல் முதலியன. இங்ஙனம் தலைவன் தன் வரவை அறிவிக்கச் செய்யும் குறிகள் அத்தலைவன் செய்கையாலன்றி வேறு வகையாகவும் நிகழ்வதுண்டு. எடுத்துக் காட்டாக, புன்னைக்காய் மூக்கு ஊழ்த்தியதாலும், வளி எறிவதாலும், புள்துளக்குவதாலும் விழுந்து புனலொலிப் படுத்தும். அங்ஙனமே புள் எழுதலும் வெருவியும் எழும்; வேற்றுப் புள் வரவும் எழும். இவற்றைத் தலைவன் வருகை குறிப்பனவாகக் கொண்டு, தோழி தலைவியைக் குறியிடத்துச் செலுத்தித் தவறுதலும் உண்டு. இதுவே அல்லகுறிப் படுதலாம். அல்ல குறிப்படுதல்—குறியல்லாத் குறியிலே மயங்குதல். இதனைத் தொல்காப்பியர்,

அல்லகுறிப் படுதலும் அவள்வயின் உரித்தே
அவன்குறி மயங்கிய அமைவொடு வரினே.[34]

என்றும்,

குறியின் ஒப்புமை மருள்தற் கண்ணும்[35]

என்றும் குறிப்பிடுவர்.

அணிகடல் தண்சேர்ப்பன் தேர்ப்பரிமா பூண்ட
மணியரவம் என்றெழுந்து போந்தேன்—கணி விரும்பு
புள்ளரவம் கேட்டுப் பெயர்ந்தேன் ஒளியிழாய்
உள்ளுருகு நெஞ்சினேன் யான்.[36]

[பரிமா—குதிரை; அரவம்—ஒலி.]

என்ற தலைவியின் கூற்றால் அவள் அல்லகுறிப் பட்டதை அறியலாம். இன்னும்,

கொடுமுள் மடற்றாழைக் கூம்பவிந்த ஒண்பூ
இடையுள் இழுதொப்பத் தோன்றிப்—புடையெலாம்
தெய்வம் கமழும் தெளிகடல் தண்சேர்ப்பன்
செய்தான் தெளிவாக் குறி.[37]

[கூம்பு—குவிதல்; இடைஉள்—நடுவே உள்ள சோறு; இழுது—வெண்ணெய்; புடை—பக்கம்]

---

34. களவியல்—43 (இளம்) இறையனார் களவியல் நூற்பாவும் போலவே அமைந்துள்ளது.
35. ஷை—11 (அடி. 24)
36. ஐந். ஐம்—50
37. ஷை-49.

என்ற பாடலில் தோழியும் தலைவியும் அல்லகுறிப் பட்டதை அறிக. தலைவியும் தோழியும் அல்லகுறிப் பட்டுப் பெயர்ந்தபின் தலைவன் வழக்கம்போல் வந்து தலைவியைக் காணாது சிறைப் புறத்து மயங்கி நின்றானாக, அதனையறிந்த தோழி தலைவனுக்குக் கேட்கும்படியாக இல்லின் பக்கலிலிருந்து கூறியது இப் பாடல்.

இவ்வாறு அல்லகுறிப் பட்ட மறுநாட் காலையில் தலைவியும் தோழியும் குறியிடம் வந்து நோக்க, தலைவன் குறித்த யிடத்தே தான் வத்து சென்றதற்கு அடையாளமாகக் கோட்டினும், கொடியினும் இட்டு வைத்த மோதிரம், மாலை, முத்தம் முதலியவற்றைக் கண்டு மயங்கி அவர் வருந்துவர். தலைவனும் அவரிட்ட குறி பிழைத்தமைக்கு இரங்கிச் செல்வன். இங்ஙனம் இரவுக் குறியில் பலகாலும் தலைவன் வருங்கால் வேறு சில இடையூறுகளாலும் தலைவி குறியிடம் சேர்தற்கியலாது போவதுண்டு. தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், கூகைகுழறல், கோழி குரற் காட்டல் போல்வன இவ்விடையூறுகளாகும். இவற்றை 'இரவுக் குறி இடையீடு' என்று அகத்திணை நூல்கள் ஒரு துறையாகவும் பிரித்துப் பேசும். தொல்காப்பியர் இவற்றை 'முட்டுவயிற் கழறல்' என்ற துறையாகக் கூறுவர்.[38]

சங்கப் பெரும்புலவர் பாணர் இரவுக்குறிக்கு வரும் முட்டுப் பாடுகளையெல்லாம் அடுக்கி ஒரு பாடலில் கூறுவர். நாள்தோறும் எதிர்பார்த்திருந்த கூட்டம் நாள்தோறும் வந்த புதிய இடையூறுகளால் நடவாமற் போயிற்று என்றும், இங்ஙனம் ஏழுநாள் ஏழு இடையூறுகள் ஏற்பட்டன என்றும், 'இஃது எங்கள் குறையுமன்று, யார் குறையுமன்று, களவின் குறையே' என்றும் ஒரு தலைவி ஏங்கி இரங்கி மொழிகின்றாள். அவள் கூறுவது: "விழாக் காலத்தில் மக்கள் உறங்கார். இவ்வூரினரோ விழவு இல்லாக் காலத்தும் உறங்குகின்றிலர். இவ்வூரினரும் வாணிகம் பெருத்த அங்காடியினரும் உறங்கினும், வெடுக்கென்று கொத்துகின்ற என் அன்னைக்கோ உறக்கம் என்ற ஒன்று வருவதே இல்லை. என்னை இல்லத்துக்கண் செறித்து வைக்கும் அன்னை மறந்து ஒருவேளை உறங்கினும், விழித்த கண்ணராய் வேலேந்தி மூலை முடுக்கெல்லாம் சுற்றித் திரியும் காவலர்கள் சுற்றித் திரிவர். ஒரு சமயம் இவர்கள் உறங்கினும், வால் மடங்காக் காவல் நாய் விடாது

38. மெய்ப்—23 (இளம்)

குரைக்கும். ஓயாது குரைத்து அயன்று அக்கூரிய பல்லையுடைய நாய் ஒருக்கணம் கண் சாயினும், வெண்ணிலவு வானத்து நின்று பகல் போலப் பேரொளி வீசும். மதியும் தண்கதிர் சுருக்கி மலைக்குள் மறையும்போது, இன்னாக் குரல் கொண்ட கோட்டான்கள் வீட்டெலிகளை இரைகொள்வான் வேண்டி, பேய் திரியும் நள்ளிரவில் விடாது குழறும். கூகை கத்துதல் நின்ற போது விடிதலை அறிவிக்கும் கோழி கூவும். இவையெல்லாம் நீங்கிய ஒரு நல்லிரவு வரப்பெற்றேனாயின், நாள்தோறும் பயனின்றி வந்த அவர் (தலைவன்) அன்று வராதிருந்து விடுவார். தித்தனின் உறந்தைக் காட்டுநெறி எவ்வளவு முட்டுப் பாடு உடையதோ அவ்வளவு இடர்ப்பாடு நிரம்பியது நம் களவு நெறி''[38] என்கின்றாள்.

### iii. அலர்

ஐந்திணை ஒழுக்கத்தில் களவு நெறியிலிருந்து கற்பு நெறிக்குச் செல்லத் துணை புரிவது அலர். இளங்குமரியின் காதல் ஒழுக்கம் பற்றி ஊர்மகளிர் வாய்க்குள் பேசிக்கொள்வது **அம்பல்** எனவும், வெளிப்படையாகப் பேசுவது **அலர்** எனவும் அகத்திணை இலக்கியம் பேசும். பரவாத களவை அம்பல் என்றும் களவை, 'அலர்' என்றும் கூறுவர் பேராசிரியர்.[39] அம்பல் என்பது முகிழ்முகிழ்த்தல் என்றும், அலர் என்பது சொல் நிகழ்தல் என்றும் உரைப்பர் நச்சினார்க்கினியர்.[40] இறையனார் களவியலுரையாசிரியர், ''அம்பல் என்பது சொல் நிகழாதே முகிழ்முகிழ்த்துச் சொல்வதா யிற்று; இன்னதின் கண்ணது என்பது அறியலாகாது. அலர் என்பது இன்னானோடு இன்னாளிடை இதுபோலும் பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது. அம்பல் என்பது, பெரும் போதாயச் சிறிது நிற்க அலரும் என நிற்பது. அலர் என்பது, அப்பெரும் போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற்போல நிற்கும் நிலைமையென வேற்றுமை சொல்லப்பட்டதாம்'' என்று விளக்குவர்.[41]

38. அகம்-122
39. திருக்கோவை-180 இன் உரை.
40. களவியல்-48 இன் உரை
41. இறை. கள-22 (உரை)

இந்த அம்பலும் அலரும் பெரும்பாலும் உள்ளூர்ப் பெண்டிராலேயே நிகழும். இவர்களின்றேல் ஐந்திணை இலக்கியம் உப்பில்லாத உணவுபோல் சாப்பிட்டுத் தோன்றும். தலைவன் தலைவியர் களவொழுக்கத்தில் இவர்கள் செய்வது நன்றல்லதேயாயினும், சமுதாய நெறிக்கு நல்லது என்ற கருத்தால், தமிழ்ச் சான்றோர் இவ்வூர்ப் பெண்டிரையும் அகத்திணை இலக்கியத்தில் போற்றிக் கொள்வாராயினர். களவியலும் கற்பிலும் ஊரார்க்கு இடன் உண்டு. ஊரார் என்பது இருபாலாருக்கும் பொதுச் சொல்லேயாயினும் அகத்திணை இலக்கியத்தில் இச் சொல் பெண்டிரையே குறிக்கும்.[43] வீட்டகத்துச் செய்திகளை அட்டில் அறைப் புகைபோல் நுழைந்து காணும் ஆசையும், கூடியிருந்து முணுமுணுத்துப் பேசும் துணிவும் எப்படியோ பெண் சமுதாயத்திற்குப் பிறவிக் குணம்போல் அமைந்துவிட்டன. இத்தகைய வாய்ப்பட்டிகளை 'வெவ்வாய்ப் பெண்டிர்'[44] 'அலர்வாய்ப் பெண்டிர்'[45] 'அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்'[46] 'அலர் வினை மேவல் அம்பர் பெண்டிர்'[47] என்று அகத்திணைப் புலவர்கள் குறிப்பிடுவர்.

ஊர்ப் பெண்டிர் பரப்பும் அலரால் பல நன்மைகள் விளையும். இதனைத் தலைவியும் தோழியும் நன்கு அறிவர். அலர் எழுவதால் காதலர்களின் காதல் நோய் பெருகி வளரும், இதனை,

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது.[48]

என்கின்றான் திருவள்ளுவர் படைத்த தலைவன். கள்ளுண்பார்க்குச் களிக்குந்தோறும் கள்ளுண்டல் இனிதாமாறு போல, தன் காமம் அலராந்தோறும் இனிதாகா நின்றதாகக் கூறுகின்றான். அங்ஙனமே அவர் படைத்த தலைவியும்,

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும் இந் நோய்.[49]

[கௌவை-பழிச் சொல்; நோய்-காமநோய்]

---

42. தொல்-பொருள் 1107
43. குறள்-1147. (பரிமேலழகர் உரை)
44. குறுந் 373; அகம்.50
45. நற்-36
46. ஷை. 143
47. அகம்-203
48. குறள்-1145
49. குறள்-1147

என்று கூறுவாள். ஊரவர் கௌவை சில நாள் நிகழும்; எருவும் சிலகால் இடப்பெறும். நீர் அடிக்கடி பாய்ச்சப்பெறும்; அன்னையும் அடிக்கடி வெகுண்டு வெஞ்சொல் கூறுவள். ஆதலால் ஊரவர் கௌவையை எருவாகவும், அன்னையின் சொல்லை நீராகவும் உருவகஞ் செய்து காட்டிய வள்ளுவரின் நுண்ணறிவு நம்மை மெய்சிலிர்க்க வைக்கின்றது. இக்குறளின் கருத்தை நம்மாழ்வார்' மகள் பாசுரத்தில்

ஊரவர் கவ்வை எருவிட்டு
அன்னைசொல் நீர் மருத்து
ஈரநெல் வித்தி முளைத்த
நெஞ்சப் பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல்
புரைய விளைவித்த
காரமர் மேனிநம் கண்ணன்
தோழீ! கடியனே''[50]

[முளைத்த-முளைப்பித்த; பெருஞ்செய்-பெரிய வயல்]

என்று அருளிச் செய்திருப்பது அநுபவிக்கத் தக்கது. 'பெருஞ் செய்' என்பதற்கு ''ஸம்ச்லேஷ விச்லேஷங்களாலே புடைபடுத்தி நித்ய விபூதியோ பாதி பரப்புடைத்தாம்படி பெருக்கினானா யிற்று'' என்ற நம் பிள்ளையின் ஈடும் சுவைத்து மகிழத் தக்கது. இந்த உண்மையை நன்குணர்ந்த தொல்காப்பியரும்,

அலரில் தோன்றும் காமத்து மிகுதி[51]

என்று நூற்பா செய்துகாட்டுவர். வள்ளுவர்படைத்த தலைவியும்,

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்[52]

[நுதுப்பல்-அவித்தல்]

என்ற குறளால் ஊரார் எடுக்கும் அலரால் காமத்தை அவிக்கலாம் என்று கருதுதல் நெய் பெய்து எரியை அவிக்கலாம் என்று கருதுவதனோடொக்கும் என்று விளக்குவள்.

முல்லை நிலத் தாய் ஒருத்தி தன் மகளைச் சிறிது கடிந்துரைக் கின்றாள். இஃதறிந்த அக்கம் பக்கத்துப் பெண்டுகள் அவளுக்கும்

50. திருவாய்: 5.3:3
51. கற்பியல்-22 (இளம்).
52. குறள்-1148

ஒரு தலைவனுக்கும் தொடர்பு உண்டு என்று அலர் தூற்று கின்றனர். இவ்வலர் அறிந்த தலைவி வருந்தினாள் அல்லள். தன்னைத் தலைவனுடன் சேர்த்துப் பேசப் பேச அவளுக்குப் பெரு மகிழ்ச்சி. ஊருக்கு உண்மை தெரிந்தது எனக் களிப்பெய்து கின்றாள். இனித் தன் வீட்டார் அந்தப் பொதுவனுக்கே தன்னை மணப்பிப்பர் என்று நம்புகிறாள்; தன் கற்புக்கு எவ்வாற் றானும் ஊறு இல்லை என்று நன்முறையில் அலரை மதிக்கின்றாள்.

ஒண்ணுதால்,
இன்ன உவகை பிறிதியாது யாயென்னைக்
கண்ணிடைக் கோலள் அலைத்தற் கென்னை
மலரணி கண்ணிப் பொதுவனோ டென்றண்ணி
அலர்செய்து விட்டதிவ் வூர்.[53]

[நுதல்-நெற்றி; இன்ன-இப்படிப்பட்ட]

என்ற கலிப்பாட்டில் இந் நிகழ்ச்சியைக் காண்க. இதன்கண் தலைவி, 'உற்றவரே தூற்றின் ஊரார் தூற்றுவது இயல்பேயாகும், அவர் அங்ஙனம் தூற்றியதனால்தான் யான்பேருவகை தூற்றிஉயிர் தாங்கியிருக்கின்றேன்' என்று தோழிக்குக் கூறுகின்றாள். திருக் குறள் தலைவியும் "அலரெழ ஆருயிர் நிற்கும்"[54] என்று கூறுவது ஈண்டு எண்ணத் தக்கது. குறுந்தொகைத் தலைவியொருத்தி அலர் எழுந்தமை கண்டு அஞ்சுகின்றாள். தோழி அவளை,

நிலம்புடை பெயரினும் நீர்தீப் பிறழினும்
இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை அஞ்சிக்
கேடெவன் உடைத்தோ தோழி?
..........................................
ஓங்குமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே.[55]

[புடை பெயர்தல்-இடம் மாறுதல்; பிறழினும்-இயற்கை யினின்று மாறினாலும்; கௌவை-அலர்; கேடு-கெடுதல்; எவன்-எவ்வாறு]

என்று சொல்லித் தேற்றுகின்றாள். உலகு பிறழ்ந்தாலும் ஊழ்வலியால் அமைந்த தொடர்பு கெடாது என்று உறுதி கூறு கின்றாள்.

53. கலி-105
54. குறள்-1141
55. குறுந். 373

'அலரைத் தவிர்க்கவும் முடியாது' ஊர்வாயை மூடவும் முடியாது, என்ற எண்ணத்தால் காதலர்கட்குத் திருமண நினைவும் பெருகுகின்றது. மணப்பது உறுதி என்ற துணிவாலும், இனிமேல் களவொழுக்கத்திற்கு வாய்ப்பில்லை என்ற நசையாலும் சில ஆடவர்கள் களவின்பத்தை நீட்டிக்க விரும்புவதும் உண்டு. இத்தகைய ஆடவன் ஒருவனுக்குத் தலைவி,

மாணாவூர் அம்பல் அலரின் அலர்கென
நாணும் நிறையும் நயப்பில் பிறப்பிலி[56]

என்ற பட்டத்தையும் சூட்டுகின்றாள். இங்ஙனம் 'நாணும் நிறையும் நயப்பில் பிறப்பிலி' என்று சினந்து கூறினும், வெறுப்புடையாள் போல நமக்குத் தோன்றினாலும், இதுவும் தலைவன் பால் அவளது கெழுமிய காதலையே உணர்த்தும். இதனை நன்கு அறிந்தவன் வள்ளுவத் தலைவன்.

உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும்.[57]

[உறாதவர்-நொதுமலர்; செறார்-கோபியாதவர்];

என்று தலைவன் கூற்றில் வரும் வள்ளுவம் காண்க.

அலரைப் பொருட்படுத்தாத துணிவுடைய ஆண் பிறப்பு போலன்று பெண் பிறப்பு; அது நாண் பிறப்பு.

வழிபட்ட தெய்வந்தான் வலியெனச் சார்ந்தார்
கழியுநோய் கைம்மிக அணங்காகி யதுபோலப்
பழிபரந் தலர்தூற்ற என்தோழி
அழிபடர் அலைப்ப அகறலே கொடிதே.[58]

என்ற தோழியின் வாக்கில் இதனைக் காணலாம். 'துணையெனத் தொழுத தெய்வமே அன்பனுக்குக் கொடுமை செய்தது என்னுமாப்போலே, காதலனாகிய நீ காதலிக்குக் கொடியவனாகின்றாய். உன்னால் அவளுக்குப் பழிதோன்றவும் அலர் பரவவும் மனம் அலையவும் காண்கின்றேன். இனி நீ அவளை விட்டு அகல்தல் கொடிது (வரைந்து வாழ்தலே தக்கது)' என்று தலைவன் நாணுமாறு தோழி இடித்துரைப்பதை இதில் கண்டு மகிழலாம்.

---

56. கலி-60.
57. குறள்-1096
58. கலி-132

ஊரலரை வெறுக்கும் ஐந்திணை மாந்தர் இருவர். ஒருத்தி நற்றாய்; மற்றொருத்தி செவிலித் தாய். எவ்வகையானும் அம்பலையோ அலரையோ இவர்கள் விரும்புவதில்லை. தன் குடும்பத்தைப்பற்றிப் பேசுவதற்கு இவர்கள் யாவர்? தன் செல்வியின் நடத்தைபற்றி வாய் எடுத்தற்கு ஊரார்க்கு என்ன உரிமை உண்டு? என்றெல்லாம் தாய் மனம் கொதிக்கின்றது.

கௌவை மேவல ராகி இவ்வூர்
நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ
புரைய அல்லவென் மகட்கு[59]

[கௌவை-பழிச்சொல்; நிரையம்-நரகம்;
புரைய-பொருந்த]

என்ற அகப்பாட்டில் ஒரு தாயின் பெருமிதம் பொருந்திய மன நிலையைக் காண்கின்றோம். ''என்மகள்மேல் இடுதேளிட்டாற் போல் பழி பரப்பும் இவ்வூர்ப் பெண்டுகள் இவ்வுலகப் பெண்டுகள் இல்லை, அவர்கள் நரகப் 'பெண்டுகளே'' என்று கூறுங்கால் அவளது ஆறாச் சினத்தை நாம் புரிந்து கொள்ள முடிகின்றது. அகத்திணை நாடகத்தில் அலர் துறை பற்றிய பாடல்களில் வெகுளித் தாயர்களின் பிரவேசத்தைக் காணலாம். தன் மகள் களவொழுக்கத்தைத் தாயே ஒருநாள் தெரிந்து கொள்வாள் என்று சும்மா இராமல் ''என்வீட்டுப் படியேறி வந்து என்னிடமே பல காலும் 'இன்னள்' இனையள் நின்மகள், என்று குறை சொல்லும் இவ்வூர் மகளிர் நல்ல வாயும் குடும்பத் தொழிலும் உடையவர்கள் அல்லர்; 'தீவாய் அலர் வினை மேவல் அம்பற் பெண்டிர்' '' என்று பெற்ற மனம் பித்தாக வசை பொழியும் அக நானூற்றுத் தாய் ஒருத்தியை நாம் காண்கின்றோம்.[60]

பெதும்பைப் பருவத்து மகளைப் புறத்தே போகவிடாமல் கோல் கொண்டு அலைத்து அல்லும் பகலும் கண்காணிக்கும் அன்புத் தாயர்களை அக இலக்கியத்தில் காண்கின்றோம். பாடல்களைக் கற்பார்க்கும் தலைவிக்கும் தோழிக்கும் தலைவனுக்கும் அன்னை கொடியவளாகவும் காதலுக்குப் பகையானவளாகவும் தோற்றம் அளித்தாலும், தன் மகளது இளமை வேகத்தால் தன் பழங்குடி ஒழுக்க வழுப்படுதல் கூடாது, ஊர்வாய்ப் படுதல் கூடாது என்ற விழிப்புணர்ச்சிதான் அன்னையின் கடு

59. அகம்-95
60. ஷை-203.

மைக்கும் அடக்கு முறைக்கும் காரணம் என்பதை நாம் அறிதல் வேண்டும்.

சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை[61]

[மறுகு-அம்பலம்]

என்பது நற்றிணைப் பாடல். சிலரும் பலரும் மூலை முடுக்கெல்லாம் கூடிநின்று மகளைப்பற்றிச் சாடையாகவும் நேராகவும் பேசும் போது அங்ஙனம் அவர்கள் பேசுவதற்குக் காரணமாக இருக்கும் எந்த அன்னைக்குத்தான் சினம் கனன்று எழாது? தலைவி எட்டியும் சுட்டியும் காட்டப்படும் குலத்தினள் அல்லளாதலால் வாயினாற் கூறலும் ஏறிட்டுப் பார்த்தலும் குற்றமாகும் என்று அஞ்சிக் கடைக் கண்ணால் நோக்கிக் குறிப்பாகக் கூறுவதையும், அங்ஙனம் பெருங்குடியிலே பிறந்து பெருநாணமும் உடைய ளாயினாளொரு சிறுமி காமம் தலைக்கொண்டு உடன் போயினாள் என வியப்பெய்தலின் மூக்கின் உச்சியின்கண்ணே சுட்டு விரல் சேர்த்தினமையும், வாயினால் கூற அஞ்சினமையும் பாட்டில் பெற வைத்த உலோச்சனாரின் கவித்திறத்தையும் எண்ணி மகிழ்கின்றோம். இவரது பாடல்களில் அலர் ஓவியம் பல் வேறு விதமாகச் சித்திரிக்கப் பெறுவதையும் கண்டு மகிழலாம்.

அலர் எழுச்சி காதலர்க்குப் புதுநெறி வகுக்கின்றது. அலர் எழுந்ததனால் தலைமகன் தெளிந்த உள்ளத்தனாய்த் தலைவியை மணந்து கொண்டு கற்பு நெறியில் ஒழுகுதலே தக்கது. ஆயின், அவன் அங்ஙனம் ஒழுகுவதில்லை. காரணம், களவு நெறியில் காணப்பெறும் கிளர்ச்சிமிக்க உணர்ச்சி கற்பு நெறியில் கிடைக்கப் பெறாது என்று கருதினான் போலும். ஆகவே, தோழியின் விருப் பத்திற் கிணங்கச் சில காலம் அவ்வலரடங்குமாறு கூட்டம் நீங்கி 'ஒருவழித் தணப்பான்' என்றும், அங்ஙனம் ஒருவழித் தணந்து நில்லானாயின், தோழியின் உதவியால் யார்க்கும் தெரியாமல் நள்ளிரவில் தலைவியைக் கூட்டிச் செல்லும் 'உடன் போக்கினை' மேற்கொள்வான் என்றும், இவ்விரண்டும் நிகழாதாயின் தோழி யினால் வரைவு முடுக்கப் பெற்றுத் தலைவியை வரைந்து கொள் வான் என்றும் அகப்பொருள் நூல்கள் நுவலா நிற்கும்.

61. நற். 149.

பேராசிரியரும் திருக்கோவையார் உரையில் இதனை 'ஒருவழித் தணந்துறைதல், உடன் கொண்டு போதல், தோழியான் வரைவு முடுக்கப்பட்டு அருங்கலம் விடுத்து வரைந்து கோடல் இம் மூன்றினுள் ஒன்று முறைமை'[62] என்று உரைத்துப் போயினர். இவற்றினை அடுத்துக் காண்போம்.

## iv சேட்படை

தோழி மதியுடன்பட்டதனை அறிந்த பின்பு தலைவன் அவளை அணுகித் தன் குறையை முடித்துக் கொள்ள முயல்வான். கையுறையாகத் தழை முதலியன கொண்டு வந்து அவற்றை ஏற்றுத் தன் தலைவிக்குத் தந்து அவளை எப்படியாகிலும் தன்னுடன் கூட்டி வைத்திடுமாறு தோழியை வேண்டி நிற்பான். அப்போது அவள் தன் தலைவியை இவனோடு கூட்டுவிக்கும் தன் முயற்சியின் அருமையும், அத்தலைவியின் அருமை பெருமையும், இங்ஙனம் நீளக் களவுப் புணர்ச்சியில் நின்றொழுகாது உடனே மணம் முடித்துக் கொள்ளலே நன்று என்ற எண்ணமும் அவனுக்குத் தோற்றுவித்தற் பொருட்டு, 'ஐயனே' நும் தலைவியை நீவிர் இப்பொழுது கூடுதல் இயலாது; என்னால் கூட்டுவித்தலும் இயலாது' என்று பற்பல ஏதுக்கள் கூறி எளிதில் இணக்கம் காட்டாமல் மறுப்பாள். 'இவ்விடத்துக் காவலர் கருகுவர்; நீவிர் வரற்பாலிரல்லீர், விலகிச் செல்லுதிர்' என்பன போன்ற காரணங்களைக் கூறிஅவனைத் தம்பால் நெருங்க வொட்டாமல் விலக்கி நிறுத்தி வைப்பாள். இங்ஙனம் தலைவியை அடைதல் எளிது என்று நினைத்து வந்த தலைவனது நினைவை அஃது அத்துணை எளிதன்று என்றுதோன்றுபடி தோழி சேட்படுத்துவள்.சேட்படுத்தலாவது, அகற்றுதல், தூரவிடல் என்றுபொருள் படும்சொல்லாகும்; மறுத்தல் என்பது கருத்து. நடத்தல் என்பது நடை' என்று நின்றவாறு போலச் 'சேட்படுத்தல்' என்னும் 'தல்' விகுதியேற்ற இத் தொழிற் பெயர்ச் சொல்லே 'சேட்படை' என்று ஐவிகுதியேற்று நின்றது. ஈண்டுச் சேட்படுத்துதல் என்பது

62. திருக்கோவை-'ஒருவழித் தணத்தல்' என்ற துறையின் கீழ் இவ்விளக்கம் காண்க.

அணுக்கமாய் நினைத்த அவனது நெஞ்ச நினைப்பை அகற்றுதல் என்று கொள்ளல் வேண்டும்.

இறையனார் களவியல் இதனை 'சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும்'[63] என்று குறிப்பிடும். இதன் உயர் பெருஞ் செறி பொருள் நுட்பத்தை உருவி எடுத்து விளக்கும் நக்கீரர் திறன் வியத்தற்குரியது. அவர் உரை: ''சிறை என்பது காப்பு, உற என்பது மிக, கிளத்தல் என்பது சொல்லுதல், சேண் என்பது அகற்றல், பட என்பது நிகழ்தல், நிறுத்தல் என்பது தழீஇக் கோடல் என்றவாறு; காப்பு மிகுதி சொல்லி அகற்றித் தழீஇக் கோடலும் என்றவாறு; ஆற்றாத்தன்மைக்கண் 'நிறுத்தல்' என்னும் சொல் 'தழீஇக் கொள்ளும்' என்பது; எனவே, தலைமகனை ஆற்றாமை செய்வன போன்று வைத்து ஆற்று விப்பன சில சொற் சொல்லும் என்பது போந்தது.''[64] மணி வாசகப் பெருமான் 'தழை கொண்டு செறல்' முதல் 'தழை விருப் புரைத்தல்' ஈறாக இருபத்தாறு துறைகளாக இதனை எடுத்துக் காட்டி விளக்குவர்[65] நம்பியகப் பொருள் போன்ற பிற்கால நூல்கள் இச்சேட்படையைப் பல கிளவிகளாக விரித்துப் பேசும். கூட்டுவித்தலின் அருமை புலப்படுமாறு பல்வேறு காரணங்களைக் கூறும் தோழியின் மதி நுட்பத்தை ஈண்டுக் கண்டு மகிழலாம்.

ஐங்குறுநூற்றுத் தோழி ஒருத்தி களவுக் காலத்தில் தன்னைத் தலைவியோடு கூட்டுவிக்க வேண்டும் என்று தன்பால் வந்து குறையிரக்கும் தலைவனுக்கு அவன் வேண்டுகோட்கு இணங்காதாள் போன்று 'தலைவி வயதால் மிகவும் இளையவள், விளைவு அறியாதவள்' என்று கூறி அகற்றுகின்றாள்.

நெறிமருப் பெருமை நீலவிரும் போத்து
வெறிமலர்ப் பொய்கை ஆம்பல் மயக்கும்
கழநி யூரன் மகளிவள்
பழன வெதிரின் கொடிப்பிணை யலளே.[66]

[நெறிமருப்பு—அறல்பட்ட கொம்பு: நீல இரும்போத்து—நீல நிறமான பெரிய கடா; வெறி-மணமுள்ள; மயக்கும் - கெடுக்கும்; அதாவது தின்று கெடுத்தல்; கழனி - வயல்;

63. இறை. கள. 12.
64. ஷை நூற். 12 இன் உரை.
65. திருக்கோவை-செய் (90-115) காண்க.
66. ஐங்குறு—91.

பழனவெதிர் - கரும்பு; பழனம் - கழனி; வெதிர் - மூங்கில்; பிணையலள் ; மாலையை யுடையவள்]

இதில் 'பழனவெதிரின் கொடிப்பிணையலள்' என்பதன் கருத்து; 'கரும்பின் பூவினால் செய்யப்பெற்ற மாலை மணமில்லாதது; ஆகவே அதனை அணிந்திருக்கின்ற தலைமகளும் மணங் கமழாத வள்; அதாவது மணங் கமழ்தற்குரிய மலர்ச்சி பெறாதவள், மங்கைப் பருவத்தின் பூப்பில்லாத பேதைப் பருவத்தின் பூப்பில் லாத பேதைப் பருவத்தினள்' என்பது. இன்னொரு குறிப்பும் இதில் வைத்துக் கூறப்பெறுகின்றது. அது: 'கதிரவன் மறைந்தான்; இவ்விடம் காவலுடைத்து; நும்மிடமும் சேய்த்து: எம் ஐயன் மாரும் கடியர்; யான் தாழ்ப்பின் அன்னையும் முனியும்; நீரும் போய் நாளை வாரும் எனஇசைய மறுத்துக் கூறாநிற்றல்''.[67] இது 'காப்புடைத்தென்று மறுத்தல்' என்னும் துறையாம். இதனையே 'எருமைப் போத்து ஆம்பல் மயக்கும் ஊர்' என்ற தொடர் விளக்கி நிற்கின்றது. அதாவது, மேயத்தகுந்தது இது, மேயத்தகாதது இது என்னும் உணர்ச்சியின்றி எருமைக் கடாக்கள் குளத்திலுள்ள ஆம்பல் மலரைக் கடித்துக் கெடுக்கும் ஊர் இவ்வூர் என்பது. எனவே, 'அவ்வெருமைக் கடாக்களைப் போலவே இங்குள்ள காவலாளர்களும் ஊரார்களும் 'நல்லது இது, கெட்டது இது' என்று எதனையும் ஆராயாது செய்து கெடுப்பர்; ஆதலால் நீங்கள் களவொழுக்கத்தில் நின்று உங்கள் காதலியைத் தேடி வரினும் அதன் நன்மையை அறியமாட்டாது உங்களையும் எங்களையும் ஊறுபடுத்தி வருத்துவர்; ஆதலால் இப்போது நீங்கள் இங்கு வருதல் பொருந்தாது' என்பது பெறப்படும். 'நெறி மருப்பு' 'நீல இரு' என்னும் அடைமொழிகள் எருமையின் கொடுமையை யும், அதன்வழி ஊராரின் தீய தன்மையையும் விளக்கி நிற்கின்றன. அங்ஙனமே 'வெறிமலர்ப் பொய்கை' என்பது ஆம்பலின் உயர்ந்த மென்மைத் தன்மையையும் அதன்வழி அத் தலைமகன் பொருந்திய காதலினிமைச் சிறப்பையும் உணர்த்து கின்றது.

நற்றிணைத் தோழியொருத்தியின் சேட்படுத்தும் திறனைக் காண்போம். இவள் தலைவன் தலைவி இருவர் குல முறையையும் கூறி மறுக்கின்றாள்.

67. பேராசிரியர் உரை.

இவளே,
கானல் நண்ணிய காமர் சிறுகுடி
நீனிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு
மீனெறி பரதவர் மகளே;
நீயே,
நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதன் மகனே
நிணச்சுறா வறுத்த வுணங்கல் வேண்டி
இனப்புள் ஓப்பும் எமக்கு நலன் எவனோ
புலவு நாறுதுஞ் செலநின் றீமோ
பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ அன்றே
எம்ம னோரிற் செம்மலும் உடைத்தே.[68]

[கானல் - கடற்கரைச் சோலை; நண்ணிய - பொருந்திய; காமர் - அழகிய; மீன்எறி - வலைவீசி மீனைப் பிடிக்கும்; நியமம் - கடைத்தெரு; உணக்கல் - உலர்த்துதல்; இனப் புள் - காக்கைகள்; ஓப்பும் - ஓட்டும்; செல் நின்றீ - அகன்று போய் நிற்க; புரைவது அன்று - ஒக்க உயர் வுடைத்து அன்று; செம்மல் - செல்வ மகன்]

இதில் 'கடலைக் கலக்கும் வன்மையர்' என்றது, 'எமர் மூர்க்க ராதலின், நின்னைக் காணின் ஏதம் இழைப்பர்' என அஞ்சி அச்சுறுத்தியது. 'மீனெறிவர் மகள்' என்றது இரக்கமின்றி மீனையெறிந்து கொல்லும் பரதவர் மகளாதலின் 'நீ படும் துன்பத் திற் கெல்லாம் இரங்காள்' என்று கூறியது. 'உணக்கல் வேண்டிப் புள் ஓப்புவோம்' என்றது, 'நீ இங்ஙனம் வரினும் உடம்பட வொட்டாது போக்குவோம்' என்பதாம். இது தோழி தன் காவ லொடு மாறு கொள்ளாமை கருதியதாம். 'புலவு நாறும்' என்றது 'எம்போலும் புலவு நாற்றத்தோடுவரின், இயையும்' என்றதாகும். இது முன்பு கூறியவற்றைக் கேட்ட தலைவன் ஆற்றானாக. அவனாற்றுதல் வேண்டிக் கூறப்பட்டதாகும். 'செல நின்றீ' என்றது 'குறியிடம் இது தகுதியுடையதன்று' என மறுத்ததாம், இங்ஙனம் சொல்லைச் சுருக்கிப் பொருளை விளக்கும் கருத்துட் கொண்டும், சொல்லும் பொருளும் இணைந்து விரவி நிற்குமிடத்து அச் சொல்லியல்புக்கும் பொருளியல்புக்கும் ஏற்றவாறு ஒன்றோ

68. நற்.45.

டொன்று அமைய வேண்டியவிடத்து இணைந்தமைந்தும் ஒழுகிக் கொழுவிச் சுவையெதிர்ந்து நிற்கும் சொற்பொருட் பிணிப்பான தமிழ் வளங்காட்டிடும் செய்யுட்கள் சங்க இலக்கியச் சோலையுள் மலிந்து காணப்படுகின்றன.

மேற்காட்டிய ஐங்குறு நூற்றுச் செய்யுள் துறையாகிய 'இளமை கூறிமறுத்தல்' திருக்கோவையாரில்பதினைந்தாவதுதுறையாகவும், நற்றிணைச் செய்யுள் துறையாகிய 'குலமுறை கூறி மறுத்தல்' பதினொன்றாம் துறையாகவும் அமைந்து கிடக்கின்றன. கோவையாரில் வரும் சேட்படுத்தும் துறைகளின் நுட்பத்தை ஈண்டு கண்டு மகிழ்வோம். குறையிரந்து செல்லும் தலைமகன் சந்தனத் தழையைக் கையுறையாக எடுத்துக் கொண்டு தோழியிடம் சென்று, அதனை ஏற்றுத் தன் குறையை முடித்தருளுமாறு வேண்டுவான். இதுவே 'தழை கொண்டு சேறல்' என்பது. இங்ஙனம் வேண்டி நிற்கும் தலைவனைத் தோழிபல ஏதுக்கள் கூறிச் சேட்படுத்துவள். 'இத்தழை எங்கட்கு வந்தவாறு என்னோ என்று இங்குள்ள எம்மனோரால் ஆராயப்பெறு மாதலால் அந்தத் தழை எங்கட்குத் தகாது' என்றும், 'யாங்கள் உறையும் குன்றில் இல்லாத தழையைத் தருதல் எங்கட்குக் குடிப் பழியாம்' என்றும் கூறிச் சேட்படுத்துவாள். இவற்றைக் கேட்ட தலைமகன் சந்தனத் தழையை மறுத்தாளேயன்றி தன் குறையிரப்பினை மறுக்கவில்லை என்று அந்நிலத்துக் குன்றிலுள்ள வேறு தழை கொண்டு செல்வான். அங்ஙனம் செல்வாற்கு அத்தோழி, 'என் தலைவியின் நினைவைத் தெரிந்து கொண்ட பின்னர்த்தான் இதனை ஏற்பேன்' என்று கூறி மறுப்பள். அங்ஙனமாயின் 'தலைவியின் நினைவை அறிந்தே வந்து பெறுக' என்று உள்நினைந்து நிற்க, தோழி அவள் நினைவைத் தான் அறிவாள் போற் சென்று மறைந்து பின்பு அங்கிருந்து மீண்டு தானே யொன்று படைத்துத் 'தலைவிக்கும் இத்தழை உடம்பாடு தான்; ஆயினும் இப்பூந்தழை குற்றாலம் என்னும் ஓரிடத்தன்றி மற்றிடத்தில் இல்லாமையால் அஃது ஈங்கு வந்தவாறு என்னோ என்று பிறரால் ஆராயப்படுதலின் அத்தழை எங்கட்கு ஆகாது' என்று மறுத்து உரைப்பாள். ஐங்குறு நூற்றுத் தோழி தழையை மறுத்துரைப்பதை,

நொதும லாளர் கொள்ளார் இவையே
எம்மொடு வந்து கடலாடு மகளிரும்
நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்

உடலகம் கொள்வோ ரின்மையின்
தொடலைக் குற்ற சிலபூ வினரே.[69]
[நொதுமலாளர் - அயலார்; உடலகம் - மெய்யில்;
தொடலைக்கு-தொடுத்து அணிதற்கு.]

என்ற பாடலில் கண்டு மகிழலாம். இதில் 'பகைத்தழை' என்றது இத்தழை தகாது என மறுத்தது. 'நெய்தலம் பகைத்தழை, என்றது, இத்தழை இந்நிலத்தில் இல்லை யாகலின் ஐயுறற் கேதுவாம் எனமறுத்தது. நொதுமலர் கொள்ளார் என்றது, தலைவி இவற்றை ஏற்க அஞ்சுவள் எனக் கூறிமறுத்தது. எம்மொடு வந்து கடலாடு மகளிர் பகைத்தழை புனையார் என்றது, படைத்து மொழியான் மறுத்தது. உடலகம் கொள் வோரின்மையின் என்றது, இதனைப் புனையவும் தலைவி நாணுவள் என்று நாணுரைத்து மறுத்தது. தொடலைக் குற்ற சிறு பூவினரே என்றது, இத்தழை புனைதல் எமக்கு இயையாது எனக் கூறி மறுத்தது என நுண்ணிதின் உணரப்படும்.

தழையைத் தானே மறுத்துக் கூறுகின்றாள், ஆகவே இனித் தழையொழிந்து கண்ணியைக் கையுறையாகக் கொண்டு சென்றால் அவள் மறுக்காள் என்று கருதிக் கழுநீர் மலரைக் கண்ணியாகப் புனைந்து கொண்டு செல்வான். தோழி அதனையும் மறுத்து, 'என் தலைவிக்குச் செவிலித் தாயர் முன்னரே சூட்டியுள்ள கண்ணியின்மேல் யான் ஒன்று சூட்டுவேனாயின், அவள் நாணா நிற்பள்' என்று அவட்குள்ள நாணத்தை உரைப்பாள். அதுதானு மன்றி, 'யாங்களெல்லாரும் வேங்கை மலரை அணிவோமேயன்றித் தெய்வம் சூடுவதற்குரிய வெறிமலர்ச் சூட அஞ்சுவோம்' என்றும் அஃதிசையாமை கூறுவள். இம்மறுப்புரைகள் எல்லாவற்றையும் தம் குலத்துக்கு இசையாமை கூறியதேயன்றி என் குறைக்கு இசையாமை கூறிற்றன்று எனத் தலைமகன் கருதி, மாந்தழையும் அதன் மலரும் கொண்டு மீண்டும் செல்வான். அதற்கு அவள் 'அன்னமும் பெண்மானும் கிளிகளும் முறையே நடையும் பார்வையும் பேச்சும் பெறுதற்கு நேரம் வாயாது நிற்கின்றன; நீங்கள் இவ்வளவு நேரம் இங்கு வந்திருந்ததும் யான் உங்கட்குக் குறை நேர்ந்ததும் அவள் அறியாள். ஆகவே செவ்வியறிந்துதான் அவள்மாட்டுச் செல்லல் வேண்டும். ஆதலால் இன்று அவளைக் காணும் செவ்வி வாய்த் திடுமாயின் அப்போது இதனைக் கொணருங்கள்' என்று சொல்லி விடுவாள். இதற்குள் பொழுது சாய்ந்து கதிரவனும் மறைந்து

69. ஐங்குறு—187

விட, தோழியும், 'கதிரவன் மறைந்தான்; இரவும் வந்துவிட்டது; இனி இவ்விடம் காவலுடைத்தாகும்; நும்மிடமும் சேய்த்து; எம் ஐயன்மாரும் கடியர்; யான் தாழ்ப்பின் அன்னையும் முனியும்; நீரும், போய் நாளைவாரும்' என்று கூறி மறுப்பாள். இதனைத் தலைவன், 'இங்ஙனம் இவள் இங்குள்ள நிலைமையை எனக்கு மறையாது கூறினது என்பாலுள்ள அன்பினாலன்றி வேறில்லை; இத்துணை அன்புள்ளவள் என்குறையினை முடித்துத் தருவது உறுதி, என்று எண்ணி அவள் கூறியவாறே திரும்பி மறுநாள் செல்வான். இங்ஙனம் பேராவலுடன் சென்றானுக்கு, 'ஐயனே, யான் குற்றேவல் மகளாதலால் நீங்கள் கூறும் இவ்வரும் பெரும் மறை பொருட் செயலை அவட்குக் கூறும் வலியுடையேன் அல்லேன்; ஆகவே நீங்களே சென்று உரைத்துக் கொள்ளுவீர் களாக' என்று தான் உடம்படாது மறுத்து விடுவாள். இதைக் கேட்ட தலைவன் மிகவும் வருந்துவானாதலின் அவனை ஆற்று வித்தற்கு எண்ணி, 'யான் சிறியேன்; நீங்கள் பெரியீர்; ஆதலால் நீங்களே சென்று உரையாடினால் உங்கள் விருப்பம் நிறைவேற லாம்' என்று தான் முன்னுரைத்தற்கோர் ஏது கற்பிப்பள். இதுவே குலமுறை கூறி மறுத்தல் ஆகும். இதுவே மேற் குறிப்பிட்ட நற்றிணைப் பாடலில் வேறு விதமாகக் கூறப் பெற்றிருத்தல் நோக்கத் தக்கது.

'நம்மைப் பெருமையாகவேதான் இவள் கருதியுள்ளாள்; எப்படியாயினும் நம்குறையை முடித்தே வைப்பள்' என்று நினைத்துத் தலைவன் ஆற்றினானாக, அவன் நிலையைத் தோழியுணர்ந்து நகையாடி மறுத்தும், இரங்கி மறுத்தும், எங்கள் குன்றிலுள்ள மாம் பூக்களும் சுனைப் பூக்களும் எங்கள் தலைவியின் வடிவழகுக்கு அஞ்சி மலர்ந்தறியாவாதலின், நீங்கள் கொணர்ந்த இச்சிறப்பில்லாத பூத்தபூ எங்கள் தமர்களால், 'மலர்ந்த பூக்களே இங்கு இல்லையாக இஃது யாண்டையதோ?' என்று ஐயுறுமாறு செய்யும் என மொழிந்து அவன் கொணர்ந்த மாமலரின் சிறப்பின்மை கூறி மறுத்தும் அவனோடு இவ்வாறே நெடுக சொல்லாடுவாள். இவை யாவும் 'சந்தனத்தழை தகாதென்று மறுத்தல்', நிலத்தின்மை கூறி மறுத்தல்', 'நினைவறிவு கூறி மறுத்தல்', 'படைத்து மொழியான் மறுத்தல்', 'நாணுரைத்து மறுத்தல்', 'இசையாமை கூறி மறுத்தல்', 'செவ்வியிலள் என்று மறுத்தல்', 'காப்புடைத்தென்று மறுத்தல்', 'நீயே கூறு என்று மறுத்தல்', 'குலமுறை கூட மறுத்தல்' 'நகையாடி மறுத்தல்',

'இரக்கத்தொடு மறுத்தல்', 'சிறப்பின்மை கூறி மறுத்தல்' என்னும் துறைகளாகக் கூறப்பெறும். இவற்றை யடுத்ததுதான் **இளமை கூறி மறுத்தல்** என்பது. இதனை மணிவாசகப் பெருமான்,

> 'முருகு தலைச்சென்ற கூழை
> முடியா முலைபொடியா
> ஒருகு தலைச்சின் மழலைக்கென்
> னோ?ஐய! ஓதுவதே.'[70]

> [முருகு-வாசனை; கூழை-குழல்கள்; முடியா-முடிக்கப்படா; பொடியா-தோன்றா; குதலைமை-விளங்காமை; மழலை-இளஞ்சொல்; ஓதுவது-சொல்லுவது.]

என்று கூறியிருப்பது சிந்திக்கத் தக்கது.

இங்ஙனம் தன்னைப் பலவாறு அலைத்து அலைத்து உரைக்கும் தோழியின் சேட்படையுரைகளை எண்ணிய தலைவன் 'இவளையொழித்தே இனி என் விருப்பத்தை நிறைவேற்ற முயல வேண்டும்' என்று உட்கொண்டு நிற்ப, இதனை அவள் குறிப்பினால் அறிந்து கொண்டு 'இனி என் துணையின்றி நீங்கள் இச் செயலை முடித்துக் கொள்ளுதல் இயலாது' என்று அவன் மறைத்தமை கூறி நகைத்துரைப்பாள். அவள் நகையினைக் கண்ட தலைமகன், மறைத்தால் முடியாதென்றனளாதலின் அதனாலேயே 'மறையாதிருந்தால் முடியும்' என்று கூறினாள் என்று நினைத்து 'உன்னுடைய மெல்லென்னும் அருள் நோக்கமன்றோ எனக்குச் சிறந்த துணை' என்று அவளது நகையுரைக்கு மகிழ்ந்து கூறுவான். தோழி அவனை இன்னும் அலைக்க வேண்டும் என்று கருதி 'இங்குத் தோழிமார் எத்தனையோ பேருளர். அவர் தம்முள் உள்ள நினைவு யார்கண்ணதோ?' என்று ஒன்றுமே அறியாள் போன்று அவன் நினைவு கேட்பள். 'ஓ ஓ இன்னும் இவள் என்னால் விரும்பப் படுவாளை அறிந்திலள் போல் கூறுகின்றாள். ஏதாயினும் இனி இவட்கு என் தலைவியின் அடையாளம் கூறுவேன்' என்று கூறத் தொடங்கி தன் தலைவியின் உடலுறுப்புக் குறிகளைக் கூறுவான். இஃது 'அவயவம் கூறல்' என்ற துறையாகும். அதன் பின்பு, அன்று இயற்கைப் புணர்ச்சியின் பின் பிரிந்து செல்லும் போது தோழியைக் குறித்துக் காட்டிய அவள்

70. திருக்கோவை—104

கண்ணினை நினைந்து அதனை நயந்து கூறுவான். கண்ணயந்து உரைக்கும் கூற்றினை மணிவாசகப் பெருமான்,

ஈசற்கு யான்வைத்த அன்பின்
அகன்றவன் வாங்கியஎன்
பாசத்தில் கார்என்று அவன்றில்லை
மின்னொளி போன்றவன்தோள்
பூசத் திருநீறு எனவெளுத்து
ஆங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த்தை யிற்பெரு
நீளம் பெருங்கண்களே.[71]

[அன்பின்-அன்புபோல்; பாசத்தின்-பாசம் போல; தோள் பூசு:தோள்களில் சாத்தும்; நீறு-விபூதி; பூம்கழல்-பூப்போலும் திருவடிகள்.]

என்று மிக அழகுடன் கருத்து நுட்பங்களுடன் விளக்கிக் கூறுவது காண்க.

இங்ஙனம் தலைமகன் கூறக் கேட்ட தோழி இனியும் இவனை இவ்வாறு அலைத்தல் தகாது என்று இரங்கி 'இவ்வாறு ஏற்றல் எங்கள் குடிக்கு ஏலாதாயினும், நீங்கள் முன் செய்த உதவியையும் பேரன்பினையும் நினைந்து ஏற்றுக் கொள்வேன்' எனத் தழையை ஏற்பள். இது 'தழை எதிர்தல்' என்ற துறையாகும். இங்ஙனம் ஏற்றவள் தலைமகளை நெருங்கி அவள் குறிப்பறிந்து இச் செய்தியைக்கூறுவள். இவை 'குறிப்பறிதல்', 'குறிப்பறிந்து கூறல்' என்ற துறைகளாகும். பெருநாணினளாதலான் தலைவி அத்தழையைவாங்காது நிற்ப, அக்குறிப்பறிந்து, 'இருவகையானும் நமக்குப் பழி வரும்; நமக்கு உதவி செய்தாருக்கு நாமும் உதவி செய்தல் வேண்டும்' என வகுத்துக் கூறுவாள். தோழி தலைமகன் செய்ததாகப் பாராட்டிக் கூறும் உதவியாவது இயற்கைப் புணர்ச்சியின் முன்னர் தினைப்புனங் காத்தபொழுது மதங் கொண்டு பிளிறித் திடீரென்று அவர்கள்மீது சீறி வந்த மால் யானையை அம்பிட்டுக் கடிந்ததாகும். இதனை,

கவளத்த யானை கடிந்தார்
கரத்தகண் ணார்தழையும்
துவளத் தகுவன வோசுரும்
பார்குழல் தூமொழியே.[72]

71. ஷை-109.
72. ஷை-112.

[கவளத்த - கவளத்தையுடைய; கரத்த - கையவாகிய; துவள-வாட; சுரும்பு-வண்டு.]

என்று திருச்சிற்றம்பலக் கோவையார் குறிப்பிடும் இவ்வுதவி யின்னக் 'குறிஞ்சிப் பாட்டும்' மிக அழகாகக் குறிப்பிடும்.

இங்ஙனம் மணிவாசகப் பெருமான் கூறிய இருபத்தாறு துறை களுக்கும் இறையனார் களவியல் எட்டுத் துறைகளே கூறி மற்ற வற்றைப் புறநடையில் அடக்குகின்றது. அவற்றை,

குறையுறுங் கிழவனை உணர்ந்த தோழி
சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும்
என்னை மறைத்தல் எவனாகியரென
முன்னுறு புணர்ச்சி முறைமுறை செப்பலும்
மாயப் புணர்ச்சி அவனொடு நகாஅ
நீயே சென்று கூறென விடுத்தலும்
அறியாள் போறலும் குறியாள் கூறலும்
படைத்துமொழி கிளவியும் குறிப்புவேறு கொளலும்
அன்ன பிறவும் தலைப்பெயல் வேட்கை
முன்னுறு புணர்ச்சிக்கு உரிய என்ப.[73]

இவற்றுள் மணிவாசகர் கூறா புதுத்துறைகளும் உள்ளன. அவை: முன்னுறு புணர்ச்சி முறை முறை செப்பல்', 'மாயப்புணர்ச்சி அவனொடு நகாஅ', 'குறியாள் கூறல்', 'குறிப்பு வேறு கொளல்', என்பனவாகும். 'படைத்து மொழி கிளவி' என்னும் துறை இறையனார் களவியலுரையில் ஒருவிதமாகவும், திருக்கோவை யாரில் பிறிதொரு விதமாகவும் விளங்கக் கூறப்பெற்றிருத் தலையும் காணலாம்.

பொருளிலக்கணத்தில் துறைகள் என்று கூறப்படுவன வெல்லாம் அவ்விலக்கணத்தோடு தொடர்பு பட்டாரின் நினைவுச் சொற்செயல் வேறுபாடுகளேயன்றிப் பிறிதொன்றில்லை. அவ் விலக்கணத்தைத் துறையுறுப்புக் கூறி விளக்க வந்த ஆசிரியர்கள் யாவரும் தத்தம் காலத்தில் எந்தச் செயல் எந்தத் துறையென்று எந்தச் சொல்லால் வழங்கி வந்ததோ அதனை அதுவாக வைத்தும், அல்லாததற்குத் தமது நூற்போக்குக் கேற்ப தாமே ஒரு பெயர் படைத்து அமைத்தும் எழுதிச் செல்வர். எனினும், இம்மாறுபாட்டுக் காட்சியால் அவ்விலக்கணத்தின் முதன்மைப்

73. இறை. கள. 12

போக்கிற்கும் ஒருமைப்பாட்டிற்கும் ஏதும் முரண்பாடு இல்லை என்பது ஈண்டு அறியத்தக்கது.

இச்சேட்படைப் பகுதியை ஆசிரியர் தொல்காப்பியனார்,

'தோழி, நீக்கலினாய நிலைமையும் நோக்கி'[74]

என்பதன்கண் அடக்குவர். இதற்கு நச்சினார்க்கினியர், 'தோழி இவ்விடத்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலின் தனக்கு உண்டாகிய வருத்தத்தையும் பார்த்து' என்று உரை கூறுவர். அதன் பின்பு 'இதுவே மடன்மா கூறுவதற்கு ஏது வாயிற்று' என்று விதந்துரைப்பர். மேற்கூறிய நூற்பாவின் அடியை அடுத்து வரும்,

மடன்மா கூறும் இடனுமா ருண்டே[75]

என்ற அடிக்கு உரை எழுதுங்கால் 'அச்சேட்படையான மடல் ஏறுவல் எனக் கூறும் இடனும் உண்டு' என்றும் 'நோக்கி மடன் மா கூறும் என்க' என்றும் கூறினார். இதனால் தொல்காப்பியர் மடன்மா கூறுதற்கு ஏதுவாகச்சேட்படைப் பகுதியை முன் நிறுத்தி மற்று அதன் விளைவாக மடன்மாப் பகுதியை அதன்பின் நிறுத்தி நூற்பா இயற்றினார் என்னும் அவர் கருத்துப் புலனாயிற்று. ஆனால், மணிவாசகப்பெருமானோ சேட்படைக்கும் மடன்மாக் கூற்றுக்கும் ஏதோர் ஏதுவும் விளைவும் தோற்றுவியாது மடன் மாப் பகுதியை முன்னும், சேட்படைப் பகுதியைப் பின்னுமாக அமைத்துவிட்டனர்.[76] இங்ஙனம் அமைத்தமைக்கு அதன் உரையாசிரியராகிய பேராசிரியரும் தொல்காப்பியனார் கருத்தோடு ஒத்தவகையில் யாதோர் இயைபும் காட்டவில்லை. மற்று அவர் காட்டும் இயைபும் வேறாகவே உள்ளது. இவ்வாறு இக் கருத்தில் தொல்காப்பியக் களவியலும் திருக்கோவையாரும் பொதுநோக்கத்திற்கு மாறு பட்டனபோல் காணப்படுகின்றன.

மேனோக்கில் இவ்விரு பெரு நூல்களும் மாறுபட்டனபோல் தோற்றுவதால் உள்நோக்கிலும் மாறுபாடுடையனவா என்று ஆய்ந்து அறிதல் நம் கடமையாகும். அங்ஙனம் அறிய முற்படுங் கால் இறையனார் அகப்பொருளும் அதன் உரையும் இடை நின்று நமக்கு ஒளி காட்டித் தெளிவிக்கின்றன. இவை மடற்றிறப்

74. களவியல் - 11. (நச்.) அடி. 18, 19
75. ஷை - 11 (நச்) வரி. 20
76. 10. மடற்றிறம், 11. குறைநயப்புக்கூறல், 12. சேட்படை என அமைத்துள்ளமை கவனிக்கத்தக்கது.

பகுதியை முன்னும், சேட்படைப் பகுதியைப் பின்னும் நிறுத்தித் திருக்கோவையாரோடு ஒத்து நிற்கின்றது. அன்றியும், அம் மடற்றிறத்துக்குச் சேட்படையை ஏதுவாகக் கூறித் தொல்காப்பியத்துடனும் ஒத்து நிற்றலையும் காணலாம். மேலும் இறையனார் களவியலுரை, திருக்கோவையார் உரை கூறும் ஏதுவினையும் சேட்படைக்கு உரைக்கும். ஆகவே, இவை தமக்குள் உள்ளியைந்ததோர் இயைபு உண்டென்பது புலனாகின்றதன்றோ? இன்னும், பலவகை ஏதுக்களால் நிகழும் ஒரு செய்தியைக் கூறுங்கால் ஒருவர் ஓர் ஏதுக் கூறி நிறுவினால், மற்றொருவர் மற்றோர் ஏதுக்கூறி நிறுவுவாராதலின், அதனால் அவை முரண்படுதல் இல்லை என்பதும் ஈண்டு அறியத் தக்கது.

## V. மடற்றிறம்

மடற்றிறம் என்பது, தோழியை உடன்படுத்தும் தலைமகன் அதற்கொரு கருவியாகத் தான் மடன்மாவில் ஏற இருக்கும் வகையினைத் தெரிவித்தலாகும். மா என்பது, குதிரை; மடல் என்பது, பனை மடல். ஆகவே மடன் மா என்பது பனைமடலால் செய்யப்பெற்ற குதிரையாயிற்று. தலைவனது குறையிரந்த எண்ணத்தோடு ஒத்து மதிடயும்பட்ட தோழி தன் தலைவியின் கருத்தை மெல்ல அறிந்து கொண்டு பின்பு அதனைத் தலைவனிடம் சொல்லத் தொடங்குங்கால் தனக்குள் தோன்றிய நாணத்தால் தலைவனே முதன்முதல் குறையிரந்து கேட்டலை விரும்பியவளாய் வாளா இருப்பாள். தலைமகன் மதியுடம்படுத்துதலைக் கருதி முதன்முதல் தோழியிடம் சென்றபொழுது அவள் பெருநாணமுடையவளாக இருந்தாள். தலைமகன் அவளைச் சந்தித்தலிருந்து மிக நெருங்கிப் பேசி அவளுடன் மிக்க உரிமையுடையவனாய்ப் பழகினமையால் அவள் நாணம் வரவரக் குறைந்து கொண்டே வந்தது. மேலும், தோழி தலைவனுக்கு அமைதி தரும் மறுமொழியை எவ்வளவு காலம் கூறாது நீட்டிக்கின்றாளோ அவ்வளவு காலமும் தலைவனது ஆற்றாமையும் மிகுந்து கொண்டே போகும். அவ்வாற்றாமையைக் கண்ட தோழி அறிவும் அன்பிரக்கமும் உடையவளாதலின், அவைதாம் மிகுங்கால் அவள் நாண் கெடும். இங்ஙனம் தலைவனது

ஆற்றாமை பெருகப் பெருகத் தோழியின் நாணம் குறைந்து கொண்டே வரும். ஒருநிலையில் தோழிக்கு நாணம் என்பது முழுதும் சுருங்கி நிற்கும். இதனை இறையனார் களவியலுரை ஆசிரியர், ''அவனது ஆற்றாமையும் இதனிநூய்குப் பெருகு மாறில்லையெனப் பெருக்கத்திற்கு வரம்பெய்தி நின்றது; இவளது நாணும் இதனிநூங்கு நுணுகுமாறில்லையென நுணுக்கத்திற்கு வரம்பெய்தி நின்றது.''[77] என்று அழகாகக் கூறுவது சிந்தித்து மகிழத் தக்கது. தோழியின் நாணம் இங்ஙனம் சுருங்கி இல்லை யென்ற நிலை ஏற்பட்டாலும், நாணம் என்பது பெண்டிர்க்கே உரிய இயல்பான உயிர்த்தன்மையாதலால் தோழி தானறிந்த தலைவியின் கருத்தைத் தலைமகனோடு துணிந்து பேசக் கூசு வாள். இதனை,

> முன்னுற உணரினும் அவன்குறை யுற்ற
> பின்னர் அல்லது கிளவி தோன்றாது.[78]
>
> [கிளவி - சொல்]

என்று இறையனார் களவியலாசிரியர் கூறிச் செல்வர்.

இங்ஙனம், தலைவன் பன்னாள் தோழியைக் குரையிரந்தும் தோழி மறுமொழி ஏதும் கூறாதிருக்க, தலைமகன் ஒருநாள் தோழியும் தலைவியும் ஒருங்கிருக்கும் நிலையில் அவர்கள்பாற் சென்று தனக்குள் பெருகி வரம்பெய்தி நின்ற ஆற்றாத் தன்மையை, 'நீவீர் என் குறையை முடித்து அருள் செய்யாமை யால் என் உயிர் அழிகின்றது. இதனை அறிமின்கள்' என்று கூறுவான். எனினும், பெண்டிர்க்கு நாணம் ஒரு பெருந் தடுப்பா யிருப்பதால் அவர்களிடமிருந்து ஒரு மொழியும் பெற்றான் இலன். இந்நிலையில் அவன்,

> காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
> மடல் அல்லது இல்லை வலி.[79]
>
> [ஏமம்—ஆறுதல்; வலி—வலிமை]

என்று கூறுவான். இங்கு ஏமம் என்பது துன்பத்தை நீக்கி ஆறுதலின்பம் தருவது போன்ற துன்பம்.

மடலேறுதல் என்ற செயல் காம எண்ணம் முதிர்ந்து தலை யெடுத்து நிற்கும்பொழுது ஆண்மக்கள் தாம் காதலித்த தலை

77. இறை. கள. 9-இன் உரை.
78. ஷை. -9
79. குறள்-1131.

மகளைக் கூடுவதற்கு விரும்பி மேற்கொள்வதாகும். தாம் மேற்கொள்ளும் முயற்சிகள் யாவும் தோழியிடம் பலியாதபோது அவர்கள் தம்மிடம் மிக்கெழுந்த காமக் காழ்ப்பினால் தமக்குள்ள நாணத்தையும் ஆண்மையையும் இழந்து உடம்பெல்லாம் நீறுபூசி மார்பில் எலும்பு மாலையையும் தலையில் எருக்கம்பூ மாலையை சூடிக்கொண்டு தலைவியின் வீட்டிற்கு அருகில் நாற்சந்தியில் பனங்கருக்காற் செய்யப்பெற்ற ஒரு பொய்க் குதிரையின் மேல் ஏறி நிற்பான். அக்குதிரையைப் பிறரால் இழுப்பிக்கச் செய்து அவ்விடத்தில் கொண்டு நிறுத்துவான். அவன் கையில் அவனால் எழுதப் பெற்ற அவன் காதலியின் ஊரின் பெயர் அவள் பெயர் பொறிக்கப்பெற்ற ஓவியம் இருக்கும்; அதன் கீழ் அவன் ஊரும் பேரும் காணப்பெறும்.[80] இங்ஙனம் தலைவன் குதிரை மீதேறி வெளிப்படையாகத் தன் கருத்தை எல்லோர்க்கும் தெரியும்படி ஆரவாரம் செய்து நிற்றலே மடலேறுதல் என்ற பெயரால் இலக்கியங்களில் வழங்கப்பெறும். இவ்வுண்மையை,

மாஎன மடலும் ஊர்ப; பூவெனக்
குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப.
மறுகின் ஆர்க்கவும் படுப;
பிறிதும் ஆகுப; காமம்காழ்க் கொளினே.[81]

[மா-குதிரை; மடல்-பனை மடல்; கண்ணி-தலை மாலை; மறுகின்-தெருவில்; ஆர்க்கவும் படுப-ஆரவாரித்தலும் செய்வர்; பிறிதும் - இறத்தலும்; காழ்க் கொளின் உள்ளத்தே மிகுந்தால்]

என்ற குறுந்தொகைப் பாடலால் அறியலாம். மணிவாசகப் பெருமான் இதனை,

ஈசன சாந்தும் எருக்கும்
அணிந்துஓர் கிழிபிடித்துப்
பாய்சின மாஎன ஏறுவர்
சீறூர்ப் பனைமடலே.[82]

[ஈசன-ஈசனுடைய; கிழி-படம்; மா-குதிரை.]

80. தலைவன் பெயர் கிழியில் எழுதப்பெறும் வழக்கம். திருக். 76 ஆம் திருப்பாடலால் அறியப்பெறும்.
81. குறுந். 17. குறுந். 182லும் இச்செய்தி வருகின்றது.
82. திருக்கோவை-74

என்று மிகத் தெளிவாக விளக்குவர். காமம் மிகுந்தாலும் இவ் வழக்கத்தை மகளிர் மேற்கொள்வதில்லை என்பது அறியத் தக்கது.

கடலன்ன காமம் உழந்தும் மடல் ஏறப்
பெண்ணிற் பெருந்தக்க தில்[83]

[உழத்தல்-வருத்துதல்.]

என்ற குறள் இக்கருத்தினை அரண் செய்வதைக் காண்க. தலைவனது இக்கடுஞ்செயலைக் கண்டு இதனால் அவனது பெரு வேட்கையை உணர்ந்த உறவினர், சான்றோர், அரசன் இவர்களுள் யாரேனும் தலையிட்டு இருவரையும் பல்லோர் அறிய வெளிப்படையாக மணம் செய்து வைப்பர். இதுவே மடலேறுதலின் உடன்பெறக் கூடிய பயனாகும்.

மடல் மாப் பொருள் குறித்துப் பதின் மூன்று பாடல்கள் சங்க இலக்கியத்துள் காணப்பெறுகின்றன. இவற்றுள் நற்றிணையிலுள்ள நான்கு பாடல்களும்[84] குறுந்தொகையிலுள்ள ஐந்து பாடல்களும்[85] ஐந்திணைக்கு உரியவை. கலித்தொகையிலுள்ள நான்கு பாடல்களும்[86] பெருந்திணையைச் சார்ந்தவை. ஐந்திணை மடலுக்கும் பெருந்திணை மடலுக்கும் நுண்ணிய பெரிய வேறுபாடு உண்டு. 'மடல்மா ஏறுவேன்' என்று தலைவன் வாயளவில் சொல்லுதல் ஐந்திணையாகும்.

மடல்மா கூறும் இடனுமார் உண்டே[87]

என்று தொல்காப்பியம் இதற்கு இலக்கணம் கூறும். அவ்வாறன்றி மடல்மா ஏறியே காட்டும் செய்கை பெருந்திணையாக முடியும். ''ஏறிய மடற்திறம்''[88] என்ற தொல்காப்பிய நூற்பாத் தொடரில் 'ஏறிய' எனவரும் இறந்த காலவினை பெருந்திணை இலக்கணத்தைச் சுட்டுதல் ஈண்டு அறியப்பெறும்.

மாதங்கீரனார் என்ற சங்கப் புலவர் இத்துறை பாடுவதில் வல்லவர். இதனால் இவருக்கு 'மடல் பாடிய மாதங்கீரனார்' என்ற சிறப்புப் பெயரும் ஏற்பட்டது. இவர் பாடியனவாகக்

83. குறள்- 1137
84. நற். 116, 152, 342, 377
85. குறுந். 14, 17, 32, 173, 182.
86. கலி. 138, 139. 140, 141
87. களவியல்-11 (இளம்)
88. தொல். அகத்திணையி—54 (இளம்)

கிடைத்துள்ள பாடல்கள் இரண்டு. ஒன்று குறுந்தொகையில் உள்ளது; மற்றொன்று நற்றிணையில் காணப்பெறுகின்றது. அவற்றையும் ஈண்டு அறிதல் சாலப் பொருந்தும்.

விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல்
மணியணி பெருந்தார் மரபிற் பூட்டி
வெள்ளென்பு அணிந்துபிறர் எள்ளத் தோன்றி
ஒருநாண் மருங்கிற் பெருநாண் நீங்கித்
தெருவின் இயலவும் தருவது கொல்லோ
கலிந்துஅவிர் அசைநடைப் பேதை
மெலிந்திலள் நாம்விடற்கு அமைந்த தூதே.[89]

[விழுதலை-சிறந்த உச்சி; விளையல்-முதிர்தலையுடைய; தார்-மாலை; மரபின் பூட்டி-முறையோடு அணிந்து' எள்ளல் - இகழ்தல்; ஒருநாள் மருங்கில் - ஒருநாளில்; இயல்தல்-செல்லுதல்; கலிந்து அவிர்-அழகு ஒழுகி விளங்கும்; மெலிந்திலள் -நெஞ்சம் நெகிழ்ந்திலள்]

தோழியால் குறை மறுக்கப் பெற்ற தலைமகன் தன் நெஞ்சை நோக்கி உரைத்ததாக அமைந்தது இப்பாடல். நெஞ்சிற்குக் கூறியதாக இருப்பினும் அவன் கருதியது தோழி அறிய வேண்டும் என்பதேயாகும். நற்றிணைப் பாடல் இது:

மடல்மா ஊர்ந்து மாலை சூடிக்
கண்ணகன் வைப்பின் நாடும் ஊரும்
உண்ணுதல் அரிவை நலம்பா ராட்டிப்
பண்ணல் மேவலம் ஆகி அரிதுற்று
அதுபிணி ஆக விளியலங் கொல்லோ
அகலிரு விசும்பின் அரவுக்குறை படுத்த
பசுங்கதிர் மதியத்து அகல்நிலாப் போல
அளகம் சேர்ந்த சிறுநுதல்
கழலுறுபு மெலிக்கும் நோயா கின்றே.[90]

[கண்அகல்-இடம் அகன்ற; நுதல்-நெற்றி; அரிவை-பெண்; பண்ணல்-செய்தல்; மேவலம்ஆகி-செல்லேமாகி; அரிது உற்று-உள்ளத்தை அரிதாகநிலைநிறுத்தி; விளிதல்: இறந்து படுதல்; அரவுக்குறை படுத்த-பாம்பினால் சிறிது விழுங்கிக் குறை படுக்கப்பெற்ற; கழலுறுபு-நினைக்குந்தோறும்; மெலிக்கும்-இளைக்கச் செய்யும்]

89. குறுந்.; 182.
90. நற்-377.

தோழியால் சேட்படுக்கப்பட்ட தலைவன் ஆற்றாமை மீதூர்ந்து தோழி கேட்பத் தன்னுள்ளே சொல்லியதாக அமைந்தது இப் பாடல். இதில் பெருகி நிற்கும் தன் நோய் தீர மடலேறாது இறந்து படுமோ என அழிந்து கூறுகின்றான் தலைவன். இந்த இரண்டு பாடல்களால் மட்டிலும் மாதங்கீரனாருக்கு **மடல் பாடிய** என்ற சிறப்படை தோன்றியிராது என்றும், வேறு பல பாடல்களும் இத்துறையில் இவர் பாடியிருத்தல் கூடும் என்றும் நினைக்கத் தோன்றுகின்றது.

இம்மடல் ஏறும் வழக்கம் நாகரிகமாகுமோ என்பதும் ஈண்டு ஆராயத்தக்கது. நாகரிகம் என்பது மக்களின் இயல்பை வைத்தே அறியப்படும் ஒன்றாகும். உண்மையான காதலர்களின் நிலை யறிந்து அவர்களது திருமணம் முடித்து வைத்தல் உற்றார் பெற்றார் முதலியவர்களின் கடமையாகும். இக்கடமையினின்றும் தவறுதலே நாகரிகமற்ற செயலாகும். ஆகவே, ஆண் மக்கள் இயற்கைக் களவின் வழி உள்ளம் வீழ்ந்து தெரிந்தெடுத்துக் கொண்ட பெண் மக்களைக் கூடுதற்பொருட்டு முயல்வதும், அம்முயற்சிக்கு இடையூறு கண்டபோது மடலூர்ந்து வெளிப் படுதலும் நாகரிக உணர்ச்சியையே காட்டுகின்ற தன்றோ? நன்மைப் பயக்குக் கூடிய செயல் எளிதில் நிறைவேறாதபொழுது தன் உயிரைக் கொடுத்தேனும் அதனை நிறைவேற்றுதல் உணமை யான ஆண்மையும் பெருமையும் ஆகும். ஆயின் மேற் குறிப்பிட்ட குறுந்தொகைப் பாடலில் மடலேறு தலைப் பிறரெல்லாம் இழித்து ஏளனம் செய்வதாகக் கூறப்பெற்றுள்ளதே என்று வினவலாம். அவர்கள் எல்லாம் கருத்து நோக்காது வெறுஞ் செய்கையை மட்டிலும் நோக்கி அங்ஙனம் எள்ளி ஏளனம் செய்வர் என்பதும் அங்ஙனம் செய்பவரும் கீழ்மக்களே யாவர் என்பதும், உயர்ந்த கருத்தும் ஆன்ற அறிவுமுடைய மேன்மக்கள் அங்ஙனம் கூறார் என்பதும், அவரும் மடலேற்றத்தைக் கேள்விப்பட்ட தொடி யிலேயே காதலர்தம் மணத்தை முடிக்கவே முயல்வர் என்பதும் ஈண்டு உளங் கொள்ளத் தக்கவை. தலைவன் தோழிமாட்டு மட லேறும் வகை உரைக்கும் திறனெல்லாம்,

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர்.[91]

91. குறள்-1135

[தொடலை-மாலை போலத் தொடர்ந்த;
உழக்கும்-அநுபவிக்கும்; துயர்-காமநோய்]

நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றார் ஏறும் மடல்[92]

[நாண்-இழிவாயின செய்தற்கண் விலக்குவது;
ஆண்மை-ஒன்றற்கும் தளராது நிற்றல்]

என்ற திருக்குறள்களில் செவ்விதின் விளங்கிக் கிடத்தல் அறியத் தக்கது.

'மடற்றிறம்' என்ற தலைப்புடன் திருக்கோவையாரில் ஒன்பது துறைகள் காணப் பெறுகின்றன. தலைவன் மடலேறு தலைத் தோழி தடுக்க முயல்வதாக அமைந்திருப்பது 'மடல் விலக்கு' என்னும் துறையாகும். அகப்பொருள் நூல்களில் இத் துறைபற்றிய செய்திகள் மிக நயமாகக் கூறப்பெற்றுள்ளன. தலைவனுடன் பேசத் தொடங்கும் தோழி, ''நீங்கள் மடலேறுவீர் களேயாயின், உங்கட்குள்ள இரக்கத்தை யாரிடத்துச் செலுத்துவ வாகும்?'' என்று வினவுவாள். அதாவது, தலைவன் மடலேறு வானாயின், அதனையறிந்த தலைவி அதற்கு ஆற்றாளாய், மிக வருந்தி உயிர்விடுதலும் கூடுமாதலால், அவள்மாட்டு உண் மையில் இவன் அருளுடையனாயின் இங்ஙனம் மடலேறுவதாகக் கூறுதல் கூடாதன்றோ? ஆகவே, ''உங்கள் கழிபேரிரக்கத்தை உங்கள் தலைவியின்பாலன்றி வேறு யார்பால் செலுத்தப் போகின்றீர்கள்?'' என்கின்றாள். உண்மையிலேயே தலைவிபால் மிக்க அன்பும் இரக்கமும் உடையவனாதலால் அவன் மடலேறுதல் அரிதென்று தோழி கருதுவாளாயினள். ஆதலால் இவள் இங்ஙனம் கூறி விலக்கும் துறை 'அருளால் அரிதென விலக்கல்' என்னும் தலைப்பில் மணிவாசகப்பெருமான் மிக அருமையாகக் கூறியுள்ளார். இங்ஙனம் கூறியும் அவன் அமையானாய் நிற்கக் கண்ட தோழி, ''நீங்கள் படம் வரையுங்கால் உங்கள் தலைவியின் பேச்சையும் நடையையும் எப்படி எழுதுவீர்கள்''? என்று கேட்பது 'மொழி நடை எழுதல் அரிதென விலக்கல்' என்று கூறுவதாக அமையும். ''அவை தாம் எழுத முடியாவாயினும் அழகின் திறம் வாய்ந்த அவளுடைய உறுப்புகளை மட்டிலும் அத்துணை எளிதாக எழுதிவிடுதல்

92. ஷை-1133

இயலுமா?'' என்று கூறி விலக்குதல் 'அவயவம் எழுதல் அரிதென விலக்கல்' என்னும் துறையாகும்.

யாழும் எழுதி எழின்முத்து
எழுதி இருளின் மென்பூச்
சூழும் எழுதியோர் தொண்டையும்
தீட்டிஎன் தொல்பிறவி
ஏழும் எழுதா வகைசிதைத்
தோன்புலி யூர்இளமாம்
போழும் எழுதிற்றொர் கொம்பருண்
டேற்கொண்டு போதுகவே.[93]

[யாழ்-இசைக் கருவி (மொழியைக் குறித்தது); முத்து-பல்லைக் குறித்தது); சூழ்-மாலை; பிறவி-பிறப்பு; எழுதா வகை-கூற்றுவன் தன் கணக்கில் எழுதா வண்ணம்; கொம்பர்-கொடி]

என்ற திருப்பாடல் விளக்குவதாகும். இதில் சொல்லும் பொருளும் மிக அழகு பெற நிறுத்திக் கூறிய திறம் உணர்ந்து மகிழத்தக்கது. தலைவிஇங்ஙனம் மடலேறுதலை விலக்கல்'உடம்படாது விலக்கல்' 'உடம்பட்டு விலக்கல்' என்று இரண்டு வகையாகக் கூறப்பெறும். இங்ஙனம் கூறப்பெற்ற இரண்டு துறைகளினாலும் தலைவன் நெஞ்சமைந்து மடலேறுதலைத் தவிர்த்துநிற்பான். உடம்பட்டு விலக்கிய தோழியும் தலைவியை அவனுடன் இணக்குதற்பொருட்டு அவள் மாட்டுச் சென்று குறை நயப்புக் கூறுவாள். இவ்வாறெல்லாம் மடற்றிறம் அகப்பொருள் நூல்களில் விரித்துப் பேசப்பெறும்.

இங்ஙனம் தலைவன் மடலூர்தல் கண்டு அஞ்சித் தலைவியைக் கொண்டு வந்து தலைவனுக்கு மணம் செய்து கொடுத்ததை இலக்கியங்களில் காணலாம்.

வருந்தமா ஊர்ந்து மறுகின்கண் பாடத்
திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக்கு அருந்திறை
போலக் கொடுத்தார் தமர்.[94]

[மா - குதிரை; மறுகு-தெரு; பொருந்தாதார் - பகைவர்; வழுதி-பாண்டியன்; திறை-கப்பம்; தமர்-உறவினர்.]

93. திருக்கோவை-79
94 கலி-141.

கண்டவர் வருந்துமாறு தலைவன் மடன்மாஊர்ந்து பாட, அதனைப் பெற்றோர் கேட்டு, போர்த் தொழிலில் வல்ல பாண்டியனுக்கு அஞ்சி பகைவர் திறை கொடுக்குமாப்போலே அவர்கள் தம் குடிக்குப் பழுதாம் என அஞ்சி மகட்கொடை நல்கினர் என்பதைப் பாடலில் காண்க.

### vi. வெறியாட்டு

களவின் வழியொழுகும் தலைவி யொருத்தியின் மேனி நாள் தோறும் மெலிந்து வருவதைச் செவிலித் தாய் (நற்றாய்) காண்கின்றாள். இவ்வுடல் வேறுபாடு காப்பு மிகுதியாலும், தலைவியின் காதல் மிகுதியாலும், நொதுமலர் வரைவினாலும், தமர் வரைவு மறுத்ததனாலும் அவள் காதலுக்கு ஏதம் விளைவிக்கக் கூடிய இன்னோரன்ன பிற செயல்களாலும் ஏற்பட்டிருக்கலாம். உண்மையை ஊகித்தறியாத தாய் இவ் வேறுபாடு எற்றினானாயிற்று என்று அறிவரை வினாவ, அவர்கள் குறிபார்த்தலால் தெய்வத்தினானாயிற்று என்று கூறினர். மரபு வழிபட்ட அவள் இவ் வேறுபாடு முருகனால் வந்தது என்று நம்பி முருகனுக்குப் பூசை எடுக்கத் துணிகின்றாள். இதுவே தக்க வழி என்று அக்கம் பக்கத்து முதுப்பெண்டிரும் கூறுகின்றனர். வீட்டில் நல்லதோரிடத்தில் புது மணல் பரப்பிய வெறியாடற் களத்தில் பூசை தொடங்குகின்றது. முருகபூசை செய்விப்பவன் வேலன் எனப்படுவான். இவன் முருகனுக்குரிய வேலை நட்டு பூசை நடத்துபவன் போலும். தினையைக் குருதியிற் கலந்து அதனை நாற்புறமும் தூவி எறிந்து முருகனைக் கூவி அழைப்பான்; வெறியாட்டு என்னும் ஆவேசக் கூத்தை ஆடுவான்;[95] கழற்சிக் காயிட்டு நோய்க்குக் காரணம் கூறுவதும் இவன் வழக்கமாகும்.[96] இத்தகைய வழக்க முண்மையைத் தொல்காப்பியர்,

களம் பெறக் காட்டினும்[97]

என்றும்,

95. அகம்-22 (அடி 7-12)
96. ஐங்குறு-248.
97. களவியல்-23 அடி 39 (நச்)

கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
ஒட்டிய திறத்தால் செய்திக் கண்ணும்.[98]

என்னும் கூறுவர். களமாவது, கட்டும் கழங்கும் இட்டுரைக்கும் இடமும் வெறியாட்டிடமுமாகும் என்று பொருள் கூறுவர். நச்சினார்க்கினியர். மேலும், இவர் 'கட்டினும் கழங்கினும்' என்பதற்கு 'கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினானும் கழங்கினானும்' என்று கூறுவர். இதனால் கட்டுவிச்சிக்குக் கட்டெடுத்தலும் வேலற்குக் கழங்கு பார்த்தலும் முறையே உரியவை என்பது பெறப்படும். யார் நோய்க்கும் முருகென மொழிதல் இவன் வாய்மரபாகும். 'அன்னைக்கு முருகென மொழியும் வேலன்'[99] என்ற ஐங்குறுநூற்றால் இஃது அறியப் படும்.

கட்டுவிச்சி கட்டேறிக் குறி சொல்லுவதைத் திருமங்கை மன்னன் அருளிச் செய்த சிறிய திருமடலால் அறியலாகும்.

வாராது மாமை அதுகண்டு மற்றாங்கே
ஆரானும் மூதறியும் அம்மனைமார் சொல்லுவார்
பாரோர் சொலப்படும் கட்டுப் படுத்திரேல்
ஆரானும் மெய்ப்படுவ னென்றார் அதுகேட்டுக்
காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா
வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைமோவாப்
பேரா யிரமுடையான் என்றாள் பெயர்த்தேயும்
காரார் திருமேனி காட்டினாள்.[100]

என்பது காண்க. கட்டுவிச்சி தெய்வ ஆவேசம்கொண்டு கண்ணை மூடிக்கொண்டு ஒரு முறத்தினின்றும் ஒரு பிடி நெல் எடுத்து அவற்றை எண்ணிப் பார்த்து ஒற்றைப் படைஎண் வருகின்றதா இரட்டைப் படை எண் வருகின்றதா என்று சோதித்துப் பார்த்து உண்மையை அறியும் முறையே கட்டு எடுத்துக் குறிசொல்லல் ஆகும். வேலன் கழங்கு பார்த்துக் குறி சொல்வதை அக நானூற்றால் அறியலாம்.

அறுவை தோயும் ஒருபெருங் குடுமிச்
சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோல்

98. ஷை-24 அடி (3-4) (நச்)
99. ஐங்குறு-249.
100. சிறிய திருமடல்-கண்ணி 18-22

ஆகுவ தறிவும் முதுவாய் வேல!
கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்
மாறா வருபனி கலுழுங் கங்குலின்
ஆனாது துயருமெங் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே[101]

[அறுவை-ஆடை; குடுமி-உச்சி; நாற்றிய-தொங்க விடப்பட்ட; கோடு-வளைந்த; முதுவாய்-அறிவு வாய்ந்த; திட்பம்-குறி; மாறா-இடையறாது; பனி-நீர்; கலுழும்-கலங்கி அழும்; படீஇயர்-துயிலும் பொருட்டு; முந்துற-முட்பட; குறிப்பு-உட்கோள்]

மகட்போக்கிய நற்றாய் கூறுவதாக அமைந்தது இப்பாடல். தலைவனுடன் வெளியேறிய தன் மகளைத் தன் வீட்டிற்கு முற்படக் கொணர்வானா அல்லது தன் மனையின்கண் கொண்டு உய்ப்பானா என்பதைக் கழங்கின் குறியால் கூறுமாறு வேண்டுவதைப் பாடலில் காணலாம்.

வரையாது வந்தொழுகும் ஐங்குறுநூற்றுத் தலைவன் ஒருவன் சிறைப்புறத்தில் இருக்குங்கால் அவன் கேட்குமாறு வெறி நிகழா நின்றமையைத் தோழி தலைமகளிடம் சொல்லுகின்றாள்.

வெறிசெறித் தனனே வேலன் கறிய
கல்முகை வயப்புலி கழங்குமெய்ப் படூஉ
புன்புலம் வித்திய புனவர் புணர்த்த
மெய்ம்மை அன்ன பெண்பாற் புணர்ந்து
மன்றிற் பையுள் தீரும்
குன்ற நாடன் உறீஇய நோயே.[102]

[வெறி செறித்தல்-வெறியாடற்கு வேண்டுவன எல்லாம் களத்தின்கண் சேர்த்தல்; கறி யகல்-மிளகுக் கொடி படர்ந்த மலை; முகை-குகை; வயப்புலி-ஆண் புலி; கழங்கு-கழற்சிக் காய்; புன்புலம்-புன்செய்; புனவர் - குறவர்; புணர்த்தல்-வேண்டும் பொருளெல்லாம் கூட்டிச் செய்தல்; பெண்பால்-பெண்புலி; மன்று-கொல்லையின் நடுவே அமைந்த விடுநிலம்; பையுள்-துன்பம் (காமம்); தீரும்-தீர்த்துக் கொள்ளும்; உறீ இய-செய்த]

---

101. அகம்-195
102. ஐங்குறு-246.

பயிர்விளைப்பார் விலங்குகள் நலியா திருக்கும்பொருட்டுக் கழலைக் கண்ணாக உறுத்திப்பொய்மை வகையாற் பண்ணிவைத்த பெண்பாற்புலியைப் புணர்ந்து ஆண்புலி புனத்தின் நடுவே துயரம் தீரும் என்றது, வரைந்து கொள்ள நினையாது இக்களவிற் புணர்கின்ற இம்மாயப் புணர்ச்சியால் இன்பம் முடிய நுகர் கின்றான் என்பதாகும். ஆண்புலி பொய்ப் புலியைப் புணர்ந்து பையுள் தீரும் என்றது, தலைவன் உண்மையான காதலாலன்றிக் காமத்தான் மட்டும் தலைவியை விரும்பி இக்களவின்கண் மருவி இன்புறுகின்றான் என்பதைக் குறிக்கின்றது. அறவோனாயின் வரைந்து கொள்வான் அலனோ? என்று தோழி தலைவனுடைய அன்பின்மையை உணர்த்துகின்றாள். இப்பாடலில் வெறி நிகழ்ச்சியை உணர்த்தி வரைவு கடாதல் உணரப்படும்.

அன்னையொருத்தி தன் மகளின் காதல் நோய் முருகனால் வந்தது என்று தவறாகக் கருதி வெறியாட்டயர்கின்றாள். இதனைத் தலைவி தோழியிடம் கூறி அன்னையின் அறியா மைக்கும் வேலனின் அறியாமைக்கும் ஏன்? முருகக் கடவுளின் அறியாமைக்கும் கூட நகையாடுகின்றாள்.

இறைவளை நல்லாய் இதுநகையா கின்றே
கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்க்க
அறியாள்மற் றன்னை அலர்கடம்பன் என்றே
வெறியாடல் தான்விரும்பி வேலன்வரு கென்றாள்[103]

[கறி-மிளகுக் கொடி; சிலம்பன்-குறிஞ்சி நிலத் தலைவன்; நோய்-காமநோய்; கடம்பன்-முருகன்; வேலன்-வேல்மகன்]

ஆய்வளை நல்லாய் இதுநகையா கின்றே
மாமலை வெற்பன்நோய் தீர்க்கவரும் வேலன்
வருமாயின் வேலன் மடவன் அவனிற்
குருகு பெயர்க் குன்றம் கொன்றான் மடவன்.[104]

[ஆய்வளை - அழகியவளை; வெற்பன் - மலைநாடன்; மடவன்-அறிவிலி; குருகுபெயர்க்குன்றம் : கிரவுஞ்சமலை; கொன்றான்-முருகன்]

''நோய் நாடி நோய்முதல் நாடி, அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச்' செயல் புரிதல் முறை. அன்னையோ இதனையறியாது எதுபற்றி வெறியாடினும் இறுதியாக இது முருகன் குறை

103. சிலப். குன்றக்குரவை-11
104. ஷை-12

என்றே கூறும் வேலனை வெறியாடற்பொருட்டு அழைந்து வருமாறு பணித்தனள். இதனை நினைக்கும்தோறும் எனக்கு நகைப்பு உண்டாகின்றது'' என்கின்றாள் தலைவி. மேலும் அவள் ''மலை நாடனாகிய நம்பெருமான் அளித்த நோயைத் தீர்க்க வேலன் வந்தாலும் வருவான். அங்ஙனம் வந்தால் அவன் அறிவிலியே. அவ்வேலன் அழைக்குங்கால் முருகன் வருமாயின், அவனைவிட அக்கடவுளும் அறிவிலியாவான். இஃது எனக்குச் சாலவும் நகைப்பைத் தருகின்றது'' என்கின்றாள். வெறியாடலை அறிவிக்கும் இந்த இரண்டு பாடல்களிலும் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலை அறியலாம்.

தலைமகளின் மேனி மெலிவு தெய்வத்தால் ஆயிற்று எனத் தமர் நினைந்தபொழுது அதனைப் பொறுக்கலாற்றாத ஐங்குறுநூற்றுத் தோழியொருத்தி நேராகவே செவிலியிடம் 'உண்மை செப்புங் கிளவியால்' அறத்தொடு நிற்கின்றாள்.

அருந்திறல் கடவுள் அல்லன்
பெருந்துறைக் கண்டிவன் அணங்கி யோனே[105]

[அருந்திறல்-யாரானும் கடத்திலரிய பேராற்றலையுடைய]

என்று அடித்துப் பேசுபவள். நெய்தல் மலரையும் செருந்தி மலரையும் கலந்து கட்டிய மாலையை அணிந்த மானிட மகனே தலைவிக்கு நோய் அளித்தவன் என்பதையும் உரைத்து விடுகின்றாள். நற்றிணைத் தோழியின் செயல் இதற்கு மேலும் ஒரு படி போகின்றது. இங்கும் தலைவி முருகேறப்பட்டவள் என்று வேலன் கூறுகின்றான். தலைவியின் நோய்க்குப் பிறிதொரு காரணம் கற்பிக்கப்பெறுவதைத் தோழியால் பொறுக்க முடியவில்லை. அக்காரணம் தெய்வச் சார்பு ஆயினும் அவள் அதற்கு மதிப்பு தரவில்லை. தெய்வத்தையே சாடத் தொடங்குகின்றாள்.

'அருவி யின்னியத் தாடும் நாடன்
மார்புதர வந்த படர்மலி அருநோய்
நின்னணங் கன்மை அறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவு ளாயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே'[106]

105. ஐங்குறு-182
106. நற். 14. இப்பாடலை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் தோழி கூற்றாகக் கொண்டுள்ளனர். தலைவி கூற்றாகக் கொள்வதற்கே இது பெரிதும் பொருந்தியதாகும்.

[இன் இயம்-இனிய வாச்சியம்; படர்மலி-கருதுதலில்: அரு நோய்-காமநோய்; அணங்குதல்-வருந்தித் தரப்படுதல்; அண்ணாந்து-தலை நிமிர்ந்து. கடம்பின் கண்ணி-கடம்ப மாலையாலான தலை மாலை; வெறிமனை-வெறிக்களம்; மன்ற-திண்ணமாக; வாழிய - இத்தகைய இடங்களில் வாராது வாழ்வாயாக]

இங்கு கற்பு, தெய்வத்தையே எள்ளுகின்றது. 'தலைவியின் நோய் காதல்நோய்; தலைவன் மார்புத் தழுவலால் ஏற்பட்ட நோய். கடவுளாக இருக்கும் நீ இதனை அறிந்திருப்பாய். ஆயினும் மரபு அறிவு அன்றி மெய்யறிவு இல்லாத வேலன் அழைக்கத் தோன்றிய முருகா! என் சொல்வேன்? நீ கடவுளாக இருப்பினும் உனக்குச் சொந்த புத்தி இல்லை. இத்தகைய இடங்கட்கு இனி வாராது வாழ்க' என்கின்றாள் தோழி. ஐங்குறுநூற்றுத் தோழி ஒருத்தி

கழங்கினால் அறிகுவது என்றால்
நன்றால் அம்ம நின்றஇவள் நோயே[107]

என்று கூறுகின்றாள். காதல் நோயைக் கழற்சிக்காயால் அறியப் புகுவது கற்பு மேன்மைக்கே அவமானம் என்பது இவள் கருத்து.

வெறியாடு காலத்தில் தலைவியின் களவுத் தொடர்பினை தாய் வெளிப்படையாகவோ குறிப்பாகவோ அறிய வாய்ப்பு உண்டு. தலைவியும் தோழியும் அவளுக்கு அறிவிக்கவே முயல்வர். 'அகவன் மகளே'[108] எனத் தொடங்கும் குறுந் தொகைப் பாட்டில் தோழி தலைவியின் களவை அறத்தொடு நின்று குறிப்பாக வெளிப்படுத்துவதைக் காணலாம். சிறைப் புறத்தில் இருக்கும் தலைவனை நோக்கி ஐங்குறுநூற்றுத் தோழி இவ்வாறு பேசுகின்றாள்:

பொய்யா மரபின் ஊர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியு மாயின்
கெழுதகை கொல்இவள் அணங்கி யோற்கே.[109]

[மெய்ப்படுத்து - ஆராய்ந்து; கன்னம் - நோய் தணீத் தற்குப் பண்ணிக் கொடுக்கும் படிமம்; இது பொன்னாற்

107. ஐங்குறு - 248
108. குறுந். 23
109. ஐங்குறு-245

செய்யப்படும். (இக்காலத்துத் தாயத்து போல்வது) கெழுதை - உரிமை.]

"பொய் கூறுதலில்லாத மரபினை உடையோன் ஆதலின் அவன் இந்நோய் முருகனால் ஏற்பட்டது என்ற இடத்து அக் கூற்று முருகனுக்கே உரிமையுடையதாலன்றி நம்பெருமானுக்கும் உரிய தாகுமோ?" என்று ஐயுறுகின்றாள். "முருகன் என்பது காரணப் பெயராகலான், அக்காரணங்கள் யாவும் நம்பெருமானுக்கும் பொருந்துகின்றமையால் அக்கூற்று மெய்யேயாகி அவன் பொய்யா மரபினன் என்பதற்கே சான்றாகுமோ? யான் அறிகிலேன்" என் கின்றாள் போலும். இங்குத் தோழிக்கு தலைவனை இடித் துரைக்கவும் வரைவு முடுக்கவும் வெறியாட்டு ஒரு கருவியாக அமைகின்றதையும் காண்கின்றோம்.

தலைவியின் நோயைத் தவறாகப் புரிந்துகொண்டு செவிலி எடுக்கும் வெறியாட்டம் நிகழாவண்ணம் தடுக்க நினைத்து வேலனை நோக்கிக் கூறுவதாக அமைந்த மணிவாசகப் பெருமானின் பாடல் சொற்சுவை பொருட்சுவை உடையது.

விதியுடை யார்உண்க வேரி
விலக்கலம் அம்பலத்துப்
பதியுடை யான்பரங் குன்றினில்
பாய்புனல் யாம்ஒழுகக்
கதியுடை யான்கதிர்த் தோள்நிற்க
வேறு கருதுநின்னின்
மதியுடை யார்தெய்வ மேயில்லை
கொல்இனி வையகத்தே.[110]

[விதியுடையார்-உரிமையுடையவர்கள்; வேரி-கள்; விலக் கலம்-விலக்கேம்; பதி-இடம்; கதி-இயக்கம்; கதிர்த்தோள்-ஒளியையுடைய தோள்; மதி-அறிவு.]

இங்குத் தோழி வேலனை நோக்கி, 'அட கடவுளே! நின் செயல் அழகிது. எம் பெருமாட்டியின் நோய்க்குக் காரணம் அன்றொரு நாள் அவள் புனலில் மூழ்கியபோது அப் புனலினின்றும் அவளைக் கரையேற்றி அவளுக்கு உயிர் தந்து உதவினானே ஒரு வள்ளற் பெருமான், அவனுடைய ஒளிமிக்க தோள்களாகும். அங்ஙன மிருக்க நீ வெறியாடுதலால் யாது பயன்? வெறியாடலால் நீங்கள்

110. திருக்கோவை-292

கள்ளுண்ணலாம். 'கள் உண்பாரையான் தடுக்ககிலேன். வேண்டும் அளவு உண்க. காரணம் காணாமல் நோய் தீர்க்க முயலும் உன் புத்தியே புத்தி. உன்னையன்றி என் அன்னைக்கு அறிஞர் பிறர் யாரும் கிடைத்திலர் போலும்!'' என்று எள்ளி உரைக்கின்றாள்.

பொதுவாக வெறியாட்டு அறத்தொடு நிற்கவும் வரைவு கடாவவும் பயன்படுவதைக் காணலாம். சமுதாயச் சடங்கிற்கும் கற்பொழுக்கத்திற்கும் ஒரு போராட்டம் நடைபெறுவதை வெறியாட்டில் கண்டு மகிழலாம். முதுமை வழிவழியாக வரும் மரபைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதையும், உண்மையை அறிந்த இளமை முதுமையை எள்ளி நகையாடுவதையும் பொருளாக அமையும் நிலையில் வெறித்துறைப் பாடல்கள் திகழ்வதையும் காணலாம். எதிர்ப்புணர்ச்சிகள் புலவர்கள் கிளர்ச்சியுடன் பாடுவதற்குக் கவர்ச்சியுள்ள இடங்களாகும். சங்க இலக்கியத்தில் இத்துறைபற்றி நாற்பது பாடல்கள் காணப்படுகின்றன. காமக்கண்ணி (காமாட்சி)யார் என்ற பெண்புலவர் இத்துறைபற்றி மூன்று பாடல்களை யாத்துள்ளார்.[111] அன்னைக்கும் அருமை மகளுக்கும் இடையே எழும் ஒரு பூசலைப் பெண் புலத்தி பாடுவது சிறப்பல்லவா? இந்த மூன்று பாடல்களையும் ஈண்டு ஆராய்வது பொருத்த முடைத்தாகும்.

நற்றிணைத்தோழி சிறைப்புறமாக நிற்கும் தலைவன் கேட்குமாறு தலைவியிடம் கூறுகின்றாள்:

சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்க
மால்பெயல் தலைஇய மன்னெடுங் குன்றத்துக்
கருங்கால் குறிஞ்சி மதனில வான்பூ
ஓவுக்கண் டன்ன இல்வரை இழைத்த
நாறுகொள் பிரசம் ஊறுநா டற்குக்
காதல் செய்தும் காதலம் அண்மை
யாதெனிற் கொல்லோ தோழி வினவுகம்
பெய்ம்மணல் முற்றங் கடிகொண்டு
மெய்ம்மலி கழங்கின் வேலன் தந்தே[112]

[சூர் உடை - அச்சம் தருதலையுடைய; நனந்தலை - இடமகன்ற; மால் - மேகம்; மதன் - வன்மை; ஓவு - ஓவியன்; இல் - வேட்டுவர் இல்லம்; இழைத்த - கட்டப்பட்ட;

111. அகம் 22, 98, நற். 268.
112. நற். 268.

பிரசம் - தேன்; பெய்மணல் - மணல்-பரப்பிய மணல்; கடி கொண்டு - சிறப்புச் செய்து; மெய்மலி - உண்மை கூறும்; தந்து - அழைத்து வந்து.]

அறியாமையால் அன்னை வெறியாட்டயர்கின்றாள். அதனைத் தோழி பயன்படுத்திக்கொள்ளும் திறம் பாராட்டுதற்குரியது. 'காதல் செய்தும் காதலம் அன்மை யாதெனில் கொல்லோ?' என்பதனால் இறைமகள் கைகடந்த காதல் உடையள் எனவும், இறைமகன் அங்ஙனம் இலனாயினான் எனவும் கூறி அவன் விரைந்து வரைய வேண்டும் என்பதைப் புலப்படுத்துகின்றாள். 'மெய்ம்மலி கழங்கினை' வினவுவதற்கு வருமாறு தலைவியை அழைத்தல் நகைச்சுவை பயப்பதாகும். இதனால் தலைவனுக்கு இல்லத்தில் நடைபெறும் வெறியாட்டையும் குறிப்பிக்கின்றாள். வன்மையில்லாத பேதையாகிய குறிஞ்சிப் பூக்கள் தமக்குக் கைம் மாறேதும் இயற்றாத தேனடைக்குத் தாம் தேனூறி நல்குதல் போன்று குறவர் மகளிராகிய தம்பால் காதலில்லாத மருதநிலத் தலைவனுக்குத்தாம்மட்டும் காதல் கனிந்தபேதையரானமையைக் குறிப்பிடும் திறம் மெச்சத் தக்கது. இங்ஙனம் தலைவனுக்கு முன்னிலைப் புறமொழியாக இல்லத்தில் நிகழ இருக்கும் வெறி யாடும் நிலையை எடுத்துக் காட்டி அவனை வரைவு கடாவும் முறையில் அமைத்த பாடலின்நுட்பம் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. அகநானூற்றுப் பாடல்களில் அவர் வெறியாடலை அமைத்துக் காட்டும் அருமைப்பாடு நம் இந்நிலையை மேலும் அரண் செய்வதாகும்.

களவொழுக்கத்தில் ஒழுகி வரும் அகநானூற்றுத் தலைவி ஒருத்தியின் உண்மையான வருத்தத்தை இதனால்தான் உண்டா யிற்று என்று அறியாது கலக்க முற்ற காலத்தில் தாயர் முதுவாய்ப் பெண்டிரைக் கலந்து ஆய்கின்றனர். அவர்கள் முருகனுக்குப் பூசை எடுப்பித்தால் இவள் உற்ற நோய் தீரும் என்று யோசனை கூறுகின்றனர். உடனே வெறியாட்டயர ஏற்பாடு செய்யப்பெறு கின்றது.

களநன்கு இழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்[113]

113. அகம் - 22

[களம் - வெறியாடு களம்; இழைத்து-அமைத்து; வளநகர்-வளம் பொருந்திய கோயிலில்; சிலம்ப - ஒலியுண்டாக; உருவச் செந்தினை - அழகிய செந்தினை; குருதி-இரத்தம்; தூஉய் - தூவி; ஆற்றுப் படுத்த - வரவழைத்த; உருகெழு நடுநாள் - அச்சம் பொருந்திய நள்ளிரவில்.]

நள்ளிரவில் இவ்வாறு வெறியாட்டு நடைபெறுகின்றது. அப் பொழுது தலைவியின் வீட்டிலுள்ள காவலாளரும் அறியா வண்ணம் சந்தன மணம் கமழவும் பல்வகைமலர்களாலான மாலை சூட்டியும் தலைவியின் நோய் தணித்தற்குரிய தலைவன் வருகின்றான். களிறாகிய இரையைத் தெரிதற் பொருட்டு ஒதுங்கிய பார்வையோடு மறைந்து இயங்கும் இயல்பினையுடைய வலிய புலியினைப்போல் பதுங்கிப் பதுங்கி வருகின்றான். வந்த வனைத் தலைவி தழுவி முயங்குகின்றாள். தலைவியின் பசலையும் மாறுகின்றது. காதலனால் மாறிற்று என்பதை அறியாது வேலனின் வெறியால்தான் மாறிற்று என்று அன்னையும் பிறரும் மகிழ்கின்றனர். இவர்களின் அறியாமையைக் கண்டு தலைவி நகுகின்றாள்.

தன்னசை யுள்ளத்து நந்நசை வாய்ப்ப
இன்னுயிர் குழைய முயங்குதொறும் மெய்மலிந்து
நக்கனென் அல்லனோ யானே எய்த்த
நோய்தணி காதலர் வரஈண்டு
ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே.[114]

[தன் நசை - தன்னை விரும்பும்; நசை - விருப்பம்; முயங்குதல் - தழுவுதல்; ஏதில் வேலன் - இயல்பில்லாத வேலன்; உலந்தமை - அழிந்தமை.]

என்பது காமக்கண்ணியார் காட்டும் சொல்லோவியம். தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்தில் தலைமகள் அவன் பிரிவுக்கு ஆற்றாதிருந்த நிலையில் தோழி தலைமகனை இயற் பழிப்ப தலைவி இயற்பட மொழிவதாக இப்பாடல் அமைந் துள்ளது.

களவொழுக்கத்தில் ஒழுகி வரும் அகநானூற்றுத் தலைவன் ஒருவன் சில நாட்களாகத் தலைவியைச் சந்திக்கவில்லை. இதனால் தலைவியின் மேனியில் மாற்றம் காணத் தொடங்கியது. உடல் இளைத்தது; கை வளையல்கள் கழன்று போயின.

114. நற் - 22

தலைவியின் நோய் தலைவன் கூட்டத்தால் தான் தணியும் என்பதை அன்னை அறியவில்லை. தன்மகளுக்கு இவ்வேறுபாடு எற்றினாலாயிருக்கக் கூடும் என கட்டுவிச்சியரை வினவுகின்றாள். அவர்கள் முறத்தில் பிரப்பரிசியைப் பலியாகப் பரப்பி வைத்து குறியறிந்து இது முருகனால் நேரிட்டது என்று கூறுகின்றனர். அவர்கள் கூற்றை நம்பி உடனே வெறியாட்டு எடுக்க ஏற்பாடு செய்கின்றாள். தோழி தலைவியிடம் இதனைக் கூறுகின்றாள்,

ஓவத் தன்ன வினைபுனை நல்லில்
பாவை அன்ன பலராய் மாண்கவின்
பண்டையிற் சிறக்கவென் மகட்கெனப் பரைஇக்
கூடுகொள் இன்னியம் கறங்கக் களனிழைத்து
ஆடணி அயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்
ஐதமை பாணி இரீஇக்கை பெயராச்
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்
பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின்
என்ஆம் கொல்லோ தோழி[115]

[ஓவம் - ஓவியம்; மாண்கவின் - மாண்புற்ற அழகு; பரைஇ- தெய்வத்தைப் பரவி; கூடுகொள் - இணைந்த; இன்னியம்- இனிய வாத்தியங்கள்; கறங்க - ஒலிக்க; ஆடு - ஆடுதற் கேற்ற; வெண்போழ் - போழப்பட்ட பனந்தோடு; இன் சீர் - இனிய தாள அறுதி; செல்வன் - முருகன்; ஏத்தி- துதித்து; பொற்ப - அழகு பெற; பாவையின் - பாவையைப் போல; தூங்கல் - ஆடுதலை; வேண்டின் - விரும்பினால்]

என்பது வெறியாட்டைக் காட்டும் சொல்லோவியம். இங்ஙனம் வெறியாட்டு முடிந்த பின்னரும் தலைவியின் வாடிய மேனி முன் போலச் சிறந்திடாதாயின் தன் களவொழுக்கம் பலரும் தூற்று மாறு வெளிப்படாதிருத்தல் அரிதாகும் என்கின்றாள் தோழி. மேலும் அவள், தலைவன் உறுவித்த இந்த அல்லலைத் தெரிந்து அருள் தலைவிட மணங்கமழ் நெடுவேள் (முருகன்) தலைவியின் முன்னைய அழகினைத் தந்தருள்வான் என்றால் தலைவி உற்ற துன்பம் பிறிதொன்றால் ஆகியது என்று ஆகிவிடும் என்கின்றாள்.

115. நற்-98

இதனைத் தலைவன் கேட்டறிந்தால் தலைவி உயிர் வாழ்தல் மறை வெளிப்படாதிருத்தலை விட அரிதாகும் என்றும் துணி கின்றாள். இந்த இரண்டு பாடல்களிலும் வெறியாட்டு மிக அழகு பெறக் கூறப்பெற்றிருப்பது நன்கு புலனாகும். இங்ஙனம் இந்த ஒரு துறையை ஆழ்ந்து அழகுறப் பாடவல்ல புலமைபற்றி **வெறிபாடிய** காமக் கண்ணியார் என்று இவர் சிறப்பினைப் பெற்றார் என்று அறிகின்றோம்.

ஐங்குறு - நூற்றில் குறிஞ்சித் திணையில் கபிலரால் பாடப் பெற்ற பத்துப் பாடல்கள் **வெறிப்பத்து** என்ற தலைப்பின் கீழ்க் காணப் பெறுகின்றன.[116] இவற்றால் அன்னையின் அறியாமை, வேலனின் அறியாமை, தோழியின் எதிர்ப்பு முதலியவற்றைத் தொடர்பாக நமக்கு அறிவூட்டி நிற்பதை அறியலாம். எல்லாப் பாடல்களிலும் கற்பின் வென்றியே தலைதூக்கி இலங்கக் கண்டு மகிழ்கின்றோம்.

தலைவியின் காதல் நோய்க்குத் தெய்வ மூலம் கூறுவதாக அமைந்த வெறியாட்டைக் கற்புக்கு மாசாகச் சமூகம் கருதுவ தில்லை. இந்நிலையில் தலைவியும் தாயர் வெறியாட்டு அயர் வதைப்பற்றி அத்துணையாகக் கவல்வதில்லை. இது நடை பெறாது தடுக்கத் தோழியும் தலைவியும் முன்னேற்பாட்டை மேற்கொள்வதும் உண்டு. நடந்தால் நடந்து ஒழியட்டும் என்று தடையின்றி அது நடந்தொழிய விட்டு விடுதலும் உண்டு. வெறி யாட்டு என்பது அன்னை அறியாமையால் முதுவாய்ப் பெண்டிரின் யோசனையால் நடைபெறும் ஒரு கேலிக் கூத்தேயாகும் என்பது தலைவியின் கருத்தாகும். மேற்காட்டிய அகநானூற்றுப் பாடலில் காட்டப்பெற்ற நிகழ்ச்சியே இதற்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகும்.

### vii. நொதுமலர் வரைவு

களவு நெறியில் வெறியாட்டைப்போல் அயலவர் வரைவும் களவுடை நங்கையின் கற்பைச் சோதிக்கும் ஒரு சமுதாயக் களனாக அமைகின்றது. என்றாலும், காதல் நோய்க்குத் தெய்வ

116. ஐங்குறு. (241-250).

மூலம் கூறும் வெறியாட்டைச் சமூகம் கற்புக்கு ஒரு மாசாகக் கருதுவதில்லை. இந்நிலையில் தலைவியும் அதனை அவ்வளவாகப் பொருட்படுத்துவதில்லை. வெறியாட்டு நடந்த பின்னும் களவொழுக்கம் நீடிப்பதனை அகத்திணை இலக்கியம் பேசும். இதனால் தலைவி வெறிக்கு அஞ்சுவதில்லை என்பது அறியப்படும். ஆயின் வேலன் வெறிக்கு அஞ்சாக் கள்வி நொதுமலர் வரைவுக்கு அஞ்சுவாள். மரபு வழியாக நடைபெறும் திருமணத்திற்கே பெற்றோர்கள் பெண்ணின் இசைவு கோருகின்றனர். இதில் எல்லா மாப்பிள்ளைமார்களையும் பெண் ஒப்புக் கொள்வதில்லை. அடக்கம் மிக்க நன்மகள்கூட தன் கருத்தை ஒருவாறு பெற்றோர்க்கு உணர்த்தியே தீர்வாள். அங்ஙனம் இருக்கக் களவுடை நங்கை தான் காதலித்த நம்பி இருக்கும்போது அயலவனை மணக்க எங்ஙனம் ஒருப்படுவாள்? அயல் மணம் கற்புடைக் குமரியின் உயிரையே அறுக்கும் கூரிய வாள் போன்றது; சமுதாயத்தின் ஒழுக்க வேலியினையே தகர்த்தெறியும் கோடரியை யொத்தது. இந்தச் சூழ்நிலையில் ஒரு பெண் தன் களவினை வெளிப்படுத்தித் தன் கற்பினைக் காக்கும் கட்டாயம் தானாக ஏற்படுகின்றது. பெற்றோரும் உண்மையை அறியின், ஒருத்தி உறவு மாறி மணப்பதை ஒவ்வவே ஒவ்வார். ஆதலின் தோழியும் தலைவியும் வேற்று மணம் பேசுதலைப் பார்த்துக்கொண்டு வாளா இரார். மணப் பேச்சை இடை முறிப்பதற்குப் பல்வேறு யுக்தி முறைகளை மேற்கொள்வர்; கடிய வழிகளையும் கையாள்வர். இத்தகைய நிகழ்ச்சி யொன்றினை ஐங்குறுநூற்றில் காண்கின்றோம். தலைவனும் தலைவியும் தம்முள் தலைப்பட்டு இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர் தலைவியின் இல்லத்திற்கு அயலார் மணம் பேச வருகின்றனர். இதனை அறிந்த தலைவி பாலும் உண்ணாளாய்ப் பழங்கண் கொண்டிருப்பதைக் கண்ணுற்ற செவிலி இந்நிலை இவளுக்கு எப்படி நேர்ந்தது என்று தோழியை வினவ அவள்,

தண்ணந் துறைவன் நல்கின்
ஒண்ணுதல் அரிவை பாலாரும்மே.[117]

[பால் ஆரும்-பால் பருகுவாள்]

என்று கூறுகின்றாள். நாணத்தை விட்டேனும் காக்க வேண்டும் முதன்மையுடையது கற்பாதலின், தலைவி வேற்றவருக்கு விருந்

117. ஐங்குறு-168.

தயரும் நிலையையும் பொருட்படுத்தாது விருந்தில் கலந்து கொள்ள மறுத்துத் தன் பொருட்டு நடைபெறும் இவ் வினிய விருந்து தனக்கு மட்டிலும் இனியதில்லை என்பதைத் துணிவாகக் காட்டுகின்றாள்.

மகள் மங்கைப் பருவம் எய்தியபின் பெற்றோர் இயல்யாகவே திருமணம் பேசுவர்: பேச வருபவரை முகனமர்ந்து வரவேற்பர். தக்கவன் என்று தம் மனத்திற்கு உகந்த ஆடவனுக்கு மணம் முடிப்பர். இஃது இன்றும் நடைபெற்று வருவதைக் காணலாம். ஆயின், எந்தப் பெற்றோரும் தம் மகள் களவில் ஒருவனோடு பிணைப்பு உடையவளா என்று முன்னரே அறிந்து மணம் பேசும் வழக்கம் இல்லை. எந்தப் பெற்றோருக்கும் தம் மகள்மீது இத் தகைய ஐயப்பாடு எழுவதற்கு இடனில்லை. அங்ஙனம் எழுவதும் நாகரிகம் இல்லை. ஆகவே, சமுதாய நெறிப்படிப் பெற்றோர். ஒருவனுக்கு மணங் காணவே முயல்வர். எனினும் களவு நெறிப் பட்ட குமரிக்கு இந்த மரபியலோடு ஒரு போராட்டம் நிகழ்ந்தே தீரும். தன்னைப் பொறுத்த அளவிலும் அவள் இம்மரபியலுடன் போராடித்தான் தன் கற்பைக் காத்துக் கொள்ள வேண்டும். பெற் றோராயினும் அவர்தம் முடிவினை மாற்றியோ அல்லது மறுத்தோ அல்லது எதிர்த்தோதான் தம் காதல் நெறியை நிலை நிறுத்தி வாழ வேண்டும்; அல்லது சாதல் வேண்டும்.

சாதாரணமாகத் தலைவன் வீட்டார் தலைமுடி யணிந்து தண்டூன்றிய நரை மூதாளர்களையே தலைவி வீட்டிற்கு மணம் பேச விடுவது தமிழக மண முறையாகும். பெண் கேட்க வரு வாரைப் பெண் பெற்றார் நன்று நன்று என முகமலர்ந்து வர வேற்பர், இதனைக் குறுந்தொகையால் அறியலாம்.

அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதலவர்
நன்றுநன் றென்று மாக்களோடு
இன்றுபெரி தென்னும் ஆங்கணது அவையே.[118]

[பிரிந்தோர்-பிரிந்தோரை; தண்டுடை-கைத்தடியையுடைய; வெண்தலை-நரையையுடைய தலை; சிதலவர்-துணியை யுடையவர்; மாக்கள்-தலைவன் தமர்; இன்று-இந்நாள்; என்னும்-முகமன் கூறுவர்; ஆங்கண்-அவ்விடத்திலுள்ள.]

118. குறுந்-146.

தலைவன் சான்றோரைத் தலைவியின் தமர்பால் மணம்பேசி வர விடுத்தபோது தன் தமர் மறுப்பரோ என அஞ்சிய தலைவியை நோக்கி 'தலைவன் வரைவை நமர் ஏற்றுக் கொண்டனர்; நீ கவலை ஒழிக என்று தோழி கூறுவதை இதில் காணலாம். இங்கு நற்காலமாக ஆண்வீட்டார் தலைவியோடு களவுத் தொடர்புடைய தலைவன் வீட்டாராகவே அமைந்து விட்டனர். இத்தகைய ஒரு நற்பேற்றினை ஐங்குறுநூற்றுத் தலைவியின் வாழ்விலும் காணலாம்,

கொடிச்சி கூந்தல் போலத் தோகை
அஞ்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்
வந்தனர் எதிர்ந்தனர் கொடையே
அந்தீங் கிளவி பொலிகநின் சிறப்பே.[119]

[கொடிச்சி-குறிஞ்சி நிலத்து நங்கை; தோகை-சிறகு; சிறை-தோகை; வெற்பன்-மலை நாட்டுத் தலைவன்; கொடை-நேர்தல்-பெண்தர ஒப்புக் கொள்ளல்; அம்தீம் கிளவி-அழகும் இனிமையும் அளாவிய மென்மொழி மங்கையே]

மகட்பேச விடுத்த தலைவன் சுற்றத்தாரைத் தலைவியின் சுற்றத் தார் ஆர்வத்தோடு வரவேற்று மகட் கொடை நேர்ந்தனர் என்ற உவகைச் செய்தியைத்தலைவியிடம் மகிழ்ந்துகூறி வாழ்த்துவதைப் பாடலில் காணலாம். இதன்கண் கொடிச்சி கூந்தற்கு ஒப் பாதலை விரும்பித் தோகைமாமயில் அஞ்சிறையை விரிக்கும் என்றது, தலைவன் விழைவிற்கு ஒப்பாகவே தலைவியின் சுற்றத் தாரும் விழைந்து உவகையோடு முகமன் கூறி வரவேற்று மகட் கொடையும் நேர்ந்தனர் என்ற குறிப்புடையதாக இருப்பதைக் கண்டு மகிழலாம். இங்ஙனம் களவு யாதொரு இடர்ப்பாடும் தடையுமின்றி மணமாக முடிதல் வேண்டும் என்றுதான் தலைவியும் தோழியும் விரும்புவர்; அங்ஙனம் நினைந்தவாறே முடிந்தக்கால் பேருவகைப் படுவர். களவு நெறியில் இங்ஙனம் முடிவதே இயல்பும் ஒழுங்கும் முறையும் ஆகும்.

வாழ்க்கை, குறிப்பாகக் காதல் நெறியில் தொடங்கும் வாழ்க்கை, நீரோட்டம் போல, சீமைக்காரைச் சாலையில் (Cement) மகிழ் ஊர்தி (Pleasure car) செல்லுவது போல, எளிதாக, இனிமையாகக் கற்பாகி விடுதல் அரிதினும் அரிது. அப்படி ஆகிவிடின் நெஞ்சக் குமுறலுக்கும் அறிவுத் தீட்டலுக்கும்

119. ஐங்குறு-300.

வேகவுணர்ச்சியும் புரட்சி நோக்கும் செயற்படுவதற்கும் இடம் இடமில்லாது போய்விடும். "எனவே, ஐந்திணைக் களவிலக்கியம் பாடுவார்க்கும் படிப்பார்க்கும் சுட்டித்தனம் இல்லாக் குழந்தை போலவும், கட்சியற்ற அரசியல் போலவும் உணர்ச்சி வறண்டு தோன்றும். தலைவன் சுற்றத்தார் மணம் பேசவருங்கால்எல்லாத்தலைவியரின்பெற்றோரும்இசைந்துவிடார் மறுத்து விட்ட நிகழ்ச்சிகளும் உலகில் பல இருக்கவே செய்யும். இந்நிலையில் களவிலக்கியம் உயிர்ப்பும் மிடுக்கும் சுவையும் பெறுகின்றது."[120] எங்கே தன் தலைவன் வரைவு வேண்டி விடுத்த தமரைத் தன் பெற்றோர் மறுத்துப் போக விட்டு விடுவரோ என்ற பேரச்சம் தலைவியின் மனத்தில் ஓடிக்கொண்டே யிருக்கும். இத்தகைய ஒரு நிகழ்ச்சியை ஐங்குறுநூற்றுத் தலைவி ஒருத்தியிடம் காணலாம்.

அம்ம வாழி தோழி நம்மொடு
சிறுதினைக் காவலனாகிப் பெரிதுநின்
மென்றோள் நெகிழவும் திருநுதல் பசப்பவும்
பொன்போல் விறல்கவின் தொலைத்த
குன்ற நாடற்கு அயர்வர்நன் மனனே.[121]

[நெகிழ்தல்-மெலிதல்; பசத்தல்-பசலை பூத்தல்; விறல் கவின்-வென்று விளங்கும் பேரழகு; குன்ற நாடன்-மலை நாடன்; அயர்வர்-புணர்த்துவர்]

இங்ஙனம் நெஞ்சங் கவன்ற தலைவியிடம் தோழி வருகின்றாள். மணம் பேசவந்தவர்களை முகமன் கூறி வரவேற்று உபசரித்தலான் மகட்கொடை நேர்வர் என்பதைக் குறிப்பாலறிந்து வந்து அந்த நற்செய்தியைத் தலைவியிடம் கூறுகின்றாள். இதனைப் பாடலில் காணலாம்.

இத்தகைய சந்தர்ப்பங்களில் தலைவி தன் பெற்றோரிடம் 'மறுக்காதீர்கள்' என்று முன்கூட்டியே சொல்ல அவளிடம் துணிவு ஏற்படாது; அவளுடைய நாணமும் அதற்கு இடந்தராது. பெற்றோர் மறுத்துவிட்ட பின்னர் சொல்வதற்கு அவள் கற்பு காத்திராது. இந்நிலையில் பேதைப் பெண்ணின் மனம் கலக்க முறுவதை உளவியல் நன்கறிந்த அகப்புலவன்தான் எடுத்துரைக்க முடியும்; நுட்பமாகவும் எடுத்தியம்ப முடியும். தன்னுடைய களவுச் செய்தியை அறியாத பெற்றோர்க்கு அஞ்சுவது கோழைத்

120. தமிழ்க் காதல்—பக். 75.
121. ஐங்குறு—230

தனமாகும். தலைவனுடன் தனக்கிருக்கும் தொடர்பை உரிய காலத்தில் வெளிப்படுத்தப் பின்வாங்குவது மடமையாகும். துணிவற்ற காதல் செயலற்ற ஏட்டுக் கல்வியை ஒக்கும். எவரிடமிருந்து எத்தகைய தொல்லை வரினும் அவரையும் அவர் தரும் தொல்லையையும் தூவெனத் தள்ளும் பெருவலி தூய மெய்க் காதலுக்கு இயல்பாகவே அமைந்த ஓர் உயரிய பண்பாகும். ஒருகால் நாணத்தால் தலைவி தயங்கினும் காதல் வாழ்வில் மிகப் பொறுப்புடன் செயற்படும் தோழி இதற்குச் சிறிதும் பின் வாங்காள்.

எக்கர் ஞாழல் சிறியிலைப் பெருஞ்சினை
ஓதம் வாங்கும் துறைவன்
மாயோள் பசலை நீக்கினன் இனியே.[122]

[எக்கர்-மணற்பரப்பு; ஞாழல்-ஒருவகை மரம்; ஓதம்-கடற் பெருக்கு; வாங்கும்-வளைத்து இழுக்கும்; மாயோள்-மாமை நிற்முடையவள்; நீக்கினன்-தீர்த்தருளினன்.]

'இந்த மாமை நிறத்தாளின் பசலையை—பிரிவுச் சோகையை—நீக்கினவன் யாரெனின், ஞாழல் மரத்தின் பெருங்கிளையை அலைகள் வளைக்கும் துறைவன் ஆவான்' என்று தோழி துணிந்து களவை வெளிப்படுத்தலைப் பாடலில் காணலாம். குமரப் பருவம் எய்திய நங்கைக்குப் பிரிவும் பசலையும் இல்லை; காதலர்ப் புணர்ந்த மகளிர்க்கே அவை உள. ஆதலின், ''மாயோள் பசலை நீக்கினன்'' என்ற தோழியின் சொற் கேட்ட தலைவியின் பெற்றோர் ஒரு தலைவனுடன் தன் மகளுக்கு உறவு ஏற்பட்டுள்ளது போலும் என்றும், அந்தத் தலைவன் இங்கு மணம் பேச வந்திருக்கும் வீட்டாரின் நம்பியே என்றும் தெளிந்து மணத்திற்கு உடன்படுவர்.

சில சமயம் தலைவியின் பெற்றோர் மகட்கொடை நேர உடம்படாது தலைவனது தமரை வலிந்து பேசி தம் அருமைச் செல்வியை அவர்தம் செல்வனுக்குக் கொடுக்க மறுத்துச் செருக்கி நிற்பதும் உண்டு. இந்நிலையில் தோழி கை கடந்த துணிவுடன் ''அச்செல்வனுக்கு உரியவள் இச்செல்வியே'' என்று மிக வெளிப் படையாகச் சொல்லியே தீர்வாள்.

குன்றக் குறவன் காதன் மடமகள்
அணிமயி லன்ன அசைநடைக் கொடிச்சியைப்

122. ஐங்—145.

பெருவரை நாடன் வரையும் ஆயிற்
கொடுத்தனெம் ஆயினோ நன்றே
இன்னும் ஆனாது நன்நுதல் துயரே.[123]

[காதல்-பேரன்பு; மடமகள்-இளமகள்; அணிமயில்-அழகிய மயில்; அசை நடை-அசைந்த நடை; இன்னும்-இப் பொழுதைவிட; ஆறாது-பெருகி ஒழிவிலதாகும்]

நெடுநாள் வரைவை நீட்டித்துக் களவு நெறியில் ஒழுகும் தலைவனைத் தோழி இடித்துரைத்த பின்னர் அவன் வரைவு பேச அனுப்பிய சுற்றத்தாரைப் பெற்றோர் நிலைமை அறியாமல் மறுத்துரைத்தபோது மேன்மேலும் பெருகி நிற்கும் தலைவியின் துயரை அறிந்த தோழி இடைப்புகுந்து பெற்றோர்க்கு அறிவுறுத்தலைப் பாடலில் காண்கின்றோம்.

இங்ஙனம் காதல் தலைவனே மணம் பேசும் வாய்ப்பே கிட்டும் என்று சொல்வதற்கில்லை. அயலாரும் மணம் பேச வருவதுண்டு, அப்போது தோழி தலைவிக்குக் கூறுவது போலத் தாய் முதலியோருக்குத் தலைவியின் களவொழுக்கத்தை வெளிப் படுத்தி நொதுமலர் வரைவினைத் தடுக்க முயல்வாள்.

இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கினொடு
கண்அகல் தூமணி பெறூஉ நாடன்
அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி
எம்மால் வருகுவை நீயெனப்
பொம்மல் ஓதி நீவி யோனே.[124]

[யாண்டை-எவ்விடம்; கண் அகல்-இடம் அகன்ற; தூமணி-தூய மணி; காழ் கொள்ளும் அளவை-முதிர்கின்ற பருவத்தில்; செறிதொடி-செறிந்தவளை யடையாய் (விளி); பொம்மல் ஓதி-நெருங்கிய கூந்தல்; நீவியோன்- தடவியோன்.]

என்ற குறுந்தொகைப் பாடலில் இத்தகைய நிகழ்ச்சியை. காணலாம். ''நின்பால் அன்பு பூண்ட தலைவன் இப்பொழுது எங்குள்ளானோ?'' என்பதனால் தோழி அன்னை முதலியோருக்கு உண்மை செப்பி இங்கு அறத்தொடு நிற்பதைக் காணலாம்.

---

123. ஷை—258.
124. குறுந். 379

கானவன் கிழங்கொடு விலை வரம்பு அறியா மணியையும் பெற்றாற்போல மான் வேட்டைமேல் சென்ற தலைவன் மான் விழி போன்ற மையல் விழியையுடைய தலைவியையும் பெற்றான் என்ற குறிப்பினையும் பாட்டில் கண்டு மகிழலாம்.

கற்புக்குக் கேடு வருங்கால் பெண்ணுக்குப் பெருந்துணிவு பிறக்கும் என்ற உண்மையை அகத்திணை இலக்கியங்களில் காணலாம். இத்தகைய ஒழுக்கத் துணிவைப் பெற்றோரும் வரவேற்பர்; ஒருவனுடன் தன் மகள் உறவு உடையாள் என்று அறிந்த பின்னர்த் தம் மகளின் கற்பு மாசுபட மாற்றவனுக்கு மணம் பேச நினையார். நடந்தவையாவும் தெய்வச் செயலால் நிகழ்ந்தவை என்று நினைந்து மகிழ்ந்து உற்றவனுக்கே மணவினை முடிப்பர். இத்தகைய ஒரு நிகழ்ச்சியை முல்லைக் கலி காட்டு கின்றது. 'ஏறுதழுவல்' விழா நடைபெறுங்கால் ஏழுதழுவின காளையின் சென்னியிலிருந்த கண்ணியைக் கொம்பிலே கொண்ட அப்பெரிய புகரேறு துள்ளுகையில் அதிலுள்ள பூ முல்லைத் தலைவியின் கூழையின் வீழ்ந்தது. அதனை அவள் எடுத்து அன்புடன் முடித்துக் கொண்டாள். இதனால் அலர் எழுமோ என்று மனங் கவல்கின்றாள், அவளுடைய உண்மைக் காதலை அறிந்த தோழி அவள் தமர் வரைவுக்கு உடம்பட்டதைக் கூறி மகிழ்விக்கின்றாள்.

''வருந்தாதி;
மண்ணிமா சற்றநின் கூழையுள் ஏறஅவன்
கண்ணிதந் திட்ட தெனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வமால் காட்டிற்று இவட்கென நின்னைஅப்
பொய்யில் பொதுவற்கு அடைசூழ்ந்தார் தந்தையோடு
ஐயன்மார் எல்லாம் ஒருங்கு.''[125]

[மண்ணி-கழுவி; மாசு-அழுக்கு; கூழை-முடியுள் அகப் படாத தலைமயிர்; திண்ணிதாக-வலிதாக; தெய்வமால்-தெய்வமாகிய திருமால்; பொதுவன்-இடையன்; அடை-அடுத்தலை (கொடுத்தலை); ஐயன்மார் - தமையன்மார்]

என்ற பாடலில் இதனைக் கண்டு மகிழலாம். இங்ஙனம் பல்வேறு விதமாக உரைக்கும் நொதுமலர் வரைவு பற்றிய பாடல்களை அகத்திணை இலக்கியத்தில் பயின்று மகிழலாம்.

125. கலி—107 (முல்லை—7).

### vii. வரைவு கடாதல்

பகற்குறியின்பொழுது தலைவனோடு தோழிக்குச் சில உரையாடல்கள் நிகழும். அஃதாவது, இனியும் இவ்வாறெல்லாம் களவிலேயே வந்து தலைவியைக் கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணம் செய்து கொள்ளல் வேண்டும் என்று தலைவனை அவள் பலவாறு வேண்டிக் கொள்வாள். முன்பெல்லாம் தலைவன் தோழியைக் குறையிரந்தது போக, பகற்குறிப் புணர்ச்சிக்குப் பின்னர் தோழி தலைவனைக் குறையிரப்பக் காண்கின்றோம். இஃது உலகியல் வழக்கமும் ஆகும்.

புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணும்[126]

என்று தோழி தலைவனைப் புணர்ச்சியின்பின் வணங்கி வேண்டிக் கொள்ளும் முறையினைத் தொல்காப்பியனாரும் ஓதியிருத்தல் அறியப்படும்.

தலைவனுடன் தோழி உரையாடுந்தோறும் அவள் நோக்கம் எல்லாம் தலைவியின் திருமணத்தையே நினைந்தவாறு இருக்கும். களவு நீடிப்பின், வெறியாட்டு நொதுமலர் வரைவு முதலான பல ஏதங்கள் நேர்வதற்கு இடம் ஏற்படுமே என்ற சிந்தனை அவள் மனத்தில் ஓடியவண்ணம் இருக்கும். அறிவு முதிர்ச்சியும் சிந்தனைச் செல்வமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற தோழி தலைவியின் வாழ்க்கையில் களவு என்று ஒன்று நடைபெற்றது என்பது தோன்றாவகையில்மணத்தை முடித்து வைக்கப்வோ பாடு படுவாள்; பல்வேறு வழிகளால் வற்புறுத்தி உரைப்பாள். இவ்வாறு மணம் செய்து கொள்ளுமாறு குறிப்பாகவோ வெளிப்படையாக கேட்டலை அகத்திணை இலக்கணம் **வரைவு கடாதல்** என்ற துறையாக எடுத்துப் பேசும். சங்க இலக்கியத்திலும் பிற்காலக் கோவை நூல்களிலும் நூற்றுக்கணக்கான பாடல்கள் இத் துறையில் அமைந்திருப்பதைக் காணலாம். வேறு பல துறைப் பாடல்களும் இத்துறையைச் சார்ந்து வருதலையும் அங்குக் காணலாம். இப்பாடல்கள் யாவற்றிலும் தோழியின் அறிவுக் கூர்மையைக் கண்டு மகிழலாம். தோழி வரைவு கடாதல் பற்பல ஏதுக்கள் காட்டி கடாவப் படுதலின் அது பலவகையாக விரியும்.

தோழி வரைவு கடாவும் முறை குறிப்பினால் வரைவு கடாதல், வெளிப்படையினால் வரைவு கடாதல் என்று இரு

126. களவியல்—23 (இளம்)அடி—16.

வகைப்படும் என்று கூறுவர் இறையனார் களவியலுரையாசிரியர்.[127] குறிப்பாவது, தோழி தலைமகனை நோக்கி, ''எம் அன்னை தலைமகளது வேறுபாடு கண்டு, இஃது இவட்கு எதனால் வந்தது என்று ஆராய்வாளாயினள்'' எனப் பொய் பெய்தல் கூறுதல் போல்வது. இதனால் தலைவியைத் தம் அன்னை இற்செறிக்கக் கூடும் எனவும், இதற்கு முன்பு வரைந்து கொள்ளலே சால்புடைத்து எனவும் குறிப்பாகத் தோழி வரைவு கடாவுவாள் இற் செறிப்பு என்பது, தலைவனைச் சந்திக்க இடமின்றிப் பெற்றோர் தலைவியை அவள் வயது முதிர்ச்சி நோக்கி வீட்டினுள் இருத்துகையாகும்.

ஈவிளை யாட நறவிளை
வோர்ந்தெமர் மால்பியற்றும்
வேய்விளை யாடும்வெற் பாவுற்று
நோக்கியெம் மெல்லியலைப்
போய்விளை யாடலென் றாள் அன்னை
அம்பலத் தான்புரத்தில்
தீவிளையாடநின் றேவிளை
யாடி திருமலைக்கே[128]

[ஈ - தேனீக்கள்; நறவிளைவு - தேனினது விளைவை; மால்பு - கண்ணேணி; உற்றுநோக்கி - குறித்துநோக்கி]

என்று விளக்குவர். ''தேனீக்கள் பறந்து விளையாடுவதைக் கொண்டே தேனினது விளைவை ஓர்ந்தறியும் எம்முடைய தமரைப் போலவே, எம்முடைய அன்னையும் எம் தலைவியை உற்று நோக்கி (அவள் உடல் வேறுபாட்டினைக் கண்டு) இனி திருமலைக்கண் புறம்போய் விளையாடற்க என்றாள்'' என்று தோழி தலைவியின் இச்செறிப்பைக் குறிப்பாற் புலப்படுத்துவதைக் காண்க.

இனி வெளிப்பட வரைவு கடாதல் என்பது என்ன என்பதைக் காண்போம். தோழி தலைவனிடம் அவர்கள் களவொழுக்கம் ஊராரால் அறியப்பெற்று, முதலில் அம்பலாக முளைத்துப் பின் அலராக வளர்ந்தது என்று கூறி இனி வரைந்து கொள்வதில் காலம் தாழ்த்தல் கூடாது என்று வெளிப்படையாகவே கூறுவாள்.

---

127. இறை-கள. 18 இன்உரை.
128. திருக்கோவை - 133

பரவாத களவை அம்பல் என்றும், களவை அலர் என்றும் கூறுவர் பேராசிரியர்.[129] அம்பல் என்பது முகிழ் முகிழ்தல் என்றும், அலர் என்பது சொல் நிகழ்தல் என்றும் உரைப்பார் நச்சினார்க்கினியர்.[130] இறையனார் களவியலுரையாசிரியர், அம்பல் என்பது சொல் நிகழாதே முகிழ்முகிழ்த்துச் சொல்லுவதாயிற்று; இன்னதின் கண்ணது என்பது அறியலாகாது என்பது. அலர் என்பது, இன்னானோடு இன்னாளிடை இதுபோலும் பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது. அம்பல் என்பது பெரும்போதாய்ச் சிறிது சிறிதாக நிற்க அலரும் என நிற்பது. அலர் என்பது, அப் பெரும்போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற்போல் நிற்கும் நிலைமையென வேற்றுமை சொல்லப்பட்டதாம்'' என்று மேலும் விளக்குவர்.[131] அலரறிவுறுத்தலை,

''அறிந்தோர் 'அறனிலர்' என்றலின் சிறந்த
இன்னுயிர் கழியினும் நனிஇன் னாதே
புன்னை கானல் புணர்குறி வாய்த்த
பின்ஈர் ஓதிஎன் தோழிக்(கு) அன்னோ
படுமணி யானைப் பசும்பூட் சோழர்
கொடிதுடங்கு மறுகின் ஆர்க்காட்டு ஆங்கண்,
கள்ளுடைத் தடவின் புள்ஒலித்து ஓவாத்
தேர்வழங்கு தெருவின் அன்ன,
கௌவை ஆகின்றதுஐயநின்! அருளே[132]

[நனி - மிகவும்; பின் ஈர் ஓதி - பின்னிய குளிர்ந்த கூந்தல்; அன்னோ (இரக்கச்சொல்); மறுகின் - தெருவில்; தடவு - சாடி, பானை; புள் - வண்டுகள்; கௌவை - அலர், பழிச் சொல்]

என்ற நற்றிணைப் பாடலால் அறியலாம். இது மணம் செய்து கொள்ளாது களவுப் புணர்ச்சியே கருதி வந்தொழுகும் தலைமகனைத் தோழி குறியிடத்தில் தொழுது தலைவனால் அருளிப் பாட்டோடு செய்த தலையளிதான் பலராலும் அறியப்பெற்று அலராயிற்று என்றும், இனி இவள் இறந்து பட்டொழியினும் இப் பழிச்சொல் நீங்குவதொன்றன்று என்றும் வரைவு தோன்றக் கூறு

129. திருக்கோவை. 180 இன் உரை.
130. களவியல் - 48 இன் உரை (நச்)
131. இறை. கள. 22 இன் உரை.
132. நற். 227

வதை அறிக. இங்ஙனம் வரைவு கடாவும் விகற்பங்களைத் தொல்காப்பியர் கூறும்,

களனும் பொழுதும் வரைநிலை விளக்கிக்
காதல் மிகுதி உளப்படப் பிறவும்
நாடும் ஊரும் இல்லும் குடியும்
பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி
அவன்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ[133]

என்ற தோழி கூற்றுகளாலும் அவற்றிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை விரிவாலும் நன்கு அறியலாம். திருக்குறளில் 'அலரறிவுறுத்தல்' என்ற அதிகாரத்தும் இந்த வரைவுகடாதலுக்கு நல்ல விளக்கம் காணலாம்.

மேற்கூறியவாறு தோழி கூற்றுகளாலேயே வரைவுகடாதலை அமைத்துக் காட்டிய தொல்காப்பியர் மீட்டும் பொருளியலில்,

பொழுதும் ஆறும் காப்புமென் றிவற்றின்
வழுவி னாகிய குற்றங் காட்டலும்
தன்னை யழிதலும் அவணூ றஞ்சலும்
இரவினும் பகலினும் நீவா என்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள என்ப[134]

என்ற நூற்பாவால் வரைதல் வேட்கைப் பொருளாக வரும் இடங்களைக் காட்டுவர். இளம்பூரணரும் இங்ஙனம் தோழி கூறும் சொற்கள் யாவும் தலைமகளுக்குத் தலைமகன்பால் விருப்ப மின்மையாற் கூறப்பட்டன அல்ல, தலைமகளை அவன் விரைவில் மணந்து கொள்ளுதல் வேண்டுமென்னும் வேட்கையினைப் பொருளாகவுடைய சொற்களாகும் என்று விளக்குவர். மேலும் அவர், ''இவையெல்லாம் தோழிகூற்றினுள் கூறப்பட்டன. ஆயின் ஈண்டோதிய தென்னை எனின், அவை வழுப்போலத் தோன்றும் என்பதனைக் கடைப்பிடித்து அன்பிற்கு மாறாகாது ஒரு பயன் வந்ததென உணர்த்துதலே ஈண்டு ஓதப்பட்டதென்ப. நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறும் என்பது நாடும் ஊரும் இல்லும் குடியும் என ஆண்டோதப்பட்டது. இவை வரைதல் வேட்கைப்

133. களவியல் - 23 (நச்)
134. பொருளியல் - 15 (இளம்)

பொருளாமாறும் ஆண்டுக் காட்டப்பட்ட உதாரணத்தான் உணர்க'' என்று உரைப்பர்.

தலைவன் களவொழுக்கத்து நீட்டித் தொழுகிய நிலையில் இவ்வாறு குறிப்பாகச் சொல்லாது வெளிப்படையாக மறுத்துரைத் தலும் உண்டு என்பது தொல்காப்பியனாரின் கருத்துமாகும். இதனை அவர்,

வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்
மரீஇய மருங்கின் உரித்தென மொழிப.[135]

[கிளந்தாங்கு - பட்டாங்கு; மரீஇய மருங்கு - மருவிய பக்கம்; அதாவது களவொழுக்கம் நீட்டித்த இடம்]

என்று குறிப்பர். எடுத்துக்காட்டாக,

கொடிச்சி யின்குரல் கிளைசெத் தடுக்கத்துப்
பைங்குரல் ஏனல் படர்தருங் கிளியெனக்
காவ லும் கடியுநர் போல்வர்
மாமலை நாட வரைந்தனை கொண்மோ[136]

[செத்து - கருதி; பைங்குரல் ஏனல் - பசுமையான கதிரினை யுடைய தினை; வரைந்தனை கொண்மோ - வரைந்து கொள்வாயாக]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலில் தலைவன் களவு நீட்டித்தவழித் தோழி பட்டாங்கு கூறி வரைதல் வேட்கையை உணர்த்தியதை அறிக. இதில் 'காவலும் கடியுநர்' என்புழி உம்மை அவளே முன்னரே ஐயுற்று இற்செறித் தோடமையாது தினைகாத் தலையும் விலக்குவள் என்று இறந்தது தழீஇயது. இனிக் கொடிச் சியின் குரலைத் தம்மினமாகிய கிளியின்குரல் என்று கருதி ஏனலிலே கிளி படரும் என்றது, குறிப்பாகத் தலைவி தினை காத்தற்குச் செல்லின் 'நின்போல்வார் அவளைக் கருதி ஆண்டு வருதலும் கூடும்' என்று எண்ணியே அவளை அத்தொழிலில் விடாராயினர் என்பதும் உணர்த்தியபடியாம். இவ்வாறு கொள்ளும் பொருள் இறைச்சியின்பாற் படும்.

அகப்பொருள் விளக்க நூலார் வரைவுகடாதலைப் பொய்த்தல், மறுத்தல், கழறல், மெய்த்தல் என்று நான்கு வகை யாகப் பாகுபடுத்திப் பேசுவர்.

---

135. ஷை - 16 (இளம்)
136. ஐங்குறு - 289

பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தல் என்(று)
ஒருநால் வகைத்தே வரைவு கடாதல்.[137]

என்பது அவர் கூறும் விதி. இதில் பொய்த்தல் என்பது, தோழி யானவள் தலைவியைத் தலைவன் மணந்து கொள்ளும்படி செய்ய எண்ணித் தலைவனிடம் பொய்யாயினவற்றைத் தானே புனைந்து கூறுதல். மறுத்தல் என்பது, தலைவன் குறிக்கண் வருதலைத் தோழி குறிப்பாகவும் வெளிப்படையாகவும் மறுத்தல், கழறல் என்பது, தோழி தலைவனிடம் அவன் தலைவியை மணந்து கொள்ளாமல் களவின்கண் ஒழுகுதல் அவன் நாடு முதலிய வற்றிற்கு ஏற்றதன்று எனத்தலைவற்குக் கூறுதல், மெய்த்தல் என்பது, தோழி தலைவனுக்கு மெய்யாயினவற்றை கூறுதல். இவை ஒவ்வொன்றுக்கும் உரியவையாகப் பல கிளவிக்களைக் காட்டுவர் அவ்வாசிரியர்.[138]

வரையாது வந்தொழுகும் தலைவன் சிறைப்புறத்தானாக, தலைவியின் தோற்றப் பொலிவும் வருத்தமும் அயலார் கூறும் அலரும் கண்டும் கேட்டும் அவள் சுற்றத்தார் இற்செறிக்கும் செய்தியைக் கூறித் தலைவனை வரைவு கடாவல் நடைபெறும். இச் செய்தியைக் கேட்ட தலைவி தோழிக்குக் கூறுவாளாய் அமைந்த ஒரு பாடல் ஐங்குறுநூற்றில் உள்ளது.[139] பெரும் பாலான பாடல்கள் தோழி தலைவனிடம் கூறயனவாகவே அமைந்திருக்கும்.

இளம்பிறை யன்ன கோட்ட கேழல்
களங்கனி யன்ன பெண்பாற் புணரும்
அயந்திகழ் சிலம்ப கண்டிகும்
பயந்தன மாதோநீ நயந்தோள் கண்ணே.[140]

[கோட்ட-மருப்புகளையுடைய; கேழல்-ஆண் பன்றி; பெண் பால்-பெண் பன்றி: அயம்ப-நீர்; கண்டிகும்-நோக்குதி; பயந்தன-பசந்தன]

தோழி பகற்குறிக்கண்ணே தலைவனை எதிர்ப்பட்டுத் தலைவியின் பசலை கூறி வரைவுகடாதலைப் பாடலில் காண்க. இங்ஙனமே இற்செறிப்பு, தோற்ற மாறுபாடுமுதலியவை கூறியும் தலைவனை வரைவு கடாவப்பெறும். தலைமகன் சிறைப்புறத்திலிருக்குங்கால் தோழி அவன் கேட்குமாறு தலைவியிடம் ‘நின்’ தலைவன்

137. நம்பிஅகப் - 165
138. ஷை - 166
139. ஐங்குறு. 111
140. ஷை - 264

மேலவர் செல்லும் நெறியிலே சென்று வாழாத சால்பு இலன்' என்று கூறி அவன் வரைந்துகொள்ளவேண்டும் என்றகுறிப்பினைக் கொண்ட நற்றிணைப் பாடல் ஒன்றினைக் காண்கின்றோம்.[141] கலித்தொகைத் தோழியொருத்தி தலைவியின் ஆற்றாமையையும் தலைவனது களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகின்றமையும் எடுத்துக்காட்டி வரைவு கடாவுகின்றாள்.

வீழ்பெயல் கங்குலின் விளியோர்ந்த ஒடுக்கத்தால்
வாழுநாட் சிறந்தவள் வருந்துதோள் தவறுண்டோ
தாழ்செறி கடுங்காப்பின் தாய் முன்னர் நின்சாரல்
ஊழுறு கோடல்போல் எல்விளை உகுபவால்.[142]

[வீழ்பெயல் - வீழ்கின்ற மழை; கங்குல் - இரவு; விளி யோர்ந்த ஒடுக்கம் - இரவுக்குறிக்கண் தலைவன் புள் ளெழுப்புதல் முதலிய அழைப்புக் குறியாகிய ஒலியுண்டா வதைக் கூர்ந்து உணரும் பொருட்டு ஒருவழிப்பட்டு நெஞ்சம் ஒடுங்கிய ஒடுக்கம்]

தாயால் தலைவி இற்செறிக்கப்பட்டிருப்பதையும், தலைவன் இரவுக் குறியின்போது செய்யும் குறிகளைத் தாரகமாகக் கொண்டு அவன் உயிர் வாழ்வதையும் பாடல் புலப்படுத்துகின்றது. ''இந் நிலையில் அவளுடைய பூப்போலும் கண்பாடின்மையை நீங்கிப் பாடுவதற்கும் அஞ்சுவேன்; அதற்குக் காரணம் என்னவெனில், அத்துயிலிடை வருந்தத் தக்க கனவால் பின்னர்த் தாங்கிய அரிய வருத்தத்தால் உற்ற கேட்டைச் சீர்தூக்கின் அஃது எல்லையறிய வொண்ணா மலையினும் மாணப் பெரிதாயிரா நின்றது. இனி இவ்வருத்தம் அவள் உறாதவண்ணம் நீ வரையாமல் பிரியப் பட்டாளொடு கொண்ட உறவு பின்னுதலை நீ ஈதல்வேண்டும்' என்று கூறி வரைவுகடாவுகின்றாள் தோழி.

பகற்குறி வரினும் இரவுக்குறி வரினும் அவற்றை மறுத்து வரைவுகடாவும் முறைகளில் தோழியின் மதிநுட்பத்தைக் கண்டு மகிழலாம். இத்துறைகளில் பாடிய புலவர்களின் கற்பனை வளத்தையும் பார்க்கலாம். இரவுக்குறியில் வந்தொழுகும் தலைவனைக் குறுந்தொகைத் தோழி வரைவு கடாவும் முறை முன்னிலைப் புறமொழியாக அமைந்துள்ளது.

141. நற். 233
142. கலி - 48
143. முன்னிலைப் புறமொழியாவது, கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் முன்னே இருப்பவும் அவரை விளித்துக் கூறாமல், வேறொருவரையேனும் பிறிதொரு பொருளையேனும் விளித்துக் கூறுவது.

கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றும் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லையல்லை நெடுவெண் ணிலவே.[144]

[கருங்கால் - கரிய அடியையுடைய; வீ - பூக்கள்; உகு - உதிர்ந்த; துறு கல் - குண்டுக்கல்; இருபுலி - பெரிய புலி; குருளை - குட்டி; எல்லி - இரவில்; நல்லை - நன்மை தருவதாய்]

இதில் நிலவை நோக்கி ''வெண்ணிலவே, காட்டிடை இரவில் வருநர் களவிற்கு நீ நல்லை அல்லை'' என்று கூறுகின்றாள் தோழி. தலைவன் காட்டிடை வருங்கால் வழியில் வேங்கைமலர் உக்க பாறையைத் வேங்கைக் குருளை என அஞ்சச் செய்வதாலும், ஊரின்கண் உள்ளார் அவன் வருகையைக் கண்டுகொள்வதற்கு ஏதுவாதலாலும் நெடுநேரம் எரிக்கும் வெண்ணிலவினை 'நல்லை அல்லை' என்றாள். நிலவை நோக்கிக் கூறுவாளாய், இங்ஙனம் ஒழுகுதல் ஏதம் தரும் என்று தலைவனுக்கு அறிவுறுத்திக் குறிப்பினால் வரைவு கடாவுகின்றாள் தோழி. ஐங்குறுநூற்றில் வரும் தோழி ஒருத்தி வரைவு கடாதல் நுட்பமாக அமைந்துள்ளது.

கொடிச்சி காக்கும் பெருங்குரல் ஏனல்
அடுக்கல் மஞ்ஞை கவரு நாட
நடுநாட் கங்குலும் வருதி
கடுமா தாக்கின் அறியேன் யானே![145]

[கொடிச்சி - குறிஞ்சி நிலத்துப் பெண்; ஏனல் பெருங்குரல் - தினையின்கண் விளைந்த பரியகதிர்; அடுக்கல்- பக்க மலை நடுநாள் கங்குல் - நள்ளிரவு; கடுமா - புலி முதலிய ஆற்றலொடு புணரும் வல்விலங்குகள்]

இதில் தோழி இரவின்கண் தலைவன் இடையூறு மிக்க காட்டினூடே புகுந்து வருதலான் அவனுக்கு ஏதம் வருதல் கூடும் என அஞ்சி இரவுக்குறி மறுக்கின்றாள். 'கடுமா தாக்கின்' என்றவள் பின்னர் நிகழும் நிகழ்ச்சிகளை வாயாற் கூறவும் அஞ்சியவளாய் அவற்றைக் கூறாது விடுத்து, 'அறியேன் யான்' என முடிக்கும்

144. குறுந். 47. தம்மால் விரும்பப்படாத நிலவை 'நெடு வெண்ணிலவு' என்று கூறுவதாக அமைந்த சிறப்பால் இதனைப் பாடிய நல்லிசைப் புலவர் நெடு வெண்ணிலவினார் என்னும் பெயர் பெற்றார்.

145. ஐங்குறு. 296.

நயம் நினைந்து இன்புறற் பாலது. கடுமா தாக்கி தலைவன் இறந்துபடின் தலைவியும் அவளன்றி இல்லாத தானும் தாயரும், தமரும் எல்லோரும் இறந்துபடுதல் ஒருதலை என்பதே அவள் சொல்ல அறியாத செய்தியாகும். இனி, ''நீ இவளை மணந்து நாளும் நல்லறம் நடத்தும் கருத்துடையை அல்லை; இவ்வாறு இரவிலோ பகலிலோ செவ்வி கிடைத்து மிக்ககளவின்பம் நுகர்தலே நினது குறிக்கோள்; அதனால்தான் ஏதம் மிக்க இத்தகைய இரவு வரவினை நாங்கள் உடன்படவில்லை. நீ வாய்மையாக இவளை விரும்பின் விரைந்து வரைந்து கொள்வதே நின் பொறுப்பு'' என்று கூறி வரைவு கடாவுவாள். அவன் வஞ்சத்தை உள்ளுறையாகப் பொதிந்து வைத்து 'கொடிச்சி காக்கும் பெருங்குரல் ஏனல் அடுக்கல் மஞ்ஞை கவரும் நாட! என விளித்தனள். இதன்கண் 'கொடிச்சி' என்றது', இற்செறித்துக் காக்கும் தமரை; 'ஏனற் பெருங்குரல்' என்றது உயர்குடிப்பிறப்புடைய தலைவியை; 'அடுக் கத்து மஞ்ஞை' என்றது, தலைவனை என்பதாக உணரப்படும்.

வரைவு கடாதல் துறையில் தலைவியின் இற்செறிப்பினைத் தோழி அறிவுறுத்தும் பாடல்கள் சங்க இலக்கியங்களில் அதிகமாகக் காணப்பெறுகின்றன. செறிப்பறிவுறுத்தி 'இரவும் பகலும் வாரல்' என்று கூறும் அகப்பாட்டு இது.

இயன்முரு கொப்பினை வயநாய்ப் பிற்படப்
பகல்வரிற் கவ்வை அஞ்சுதும்; இகல்கொள
இரும்பிடி கன்றொடு விரைஇ கயவாய்ப்
பெருங்கை யானைக் கோள்பிழைத் திரீஇய
அடுபுலி வழங்கும் ஆரிருள் நடுநாள்
தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்;
என்னா குவள்கொல் தானே பன்னாள்
புணர்குறி செய்த புலர்குரல் ஏனல்
கிளிகடி மிடலும் ஒளிந்தனள்
அளியள் தானின் அளியல திலளே[146]

[இயல்முருகு - இயங்கும் முருகனை; வயநாய் - வலிய நாய்; கவ்வை - அலர்; இரும்பிடி - கரிய பெண் யானை; விரை இய - கூடிய; கயவாய் - அகன்ற வாய்; கோள் - கொள்ளு தல்; இகல் - பகைமை; அடுபுலி - கொல்லும் புலி; குறி - பகற்குறி; புலர்குரல் - முற்றிய கதிர்; அளியள் - இரங்கத் தக்காள்; அளி - அருள்]

146. அகம் - 118.

இதில் 'பகல்வரிற் கவ்வை அஞ்சுதும்' என்றதனால் பகற்குறி விலக்கியும், 'ஆரிருள் நடுநாள் வருதல் அஞ்சுதும்' என்றதனால் இரவுக்குறி விலக்கியும், 'ஏனல் கிளி கடி பாடலும் ஒழிந்தனள்' என்றதனால் செறிப்பறிவுறுத்தியும், 'நின் அளி அலது இவள்' என்றதனால் வரைந்து கொள்ளல் வேண்டியும் தோழி குறிப்பிடு தலைக் கண்டு மகிழலாம்.

இதே துறையில் தலைவியின் ஆற்றாமை கூறும் பாடல்களுந் நிறையவுள்ளன. கலித்தொகைத் தோழி ஒருத்தி இங்ஙனம் கூறுவாள்: "முலை முகம் தோன்றாத மிக்க இளமைப் பருவத்தே நீ எம் தலைவியுடன் கொண்ட உறவினைத் தொடர்ந்து நல்காது விடுகின்றாய். அவள் கண்கள் நீர் உகுப்பவும் உன் மனம் இரங்க வில்லை. அவள் மேனி சாய்த்து நின்னை வெறுத்து அழாநிற்கவும் நீ அவளைக் கைவிடுகின்றாய். நீ மிகக் கொடியை" என அவளது ஆற்றாமையை எடுத்துரைத்து,

"அனையளென் றளிமதி பெரும்! நின்னின்று
இறைவரை நில்லா வளையள் இவட்கினிப்
பிறைசேர் சுடர்நுதல் பசலை
மறையச் செல்லு நீ மணந்தனை விடினே.[147]

[அனையள் - அத்தன்மையுடையவள்; அளிமதி- அளிப்பாய்; மணந்தனை விடின் - மணந்து கொண்டால்]

என்று வரைவுகடாவுவதைக் காண்க. இதனை அடுத்த மூன்று பாடல்களும் இங்ஙனமே தலைவியின் ஆற்றாமை கூறி வரைவு கடாவுவனவாக அமைந்துள்ளன.

நொதுமலர் வரைவு நேரும் என அறிந்த ஐங்குறுநூற்றுத் தோழி தலைவனிடம் இதனைக் கூறும் திறம் நனி நுட்பமானது.

சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தலொடு
குறுங்கை இரும்புலி பொரூஉ நாட!
நனிநாண் உடைமைய மன்ற
பனிபயந் தனநீ நயந்தோள் கண்ணே.[148]

[ஒருத்தல் - விலங்கின் ஆண்; குறுங்கை - முன் கால்களை; இரும்புலி - பெரிய புலி; பொரூஉ - போரிடும்.]

இதில் "என்னைப் பிறர் மணக்க விரும்பி எம் சுற்றத்தார்பால் மகட்பேசி வந்துள்ளார்" என்று பெரு நாணுடைய தலைவி

147. கலி - 125
148. ஐங்குறு - 266

கூறுதலும், அச் செய்தியைத் தோழி தலைவனுக்குக் கூறுதலும் நாண் அழிவாகும் ஆதலின், 'பிறர் வரைவு முயல்வதை நாங்கள் நினக்குணர்த்த வியலாதே மாகின்றோம்' என்பாள், 'நனி நாணுடைமையம் மன்ற' என்கின்றாள். 'நின்னால் நயக்கப் பட்டோள் கண் நீர் உகுதற்குக் காரணம் யாதென நீயே ஆராய்ந்து கொள்ளக் கடவை' எனக் காரியத்தை மட்டிலும் கூறிக் காட்டுவாள் 'நீ நயந்தோள் கண் பனிப் பயந்தன' என் கின்றாள். நாணுடைமையை வெளிப்படையாகக் கூறாது உள்ளுறையாகக் கூறுவாள், 'பன்றி ஒருத்தலொடு புலி போரிடற் கிடனாக நாடனே' என்கின்றாள். இதில் 'இப்பொழுது நினக்கு எவ்வாற்றானும் ஒவ்வாத ஏதிலார் தலைவியை மணத்தற்கு விரும்பி மணம் பேசி வந்துளார் ஆகலின் நீ விரைவில் அவரோடு மாறுபட்டுத் தலைவியை வரைந்து கொள்வதால் அவர்களை வினைகெட்டு முதுகிட்டுப் போம்படி செய்தல் வேண்டும்' என்ற வேண்டுகோள் அடங்கியுள்ளதைக் கண்டு மகிழ்க. மேலும், தலைவியை மணம் பேசி வந்த ஏதிலார் எவ்வாற்றாலும் நினக்கு ஒவ்வாரேனும் தம் சிறுமையாலே நம் பெருமாட்டியைப் பெறு வதற்குப் பேராசையாய் வந்துள்ளனர் என்பாள், 'சிறுகண் பெருஞ் சினப் பன்றி ஒருத்தல்' என்கிறாள். இனி, 'நீ பெருந்தக வுடையை' என்பாள் 'இரும்புலி' என்கின்றாள். 'புலியேயாயினும் வினை செய்தற்கண் காலந்தாழ்த்தலையுடையை' என்பாள் 'குறுங்கை' என்கிறாள். இப்பாடலில் ''நீ விரைந்து வரைந்து கொள்க'' என்பது குறிப்பெச்சமாக அமைந்துள்ளது.

நற்றிணைத் தோழி யொருத்தி தான் தலைவன் வரும் ஆற்றது அருமை அஞ்சித் தான் ஆற்றாளாய் உரைக்கும் பாடலில் இத்துறை அமைந்திருக்கும் அருமைப்பாடு அநுபவித்து மகிழத் தக்கது.

ஆளில் பெண்டிர் தாளில் செய்த
நுணங்குநுண் பனுவல் போலக் கணங்கொள
ஆடுமழை தவழும் கோடுயர் நெடுவரை
முடமுதிர்ப் பலவின் குடமருள் பெரும்பழங்
கல்லுழு குறவர் காதல் மடமகள்
கருவிரல் மந்திக்கு வருவிருந்து அயரும்
வான் தோய் வெற்ப! சான்றோய் அல்லைஎம்
காமம் கனிவது ஆயினும் யாமத்து
இரும்புலி தொலைத்த பெருங்கை யானை

வெஞ்சின உருமின் உரறும்
அஞ்சுவரு சிறுநெறி வருத லானே.[148]

[ஆளில் பெண்டிர்-தாபதமகளிர்; பதுவல்-பறித்த பஞ்சு; மழை-மேகம்; நெடு வரை-நெறிய மலை; முடம்-முடப் பட்டு; குடம் மருள்-குடம் போன்ற; எம்-எம்பால்; காமம்-அன்பு; கனிவது-மிகுதியாகக் கொண்டிருப்பது; உருமின்-இடிபோல; உரறும்-முழங்கும்]

களவின் வழிவந் தொழுகும் தலைமகன் இரவின்கண் வருதலை யறிந்த தோழி அவனை நெருங்கி 'மலை நாடனே, இரவின் கண்ணே கொடிய நெறியில் வருவதால் நீ சால்புடையை அல்லை' என்று வெகுண்டு கூறி உள்ளுறையால் 'மணம் செய்து கொள்ள வருவாயாக' என்றும், 'அங்ஙனம் வருவாயாகில் எமர் எதிர் கொண்டு மகட்கொடை நேர்வர்' என்றும் தெளியக் கூறுவதை இப் பாடலில் கண்டு மகிழலாம். குறவர் மடமகள் பழவின் பழத்துச் சுளையை மந்தியை விருந்தாகக் கொண்டு ஓம்பும் என்றது, 'நீ மணம் செய்துகொள்ள வரின் எமர் நின்னை மணமகனாக ஏற்று மகட் கொடை நேர்வர்' என்பதைக் காட்ட, 'பசித்து வந்த மந்தியையும் ஓம்பும் மலையையுடையையாயிருந்தும் நின்னை அடைக்கலம் புக்க இவள் அஞ்சாவாறு வரைந்தாய் அல்லையே' என்று இரங்கிக் கூறுகின்றாள். 'இததகைய நெஞ்சினையுடைய நின் மலையின் கண்ணே மஞ்சும் தவழா நின்றதே! இஃதென்ன வியப்போ!' என்று பொருளின் புறத்தே இறைச்சிப் பொருள் தோன்றி நிற்பதும் அறிந்து மகிழத்தக்கது.

கலித் தொகைத் தோழி ஒருத்தி வரைவு நீட்டித்த நெய்தல் நிலத் தலைவன் ஒருவனைத் தெருட்டி வரைவு கடாவுவது நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவதாகும். இங்குத் தலைவியின் தமர் வரைவுக்கு உடன்பட்டனர்; தலைவனும் இசைவு தெரிவித் தனன். எனினும், யாதோ காரணத்தால் அவன் வரைவினை நீட்டிக்கின்றான். அத்தகையவனைத் தோழி கடுஞ்சொல் கூறித் தெருட்டுகின்றாள்: துறைவ கேள்:

ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்

148. நற். 353

அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறைவெனப் படுவது மறைபிற ரறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்[150]

[ஆற்றுதல் இல்வாழ்க்கை நடத்துதல்; அலந்தார் மிடிந்தார்; போற்றுதல்-பாதுகாத்தல்; புணர்ந்தார்-கூடினார்; பாடு-உலக வொழுக்கம்; செறாமை-கெடாதிருத்தல்; பேதையார்-அறியாதார்; நோன்றல்-பொறுத்தல்; செறிவு-உறவு; மறை பிறர் அறியாமை - மறையாக உள்ளதைப் பிறர் அறியாமல் ஒழுகுதல்; கண்ணோடாது-கண்ணோட்டம் செய்யாமல்; வௌவல்-கொள்ளுதல்; போற்றார்-பகைவர்; பொறுத்தல்-காலம் வரும் அளவும் பொறுத்தல்]

இப்பாடற் பகுதி என்றென்றும் நினைவில் வைத்துக் கொள்ளும் உண்மைகளை உணர்த்துகின்றது. உணர்த்தியவள்,

''ஆங்கதை யறிந்தனி ராயின்என் தோழி
நன்னுதல் நலனுண்டு துறத்தல் கொண்க!
தீம்பால் உண்பவர் கொள்கலம் வரைதல்
நின்றலை வருந்தியாள் துயரம்
சென்றனை களைமோ பூண்கநின் தேரே[151]

[நுதல் - நெற்றி; கொண்கன் - நெய்தல்நிலத் தலைவன்; வரைதல்-கவிழ்த்து விடுதல்; நின்றலை-போல்வதொன்று; களைமோ; களைவாய்; பூண்க-புரவியைப் பூண்பதாக].

என்று வரைவுக்கு ஏற்பாடு செய்யுமாறு கூறுகின்றாள்.

இங்ஙனம் பல்வேறு முறையாகத் தோழி வரைவு கடாவும் நுட்பங்களை யெல்லாம் கூறும் பாடல்கள் மிகப் பலவாகும். வரைவு கடாவலில் தலைவனை இடித்துரைக்கும் வாய்ப்பினைப் பெறுகின்றாள் தோழி. ஐங்குறுநூற்றுத் தோழியொருத்தி இடித்துரைக்குங்கால் வரைவை மனங் கொள்ளாக் களவுடை நம்பியும் இனி வரைவினை முடிக்கத்தான் வேண்டும் எனக் காலம் அறிகின்றான்.

150. கலி-133
151. கலி-133

சிறுநனி வரைந்தனை கொண்மோ பெருநீர்
வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்
பறைதபு முதுகுருகு இருக்கும்
துறைகெழு தொண்டி யன்னஇவள் நலனே.[152]

[சிறுநனி-மிகக் குறுகிய காலத்தில்; வரைந்தனை கொள்-மணம் புரிந்து கொள்; பெருநீர்-கடல்; வல்சி-உணவு; பறைதபு-பறக்கும் ஆற்றல் கெட்ட; இருக்கும்-(செவ்வி) பார்த்திருக்கும்]

இதில் 'தலைவனே, இவள் அழகு வளம் தொண்டிப் பட்டினத்து வளனுக்கு ஒப்பாகும். தொண்டி வளனை அறிவையோ? வலைஞர்கள் கடலில் பிடித்துவந்த வளமான மீனை இரையாகக் கருதிச் செவ்வி பார்த்திருக்கும் பறக்கும் ஆற்றலிழந்த கிழ நாரைகளையுடையது. ஆதலால் இவள் வனப்பு உனக்கே சொந்தமாகுமாறு வரைந்து கொண்டு அழைத்துப் போய் விடுக' என்று தோழி நொதுமலர் வரைவினைக் காட்டித் தலைவனை எச்சரிக்கின்றாள். இதில் உள்ளுறையால் உணர்த்தும் நுட்பம் எண்ணி மகிழ்தற்குரியது. 'வலைவர் தந்த...இருக்கும் துறை' என்பதில் 'வலைவர் தந்த கொழுமீனாகிய உணவைத் தின்றற்கும் பறத்தற்கும் ஆற்றலில்லாத கிழக்கொக்கு செவ்வி பார்த்திருப்பது போல எம் பெருமாட்டியை மகட்பேச ஏதிலார் பலர் வந்து செவ்வி நோக்கியுள்ளார்காண்' என்ற கருத்து அடங்கியுள்ளது. இதில் தலைவியின் குடிக்குக் கடலும், தலைவனுக்கு வலை வீசிப் பிடிக்கும் பரதவரும், தலைவியை மணம் பேசி வந்தோர் இழிவிற்குக் கிழக் கொக்கும் உவமமாக்கப் பட்டிருக்கும் அருமைப்பாடு நினைந்து நினைந்து மகிழற்பாலது.

## ix. அறத்தொடு நிற்றல்.

'அறத்தொடு நிற்றல்' என்பது, 'அறனறியாமை நிற்றல்' என்றும், 'கற்பின்றலை நிற்றல்' என்றும் பொருள்படும். அறன் என்பது பல பொருள்களையும் தழுவிய பொதுச் சொல்லாயினும் ஈண்டு பெண்ணுக்கு. உரிய முதற் பண்பான கற்பையே குறிக்கும்

152. ஐங்குறு-180

கற்பென்னும் சடைப் பிடியில் நின்று களவொழுக்சத்தைப் பெற்றோர்க்கு வெளிப்படுத்தல் என்பது இத் துறையின் பொருளாகும். தலைவியின் களவொழுக்சத்தைப் பெற்றோர்க்கு வெளிப்படுத்துங்கால் தலைவி ஏற்கெனவே கற்பு நெறிப்பட்டு விட்டாள், அறத்தொடு பொருந்தவே நடந்துள்ளாள் என்பதனை முதன்மையாக வலியுறுத்துவதே தோழியின் நோக்கமாகும். இறையனார் களவியலுரையாசிரியரும், ''அறம் என்பது தக்கது, தக்கதனைச் சொல்லி, நிற்றல் தோழிக்கும் உரித்தென்றவாறு; அல்லதூஉம், பெண்டிற்கு அறம் என்பது கற்பு, களவின் தலை நிற்றல் என்பதூஉமாம்',[153] என்று குறித்திருப்பது ஈண்டு நோக்கத் தக்கது. களவொழுக்க நிகழ்ச்சியைத் தொல்காப்பியரும் 'குற்றந் தீர்ந்த அறச் செய்கையாகும்' என்று கருதுவர். தோழியின் கூற்றுகளையெல்லாம் தொகுத்துக் கூறும் ஆசிரியர்,

> முன்னிலை அறன்எனப் படுதலென்று இருவகைப்
> புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்[154]
> [கிளவி-சொல்; புரைதீர்-குற்றம் தீர்ந்த]

என்ற நூற்பாப் பகுதியினால் இஃது அறியப்படும். இப்பகுதியை நச்சினார்க்கினியர் 'அறன் எனப்படுதல் இருவகைப் புரைதீர் முன்னிலையென்று கிளவி தாயிடைப் புகுப்பினும்' என்று உரை நடைப் படுத்தி ''அறன் என்று சொல்லப்படுந் தன்மை இருவர் கண்ணும் குற்றந் தீர்ந்த எதிர்ப் பாடென்று செவிலியிடத்தே கூறி அக்கிளவியை நற்றாயிடத்தும் செலுத்தினும்'' என்று உரை கூறுவர்.

அறத்தொடு நிற்றலைத் தொல்காப்பியர் 'புரைதீர் கிளவி' என்று குறிப்பிட்டதைப் போலவே, இறையனார் களவியலாசிரியர் 'மாறு கோள் இல்லா மொழி' என்று குறிப்பிடுவர்.

> தோழிக் குரியவை கோடாய் தேஎத்து
> மாறுகோள் இல்லா மொழியுமார் உளவே.[155]

[கோடாய்-செவிலித்தாய்; கொள்தாய் எனப் பிரித்து, தாயாகக் கொள்ளப் படுவாள் எனப் பொருள் கொள்க, தேஎத்து-மாட்டு]

---

153. இறை. கள. 29-இன் உரை.
154. களவியல்-23(நச்). வரி 41-2.
155. இறை. கள-14.

என்பது அவர் கூறும் நூற்பா. இந்நூற்பாவில் 'மாறுகோள் இல்லா மொழி' என்பதற்கு உரையாசிரியர், ''எற்றினொடு மாறு கொள்ளாமையே எனின், தாயறிவினொடு மாறு கொள்ளாமையும், தலைமகள் பெருமையொடு மாறு கொள்ளாமையும், தலைமகள் கற்பினொடு மாறு கொள்ளாமையும், தோழி தனது காவலொடு மாறு கொள்ளாமையும், நாணினொடு மாறு கொள்ளாமையும், உலகினொடு மாறுகொள்ளாமையும் எனக் கொள்க''[156] என்று நயம்படக் கூறியிருப்பது பன்முறை படித்துப் படித்து இன்புறற்பாலது. தலைவிக்கு வாய்த்த களவொழுக்க நிகழ்ச்சியினால் தன்மீது குற்றம் ஏதும் இல்லை என்று இவ்வா றெல்லாம் தோழி கூறுவாள். மேற் கூறிய அனைத்திற்கும் குற்ற மில்லாத வகையாகத் தோழி ஆராய்ந்து கூறுவாள் என்பதை உரையாசிரியர் பெற வைத்தமை எண்ணி மகிழ்தற்குரியது.

அறத்தொடு நிற்கும் முறையும் ஒருவித ஒழுங்கிலேயே நடை பெறும். தலைமகள் தோழிக்கும், தோழி செவிலிக்கும் செவிலி நன்றாய்க்கும், நற்றாய் தந்தை தன்னையர்க்கும் தலைவியின் களவொழுக்கச் செய்தி வெளிப்படுத்தப்பெறும் என்று இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடுவர்.

தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்கும்
செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும்
நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு
நிற்கும் என்ப நெறியுணர்ந் தோரே.[156]

என்பது நாற்கவிராச நம்பியார் கூறும் விதி. களவொழுக்கத்தை யார் யார் யார் யாருக்கு வெளிப்படுத்தலாம் என்ற ஏணி வைத்தாற் போன்ற மன நிலைகளை யுடையது என்பது இதனால் தெளியப்படும். தோழியும் அறியாது மறைந்தொழுகிய தலைவி தன் களவினை அவளுக்குக் கூறி அறத்தொடு நிற்பாள். பின்னர்த் தோழி தன் தாயாகிய செவிலிக்கும், செவிலி தலைவியின் தாயாகிய நற்றாய்க்கும் களவைக் கூறுவர். இதுவே வயதுக்கும் உறவுக்கும் ஒத்த முறையாகும். நற்றாயோ தலைவியின் தந் தைக்கும் உடன் பிறந்தோருக்கும் சொல்லாற் கூறாது அவர்கள் அறிந்து கொள்ளுமாறு குறிப்பால் தெரிவிப்பாள்.

156. ஷை நூற். 14 இன் உரை.
157. நம்பிஅகப்-48

தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப.[158]

[முன்னம்-குறிப்பு]

என்னும் உள்நயம் நினையத் தகும். தலைவி தோழி செவிலி நற்றாய் ஆகிய நால்வரும் பெண்பாலார் ஆதலின் சொல்லால் சொல்லிக் கொள்ளலாம் எனவும், தந்தையும் அண்ணனும் நெருங்கிய கேளிரேனும் ஆண்பாலார் ஆதலின் ஒரு குமரியின் களவினைக் குறிப்பால் உணரச் செய்தல் நல்லது எனவும் அகத்திணை இலக்கணம் வகுத்துக் காட்டும் மனப்படிகளின் நுட்பம் எண்ணி உணர்தற் பாலது. 'காமர் கடும்புனல்' எனத் தொடங்கும் கலிப்பாட்டில்[159] அறத்தொடு நிலையை நிகழ்ச்சி முறையால் வைத்துச் சிறு கதைபோல் வேகமாகச் சொல்லிச் செல்வதை கண்டு மகிழ்க.

அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்.[160]

என்று அறத்தொடு நிற்கும் முறையினையும் சுட்டிக் காட்டியிருப்பது நோக்கத் தக்கது.

அறத்தொடு நிற்றலின் நன்னோக்கம் சங்கச் சான்றோர்களின் நெஞ்சைப் பிணித்து பல அரிய பாடல்களை உருவாக்கியுள்ளது. பிற வழிகள் யாவும் பயனற்றுப் போனபிறகு அறத்தொடு நிற்றல் என்னும் நேர்வழியைத் தலைவியும் தோழியும் மேற்கொள்வர். நாணமும் கற்பும் உயிரனைய இருபேறொழுக்கங்களாகும்; ஒருவந்தம் காத்துப் போற்றத் தக்கவை. ஆயினும் நாணை விட்டேனும் கற்பைத் தலையாகப் போற்றிக் காக்க வேண்டும் என்பது பண்டைத் தமிழர் கண்ட வாழ்க்கை நெறி.

உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந் தன்று.[161]

என்பது தொல்காப்பியம். 'நாணத்தைக் காக்க உயிர்விடுக; கற்பைக் காக்க நாணத்தை விடுக; என்று தெளிவிப்பர் தொல்காப்பியர். அறத்தொடு நிற்பது பெற்றோர்க்கு முன்னதாக இருப்பினும் நாணத்தை விட்டொழிக்க வேண்டுமாதலால் தோழி அறத்தொடு நில்லாத முறையொன்றினால் தோழி திருமணம்.

158. களவியல்-47
159. கலி-39 (குறிஞ்சிக்கலி-3)
160. களவியல்-43 (இளம்).

முடிக்க முயல்வாள். களவுச் சுவடு தெரியாமல் பல தீமைகள் முளைப்பதற்கு முன்னரே தலைவன் வரைந்து கொள்ள வேண்டும் என்பது தோழியின் நோக்கம். அகநானூற்றுத் தோழியிடம் இந்த ஆசையைக் காணலாம்.

வரையின் எவனோ வான்தோய் வெற்ப
கணக்கலை இருக்கும் கறியிவர் சிலம்பின்
மணப்பறாங் காமம் புணர்ந்தமை யறியார்
தொன்றியல் மரபின் மன்றல் அயரப்
பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தின் போலஇவள்
புதுநாண் ஒடுக்கமும் காண்குவம் யாமே.[161]

[வரையின்-மணந்து கொண்டால்; எவனோ-என்னை; கணம்-கூட்டம்; கலை-மான்கள்; இருக்கும்-ஒலிக்கும்; கறி-மிளகுக் கொடி; சிலம்பு-மலைச் சாரல்; மணப்பு அரும்-எய்துதற்கு அரிய; மன்றல்-மணம்; அயர-நிகழ்த்திட]

'வெற்பனே, மான்கூட்டமும் மிளகுக் கொடியும் படரும் மலைப் பகுதியில் நீ நிகழ்த்திய களவொழுக்கத்தை எம் உறவினர் அறியாரன்றே? அவர் அறியாத நிலையில், மரபு மணம் செய்து கொள்க. கொள்வையாயின், நின்னை முன்பின் அறியாதார் போல் நடந்து கொள்வோம். இவளும் முதன்முதல் நின்னைக் காண்பவள்போல் நாணம் அடைவாள். அவள் பொய்யாக நாணி நிற்பதைக் கண்டு நாங்கள் மகிழ்வோம்'' என்று தன் ஆசையைச் சொல்லுவது போல் அறிவு கொளுத்துவதையும் கண்டு மகிழ்க, அடுத்து தலைவி முதலியோர் களவினை வெளிப்படுத்தும் திறங் களைக் காண்போம்.

**தலைவி பாங்கிக்கு வெளிப்படுத்தும் திறம்;** களவொழுகும் தலைவியின் வறுபாடு கண்ட தோழி, எம்பெருமாட்டி' நினக் இவ்வேறுபாடு எற்றினானாயிற்று? என்று வினவ, அதற்கு அவள் "இஃது எனக்குப் பட்டது'' இன்னவிடத்து ஒரு ஞான்று நீயும் ஆயங்களும் தழையும் கண்ணியும் கோடற்கு எண்ணிச் சிறிது நீங்கி னாய்; யான் நின்று ஒரு மணிச்சுனை கண்டேன்; கண்ட அம்மணிச் சுனைதான் ஆம்பலேகுவளையேநெய்தலே தாமரையே என்றிப்பூக் களால் மயங்கி மேதக்கது கண்டு, வேட்கையான் ஆடுவான் இழிந்

161. அகம்-112.

தேன்; இழுக்கிக் குட்டம் புககேன்; புக்குத் 'தோழியோ!, என, நீ கேளாயாயினாய்; ஆக, ஒரு தோன்றல் வந்து தோன்றி எனது துயர் நீங்குதற்காகத் தன் கை நீட்டினான்; நீட்ட, யானும் மலக் கத்தான் நின் கை எனப் பற்றினேன்; பற்ற வாங்கிக் கரைமேல் நிறீஇ நீங்கினான்; நீ அன்று கவலுதி எனச் சொல்லேன் ஆயி னேன்; நீ எவ்வெல்லைக் கண்ணுங் கைவிடாதாய் அஞ்ஞான்று கை விடலினையாக்கிற்று விதியாகாதே; இனிப் பிறிதொன்றாவது கொல்லோ எனக் கலங்கி வேறு பட்டேன்'' என்று தோழிக்குத் தலைமகன் அறத்தொடு நிற்கும்.[162] புனலின்கண் தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டமையின் இதனைப் 'புனல் தரு புணர்ச்சி' என்று அகம் பொருள் நூல்கள் கூறா நிற்கும். இங்ஙனமே, பூத்தருகின்ற ஏதுவால் முதன்முதல் அவர் தமக்குள் எதிர்ப்பாடு நேருமாயின் அதனைப் 'பூத்தரு புணர்ச்சி' என்றும், தலைமகள் மேற் சினந்தேறி வந்த களிற்றினைக் கொன்று நீக்கி அவளை அவ்விடுக்கணினின்று பாதுகாக்கும் ஏதுவால் முதன்முதல் அவர் தமக்குட் கூட்டம் நிகழ்வதாயின், அதனைக் 'களிறுதரு புணர்ச்சி' என்றும் ஆசிரியன்மார் கூறுவர். இன்னும் பிறபல ஏதுக்களால் அம்முதற் புணர்ச்சி நிகழுமாயின், அவையெல்லாம் அவ்வவ் வேதுக்களால் நிகழும் புணர்ச்சிகள் என்று கூறப்படும். இவற் றையும், இவற்றிற் கெல்லாம் 'ஏதீடு' என்றும் பெயருண்மை யையும் தொல்காப்பியப் பொருளியலுரையுள்[163] ஆசிரியர் நச்சினார்க்கினியர் தெளிவு படுத்துவர்.

இனி 'புனல் தரு புணர்ச்சி' 'மாறுகோள் இல்லா மொழி' யாமாற்றை விளக்குவோம். தாயின் விருப்பத்திற் கிணங்கவே தோழியும் தலைவியும் பொழிற்கண் சென்று விளையாடச் சென்றாராதலின், அப் புனல்தரு புணர்ச்சி நிகழ்ச்சி தாயறிவி னொடு மாறு கொள்ளாதாயிற்று. 'புக்குத் தோழியோ!' என்ற மையால் தலைமகள் பெருமையொடு மாறுகொள்ளாதாயிற்று. 'நீட்டின விடத்து மலக்கத்தான் நின் கையெனப் பற்றினேன்' என்றமையால், தலைமகள் கற்பினொடு மாறு கொள்ளா தாயிற்று. 'நீ எவ்வெல்லைக் கண்ணுங் கை விடாதாய் அஞ் ஞான்று, கை விடலினையாக்கிற்று விதியாகாதே' என்றமையால்

162. இறை. கள. 29 இன்உரை. திருக்கோவையார் செய். 290 இல் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்பதைக் கண்டு மகிழலாம். (''வண்டலுற்றேம்'')
163. பொருளியல்-13 (நச். உரை).

தாழி காவலொடு மாறுகொள்ளாதாயிற்று. 'நீ அன்று கவலுதி னச் சொல்லேனாயினேன்' என்றமையால் தலைமகள் நாணி னாடு மாறுகொள்ளாதாயிற்று. 'இனிப் பிறிதொன்றாங் கால்லோ எனக் கலங்கி வேறுபட்டேன்' என்றமையால் உலகி னாடு மாறுகொள்ளாதாயிற்று. எனவே, மறைவில் நிகழ்ந்த ளவு நிகழ்ச்சியை அறமெனக் காட்டுமாறும் அங்ஙனம் காட்டி ற்றலே அறத்தொடு நிற்றலாமாறும் இதனால் நன்கு தெளி பாகும்.

அயலார் தலைவியை மணம்செய்யும் பொருட்டு முயன்ற காலத்தில் அதுகாறும் தலைவனைப்பற்றிய செய்தியை வெளி பிடாத குறுந்தொகைத் தலைவி ஒருத்தி தோழிக்கு உண்மையை வெளியிடுகின்றாள்.

மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்டக் கோனே
யானுமோர் ஆடுகள மகளே என்கைக்
கோடீர் இலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும்ஓர் ஆடுகள மகனே.[164]

[மள்ளர்-வீரர்; மாண் தக்கோன்-மாட்சிமை பொருந்திய தகுதியுடையவன்; கோடு ஈர் இலங்கு வளை-சங்கை அறுத்துச் செய்த விளங்குகின்ற வளையல்கள்; பீடு-பெருமை; குரிசில்-தலைவன்]

இதில் தன்னோடு துணங்கையாடிய தலைவன் ஒருவன் உளன் என்பதாகத் தலைவி குறிப்பிடுகின்றதைக் காண்க. 'யானும் ஓர் ஆடுகள மகளே' என்றது தான் துணங்கையாடியதையும், 'குரிசிலும் ஓர் ஆடுகள மகனே' என்றது, அவன் அத்துணங் கைக்குத் தலைக்கை கொடுத்தான் என்பதையும் புலப்படுத்தித் தோழிக்கு அறத்தொடு நிற்கின்றாள் தலைவி. ''இத்தகைய தலைவன் ஒருவன் என்னோடு நட்புச் செய்திருப்ப நொது மலர் வரைதல் அறனன்று. ஆதலின் நீ அதனை மாற்ற முயல்வாயாக'' என்பது குறிப்பு.

**தோழி புலப்படுத்தும் முறை:** களவில் ஒழுகும் ஐங்குறு நூற்றுத் தலைவி ஒருத்தியின் உடல் வேறுபாடு கண்டு ஐயுற்ற

164. குறுந். 31

செவிலி 'இஃது எற்றினானாயிற்று?' என வேலனை வினவின ளாக, அவன் கழங்கு பார்த்து இது தெய்வத்தினானாயிற்று' என்று கூற, அஃதுணர்ந்த தோழி செவிலி கேட்கும் பொருட்டு அவள் கேட்கும் முறையில் கழங்கை முன்னிலைப் படுத்திக் கூறி அறத்தொடு நிற்கின்றாள்.

பொய்படுபு அறியாக் கழங்கே! மெய்யே
மணிவரைக் கட்சி மடமயில் ஆலும்நம்
மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோன்
ஆண்டகை விறல்வேள் அல்லன் இவள்
பூண்தாங்கு இளமுலை அணங்கி யோனே.[165]

[பொய்படுபு-பொய்படுதல்; மணி-நீலமணி; கட்சி-காடு; ஆலும்-ஆடும்; கானம்-காடு; வேள்-முருகன்; அணங்கி யோன்-வருத்தியவன்]

இதில் தலைவியை வருத்தியவன் முருகன் அல்லன், வேறொருவன் எனத் தோழி கூறி அறத்தொடு நிற்றலைக் காண்க.

குறுந்தொகைத் தோழி ஒருத்தி தலைவியின் களவொழுக்கத் தைப் புலப்படுத்தும் முறை இது. தலைவியின் உடல் வேறு பாட்டைக் கண்டு செவிலித்தாய் முதலியோர் நெற்குறி பார்ப்ப வளைக் கொண்டு அதன் காரணத்தை ஆராயத் தொடங்கு கின்றனர். குறத்தி பாட்டு பாடிக் கொண்டு குறி பார்க்கின்றாள். தோழி குறத்தியை நோக்கி,

அகவன் மகளே! அகவன் மகளே!
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே;
இன்னும் பாடுக பாட்டே, அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே.[166]

[அகவன் மகள்-கட்டுவிச்சி; அகவல்-அழைத்தல்; மனவு கோப்பு அன்ன-சங்கு மணியினாலாகிய கோவையைப் போன்ற வெண்மையாகிய]

என்று கூறுகின்றாள். தான் கூறப் போகும் செய்தியை நன்கு கவனிக்க வேண்டும் என்பதற்காகத் தோழி அகவன் மகளை மூன்று முறை விளிக்கின்றாள். பாடுதற்குரிய சிறப்புடைய மலை என்று குறிப்பிடுவதற்காகவே தோழி மீட்டும் பாடும்படி வேண்டு

165. ஐங்குறு-250
166. குறுந்: 23.

கின்றாள். 'அவர் நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டு' என்று கூறினால் 'அவர் யார்?' என்ற ஆராய்ச்சி தாயரிடையே பிறந்து உண்மை யறிவதற்கு ஏதுவாகும். எனவே, இதனால் தோழி தாயரிடம் அறத்தொடு நிற்கின்றாள்.

அகநானூற்றுத் தோழி யொருத்தி செவிலிக்கு அறத்தொடு நிற்குந்திறம் நயமாக அமைந்துள்ளது.

அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்
பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி அதன்திறம்
யானும் தெற்றென உணரேன்.[167]

[பழங்கண் - துன்பம்; வினவுதி - வினவுகின்றனை; திறம்-வந்தவழி; தெற்றென-தெளிவாக]

என்ற பிடிகையுடன் தொடங்குகின்றாள். ''அன்னையே, நேற்று நாங்கள் வேங்கைப்பூப் பறிக்கச் சென்றோம். 'புலி, புலி' என்று கூவினோம்.[168] அப்போது அச்சோலையின் வேறொரு பாங்கர் வேட்டையாடப் போந்த ஆடவன் ஒருவன் எம்மொலி கேட்டு 'அப்புலி சென்ற வழி யாதோ?' என வினவிக் கொண்டு அம்பு கோத்த வில்லுடன் எம்முன் வந்து தோன்றினன். அங்ஙனம் வின வினவனுடைய கல்லென உயர்ந்த தோள்களையும், கணை தொடுத்த வில்லேந்திய கைகளையும், ஆரம் பூசின அகன்ற மார்பினையும், கழுநீர் மாலை திகழும் கழுத்தினையும் கண்டு நாணி ஒருவர் முதுகில் ஒருவராக மறைந்து நின்றோம். ஒருவரும் பேசவில்லை. அவனோ,

'மையீர் ஓதி மடவீர்! நும்வாய்ப்
பொய்யும் உளவோ?'

என்று வியந்து கேட்டனன். அன்னவன் நின்மகளின் மையுண்ட கண்களைப் பலமுறை நோக்கிச் சென்றான். நின்மகளோ பகற் பொழுது மறையும் அந்தி நேரத்தில் அவன் சென்று மறையும் திசையை நோக்கி,

'மகனே தோழி என்றனள்'

167. அகம்-48
168. வேங்கை மாத்துப் பூக்கொய்வார் 'புலி புலி, என்று கூவின், அதன்கிளை தாழ்ந்து கொடுக்கும் என்பது இலக்கிய வழக்காகும்.

என்று கூறினாள். ஆராய்ந்து அறிவும் அறிவு மிக்கோர்க்கு அதன் அளவாக ஓர் உட்கருத்து உண்டு'' என்று தோழி அறத்தொடு நின்று உண்மை செப்புகின்றாள்.

இன்னொரு பாடலில் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும் திறமும் அறிந்து மகிழத் தக்கது ''அன்னையே, நான் மொழி வதைச் செவிமடுப்பாயாக. ஒருநாள் மாலை தலைவன் ஒருவன் கடலோரத்தே தேரில் வந்தனன். அவன் மாலைப்போது இங்குத் தங்கியதும் இலன். நின்மகள், அவனை நோக்கினாளும் அல்லள்; அத் தலைவனுடன் நின்மகளைச் சார்த்தி இவ்வூர் ஒப்பற்ற தன் கொடுமைக் குணம் காரணமாக அலர்பாடும்'. ஆதலின் அவளை அலைத்து வருத்தற்க என்கின்றாள்.[169] இங்ஙனம் கூறுவதில் தலைவன் எதிர்பாட்டைக் குறிப்பாற் புலப்படுத்துவது காண்க.

**பிறர் புலப்படுத்தும் முறை:** தோழிமூலம் தலைவியின் களவொழுக்கத்தை அறியும் செவிலி, நற்றாய்க்கு அறத்தொடு நிற்பாள். நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு நிற்பாள். இவ்வாறு தலைவி, தோழி, செவிலி, நற்றாய் அறத்தொடு நிற்கும் செய்தியைக் காமர் கடும்புனல்[170] என்று தொடங்கும் குறிஞ்சிக்கலி மிக நன்றாகச் சித்திரிக்கின்றது. 'கற்றறிந்தார் ஏத்தும்' அக்கலிப்பாட்டு பன்முறை படித்து இன்புறற்குரியது. தலைவியின் களவொழுக்கத்தைக் கேட்டவுடன் தந்தைக்கும் தன்னையர்க்கும் சினம் எழும்; அவ்வொழுக்கத்திற்குக் காரணமாக இருந்த தலைவன்மீது சினம் பொங்கி எழும். அவனுடன் அவர்கள் போர் தொடுக்க எண்ணுவர். பிறகு ஆராய்ந்து இருவர்மீதும் குற்றம் இல்லை என்று அமைவர். இதனை,

அவருந்,
தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபகல் எல்லாம் உருத்தெழுந்து ஆறி
இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை.

[கணை - அம்பு; சிலை - வில்; கண்சேந்து - கண் சிவந்து; உருத்தெழுந்து - சினந்தெழுந்து; ஆறி - சினந்தணிந்து; தெருமந்து - மனஞ்சுழன்று.]

என்று மேற்குறித்த குறிஞ்சிக்கலியின் பகுதியால் அறியலாம்.

169. அகம்-190
170. கலி-39 (குறிஞ்சிக் கலி-3)

அறத்தொடு நிற்கும் சந்தர்ப்பங்களையும் இலக்கண ஆசிரியர்கள் விதந்து கூறியுள்ளனர். இறையனார் களவியல் ஆசிரியர் இவற்றை,

காப்பு கைமிக்குக் காமம் பெருகினும்
நொதுமலர் வரையும் பருவம் ஆயினும்
வரைவெதிர் கொள்ளாது தமர்வண் மறுப்பினும்
அவன்ஊறு அஞ்சும் காலம் ஆயினும்
அந்நால் இடத்தும் மெய்ந்நாண் ஒரீஇ
அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே.[171]

[காப்பு - இற்செறிப்பு; கைமிக்கு - அதிகமாகி; நொதுமலர் - அயலார்; எதிர்கொள்ளாது - ஏற்றுக் கொள்ளாது; தமர் - உறவினர்; அவண் - அங்கு; ஊறு - துன்பம்; மெய்நாண் ஒரீஇ - உடலின்கண் நின்ற நாண் நீக்கி]

என்று தொகுத்துக் கூறுவர். தலைவியின் களவொழுக்கத்தைக் குறிப்பால் அறிந்த பெற்றோர்கள் அவளை இற்செறிக்கும் போதும், பிறர் தலைவியையை மணம் பேச வருங்காலத்திலும், தலைமகனுடைய பெற்றோர் பரிசத்தோடு தலைவியை வரைவதற்கு வருங்கால் தலைவியின் பெற்றோர் பரிசம் குறைவு என்று கூறியோ பிறவாறோ மணத்தை மறுத்த போதும், தலைவன் இரவுக் காலத்தில் தலைவியை நாடி வருங்கால் அவனுக்கு யானை பாம்பு புலி முதலியவற்றால் துன்பம் நேரிடும் என்று எண்ணித் தலைவி வருந்தும்போதும் தோழி அறத்தொடு நிற்பாள். தோழி நிற்கவே, ஏனையோரும் நிற்பர். இச்சந்தர்ப்பங்களைத் தவிர வேறு சந்தர்ப்பங்களில் தோழி அறத்தொடு நிற்பதில்லை. இதனைத் தொல்காப்பியர்,

அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
அறத்தியல் மரபிலள் தோழி என்ப.[172]

என்று கூறுவர். அகத்திணை இலக்கியத்தில் தோழியின் பங்கு மிகப் பெரியது. வரம்பற்ற உரிமையையும் உடையவள் அவள். தலைவியின் உரிமையையும் செயலையும் தன்னுடையன வாகவே கொண்டு செயற்படும் உறவினை உடையவள். எனினும், தலைவியின் இசைவின்றி அறத்தொடு நிற்றல் மட்டும் தோழிக்கு இல்லை. இதனையே மேற்குறிப்பிட்ட தொல்காப்பிய நூற்பா

171. இறை. கள-29
172. பொருளியல் - 11 (இளம்)

அறிவிக்கின்றது. காரணம் என்ன? அறத்தொடு நிற்பதால் நாணத்துக்கு இழுக்கு வரும். அந்த நாண் இழுக்குக்கு உரியவள் தலைவி. கற்பின்பொருட்டு நாணக் குறைவு வரினும் வருக என்று துணிய வேண்டியவள் அவள். அத்துணிவை அறிந்த பின்னரே தோழி அறத்தொடு நிற்றலை மேற்கொள்ள வேண்டும். நொதுமலர் வரைவும் வெறியாட்டெடுத்தலும் போன்ற அரிய பெரிய தொல்லைகள் நிகழும் காலமே அறத்தொடு நிற்றற்குரிய காலம் என்பது நச்சினார்க்கினியரின் கருத்தாகும்[173] இந்தக் காலத்தன்றித் தலைவி நாணைத் துறந்து அறத்தொடு நிற்பதை விரும்பாள். கலித்தொகைத் தலைவியின் கூற்று இது: ''தலைவன் என் மெய்யைத் தடவித் தலையளி செய்தான். அவன் என்னை மணப்பது தவறுமாயின், நம் குடிக்கு அது வடுவாக அமைந்து விடும். ''தோழி! 'நயம் புரிந்து, 'இன்னது செய்தாள் இவள்' என மன்னா உலகத்து மன்னுவது புரைமே' ''[174] என நொதுமலர் வரைவுக்கு மணமுரசு இயம்பியவழி, கற்புடை நல்லாள் தாய்க்கு அறத்தொடு நிற்க வேண்டும் என்ற குறிப்பைத் தோழிக்கு உணர்த்துவது அறியத் தகும். 'இன்னது செய்தாள் இவள்' எனத் தலைமகள் தன் களவை வெளிப்படையாகப் பகரப் பணிக்குங்கால் கற்புக்கு நாண் பலியாதலைக் காணலாம்.

இவ்வறத்தொடு நிற்றல் ஏழு பகுதிகளாக நடைபெறும் என்று தொல்காப்பியர் கூறுவர்.

எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுதல் உசாவுதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்பும் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என்மனார் புலவர்[175]

என்பது அவர் கூறும் நூற்பா. இதில் எளித்தல் என்பது, தலைவன் நம்மாட்டு எளியன் என்று கூறுதல். அதனது பயன் மகளுடைத் தாயர் தம்வழி ஒழுகுவார்க்கு மகட்கொடை வேண்டுவாராகலின் எளியன் என்பது கூறி அறத்தொடு நிற்கப் பெறும். ஏத்தல் என்பது, தலைவனை உயர்த்துக் கூறுதல். அது மகளுடைத் தாயர் 'தலைவன் உயர்ந்தான்' என்றவழி மனமகிழ்வராகலின், அவ்வாறு கூறப்பெற்றது; உயர்த்துக் கூறி அறத்தொடு நிற்கப்பெறும். வேட்கையுரைத்தலாவது, தலைவன்மாட்டுத் தலைவி வேட்

173. ஷை-12 (நச். உரை).
174. கலி. 54
175. பொருளியல்-12 (நச்)

கையும் தலைவிமாட்டுத் தலைவன் வேட்கையும் கூறுதல்; வேட்கை கூறி அறத்தொடு நிற்கும். கூறுதலாவது, தலைவியைத் தலைவற்குக் கொடுக்கவேண்டும் என்பதுபடக் கூறுதல். உசாவுதல் என்பது, வெறியாட்டும் கழங்கும் இட்டு உரைத்துழி வேலனோடாதல் பிறரோடாதல் தோழி உசாவுதல். ஏதீடு தலைப்பாடு என்பது, யாதானுமோர் ஓர் ஏதுவை இடையிட்டுக் கொண்டு தலைப்பட்டமை கூறுதல். உண்மை செப்புங்கிளவியாவது, படைத்து மொழியாது பட்டாங்குக் கூறுதல். ' ''அவ்வெழுவகைய' என்றதனால் உண்மை செப்புங்கால் ஏனைய ஆறு பொருளினுட் சில உடன் கூறி உண்மை செப்பலும், ஏனைய கூறுங்காலும் தனித்தனி கூறாது இரண்டு மூன்றும் உடனே கூறுதலும் கொள்க'' என்பர் நச்சினார்க்கினியர்.

ஐங்குறுநூற்றுத் தலைவியொருத்தி தலைவனோடு கற்புக் கடம் பூண்டொழுகுங் களவுக் காலத்தே அஃதுணராத பிறர் தலைவியை மணங்கோடற்பொருட்டுத் தமரிடம் மகட்பேசி வருவாராயினர். இதனை அறிந்த தலைவி இந்நிகழ்ச்சி தனக்கும் தன் குலத்திற்கும் கேடு பயக்குமே என்றஞ்சிப் பெரிதும் மனங் கவன்றவளாயிருந்தனள். தலைவியின் வருத்த நிலை கண்ட செவிலி இவள் வருத்தத்திற்குக் காரணம் என்னை என்று தோழியை வினவ, தோழி தலைவியின் கருத்தினையும் உணர்ந்து உண்மையுரைக்குமாற்றால் அறத்தொடு நிற்கின்றாள்.

அன்னாய் வாழிவேண் டன்னையென் தோழி
நனிநாண் உடையள் நின்னும் அஞ்சும்
ஒலிவெள் ளருவி ஓங்குமலை நாடன்
மலர்ந்த மார்பின் பாயல்
துஞ்சிய வெய்யள் நோகோ யானே.[176]

[நனி - மிகவும்; நின்னும்-நின்னையும்; மார்பின் பாயல் மார்பாகிய படுக்கை; வெய்யள் - விருப்பமுடையவள்; நோகு - நோகின்றேன்]

இதன்கண் மலைநாடன் ஒருவன் மார்பில் துயிலும் விருப்பம் உடையாள் எனக் குறிப்பிட்டதனால் மலைநாடன் ஒருவனுக்கு இவள் கற்புக்கடம் பூண்டுவிட்டாள் என்பதும், 'யான்நோகு' என்பதனால் அந்நிகழ்ச்சிதானும் பாலதாணையின் நிகழ்ந்தது

176. ஐங்குறு - 205.

என்பதும் தாமே போதருகின்றன. மேலும் 'யான் நோகு' என்பதனால் செவிலியே இச்செய்தியை நற்றாய் முதலியோர்க்குணர்த்தி அவரை உடன்படுவித்து இவளை அவற்கீந்து இவள் வருத்தம் போக்குமாறு வேண்டலும் பெறப்படும். இனி 'ஒலி வெள்ளருவி ஓங்கு மலை நாடன்' என்பதனால் தலைவன் பெரும் புகழும் பெருந்திருவும் உடையான்; ஏசாச் சிறப்பின் இசை விளங்கு பெருங்குடித் தோன்றல் என்று உணர்த்துகின்றாள். 'ஒலி வெள்ளருவி' என்றது மண்தேய்ந்த பெரும் புகழையும், 'ஓங்குமலை நாடன்' என்றது, உயர்குடிப்பிறப்பையும் குறிப்பாக உணர்த்தின. இப்பாடலில் 'உண்மை செப்பல்', 'வேட்கையுரைத்தல்', 'ஏத்தல்' என்ற மூன்று வகை அறத்தொடு நிலையும் வருதல் காண்க. குறிஞ்சிப்பாட்டில் இந்த ஏழுவகைளில் ஆறு வகைகள் ஒருங்கே வரும் சிறப்பினை அப்பாடலைப் பயின்று அறியத்தக்கது.

அறத்தொடு நிற்றலை அகப்பொருள் நூல்கள் பலப்பல வகையாகக் கூறும். இவ்வாறு அறத்தொடு கூறும் உரைகளில் எல்லாம் இக்களவொழுக்க நிகழ்ச்சியினால் எவரும் எவரிடத்தும் குற்றம் காணா வகையாகத்தான் கூறப்பெறும். அறத்தொடு நிலைக் கூற்றுகள் தலைவியாலும் தோழியாலும் படைத்து மொழிவதான வெறும் பொய்மொழிகளாக இருக்கின்றமையின் அங்ஙனம் அவர் பொய்புணர்த்துக் கூறுதல் அறத்தொடு பொருந்துமோ என வினவலாம். பாலதாணையால் நடைபெற்ற இந்நிகழ்ச்சியினை நிகழ்ந்தவாறே வெளிப்படையாகக் கூறப்புகின், நற்றாய் முதலிய உறவினர் உண்மையறியாமையான் கூறுவாரையும் வெகுள் வராதலாலும், இஃது எவர்க்கும் தீங்கு பயவாத நிலையில் இருப்பதனால் அதனை ஒளித்துரைத்தேனும் பாதுகாத்து நிற்பது நன்றேயாமாதலாலும் அவை உண்மையல்லாவிடினும் பொய்யுரைகள் ஆகமாட்டா. காரணம் இதனால் பழியும் பாவமும் ஒருவருக்கும் ஏற்படுவதில்லை.

> பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கும் எனின்.[177]

என்பது வள்ளுவம்.

அறத்தொடு நிற்றல் என்ற நுண்துறைபற்றி 51 பாடல்கள் சங்க இலக்கியத்துக் காணப்பெறுசின்றன. இத்துறையின் கூறுபாடுகளையெல்லாம் நன்கு விளக்கும் முறையில் சில பாடல்கள்

177. குறள் - 292.

அமைந்துள்ளன. ஐந்திணைக் களவுத் துறைகளுள் இத்துறை முதற் பெருஞ் சிறப்புடையது. இதனாலன்றோ ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ்மொழியின் தனி இலக்கிய மதிப்பை அறிவுறுத்த விரும்பிய கபிலர் பெருமான் இத்துறையில் குறிஞ்சிப் பாட்டை யாத்து அழியாப் புகழ் பெற்றார்.

## X. ஒருவழித்தணத்தல்

களவு ஒழுக்கத்திலேயே கருத்தீர்க்கப்பெற்றுப் பகலும் இரவுமாகத் தலைமகன் குறியிடம் போந்து தலைமகளோடு பலகாலம் கூட்டம் நிகழ்த்தி வந்தமையால் அவன்தன் மறைவொழுக்கம் வெளிப்பட்டு அலராக, அஃதறிந்த தலைமகன் தோழியின் விருப்பத்திற்கிணங்கச் சிலகாலம் அவ்வலர் அடங்குமாறு கூட்டம் நீங்கி ஒதுங்கி வேறிடத்துச் சென்று உறைவான். இவ்வாறு தலைவன் தலைவி காணாத நிலையில் நீங்கி நிற்றலை அகப்பொருள் நூல்கள் 'ஒருவழித்தணத்தல் என்று குறிப்பிடும். தொல்காப்பியர் இதனை இட்டுப்பிரிவு' எனக் குறிப்பர்.[178] தணத்தல் - பிரிந்திருத்தல். இவ்வொருவழித்தணத்தலைத் திருக்கோவையார் பதின்மூன்று துறைகளாகப் பிரித்துப் பேசும்.[179] நம்பியார் இதனைச் செலவறிவுறுத்தல், செலவுடன்படாமை, செலவுடன் படுத்தல், செலவுடன் படுதல், சென்றுழிக் கலங்கல், தேற்றியாற்றுவித்தல், வந்துழி நொந்துரைத்தல் என்று ஏழுவகையாகப் பிரித்துப் பேசி[180] அதன் விரிவாகப் பன்னிரண்டு கிளவிகளைக் கூறுவர். இந்தப் பன்னிரண்டு கிளவிகளையும் மேற்குறிப்பிட்ட ஏழு வகையினுள்ளும் அடக்கிக் காட்டுவர்.[181]

ஒருவழித்தணந்த தலைவன் ஒருவன் இவ்வாறு கூறுகின்றான்

பொழில்தரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே

178. களவியல் - 21. அடி 6 (இளம்)
179. திருக்கோவையார்-ஒருவழித்தணத்தல் முன்னுரை.
180. நம்பி அகப்.- 167
181. ஷை - 168

முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
எழுதருமின் னிடையே எனையிடர் செய்தவையே[182]

[பொழில் - சோலை; பழுது - தீங்கு; பணைத்த - பருத்த; புரை - ஒத்த; முரிபுரு- வளைந்து நெளிகின்ற; எழுதுஅரு - எழுதுதற்கு இயலாத; இடர் - துன்பம் ]

''சோலையிலுள்ள நல்ல மலரும், அம்மலர்களினுடைய புதுமணம் விரிந்த மணலிடமும், ஆங்குக் கண்ட என் அருமைத் தலைவியின் தீங்கில்லாத இன்சொல்லும், பருத்த இளைய அழகிய கொங்கை களும், முழுமதிக்கு நிகரான திருமுகமும், வளைந்து நெளிகின்ற வில் போன்ற இரண்டு புருவங்களும், எழுத இயலாத அரிய மின்னலையொத்த இடையுமே என்னை மயங்க வைத்து இவ்வாறு இடர் செய்தவையாகும்'' என்கின்றான். எனவே, 'மலரே மணலே மொழியே முலையே முகமே இணையே இடையே எனை இடர் செய்தவையே' என்று தலைவன் தன்னை இடர் செய்தவற்றை நீடு நினைந்து ஒருவழித்தணந்து ஓரிடத்திலிருக்கின்றான் என்று இப்பாட்டால் புலனாகும்.

ஐங்குறுநூற்றுத் தலைவன் ஒருவன் ஒருவழித்தணந்து திரும்புகின்றான். அவனை நோக்கித் தோழி கூறுகின்றாள்:

யாங்குவல் லுநையோ ஓங்கல் வெற்ப
இரும்பல் கூந்தல் திருந்திழை அரிவை
திதலை மாமை தேயப்
பசலை பாயப் பிரிவு தெய்யோ.[183]

[யாங்கு - எவ்வாறு; வல்லுநையோ - செய்ய வல்லவன் ஆயினையோ; ஓங்கல் - உயர்ந்த; இரும் - கரிய; பல் - பல வாகிய; அரிவை - பெண்; திதலை - தேமல்; பாய - மிக; தெய்ய, அசை]

''தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றது திங்களில் தீதோன்றி யாங்குத் தம்மை மருட்டும் என்று கூறுவாள் 'யாங்கு வல்லுநையோ?' என்று வினவுகின்றாள். பண்டெல்லாம் தெளி வகப்பட இனியன இயம்பியும் தீராத் தேற்றம் செய்தும் அவளை அளிசெய்து போந்த அருட்கடலாகிய தலைவன்பால் இந்த வன்கட் செயல்தான் எவ்வாறு தோன்றியதோ என்று வியப்பாள் இவ்வாறு வினவுகின்றாள். 'ஓங்கல் வெற்ப' என்றதனால்

182. சிலப் - கானல்வரி 14
183. ஐங்குறு - 231

தலைவன்பால் உயர்குடிப்பிறப்பும் உருவும் திருவும் ஆற்றலும் பிறவும் உடைமை குறிப்பித்தபடியாகும். இத்தகைய பெருந் தகையாளன்பால் கண்ணோட்டமின்மை இழுக்கு என்பதைச் சுட்டி, இவ்வாறு ஒழுகுதல் தகாதெனக் கழறியதாகவும் கொள்ளலாம்.

ஐங்குறுநூற்றுத் தலைவன் ஒருவழித் தணந்துழி ஆற்றா ளாகிய தலைமகளை மற்றொரு தோழி ஆற்றுவிக்கின்றாள். அஃதாவது, தலைவன் களவொழுக்கம் நிகழ்த்தியபொழுது ஊரின்கண் ஆங்காய்கு அம்பல் தோன்றியது. அதனை அறிந்தவன் அஃது அலராகாது அடங்குதற்பொருட்டு ஒரு சில நாள் தன் மனையிலேயே தங்கி விடுகின்றான். அப்பிரிவினை ஆற்றாது தலைவி பெரிதும் வருந்துகின்றாள். இந் நிலையில் தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள்.

கானலம் பெருந்துறைக் கலிதிரை திளைக்கும்
வானுயர் நெடுமணல் ஏறி ஆனாது
காண்கம் வம்மோ தோழி
செறிவளை நெகிழ்த்தோன் எறிகட நாடே.[184]

[கானல் அம்பெருந்துறை-கடற்கரைச் சோலையிடத்த தாகிய அழகிய பெருந்துறை; கலி-ஆரவாரிக்கும்; திரை-அலைகள்; வான் உயர்-வானின்கட் செல்வது போன்று உயர்ந்த; ஆனாது-இடைவிடாது; வம்மோ-வருவாயாக; நெகிழ்த்தோன்-கழலச் செய்தவன்.]

தலைவனுடைய பொருளைக் காணின் தலைவனைக் கண்டாற் போன்று ஆறுதலுண்டாகுமாதலின் 'அவன் நாட்டைக் காண் போம், என்று தோழி தலைவியை அழைக்கின்றாள். இத்துறை பற்றி வெவ்வேறு போக்கில் எழுந்த பல பாடல்கள்[185] ஐங்குறு நூற்றினை அழகு செய்கின்றன.

வள்ளுவர் படைத்த தலைமகன் ஒருவன் சிலகாலம் ஒருவழித் தணந்து திரும்புகின்றான். தோழி அவனை நோக்கி 'நீவிர் தணந்த ஞான்று எம்மை நினைத்திரோ' என்று வினவுகின்றாள். அதற்கு அவன்,

184. ஷை-199.
185. ஷை 214, 232, 233 என்பனவற்றையும் படித்து மகிழ்க.

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்.[186]

[உள்ளுவன்-நினைப்பேன்: மறப்பு-மறத்தலை; அமர்-போர்.]

''மறந்ததைத்தானே உள்ளுவது முடியும்? ஒருபோது மறவாதிருப்பின் அப்பொருளை உள்ளுவது எப்படி முடியும்? முடியாதன்றோ? ஆகையால்,யான் தலைவியை உள்ளுவேனல்லேன்'' என்று தலைவன் தலைவியை உள்ளாமைக்குக் காரணம் கூறுகின்றான்.

தலைவன் ஒருவழித் தணந்தஞான்று அவனைத் தோழி இயற்பழிக்கும்[187] என்று அஞ்சி அவள் கேட்குமாறு தன்னுள்ளே கூறுகின்றாள் வள்ளுவர் படைத்த தலைவி.

கண்ணினுள் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியர்எம் காத லவர்[188]

[பருவரார் - வருந்துவது செய்யார்; நுண்ணியர் - நுட்ப மானவர்.]

''எம் தலைவர். காணப்பெறாமையால் சேய்மைக்கண் போயினார் என்று கருதுவார் கருதுக, அவர் எம் கண்ணகத்து நின்றும் அகலார்; யாம் அறியாது கண்களை இமைத்தாலும் அதனால் அவர் வருந்துவதும் இல்லை. ஆகலால், அவர் பிறரால் அறிய முடியாத நுட்பத் தன்மையுடையார்'' என்று கூறுகின்றாள். ''எப்போதும் அவர் எம் கண்ணினுள் உள்ளாராகலின், யாம் கண்ணினை அஞ்சனத்தால் எழுதுவதும் செய்யோம். மையெழுதும் காலம் வரையிலும் அவர் மறைத்திருத்தலை யாம் பொறுக்கலாற்றோம்'' என்கின்றாள்.

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரபாக் கறிந்து.[189]

[கரபாக்கு-கரத்தல் (தொழிற்பெயர்)]

''அவர், என் நெஞ்சினுள்ளும் உறைவதால் வெம்மையுள்ள பொருளையும் உண்பதற்கு அஞ்சுகின்றோம். அவர் வெய்துறலை யாம் பொறுக்கலாற்றோம்'' என்று மேலும் கூறுகின்றாள்.

186. குறள்-1125.
187. இயல்-தன்மை; பழித்தல்-பழிப்புள்ளதெனக் கூறுதல். அதாவது தலைவனது தகவின்மையைக் கூறுதலாம்.
188. குறள்-1126.
189. ஷை-1127

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து.[190]

[வெய்து உண்டல்] வெம்மையுள்ளதாக உட்சொள்ளுதலை; வேபாக்கு-வேதல் (தொழிற் பெயர்)].

இங்ஙனம் இலக்கிய நயம் தோன்றக் கூறும் பல குறள்மணிகளை வள்ளுவத்தில் கண்டு மகிழலாம்.

உடன் போக்கு நெறி தலைவனுக்கு அறநெறியாகாதென்று அறிஞர் ஒதுக்குவராதலால், அது பெரும்பாலும் தலைமகனுக்கு நிகழமாட்டாது.[190] ஆகவேதான் அலர் வெளிப்பட்டுத் தோழி அறத்தொடு பட்டதன்[192] பின்னர்த் தலைவனுக்கு நிகழும் நிலைகளை,

பட்ட பின்றை வரையாக் கிழவன்
நெட்டிடை கழிந்து பொருள்வயிற் பிரிதலும்
பொருள்வயிற் பிரியா தொருவழித் தணத்தலும்
புரைவ தென்ப கற்பா லான.[193]

[பட்ட பின்றை] அறத்தொடுநிலை நின்ற பின்னர்; நெட்டிடை-பல காதமும்; புரைவது-பொருந்துவது].

என்று கூறுவர் இறையனார் களவியலாசிரியர். இவர், இரவுக்குறி நிகழ்ச்சிக்குப் பின்னர்த் தலைவனுக்கு நிகழும் நிலையவாயிருக்கும் 'ஒருவழித் தணத்தல்', 'உடன்போக்கு', 'வரைந்து கோடல்' என்ற மூன்றனுள்ளும் 'உடன் போக்கு' என்பதை ஒரு முதன்மையாக எடுத்துக் கூறாமல் ஒருவழித் தணத்தலும். வரைந்துகோடற்கேது வாகிய பொருள் வயிற் பிரிதலுமான ஏனை இரண்டினை மட்டிலுமே எடுத்துக் கூறுவாராயினர். இங்ஙனமே, அதன் உரை யாசிரியரும்,

வெளிப்பட்ட பின்றையும் உரிய கிளவி [194]

என்னும் நூற்பாவின் உரையில் 'உம்மையால் உடன் போக்கும் உரித்தாமாறு' என்று அவ்வுடன்போக்கினை ஒரு முதன்மைப்பொரு ளாக எடாது உம்மையால் தழுவினமையும் ஈண்டு அறியப்பெறும்.

அங்ஙனமாயின், அகப்பொருள் நூல்கள் எல்லாம் ஒருவழித் தணத்தலைப்பற்றி மிகச் சிறுபான்மையாகவும் உடன் போக்கினைப்

190. ஷை-1128.
191. அடுத்த தலைப்பில் இதனைத் தெளிவாக்குவோம்.
192. அறத்தொடு நின்ற பின்னர்.
193. இறை. கள- 25.
194. இறை. கள- 23

பற்றி மட்டிலும் மிகப் பெரும்பான்மையாகவும் நுவலக் காரணம் என்ன என்று வினவலாம். உடன் போக்கு தலைவன் தலைவியர்க்குக் கிளர்ச்சி தரும் செயலேயன்றி சுற்றுப் புறத்தாரும் பிறரும் அதுபற்றிப் பேசுவதற்குச் சுவையாகவும் இருக்குமாதலின் ஒருவழித் தணத்தலைப் பற்றிய துறைகளும் துறைச் செய்திகளும் மிகக் குறைவாகவும், உடன்போக்குபற்றிய துறைகளும் துறைச் செய்திகளும் மிகப் பெரும்பான்மையாகவும் அமைவனவாயின. இங்ஙனம் நூல்களில் காணப்பெறும் சிறுபான்மை பெரும்பான்மை கட்கேற்ப, எடுத்துக்கொண்ட பொருள்களின் நன்மை தீமைகளையும் முதன்மைக் கடமைகளையும் தேர்ந்து துணிதலும் அறுதியிடலும்எவ்வாற்றானும் பொருந்தாது. எனவே, இரவுக்குறி நிகழ்ச்சிக்குப் பின்னர் அலரெழுந்தமையறிந்த தலைவன் ஆண்டும் வரைதல் தெளியானாயின், 'அவனுக்கு' ஒருவழித் தணத்தல்' நிகழ்வதே அற நெறியாகும் என்பதோடன்றி உடன்போக்கு நிகழ்தல் ஆகாதென்பது தெற்றெனப் பெறப்படும்.

**இதன் இன்றியமையாமை:** இனி, இவ்வாறு முடிக்கப்பட்ட முடிவுக்குச் சான்றாய் நின்று அரண் செய்வதான வேறு காரணமும் இறையனார் அகப் பொருளுரையில் கூறப் பெறுகின்றது. அது,

''இங்ஙனமே இவள் (தலைவன் உடன்பட்டது போலவே உடன் போக்குக்கு) உடன் படும். உணர்ந்து வைத்துத் (தோழி) தாயுழைச் செல்லும். தாயும் மகளது வேறுபாடு கண்டு உற்றதறியாது நற்றிறம் படர்ந்து[195] செல்லுகின்ற காலமன்றே, ஆதலாற் கண்டவாறே, 'அன்னாய், என்மகட்கு இவ் வேறுபாடு எற்றினான் ஆயிற்று? எனக்குச் சொல்லாய்' என்னும்...அதற்குத்(தோழி) அறத்தொடு நிற்கும். நிற்க, செவிலித்தாய் இன்புற்ற மனத்தளாய், 'என் மகள் பெரிது அறிவுடையளே காண்' என்று, அவ்வாறு நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும். நற்றாயும் இன்புற்ற மனத்தளாய்த் தந்தைக்கும் தனையன்மார்க்கும் அறத்தொடு நிற்கும், நிற்க, அவரும் அவளது அறிவும் ஆசாரமும் கேட்டு இன்புற்ற மனத்தராய்ச் சொன்மறுத்துத் தலையிறைஞ்சி நிற்பர். இங்ஙனம் சென்று மாட்சிமைப்பட்டுக் காட்டுமேயெனின், பெரிதும் மாட்சிமைப்பட்டுக் காட்டிற்று. காட்ட 'இவள் நீரில் ஆற்றிடைப் போய் வருந்தும் குறையென்னை?' என்று தலைமகனைச் செல

194. நற்றிறம்-நன்மைக்குரிய வகையில் படர்ந்து-தாவி.

வழுங்குவிக்கும். இது கேட்ட தலைமகன் செல வழுங்கும். அழுங்க, 'நாளை நீ வரைந்து புகுதும்' என்றுதவிர்த்துப் பெயர்ந்து தலைமகளுழை வந்து, 'நிழலும் நீரும் உடயவாய்க் கானம் தண்ணிய வானாற் சேறும்' என்று உடன்போக்கு அழுங்குவித்த விடத்துத் தலைமகனும் அந்நாள் வரைவொடு விரைந்து புகுவானாம். இது வெளிப்பட்ட பின்றைக்கிளவியும் உரியவாயினவாறு."[196] என்பது.

அலரறிந்த தலைமகட்கு வேறுபாடு என்பது எவ்வாற்றானும் விளைந்தே தீரும். அதனை அவள் எவ்வளவுதான் உள்ளடக்கி வைத்திருந்தாளாயினும் அஃது எஞ்ஞான்றும் அவளைச் சூழ்ந்து கொண்டே இருக்கும் செவிலித்தாய் முதலியோர்க்கு எப்படியோ ஒருநாள் எவ்வாறேனும் புலப்பட்டே ஒழியும். ஒழியவே, அப்புலப் பாடுகாணும் செவிலித்தாயர் முதலியோர் கட்டாயம் அவள் பருவத் திற்கு ஐயுறாதிரார் அங்ஙனம் ஐயுற்றவர் அவள் காதல் தோழியை வினவாதும் இரார். தோழியும் அவர்களிடம் தன் தலைவிக்கு நிகழ்ந்த வேறுபாட்டுண்மையை எவ்வகையிலேனும் எடுத்துரைக் கவே செய்வாள். வாயில்வழி உண்மையை அறிந்த பெற்றோரும் தலைவியை அவளுடைய காதல் தலைவனுக்கு எவ்வாற்றானும் திருமணம் செய்விக்கவே முயல்வர். எனவே, தலைவன் உடன் போக்கினை மேற்கொள்வதற்குச் சிறிதும் இடமே இல்லை என்பது எட்டுணையும் ஐயமின்றித் துணியப்பெறுகின்றது. தலைவியின் பெற்றோர், மற்றோர், தலைவி, தோழி இவர்கள் நுண்ணுணர் வுடன் இல்லாதவிடத்து எங்கோ மிகச் சிறுபான்மையே உடன் போக்கு நிகழலாம். எனவே, அலருணர்ந்த தலைமகனுக்கு உடன் போக்கு இங்ஙனம் மேற்கொள்ளப் பெறாது கழிந்தொழியவே, இனி அவனால் கட்டாயமாய் மேற்கொள்ளற்பாலதாயுள்ளது ஒருவழித் தணத்தலே' யாகும் அல்லவா?

இதன் மேன்மை : இனி இவ் 'ஒருவழித் தணத்தல்' தலைவனுக்கு அறநெறியால்நின்று நன்மை பயப்பதையும் ஆராய்வோம். ஊரில் எழுந்த அலரறிந்தவுடனே அவ்வலர் அடங்குமாறு தலைவன் ஒருவழித் தணந்து நிற்கின்றான் என்பதொன்றே அஃது அறநெறியாகும் என்பதனை நன்கு விளக்க வைக்கும். தலைவியின் காதல் கூட்ட மேன்மையும் அருமையும் அதனை எளிதில் பெற மாட்டாது தனித்திருந்து வருந்தும் தலைமகன் ஒருவனுக்கே செவ்வையாய்ப் புலப்பட்டு விளங்கும். இன்னும் அலர் எழுந்த தென்று கேட்டுத் தன் தலைவியைக் குறியிடம் பெற்றுக் கூடப்

196. இறை-களா. 23 (உரை)

பெறாத தலைவனோ இனித் திருமணம் செய்து கொள்ளும் நிலையில் உள்ளான். எனவே, அவன் தனது திருமணத்தால் பெறப் போவதோர் இன்பத்தைச் சிறப்பாகப் பெற விரும்பு கின்றானாதலின் அதனைப் பெறுவதற்கு முன் தலைவியைக் கூடப்பெறானாய்ப் பிரிந்து வருந்தும் நிலையிலும் உள்ளான். இங்ஙனம் பிரிந்து வருந்தும் அவன் உள்ளமும் துன்பமாய் மாறி விடுகின்றது. அதன் பின்னர் அவன் அத்துன்பத்திற்கு மாறான இன்பம் என்பதில் ஒரு சிறிது தோன்றப்பெற்றாலும் அதனைப் பேரின்பமாக நுகர்ந்துணரும் சுவைத்த நிலை அவனிடம் உண்டா கின்றது. இதனை நன்குணர்ந்த வள்ளுவப் பெருந்தகையும்,

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய்,[197]

என்று எடுத்துரைத்தார். காதலுணர்ச்சியை நுகர்தற்கு இடை யூறாக விருக்கும் அலர் பிரிவு முதலியவற்றால் அவ்வுணர்ச்சி மேன் மேலும் பெருக்கெடுக்கின்ற உண்மையை,

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்.[198]

[நுதுப்புதல்-அவித்தல்]

என்று மற்றோர் உவமை வாயிலாகவும் விளக்கினார் அப்பெருந் தகை. இந்த இரண்டு குறள் மணிகளாலும் பிரிவு முதலியவை எவ்வளவுக் கெவ்வளவு மிகுதியாய் உண்டாகின்றதோ, அவ் வளவுக் கவ்வளவு காதலர்கட்கு அன்பும் வேட்கையும் முன்னிலை யினும் பெருகி உண்டாகும் என்பது நன்கு தெளிவாகின்றது. ஆகவே, திருமண இன்பம் சிறந்து தோன்ற வேண்டுமாயின், அத் திருமணத்திற்கு முன்னர்க் காதலர்கள்அலர் காரணமாக ஒருவழித் தணந்து நிற்றலும் முறையே யாகின்றது. இத்தகைய இடையீடு நேர்தல் இயல்பும் ஆகும் என்பதையும் நாம் உணர்தல் வேண்டும்.

**இது தலைவி காரணமாக நிகழ்தல்:** ஒரு வழித்தணந்து நிற்கும் நிலை தலைவியால் நிகழுமேயன்றி தலைவனால் நிகழ்வ தில்லை. ஆயினும் இறையனார் களவியல்,

களவினுள் தவிர்ச்சி கிழவோற்கு இல்லை[199]

என்றுகூறுகின்றது. இதன் உண்மைக்கருத்துதான் யாது? தலைவன்

197. குறள்-1147.
198. குறள்-1148
199. இறை. கள. 33

ஒரு வழித்தணந்து நிற்கின்றமைக்கு, ஊரவர் அலர் மொழிக்கு அஞ்சிக் குறியிடத்துக்கு வரமுடியாத தலைவியே காரணம் அவளன்றித் தலைவன் காரணம் ஆவதில்லை. தோழியும் தலைவியும் குறியிடத்திற்குக் வரக் கூடுமாயின், தலைவன் யாதொரு தடையும் அச்சமும் இன்றிக் கட்டாயம் களவு நிகழ்த்திக் கொண்டே இருப்பான். அலருக்குப் பெண்ணுள்ளம் அஞ்சுமேயன்றி ஆணுள்ளம் அஞ்சாது திருமணம் முடியும் அளவும் உள்ள களவுக் காலத்தில் அவன் எஞ்ஞான்றும் பிரிதற்கு விரும்புவதில்லை. இதனைத் தொல் காப்பியனாரும்,

> வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும்
> ஞாங்கர்க் கிளந்த மூன்றுபொரு ளாக
> **வரையாது பிரிதல் கிழவோற் கு இல்லை**[200]
>
> [ஞாங்கர்-முன்பு, மூன்று என்றது, ஓதல் பகை தூது காரணமாகப் பிரியும் பிரிவுகளை]

என்று திட்டவட்டமாய்க் கூறியுள்ளார். ஆகவே, களவுக் காலத்தில் தலைவன், ஒருவழித் தணந்து நிற்றலுக்குத் தலைவியினாலே ஆவதல்லது தலைவனால் அன்று எனவே, இறையனாரின் நூற்பாவினால் 'களவொழுக்கம் நிகழும் வரையில் இடையீடு என்பது தலைமகன் ஏதுவாக நிகழ்தல் இல்லை; ஆனால் தலைமகள் ஏதுவாக நிகழ்தல் உண்டு' என்பதே நாம் கருத்திலிருத்த வேண்டிய தொன்றாகும்.

ஆகவே, மேற்கூறியவற்றால் அலரெழுந்த காலத்தில் வரைந்து கோடல் இல்லாத தலைவனுக்கு நிகழவேண்டியனவாகவுள்ள 'ஒருவழித்தணத்தல்', 'உடன்போக்கு' என்னும் இரண்டனுள்ளும் ஒருவழித்தணத்தலே அறநெறிக்கும் ஆன்றோர்தம் புலனெறி வழக்கிற்கும், முறைக்கும், இயல்புக்கும் மாறாகாத வகையில் நிகழ்தல் சிறப்புடையது என்பது தெளிவாகின்றது.

**சிறந்த பிரிவு நிலை :** ஒருவழித்தணத்தலே களவொழுக்கத்தின் சிறந்த பிரிவு நிலையாகும். ஒருவழித்தணந்து நிற்கும் தலைவன் தலைவியை யாதோர் இடையூறுமின்றிக் கூடுதற்கான வழியினை நினைந்த வண்ணமாய் இருப்பான். இப்பிரிவு அவனுக்கு மிகக் கொடியதாக இருக்கும். தலைவியின் கூட்டச் சிறப்பினை உள்ளுந்தோறும் அவனிடம் ஆராத பேரன்பு குமிழி

200. களவியல். 51 (இளம்).

யிட்டவண்ணம் இருக்கும். இடையூறுகளின்றித் தலைவியைக் கூடும் நிலையை ஆராய ஆராய அவன் மனமும் அறிவும் விரிவடையும். இவ்வாறே தலைவியினிடமும் ஏற்படும். தலைவனுக்குத் தலைவியும், தலைவிக்குத் தலைவனும் நீங்கலாக உலகிலுள்ள வேறு எந்தப் பொருளும் அவர்களிடம் இத்துணைப் பேரன்பு விளைத்திடும் என்று கருதுவதற்கில்லை. ஆகவே ஒருவழித்தணத்தலாலுண்டாகும் பிரிவே அன்பையும் அறிவையும் தக்காங்கு விளைத்தற்குரிய அரியதொரு வாய்ப்பாய் அமைகின்றது. வரைந்து கோடலை எல்லையாகவுடைய களவொழுக்கம் முழுமையிலுமே இந்த ஒருவழித்தணத்தல் என்பதுதான் தக்க பயன் தரவல்ல உண்மைப் பிரிவிலக்கணத்தை உடையதாகும். ஏனெனில், திருமணத்திற்கு முன்பதாக நிகழ்வதாகவுள்ள 'வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு' என்னும் மற்றொரு பிரிவு 'திருமணம் செய்து கொள்ளப் போகின்றோம்' என்னும் திருமண நோக்கத்துடன் தலைவன் தலைவியர்களிடையே நிகழ்வதால் அஃது அவர்கட்கு ஒருவித அமைதி நிலையைத் தருவதாகுமேயன்றி இப்பிரிவினைப்போல் முன்னர்த் துன்பமும் பின்னர் அதனாலேற்படும் பயனான பெரிய இன்பமும் தருதற்குரிய உண்மையான பிரிவிலக்கணத்தையுடையதன்று.

**கூடல் இழைத்தல் :** தலைவன், ஒருவழித்தணந்திருந்த பொழுது தலைவி வருந்தும் நிலைகளையெல்லாம் மணிவாசகப் பெருமான் மிகவும் விளக்கமாக அருளிச் செய்துள்ளனர். இப்பிரிவுக்கு அப்பெருமான் 'அகன்றணைவு கூறல்'. 'கடலொடு வரவு கேட்டல்', 'கடலொடு புலத்தல்', 'அன்னமோடாய்தல்', 'தேர் வழி நோக்கிக் கடலொடு கூறல்', 'கூடலிழைத்தல்', 'சுடரொடு புலம்பல்', 'பொழுதுசண்டு மயங்கல்', 'பறவையொடு வருந்தல்', 'பங்கயத்தோடு பரிவுற்றுரைத்தல்', 'அன்னமோடழிதல்', 'வரவுணர்ந்துரைத்தல்', 'வருத்தமிகுதி கூறல்' என்று பதின்மூன்று துறைகளைக் காட்டுவர். இவற்றுள், ஊரவர் அலர் கண்டவுடனே இரவுக்குறியில் தலைவனை அண்மி, 'நீங்கள் சிலகாலம் தலைவியை அகன்று பின்னர் அணைதல் நன்று' என்று கூறுகின்ற 'அகன்றணைவுக் கூற'லும், தலைவன் ஒருவழித்தணந்து வந்த பிறகு அவன் வரவினை உணர்ந்து தலைவியின் நிலையினை அவனுக்கு நிலவுக்கு உரைப்பாள்போல் உரைத்தலான 'வரவுணர்ந்துரைத்த'லும், பின்னர்த் தணந்து வந்த தலைவனை நேராக எதிர்ப்பட்டுத் தலைவியின் 'வருத்தமிகுதி கூற'லும்

தோழியின் கூற்றுகளாகும். ஏனைய பத்தும் இப்பிரிவால் தலைவி எய்தும் உள்ள நிலையினை நன்கு புலப்படுந்துவனவாகும். இவற்றுள் 'கூடல் இழைத்தல்' என்ற ஒன்று மட்டிலும் ஈண்டுக் குறிக்கப்பெறும் சிறப்புடையது.

தலைவன் பிரிவிற்கு ஆற்றாது வருந்தும் தலைவி அவன் திரும்பும் நாளை அறிய நினைந்து அதற்கொரு குறி பார்ப்பாள். இதனைப் பிறரிடம் பார்ப்பாளாயின் தனது களவொழுக்கத்தைத் தானே புலப்படுத்துவதாக அமையும். தோழியின் மாட்டுப் பார்ப்பாளாயின், அவள் தன் தலைவியின் ஆற்றாமையைத் தணித்தற்காக உண்மையல்லாத வேறு ஒன்றையும் கூறிவிடுவாள். ஆதலால் தலைவி தானே அக்குறியினைப் பார்க்க எண்ணித் தன் தோழியோடு விளையாடுமிடம் சென்று ஆங்கு ஒரு பக்கம் மணலாயுள்ள இடத்தை மேடு பள்ளமின்றி நேராகப் பரப்புவாள். அம் மணற்பரப்பின்மீது தான் அமர்ந்து தன்னைச் சுற்றி யொரு கோடு கிழித்து முதலில் ஒரு பெரிய வட்டம் அமைப்பாள். அதன் பிறகு அவள் தன் கண்களைக் கட்டிக்கொண்டு தனக்கு எதிரிலுள்ள அப்பெரிய வட்டக்கோட்டில் ஓரிடத்தைக் குறியிடமாக வைத்து அங்கிருந்து தொடங்கி அவ்வட்டக் கோட்டின் மேலேயே அக்கோடு முழுமையும் சிறு சிறு வட்டங்களாக ஒன்றையொன்று தொடுமாறும் முதலில் தொடங்கிய குறியிடத்தில் வந்து முடியுமாறும் கோடு சுழித்துக் கொண்டே வருவாள். தொடங்கிய இடத்தில் அச்சிறுவட்டத் தொடர் வந்து கூடாமல் பிறழ்ந்து விட்டால், எப்படியாயினும் அது தலைக்கூடுமாறு மீண்டும் திருத்தித் திருத்திச் செய்வாள். இங்ஙனமாக முதலும் கடையும் கூடுமாறு செய்தலைத்தான் கூடல் இழைத்தல் என்று அகப்பொருள் நூல்கள் சுட்டும். இக்கூடல் இழைத்த பிறகு தலைவி தன் கண்களைத் திறந்து பார்த்து அப்பெரு வட்டக்கோட்டின் மேலுள்ள சிறிய சுழிகளை எண்ணிப் பார்ப்பாள். அச்சுழிகள் இரட்டைப் படையாய் வந்தால் தலைவன் அன்று வருவான் என்பதும், ஒற்றைப்படையாய் வரின் அவன் அன்று வாரான் என்பதும் அவள் கொள்ளும் நம்பிக்கை. அதற்காக முதலில் எண்ணும்போது சுழிகள் ஒற்றைப்படையாக வந்துவிட்டால், தலைவி தான் கணக்கிட்டதுதான் ஒருகால் தவறாயிற்றோ என்று மீண்டும் மீண்டும் எண்ணிக் கணக்கிடுவாள். இரண்டு மூன்று முறை எண்ணிப்பார்த்தும் அவ்வொற்றைப்படை எண்ணே வருமாயின் அவள் நெஞ்சம் நைந்து வருந்துவாள். இதனையே,

ஆழி திருத்திச் சுழிக்கணக்கு
ஓதிநை யாமல் ஐய
வாழி திருத்தித் தரக்கிற்றி
யோவுள்ளம் வள்ளலையே[201]

[ஆழி-வட்டம்; ஆழிதிருத்தல்-கூடல் இழைத்தல்; ஐய என்றது, கூடல் தெய்வத்தை; தரக்கிற்றியோ-தர வல்லையோ]

என்று வாதவூரடிகள் கூறுவர். உரையாசிரியர் பேராசிரியரும், . 'கூடலை இழைத்துச் சுழிக் கணக்கைச் சொல்லி யான் வருந்தாமல்' என்று தெளியக் கூறுவர். சங்கப் புலவராகிய கபிலரும் தலைவனைப் பிரிந்த தலைவியர்க்கு இவ்வழக்கம் உண்மையை,

வீங்கிழை நெகிழ விம்மி ஈங்கே
எறிக்கண் பேதுறல் ஆய்கோடு இட்டு
சுவர்வாய் பற்றுநின் படர்சேண் நீங்க
வருவேம் என்ற பருவம் உதுக்காண்[202]

[வீங்கு செறிந்த; விம்மி-அழுது; ஈங்கு-இவ்வாறு; எறி-வெளிவிடும்; பேதுறல்-மயங்குதல்; ஆய்கோடு - கூடல் இழைத்தல்; படர்-துன்பம்; சேண்-நீண்டதூரம்; உதுக் காண்-இதோ பார்.]

என்ற பாடலால் புலப்படுத்துவர்.

### xi. உடன் போக்கு

இரவுக்குறி நிகழ்ச்சிக்குப் பின்னர் ஊரில் அலர் வெளிப்பட்ட தென்று தலைவன் தோழியின்மூலம் அறிந்தவுடன் அவன் தலைவியை வரைந்து கோடலே முறை. அது செய்யானாகில் அவனுக்கு ஒரு வழித்தணத்தலாவது உடன் போக்காவது நிகழும் என்பதாக அகப்பொருள் நூல்கள் குறிப்பிடும். ஒருவழித் தணத் தலை முன்னர் விளக்கினோம். உடன் போக்கென்பதனை ஈண்டு விளக்குவோம். உடன் போக்கென்பது, தோழியின் இசைவு பெற்றுத் தலைமகளை அவர்தம் பெற்றோர் அறியாதவாறு தலைவன் தன்னுடன் அழைத்துக் கொண்டு, நடத்தற்கரிய

201. திருக்கோவை-185.
202. குறுந். 358.

வழியிலே நடந்து தன்னூர்க்குச் செல்லுதல். இதனை ஒருவகைத் திருமண நிகழ்ச்சியாகவே தக்க சான்றுகளுடன் விளக்குவர் இளவழகனார்.[203] திருமணம் என்பது தலைவனும் தலைவியும் தமக்குள் மறைவாய்க் காதலித்து வந்த உண்மையை வெளிப் படையான ஒருவகை நிகழ்ச்சி நன்முறையினால் எல்லார்க்கும் தெரியச் செய்தல்போல, இவ்வுடன்போக்கும் இன்னானை இன்னாள் காதலித்தனள் என்பதை வெளிப்படுத்துகின்றமையின் இஃது ஒருவகைத் திருமணமாகும் என்பதாக அந்த அறிஞர் கூறுவர்.

இந்த உடன் போக்கு எப்பொழுது நிகழும்? அறத்தொடு நின்ற பின்னரும் தலைவி கருதிய காதலுக்குப் பெற்றோர் மணம் முடிக்க மறுத்தாராயின், இவ்வழிச் செலவு நிகழும் என்று எண்ணு வதற்கு இடம் இல்லை. காரணம், அறநிலையை அறிந்த பின்னர் பெற்றோர் மறுக்கார். தம் மகள் கற்பிழுக்கம்பட நடந்து கொள்ளார். எப்படியோ உரியவனுக்கே மணம் முடித்துத் தந்து விடுவர், தருவதில்லை என்ற நிகழ்ச்சி அகத்திணை இலக்கியத் தில் யாண்டும் காணப் பெறாது. இற்செறிப்பு, ஊரலர், வெறி யாட்டு, நொதுமலர் வரைவு என்று இத்தகைய சூழ்நிலைகளைக் கடத்தற்கு அகத்திணை நெறியில் இரண்டு வழி குறிப்பிடப் பெற்றுள்ளன. ஒன்று அறத்தொடு நிலை; மற்றொன்று உடன் போக்கு. இவற்றுள் ஒன்று நிகழின் மற்றொன்று நிகழாது. அறத்தொடு நின்றபின் உடன் போகார். உடன் போய பின்னர் அறத்தொடு நிற்பதால் பயனொன்றும் விளையாது. இரண்டில் ஒன்றுதான் களவு நாடகத்தின் இறுதிக் காட்சியாகும் என்பது அறிந்து தெளியப்படும். ஐங்குறுநூற்றில் ஒரு நிகழ்ச்சியைக் காட்டும் பாடல்:

தன்னமர் ஆயமொடு நன்மண நுகர்ச்சியின்
இனிதாங் கொல்லோ தனக்கே பனிவரை
இனங்களிறு வழங்குஞ் சோலை
வயக்குறு வெள்வேல் அவற்புணர்ந்து செலவே.[204]

[தன்அமர்-தன்னைப் பெரிதும் விரும்பும்; ஆயம்-தோழியர் கூட்டம்; பனிவரை-பனிபடிந்த மலை; இனக்களிறு-பிடியும் கன்றுமாகிய இனத்துடன் திரியும் களிறு; வயக்குறு-ஒளி மிக்க]

---

203. பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை-பக் 101-102.
204. ஐங்குறு-379.

இதில் தலைவி தலைவனோடு சென்று விட்ட நிகழ்ச்சியைத் தோழி நற்றாய்க்கு அறிவித்தாளாக அது கேட்ட அவள் 'நம் மகள் கற்புக்கடம் பூண்ட செய்தியை எமக்கு அறத்தொடு நிலைவகையால் அறிவித்திருந்தால், யாமே, வரைவு எதிர் கொண்டு ஈண்டு நம் இல்லத்திலேயே வதுவை நிகழ்விப்போமே. அதனால் அவளுக்கும் இன்பம்; அவள்பால் அன்புடைய ஆயமகளிராகிய நுமக்கும் பேரின்பம் ஆகும். இப்பொழுதோ அவனோடு புணர்ந்து செல்லுங்கால் வரும் ஓரின்பமேயன்றி ஆற்றிடையூற்றால் அவளுக்கும் துன்பம், அந்நம்பிக்கும் துன்பம், நமக்கும் எல்லையில்லாப் பெருந் துன்பம் ஆயிற்றே. இத்தகைய செயலை எற்றிற்கு மேற்கொள்ள வேண்டும்?' என்று தோழியிடம் நொந்து கொள்வதைக் காணலாம். முன்னரே அறத்தொடு நின்றிருந்தால் உடன் போக்கினை மேற்கோள்ள வேண்டியதில்லையே எனப் பரிந்துரைப்பதையும் பார்க்கலாம்.

உடன் போக்கு நிகழ்வதை அகப்பொருள் நூல்கள் குறிப்பதை ஈண்டுக் காட்டுவாம். இற்செறிப்பு முதலியவற்றால் தலைவிக்கு ஆற்றாமை மிக்குத் துயரம் பெருகிய நிலையில் தோழி, 'இனி இவள் (தலைவி) இறந்து படவும் கூடும்' என்று உணர்ந்து கவன்று, வேறு வழியொன்றும் தோன்றாத நிலையில், இவ்வாறு செய்வாள்: பண்டு தலைவன் வந்து பயின்ற இடத்திற்குச் சென்று, தலைவனை எதிர்ப்பட்டு அவனைத் தொழுது வலஞ்செய்து, 'நும்மால் தலைவி மாட்டுச் செய்யப் பெற்ற தலையளி (பேரன்பு) உண்மையாகவே பலரான் அறியப் பெற்றதுடன், சுற்றத்தாரது சீற்றத்திற்கும் ஏதுவாயிற்று. நீவிர் முன்னரே தலைவியை மணந்து கொள்ள முயலாது, களவொழுக்கத்தே கருத்துக்கொண்டு ஒழுகியதா லன்றோ இந்நிலை ஏற்பட்டது? அல்லதூஉம் ஏதிலரும் வரைந்தெய்துவதற்கு முலைவிலையொடு (பரிசமொடு) புகுந்து பொன்னணிய முந்துற்றார் இனி என் செய்வோம்?' என்று படைத்து மொழிவாள். இந்நிலையில் தலைவன் தன்னாற் செய்யற்பாலது யாது என்று வினவுவான். அதற்குத் தோழி, 'நீரே சூழ்ந்து சொல்லுதிர்' என்று மறுமொழி தருவாள். இதைக் கேட்ட தலைமகன் 'அவளை உடன்கொண்டு போவது துணிந்தேனெனினும், நிழலும் நீரும் இல்லாத அழல் வெங்கானம் ஆற்ற கில்லாள் கொல்லோ?' என்று தன் ஐயப்பாட்டைப் புலப்படுத்துவான். அதற்குத் தோழி, 'அன்ன வெங்கான மெனினும், எம்பெருமாட்டிக்கு நும்மொடு வரப் பெரிதும்

இனியவாம்' என்று மாற்றம் உரைப்பாள். தலைவனும், 'ஆயின் என் காதலியை உடன் கொண்டு போக வலித்தேன்; நீ இதனை அவளுக்கு உணர்த்தி ஆவன செய்க' என்று கூறுவான். தோழியும் அங்ஙனமே செய்து வருவதாகத் தலைவனிடம் விடை பெற்றுச் செல்வாள்.

தோழி தலைமகளுழைச் சென்று அவள் குறிப்பறிந்து, 'எம் பெருமாட்டி, நம் பெருமான் நின்னைத் தம்மொடு தம்மூர்க்குக் கொண்டு செல்லக் கருதுகின்றனர்; நின்குறிப்பு என்னை?' என்று உசாவுவள். அதுகேட்ட தலைவி தன் நாணழிய வரினும் தன் கற்பைக் கைவிடாமை துணிந்து, அவனது உடன் போக்கிற்குத் தான் இசையும் குறிப்பைத் தலை சாய்த்து நிலங்கிளையா நிற்கும் நிலைமையால் வெளிப்படுத்துவாள்.

அளிதோ தானே நாணே; நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே; இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறைத்
தீம்புனல் நெரிதர வீய்ந்துக் காஅங்குத்
தாங்கு மளவைத் தாங்கிக்
காமம் நெறிதரக் கைந்நில் லாதே.[205]

[அளிது-இரங்கத் தக்கது; நாண்-நாணம்; உழந்தன்று-வருந்தியது; வான்-வெள்ளிய; சிறை-கரை; நெரிதர-நெருங்கி அடித்தலால்; வீய்ந்து-அழிந்து; உக்காங்கு-வீழ்ந் தாற்போல; நெரிதர-நெருக்க; கைநில்லாது-போய்விடும்.]

என்ற குறுந்தொகைப் பாடல் உடன் போக்கு உணர்த்திய தோழிக்குத் தலைவி தான் தலைவனுடன் செல்லுதலால் நாண் அகலும் என்று இரங்கிக் கூறுவதாக வந்துள்ளதைக் காண்க. தொல்காப்பியரும்,

உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று[206]

என்ற முன்னோர் கருத்தைத் தம் நூற்பாவில் பெய்து வைத் துள்ளார்.

தலைவி உடன் போக்கிற்கு உடன்பட்டதும் தோழி அதற்கு வேண்டுவன புரிந்து முன்பு இரவுக் குறிபோல ஒருவரும் அறியா வகை அவளைக் குறியிடத்திற்குக் கொண்டு செல்வாள்.

205. குறுந். 148
206. களவியல்-23 (இளம்)

சென்றவள் தலைவனை நோக்கி, 'இவள் நும் அடைக்கலப் பொருள்; அருள் கொண்டு இன்றுபோல் என்றும் பாதுகாப்பாயாக, என்று வேண்டி நீங்குவாள். இதனை அகப்பொருள் இலக்கணம் ஓம் படை என்ற துறையாகக் குறிப்பிடும். ஓம் படை என்பது அடைக்கலத்தைக் குறிப்பது.

'ஓம் படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்'[207] என்ற களவியல் நூற்பாப் பகுதியும் இதனைப் புலப்படுத்தும். இவ்வாறு தலைவி ஓம்படுத்துரைப்பதை,

அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர.[208]

[வனமுலை - அழகிய கொங்கை: பொன்நேர் - பொன் போன்ற; மணி-கருமணி, நீத்தல்-கைவிடல், ஓம்பு-பாது காப்பாயாக]

என்ற நற்றிணைப் பாடலாலும் அறியலாம், குறுந்தொகைத் தோழியின் ஓம்படை இது:

"தாய்உடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு
அன்னாய் என்னும் குழவி போல
இன்னாசெயினும் இனிதுதலை அளிப்பினும்
நின்வரைப் பினள்என் தோழி
தன்னுறு விழுமம் களைஞரோ இலளே."[209]

[உடன்று-மாறுபட்டு; அலைத்தல்-வருத்துதல்; வாய் விட்டு -வாய் திறந்து; வனப்பினள்-புரக்கப்பெறும் எல்லைக் குட்பட்டவள்; விழுமம்-துன்பம்; களைஞர்-நீக்குவார்]

இதில் தோழி தலைவியைப் பாதுகாக்குமாறு தலைவனிடம் கூறுவதைக் காண்க.

மேற்கூறியவாறு தலைவி உடன் செல்லத் துணியும் செயல் எவ்வெப் பொழுது நிகழும் என்பதையும் ஆசிரியர் தொல்காப்பியபு குறிப்பிட்டுள்ளார்.

207. ஷை-24 (அடி-25) (இளம்.)
208. நற். -10
209. குறுந். 397.

ஒருதலை உரிமை வேண்டினும் மகடூஉப்
பிரிதல் அச்சம் உண்மை யானும்
அம்பலும் அலரும் களவுவெளிப் படுக்குமென்று
அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும்.[210]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். இடைவிடாது இன்பம் நுகர்தலோடு மனையறம் நிகழ்த்தும் உரிமையை உறுதியாக விரும்புதலானும், வினை செய்தலில் விருப்புடைய ஆண்மக்கள் பிரிவர் எனக் கருதி அஞ்சும் அச்சம் மகளிர்க்கு இயல்பாதலானும், களவொழுக்கத்தைப் புறத்தார்க்கு வெளிப்படுத்தும் என்று அஞ்சும்படி தோன்றிய அம்பலும் அலரும் ஆகிய இருவகைக் குறிப்பினாலும், தலைமகனது வரவினை எதிர் நோக்கியிருந்த நிலையில் வந்த அவனுடன் அளவளாவுவதற்கு இயலாதபடி இடையூறு நேர்தலானும் உடன்போக்கும் (வரைவும்) தலைவியிடம் தோன்றும் என்பது ஆசிரியரின் கருத்தாகும்.

இவ்வாறு ஒருவரும் அறியாவண்ணம் காதல் தலைவனுடன் தலைவி சென்ற செய்தி பிற்றை ஞான்று வெளிப்பட்டதும் தலைவியின் உறவினர் தலைவன் செயற்கு மிகவும் வெகுண்டு அவ்விருவர் செயலையும் தடுத்தற் பொருட்டுத் திரண்டு வரைந்தெழுவர். இங்ஙனம் இவர்கள் வெகுண்டு எழுவதற்கு முன்பே, தலைவி மறைந்த செய்தியைக் கேட்டதும் செவிலி மயங்கிக் கவலை மேற்கொண்டு தலைவன் தலைவி சென்ற இடைச் சுரத்தை நோக்கித் தேடிப் போவாள் வழியில் எதிர்ப்படும் முக்கோலந்தணரையும் மற்றவரையும் உசாவி அவரால் அவ்விருவரும் அகமகிழ்ந்து சென்று கொண்டிருத்தலையும் அவர்கள் அறநெறியில் நிற்றலையும் அறிவாள். அங்ஙனம் செல்பவள், ஆற்றாமையால் மேற்செல்ல இயலாமல் மீண்டு வருவாள். தலைவியைப் பெற்ற நற்றாயோ செவிலியைப்போல் நெடுந்தூரம் செல்லாளாயினும், தன்னூர்த் தெருவரையிலும் தேடுவதற் குரியவள் என்று கூறுவர் தொல்காப்பியர்.

ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்
தாமே செல்லுந் தாயரும் உளரே.[211]

---

210. பொருளியல்-29 (இளம்)
211. அகத்திணை-37 (நச்)

என்ற நூற்பாவால் இஃது அறியப்படும். "தாயர், எனப் பன்மை கூறித் 'தாமே' எனப் பிரித்ததனால் சேரிக்கு நற்றாய் சேறலும் சுரத்திற்குச் செவிலித்தாய் சேறலும் புலனெறி வழக்கிற்குச்[212] சிறந்ததென்றுணர்க" என்ற நச்சினார்க்கினியரின் உரை விளக்கம் இதனை மேலும் அரண் செய்யும்.

உடன் போக்கினைத் தலைவன் எளிதாக நாடுவதில்லை. களவுப் புணர்ச்சி என்று துணிவுப் புணர்ச்சியைச் சில நாட்களில் முடித்துக் கொள்ள விழைவதில்லை. களவினிற் பலநாள் ஒழுகி இன்புற்ற பின்னரே, இயல்புப் புணர்ச்சி என்னும் வரைவுப் புணர்ச்சியை அவன் மேற்கொள்வான்.[213] அலர் வெளிப்பட்டமையைத் தோழி தலைவனிடம் கூறி அவனை உடன் போக்குக்கு வலித்தபோது அவன் அதனை அத்துணை முறைமையன்று என்று மறுக்கின்றமை,

> உடன்சேறல் செய்கையோ டன்னவை பிறவும்
> மடம்பட வந்த தோழிக் கண்ணும்.[214]

என்ற தொல்காப்பியர் வாக்காலும், 'உடன் கொண்டு சென்மினெனத் தோழி கூறியது கேட்ட தலைவன் இவளை உடன் கொண்டு போதல் எல்லாவற்றாலும் முறைமையன்றென்று தோழிக்குக் கூறுவன்' என்னும் அதன் நச்சினார்க்கினியரின் உரையாலும் நன்கு தெளியப்படும். எனினும், தோழியின் மனப்பாங்கு வேறு. தலைவன் தலைவி இருவர்தம் உள்ளோட்டாங்களையும் ஊரின் புறவோட்டங்களையும் கணித்தறிந்த தோழி இனிக் களவு நீளாது என்பதையும், ஊரலர் தாங்காது என்பதையும், பெற்றோர்க்கும் இதனை உணர்த்த இயலாது என்பதையும் நன்கு உணர்ந்து உடன் போக்கே வழி என்று துணிந்து காதலரை நெறிப்படுத்துவாள். அறத்தொடு நிற்கப் பெற்றோர்க்கு முன்னின்று சொல்லும் துணிவு வேண்டும். இவ்வகைத் துணிவு இளம் மகளிர்பால் எதிர்பார்த்தற்கில்லை. "நீ சின்னஞ் சிறுமியா? பேதை நிலை கடந்து பெதும்பைப் பருவம் எய்திய நீ, வாயில் தாண்டிப் புறத்தே போகலாமா? எனக் கடிந்தேன், எங்கே தாய் தன் களவொழுக்கத்தைத் தெரிந்து கொண்டாளோ என்று எனக்கு

212. புலனெறி வழக்கம்-புலவரால் பாடுதற் கமைந்த புலவராற்று வழக்கம்.
213. ஐங்குறு-6.
214. கற். 5.

அஞ்சி இல்லத்தை விட்டுக் காட்டு நெறி சென்றாள்''[215] என்று உடன் போய ஒரு தலைவியின் செவிலித்தாய் தன் மகளின் அச்சத்தைக் குறித்துக் கவலை கொள்ளக் காண்கின்றோம்.

அக நானூற்றில் ஒரு நிகழ்ச்சி சித்திரிக்கப் பெறுகின்றது. அயலார் மணம் பேச வந்த காலத்துத் தலைவியும் தோழியும் அதனை விலக்கத் தவறி விடுகின்றனர். பின்னர் அறத்தொடு நின்றுக் களவை வெளிப்படுத்தவும் பின்வாங்குகின்றனர். இந் நிலையில் மாற்றான் ஒருவனுக்கு மகளை மணவினைப் படுத்தப் பெற்றோர் ஏற்பாடு செய்கின்றனர். வீடு விழாக் கோலம் காண்கின்றது; முற்றத்தில் புது மணல் பரப்பப் பெறுகின்றது நிலை கைகடந்து சென்று விட்டதை அறிந்த தோழி தலைமகனுக்கும் நிலைமையை அறிவிக்கின்றாள். ஊரைவிட்டு உடன் அகல்தலே மேற்கொள்ள வேண்டிய நெறி என்று அவன் கூறிய துணிச்சலான கருத்திற்கு தோழியும் உடன்படுகின்றாள்.

நனைவிளை நறவின் தேறல் மாந்திப்
புனைவினை நல்லில் தருமணற் குவைஇப்
பொம்மல் ஓதி எம்மகள் மணஎன
வதுவை அயர்ந்தனர் நமரே; அதனால்
புதுவது புனைந்த செயலை வெள்வேல்
மதியுடம் பட்ட மையணற் காளை
...... ...... ...... ...... ......
அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் யானே.[216]

[நனை-அரும்பு; நறவு-தேன் (கள்); மாந்து-பருகி; குவைஇ-குவித்துப் பரப்பி; பொம்மல்-பொலிவு; வதுவை-திருமணம்; மதிஉடம்பட்ட-உடன் போக்கிற்கு இயைந்த; சுரம்-பாலைநிலம்; சேறல்-செல்லுதல்; அயர்ந்தனன்-விரும்பினேன்.]

என்ற அகப்பாட்டில் தோழி தலைமகட்கும் உடன் போக்கை மேற்கொள்ளுமாறு வலியுறுத்துவதைக் காணலாம். களவொழுக்கத்திற்கு அஞ்சாத தலைவியும் தோழியும் நொதுமலர் வரைவுக் காலத்துப் பெற்றோர்க்கு நடுங்குவர் என்பதையும், இந்நடுக்கமே உடன்போக்கில் கொண்டு செல்லுகின்றது என்பதையும் இதனால் அறிகின்றோம்.

215. அகம்-1
216. ஷை-221.

பெண் மக்களின் ஒழுக்கத்திற்கும் பெற்ற தாயே பெருங்காப் பாளியாக அமைகின்றாள். எத்தவறு நேரினும் 'இவள் வளர்த்த அழகு இது' என்று ஊரார் தாய்மீதே பழிசுமத்துதல் இயல்பாக இருந்து வருகின்றது. இது கேட்ட அன்னை நாணுவாளேயன்றிப் பொறுப்பு தனக்கில்லை என்று தட்டிக் கழிக்கும் வழக்கம் அவளிடம் இல்லை. களவில் ஒழுகும் குமரி பெற்றோரை அஞ்சு வாள் எனத் தந்தையையும் உளப்படுத்திப் பொதுப்படச் சொல்லி னும் அது ஈன்றவளையே சிறப்பாகக் குறிக்கும். ஊர்ப் பெண்டிர் 'இன்னவள் மகள்' என்று தாயைச் சுட்டி மகளைக் சுட்டி யுரைப்பதுதான் நம் சமுதாய மரபாக இருந்து வருகின்றது. எனவே, தன் மகள்பற்றி அலர் எழுந்த காலத்து மனங்கசப்ப வளும் மனங் கொதிப்பவளும் தாயே யாவள். உடன்போக்குத் துறைப்பற்றி வரும் பாடல்களையெல்லாம் ஒரு சேரத் தொகுத்து நோக்கினால், அப்போக்கிற்குத் தாயே முதற்காரணமாவாள் என்பது தெள்ளிதின் புலனாகும்.

அழுங்கல் மூதூர் அலர்எழச்
செழும்பல் குன்றம் இறந்தஎன் மகளே[217]

[அழுங்கல்-ஆரவாரம்; செழும்பல்-வளப்பம் மிக்க; இறந்த-கடந்த]

என்று ஐங்குறு நூற்றுத் தாய் ஒருத்தி அலரச்சத்தால் தன் மகள் உடன் போகலாயிற்று என்று கூறினாலும், அலர் கேட்டு அன்னை சீறுவாள் என்ற தாயச்சமே முடிவான காரணம் என்பது உய்த் துணரற்பாலது.

காதற் சுழியில் சிக்கிய குறுந்தொகைத் தலைவி ஒருத்தியின் துணிவு வியத்தற்குரியது.

ஊர்உர் அலர்எழச் சேரி கல்லென
ஆனாது அலைக்கும் அறனில் அன்னை
தானே இருக்க தன்மனை யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
உணலாய்ந் திசினால் அலரொடு சேய்நாட்டு
விண்தொட நிவந்த விலங்குமலைக் கவாஅண்
கரும்புநடு பாத்தி யன்ன
பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே.[218]

217. ஐங்குறு-372.
218. குறுந்-262

[அலர்-பழி மொழி; சேரி-தெரு; ஆனாது-அமையாமல்; அலைக்கும்-வருத்தும்; தயங்க-விளங்க; உணல்-உண்ணல்; ஆய்ந்தசின்-நினைந்தேன்; சேய்நாடு - தொலைவிலுள்ள நாடு; விண்-வானம்; நிவந்த-உயர்ந்த; விலங்கு-குறுக்கிட்ட; கவான்-மலையடிவாரம்; அடிவழி-அடிச்சுவடு]

வயாவும் வருத்தமும் பட்டு, ஈன்று, பால் நினைந்து ஊட்டிப் பருவம்வரை வளர்த்த அன்னையை அறனில்லாதவள் என்கின்றாள். உரக்கக் கடிவதை அலைப்பதாகக் கருதுகின்றாள். அதனால்தான் ஊரில் அலர் எழுவதாகவும் நினைக்கின்றாள். இதுகாறும் தான் வாழ்ந்த மனையை அன்னையின் மனை என்றும், தன்னோடு மகிழ்ந்திருந்த அன்னை தனித்து வருந்தட்டும் என்றும் கருதுகின்றாள். அன்னையுடன் இருக்குங்கால் கிடைக்கும் நல்ல நீரையும் காய் கனிகளையும் வெறுத்துக் காதலனோடு மலைவழிச் சென்று நெல்லிக்காயைத் தின்று கலங்கிய நீரைப் பருகி மகிழ்வதாகச் செப்புகின்றாள். உண்மையில் இது வேண்டாத அச்சமாகும். தாய்க்கு உண்மையை உணர்த்தாது அவளைக் கொடியவள் என்று கடிவது பொருந்தாது. உண்மையை அறிந்த பின்னர் எந்தத் தாயும் துறக்கத் தக்கவளாக நடந்து கொள்ளாள் என்பது இலக்கியத்தில் காணும் உண்மையாகும்.

அகநானூற்றுத் தலைவி ஒருத்தி காதலனுடன் ஏகிய பின்னர் அவள் அன்னை படும் பாட்டையும் அவள் ஆற்றாமையையும் அன்பையும் கபிலர் மிக அழகாகப் புலப்படுத்துவர்.[219] ஊர் மக்கள் இடைவிடாது அன்னையிடம் பழிமொழி செப்புகின்றனர். அதனை அவள் தன் மகளிடம் சொல்ல நினைக்கவில்லை. தன் மகளின் நாணத்திற்கு அஞ்சியே சொல்லவில்லை. மகள் நீங்கிய தன் இல்லத்தைப் பொலிவற்றதாகக் கருதுகின்றாள். 'அன்னை அறியின் இவணுறை வாழ்க்கை எனக்கெளிதாகல் இல்' என மகள் கருதிய அறியாமைக்கு இரங்குகின்றாள். தான் அச்சுறுத்தும் தாயர் வழிவந்தவள் இல்லை எனக் காட்டிக் கொள்ளத் துடிக்கின்றாள். காதலர்கள் பகல் எல்லாம் சுரநெறி கடந்து இரவில் ஒரூரில் தங்குங்கால், அவ்வூருக்குத் தான் முன்னரே சென்று அவர்களை விருந்தாக ஏற்றுத் தங்குமிடம் நல்கி நல்லன்பைப் புலப்படுத்தும் வாய்ப்புக் கிட்டாதா என்று வேணவாக் கொள்கின்றாள். இதனால் களவு நங்கையரே தம் மறையொழுக்கத்

219. அகம்-203.

தால் அஞ்சவேண்டியவர் ஆகின்றனர் என்பதும், அன்னையர் என்றும் அன்புடையார் என்பதும் தெளிவாகும்.

படிகடவா இளநங்கை பிறந்தகத்தைத் துறந்து பெற்றோரை மறந்து முன்பின் அறியா ஆடவனைக் காதற் கொழுநன் என நம்பிக் கரடு முரடான வழியில் உடன் போகத் துணியும்போது அகஇலக்கியம் புதினம் போலும் சாயலையும் விறுவிறுப்பையும் பெறுகின்றது. கற்பவர்கட்கும் கிளர்ச்சியூட்டுகின்றது. காதலர்களின் உடன்போக்கும், மகள் போனபின் நற்றாய் இரங்கலும் புலவர்களின் கற்பனைப் பாய்ச்சலுக்கு வளமான துறைகளாக அமைகின்றன. இத்துறையொன்றில் புலங்கண்டவர் **கயமனார்** என்ற புலவர். இவர் பாடிய இருபத்திரண்டு சங்கப்பாடல்களில் இருபது உடன் போகலும் தாயிரங்கலும் பற்றியவை. 'உடன் போக்கு' என்னும் ஒரு துறையில் பதினேழு அன்னையரின் மன நிலைகளை அற்புதமாகப் படைத்துக் காட்டுகின்றார் இவர். இவை அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்ற மூன்று தொகை நூல்களிலும் உள்ளன. கயமனாருக்கு அடுத்து இத் துறையில் புலமை சான்றோர் **ஓதலாந்தையார்** என்பவர். இவர் ஐங்குறு நூற்றில் மகட் போக்கியவழித் தாயிரங்குபத்து (371—380), உடன்போக்கின்கண் இடைச் சுரத்து உரைத்த பத்து (381—390), மறுதரவுப்[220] பத்து (391—400) என்றதலைப்பு களிலும் பிற தலைப்புகளின் இடையிலும் யாத்த முப்பத்தைந்து பாடல்கள் இத்துறைபற்றியனவாகக் கணக்கிடலாம். காதலர் வழிச் செலவையும் வரவையும் தாயின் அவலத்தையும் வகுத்து வளர்த்து நுனித்துப் பாடும் இவர் தம் கூரியதிறம் புதுமை யுடையது.

உடன்போக்கு பாலை நிலத்திலும் பிற நிலங்களிலும் நிகழலாம்; கோடைக் காலத்திலும் இளவேனில் முதலான பிற காலங் களிலும் நிகழலாம். களவில் உடன் போக்கு பாலையாதல் யாங்ஙனம்? தலைவனும் தலைவியும் உடன் செல்லலைக் குறிஞ்சி என்றன்றோ கூற வேண்டும்? அன்னோர் செல்லும் வழி நிழல், நீர், பூ, இளவேனில் இவற்றின் நலமுடையது என்று புனையப் பெறுதலின் நிலத்தால் பாலை, காலத்தால் பாலை என்று கூறு வதற்கும் இடம் இல்லை. பெற்றோரைப் பிரிந்து செல்லுதலின் பாலை எனலாமோ எனின், புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் என்ற உரிப்பொருள்கள் தலைவன் தலைவியர்க்கிடையே

220. மறுதரவு-மீட்சி.

நிகழும் உரிப்பொருள்களேயன்றி பிறருடன் தொடர்புடையன அல்ல. பாலை என்பது, பிரிதலும் பிரிதல் நிமித்தமும். உடன் போக்கு பிரிதல் நிமித்தத்தின்பாற்படும். உடன்போக்கில் இருவர் கூடியிருப்பினும், இன்னும் மணமாகாமையின், பிரிவோமோ பெற்றோரால் பிரிக்கப்பெறுவோமோ என்ற பிரிவுணர்ச்சி இருவர் தம் உள்ளத்தும் ஒடிக்கொண்டிருக்கும்.

இடைச்சுர மருங்கின் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்கஞர் எய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை[221]

[கலங்கஞர் - மிக்கதுன்பம்; கௌவை - அலர்]

என்ற தொல்காப்பியத்தாலும் உடன் போக்கில் இருவரிடையேயும் உள்ளத் துயர் உண்டு என்பது தெளியப்படும். தலைவன் தலைவியை உடன்கொண்டு செல்லும்பொழுது இடைவெளியில் தலைவியின் சுற்றத்தார் திரண்டு வந்து தலைவனை மேற்செல்லா வண்ணம் தடுத்து நிற்பர். அப்பொழுது தலைவி அவர்களுடைய செயலுக்கு மனம் ஒவ்வாது தன் காதலனைச் சார்ந்து நிற்பள். அதனைக் கண்ட சுற்றத்தார் தலைவியின் செயல் அறநெறிப் பட்டதாதலின், தாம் அதற்கு யாதொரு இடையூறும் விளை வித்தல் கூடாதென்றும், அங்ஙனம் செய்யினும் தலைவி தலைவனை மணம் முடித்துக் கொள்ளுதல் ஒருதலை என்றும் கருதி, அவர்கள் உடன்போக்கிற்கு உடன்பட்டுத் தம் ஊர் நோக்கி மீள்வர். இச்செய்தியை மேற்குறிப்பிட்ட நூற்பா நுவல்வதாகும். அங்ஙனம் தமர் மீண்டதும் தலைவன் தலைவிக்குத் தம்முடைய ஒழுக்கம் தமக்கு மட்டுமன்றிப் பழமையாக வழங்கும் உலகியல் என்று கூறி அவளைத் தெருட்டியும், வழி இளைப்புத் தீர அவளை மருட்டியும் உடன் கொண்டு சென்று தன் பதியை அடைவான்; பிறகு வதுவை மணம் புரிந்து கொள்வான். இவ்வாறு களவுப் புணர்ச்சிக்குரிய தலைவியைத் தலைவன் உடன் கொண்டு செல்லுதல் பண்டைய தமிழ் வழக்காக இருந்தது. அஃது உயர்ந்த அறநெறியாகவும் கருதப்பெற்றது.

“சுரநனி இனிய வாகுக தில்ல
அறநெறி இதுவெனத் தெளிந்தஎன்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே.”[222]

221. அகத்திணை - 44
222. ஐங்குறு - 371

[சுரம் - பாலை நிலம்; நுதல் - நெற்றி]

இதில் தன்மகள் அறநெறி இஃதென உணர்ந்து உடன் போயினமைக்கு மகிழ்ந்து அவள் சென்ற பாலை நிலம் தண்ணியதாருக என்று நற்றாய் வேண்டுவது காண்க. கலித்தொகைத் தலைவி உடன் சென்றதை அறிந்த செவிலி அவளைத் தேடிச் சென்ற பொழுது அவளை இடைச் சுரத்துக் கண்ட முக்கோற் பகவர்,

"இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா ஆறும்மற் றதுவே."[223]

[இறந்த - மிக்க; எவ்வம் - துன்பம்; வழிபடீஇ - வழிபட்டு; அறந்தலைப் பிரியா - அறத்திடத்து நின்று நீங்காத; ஆறு- வழி]

என்று கூறுவதும் அறியப்படும். இக்கூறியவற்றால் அகவிலக்கியம் தமிழ்ச் சமுதாய மனப்பான்மையோடு இயங்குவதைக் கண்டு மகிழலாம். இந்த உடன் போக்கினைத் தொல்காப்பியர் "கொண்டுதலைக் கழிதல்"[224] என்றும் வழங்குவர். இவ்வுடன் போக்குடன் களவொழுக்கம் முடிவடையும். தொல்காப்பியரும் "மறை வெளிப்படுதலும்"[225] என உடன்போக்கிற்குப் பின்னர் நிகழும் மறைவெளிப்பாட்டைக் கற்பு முறையின் தொடக்கமாகக் கூறுவர். திருவள்ளுவரும் 'அலரறிவுறுத்தலுடன்' களவியலை முடித்துக் கற்பியலைத் தொடங்குதல் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

223. கலி - 9
224. அகத்திணை - 14 (நச்)
225. செய்யுளி - 179 (இளம்)

## களவியல் மரபுகள்

களவில் வரும் நிகழ்ச்சிகளை நோக்கின் அவை கற்பனையால் விரிக்கத் தக்கனவாகக் காணப்பெறும். ஆயினும், அவை ஒரு நெறிக்குள் அடங்கியே செல்லும். அந்த நெறியில் சில மரபுகள் உள்ளன. அவை:

1. ஓர் இளைஞன் தான் காதலித்த நங்கையைக் அவள் பெற்றோர் இசையாமை காரணமாகவோ, அல்லது அழகும் செல்வமும் மிக்க மற்றொரு நங்கையைக் கண்டதன் காரணமாகவோ முன்னவளைக் கைவிட்டுப் பின்னவளைப் பற்றிக் கொண்டான் என்ற மரபு இங்கு இல்லை.

2. தோழியைத் துணையாகக் கொண்டு தலைவியை அடைய முயலும் தலைவன் அவளைப் பகற் குறியிலும் இரவுக் குறியிலும் தனித்துக் காணுங்கால் தலைவன் இளந்தோழியுடன் நட்புக் கொண்டு பழந் தலைவியைப் பகைத்துக் கொண்டான் என்ற நிகழ்ச்சிக்கு இங்கு இடம் இல்லை.

3. இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் நடைபெறும் பாங்கற் கூட்டத்தில் பாங்கன் தலைமகளைத் தனித்துக் காணுங்கால் இருவரும் மாறிப்புக்கார் என்ற வரம்பிகந்த செயல் இங்கு நடைபெறுவதில்லை.

4. தலைவனது தோழனுக்கும் தலைவியின் தோழிக்கும் உறவு கற்பித்து முதல் கதையில் கிளைக்கதையைத் தோற்றுவிக்கும் மரபினை இங்குக் காண முடியாது.

5. தலைவன், தலைவி; பாங்கன், பாங்கி என்ற நால்வர் தம்முள் ஐயமும் பூசலும், பொறாமையும் சூழ்ச்சியும் தோன்றச் செய்து ஐந்திணைத் துறைகளை அகலக் கதையாக்கும் செயலுக்கு இங்கு இடம் இல்லை.

6. இரவுக்குறிகளில் காதலர்கள் சந்திப்பதைக் கூர்ந்துக் கவனித்து வரும் கீழ்மகன் ஒருவன் வழியிடைத் தலைவனைத் தாக்கித் தலைவியைக் கைப்பற்றினான் என்பதற்கும், தாக்குண்ட தலைவன் கீழ்மகனை எதிர்த்தாக்குதலால் கொன்று தலைவியைக் காப்பாற்றினான் என்பதற்கும் இங்கு மரபு இல்லை.

7. களவுக் காதலர்கள் பல்வேறு நிகழ்ச்சிகட்கிடையே இறந் தார்கள் என்றோ, ஒருவர் இறந்தபின் மற்றவர் புலம்பி அழுதார் என்றோ கூறும் மரபினை இங்குக் காண இயலாது.

8. இரவுக் குறிகளில் தலைவன் நள்ளிரவில் தனிமையாக வந்து போகுங்கால் கொடிய விலங்குகள் அவனைத் தாக்கின என்றோ, ஆறலைக் கள்வர்களால் அலைத்துத் தாக்கப் பெற்றான் என்றோ கூறும் நிகழ்ச்சிகள் இங்கு இடம் பெறுவ தில்லை.

9. அலருக்கும் பெற்றோர்க்கும் இற்செறிப்புக்கும் அஞ்சிா தலைவி தலைவனுடன் உடன்போக்கில் நெடுவழி ஏகுங்கால், நடு வழியில் ஒருவர் மரித்தார், மற்றவர் கதறி யழுதார் என்பன போன்ற நிகழ்ச்சிக்கு இங்கு இடம்இல்லை. அங்ஙனமே, தலைவியின் அண்ணன்மார்களால் தாக்கப்பெற்றனர் என்று கூறும்மரபும் இல்லை. களவுக் காதலர்கள் கற்புப்படும்வரை அவர்கட்கு இறப்பு நேரிடாது என்று நம்பினவர்களும் அல்லர் தமிழர்கள். இத்தகைய நிகழ்ச்சிகளைப் புறத்திணையில் அடக்குவர் அவர்கள்.

10. தம் மகள் வரிக்கும் காதலனைப் பெற்றோர்கள் ஒப்புக் கொள்ளாமல் வேறொருவனைக் கணவனாக்க அவர்கள் முயன்று திருமண ஏற்பாடு செய்யுங்கால் மனம் உடைந்த நங்கை தற்கொலை புரிந்து கொண்டாள் என்று நொதுமலர் வரைவுத் துறையைத் திசை மாறச் செய்யும் மரபு என்னானும் ஈங்கில்லை.

# III ஐந்திணை-கற்பியல்

அகத்திணை யொழுக்கத்தில் களவியலை அடுத்துத் தொடரும் பகுதி கற்பியலாகும். களவியலில் மறைந் தொழுகிய காதலர்கள் ஊரறியத் திருமணம் புரிந்து கொண்டு வாழும் பகுதியே இது. இங்ஙனம் வாழ உரிமை செய்தளிக்கும் முறையே 'கரணம்' என்பதாகும். காதலர்கள் திருமணம் புரிந்து கொள்ளல் களவு வெளிப் படுவதற்கு முன்னர் வரைந்து கொள்ளல், களவு வெளிப் பட்ட பின்னர் வரைதல் என இருவகைப்படும் என்று குறிப்பர் தொல்காப்பியர். கரணம் காலத்திற்கேற்ப மாறுபடுந் தன்மைத்தாதலின் தொல்காப்பியர் இதனை வரையறுத்துக் கூறிற்றிலர். இதுபற்றிய சில குறிப்புகள் மட்டிலும் பண்டைய இலக்கியங்களில் காணக் கிடக் கின்றன. இல்வாழ்க்கையில் காதலர் ஈடுபட்டிருக்கும் பொழுது அவரிடையே நிகழும் இன்ப உரையாடலைத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. இங்குப் பல்வேறு புலவி நுணுக்கங்கள் சுட்டப்பெறுகின்றன. இல்வாழ்க் கையில் கணவன் மனைவியைப் பிரிந்து செல்லும் சந்தர்ப்பங்கள் உள; இவை விரிவாக விளக்கம் பெறு கின்றன. ஐந்திணை யொழுக்கத்தில் தலைவனின் பரத்தமை திங்களில் காணப்பெறும் மறுவையொத்தது. இது விரிவாக ஆராயப்பெறுகின்றது. இறுதியாக, கற்பு ஒழுக்கத்தில் இன்றியமையாதனவாகக் கொள்ளப் பெறும் சில மரபுகள் பட்டியலிட்டுக் காட்டப்பெறு கின்றன. இப்பகுதியில் ஏழு இயல்கள் அடங்கியுள்ளன.

## கற்பு பற்றிய விளக்கம்

களவு நெறியில் ஒழுகி அன்புரிமை பூண்ட தலைமகன் தன்பால் அன்புடைய தலைவியைப் பெற்றோர் கொடுப்பப் பலரறிய மணந்து வாழும் மனைவாழ்க்கையே கற்பென வழங்கப்பெறும். கற்பு களவொழுக்கத்தின் கனி; அன்பின் வெற்றி.

கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள்வதுவே.[1]

[கரணம் - சடங்கு]

என்பது தொல்காப்பியர் கூறும் விதி. இதனால் களவு ஒரு குறிக்கோள் அன்று எனவும், முடிவான பயனும் அன்று எனவும், அது முடிந்த பயனை அடைவதற்கு உரிய ஒரு நெறியே யாகும் எனவும் அறியப்படும். களவுநெறி கற்பாக—திருமணமாக—முடியுங்கால் அது 'நன்னெறி' எனப் போற்றப்படும். மறையாக ஒழுகி வரும் காதலர்கள் ஊரில் இருப்பினும் உடன்போக்கு முறையில் ஊர் விட்டு அகன்று போயினும் வரைவு என்னும் பெருவேலிக்கு உட்பட்டுக் கணவன்-மனைவிஎன்று பலர்வெளிப்படையாகச்சொல்லும் இயல்பு நிலையை ஒரு நாள் அடைந்தே தீரவேண்டும். இங்ஙனம் நிலைபேறு அடையும் அன்புக் களவைத்தான் பெற்றோரும் போற்றி வரவேற்பர். சமுதாயமும் நல்லொழுக்கச் சான்றிதழ் வழங்கித் தன் உடன்பாட்டை அளிக்கும். களவின் முடிவு கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலையானதாகும். இத்தகைய கற்பு வழக்கினையே—சமுதாய மணமுறையினையே—மேற்குறிப்பிட்ட தொல்காப்பிய நூற்பா சுருக்கமாக உரைக்கின்றது. ஆகவே, ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் நல்லூழின் ஆணையால் எதிர்ப்பட்டு உள்ளப் புணர்ச்சியிற் கூடி

1. கற்பியல் - 1

ஒழுகினராயினும், தலைமகளுடைய பெற்றோர் உடன்பாடின்றி அவ்விருவரும் மணவாழ்க்கையை மேற்கொள்ள இயலாது என்பதும், எனவே அவர்கள் ஒருவரையொருவர் பிரியாது வாழ் தற்குரிய உள்ளத்துறுதியை உலகத்தார் அறிய வெளிப்படுத்தும் நியதியாகிய வதுவைச் சடங்குடன் தலைமகளை மணந்து கொள்ளுதல் மனைவாழ்க்கைக்கு இன்றியமையாத சிறப்புடைய நிகழ்ச்சியாக அமைந்தது என்பதும் பண்டைய வழக்கமாக இருந்து வந்தன என்பது அறியப்படும். இங்ஙனம் உரிமை செய்தளிக்கும் செயல் முறையே பண்டைத் தமிழரின் திருமணச் சடங்காகும். இதனையே ஆசிரியர் தொல்காப்பியர் கரணம் என்ற சொல்லால் வழங்குவர்.

காதலர்கள் வாழ்வில் திருமணம் என்னும் கட்டுப்பாடு என்றும் யாண்டும் இன்றியமையாதது; மாறாதது. திருமணச் சடங்குகள் (கரணம்) தேயந்தோறும் வேறுபடுவன. காலந்தோறும் கூடு வனவும் குறைவனவும் மயங்குவனவுமாக அமைவன. ஆகவே வாழ்வியல் நெறியை வகுத்த தொல்காப்பியர் கற்பென்னும் தலையாய அறத்தை வலியுறுத்திக் 'கரணமொடு புணர' என்று சடங்கினை விரித்தோதாது பொதுப்படக் கூறினார்; தம் காலத்தும் தம்காலத்துக்கு முன்னரும் தமிழ்ச் சமுதாயம் தழுவிய சடங்குகளை வெளிப்படையாக விதந்தோதிக் குறிப்பிட்ட ஒரு காலத்துச் சடங்குக்கு வழிவழியாக வரும் தமிழரை அடிமைப்படுத்த விரும்ப வில்லை அப்பேராசான். 'கரணமொடு புணர' என்ற பொது நடையால் காலத்திற்கேற்ற நடைமுறைகளை அறிவோடு தழுவிக் கொள்ளத் தொல்காப்பிய வழி வகுத்திருப்பது அறியத் தக்கது. கரணமுறைகளை அவர் விதந்தோதாவிடினும் திருமணத்திற்கு ஏதாவது ஒரு சடங்கு—பலர் அறிய வெளிப்படையான ஒரு மண முறை—வேண்டும் என்பதுவே அவரது துணிபு. கரணமொடு புணர்தல், கொடைக்குரியோர் கொடுத்தல் என்ற கற்புக் கூறுகள் இரண்டனுள் பின்னது இல்லையேனும் முன்னது மிகவும் இன்றி யமையாதது.

> கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
> புணர்ந்துடன் போகிய காலை யான.[2]

என்ற விதி இக்கருத்திற்கு அரண் செய்வதாக அமைகின்றது. உடன் போகிய இடமே கொடுப்போர் இல்லா இடம், அந்த இடத்

2. ஷை - 2

தில் திருமணத்தை மேற்கொள்ளின் கொடுப்போர் இலர் என்பதற்காகக் கரணத்தை விடாது, யாரைக் கொண்டேனும் கரணம் பெற வேண்டும் என்பதையே இந்நூற்பா வலியுறுத்துகின்றது. திருமணக் கற்பின் இன்றியமையாத ஒரு முறையே கரணமாகும் என்பது இதனால் தெளிவாகின்றது. இந்நூற்பாவிற்கு உரை கண்ட நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் "கற்பிற்குக் கரண நிகழ்ச்சி ஒரு தலையாயிற்று" என்று ஒருமுகமாக உரைத்துப் போயினர். மரபினோர் கொடுப்பதிலும் கரணம் மேம்பட்டது என்ற குறிப்பு "கரணமொடு புணர"[3] என்ற 'ஒடு' உருபினாலும் அறியப்படும்.

கொடுப்போர் இன்றியும் கரணம் நிகழ்ந்த செய்தி குறுந்தொகைப் பாடலொன்றால் அறியக் கிடக்கின்றது.

பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நல்லூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி ஆய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே.[4]

[பறை - முரசு; பணிலம் - சங்கு; இறைகொள்பு - தங்கு தலைக் கொண்டு; வாய் - உண்மை; ஆய் - அழகிய; சே இலை - செம்மையானஇலை; விடலை - பாலை நிலத் தலைவன்; தொகு - பலவாகத் தொக்க; மடந்தை - நின் மகள்.]

இதில் உடன்போகிய இருவரும் மணம் புரிந்து கொள்வதனால் மடந்தையின் நட்பு உலகறிய உண்மையாகும் என்கின்றாள் செவிலி. தலைவி உடன்போயினபின் செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும் பாங்கில் அமைந்தது இப்பாடல். பறையும் சங்கும் மங்கல நாளில் முழங்கும் வழக்கம் பண்டையிலும் இருந்தது என்பது இப்பாடலால் அறியக் கிடக்கின்றது. இடைக் காலத்திலும் இவை வழங்கின என்பது,

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்

3. ஷை. - 1
4. குறுந். 15.

மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழிநான்[5]

[தாமம்-மாலை; நிரை-வரிசை மதுசூதன்-கண்ணன்]

என்ற பாடலால் அறியப்படும்.

காதலர் வாழ்வில் கரணம் ஏன் வந்தது என்பதற்கும் தொல்காப்பியம் காரணத்துடன் விதி செய்துள்ளது.

பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப[6]

[பொய்-செய்த ஒன்றினைச் செய்திலேன் என்றல்; வழு-தவறு; அஃதாவது, ஒழுக்கத்து இழுக்குதல்; ஐயர்-குலப் பெரியோர்]

என்று அவர் கண்ட நூற்பாவுக்கு வேறுபட்ட உரைகளும் கருத்துரைகளும் பல்கிப் பெருகி மூல நூலாசிரியரின் கருத்திற்கு இரும்புத் திரை இட்டு விட்டன. காதலித்துப் புணர்ந்தவன் காதலித்தவளுக்கும் தனக்கும் யாதொரு தொடர்பும் இல்லை எனக் கூறும் வஞ்சனையைத் தடுப்பதற்காகவே கரணம் அமைந்தது என்பதுவே அவற்றின் திரண்ட கருத்தாகும். களவு நெறியில் ஒழுகியவன் தனக்கும் அவளுக்கும் தொடர்பில்லை என்று கூறி விட்டால் கற்பும் இல்லை; கரணமும் இல்லை. ஆகவே, களவு முறையில் தோன்றும் பொய்யையும் வழுவையும் கரணம் தடுக்கும் என்றும், தடுப்பதற்காகவே கரணத்தை அமைத்தனர் என்றும் கூறுவார் கருத்து பொருளற்றது. மணமாகிய பின்னரும் கைப் பிடித்த காதலியைக் கைவிட்டால் கரணம் அதனைத் தடுத்து விடும் என்று நினைப்பதும் பொருளற்றது. இந்த இருவகைப் பட்ட நிகழ்ச்சிகளும் சமுதாயத்தில் காணக்கூடிய நிகழ்ச்சிகளே. அகநானூறும் இத்தகைய நிகழ்ச்சியொன்றினைக் குறிக்கின்றது. 'கள்ளூர் என்ற ஊரில் தீவினையாளன் ஒருவன் ஓர் இளமகளின் நலத்தை நுகர்ந்து பின் அவளைக் கைவிடுத்துத் தனக்கும் அவளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை எனச் சூளும் செய்தான். ஊர்ச் சான்றோர்கள் தக்கபடி உசாவி அவனுக்கு அவளுடன் உறவுண்டு என்பதைத் தெளிந்து, காதலறம் பொய்த்த அக்கயவனை மரத்திற் பிணித்துத் தலையில் நீற்றினைக் கொட்டி

5. நாச். திரு. 6:6
6. கற்பியல்-4

ஊரார் அறியத் தண்டித்தனர்'[7] என்று தோழி தலைமகற்கு வாயில் மறுத்த பாடலில் கடுவன் மள்ளனார் உவமை வாயிலாகக் குறித்திருப்பது ஈண்டு நினைக்கத் தகும்.

பொய்யும் வழுவும் காதலர்களிடையே தோன்றுவனவாகக் கருதுவது பெரும் பிழையாகும். அக இலக்கியத்தின் மதிப்பினையே கெட்டொழிப்பதாகும். களவை இல்லையென்பானையும் கற்பைக் கடந்தொழுகுவானையும் திருமணச் சடங்கு தடுத்து நிறுத்த முடியாது என்பது எல்லோரும் அறிந்த உண்மையாகும்.[8] ஆயின், தொல்காப்பியர் கருந்துப்படி கரணம் என்பது, களவின் வழி வந்த காதலர்க்கும் களவின் வழிவராக் காதலர்க்கும் திருமணக் காலத்தில் செய்யப்பெறும் சடங்காகும் என்பது டாக்டர் மாணிக்கனார் கருத்தாகும்[9]. பொய்யும்வழுவும் இல்லாத ஆண்-பெண்கட்கே திருமணத்தன்று சடங்கு நிகழ்கின்றது என்பது அன்னார் கருத்தாகும். உலகத்துக் காதற் பிழைபாடுகளிருப்பினும் தமிழ் அகத்திணையும் தமிழ் அகவிலக்கியங்களும் அன்பிற்குரிய காதலர்களையே எடுத்து மொழிகின்றன என்பது கருத்திவிருத்த வேண்டிய முக்கியதோர் உண்மையாகும். 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை'[10] 'ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின், ஒத்த கிழவனும் கிழத்தியும்'[11] எனத் தொல்காப்பியர் அகத்திணைக் காதலர்களின் அன்புக் கிடக்கையையே புலப்படுத்திச் செல்வர். 'கரணம்' என்பதற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருளையும் அதனுடன் தொடர்பு கொண்ட வடநூற் கருத்துகளையும் இக் காலத்துத் தமிழறிஞர்கள் ஒப்புக் கொள்வதில்லை.[12] கரணம்பற்றிய கருத்துகள் இயல்—16 இல் விளக்கப் பெற்றுள்ளன.

தமிழ்ச் சமுதாயம் திருமணக் கட்டுப்பாட்டை உணர்ந்த ஒரு சிறந்த சமுதாயமாகும். கரணம் வேண்டும், அது எதுவாகவும்

7. அகம்-256
8. திருமணச் சடங்கு தடுத்து நிறுத்தா விடினும், அது பல்லோர் அறியும் சான்றாக அமைகின்றது. நீதிமன்றம் செல்லும் வழக்கிற்கு அது அசைக்க முடியாத சான்றாக அமைந்து தீர்ப்புக் கூறும் நீதிபதிக்கு உறுதுணையாகவும் அமைகின்றது.
9. தமிழ்க்காதல்-பக்கம் 148
10. களவியல்-1
11. ஷை-2
12. கற்பியல்-4இன் உரை காண்க.

இருக்கலாம் என்று காலத்திற்கேற்ப, நிலவும் நிலைக்கேற்ப அமைத்துக் கொள்ளலாம் என நெகிழ்ந்து கொடுக்கும் சமுதாயமாகும். காதற் களவினர் எவ்வாறேனும் ஒரு குடியாகிச் சமுதாய உறுப்பினராதல் வேண்டும் எனப்பொறுப்புடன் திருமணவாயிலை எல்லோர்க்கும் நல்வரவு கூறும் வாயிலாக அமைந்திருந்தது. இத்தகைய அறமுடைய எளிய வாயிலைஐங்குறுநூற்றுப்பாடலொன்றால்அறியலாம். தோழியால் ஓம்படை செய்யப்பெற்று உடன் போகிய தலைவன் தலைவியைத்தன் ஊரில் உலகத்தார்உணரும்படிக்கரணவகையால் திருமணம் புரிந்து கொண்டனன். இச் செய்தியைத் தோழி அறிந்திருந்தாள். பின்னொரு நாள் தோழி தலைவனையும் தலைவியையும் காண்டற்கு ஆங்குச் சென்றிருந்தபொழுது அவளைக் கண்ட தலைவன் மகிழ்ந்து தான் முறைப்படித் தலைவியை மணந்து கொண்ட செய்தியைக் கூறி அச் செய்தியை உறவினருக்கும் அறிவிக்குமாறு வேண்டினன். அதற்கு அவள்,

வரைந்தனை நீ எனக் கேட்டுயான்
உரைத்தனன் அல்லெனோ அஃதென் யாங்க்கே[13]

எனத் தன் அன்னைக்கு முன்னரே தெரிவித்து விட்டதாக மொழிந்தாள் என்பதனால் பண்டைத் தமிழகத்தில் இனிய எளிய மணமுறை நிலவியமை தெளிவாகின்றது. இப்பாடலின் முற்பகுதியிலுள்ள உள்ளுறை இச் செய்தியை மிக அருமையாக உணர்த்துகின்றது.

களவு கற்பு என்ற ஐந்திணைக் கைகோள் இரண்டனுள் பின்னது எல்லோரும் அடைய வேண்டிய பேரறமாகும். கற்பு களவு போல் இலக்கிய நயத்திற்கும் கற்பனை வளத்திற்கும் இடந்தராது என்று கருத இடம் உண்டு. ஆயினும், பாடுவதற்குத் தரமான பொருள் இல்லையென்று துணிவது எளிதன்று. குறிக்கோள் உடைய புலவர்கள் அதனைப் பதிய வைப்பதற்குக் கையாளும் உத்தி முறைகள் மிகவும் வியப்பூட்டுவனவாகும். கற்பொழுக்கத்தை விடச் சிறந்த குறிக்கோள்—சமுதாய நெறி—வேறொன்று இருக்க முடியுமா? சங்க இலக்கியத்தில் இத் திணையைப் பாடியவர் தொகை 233 ஆகவும் பாடற்றொகை 966 ஆகவும் இருப்பதை நோக்குங்கால் சங்கச் சான்றோர்கள் களவுத் துறைகளைப் போலவே கற்புத்துறைகளையும் வளமான செய்யுட்களால் பாட மதித்தனர் என்பது தெளிவாக அறியக் கிடக்கின்றது.

13. ஐங்குறு 280

# திருமண முறைகள்

தலைவியுடன் களவுக் கூட்டம் நேர்ந்த தலைமகள் அவளை மணந்து கொள்வதில் இரு முறைகள் உள்ளன. அவை களவு வெளிப்படுவதற்கு முன் வரைதல், களவு வெளிப்பட்ட பின் வரைதல் என்பனவாகும். இதனை,

வெளிப்பட வரைதல் படாமை வரைதல்என்(று)
ஆயிரண்டு என்ப வரைதல் ஆறே[1]

என்று விதி அமைத்துக் காட்டும் தொல்காப்பியம். தலைவி அறத்தொடு நின்றதை எல்லோரும் ஒப்புக் கொண்டபின் மணந்து கொள்ளுதல் களவு வெளிப்பட வரைதல் ஆகும். இதற்கு முன்னர்க் கூறியவை யாவும் இப்பகுதியைச் சார்ந்தவையாகும். களவு வெளிப்படாமுன் வரைதல் என்பது, தலைமகள் அறத்தொடு நில்லாமுன் தலைவன் தலைவியை உடன் கொண்டு சென்று தன்னூரில் மணந்து கொள்வதாகும். இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாட்டுடன் மணந்து கொள்வதும் இப் பகுதியின்பாற் படும். பகற்குறி இரவுக் குறிகட்குப் பின் தோழியால் வரைவு கடாவப்பெற்று நிகழ்வதையும் இதன்பாற்படுத்துவதும் உண்டு. இவ்வாறு வரைந்து கொள்வதில் தலைவிக்கு உடன் போக்கில்லை என்பது அறியத் தக்கது. இவற்றை இறையனார் களவியலுரையாசிரியர் விளக்கும் முறையையும் ஈண்டுக் காட்டுதல் பொருத்தமுடைத்து. அவர் தரும் விளக்கும்:

"களவு வெளிப்படா முன்னுற வரைதல் என்பது, பலரானும் சிலரானும் அறியப்பட்டது இவ் வொழுக்கம் என்னும் கருத்து எய்தா முன்னம் வரைதல் என்றவாறு; இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்றை தெருண்டு வரைதலும் உரியன்; அங்குத் தெரு

1- களவியல்—50 (இளம்)

ளானாய்விடின், பாங்சற் கூட்டம் கூடித் தெருண்டு வரைதலும் உரியன; அங்குத் தெருளானாய் விடின், மதியுடன் படுத்து இரந்து பின்னின்ற நிலைமைக்கண் தோழி சேட்படுப்பத் தெருண்டு வரைதலும் உரியன; அங்குத் தெருளானாய் விடின் தோழியிற் கூட்டம் கூடியாதல், செறிப்பறிவுறுக்கப்பட்டாதல், இரவுக் குறியது ஏதம் காட்டவாதல், வரைவு கடாவப் பட்டாதல் தெருண்டு வரைதலும் உரியன்; ஈதெல்லாம் களவு வெளிப்படா முன்னுற வரைதல் விகற்பமெனக் கொள்க.

இனி, வெளிப்பட்ட பின்றை வரைதல் விகற்பமின்று எனக் கொள்க. அவற்றுள் களவு வெளிப்படா முன்னுற வரைதல் சிறப்புடைத்து. இது தனக்காகாமையால் வரைந்தமையிற் சிறப்பின்று எனக் கொள்க. இது களவு வெளிப்பாடு அன்றென்று மறுத்து களவு வெளிப்படா முன்னுற வரைதல், அறத்தொடு நிலை நிகழாமுன் வரைதல் என்றவாறு.

களவு வெளிப்பட்ட பின்றை வரைதல் என்பது, அறத்தொடு நிலை நிகழ்ந்த பின்றை வரைதல் என்றவாறு; களவு வெளிப்படா முன்னுற வரைதலும் களவு வெளிப்பட்ட பின்றை வரைதலும் ஆமாறு முன்னே சொல்லிப் போந்தாம்; அவ்வுரையையே இதற்கும் உரைத்துக் கொள்க'' என்பது[2]

**களவு வெளியாவதற்குமுன் வரைதல் :** களவு வெளியாவதற்குமுன் வரையும் நிகழ்ச்சியில் தலைவன் தலைவியை மணம் பேசி அவள் சுற்றத்தாரை வேண்டுவான். அவர்கள் மிகுந்த பரியங் கேட்பர். அதை நிறைவேற்றுவதற்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிவான். இது **வரைவு பொருட் பிரிவு** என வழங்கப்பெறும். இங்ஙனம் பிரிந்து சென்றவன் வேண்டும் பொருளை ஈட்டிக் கொண்டு மீண்டு, தன் உறவினரை மேற்கொண்டு தலைவியின் இல்லம் அண்மி மணமுரசு ஒலித்துப் பெண் பேசுவிப்பான். சங்க இலக்கியங்களில் இதனைப் பல்வேறு விதமாக விளக்கும் பாடல்கள் உள்ளன. ஐங்குறுநூற்றுத் தலைவன் ஒருவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்தான். தலைவி அவன் பிரிவிற்கு வருந்தியிருந்தாள். தோழி வரைவதற்கு வேண்டுவன கொண்டு தலைவன் மீண்டும் வந்தமையைத் தலைவிக்கு உணர்த்தி அவளை மகிழ்விக்கின்றாள்.

---

2 இறை. கள. 24 இன் உரை.

பெடுவரை வேங்கைப் பொன்மருள் நறுவீ
மானினப் பெருங்கிளை மேயல் ஆரும்
கானக நாடன் வரவும்இவண்
மேனி பசப்பது எவன்கொல் அன்னாய்.[3]

[பொன்மருள்-பொன் போன்ற; நறு. வீ-நறிய மலர்கள்; கிளை-சுற்றம்; ஆரும்-தின்னும்; பசப்பது-நிறம் வேறு படுவது.]

என்ற பாடலில் இதனைக் காணலாம். மானும் அதன் இளமாகிய சுற்றமும் வேங்கைப் பொன் மலரைத் தின்னும் என்றது, இனி தலைவன் தலைவியை வரைந்து கொண்டு இல்லறம் நிகழ்த்துங் கால், தோழியும் பிறரும் உண்டு மகிழ்ந்திருப்பதைத் தெரிவித்து ஒகை விளம்புகின்றதைப் பாடலில் கண்டு மகிழ்க.

தலைவியர் தோழிமார் இவர்கள் கூற்றாக வரும் களவுப் பாடல்களைத் தொகுத்து ஆராய்ந்தால், உற்றார்க்கும் ஊரார்க் கும் களவை அறவே மறைத்து, விரைவில் திருமணம் கொள்ள வேண்டும் என அப்பெண்டிருக்கு இருந்த நாணமும் கவலையும் நாட்டமும் புலப்படும். இம்மறைவு முயற்சியைத்தான் தொல் காப்பியம் ''படாமை வரைதல்''[4] என வழங்கும். மரபு மணத்தை தமரிற் பெறுதல்[5] என்று ஆசிரியர் தொல்காப்பியர் கூறுவர். களவை முற்றிலும் மறைத்தோ அன்றிச் செவ்விதாக வெளிப் படுத்தியோ எவ்வாறேனும் பெற்றோரின் இசைவையும் வாழ்த்தை யும் பெற்று மரபு மணம் கொள்ள வேண்டும் என்ற பெரு விழைவு அகத்திணைப் பெண்டிரிடம் காணப்பட்டது என்பது அறியத் தக்கது.

நன்ற கின்றால் தோழிநாம் வள்ளையுள்
ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி
மென்றோட் கிழவனும் வந்தனன் நுந்தையும்
மன்றல் வேங்கைக் கீழிருந்து
மணநயந் தனன்அம் மலைகிழ வோற்கே[6]

[வள்ளை-வள்ளைப்பாட்டு; ஒன்றி-பொருந்தி; மறைநின்று-மறைந்து நின்று; மன்றல்-மணத்தையுடைய; மணம் நயந்

3. ஐங்குறு-217
4. களவியல்-50 (இளம்)
5. செய்யுளி-179 (இளம்)
6. கலி-41

தனன்-மணம் செய்தலை விரும்பிக் கூறினன்; மலை கிழவோன்-தலைவன்.]

இக்கலிப் பாட்டு சுட்டும் திருமணம் களவு வெளிப்படா முன்னரே பெற்றோர்மூலம் நடத்திக் கொண்ட திருமணமாகும். தோழியும் தலைவியும் பாடிய வள்ளைப் பாட்டு ஒளிந்து நின்ற தலைவன் நெஞ்சத்தைத் தாக்க, அவன் களவு நீளாது வரைதலே தகும் என்று மணம் பேச ஏற்பாடு செய்தான். நந்தையோ அங்ஙனம் வந்தவனிடம் தன் மகளுக்கு உறவுண்டு என்பதை அறியாதவன். அறியா நிலையிலே தலைவனது விருப்பத்திற்கு இசைவு தெரிவித்தனன். இந்நல்லிசைவால் தோழி பெருமகிழ்ச்சி எய்தினாள். 'தோட்கிழவனும் வந்தனன்; நுந்தையும் நயந்தனன்' என்ற அணுகிய சொன்னடையால் களவு வெளிப்படவில்லை என்ற குறிப்பு தெளிவாகின்றது. இம்மண முடிப்பே தொல்காப்பியர் சுட்டும் 'படாமை வரைதல்' என்பதற்குப் பொருந்திய இலக்கியமாகும்.

ஐந்திணை எழுபதில் ஒரு பாடலும் களவு வெளிப்படாமல் வரைவு நிகழ்ந்ததைக் குறிக்கின்றது.

கொல்லைப் புனத்த அகில்சுமந்து கற்பாய்ந்து
வானின் அருவி ததும்பக் கவினிய
நாடன் நயனுடையன் என்பதனால் நீப்பினும்
வாடன் மறந்தன தோள்[7]

[கொல்லை-தோட்டம்; புனத்த-புனத்தின் கண்ணே யுள்ள; கல்-மலை; அருவி - நீர்வீழ்ச்சி; கவினிய-அழகு மிகுந்த; நீப்பினும்-பிரிந்து சென்றாலும்; வாடல்-மெலிதலை.]

இது தோழி முதலாயினோர் தலைமகளின் வரைவினை எதிர் நோக்கிய காலத்து வரைவுதலை வந்தமை கூறியதாக அமைந்ததாகும். அகநானூற்றிலும் இத்தகைய நிகழ்ச்சியொன்றினைக் காணலாம். உடன் போக்கில் சென்று விடுகின்கிறாள் தலைவி. அவளை நினைந்து வருந்தும் நற்றாய் பேசுகின்றாள். கழங்கின் திண்ணிய குறியைக் கூறும் வேலனிடம் பேசுகின்றாள்.

மாறா வருபனி கலுழுங் கங்குலின்
ஆனாது துயரும்எம் கண்ணினிது படீஇயர்

7. ஐந். எழு-2

எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே[8]

[மாறா-இடையறாது; பனி-நீர்; கலுழும்-கலங்கி அழும்; கங்குல்-இரவு; ஆனாது-அமையாது; துயரும்-துயர் உறும்; படீஇயர் - துயிலும் பொருட்டு; உய்க்கும் - கொண்டு செல்லும்]

"இரவில் துயருறும் எனது கண்கள் இனிது துயிலும்பொருட்டுத் தலைவியைத் தலைவன் எம் வீட்டுக்குக் கொணர்வனோ? அல்லது தன் மனைக்குக் கொண்டு செல்வனோ? அவன் உட்கோள் தான் யாதோ?" என்று வேலனை வினவுகின்றாள் நற்றாய். அங்குக் கொண்டுதலைக் கழிந்துழிக் கொடுப்போரின்றியும் கரணம் நிகழ்ந்தமையின் இது களவு வெளிப்படாமல் வரைந்ததாகும்.

களவொழுக்க நிலையில் தலைவனிடம் பொருள் வயிற் பிரிதலும், வேந்தர்க்குற்றுழிப் பிரிதலும், காவற் பிரிதலும் நிகழுமேயன்றி ஏனைய ஓதற் பிரிவும் பகைவயிற் பிரிவும் தூதிற் பிரிவும் நிகழா என்று கூறுவர் தொல்காப்பியர்.

வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும்
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோர்க் கில்லை.[9]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். 'மூன்று பொருள்' என்பதை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் ஓதல், பகை, தூது என்றே பொருள் கூறியுள்ளனர்.

**களவு வெளிப்பட்டபின் வரைதல்:** இதனைக் குறுந்தொகைப் பாடலொன்றால் அறியலாம்.

எந்தையும் யாவும் உணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்
மலைகெழு வெற்பன் தலைவந் திரப்ப
நன்றுபுரி கொள்கையின் ஒன்றா கின்றே[10]

[காட்டி-அறிவித்து; ஒளித்த செய்தி-களவொழுக்கம்; கிளந்தபின்-சொன்ன பிறகு; தலைவந்து - தம்மிடத்தே வந்து; ஒன்றாகின்றே-(ஊர்) நம்மோடு ஒன்றுபட்டது]

8. அகம்-195.
9. களவியல்-51 (இளம்)
10. குறுந்-374

இது தோழி தான் அறத்தொடு நின்றமையைக் கிழத்திக்கு உரைப்பதாக அமைந்த பாடலாகும். பெற்றோர்க்குக் களவை வெளிப்படுத்திய செய்தியைக் கூறுவதால் இது களவை வெளிப்படுத்தி முடித்துக் கொண்ட திருமணமாகும். களவொழுக்கத்தை 'ஒளித்த செய்தி' என்றும், தலைவன் கேட்க வரைவுக்குப் பெற்றோர் உடன்பட்டதை 'நன்றுபுரி கொள்கை' என்றும் பாடல் குறிப்பிடுவதைக் காண்க. இதனால் நேர்வழி யல்லது குறிப்புவழி பயன்படாது என்று கருதிக் காதற் கன்னியர் துணிவினை மேற்கொண்டு தம் களவினை வெளிப்படையாகப் பெற்றோர்க்கு அறிவிப்பர் என்று இதனால் அறியப்படும். அறிவுடைப் பெற்றோரும் கற்புக்கு ஆவனவே செய்வர் என்பதும் தெரிகின்றது. கற்புக்குப் பின்னிடல் யாண்டும் தமிழ் ஒழுக்கம் அன்று.

'உடன்போக்கின்' இறுதியில் தலைவியின் சுற்றத்தார் தலைவியின் "கற்பொடுபுணர்ந்த கௌவை"யை நேரில் அறிந்ததும், உடன் போக்கிற்கு ஒருப்பட்டுத் தம்மூர் மீள்வர் என்று குறிப்பிட்டோமன்றோ? தலைவன் தலைவியைத் தன்னூர்க் கொண்டு சேர்ப்பன். சில நாட்களுக்குப் பின்னர்த் தலைவியின் தமர் தலைவியின் இருப்பை அறிந்து தலைவனை நெருங்கி அவனைத் தம் மூரகத்தே வந்து மணம் புரிந்து கொள்ளும்படி வேண்டுவர். அவ்வேண்டுகோட்குத் தலைவன் உடன்பட்டால் அவன் தலைவியின் ஊரையடைந்து அவளை வதுவை புரிந்து வாழ்வு பெறுவன இனி, உடன் போக்கில் தலைவியின் தமர் இடைச்சுரத்தில் தடைபுரியாமலும், அவர் தலைவியின் இருப்பை யறிந்து வந்து தலைவனை மணம் புரிந்து கொள்ளுமாறு வேண்டாமலும் போவாராயின், தலைவன் அவளைத் தன் மனையில் வைத்து 'வதுவை மணம்' புரிந்து கொள்வான். இம்மண நிகழ்ச்சிக்கு முன்னர் தலைவனுடைய தாய் அவனால் கொண்டுவரப்பெற்ற தலைமகள் பொருட்டுச் 'சிலம்புகழி நோன்பு' என்பதொன்று செய்தல் பண்டைய மரபாக இருந்தது. மணம் புரிவதற்கு முன்னர் மணமகளது காலில் அவள்தம் பெற்றோர்கள் அணிந்திருந்த சிலம்பை நீக்குவதற்குச் செய்யப்பெறும் சடங்கே 'சிலம்புகழி நோன்பு' என்பது இதனை,

நும்மனைச் சிலம்பு கழீஇய அயரினும்
எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச்
சொல்லின் எவனோ மற்றே வென்வேல்

மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே[11]

[அயரினும்-சடங்கு செய்த போதிலும்; சொல்லின் எவனோ-சொன்னால் வரும் குற்றம் என்ன; வென்-வெற்றி; மையற-குற்றமில்லாதபடி; பொய்வல் காளை-பொய் கூறுதலில் வல்ல தலைவன்.]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலால் அறியலாம். தலைவியை உடன் கொண்டு போன தலைமகன் மீண்டும் தலைவியைத் தன் இல்லத்துக் கொண்டு புக்குழி அவன் தாய் அவட்குச் சிலம்புகழி நோன்பு செய்கின்றாளெனக் கேட்ட நற்றாய் ஆண்டு நின்றும் வந்தார்க்குச் சொல்லியதாக அமைந்துள்ளது இப்பாடல். இறையனார் களவியலுரையாசிரியரும், ''தலைமகன் தன்னகத்தே வதுவைக் கலியாணம் எடுத்துக் கொண்டான் என்பது கேட்ட நற்றாய், 'ஒழிந்த கலியாணம் செய்யினும், நம்மகத்தே வதுவைக் கலியாணம் செய்ய நேருங் கொல்லோ காளையைப் பயந்தாள்' என்னும்'' என்று கூறி இப்பாடலை மேற் கோளாகக் காட்டுவர்.[12] இவ்வழக்கத்தை,

சிலம்பு கழீஇய செல்வம்
பிறருணக் கழிந்தஎன் ஆயிழை அடியே[13]

என்ற நற்றிணைப் பாடற்பகுதியாலும், ''இதுகாறும் கூந்தல் வாரி, நுசுப்பிவர்ந் தோம்பியும் சிலம்புகழி நோன்பு யான் காணு மாறு நோற்றிலேன் என்பாள் பிறருணரக் கழிந்தனள் என்று இரங்கினாளாயிற்று'' என்ற அதன் உரைப்பகுதியாலும் அறியலாம்.

இங்ஙனம் தலைவியை ஒருவரும் அறியாமல் உடன் அழைத்துச் சென்று அவள் சுற்றத்தார் கொடுத்தலின்றியே மணம் செய்து கோடல் முற்காலத்தில் அறநெறியாகவே கருதப் பெற்றது. வாழ்வியல் ஆசான் தொல்காப்பியரும்,

கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான.[14]

11. ஐங்குறு-399
12. இறை கள-23 இன்உரை
13. நற். 279
14. தொல். களவியல்-உ (இளம்).

என்று இதற்கு விதியும் செய்து பச்சை விளக்கு காட்டியுள்ளார். ஆயினும், களவு வெளிப்பட்டபின் தலைவியின் தமர் உடன் பட்டுக் கொடுத்தலே முற்காலத்துப் பெருவழக்கமாக இருந்தது. இது,

மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்[15]

என்ற தொல்காப்பியரின் கூற்றால் தெளியப்பெறும். இது களவின் வழிவந்த மணமாகும். இவற்றால் தமிழ்ச் சமுதாயம் களவொழுக் கத்தை ஒப்பியது என்பதும், ஊக்கியது என்பதும், ஆயினும் களவுக் காதலே முதன்மைக் காதல் என்று தலைமை யளிக்கவில்லை என்பதும், திருமணத்திற்குக் களவே வாயில் என்று ஒரேவழி சுட்ட வில்லை என்பதும் ஈண்டு எண்ணி உணர்தற்குரியவை. மேலும், களவுக்கும் கற்புக்கும் உள்ள தொடர்பையும் மேற்கூறிய செய்திகள் அறிவிக்கின்றன. கற்பு என்பது நல்வாழ்வு என்றும், களவு என்பது அவ்வாழ்வை எய்துவிக்கும் ஒரு நன்னெறியே என்றும் இவற்றால் அறிகின்றோம்.

மாமயி லன்னார் மறையிற் புணர்மைந்தர்
காமம் களவிட்டுக் கைகொள் கற்புற்றென.[16]

[மறை-களவு; காமச்சிறப்புடைய களவு]

என்று நல்லந்துவனார் களவு-கற்பு இவற்றின் தொடர்பைப் புலப் படுத்துவர். களவு கொண்டு விடுதற்குரியது, கற்பு கைக் கொள்ளுதற் குரியது என்று களவின் நிலையாமையையும் கற்பின் நிலையையும் உறவு படுத்திக் காட்டி விளக்குவர். எனவே, கற்பு வாழ்க்கைக்குக் களவு நல்ல தோற்றுவாயே யன்றி இத்தோற்று வாயின்றிக் கற்பியல் அமையாது என்று கோடல் தவறு. நல்ல காதல் வாழ்க்கை களவானே முகிழ்க்கும் என்பது பொருளன்று. எனவே, இறையனார் களவியல் 'கற்பெனப்படுவது களவின் வழித்தே,[17] என்று விதி செய்திருப்பது அகத்திணை நெறியன்று என்பது அறியத் தக்கது.

கற்பியலாம் இல்லறம் புகுவதற்கு இருநெறிகள் உள்ளன. ஒன்று களவு நெறி; இது மேலே விளக்கப் பெற்றது. மற்றொன்று மரபு நெறி. இதுவே தொல்காப்பியர் குறிப்பிடும் **தமரிற் பெறுதலாகும்**. இவற்றுள் களவு நெறியே சங்க இலக்கியத்தில்

15. செய்யுளி - 179 (இளம்).
16. பரிபா-11 அடி 41, 42.
17. இறை. கள-15.

பாடல் பெற்றுத் திகழ்கின்றது. இது கற்புடைய காதற் களவொழுகலின் களவு பாடல்கள் காலங் கடந்த இலக்கியமாய் இலக்கணமும் அமையப்பெற்று அழியா வாழ்வு பெற்றன. பெற்றோர் பேசி முடிக்கும் திருமணப் புணர்ச்சியில் காதலர்க்கு எண்ணக் கிளர்ச்சியும் விறுவிறுப்பும் இல்லை; இதனால் புலவரின் கற்பனைக்கும் இடம் இல்லை; எண்ணத் துடிப்பும் இல்லை. ஆதலால் சங்கச் சான்றோர்கள் ஆற்றொழுக்கு போன்ற இயல்பு மணைத்தை-மரபுவழி தோன்றும் மணத்தை-பாட முன் வரவில்லை. சங்கச் சான்றோர் பாடியதனால் களவு நெறி உயர்ந்தது என்றோ. அவர்கள் பாடல் பெறாமையால் மரபு நெறி தாழ்ந்தது என்றோ, கொள்ள வேண்டா. இரண்டையும் சமுதாயம் ஒன்று போலவே கருதுகின்றது.

பேராசிரியர் மு. இராகவ அய்யங்கார் அவர்கள் "களவொழுக்கமின்றியே தனிக் கற்பு முன்பு வழங்கியதில்லை" என்று கூறி மேற்குறிப்பிட்ட இறையனார் களவியல் நூற்பாவினை சான்றாகக் காட்டுவர். இஃது ஏற்றுக் கொள்ளத் தக்க கருத்து எனத் தோன்றவில்லை. களவு வழியாகத்தான் கற்பு அமைகின்றது என்ற ஒரே வழி நிலவியிருப்பின் மகள் தன் களவைப் பெற்றோர்க்கு மறைக்க வேண்டியதில்லை. உடன்போக்கினை மேற்கொள்ள வேண்டியதுமில்லை. கற்புக்குக் களவு இன்றியமையாத நெறியாயின் களவினை **மறை** என வழங்க வேண்டியதில்லை. களவாளர்கள் தம் மறை யொழுக்கம் புலனாகி விடுமோ என்று சமுதாயத்திற்கும் குடும்பத்திற்கும் அஞ்சினதாகவே பாடல்கள் காணப்படுகின்றன. வெறியாட்டு, அறத்தொடு நிற்றல் என வரும் ஒவ்வொரு கட்டத்திலும் காதலர்களிடையே இவ்வச்ச உணர்ச்சியைக் காணலாம். மறையொன்று நிகழ்ந்ததாகப் பிறர் அறியாமலேயே மணம் நடந்துவிட வேண்டும் என்று தோழி தலைவனை வரைவு முடுக்கம் செய்கின்றாள்; பல்வேறு விதமாக வரைவு கடாவும் பாடல்கள் இதனைப் புலப்படுத்துகின்றன.

கழியக் காதல ராயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
வரையின் எவனோ வான்தோய் வெற்ப!
கணக்கலை இகுக்கும் கறியிவர் சிலம்பின்
மணப்பரும் காமம் புணர்ந்தமை அறியார்
தொன்றியல் மரபின் மன்றல் அயர.[18]

18. அகம்-112.

[கழியக் காதல்-மிக்க காதல்; வரையின்-மணந்து கொண்டால்; எவன்-என்னை; கணம்-கூட்டம்; இருக்கும்-ஒலிக்கும்; கறி-மிளகுக் கொடி; சிலம்பு-மலை; மணப்பு அரும்-எய்துதற்கு அறிய; புணர்ந்தமை-களவொழுக்கம்; மன்றல்-மணம்]

என்ற அகப்பாட்டுப் பகுதியில் 'தொன்றியல் மரபின் மன்றல்' என இயல்பு மணத்தைச் சுட்டியிருத்தலால் மரபு வழித் திருமணமும் உண்டென்று புலப்படுகின்றதன்றோ? காமக் களவினைப் பெற்றோர் அறியா முன்னரே மரபுமன்றல் செய்துவிடல் வேண்டும் என்று தோழி விரும்புகின்றாள். நீடித்த களவின்பம் பழி தருவது என்று தலைவனை இடித்துரைக்கின்றாள். களவு நெறியே நெறியாயின் மகள் களவைப் பெற்றோர் உணர்தலும் உடன்படுதலும் அல்லது கொதித்தெழுதலும் பொருளற்றது. கற்புக்கு வழி இரண்டென்று இருத்தலால் மரபு நெறிப்பட்ட பெற்றோர் சினந்தெழுந்தனர் என்பதனை அறிகின்றோம்.

மரபு நாட்டம் பண்டைத்தமிழர்களிடையே ஊறிக் கிடந்தமை குறுந்தொகைப் பாடலும் (374) கலிப்பாட்டும் (41) தெரிவிக்கின்றன. இங்ஙனம் சங்க இலக்கியங்களில் காணப்பெறும் இத்தகைய பல்வேறு துறைப் பாடல்களையும் அத்துறைத் தோற்றத்திற்குரிய மனப்பாங்குகளையும் நோக்கினால் மரபு நெறிக்கிருந்த நன்மதிப்பு தெளிவாகும். இத்தகை நெறியொன்று நிலவினமையைப் புறப்பாடல்களும் அரண்செய்கின்றன. சங்கச் சான்றோராகிய கபிலர், களவியல் பாடிய காதற் புலவர், பாரி மகளிரை விச்சிகோபாலும் வேள்பாலும் கொண்டு சென்று 'யான் கொடுப்ப நீ மணந்து கொள்' என்று இரந்த செய்திகள் மரபு நெறி வழக்கினைப் பறை சாற்றுகின்றனவன்றோ? இது தொல்காப்பியர் கூறும் 'கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே'[19] என்ற தொல்காப்பியர் கூறும் அகத்திணை நெறியுடன் ஒத்துள்ளதைச் சுட்டுகின்றதன்றோ? எனவே, தமிழர் திருமணத்திற்கு களவு நெறியே யன்றி தமர் கொடுப்பக் கொள்ளும் மரபு நெறியும் பழைமையுடையது என்பது அறியப்படும். ''தொன்று இயல் மரபின் மன்றல்'' (112) என்ற அகப்பாட்டுத் தொடர் இதனை வலியுறுத்தி அரண் செய்யும். மரபு நெறிக்கு மதிப்பின்றேல் பாரியின் பெருமை சிறுமைபடக் கபிலர்

19. கற்பியல்.

'நினக்கு யான் கொடுப்பக் கொள்',[20] 'யான்தர இவரைக் கொள்'[21] என்ற மரபு நெறியை மேற்கொள்ளா ரன்றோ?

சங்கப் பாடல்களை நுணுகி ஆராயின் களவின்வழி வந்த பழைய காதலர்க்கும் களவின்வழி வாராத புதிய காதலர்க்கும் இன்ப நிலையிலும் அன்பு நிலையிலும் அறநிலையிலும் யாதொரு வேறுபாடும் இல்லை என்பதை அறியலாம். இந்தக்களவு நெறியும் கற்புநெறியும் காப்பியங்களில் அமைத்துப் போற்றப் பெற்றதையும் உன்னினால் இரண்டின் செல்வாக்கையும் ஒருவாறு தெளியலாம். மரபு நெறிப்படி காவியம் அமைத்த இளங்கோ அடிகள் களவுக் காட்சியைச் சுட்டவில்லை. திருத்தக்க தேவர் சீவகனின் பல மணத்தைப் புனையும் போதெல்லாம் களவினையும் காட்சி ஐயம் முதலான துறைகளையும் வைத்துப் பாடியதைக் காண்கின்றோம். தேவர்வழி வந்த கம்பரும் மிதிலைக் காட்சிப் படலத்தில் இராமனும் சீதையும் உள்ளம் ஒன்றிய களவுப் புணர்ச்சியைச் சுவையுற அமைத்துக் காட்டுவதைப் பார்க்கின்றோம். சேக்கிழார் சுந்தரர்—பரவையார் திருமணத்தைக் களவு நெறியாகவும், காரைக்கால் அம்மையாரின் திருமணத்தை மரபு நெறியாகவும் அமைத்துப் பாடி இரு நெறிகளையும் சிறப்புறச் செய்தார் என்பதனையும் அறிகின்றோம். இக்காப்பியக் குறிப்புகளும் இந்த இருவகை மண நெறிகளும் தொன்று தொட்டு வருபவை என் பதை வலியுறுத்துகின்றன. இரண்டு நெறிகளையும் எண்ணி ஆராய்ந்தால்தான் அகவிலக்கியத்தின் முழுவனப்பும் தட்டுப்படும்; தமிழ்ச்சமுதாய நாகரிகத்தின் முழுவடிவமும் தெளிவாகத் துலக்க முறும்.

20. புறம்-200.
21. புறம்-201.

## கரணம்பற்றிய குறிப்புகள்

கரணத்தின் இன்றியமையாமை முன்னர் குறிப்பிடப்பெற்றது. அத்தகைய கரணத்தைப்பற்றிய சில குறிப்புகளை ஈண்டுக் காண்போம். தமிழ்ச் சமுதாய வழக்கையும் இலக்கிய வழக்கையும் நோக்கின் கரணத்திற்கு உரியாள் பெண் என்றே பெறப்படும். கற்பு இருபாலார்க்கும் பொது என்பது உண்மையே. எனினும், வழிவழியாக் நடைமுறையில் இருந்து வரும் சில செயல் முறைகளை ஒருவாறு ஒப்புக்கொண்ட தமிழ்ச் சமுதாயம் குடும்ப இயலைப் போற்றியது. போற்றும் பொறுப்பைச் செறிவும் நிறையும் மிக்க பெண்ணினத்திற்கு அளித்தது. பல தார மணம் ஆடவர்க்கு வழக்காறாக இருந்து வந்தமையால் புற அடையாளம் ஆடவர்க்குத் தேவை இல்லை என்று கருதியது போலும்! சிலப்பதிகார ஆசிரியர் கண்ணகியின் கற்பின் மாட்சியினை,

தீதிலா வடமீனின் திறம் இவள்திறம்[1]

என்று பாராட்டினரேயன்றி கோவலனை அங்ஙனம் பாராட்ட வில்லை.

மண்தேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேளென் றிசைபோக்கிக் காதலாற்
கொண்டேத்தும் கிழமையான் கோவலன்[2]

என்றுதான் அவனைப் பாராட்டினார். ஒருவன் மணமாகாப் பெண்டிர் பலரைக்காதலிக்கலாம்; ஒருவனை மணமாகாப்பெண்டிர் பலரும் காதலிக்கலாம். இவை சமுதாய நெறி என்று கொள்ள வேண்டா. நடைமுறைக்கு இணங்கி ஒருவன்-பலர் என்ற கொள்கை இலக்கியத்திலும் இடம்பெற்றது. ஆயினும், ஒருவன்-ஒருத்தி என்ற கொள்கையே அதன் குறிக்கோளாகும்.

1. சிலப். மங்கல வாழ்த்து-அடி. 27
2. ஷை-அடி. 36—39.

வந்தெனைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிறவிக்குஇரு மாதரைச்
சிந்தை யாலும் தொடேன்என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.[3]

என்று கம்பன் சீதையின் கூற்றாகக் காட்டுவது இக்குறிக்கோள் நெறியேயாகும்.

திருமணச் சடங்கில் பெண்ணுக்கு மட்டிலும் 'தாலி' போன்ற அடையாளம் பொறிப்பதற்கு மேற்கூறிய நடைமுறையொன்றே காரணமாகஇருத்தல் வேண்டும். ஒருத்திதிருமணம் ஆகிஒருவனுக்கு மனைவி ஆனாள் என்பது அத்திருமணத்தைக் கண்டார்க்கும் கேட்டார்க்கும் மட்டிலுமே தெரிய வரும். பிறர் அதனை எப்படி அறிவது; அண்மையில் மணம் செய்து கொண்ட நங்கைக்கும் புற வேறுபாடு காட்டுதற்கு அமைந்த அடையாளமே மணக் குறியாகும். களவு நெறியைப் போற்றிய சமுதாயத்தில் இத்தகைய அடையாளம் ஒன்று இன்றெனின் வேறு ஓர் இளைஞனுக்கு இவள் மீது காதல் ஓடலாம்; புறத் தோற்றமாக அடையாளம் இருக்கு மேல் அவனை அச் செயலினின்றும் தடுத்து நிறுத்துவதற்கு ஏதுவாகும்.

பண்டைக் காலத்தில் மணமான பெண்ணுக்கும் மணமாகாத பெண்ணுக்கும் தோற்றத்தில் யாதொரு வேறுபாடும் இல்லை. இஃது ஒரு ஏமாற்ற நிலை. இந்நிலைதான் தொல்காப்பியர் குறிப்பிடும் **பொய்** ஆகும். புற வேறுபாடின்மை மயக்கம் செய்தலின் 'பொய்' எனப்பட்டது. இத்தகைய மயக்கத்தால் மண அடையாளம் இல்லா நங்கைமீது உள்ளம் போக்கும் இளைஞன் மேற்கொள்ளும் காதல் முயற்சிகளே **வழு** ஆகும். தொல்காப்பியர் குறிப்பிடும் "பொய்யும் வழுவும்" இவையேயாகும்.[4]

தமிழ்ச் சமுதாயத்தில் இத்தகைய செயல்களை உற்று நோக்கி ஓர்ந்து ஆவன செய்யும் இனப் பெரியோர்களையே தொல் காப்பியர் **ஐயர்** எனக்கு குறிப்பிட்டார். இவர்களே 'கரணத்தை' வகுத்து மணம் எய்திய நங்கைக்கும் மணப் பருவம் எய்தி மணமாகா நங்கைக்கும் தோற்றத்தில் வேறுபாடு காட்டுவதற்கு என்றே புற அடையாளம் கண்டனர். பெண்ணின் கற்பு எவ்வகை

3. கம்ப. சுந்தர. சூளாமணி—34.
4. **தமிழ்க்காதல்**—பக் 149-151.

யானும் ஊறுபடுதல் ஆகாது, ஊறுபடவும் விடக்கூடாது என்பது பண்டைப் பெரியோர்களின் நன்னோக்கமாகும்.

மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம்
பெண்டி ராயின் பிறர்நெஞ்சு புகாஅர்[5]

என்று சாத்தனார் கற்புக்குக் கடிய வரம்பு செய்ததும் ஈண்டு நீள நினையத் தகும். இத்தகைய குற்றத்தை அகத்திணைக் காதலர்கள் செய்யார் என்பது ஈண்டு தெளிவாக அறியத்தகும். பொதுவாக இத்தகைய குற்றம் தோன்றாதிருக்கும் பொருட்டே தாலி, தாலியுடன் மிஞ்சி (காலின் இரண்டாவது விரலில் மோதிரம் போல் மாட்டப்படுவது) என்ற மண அணிகள் தோன்றின. இவை வேண்டாத எண்ணங்கள் பிறரிடம் தோன்றாதிருக்கும்பொருட்டு ஏற்படுத்தப்பட்ட அறிவணிகளாகும். இவை பெண்ணின் அடிமைக் குறிகள் எனக் கருதுவது தவறு.

பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தை நோக்கின், பெண்ணினத் திற்குக் கற்கும் உரிமை இருந்தது; கவிபாடும் உரிமையும் அவர் களிடம் திகழ்ந்தது; காதலுரிமையும், காதலனை இடித்துரைக்கும் உரிமையும், இல்லறத் தொழிலுரிமையும், பெருமையும் புகழும் எல்லாம் ஆடவருலகிற்கு நிகராகப் பெற்றிருந்தது என்பது அங்கை நெல்லியாகும். சமுதாயத்தின் நாகரிகம் அதன் மொழிச் சொற் களிலும் தெளியலாம். தலைவன் தலைவி, காதலன் காதலி, கிழவன் கிழத்தி என்னும் பால்நிகர் சொல் இணைகள் இதனை அரணாக நின்று எடுத்துக் காட்டுவனவாகும். ஒப்பினது வகை களைச் சுட்டும் தொல்காப்பியரும் இருபாலாருக்கும் ஏற்றத்தாழ் வின்றி ''பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டு''[6] என்ற நூற்பாவில் நுவன்றிருப்பதைக் காணலாம். இவை ஒத்திருந்தாலல்லது அறிவுடையாரிடம் காமக்குறிப்பு தக்கமுறையில் முகிழ்க்கா என்று உரை விளக்கமும் செய்து காட்டுவர். இன்ப நுகர்ச்சிக்கு ஏற்ற ஒப்பு வேண்டும் என்பது அவரது அறிவியல் கோட்பாடு; உடற் கூற்றினையும் உள முதிர்ச்சியையும் நன்கு அறிந்த பேராசான் அவர்.

செல்வார் அல்லரென் றியானிகழ்ந் தனனே
ஒல்வாள் அல்லளென் றவரிகழ்ந் தனரே
ஆயிடை இருபேராண்மை செய்த பூசல்.[7]

5. **மணிமேகலை**-12. சிறைசெய். அடி (45-46)
6. மெய்ப். 25. (இளம்)
7. குறுந். 43

[செல்லுதல் - பிரிந்துபோதல்; ஒல்வாள் - உடன்படுவாள் ஆயிடை - அவ்வழி; ஆண்மை - ஆளுந்தன்மை; பூசல் - ஈண்டுப் பிரிவுத் துன்பம்.]

என்ற அவ்வையார் பாடலில் இருபாலார்க்கும் ஆளுந்தன்மை உண்டு என்பதை அறிகின்றோம். எண்ணத்தைத் திறம்பட ஆளும் உரிமை இருபாலார்க்கும் உரியது என்ற எண்ணம் பண்டைத் தமிழரிடம் ஊறிக் கிடந்தது என்பது இதனால் தெளிகின்றோம்.

தமிழ்ச்சமுதாயத்தில் தலைவியே இல்லத்தரசியாகத் திகழ்ந்தாள். மனைவி, இல்லாள் என்ற சாதாரணச் சொற்கள் அவளுக்கே உரியவை. இவற்றிற்கு நிகரான ஆண்பாற் கிளவிகள் இல்லாமை இக்கருத்தினை அரண் செய்கின்றது. திருமணச்சடங்கு தலைவன் தன் அகவாழ்வின் உரிமை அனைத்தையும் தன் துணைவிக்கு வழங்கும் ஆவணக்களரியாகும். Better half என்ற ஆங்கிலச் சொற்றொடரும் இக்கருத்தின் எதிரொலியையே குறிக்கின்றது. தலைவனது தகாத ஒழுக்கத்தைக் கடிந்து அவனை இடித்துத் திருத்தும் சொல்லுரிமை பெற்றவள் இல்லத்தலைவி. 'அஞ்ச வந்த உரிமை'[8] என்ற தொல்காப்பியச் சொற்றொடரை நோக்கின் இவ்வுரிமை அறியப்படும். வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்ற அகத்துறைகள் கற்புடைத் துணைவியின் உரிமையிற் பிறந்தவை என்பது நீள நினையத் தகும் கருத்தாகும். இத்தகைய உரிமை தலைவிக்கு வழங்கியிருந்த தமிழ்ச்சமுதாயத்தில் பெண்ணுலகம் ஏற்றம் பெற்றிருந்தது என்று கருதுவதை விட்டு திருமணத்தைப் பெண்ணினத்திற்கு அடிமைப் பொறி வழங்கும் நிகழ்ச்சி என்று கருத்தினை ஏற்றிக் கூறுதல் சிறிதும் பொருந்தாது. காதலர்களின் கள்ளத்தனத்தையும் கணவன் மனைவியைக் கைவிடும் போக்கையும் தடுத்து நிறுத்தச் செய்யப்படும் சடங்கே கரணம் என்று கருதுவது தமிழ் நாகரிகத்தை இகழ்வதாகும்.

திருமணச்சடங்கு கற்பாகாது; கற்பினையும் விளைவிக்காது. ஓரம் போகியார் என்ற சங்கப்புலவர் களவுவழி ஒழுகும் குமரி நங்கைக்கு **யாய்** என்று திருநாமமும் சூட்டிவிடுகின்றார். "யாயே என வேட்டோளே"[9] என்ற அவர் வாக்கினை நோக்குக. மணந்து மனைவியாகி மகப்பேறு அடைந்து தாயாவாள் என்பதை எண்ணியே இவ்வாறு குறிப்பிட்டனர் போலும். இதன் முதல்

8. கற்பியல் - 5
9. ஐங்குறு - (1—10)

உரையாசிரியரும் "ஈண்டுத் தலைவியை 'யாய்' என்றது எதிர்ப் பட்ட ஞான்றே கற்புப் பூண்டொழுகுகின்ற சிறப்பை நோக்கி" என்று கூறுவர். இது சிறந்த உரை. ஊழ் கூட்டி வைத்த காதலனை எதிர்ப்பட்ட அன்றே அவள் கற்புக்கடம் பூண்டாள் என்பது இவ்வுரையாசிரியரின் கருத்து. திருமணத்தால் கற் பொழுக்கம் உண்டாவதில்லை. "கரணம் என்பது திருமண அடையாளமே; கன்னிமைகழிந்து ஒருவனுக்கு மனைவியானாள் என்பதைக் காட்டும் 'மனையணி' என்பதாகும் அது" என்ற டாக்டர் மாணிக்கனார் கொண்ட கருத்து ஒப்புக்கொள்ள வேண்டிய கருத்தாகும்.[10]

சங்க இலக்கியங்களை நுனித்து நோக்கின் பண்டு நிலவிய கரணக்குறிகளை உய்த்துணர முடியும்.[11] சிலவற்றைக் காண் போம்.

**சிலம்புக்கழி நோன்பு :** சங்க காலத்தில் பெண் குழந்தைக்குக் காலிற் சிலம்பு அணியும் வழக்கம் இருந்தது. அகநானூற்றுத் தலைவியொருத்தி தமர் அறியாமல் தலைவனோடு உடன்போய் விட்டதாகக் வருந்திக் கூறும் தாய்க்கூற்றில் இதனைக் காணலாம். "என் மகள் சிறு பருவத்தினளாக இருக்கும்பொழுது என் பெரிய இல்லத்தின்கண் காற்சிலம்பு ஒலிப்பச் சிறு தோழியருடன் பந்து விளையாடுவாள். சிறிது ஆடினும் கால் நோவுமே, நாவறண்டு போகுமே என்று எண்ணி அவளை அழைத்து கிண்ணம் நிறைந்த பாலைப் பருகுமாறு செய்வேன். எனக்காக ஒருவாய் பருகினாய், உன் தந்தைக்காகவும் ஒருவாய் பருகுவாய் என்று சொல்லில் மயக்கிப் பிறந்தநாள் தொட்டுப் பாலூட்டி வளர்த்தேன்" என்று குழவிப் பருவத்துக் காட்டிய அன்பினைத் தாய் எண்ணிப் பார்க் கின்றாள்.

"சீர்கெழு வியனகர்ச் சிலம்புநக இயலி
ஓரை யாயமொடு பந்துசிறி தெறியினும்
வாரா யோவென் றேத்திப் பேரிலைப்
பகன்றை வான்மலர் பனிநிறைந் ததுபோல்

10. **தமிழ்க்காதல்** - பக். 154
11. தொல்காப்பியர் கரணம் வேண்டும் எனக் கூறினாரே யன்றி, கரணக்குறி இதுவெனக் குறிப்பிடவில்லை. காலத்திற்கேற்பப் புதியபுதிய கரணக்குறிகள் கொள்ளட் டும் எனவிட்டுவைத்தார் போலும்! தங்காலத்துக்கரணக் குறியைக் கூறின் இதுதான் குறியெனக் கொண்டு மக்கள் அடிமைப்படாதிருக்க எண்ணினார் போலும்!

பால்பெய் வள்ளம் சால்கை பற்றி
என்பா டுண்டனை யாயின் ஒருகால்
நுந்தை பாடும் உண்ணென் றூட்டிப்
பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்துயான்
நலம்புனைந் தெடுத்தவென் பொலந்தொடிக்
குறுமகள்''[12]

[சீர் - சிறப்பு; வியநகர் - அகன்ற இல்லம்; இயலி - முரலும் படி; பசன்றை - ஒருவகைக் கொடி; வான்மலர் - வெள்ளிய மலர்; வள்ளம் - கிண்ணம்; பாடு - பகுதி, கூறு; பொலந் தொடி - பொன் வளையல்]

என்ற பாடற்பகுதியால் இது பெறப்படும். இதனால் பாலுண் பருவத்துச் சிலம்பு இடும் வழக்கம் இருந்தது என்பதை அறியலாம்.

இன்னொரு அகப்பாட்டாலும் இச்செய்தி அறியப்படும். இரவுக்குறியில் காதலர்கள் சந்திக்கின்றனர். தலைவனது புணர்ச்சி வேட்கையைத் தணிக்கத் தலைவி மழை பெய்யும் நள்ளிரவில் இரவுக் களம் வருகின்றாள். தனது நடமாட்டத்தைத் தன் வீட்டார் தன் சிலம்பின் ஒலியால் அறிந்து விடலாகாதே என்று அதன் ஒலிப்பினைக் கட்டி ஒடுக்கி வந்து செல்கின்றாள்.

"அஞ்சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்[13]

[துஞ்சூர்யாமம் - ஊர்துஞ்சு யாமம்]

என்று தலைவன் தலைவியின் அன்பையும் அறிவையும் வியக்கின்றான்.

இன்னொரு உடன் போக்கு நிகழ்ச்சியிலும் இச்செய்தி வருகின்றது. தலைவனுடன் செல்ல விரும்பிய தலைவி படுக்கையினின்றும் இரவில் எழுந்து போகும்பொழுது சிலம்பின் ஒலி கேட்டுத் தாய் அறிந்துகொள்ளுவாள் என்று தலைவி சிலம்பினைக் கழற்றிக் கையில் எடுத்துக் கொண்டு போகின்றாள்.

அரிபெய்து பொதிந்த தெரிசிலம்பு கழீஇ
யாயறி வுறுதல் அஞ்சி
வேயுயர் பிறங்கல் மலையிறந் தோளே.[14]

[அரி - பரல்; தெரிசிலம்பு - ஆராய்ந்து எடுத்த சிலம்பு; கழீஇ - கழற்றி; வேய் - மூங்கில்; பிறங்கல் - பக்க மலை; இறந்தோள் - போய்விட்டாள்]

12. அகம் - 219
13. ஷை - 198
14. ஷை - 311

என்ற பாடற்பகுதியால் இதனை அறியலாம்.

குறுந்தொகைத் தலைவியொருத்தி தமரின் நீங்கித் தலைவனுடன் செல்கின்றாள். பாலை நிலத்தில் இவர்கள் போகும் பொழுது ஆற்றெதிர்ப்பட்டோர் இவர்களைக் காண்கின்றனர். இவர்கள் யாரோ என ஐயுறுகின்றனர்.

'வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே நல்லோர்
யார்கொல் அளியர் தாமே'[15]

என்ற பாடலில் இதனைக் காணலாம். "வில்லேந்திய இவன் காலில் வீரக் கழல்கள் உள்ளன. வளையல் அணிந்த இவள் மெல்லடிகளில் சிலம்புகள் உள்ளன" என்று காலடி நோக்கி இன்னும் திருமணம் ஆகாதவர்கள் எனத் துணிகின்றனர். ஈண்டும் சிலம்பு அணிந்துள்ளமை திருமணம் ஆகாமையை உணர்த்துதல் காண்க. எனவே, காலில் சிலம்பு உடையவள் குமரியாவாள் என்பது அறியப்படும்.[16]

திருமணம் ஆன நங்கைக்கு சிலம்புக்கழிவு இன்றியமையாத குறியாக அமைந்தது; சிலம்புகழி நோன்பு என்பது ஒரு கரணமாகக்-சடங்காகக்-கொள்ளப்பட்டது. சங்க காலத்தில் இது ஒரு சமுதாய வழக்காகவும் இருந்தது. தலைவி உடன் போகிய காலத்து உறவினரில்லாத புதியதொரு நாட்டில் திருமணம் செய்து கொண்டாலும், ஆண்டும் சிலம்பு கழீஇநோன்பு நிகழும்.

உள்ளாது கழிந்த முள்ளெயிற்றுத் துவர்வாய்த்
சிறுவன் கண்ணி சிலம்பு கழீஇ
அறியாத் தேஎத்தள் ஆகுதல் கொடிதே.[17]

[முள்ளெயிறு-கூரிய பல்; வன்கண்ணி - கண்ணோட்டமில்லாதவள்.]

என்ற பாடற்பகுதியில் தன் மகள் சென்ற நாட்டில் சிலம்பு கழித்தல் கொடிது என ஒரு தாய் சினப்பதைக் காண்கின்றோம்.

---

15. குறுந்-7.
16. திருமணம் ஆன கண்ணகிக்குக் காலில் சிலம்பு இருந்தது. சிலப்பதிக்காரகாலத்தில் இவ் வழக்கு இறந்தது போலும்.
17. அகம்-385.

சிலம்பு கழீஇய செல்வம்
பிறருணக் கழிந்தவென் னாயிழை யடியே.[18]

என்ற நற்றிணைப் பகுதியால் சிலம்பு கழித்தல் ஒரு செல்வம் என்றும் அதனைக் காணும் பேற்றை ஈன்ற தாய்க்கு அளிக்காது பிறர்க்கு அளிக்கப் போயினாளே தன் மகள் என்றும் ஒரு தாய் வருந்துவதை அறியலாம்.

கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போன காலை யான.[19]

என்னும் தொல்காப்பிய விதி நடைமுறையில் இருந்ததையும், அவ்வழக்கின் உட்பொருளையும் மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் விளக்குகின்றன.

எனினும், சிலம்பு அணி நோன்பு என்ற ஒருவிழா மரபுஇருந்த தற்கு இலக்கியச் சான்றுகள் இல்லை. அஃது இயல்பான வழக்காக இருந்தது போலும் என ஊகிக்கலாம். இந்தக் குழந்தை யணி திருமணத்திற்குச் சிறிது முன்னர்த்தான் நீக்கப்படும் என்பது அறியத் தக்கது.

நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும்
எம்மனை வதுவை நன்மனம் கழிக.[20]

என்ற ஐங்குறுநூற்றுச் செய்யுட் பகுதி ஒரு நற்றாயின் வேட் கையை உணர்த்துகின்றது. சிலம்பு கழீஇயும் (சிலம்பு கழீஇ நோன்பும்) வதுவ மணமும் தலைவியின் பிறந்தகத்தில் நிகழ்த்துதல் சிறப்பாகும். உடன் போக்கு நிகழின் இச் சடங்குகள் தலைவன் மனைக்கண் நிகழ்த்துவர். இங்கு நற்றாய் சிலம்பு கழீஇ[21] தலைவன் இல்லத்தில் நிகழந்தாலும், வதுவை மண மாவது[22] தன் இல்லத்தில் நிகழ வேண்டும் என்று விரும்பு கின்றாள். இக்காலத்தே கருமணி அணிதல் சடங்கு நாத்தூணங் கையரால் நிகழ்த்தப்பெறுதல் மரபாதல் போலவே சிலம்பு கழித்தல் என்னும் சடங்கு அக் காலத்தில் இவர்களால் நிகழ்த்தப்

18. நற்-279.
19. கற்பு-2
20. ஐங்குறு-399.
21. இச் சடங்கிற்குத் தலைமகள் உண்ணா நோன்பிருத்தல் மரபு ஆதலின் இது 'சிலம்பு கழீஇ நோன்பு, எனப் பட்டது.
22. தலைவியின் இரு முதுகுரவரும் நீர் வார்த்துத் தம் மகளைத் தலைமகன் கையில் ஓம்படை செய்யும் சடங் காகும்.

பெறுதல் மரபாக இருந்தது. வதுவை மணம் நிகழும் முறை அகநானூறு விளக்குகின்றது.[23] சிலம்பு கழித்தல், உள்ளதை ஒழித்தல் என்னும் எதிர்மறை அடையாளம் ஆகும். இயல்பாக வளரும் தலைமயிரை மழித்தல் துறவுக் கோலம் ஆதல் போல இருந்த சிலம்பினை நீக்குதலும் திருமணத்தின் அறிகுறியாயிற்று.

**மலரணியும் மரபு:** மங்கை நல்லாள் ஒரு மணவாட்டி என்று அறிவிப்பதற்குப் பல அடையாளங்கள் ஒவ்வொரு திணைக் கேற்பவும் இருந்திருத்தல் கூடும்; அவை இலக்கியத்திலும் இருந் திருத்தலும் கூடும். சங்கப் பாடல்களை நுணுகிக் கற்பார்க்கு மற்றோர் அடையாளமும் வழங்கியமை தெரிய வரும். இஃது ஓர் உடன்பாடான அடையாளம்; பெரிதும் வழக்கில் பரவியிருந்த காரணம். அகநானூற்றுத் தலைவி யொருத்தி ஊரலருக்குக் கரணம் கூறுகின்றாள்: "ஓரிளைஞன் எங்கிருந்தோ விரைகின்ற குதிரையினை யுடைய தனது தேரைச் செலுத்தி ஞரேலென வந்து குவளைக் கண்ணியை என் பின்னிய கூந்தலில் நான் விரும் பாதிருக்கவும் வாளா சூட்டினான்; வளரும் எழுச்சியினையுடைய என் இள முலைகளையும் கூர்ந்து நோக்கிவிட்டுச் சென்று விட் டான். இச் செயலுக்கே ஊர் என்னை ஒரு வகையாக நோக்க லாயிற்று. புன்னைத் தாதின் நிறத்தையும் பசலை படர்ந்த என் மேனி நிறத்தையும் உற்று நோக்கிற்று" என்பதாக.[24] கூந்தலில் பூவைக் கண்ட அளவிலேயே தன்மீது ஊர்ப் பார்வை மாறி விட்டதே என்று தலைவி நொந்து கொண்டாலும், ஒருவனோடு ஒருத்திக்கு உறவு உண்டு என்பதற்கு மலர் போதுமான அடை யாளம் என்று ஊரார் துணிவுற்று அலர் மொழிந்தனர் என்பதே இவண் நாம் அறிய வேண்டியதொன்று.

தன் மகள் தலைவனுடன் கூடி உடன் போயினள் என்று செவிலி கூறியதைக் கேட்ட நற்றிணைத் தாயொருத்தி இவ்வாறு கூறுவாள்:

அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்
இன்னா இன்னுரை கேட்ட சின்னாள்
அறியேன் போல உயிரேன்
நறிய நாறுநின் கதுப்பென் றேனே.[25]

23. அகம்-86.
24. ஷை-180.
25. நற்-144.

[அம்பல்-பரவாத அலர்; உயிரேன்-மூச்சு விட்டேனுமில் லேன்; கதுப்பு-கூந்தல்; நாறுதல்-புதிய மணம் கமழ்தல்]

''ஊர்ப் பெண்டுகள் உன் மகள் காதலுறவினைப் பேசுவதை அறி வேன், ஆனால் அதுபற்றித் தெரிந்திருந்தும் தெரியாதவள்போல் வாளா இருந்தேன். ஒரு நாள் 'நின் கூந்தல் நறுமணம் வீசு கின்றதே' என்று கேட்டுவிட்டேன்'' என்று தாய் தன் மகள் உடன்போனதற்குத் தானே காரணமெனக் கூறு கின்றாள். கன்னிப் பெண்களின் கூழையில் மலர் மணத்தற்கு இடம் இல்லை. அன்னை அதுபற்றி வினவியதும் களவு வெளிப் பட்டதாக எண்ணி இனி இல்லத்தில் இருத்தல் பொருந்தாது என்று அன்னைக்கு அஞ்சி அருமை மகள் உடன் போயினாள். இயற்கை வனப்பு மிக்க சூழலில் காதலர்கள் இன்பந் துய்க்குங் கால் காதலன் காதலியின் கருங்குழலில் பூங்கொத்துகளைச் சூடி அணிசெய்து மகிழ்வது இயல்பு. இல்லம் திரும்பும் தலைமகள் தன் குழலிலிருந்து பூவை நீக்கி விடுவாள். மலர் அகன்றாலும் மலர் இருந்த கூந்தல் மணக்குமன்றோ? ஆதலின் தாய் மலரைக் காணா விடினும் அதன் மணத்தை அறிந்து கதுப்பு நறிய நாறும் என்று வினாவுவாளாயினள்.

முல்லை நிலத்தில் ஒரு நிகழ்ச்சி. இடைமகன் சூடிய முல்லைத் தொடையையும் முல்லைப் பூச்சரத்தையும் புறத்தே தெரியாதபடி தன் கூந்தலுக்குள் மறைத்து வைத்துக் கொள்ளுகின்றாள் முல்லை நிலத்து மங்கை. இவள் தான் பொதிந்து வைத்த நினைவின்றி கூந்தலில் வெண்ணெய் தடவுங்கால் கூழை யுள்ளிருந்த பூ அன்னையின்முன் விழுந்தது. அன்னை நாணினாள். அவளை ஒன்று வினவவில்லை; சினக்கவும் இல்லை. காரணம் அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. இந்த நிகழ்ச்சியைத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

புல்லினத் தாய மகன்சூடி வந்ததோர்
முல்லை யொருகாழும் கண்ணியும் மெல்லியால்
கூந்தலுட் பெய்து முடித்தேன்மன் தோழி!யாய்
வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே
அன்னையும் அத்தனும் இல்லரா யாய்நாண
அன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ.[26]

26. கலி-115.

என்பது தலைவியின் கூற்று. அன்னை நெருப்பைத் தொட்டவர் போலக் கையை விதிர்விதிர்த்து அவ்விடத்தை விட்டு அகன்றாள். யாருங் காணாமல் புதிதாகக் கள் குடித்தவன் மெய் மறந்து வாயால் உளறுதல்போல் தன் நிலை ஆயிற்று என இக்களவு நங்கை பூவால் களவு வெளிப்பட்டு விட்டது என்றும் நடுங்குகின்றாள். யாருக்கு மறைக்க வேண்டும் என நினைத்தாளோ அவருக்கு முன்னே அந்தப் பூ விழுந்து விட்டதே என்பதால் அவளிடம் நடுக்கமும் அச்சமும் தோன்றுகின்றன.

பண்டைத் தமிழ்க் குமரி மலர் அணியாள்; மலர்சூடின் கன்னியாகாள், ஒருவனை வரித்தாள் என்பது பண்டைத் தமிழ்ச் சமுதாய வழக்காகும். இன்று இவ்வழக்கம் இல்லாமையால் நாம் வியப்படைதல் கூடும். மேலும் சில சான்றுகள் நம்மைத் தெளிவிக்கும். குறுந்தொகையில் ஒரு நிகழ்ச்சி, இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகன் இனி தலைவியை மணந்து கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை என்று தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

இரண்டறி கள்விநங் காத லோளே
முரண்கொள் துப்பிற் செவ்வேல் மலையன்
முள்ளூர்க் கானம் நாற வந்து
நள்ளென் கங்குல் நம்மோ ரன்னள்;
கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே.[27]

[முரண் கொள்-மாறுபாடு கொண்ட; துப்பு-வலிமை; கானம்-மலைக் காடு; கங்குல்-இரவு; விரவுமலர்-பலவாகக் கலந்த பூக்கள்; சாந்து-சந்தனம்; கதுப்பு-கூந்தல்; அமரா-பொருந்தாத; வைகறை-விடியற்காலை]

''பல மலர்களைச் சூடி மூக்கிற்கினிய மணம் பரப்பிய இரவில் வந்து முயங்கி எனக்குரியவளாகின்றாள். பின்பு சூடிய மலர்களை உதிர்த்துக் கலவியிற் கலைந்த குழலைச் சீர்படுத்தி யாதொரு மாறுபாடும் தோன்றாதபடி காலையில் தன் இல்லத்தாருடன் ஒத்து ஒழுகா நிற்கின்றாள். எனக்கு ஏற்பவும் தன் தமருக்கு ஏற்பவும் இடமறிந்து நடந்து கொள்ளும் என் காதலி இரண்டறி கள்வியாவாள்'' என்று தன் காதலியின் அறிவுக் கூர்மையை

27. குறுந்-312

வியந்து போற்றுகின்றான் தலைவன். கூந்தலிற் பெய்த மலர் தானே உதிர வில்லை; வேண்டுமென்றே உதிர்க்கின்றாள். அன்போடு காதலன் சூடிய மலரை அச்சத்துடன் நினைந்து உதிர்த் தாள் எனின் குமரியர் மலரணிதல் சமுதாய வழக்கிற்கு ஒவ்வா தென்பது தெள்வாகின்றதன்றோ?

முல்லைக் குமரி ஒருத்தி கொண்ட கவலை இக்கருத்தினை மேலும் அரண் செய்கின்றது.

பெய்போ தறியாத்தன் கூழையுள் ஏதிலார்
கைபுனை கண்ணி முடித்தாளென்று யாய்கேட்பின்
செய்வதி லாகுமோ மற்று.[28]

[போது-பூ; கூழை-குமரியின் கூந்தல்; கைபுனை-கையால் புனைந்த; கண்ணி-தலைமாலை; யாய்-தாய்; செய்வது-வெகுளாமற் செய்வது.]

என்ற பாடற்பகுதி இவள் கவலையை உணர்த்துகின்றது. கவலைக்குக் காரணம்தான் என்ன? முல்லை நிலப் பகுதியில் ஆயர்கள் ஏறுகோள் விழா நடத்தினர். ஆயர்பாடிக் குமரிய ரெல்லாரும் அதனைக்கண்டு களிக்கக்குழுமியிருந்தனர். செவியிலே மறையையுடையகாளையை ஆயஇளைஞன் ஒருவன் மடக்கினான்; அடக்கினான். அந்தக் காளை அந்த இளைஞன் தலையிற் சூடியிருந்த முல்லைச் சரத்தைத் தன் கொம்பினால் பற்றிக் கொண்டு சுழற்றியது. கொம்பு சுழன்ற வேகத்தில் ஒரு முல்லைப் பூ தனித்துப் பறந்து சென்று எங்கோ வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஓர்ஆய் மகளின் கூழைக் கற்றையுள்[29] போய் விழுந்தது. இழந்த பொருள் எதிர்பாராது கிடைப்பின் ஆவலுடனும் ஆசையுடனும் அதனைப் பற்றிப் போற்றிக் கொள்வது போல, தானாக வந்து கூந்தலில் வீழ்ந்த பூவைக் கீழே நழுவி விழாமல் அந்த ஆய் மகள் தலையில் முடித்துக்கொண்டனள். இது தன் தாயின் காதிற்கு எட்டியிருத்தல் கூடும் என்று அஞ்சு கின்றாள்; அயலான் கை தொட்டுத் தலையில் வைத்த கண்ணிப் பூவை விழைந்து முடித்துப் பொதிந்து கொண்டமைக்குத் தாய்

28. கலி-107
29. கூழை-இளங்குமரியின் கூந்தல். இது நீண்டு வளர்ச்சி பெற்றிருப்பதில்லை. இன்னும் வளர வேண்டும் என்ற குறையுடையது. கூழைக் கிளவியைக் குமரியர்கூந்தலுக்கு ஆட்சி செய்யும் இலக்கிய வழக்கைக் காண்கிறோம். (குறுந்-113; நற்-140; அகம்-315; கலி-107)

அடங்காச்சினங் கொண்டால் என்செய்வது எனக்கற்பனை செய்து கொண்டு கவல்கின்றாள் இந்த முல்லைக் குழலி. இவள் கவலை நமக்கு அறிவிப்பது யாது? குமரிக் கொண்டை பூ மணம் அறியாதது என்பது. பூவணியும் வழக்கம் திருமணம் தொடங்கி மேற்கொள்ளப் படுவது. குமரியர் மலரணிதல் ஆகாது என்று தமிழ்ச் சமுதாயம் கொண்ட முறைக்குக் காரணம் இருத்தல் வேண்டுமன்றோ?

"பொலிவுடையது, கண்ணுத் கினியது, நட்பாடத் துணை யாவது, கைக்கு அழகியது, மணம் பொதிந்தது, மனத்தைக் கிளறுவது, காதலுக்கு நாகரிகத் தூதாவது: அனைய பெருஞ் சிறப்பும் வாய்ந்த ஒரு சிறுபொரு பூ; பூவனையர் பூப்பெய்திய குமரியர்."[30] இக் கருத்தினைச் சங்கப் பாடல்களால் அறியலாம்,

கோடல் எதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையொ டிடைப்பட விரைஇ
ஐதுதொடை மாண்ட கோதை போல
நறிய நல்லோள் மேனி
முறியினும் வாய்வது முயங்கற்கும் இனிதே.[31]

[கோடல்-காந்தள் மலர்; எதிர் முகை-அரும்பி மலராத நிலையிலுள்ள; நாறு-மணம் கமழும்; விரைஇ-கலந்து; ஐது-அழகியதாக; முறி-தளிர்; முயங்கல்-தழுவுதல்]

வேங்கையும் காந்தளும் நாறி
ஆம்பல் மலரினும் தான்தண் ணியளே[32]

காதற்குமரி முல்லை, குவளை, வேங்கை, காந்தள், ஆம்பல் இவை போல்பவள் எனவும்; ஐம்மை, நறுமை, இனிமை, தண்மை இவை வாய்ந்த மென்மையள் எனவும்; பூவாகவும் பூவின் தன்மையளா கவும் போற்றப் படுகின்றாள். மணமாகா மகளிர் மலர்சூடி மணம் பரப்பிப் பிறரைக் கவர வேண்டுவதில்லை; கவருதலும் கூடாது. அத்தகைய செய்புனைக்கோலம் கற்புநெறிக்கு ஒவ்வாது; காதல் நெறியையும் வளர்க்காது. எனவே, கன்னியர் பூவணி தலைத் தமிழ்ச் சமுதாயம் ஆதரிக்க வில்லை.

30. **தமிழ்க் காதல்**-பக் 163
31. குறுந். 62
32. ஷை. 84

**பூவணியும் உரிமை:** மங்கையர் மலரணியும் உரிமையைத் திருமண நாள் தொடங்கிப் பெறுகின்றனர். திருமணம் ஆனதற்கு அடையாளமாகப் பூவணியும் கரணம் செய்யப்பெறும் செய்தியாகும்.

எரிமருள் வேங்கை இருந்த தோகை
இழையணி மடந்தையில் தோன்றும் நாட
இனிதுசெய் தனையால் நுந்தை வாழியர்
நன்மனை வதுவை அயரயிவள்
பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே.[33]

[எரி-நெருப்பு; தோகை-மயில்; இழை-பொன்னாலான அணி; மடந்தையில்-மடந்தை போல]

இதில் "செந்நிறவேங்கைமலர்மீது இருந்த மயில் நகையணிந்த மங்கை போலக் காட்சியளிக்கும் நாட்டவனே, நல்லது செய்தனை. நின் குடும்பம் வாழ்க. திருமணத்தைக் கொண்டாடும்படி இவள் கூந்தலில் மலர் சூட்டினாய்" என்று தலைவன் தலைவியைத் திருமணம் புரிந்து கொண்டபொழுது மணச்சடங்கில் ஒன்றாகிய தலைவியின் கூந்தலிலே மலர் சூடுதலை நிகழ்த்தக் கண்ட தோழி எல்லையற்ற மகிழ்ச்சியுடையவளாய்த் தலைவனைப் பாராட்டி மனமார வாழ்த்துகின்றாள். இங்குக் கூந்தலைப் பின்னி மலரணிந்தான் என்று கூறாமல் பின்னிய கூந்தலில் மலரணிந்தான் என்று கூறுவது சிந்திக்கத் தக்கது. பின்னியநிலை குமரிக் கோலம்; மலரணிகை கற்புக் கோலம். இச் சடங்கு நிகழுங்கால் தலைவனது கை தலைவியின் கூந்தலைத் தொடும். கூந்தலைத் தொட்டானுக்குக் குமரி உரிமையாகின்றாள்.

இவள் ஒலிமென் கூந்தல்
உரியவாம் நினக்கே.[34]

குறுந்தொடி மகளிர் நாறிருங்
கூந்தற் கிழவர்[35]

என்ற இலக்கிய வழக்குகளால் கூந்தலுக்கு உரியவன் அவள் கொழுநனே என்ற மணவழக்கு அறியப்படும். அவன் குமரியின் கூந்தலில் மலர் வேய்ந்து மணம் கொள்வன் என்பது குறிப்பு.

33. ஐங்குறு-294
34. குறுந். 225
35. புறம்-113

பண்டு நடைபெற்ற திருமண முறைகளை ஒரே பாடலில் தொகுத்துக் கூறுவர் நல்லாவூர்க் கிழார் என்ற சங்கப்புலவர்.

புதல்வர் பயந்த திதலைய வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோர் பெட்கும் பிணையை ஆகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றை[36]

[திதலை-தேமல்; வால் இழை-தூய அணிகள்; பெட்கும்-விரும்பிப் பேணும்; ஈர்இதழ்-குளிர்ந்த இதழ்; கதுப்பு-கூந்தல்]

இதில் "குழந்தைகள் பெற்ற இல்லற மாதர் ஒருங்கு கூடி, 'கற்பு வழாமல் அறம்பல செய்க, கொண்டானைப் பேணி ஒழுகுக, தக்க வாழ்க்கைத் துணை ஆகுக' என்று திருமணக் காலத்து மணப் பெண்ணை வாழ்த்துவர் எனவும், கூந்தல்மேல் பூவும் பிறவும் விளங்க நன்மணம் நிகழ்த்துவர்" எனவும் கூறுவதைக் காண்க. திருமணம் நடைபெற்றது முதல் மகளிர் பூவணிவர் என்பதற்கு இப்பாடலும் குறிப்பிற் சான்றாதல் அறியப்படும்.

ஆனால், இம் முடிபுகளை நினைந்து களவுத்துறைப் பாடல் களைக் கற்கும்போது எதிர்ச் சான்றுகள்போல் சில தோன்றக் கூடும்; குமரிக் காலத்துப் பூச்சூடும் வழக்கம் உண்டு போலும், அது சமுதாய விலக்கன்று என்று காட்டுவது போலச் சில செய்யுட்கள் காணப்படும்.[37] இவ்வாறு வரும் பகுதிகள் மேற்காட்டிய முடிவுக்கு மாறான சான்றுகள் எனக் கருதிவிடல் வேண்டா. துறைகளோடு பொருத்தி நேர்பட ஆராயின், இயற்கைப் புணர்ச்சியிலும் உடன் போக்கிலும் இன்பக் களிப்பிலும் இன்ப எதிர்பார்ப்பிலும் நீர் விளையாட்டிலும் இவை குமரியர் பூவணிந்த குறிப்புகளாகவே இருக்கும்.

36. அகம்-86
37. அகம்-198; நற்-264, 245; குறுந்-300

## இல்லற நெறி

தலைவனும் தலைவியும் பல்லோர் அறியத் திருமணம் புரிந்து கொண்டு வாழ்க்கை நடத்துதலே **இல்லற நெறி** யாகும். ஆசிரியர் தொல்காப்பியனார் 'கற்பு' அல்லது இல்லற நெறியை,

மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்
இவைமுத லாகிய இயல்நெறி பிழையாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே.[1]

என்று குறிப்பர். 'மறைவெளிப்படுதலும் தமரிற் பெறுதலும்' என்பதுபற்றித் 'திருமண முறைகள்' என்ற தலைப்பில் விளக்கப் பெற்றது. மணவினை நிறைவேறிய பின்னர் மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு ஆகிய ஐந்து கூறுகளும் அடங்கிய பகுதியே கற்பென வழங்கப்பெறுவது; இதுவே களவிற்குப் பிறகு தலைவனும் தலைவியும் ஒன்றிய நிலையுடன் வாழும் இல்லற நெறியாகும். தொல்காப்பியத்தில் **கற்பு** என்று வரும் இடங்களை யெல்லாம் ஆராயின்[2] அஃது '**இல்லறம்**' என்ற பொருளையே குறித்தல் அறியலாம். கற்பு என்பதற்கு 'மகளிர்க்கு மாந்தர்மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி' என்று இளம்பூரணரும், 'தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதொரு மேற்கொள்' என்று நச்சினார்க் கினியரும் கூறுவர்.[3] இனி ஆசிரியர் தொல்காப்பியர் கூறும் பகுதிகளை நோக்குவோம்.

### முதலாவது : மலிவு

**மலிவு** என்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலிய வற்றால் மகிழ்தல். அதாவது களவு முற்றி மணந்து கொண்ட

1. செய்யுளி. 179
2. அகத்திணை-44; களவியல்-1, 23, 51; கற்பியல் 1, 11, 21; பொருளியல்-32, 37, 51.
3. பொருளியல்-31 (இளம்); நூற்பா 53 (நச்)

காதலர் மனக்குறை தீரக் கூடிக் கலந்து இன்புற்று வாழ்தல். மலிவு-மகிழ்ச்சி. இம்மலிவுக் காலத்தே தலைவனும் தலைவியும் களவுக் காலத்தே நிகழ்ந்தவற்றை ஒருவர் மற்றவரோடு கூறி இன்புறுவர். இப்பகுதியில் நிகழும் செய்திகளைத் தொல்காப்பியர் ''கரணத்தின் அமைந்து முடிந்த காலை''[4] ''அவனறிவாற்ற அறிவும்''[5] என்ற கற்பியல் நூற்பாக்களில் தொகுத்துக் கூறியுள்ளார். இந்த நூற்பாக்கள் முறையே தலைவனுக்கும் தலைவிக்கும் கூற்றுகள் நிகழும் இடத்தைக் கூறுபவை. இவற்றில் காணும் செய்திகள் சில தொல்காப்பியர் காலத்து வழங்கிய இல்லற முறைகளை விளக்குகின்றன. அவற்றுள்

**ஒன்று :**

கரணத்தின் அமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சி.[6]

என்பது. தமிழர் மணமுறையில் நிகழ்தற்குரிய கரணம் இது என்பது தம் காலத்தில் வாழ்ந்த எல்லோரும் நன்கு அறிந்த ஒன்றாதலின் அது குறித்து அவர்தம் நூலில் விரித்து ஓதிற்றிலர். எனினும், இதுபற்றி முன்னர் சற்று விரிவாக விளக்கப்பெற்றது. ஆயினும், தொன்று தொட்டுத் தமிழர்கள் கொண்டொழுகிய திருமணச் சடங்குகள் சிலவற்றை அகம்-86, 136 பாடல்களால் ஒருவாறு உணரலாம். இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் 'வேள்வியாசான் காட்டிய முறையே அங்கி சான்றாக நிகழும் சடங்கு முறை' தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் காணப்பெற்றிலது. எனவே, ஆரியர் மேற்கொண்ட திருமண முறைக்கும் தமிழர் கொண்டொழுகிய திருமணச் சடங்கு முறைக்கும் பெரிதும் வேறுபாடுண்டு என்பது அறிதற்பாலது. இதனை,

'ஓத்துடை அந்தணன் எரிவலஞ் செய்வான் போல்'[7]

என்ற கலித்தொகைச் சொற்றொடராலும் உறுதிப் படலாம். இதில் புரிநூல் அந்தணராகிய வேதியரது வேள்விச் சடங்கு உவமையாக எடுத்துரைக்கப்பெறுகின்றது. இதனை ஊன்றி நோக்கின் இங்ஙனம் எரி வலம் வருதல் ஓத்துடை அந்தணராலன்றி

4. கற்பியல்-5
5. ஷெ-6
6. ஷெ-5
7. மருதக் கலி-(அடி-5).

எனைய தமிழ் மக்களால் மேற்கொள்ளப் பெறாத சடங்கென்பது நன்கு புலனாகும். ஆனால், இளம்பூரணர் 'சரணத்தின் அமைந்து முடிந்த காலை' என்பதற்கு, 'ஆசான் புணர்ந்த கரணத்தினால் வதுவை முடித்தபின்' என்று கூறுவர். இவர் தமிழர் முறைப்படி நடைபெற்ற வதுவை மணத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சி :** தலைவியைத் தலைவன் சண்ணுற்ற ஞான்று தலைவன்மாட்டு உளதாகிய பெருமையும் உரனும் தலைவிமாட்டு உளதாகிய அச்சமும் நாணும் மடனும் ஏதுவாக இயற்கைப் புணர்ச்சி இடையீடு பட்டுழி வேட்கை தணியாது வரைந்தெய்துங்காறும் இருவர்மாட்டும் கட்டுண்டு நின்ற நெஞ்சம் கட்டுவிடப் பெறுதல். இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன் அலரறிவுறுக்கப்பட்டு நீங்கி வரைந்தெய்துங்காறும் புணர்ச்சி வேட்கையாற் சென்ற நெஞ்சினை இருவரும் வேட்கை தோற்றாமல் தளைக்கப்பட்டதனைத் 'தளை' என்றும் கூறலாம். 'உழுந்துதலைப் பெய்த' என்ற அகப்பாட்டில்,[8]

முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சினள் உயிர்த்த காலை

என்பதனால் இயற்கைப் புணர்ச்சியின்மையும்,

அகமலி உவகையள் ஆகி முகன்இருந்து
ஒய்யென இறைஞ்சி

என்பதனால் உள்ளப் புணர்ச்சி உண்மையும் அறியலாம் களவொழுக்கப் புணர்ச்சி போல் மனத்தில் அச்சமின்றி, செயலில் விரைவின்றி, நிகழும் கற்புப் புணர்ச்சியை அடியிற் காணும் குறுந்தொகைப் பாடலில் காணலாம்.

விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிதுபெறு சிறப்பிற் புத்தேள் நாடும்
இரண்டும் தூக்கிற் சீர்சா லாவே;
பூப்போல் உண்கண் பொன்போல் மேனி
மாண்வரி அல்குல் குறுமகள்
தோள்மாறு படூஉம் வைகலோ டெமக்கே.[9]

[புத்தேள் நாடு-தேவர் உலகம்; சீர்-கனம்; சாலா-ஒவ்வா; தோள் மாறுபடுதல்-ஒருவர் இடத்தோள் மற்றவர் வலத்

8. அகம்-86
9. குறுந்-101

தோளிலும், ஒருவர் வலத்தோள் மற்றவர் இடத் தோளிலும் பொருந்தத் தழுவுதல்]

இப்பாடலில் தலைவியுடன் இன்புற்று இல்லறம் நடத்தும் தலைவன், அத்தலைவியினால் வரும் இன்பம் எப்பொருளினும் சிறப்புடையதென்று தோழி முதலியோர் அறியும்படி கூறுவதாக வந்துள்ளதைக் காண்க. இதுவே 'நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சி' யாகும்.

**இரண்டு :**

அல்லல் தீர ஆர்வமொடு அளைஇச்
சொல்லுறு பொருள்

என்பது. தலைவி தன் துன்பந் தீர ஆர்வமொடு பொருந்தச் சொல்லப்பெற்ற பொருண்மை என்று இதற்குப் பொருள் கூறுவர் இளம்பூரணர். அஃதாவது, களவுக் காலத்தில் வருந்திய வருத்தம் தீரத் தனது காதல் மிகுதி தோன்றச் சொல்லும் பொருள் இது.

யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந் ததுவே.[10]

[யாய்-என் தாய்; ஞாய்-நின் தாய்; எவ்வழி-எவ்வாறு; செம்புலம்,செம்மண் நிலம்.]

களவுக் காலத்து வருந்திய வருத்தம் தீரத் தன் காதல் மிகுதி தோன்ற இனித் தம்மிடையே பிரிவு நேராது என்று தலைவன் புலப்படுத்தித் தலைவியின் அச்சத்தை நீக்கியதை இதில் காண்க. நெஞ்சம் தம்மிற் கலந்ததனால் இப் புணர்ச்சி தெய்வத் தானாயிற்று எனத் தலைவன் தெருட்டியதும் உணரத் தக்கது.

**மூன்று :**

'சொல்லென
ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது
வானோர் அமிழ்தம் புரையுமால் எமக்கென
அடிசிலும் பூவும் தொடுதல்

என்பது. தலைவன் யாதானும் ஒன்றை நுகருங்கால் தலைவியை நோக்கி, 'நீ கையால் தொட்டது வானோர் அமிழ்தத்தை

10. குறு-40

ஒக்கின்றதே! அதற்குக் கரணம் யாதோ?' என்று கேட்பான்' இவ்வாறு புனைந்துரைத்தல் இல்வாழ்க்கையில் நிகழும் என்பதை இலக்கியங்கள் வாயிலாக அறியலாம்.

வேம்பின் பைங்காய்என் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர்.[11]

இஃது ஊடியிருந்த தலைவியின் உடன்பாடு பெறுவதற்குத் துணைபுரியும் வண்ணம் தலைவன் தோழியை வேண்டிய பொழுது அவள் கூறியது. இங்ஙனமே தலைவியும் தலைவனும் இல்லறம் நடத்தும் திறத்தை அவர் மனைக்குச் சென்று வந்த செவிலி நன்றாய்க்குக் கூறுகின்றாள்.

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்புகை கமழத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.[12]

[முளிதயிர் - முற்றியதயிர்; கழுவுறு கலிங்கம் - துடைத்துக் கொண்ட ஆடை; குய்புகை - தாளிப்பின் புகை; கமழ - மணக்க; துழந்து - துழாவி; அட்ட - சமைத்த; தீம்புளிப் பாகர் - இனிய புளிப்பையுடைய குழம்பு; ஒள்நுதல் - தலைவி.]

தலைவி சமைத்த புளிக்குழம்பைத் தலைவன் இனிதென்று கூறி உண்கின்றான். தலைவி அகம் மகிழ்கின்றாள். இந்த மகிழ்ச்சியை அவள் முகம் காட்டுகின்றது. இயல்பாகவே பொலிவு பெற்ற நுதல் மகிழ்ச்சியால் பின்னும் பொலிவு பெறுகின்றது. அம்மகிழ்ச்சியை மிகுதியாக வெளிப்படுத்தாமல் 'நுண்ணிதின்' மகிழ்கின்றாள்.

**நான்கு:**

'அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்
அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும்
ஒழுக்கம் காட்டிய குறிப்பு

11. ஷை-196
12. ஷை. 167

என்பது. துறவியர், பெரியோர், பெற்றோர் சுற்றம் முதலியோரிடம் இன்ன இன்னவாறு நடந்து கொள்ளவேண்டும் என்பதைத் தலைவன் தலைவிக்குக் கூறுவதுதான் இது. அன்னார் தலைவிக்குப் புதியவர்களாதலின் அவரவர் இயல்பிற்கேற்றவாறு தலைவி நடந்து கொள்ள வேண்டுமன்றோ? குடும்பத் தலைமைப் பொறுப்பேற்றுக் கொண்டுள்ள அவள், அக்குடும்பத் தொடர்புடையோர் இயல்பறிந்து கொள்ளுதல் இன்றியமையாததன்றோ? இத்துணை நுட்பமாக அறிந்து ஒழுகிய பண்டையோரின் இல்லற வாழ்க்கை வியந்து போற்றற்குரியது. பாரதிதாசனின் **குடும்ப விளக்கில்** சித்திரித்துக் காட்டப்பெறும் தலைவியிடம் இப்பண்புகளனைத்தையும் காணலாம்.

**ஐந்து :**

அந்தரத் தெழுதிய எழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட ஒழுகல்

என்பது. 'களவுக் காலத்தில் ஒழுகிய ஒழுக்கக் குறைபாட்டான் நிகழ்ந்த குற்றத்தை ஆகாயத்து எழுதிய எழுத்து அழிவதுபோல அழியும்படி பிராயச்சித்தம் செய்து ஒழுகுதல்' என்பது இதன் பொருள். களவுக்காலத்து உண்டாய பாவமாவது, தீண்டத் தகாத நாட்களிலும் தலைவன் தலைவியைக் கூடியது முதலியன. இதனைத் தொல்காப்பியரே,

'மறைந்த ஒழுக்கத் தோரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோற் கில்லை'[13]

என்று கூறியதனாலும் உரையாசிரியர்களது குறிப்புகளாலும் இதனை அறியலாம்.

**ஆறு :**

நோன்மையும் பெருமையும் மெய்கொள அருவிப்
பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்
தன்னி னாய தகுதி

என்பது. தலைவனால் உளதாகிய பொறையையும் கல்வி முதலிய பெருமையையும் உடைய மகவைத் தலைவி தன் வயிற்றகத்தே கொண்டிருப்பதனால், ஆராய்ச்சி மிக்க அந்தணரோடு கூடிச் செய்யத் தகும் சடங்குகளைச் செய்யும் தகுதியைக் குறிக்கின்றது

13. களவியல் - 44 (நச்.)

இது. தன்வினாய மெய் - கருப்பம். இதனால் தொல்காப்பியர் காலத்தே தமிழர்கள் குழந்தை பிறந்ததும் சில சடங்குமுறைகளை மேற்கொண்டனர் என்பது பெறப்படுகின்றது. தலைவி கருப்ப முற்றால் சுற்றம் முதலியோர்க்கு விருந்திட்டு மகிழும் வழக்கம் இன்றுபோல் அன்றும் இருந்து வந்தது என்பதை ஊகிக்கலாம்.

ஆற்றல் சான்ற தாமே அன்றியும்
நோற்றோர் மன்றநங் கேளிரவர் தகைமை
வட்டிகைப் படூஉம் திட்டம் ஏய்ப்ப
அரிமயிர் ஒழுகுநின் அவ்வயி றருளி
மறைநவில் ஒழுக்கம் செய்தும் என்றனர்;
துனிதீர் கிளவிநந் தவத்தினும்
நனிவாய்த் தனவால் முனிவர்தம் சொல்லே

இதில், 'நம் தலைவியேயன்றி சுற்றத்தாரும் நோற்று ஒரு கருப்பம் தங்கிய நினது வயிற்றைக் கண்டு உவந்தெனவும், அதற்கேற்ற சடங்கு செய்து மென்றார் எனவும், முற்காலத்து நாம் கேட்ப நமக்குக் கூறிய முனிவர் சொல்லும் உண்மையாயிற்றெனவும்' கூறியவாறு காண்க. இது தோழி கூற்று.

ஏழு :

புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதில்
நெய்யணி மயக்கம் புரிந்தோர் நோக்கி
ஐயர் பாங்கினும் அமரர் சுட்டியும்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தல்

[புனிறு - வாலாமை, ஈன்றணிமை: ஐயர் - முனிவர்; அமரர் - தேவர்]

என்பது. சிறப்பெய்தி மகப்பேறு பெற்று ஈன்றணிமை சேர்ந்த காலத்தில் எண்ணெய் ஆடும் தலைவியை முகமன் கூறுதற்கு முனிவர்மாட்டும் தேவர்களின் புதல்வர்களைப் பாதுகாத்தற் பொருட்டும்செய்யும் பெரியசிறப்புகளைக்குறிக் கின்றது இப்பகுதி. அப்பொழுது செய்யப்பெறும் சிறப்புகளாவன: பிறந்த புதல்வன் முகம் காண்டல், ஐம்படை பூட்டுதல், பெயரிடுதல் முதலியன. குழந்தை பிறந்தபின் தாய் எண்ணெய் நீராடல், பாட்டன் பாட்டியார் குழந்தைக்குப் பெயரிடல், இரவலர்க்குப் பரிசில் வழங்கல், குழந்தையைக் காக்க என்று இல்லுறை தெய்வ வழிபாடு செய்தல் முதலியன இக்காலத்திலிருப்பதைப் போலவே அன்றும்

இருந்தமை இதனால் அறியக் கிடக்கின்றது. இத்தகைய மலிவு பற்றிய பல செய்திகள் தொல்காப்பியத்தில் காணப்பெறுகின்றன.

**இரண்டாவது : புலவி, ஊடல், உணர்வு**

இவை மூன்றும் ஒன்றையொன்று பிரிக்க முடியாத பொருள்களாகும். இவற்றுள், ''புலவி அண்மைக் காலத்தது; ஊடல் அதனினும் மிக்கது'' என்பர் இளம்பூரணர்.[14] உணர்தல் என்பதனை ''ஊடலை அளவறிந்து நீங்குதல்'' என்று குறிப்பர் பரிமேலழகர்.[15] கற்பில் இவையே சிறந்த பகுதியாகும்; உளவியல் நுட்பமும் செறிந்த பகுதியுமாகும். காதலர்களின் உள்ளக் கிடக்கையை அப்படியே படம் பிடித்துக் காட்டுவது இப்பகுதி. தலைவன் தலைவியர்க்கிடையே நிலவும் அன்பு எத்தகையது என்பதைக் காட்டவே நமது முன்னையோர் இப்பகுதியை அவ்வளவு மிகைபடக்கூறியுள்ளனர் என்பது கருதத் தக்கது.

துனியும் புலவியும் இல்லாயிற் காமம்
கனியும் கருக்காயும் அற்று.[16]

என்று கூறுவர் வள்ளுவப் பெருந்தகை. துனி என்பது முதிர்ந்த கலாம். புலவி என்பது இளைய கலாம். புலவி - மன வேறுபாடு; அதாவது பொய்ச் சினம். இவை இரண்டும் நன்றாகப் பழுத்து அழுகிய பழத்திற்கும் இளங்காய்க்கும் (கருக்காய்) முறையே உவமைகளாயின. மேலும், அவர் காமத்துப்பாலில் தலைவன் வேறு மகளிரைக் கலந்தானாகக் கருதித்தலைவி ஊடியதாகக்கூறும் குறள்கள் யாவும், அவன்மாட்டு அச்செயல் நிகழ்ந்ததோ என்ற ஐயத்தால் தலைவி கருதிச் சொல்லியனவேயன்றி, பிறநூல்கள் போல், உண்மையில் நிகழ்ந்ததாகக் கொண்டு தலைவனை இழித்துக் கூறும் கருத்துடையன ஆகாமை உய்த்துணரத் தக்கது. வள்ளுவர் பெருமானும் இக்கருத்தினை,

இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல்
வல்ல தவரளிக்கு மாறு[17]

என்று குறிப்பிட்டிருதலைக் காண்க. இங்ஙனமே அப்பெரியார் தாம் கூறப் புக்க காமப் பகுதியை எல்லா நாட்டவரும் ஏற்குமாறு தூய்மைப்படுத்திக் கூறியிருப்பதை எண்ணி மகிழ்க.

---

14. கற்பியல் - 15 (உரை)
15. குறள் - 1109 (உரை)
16. ஷை - 1306
17. ஷை - 1321

இனி, தொல்காப்பியர் தலைவிமாட்டு நிகழும்ஊடல் உணர்வு களைப்பற்றிக் கூறுவதைக் காண்போம். தலைவன் தலைவியர்க்குள் புலவி முதலியன நிகழும் காலத்தில் அவ்விருவர்பாலும் வாயில்களாக நின்று பேசுவதற்குரியார் பன்னிருவர் என்பதை நாம் அறிவோம்.[18] இந்த வாயில்களோடு தலைவனது ஆற்றாமைதன்னையும் அவன் புதல்வனையும் சேர்த்துக் கூறலும் உண்டு.[19]

வாயில்கள் கூற்று நிகழ்த்துவதில் சில வரையறைகள் உள்ளன. பெரும்பாலும் வாயில்கள் தலைவன் தலைவியரிருவரும் மனமகிழச் சொல் நிகழத்துதலையே நோக்கமுடையவராயிருப்பர்.

> எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்
> புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப.[20]

என்பது தொல்காப்பியரின் விதி. இவர்கள் தலைவன்பால் குறைய வேண்டும் பொழுது அவனை நேராகச் சுட்டிக் கூறாது பிறரைக் கூறுவதுபோலக் கூறுவர். அதாவது படர்க்கையால் பேசுவது போலக் கூறுவர். அங்ஙனம் கூறுதல் **முன்னிலைப் புறமொழி** என வழங்கப்பெறும்.

> உன்கடன் வழிமொழிந் திரக்குங்கால் முகனுந்தாம்
> கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே றாகுதல்
> பண்டுமிவ் வுலகத் தியற்கை.[21]

என்ற பாலைக் கலியடிகளில் தோழியின் கூற்று முன்னிலைப் புற மொழியாக அமைந்துள்ளதைக் காண்க. 'கடன் வாங்குவோர் இரந்து வாங்கும்பொழுது கொண்டிருக்கும் முகமும் அதனைத் திருப்பிக் கொடுக்குங்கால் கொள்ளும் முகமும் வேறுபடுவது உலகத்தியற்கை' என்பது இதன் பொருள். 'முன்னர், வேட்கையை யுடைய நீ வேட்கைப் பருவத்தளாய தலைவியை இரந்து அவளது நலத்தினை நுகர்ந்து உன் வேட்கையைத் தீர்த்துக்கொண்டாய்; உன் வேட்கையைத் தணித்தவள் பின்னர் வேட்கைப் பருவத்த ளாயவிடத்து உன்னை இரக்கும்பொழுது நீ சிறிதும் இரங்கு வாயல்லை' என்ற கருத்துடன் தோழியின் பேச்சு தலைமகனை நோக்கியவாறு காண்க. இஃது இன்று **சாடை பேசுதல்** என்று

18. கற்பியல் - 25 (உரை)
19. ஷை - 37 (உரை)
20. ஷை - 37
21. கலி-22

வழங்குகின்றது. எந்நிலையிலும் வாயில்கள் தலைவி முன்னர்த் தலைவனை இழித்துரையார்.

மனைவி தலைதாட் கிழவோன் கொடுமை
தம்முள வாதல் வாயில்கட் கில்லை[22]

[தலைதாள் - தாட்டலை]

என்பது தொல்காப்பியம். தலைவன் தலைவியர் அன்பில்லாக் கொடுஞ்சொற்களைக் கூறுமிடத்து அவ்விருவர்முன் நில்லாது ஒன்றன்மேல் வைத்துச் சிறைப்புறத்தாராகக் கூறுவர்.

அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றின்
சிறைப்புறம் குறித்தன் றென்மனார் புலவர்[23]

என்பது தொல்காப்பியர் கூறும் விதி. இந்தப் புலவியும் ஊடலும் தலைவற்கும் உண்டேனும், தலைவன் பரத்தமையால் தலைவி மாட்டே நிகழ்வதாகக் கூறுதல் புலநெறி வழக்கமாகும்.

தலைவிபால் வேறுபாடு உண்டாகும்பொழுது தலைவன் அவள் சினத்தைத் தணிவித்தற்பொருட்டு நெருங்கி வந்து பணிதல் உண்டு.

காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற் குரித்தே
வழிபடுங் கிழமை அவட்கிய லான[24]

என்பது ஆசிரியர் இதற்குக் கூறும் விதியாகும். தலைவியும் தன் உள்ளத்தில் நிகழும் அன்பினை மறைத்துக் கொண்டு, வேறு பொருள் பயக்கும் சொற்களால் தன் பணிவை அவனுக்குக் காட்டுவாள்.

அருள்முத் துறுத்த அன்புபொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே[25]

என்ற தொல்காப்பியரின் விதியால் இதை அறியலாம். புலவிக் காலத்தில் இவ்வாறு மனைவி உயர்வும் கிழவோன் பணிவும் நிகழ்தல் முறையாகும் என்பது ஆசிரியரின் கருத்தாகும்.

மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய.[26]

22. கற்பியல் - 24
23. ஷை - 38
24. ஷை - 19
25. ஷை - 20
26. பொருளியல்-31

என்பது அவர் கூறும் விதி. ஏன்? அவளும் தலைவி தானே! இன்னும் இம்முறை நடைமுறையில் உள்ளதை நாம் நன்கு அறிவோம். ஆசிரியர் மற்றோர் இடத்தில்,

> கொடுமை யொழுக்கம் கோடல் வேண்டி
> அடிமேல் வீழ்ந்த கிழவன்.[27]

என்று குறிப்பிடுவர். அக வாழ்வில் தலைவனும் தலைவியும் ஒருவரை யொருவர் புகழ்ந்து கோடலும் உண்டு.

> நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியில்
> புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே.[28]

என்பது இதற்குரிய விதி. இத்தகைய மனைவி உயர்வும் கிழவோன் பணியும் கலித்தொகை 128-ஆம் பாடலுள் தலைவி கூற்றாக மிக அழகாகச் சித்திரிக்கப்பெற்றுள்ளதைப் படித்து இன்புறுக. மேலும்,

> நல்லாய்,
> பொய்யெல்லாம் ஏற்றித் தவறு தலைப்பெய்து
> கையொடு கண்டாய் பிழைத்தேன்; அருளினி.[29]

என்ற மருதக் கலியிலும் இதனைக் காணலாம். ''இதனுள் 'கையொடு கண்டை யிழைத் தேனருள்' என அடிமேல் வீழ்ந்த வாறு காண்க'' என்று உரைப்பர் இளம்பூரணர்.

புலவியும் ஊடலும் பெரும்பாலும் தலைவிக் குரியவேனும் சில சமயம் தலைவனிடமும் நிகழ்தல் உண்டு.

> உணர்ப்புவரை இறப்பினும் செய்குறி பிழைப்பினும்
> புலத்தலும் ஊடலும் கிழவோர்க் குரிய.[30]

என்பது தொல்காப்பியம். தலைவி ஊடிய வழி தலைவன் தேற்றத் தலைவி தேறும் எல்லையை இகந்தனளாயினும் (கற்பில்) அல்லகுறிப்பிட்டதன் காரணமாகத் தலைவி வாராமை குறித்தும் (களவியல்) தலைவனிடம் ஊடல் நிகழும் என்பர் ஆசிரியர். இறையனார் களவியலாசிரியர் முன்னதை 'உணர்ப்புவயின் வாரா ஊடல்' எனக் குறிப்பிடுவர்.[31] தலைவியைத் தலைமகள் நெருங்கிப் பணி மொழி பல கூறித் தான் தவறிலன் எனக் கூறியுணர்த்தவும்

27. கற்பியல்-6
28. பொருளியல்-32
29. கலி-95; கற்பியல்-145இல் இதன் உரை காண்க.
30. கற்பியல்-15
31. இறை. கள-16

அவள் ஊடல் தீராதிருத்தலே இது. இச்சமயத்தில் தோழி தலைவனை நெருங்கிப் பிணக்கினைத் தீர்க்க முயல்வாள்.

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.[32]

[அலந்தாரை-துன்பம் உற்றாரை; அல்லல்-துன்பம்; புலந்தார்-பிணங்கி யிருப்பர்; புல்லா-கலவாது.]

என்பது தலைவி குறிப்பினால் தோழி கூற்று வந்ததைக் காண்க.

புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்துஞ்
சொலத்தகு கிளவி தோழிக் குரிய.[33]

என்று தொல்காப்பியர் இதற்கு விதி செய்து காட்டுவர்.

சில சமயம் தலைவனிடம் தோழி பணி மொழியும் கூறுவள்; கடு மொழியும் கூறுவள்.

பரத்தை மறுத்தல் வேண்டியும் கிழவி
மடத்தகு கிழமை உடைமை யானும்
அன்பிலை கொடிய என்றலும் உரியள்.[34]

என்று விதியும் செய்வர் ஆசிரியர்.

மகிழ்செய்தே மொழித் தொய்யில்சூழ் இளமுலை
முகிழ்செய் முள்கிய தொடர்பவள் உண்கண்
அவிழ்பனி உறைப்பவும் நல்காது விடுவாய்
இமிழ்திரைக் கொண்க கொடியை காண் நீ;

[தேமொழி-இனிய மொழி; முகிழ்த்தல்-தோன்றுதல்; முள்குதல்-கூடுதல்; இமிழ்திரை-ஒலிக்கும் அலை]

இலங்கே ரெல்வளை யேர்தழை தைஇ
நலஞ்சேர் நல்கிய தொடர்பவள் சாஅய்ப்
புலந்தழப் புல்லாது விடுவாய்
இலங்குநீர்ச் சேர்ப்ப கொடியை காண் நீ.[35]

[ஏர்-அழகு; தைஇ-உடுத்து: சாய்-சாய்ந்து; புலந்து-வெறுத்து; புல்லாது-பொருந்தாது]

32. குறள்-1303
33. கற்பியல்-16
34. ஷை-17
35. கலி-125

இக் கலித்தாழிசைகளில் தோழி தலைவனை நோக்கிக் கூறுவதைக் காண்க. தோழி 'அன்பிலை' 'கொடியை' என்று கடிந்து கூறியதைக் கேட்ட தலைவன் சினங் கொண்டானோ என ஐயுற்ற தலைவி, தலைவனது குறிப்பை யறிவதற்கும் தான் கொண்ட துனி தலைவற்கு என்னாகுமோ என அஞ்சியும், ''நான் இறந்து பட்டாலும் சரி, அவரை அவ்வாறு கூறாதே'' என்று அயன்மை யுடைய மொழியால் கூறுவாள்.

அவன்குறிப் பறிதல் வேண்டியுங் கிளவி
அகன்மலி யூடல் அகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே.[36]

[வேற்றுமைக் கிளவி-அயன்மையுடைய சொல்.]

என்று ஆசிரியரும் இதற்கு விதி செய்வர்.

நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரைய லவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி
புலவியஃ தெவனோ அன்பிலங் கடையே.[37]

[சாஅய்-மெலியவும்; உரையல்-சொல்லற்க; அத்தன்-தந்தை; அன்பிலங் கடை-அன்பு இல்லா விடத்து]

என்ற குறுந்தொகைப் பாடலில் தலைவி ''அவரை அன்பிலை கொடியையென்னாதி. அன்பில்வழி நின் புலவி அவரைஎன் செய்யும்? அவர் நமக்கு இன்றியமையாத எமரல்லரோ?'' என்று இருவகை யாலும் தோழிக்கு அயன்மை கூறியவாறு காண்க. தலைவியின் அப் பண்புரையைக் கேட்ட தலைவன், தலைவி ஊடல் தணிந்து கூட விரும்புகின்றாள் என்பதை உணர்ந்து ஊடல் தணிவான்.

ஒரோவழி அவ்விருவரும் தங்கள் ஊடல் நீங்காது பிணங்கியே நிற்பாராயின், அறிவர் என்போர் முன்வந்து அவ்விருவர் வாழ்க்கையினும் தமக்குள்ள வருத்தந் தோன்றக் கழறியுரைப்பர். இவ்வாறு இடித்துரைக்கும் அவராணையை அவ்விருவரும் ஒரு போதும் கடவார்.

இடித்துவரை நிறுத்தலும் அவர தாகுங்
கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்.[38]

என்று விதி கூறுவர் தொல்காப்பியர்.

36. கற்பியல்-18
37, குறுந்-93
38. கற்பியல்-14

உடுத்தும் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே இஃதோ
ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை
பெருநலக் குறுமண் வந்தென
இனிவிழ வாயிற் றென்னும்இவ் வூரே.[39]

[செரீஇயும்-செருகியும்; ஆயம்-பரத்தையர் கூட்டம்; துவன்றி-நெருங்கி; வல்சி-ஊதியம்; பெருநலம்-மிக்க அழகு.]

இதில் 'ஏர் பிடித்தவன் என்ன செய்வான்? பானை பிடித்தவள் பாக்கியம்' என்பது போன்ற கருத்தால் அறிவர் தலைவனைக் கழறியது காண்க. சில சமயம் அறிவர் தலைவன் பக்கம் நின்று தலைவியைத் தெருட்டுதலும் உண்டு.

தேர்தர வந்த தெரியிழை நெகிழ்ந்தோள்
ஊர்கொள் கல்லா மகளிர் தரத்தரப்
பரத்தமை தாங்கலோ விலனென வறிதுநீ
புலத்தல் ஒல்லுமோ? மனைகெழு மடந்தை
அதுபுலந் துறைதல் வல்லி யோரே
செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்
தாமட் டுண்டு தமிய ராகித்
தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப
வைகுந ராகுதல் அறிந்தும்
அறியா ரம்மவஃ துடலு மோரே[40].

[தெரி இழை-ஆராய்ந்தணிந்த அணிகலன்; புலத்தல்-ஊடுதல்; மனைகெழு மடந்தை-குலமகள்; வல்லியோர்-வன்மையுடைய மகளிர்; செய்யோள்-திருமகள்; சில்பதம்-நொய்யரிசி; தேமொழி-இனிய மழலை மொழி; திரங்கு முலை-வற்றிய முலை; உடலுமோர்-பகைப்பவர்; அறியார்-அறிவில்லாதவர்]

என்ற ஓரம்போகியாரின் பாடலில் தலைவனது புறம்போக்குத் தாங்காது ஊடல் கொண்டு வாயில் மறுக்கும் தலைவியிடம் அறிவர் வந்து "நீ புலத்தல் ஒல்லுமோ? இதன் விளைவு என்னாகும்? குடும்பம் வறுமைப்படும். குழந்தைகள் மெலி

39. குறுந். 295; ஒப்பிடுக. அகம்-369
40. அகம்-316

வுறுவர். இல்லறம் வற்றிப்போகும். பொறுக்க அறியாமையினால் கெட்ட குடிகளைக் காணாயோ?'' என்று கழறியுரைக்கின்றமை காண்க.[41]

மனைமாட்சி இல்லான்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.[42]

இதனைத் தலைவியைக் கழறியதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். புறப்பொருளில் வரும் பேகன் என்ற வள்ளலும், அவன் மனைவியும் ஊடல் நீட்டித்துப் பெரிதும் பிணங்கி நின்ற போது அவ்விருவரையும் கூட்டுதற்குக் கபிலர் முதலிய அறிஞர் முன்வந்து அவ்வள்ளலுக்கு உறுதி கூறிய புறநானூற்றில் வரும் செய்தி இதற்கு எடுத்துக்காட்டாக அமைகின்றது. இங்ஙனமே, சோழன் மனைவி ஊடல் நீட்டித்தவிடத்துப் புகழேந்திப் புலவர் சென்று அவ்வூடல் தீரக் கூறியதையும் இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

புலவி காமச் சிறப்பைப் பயக்க வல்லதாயினும், அது சிறிது நீளினும் அதன் சுவை கைக்கும் என்பதை இல்லறத்தில் ஒழுகுவார் நன்கு அறிவர்.

உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.[43]

என்ற வள்ளுவர் கூற்றை அறிக. 'உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையன்றானாற் போல புலவி மிக்கவழிக் கலவி இன்பமின்றாம்' என்ற பரிமேலழகரின் இன்னுரையையும் எண்ணி மகிழ்க. எனவே, தொல்காப்பியர் இப்புலவியின் இறுதியில் தலைவனை அன்போடும் இடித்துக் கூறி, அவனைத் தழுவுதலே தலைவிக்கு முறையாகும் என்று கூறுவர்.

தாய்போல் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான.[44]

[கவவு - முயக்கம்]

---

41. அகநானூற்றுப் பதிப்பாசிரியர் தோழி கூற்றாகக் கொண்டனர். இளம்பூரணர் அறிவர் கூற்றாகக் கொள்வர் (தொல். கற். 14. எ-டு. செய்யுள்.)
42. குறள் - 52.
43. குறள் - 1302
44. கற்பியல் - 32

என்பது விதி: மிக்க சிற்றத்திலும் தலைவி தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல் முறையன்று; எனினும், அவனுடைய காமக்கிழத்திய ரிடத்துத் தான் நடந்தொழுகும் மரியாதைபற்றியும், தலைவனது பரத்தமை கருதாது தான் கூடியொழுகுதல்பற்றியும் தலைவி குறிப்பால் தன்னை வியந்து கொள்ளுதல் கூடும்.

தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்தல்
எத்திறத் தானும் கிழத்திக் கில்லை
முற்பட வகுத்த இரண்டலங் கடையே.[45]

என்பது தொல்காப்பிய விதி.

தலைவன் பரத்தையிற் பிரிந்து கரந்தொழுகுதல் தன் ஊரின் கண்ணே யல்லது வேற்று நாட்டு ஊர்களில் ஆகாது என்று கூறும் இறையனார் களவியல்.

பரத்தையிற் பிரிவே நிலத்திரி பின்றே.[46]

என்பது விதி. தலைவன் பரத்தையருடனும் ஏனைய மனைவி யருடனும் தன்னூர்க்குப் புறம்பாயுள்ள 'செய்குன்றமும் வாவியும் விளையாட்டிடமும்' போன்றவற்றிற்குச் சென்று இன்பநுகர்ச்சி எய்துவான்.

யாறும் குளனும் காவும் ஆடிப்
பதியிகந்து நுகர்தலும் உரிய என்ப.[47]

என்பது விதி. இதில் 'யாறும் குளனும் காவும் ஆடி' என்பதற்கு நச்சினார்க்கினியர் "காவிரியும் தண்பொருநையும் ஆன்பொரு நையும் வையையும் போலும் யாறுகளிலும், இருகாமத்திணையேரி போலும் குளங்களிலும், திருமருதந்துறைக்காவே போலும் காக் களிலும் விளையாடி" என்று கூறுவர். காவிரிப்பூம்பட்டினத்தை யடுத்து இருகாமத்திணை யேரிகள் இருந்தமை பட்டினப்பாலை யாலும்,[48] சிலப்பதிகாரத்தாலும்[49] அறியலாம். மதுரையில் வையையை யடுத்துத் திருமருதந்துறை என்னும் உய்யானம் இருந் தமை கலித்தொகையாலும்[50] பரிபாடலாலும்[51] தெளிவாகும்.

---

ஷை. 39.
46. இறை கற். 52
47. கற்பியல்-50
48. பட்டின. 39
49. சிலப். 9:59-62
50. கலி. 26. 'திருமருதமுன்றுறை.'
51. பரிபாடல். 7 - வரி 83

தலைவனின் பரத்தமை யொழுக்கம் ஊரில் அலராய் எழுங்கால் தலைவனை நினைந்து தலைவிக்கும், தலைவியை நினைந்து தலைவனுக்கும் காமம் மிக்கு நிகழும் என்று கூறுவர் தொல் காப்பியர்.

அலரில் தோன்றும் காமத்து மிகுதி.[52]

என்பது விதி.

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும் இந்நோய்.[53]

[கௌவை - பழிச்சொல்.]

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால்
காமம் நுதுப்போம் எனல்.[54]

[நுதுப்பேம் - அவிப்போம்]

என்ற குறட்பாக்களை இதற்கு இலக்கியமாகக் கொள்ளலாம். பரத்தையிற் பிரிவுபற்றி இறையனார் களவியலுரையாசிரியர் எழுதுவது: "அஃதேயெனின், மற்றைப் பிரிவெல்லாம் வேண்டுக, ஆள் வினை மிகுதி உடைமையான்; இப்பிரிவுக்கு எற்றிற்கோ எனில், பரத்தையிற் பிரிந்தான் தலைமகன் என்றால், ஊடலே புலவியே துனியே என்றிவை நிகழும். நிகழ்ந்தால், அவை நீக்கிக் கூடினவிடத்துப் பெரியதோர் இன்பமாம்; அவ்வின்பத் தன்மையை வெளிப்படுப்பன அவை எனக் கொள்க"[55] என்பது. இப்பரத்தைப் பிரிவு எல்லாக் குலத்தார்க்கும் உரித்து என்பதை,

காதற் பரத்தை எல்லர்க்கும் உரித்தே.[56]

என்று இறையனார் களவியலும்,

பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்[57]

என்று தொல்காப்பியமும் விதிகள் செய்யும்.

தலைவன் பரத்தையிற் பிரிந்த காலத்தில் தலைவி பூப் பெய்தினளாயின் அச்செய்தி அவனுக்கு அறிவிக்கப் பெறும்

52. கற்பியல் - 22
53. குறள் - 1147
54. ஷை - 1148
55. இறை. கள. 40 இன் உரை.
56. ஷை. 40
57. பொருளியல் 28

வழக்கம் இருந்ததாகத் தெரிகின்றது. இதனை இறையனார் களவிலுரையாசிரியர் கூறுமாறு: "தலைமகன் பரத்தையிற் பிரிந்த காலத்துத் தலைமகட்குப் பூப்புத் தோன்றிற்று; தோன்றத் தலைமகன் உணரும். எங்ஙனம் உணருமோ எனின், வாயில்கள் உணர்த்த உணரும். என்னை வாயில்கள் உணர்த்துமாறு எனின், தலைமகன் வாயில்களும் தலைமகள் மாட்டு உளவாம்; தலைமகள் வாயில்களும் தலைமகன் மாட்டு உளவாம்; ஆகலான், அவர்கள் உணர்த்த உணரும் என்பது."[58] இங்ஙனமின்றி, தலைவிக்குப் பூப்பு நிகழ்ந்த நாளில் சேடி செய்கோலஞ் செய்து, செப்புப் பாலிகையும் செம்பூவும் நீரும் கொண்டு சென்று தலைமகனை வலம் வந்து பூவும் நீரும் அவன் அடிமேற் பெய்து போகப் பூப்பு நிகழ்ந்ததென்று தலைமகன் உணரும் என்றும், இம்முறை மேலாயினாரிடங்களில் பூப்பு உணர்த்துமாறென்றும் அதே உரையில் கூறுவர். திருக்கோவையாரிலும் இச்செய்தி வருகின்றது[59]. நம்பியகப் பொருள் இதனை,

செவ்வணி அணிந்து சேடியை விடுப்புழி
அவ்வணி யுழையர்கண் டழுங்கிக் கூறலும்.[60]

என்று கூறும். இங்ஙனமே, பரத்தைப் பிரிவில் தலைவிக்குப் புதல்வன் பிறந்த செய்தியறிவித்தற்கு அவர் வெள்ளணி அணிந்து செல்வதும் பண்டைய வழக்கமாக இருந்தது.[61]

மேற்கூறியவாறு அறிவிக்கப்பெற்ற தலைவியின் பூப்புச் செய்தி கேட்டதும் தலைவன் காலம் தாழ்த்தாது சென்று, அது நிகழும் மூன்று நாளும் அவளை அணுகியிருக்க வேண்டும் என்றும், நான்காம் நாள் முதல் பன்னிரண்டு நாள் வரை அவளை அவன் கூடியுறைய வேண்டும் என்றும் கூறுவர். இதனை,

பூப்பின் பிறப்பா டீராறு நாளும்
நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான.[62]

என்ற தொல்காப்பிய நூற்பாவினால் அறியலாம். இதில் 'பூப்பின் பிறப்பா டீராறு நாளும்' என்பதற்குப் "பூப்பு நிகழும் மூன்று

58. இறை. களவியல் - 43இன் உரை.
59. திருக்கோவை - 163
60. நம்பி. அகப். 205
61. ஷை - 206.
62. கற்பியல் 46

நாளுக்கும் புறம்பாகிய பன்னிரண்டு நாள்'' என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். மேலும் அவர், ''பூப்பு புறப்பட்ட ஞான்றும் மற்றை நாளும் கருத்தங்கில் அது வயிற்றில் அழிதலும் மூன்றாம்நாள் தங்கில் அது சில்வாழ்க்கைத்தாதலும்பற்றி முந் நாளும் கூட்டமில்லை என்றார். கூட்டமின்றியும் நீங்காதிருத் தலிற் பரத்தையிற் பிரிந்தானெனத் தலைவி நெஞ்சத்துக்கொண்ட வருத்தம் அகலும் அகல, வாய்க்கும் கரு மாட்சிமைப்படுமாயிற்று. இது மகப்பேற்றுக் காலத்திற்குரிய நிலைமை கூறிற்று'' என்று கூறுவர். இறையனார் களவியலில் வருகின்ற இதேயடிக்கு அதன் உரையாசிரியர், ''பூப்புப் புறப்பட்ட நாள்முதல் பன்னிரு நாளும்'' என்று பொருள் கூறுவர். மேலும் அவர் கூறுவன: ''தலைவன் இவ்வகையாற் பூப்பு உணர்ந்து வாயில்களோடும் சென்று தலைமகளிடத்தானாய் முந்நாளும் சொற்கேட்கும் வழி உறைவானாவது. முந்நாளும் சொற்கேட்கும் வழி உறைதற்குக் காரணம் என்னை எனின், தலைமகன் பரத்தையர் மாட்டானாக, முன்னின்ற பொறாமை உண்டன்றே, அது முந்நாளும் சொற் கேட்கும் வழி உறையவே நீங்கும். நீங்கிய பின்னைக் கூட்ட மாகவே கரு நின்றது மாட்சிமைப்படும். ......முன்னாளும் கூடி யுறையப்பெறும் குற்றம் என்னோ எனின், பூப்பு புறப்பட்ட ஞான்று நின்ற கரு வயிற்றிலே அழியும்; இரண்டாவது நாளில் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாம் நாள் நின்ற கரு குறுவாழ்க் கைத்தாம்; வாழினும் திருவின்றாம். அதனாற் கூடப்படாது என்ப'' என்பது.[63] இக்கருத்துகளை இன்று கருத்தடைபற்றிப் பேசப்பெறும் கருத்துகளுடன் ஒப்பு நோக்கி ஆராய்க.[64] கூடு பருவம் (Safe period) இன்னும் திட்டவட்டமாகக் கண்டுபிடிக்கப் பெறவில்லை. ஆயின், பண்டைத் தமிழர் இயற்கைக் கருத்தடை முறையைக் கண்டறிந்து வேண்டும்போது கருப்பெற்றும், வேண் டாதபோது கருத்தடை செய்தும் வாழ்ந்து வந்தனர் என்பதை யறிந்து இன்றைய தமிழர்கள் பெருமிதம் கொள்வார்களாக.

இவ்வாறு வாயில்களால் உணர்த்தப்பெற்ற தலைவன் தன் இல்லத்தை அடைந்து தலைவியுடன் கூடிப் பள்ளியிடத்தனாய் இருக்கின்ற காலத்தில்தான் புலவி ஊடல் உணர்வுகள் நிகழும்

---

63. இறை. கள. நூற் 43 இன் உரை.
64. டாக்டர் ந. சுப்புரெட்டியார்; **இல்லறநெறி** (தமிழ்ப் புத்தகாலயம், சென்னை - 5) என்ற நூலில் விரிவாக ஆராயப் பெற்றுள்ளது.

என்றும், இங்ஙனமே, தலைவனால் பின் வதுவை செய்யப்பெற்ற மனைவியர்க்கும் பரத்தையர்க்கும் இப்புலவி முதலாயின உண்டென்றும் கொள்ளுதல் வேண்டும். இவை நிகழுங்கால் நேரும் கூற்றுகளின் விகற்பங்களையெல்லாம் ஈண்டு உரைக்கின் அவை மிகவும் விரியும். அவற்றைத் தலைவன் தலைவி முதலியோரின் கூற்றுகளை உணர்த்துப் நூற்பாக்களாலும், பண்டை அகப்பொருள் இலக்கியங்களாலும், பிற்காலத்தெழுந்த கோவை முதலிய நூல்களாலும் தெரிந்து கொள்ளலாம்.

# பிரிவு வகைகள்

பாலை நிலத்தையும் பண்பட்ட இலக்கியப் பொருளாகச் செய்த சிறப்பு உலகிலேயே தமிழர்களிடையேதான் காணமுடியும் என்று கூறின் அது மிகையாகாது. பாலை நிலமே இல்லாத நாட்டில் வாழும் இவர்கள் பாலை நிலத்தில் வாழும் வாய்ப்புகள் பெறாவிடினும் கூட ஏனைய நிலப்பகுதிகளைப்பற்றிய இலக்கியங் களை விடப் பாலை நிலத்தைப்பற்றிய மிகச் சிறந்த இலக்கியங் களை உருவாக்கியுள்ளனர். பாலைநிலத்தைப்பற்றிப் பாட வேண்டிய வாய்ப்பு அறபுநாட்டருக்குத்தான் இயல்பாகவே உண்டு; அவர்கட்கு வாய்த்துள்ள இயற்கைச் சூழ்நிலைகளினால் பாலையைப் பாங்குறப் பாடியுள்ளனர். ஆனால், தமிழர்கள் அப்படியல்லர்; வேண்டுமென்றே பாலையைத் தேர்ந்தெடுத்து அதைப் பற்றிக் கவிதைகள் புனைந்துள்ளனர். மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்துவதற்கு இடையூறாகவுள்ள நிலைகளை யெல்லாம் உயர்ந்த கவிதைகளின் படைப்புக்குப் பொருளாகக் கொண்டுள்ளதை இங்குக் காணலாம். சங்கப் பாடல்களில் பாலைத் திணையைப்பற்றியே அதிகமான பாடல்கள் காணப் பெறுகின்றன. எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றாகிய அக நானூற்றில் மட்டிலும் **நானூறு** பாடல்களில் **இருநூறு** பாடல்கள் பாலைத்திணையைச் சார்ந்தவை. இத்தகைய உயர்ந்த கவிதை களைப் புனைவதற்குக் கருவியாகவுள்ள பிரிதல் ஒழுக்கத்திற்கு காரணமாகக் காதலர்களின் வாழ்வில் நேரிடும் பிரிவுக் கட்டங் களைப்பற்றி ஓரளவு இவண் தெரிந்து கொள்வோம். இவை யாவும் கற்பொழுக்கத்தில் நிகழ்வனவாகும். இல்லறநெறியின் கீழ்க் குறிப்பிடப்பெற்ற ஐந்து கூறுகளில் இது ஐந்தாவது ஆகும்.

**பிரிவு வகைகள்:** களவு ஒழுக்கத்தில் இருக்கும்பொழுது ஒரு நிமித்தத்தின் பொருட்டோ அல்லது ஒரு கருமத்தின் பொருட்டோ தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் வழக்கம் இல்லை. அவன்

தலைவியை மணந்து கொண்டு இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் பொழுதுதான் தலைவியை விட்டுப் பிரியும் வாய்ப்புகள் நேரிடும்; கட்டங்கள் ஏற்படும். அகப்பொருள் நூல்களில் ஆறுவித பிரிவுகள் கூறப்பெறுகின்றன. **இறையனார் களவியல்** என்னும் நூலில்,

ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தை யென்(று)
ஆங்க ஆறே அவ்வயிற் பிரிவே.[1]

என்று அப்பிரிவுகள் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளன. கல்வியின் பொருட்டும், நாடு காத்தற் பொருட்டும், இரண்டு அரசர்கள் தம் முள் மாறுகொண்டு பொரும்பொழுது அவர்களைச் சமாதானம் செய்யும் பொருட்டும், அரசன் கட்டளைப்படி ஏதாவது ஒரு நிமித்தத்தின் பொருட்டும், பொருள் தேடுதற் பொருட்டும், பரத்தை காரணமாகவும் பிரியும்போது தலைவன் தலைவியை உடன் கூட்டிக்கொண்டு செல்லான். அவ்வாறு சென்றதாகச் சான்றோர்களின் இலக்கியங்களும் இல்லை. தொல்காப்பியர் இக்குறிப்பை,

முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை.[2]

என்ற நூற்பாவில் புலப்படுத்துவர். 'முந்நீர் வழக்கம்' என்பதற்கு இளம்பூரணர் 'கப்பல் வழியாகக் கடலிற் செல்லும் பிரிவு' என்று உரை கூறுவர். முந்நீர் என்பது கடல். ஆனால் நச்சினார்க் கினியர் 'ஓதல், தூது, பொருள் ஆகியமூன்று நீர்மையால் செல்லும் பிரிவு' என்று பொருள் கூறுவர். இளம்பூரணர் கருத்துப்படி கடல் வழியாக மகளிரைக் கூட்டிச் செல்லும் வழக்கம் இல்லாவிடினும், தரைவழியாகச் செல்லும் பிரிவில் தலைவியைக் கூட்டிச் செல்லும் வழக்கம் உண்டு என்று அருத்தாபத்தியால் பெறப்படுகின்றது. ஆனால், நச்சினார்க்கினியர் கூறுவது போல, தலைவியை உடன் கூட்டிச் செல்லும் புலனெறி வழக்காகச் சான்றோர் செய்யுட்களை இயற்றவில்லையாதலின், அவ்வழக்கம் தமிழர்களிடையே என்றும் இருந்ததில்லை என்று கருத வேண்டியுள்ளது. இன்றும் செட்டி நாடு போன்ற பகுதிகளில் வாழும் தனவணிகரும் அவரைச் சார்ந்த பிறரும் மலேயா போன்ற பிற நாடுகளுக்குச் செல்லும்பொழுது உரிமை மகளிரைக் கூட்டிச் செல்வதில்லை.[3]

1. இறை. கள. நூற். 35
2. அகத்திணை - 37
3. இவ்வழக்கம் சிறிது சிறிதாக மாறத் தொடங்குகின்றது. ஒரு சிலர் இன்று கூட்டிச் செல்லுகின்றனர்.

தமிழகம் இயற்கையாகவே கடல் சூழ்ந்திருத்தலின் தமிழர்கள் தொன்று தொட்டே கடல் வணிகர்களாகத் திகழ்ந்தனர். சிலப்பதிகாரமும் பட்டினப்பாலையும் கடல் வாணிகத்தைக் குறிப்பிடுகின்றன. கண்ணகியின் தந்தை மாநாய்கனைக் கடல் வாணிகன் எனவும், கோவலனது தமப்பன் மாசாத்துவானை நில வணிகன் எனவும் கருதலாம். ''தமிழகம் கடலகமாக இருந்தும், தமிழர்கள் கடலர்களாகஇருந்தும் 'வருணன்மேயபெருமணலுலகம்' என்று தொல்காப்பியம் கடற்றிணை (நெய்தற்றிணை) வகுத்திருந்தும், அகத்திணையியலின்கண் 'முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை' எனக் காதலனது கடற்செலவை நூற்பித்திருந்துப் ஏனோ சங்கச் சான்றோர்கள் பாலைத்திணையில் நீர்வழிப் பிரிவுகளைப் பாடிற்றிலர். அப்பிரிவுக்கு ஆற்றாத தலைவியர் தம் இரங்கல்களை நெய்தற்றிணையிலும், கடல்வினை முற்றிய தலைவர் தம் வரவுகளை முல்லைத் திணையிலும், அவ்வழிப் புணர்ச்சிகளைக் குறிஞ்சித் திணையிலும் தொடர்ந்து பாடிற்றிலர். இற்றைச் சங்க விலக்கியத்து வரும் பாலைத்திணைச் செய்யுட்களும் பிற திணைச் செய்யுட்களும் எல்லாம் நிலவழிப் பிரிவுகளையும் வரவுகளையும் புணர்வுகளையுமே கூறுவன. அகத்திணை என்பது ஒரு பால் நிலத் திணையாகவே உள்ளது. நிர்த்திணை மேலும் அகத்திணைப் பாடல்கள் பாடவேண்டும், பாடியிருத்தல் வேண்டும். சங்கப் புலவோர் நீரகப்பாடல்களை யாக்கத் தவறிவிட்டனர்; தமிழ் மன்பதையின் கடல் வாழ்க்கைமேல் காதற் கவிதை புனையா தொழிந்தனர்'''[4]

ஆயினும், அத்தி பூத்தமாதிரி ஒரே ஒரு நீர்வழிப் பாடல் சங்கக் கடலில் காணப்பெறுகின்றது. அகப்பாடல்கள் எழுபத்து நான்கினை யாத்த மருதன் இளநாகனார் என்றபுலவர் தலைவன்-தன் நாவாய்ச் செலவையும் அப்பிரிவுக்குத் தலைவியின் ஆற்றாமையையும் பொருளாகக்கொண்டு ஒரு பாடல் இயற்றியுள்ளார். இவர் பாடிய பாலைப் பாடல்:

உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ
இரவும் எல்லையும் அசைவின் றாகி
விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்

---

4. **தமிழ்க் காதல்** - பக் 184

கோடுயர் திணிமணல் அகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கெறிந் தொய்ய
ஆள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல
கழியா மையே அழிபடர் அகல
வருவர் மன்னால் தோழி.[5]

[உருகெழு - அச்சம் தரும்; வங்கம் - மரக்கலம்; போழ - கிழிய; அசைவு - ஓய்வு; வங்கூழ்-காற்று; நீகான்-மாலுமி; மாடவொள்ளெரி -கலங்கரை விளக்கம்; ஒய்ய-செலுத்தா நிற்ப; நாள் பல கழியாமையே - நாள்கள் பல கழிவதற்கு முன்பே; அழிபடர் - அழிக்கின்ற துன்பம்]

தலைவியைப் பிரிந்து திரைக்கடலில் கலம் செலுத்திப் பொருள் ஈட்டச்சென்ற தலைவன் காலம் தாழ்த்தினமையால் பெரிதும் வருந்திய தலைவி தோழியை நோக்கிக் கூறுவது இது. கடற்பிரிவு என்பதனை முதலடியே காட்டுகின்றது. 'உலகு கிளர்ந்தன்ன' என்ற உவமையும் 'பெருங்கடல் நீரிடைப் போழ' என்ற குறிப்பும் நீர்வழிப் பிரிவினை உணர்த்துகின்றன. வங்கம் என்பது மிகப்பெரிய மரக்கலம்—கப்பல்—என்பதை உணர்த்துகின்றது. மீகாமன் காற்றின் இயக்கத்தை அறிந்து ' அல்லும் பகலும் சோராது வங்கத்தைச் செலுத்துவான் எனவும், கலங்கரை விளக்கத்தை நோக்கிக் கரைசேர்ப்பான் எனவும் முதல் ஆறடிகளில் கடற் செலவு ஓரளவு புனையப்பெறுகின்றது. இப் புனைவில் கற்பனை வளம் இல்லை என்பது தெளிவு. பாலை நிலச் செலவைத்தான் வளம்படப் பாடினர் சங்கப் புலவர்கள். அங்ஙனம் பாடுந் திறந்தான் அக்காலத்து வளர்க்கப்பெற்றது. இந்தப் போக்கில் புதிய புதிய கற்பனை வளர்ந்ததேயன்றி, இந்தச் சூழ்நிலையில் இளநாகனாரின் கடற்கவிதை நல்ல பாட்டாக மலர்வதற்கு இடம் ஏற்படவில்லை. ஆயினும், இவர் கடற்பாட்டு ஒன்றினைப் பாடியதனில் பெருமை உடையவராகத் திகழ் கின்றார். நிலத்திணையில் தேர்ப்பாகன் கூறப்பெறுதல் போல் நீர்த்திணையில் மீகாமனை அமைக்கின்றார். நிலப்பாலையில் முதுவேனிலும் நண்பகலும் வரும். இந்நீர்ப் பாலையில்,

அறனின் றலைக்கும் ஆனா வாடை
கடிமனை மாட்டத்துக் கங்குல் வீசி

5. அகம்-255

[அறன் - அன்பு, அருள், கண்ணோட்டம் முதலிய அறங்கள்; கடிமனை - காவல் அமைந்த மாளிகை; மாடம் - மாடி; கங்குல் - இரவு]

என்று பின்பனிப் பெரும்பொழுதும் கங்குற் சிறுபொழுதும் வந்துள்ளன. வங்கப்பெயர் பெற்றிருந்த ஆலங்குடி வங்கனார் பாடிய பாடல்களில் கடற்குறிப்பு இல்லை!

சங்கப் புலவர்கள் பாலைத்திணையில் பாடல்கள்யாத்திருப்பின் வளஞ் செறிந்த இலக்கியக் கற்பனைப் புனைவுக்கு வாய்ப்பு கிடைத்திருக்கும். அலைகடல் நடுவண் எழும் கடும்புயல், கடற் கொள்ளை, சுறா மீன் திமிங்கலம் இவற்றின் தாக்குதல்கள், பாறைமோதல், பாய்மரம் முறிதல், பாய்கிழிதல், கலங்கவிழ்தல், திசைமாறிப்போதல், உணவின்றி வாடுதல், குடிநீரின்றி அல்லலுறு தல் போன்ற இடையூறுகளையும் அவற்றைச் சிந்தித்துச் சிந்தித்துத் தலைவி படும் மனத்துயரங்களையும், கடல் நீந்தித் திரைக்கையால் கரை சேர்ப்பிக்கப் பெற்ற தலைவன் துய்க்கும் ஆராப் புணர்ச்சி களையும் நுவலும் கற்பனை வளஞ் செறிந்த பாடல்கள் கிடைத் திருக்கும். சங்கப் புலவர்கள் கடற்பாலையை மறந்து பழந்தடத்தி லேயே சென்றுவிட்டனர். நிலப்பாலையின் பல்லூறுகளையே சுவை படப் புனைதலிலேயே அவர்தம் மனம் சென்றது; இயல்பாக ஓடியது; கவிதை வளமும் பெற்றது.

நடுவுநிலைத் திணையே
 நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின்
 முன்னிய நெறித்தே.[6]

என்ற நூற்பாவால் பாலைத்திணையின் பொழுதுகளாகக் கோடை யையும் நண்பாலையும் தொல்காப்பியர் வகுத்தார். அப் பொழுதுகள் நிலப் பாலைக்கு நன்கு பொருந்துகின்றன. இதன் காரணமாகச் சங்கச் சான்றோர்கள் தலைவன்தன் சுரவழிச் செலவையே வழிவழியாக மிகுத்துப் பாடினரோ எனக் கருத இடம் உண்டு. ஆயினும், நிலப்பாலைதான் பாலை எனவும், நிலப் பிரிவுதான் பிரிவு எனவும் தொல்காப்பியர் வரையறை செய்யவும் இல்லை.

---

6. அகத்திணை - 11

பின்பனி தானும் உரித்தென மொழிப.[7]

என்று மேலும் பாலைக்கு ஒரு பெரும் பொழுது வகுத்தனர் ஆசிரியர். கலத்திற் பிரிவு கருதியே பனிப் பொழுது பாலைக்கு வகுக்கப்பட்டது என்று கருதுவதில் தவறு ஒன்றும் இல்லை. எனினும் கலத்துப் பிரிவுப் பாடல்கள் தோன்றவில்லை. தலைமேல் வெம்மை, காற்கீழ் வெம்மை, நெஞ்சத்துள் வெம்மை இந் நிலையில் பாலைச் செலவினர் பெரும் பாழான தோற்றத்தைக் காண்கின்றனர் என்பதாக விளக்கஞ் செய்வர் தனி நாயக அடிகள்.[8] வெம்மை வளம் மிக்க சுரமும், அச்சுரத்துக் கோடைக் காலமும், அக்கால நண்பகலும் பிரிந்த காதலர்களின் காதற் சுரத்தையும் கவலைக் கொதிப்பையும் பெருக்க வல்லவை. நிலக் கொதிப்பும் காலக் கொதிப்பும் உள்ளக் கொதிப்பைத் தெளிவாகக் காட்டுபவையாகும். இதுகாரணமாகத் தான் சங்கச் சான்றோர்கள் நிலவழிப் பிரிவுகளையே பாலைத் திணையாக மிகுத்துப் பாடினர் போலும்! கடல்வழிப் பிரிவாயின், நில வெம்மையும் கால வெம்மையுமாகிய புறக் கொடுமையைப் புனைதற்கு இடம் இல்லையன்றோ?

**ஓதற்பிரிவு:** கல்வியின் பொருட்டுத் தலைவன் பிரிவான் என்பதனால், தலைவன் இதுகாறும் கல்வி பெற்றிலன் எனக் கருதுதல் வேண்டா. இதற்குமுன்பே அவன் நல்லாசிரியனை அடைந்து அறம், பொருள், இன்பம் வீடு ஆகிய நான்கு குறிக்கோள் பொருள்களை உணர்த்தும் நூல்களை யெல்லாம் முறைப் படி கற்றுத் துறை போகிய வித்தகனாவான். எவ்வளவுதான் கற்கினும் 'கல்வி கரையில' அல்லவா? 'கற்றது கைமண் அளவு, கல்லாதது உலகளவு' என்பது ஆன்றோர் கூற்றன்றோ? இன்று கூடப் பட்டங்களைப் பெற்று ஆராய்ச்சித் திறன் மிக்க அறிஞர்கள் வெளி நாடு சென்று, பல அறிவியல் துறைகளிலும் பொறி நுட்பத்துறைகளிலும் தொழில் நுணுக்கத் துறைகளிலும் மேலும் கற்று வருவதைக் காண்கின்றோமன்றோ? 'ஓதற்பிரிவு' என்பதற்கு இளம்பூரணர் "தமது நாட்டகத்து வழங்காது பிற நாட்டகத்து வழங்கும் நூல் உளவன்றே, அவற்றினைக் கற்றல் வேண்டிப் பிரிதல்" என்று கூறியிருத்தல் இன்று வெளி நாடுகளுக்குச் சென்று கல்வி பெறும் வழக்கத்தை

7. ஷை-12
8. *Nature in Ancient Tamil Poetry* p-, 147

நினைவூட்டுகின்றது, இங்ஙனம் 'அறிதோறும் அறயாமையை'க் காட்ட வல்ல ஒப்பற்ற கல்விச் செல்வத்தைப் பெறச் செல்வோரைப் பரணர் என்ற சங்கப் புலவர்,

> கைதொழு மரபில் கடவுள் சான்ற
> செய்வினை மருங்குச் சென்றோர்[9]

என்று குறிப்பிடுவர். 'கடவுள் சான்ற செய்வினை' என்பது ஓதற் பிரிவினை உணர்த்துகின்றது. கல்விப் பயன் கடவுளைத் தொழுதலே ஆகலின் அக் கல்வி பயில்தல் 'கடவுள் சான்ற செய் வினை' எனப்பட்டது. கல்விப் பயன் இஃதேயாதலை,

> கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழா ரெனின்.[10]

என்ற திருக்குறளாலும் அறியப்படும். இன்று கூட மணவினை முடித்துக் கொண்ட மாணாக்கர்கள்—சிறப்பாக மருத்துவ தொழிற் கல்லூரிகளில்—பயின்று வருவதை நாம் காணலாம். அவர்கள் யாவரும் 'ஓதற் பிரிவினை' மேற் கொண்டவர்களே யாவர்.

**காவற் பிரிவு:** காவற் பிரிவு என்பது, நாட்டைப் பாதுகாத்தற் பொருட்டுப் பிரியும் பிரிவு. இதனால் நாட்டில் எளியோர்களை நலிவோர் உளர் எனக் கருதுதல் வேண்டா. ஒரு நாட்டில் பல இடங்களில் தமக்குள்ள குறைகளை நேரில் வந்து சொல்லுவதற்கு இயலாத மூத்தோர், பெண்டிர், இருக்கை முடவர், கூனர், குருடர், பிணியுடையோர் முதலியவர்கள் இருத்தல் கூடும். அவர்களை நேரில் சந்தித்து அவர்கள் குறைகளைக் கேட்டு, அவற்றினை ஓராற்றான் நீக்குதற் பொருட்டுப் பிரிவது. காடுகளில் ஒன்றினை யொன்று நலியும் உயிர்ச் சாதிகளைக் கண்டு தீமை செய்வன வற்றை முறை செய்வதற்கும் கொடிகளில் சிக்குண்டு அல்லலுறும் விலங்குகளைத் துறை நீக்குதற்பொருட்டும், கோயில் சாலை பொதுவிடங்கள் இவற்றினை ஆராய்வதற்கும், நல்குரவால் வருந்தும் குடிகளைப் புரத்தற்பொருட்டும் செல்வதைக் 'காவற் பிரிவு' என்று சொல்லுவர். தன்னால் பாதுகாக்கப்பெறும் உயிர்ச் சாதிகள், குடிகள் முதலியோருக்குத் தன் உருக்காட்டு வதற்கும், ஒற்று வந்துள்ள மாற்றரசர்கட்குத் தனது ஊக்கம் காட்டுவதற்கும் செல்வதாகவும் இப்பிரிவு கூறப்பெறும்.

---

9. அகம்-125
10. குறள்-2

**பகை தணிவினைப் பிரிவு:** பகை தணி வினைப் பிரிவு என்பது சமாதானத்தை ஏற்படுத்தச் செல்லும் தூதுவர் போலச் செல்லும் செலவு அன்று. தனக்குக் கீழ்ப்பட்ட இரண்டு அரசர்கள் 'இன்றுப் போர் தொடங்குவேன், நாளைப் போர் தொடங்குவேன்' என்று மாறுபட்ட கருத்துகளால் முரண் கொண்டு இருப்பதைக் கண்டு, 'இவர்கள் போர் தொடங்கினால் இவர்தம் அகந்தையின் காரணமாக ஒன்றுமறியாத மக்களும் விலங்குகளும் அழிய நேரிடும்' என்று கழி பேரிரக்கம் கொண்டு, எப்படியாவது—அவர்களை இரந்தாவது —அப்போரை ஒழிப்பதற்குப் பிரியும் பிரிவுதான் 'பகை தணி வினைப் பிரிவு' என்பது. இன்று மேற்கு நாடுகள் அறிவியல் அறிவின் மமதையால் நீரியக் குண்டு, யுரேனியக் குண்டு போன்ற உருத்திரக் கூறு பொருந்திய அணு ஆயுதங்களை ஆயத்தம் செய்து விட்டதன் செருக்கால், போர் தொடங்க முனைந்து கொண்டிருக்கும்பொழுது அகிம்சை நெறி யொழுகும் **இராஜாஜி, இராசேந்திர பிரசாத், பண்டித ஜவஹர்லால் நேரு** போன்ற பெரியோர்கள் அவர்களை இரந்தாவது அமைதியை நிலை நாட்ட வேண்டும் என்ற நோக்கத்துடன் மேற்கொண்ட செலவினைப் 'பகை தணிவினை' என்று கூறி விளக்கலாம். சமாதானத்தின் பொருட்டுக் கூட்டப் பெறும் ஐ. நா. அவையின் மாநாட்டிற்குச் செல்வதும் இத்துறையின்பாற் பட்டதே. அரசன் தூது சென்றதற்கு இளம் பூரணரும் நச்சினார்க்கினியரும் பாரதத்தில் தூது சென்ற வாசுதேவனை எடுத்துக் காட்டாகக் குறிப்பிட்டுள்ளனர்.

**வேந்தர்க் குற்றுழிப் பிரிவு:** வேந்தர்க் குற்றுழித் தலைவன் பிரிவான் என்பதனால், அந்த அரசன்கீழ்ச் சேவகம் செய்து பிழைக்கின்றான் என்று நினைக்க வேண்டா. தனக்கு நண்பனாக இருக்கும் ஓர் அரசனுக்கு யாதாவது ஒரு காரணத்தால் விபத்து நேருமாயின் அதனை நீக்குதற்குப் பிரிவான் என்று கூறுவர் இறையனார் களவியலுரையாசிரியர். நாடக வழக்காக அவ்வாசிரியர் அங்ஙனம் கூறினாராயினும் இதனை இவ்வுலக வழக்கிலும் வைத்தெண்ணலாம். இரண்டாவது உலகப் பெரும் போர் நடைபெற்றபொழுது போர்க் காரணமாக எத்தனையோ வீரர்கள் பல்வேறு போர்த் துறைகளில் பெரிய பெரிய பதவிகளை வகித்தனர். அவர்கள் அவசியத்தின்நிமித்தம் அடிக்கடி தத்தம் நாட்டைவிட்டு அயல் நாடு போக வேண்டி வந்தது. இத்தகைய நிகழ்ச்சிகளை வேந்தர்க் குற்றுழிப் பிரியும் பிரிவுகளாகக் கருதலாம்

இவ்வாறு நடைபெறும் நிகழ்ச்சிகளை யெல்லாம் இப் பிரிவில் அடக்கினும் இழுக்கொன்றுமில்லை.

**பொருட் பிணிப் பிரிவு:** பொருள் காரணமாகப் பிரியும் பிரிவு பொருட் பிணிப் பிரிவாகும். இது பொருள்வயிற் பிரிவு என்றும் வழங்கப்பெறும். பொருள் இல்லாக் குறையால், பொருள் திரட்ட வேண்டும் என்ற நோக்கத்தால், தலைவன் பிரிகின்றான் என்று கருத வேண்டியதில்லை. தன் பெற்றோர் ஈட்டிய பொருளும் குடிவழியாகப் பெற்ற செல்வமும் ஏராளமாக அவனிடம் இருந்தாலும், அவற்றைத் துய்ப்பது ஆண்டன்மைக்கு இழுக்காகும் என்று கருதியும், தனது முயற்சியால் ஈட்டிய பொருளைக்கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டும் என்று எண்ணியும் பிரிவான். அன்றியும் தன் முன்னோர் சேமித்த தாயப் பொருளைக்கொண்டு தேவர் காரியமும் பிதிரர் காரியமும் செய்வித்தால் தேவர்களும் பிதிரர்களும் இன்புறார் என்பது அக்காலத்தினர் கொள்கை. தானே தன் முயற்சியால் பொருள் ஈட்டி அதனைக்கொண்டு இச் செயல்களை ஆற்றுவித்தால் தனக்குப் பெருமை ஏற்படுவதுடன் தேவர்கட்கும் பிதிரர்கட்கும் இன்பம் உண்டாகும் என்ற கருத்தால் பொருளீட்டப் பிரிவான். இன்று கூடப் பொதுவாக எல்லாப் பகுதிகளிலும், பெரும்பாலும் செட்டி நாட்டுப் பகுதி களிலும், பணம் ஈட்டுவதற்காகப் பலர் வெளிநாடு செல்வதைக் காண்கின்றோம். ஏராளமான செல்வத்தில் புரளும் செல்வர்களும் பொருள் தேடலின் நிமித்தம் வெளிநாடு செல்வதைக் காண்கின் றோம், இவர்கள் எல்லோரும் எந்த நோக்கத்தின் பொருட்டுப் பொருள் தேடுகின்றனர் என்பதைக் கூறவியலாவிடினும், பொருள் தேடச் செல்லுகின்றனர் என்பது மட்டிலும் தெரிய வருகின்றது.

**பரத்தையிற் பிரிவு:** பரத்தையிற் பிரிவு என்பது பொதுப் பெண்டிற் மாட்டுப் பிரியும் பிரிவு. இணைவிழைச்சு காரணமாகத் தலைவன் அவர்களை நாடிச் சென்றான் என்று எண்ணவேண்டிய தில்லை. தலைமகளைவிட்டு அப்பொதுப் பெண்டிரின் ஆடல் காண்பதற்காகவும் பிரிவான் என்று கருதுதல் வேண்டும். இக்காலத்தில் எத்தனையோ இசை நிகழ்ச்சிகட்கும் நாட்டிய நிகழ்ச்சிக்கும் பலர் செல்வதைக் காண்கின்றோம். இவர்கள் யாவரும் எந்நோக்கத்திற்காக அவ்விடங்கட்குச் செல்கின்றனர் என்பதை அறிவோம். சிலர் அவற்றைக் கண்டும் கேட்டும் சுவைப்பதற்காகச் செல்லுகின்றனர்; சிலர் பெருமைக்

காகச் செல்லுகின்றனர். இவ்வாறு செல்லுங்கால் சிலர் தலைவியை விட்டுச் செல்லுகின்றனர்; சிலர் தம்முடன் கூட்டிச் செல்லுகின்றனர். தலைமகளை விட்டுச் செல்லும்போது நிகழ்ச்சிகளின்பால் ஊன்றி நிற்கும் தம் உணர்ச்சி தலைமகள் மாட்டு நிற்கும் தம் உணர்ச்சியை மறைக்கும். ஏனெனில், இரண்டு உணர்ச்சிகள் ஒருங்கே இருப்பது இயற்கைக்கு முரணானது. இதனால் தம் உணர்ச்சி முழுவதும் அரங்க நிகழ்ச்சிகளிலேயே ஈடுபட்டிருக்கும். அரங்க நிகழ்ச்சிகளில் பங்கு பெறுவோர் பொது மகளிராக இருப்பின் எத்தனையோ செல்வர்கள் மயங்கி அப்பொதுப் பெண்டிர்களுடன் உறவு கொள்வதையும் காண் கின்றோம். இப்பரத்தையிற் பிரிவுபற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ள சிலர் பண்டைத் தமிழர்களிடம் இப்பரத்தையிற் பிரிவே இருந்ததில்லை என்று கூறுகின்றனர். எது எவ்வாறாயினும் நாடக வழக்காகப் புலவர்களால் படைத்து மொழியப்பெறும் தலைவர் களிடம் இக்குறை இல்லாமல் இருந்திருக்கக் கூடும்; உலகில் நடமாடும் சாதாரண மக்களிடம் பரத்தைமாட்டுச் செல்லும் குணம்—பரத்தைமை—சிறிதும் இருந்ததில்லை என்று கூறுவது அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை. அவ்வாறு கூறுவோர் மனித இயல்பையும் உளவியற் பண்புகளையும் சரியாக அறியவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். பேராசிரியரும் திருக்கோவையார் உரையில் **'பரத்தையிற் பிரிவு'** என்னும் தலைப்பில் தோற்றுவாயாக, ''பரத்தையிற் பிரிதல் என்பது தலைமகளை வரைந்தெய்திய பின்னர், வைகலும் பாலே நுகர்வான் இடையே புளிங்காடியையும் நுகர்ந்து அதன் இனிமை யறிந்தாற் போல, அவள் நுகர்ச்சியினிமை அறிதற்குப் புறப் பெண்டிர் மாட்டுப் பிரியா நிற்றல்; அல்லதூஉம், பண்ணும் பாடலும் முதலாயினகாட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால் தான் எல்லார்க்குந் தலைவனாகலின் அவர்க்கும் இன்பஞ் செய்யப் பிரியா நிற்றல் என்றுமாம்; அல்லதூஉம், தலைமகளை ஊடல் அறிவித்தற்குப் பிரிதல் என்றுமாம். இவ்வா றொழிந்து தனக்கின்பம் வேண்டிப் பிரிவானாயின், 'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள', (குறள்-1101) என்பதனால் இவளுக்குத் தலைமகள் என்னும் பெயரோடு மாறுபட்டுத் தனது பெருமையோடும் மாறுபடா நிற்கும்'' என்று கூறுவதைக் காண்க. இவ்விடத்தில் இறையனார் களவியலுரையாசிரியர் இப்பிரிவைப்பற்றிக் கூறும்

கருத்துகளும் இப்பேராசிரியர் கருத்துகளுடன் ஒப்பு நோக்கி உணர்தற் பாலவை.[11] இவ்வாறு பேராசிரியரும் களவியலுரையாசிரியரும் பிற உரையாசிரியர்களும் செய்யுள் வழக்கில் இப்பிரிவைக் குற்றமற்றதாகக் கொண்டாலும், உலக வழக்கில் இவ்வொழுக்கம் நிகழ்ந்து வந்தமையின் வள்ளுவர் போன்ற அறநிலையில் நிற்கும் சான்றோர்கள் இதனைத் தம் நூல்களில் இழித்துக் கூறியுள்ளதைத் தமிழ் மக்கள் எண்ணி உணர்வார்களாக. தமிழ் நெறி உயர்ந்த நெறி என்பதைத் தம் உள்ளத்தில் நிலை நிறுத்துவார்களாக.

**சாதிவேறுபாடு :** மேற்கண்டவாறு கூறப்பெறும் ஆறுவகைப் பிரிவுகட்கும் காலவரையறையும் இலக்கண நூல்களில் கூறப் பெற்றுள்ளது. கல்வியின் பொருட்டுப் பிரியும் பிரிவு மூன்றாண்டு கட்கு மேற்படக் கூடாதென்பது பண்டையோர் கொள்கை.

'வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது'[12]

என்பது தொல்காப்பியம். ஏனைய பகை, தூது, பொருள்பற்றிய பிரிவுகள் ஓராண்டுக்குள்ளாதல் வேண்டும் என்பதும் தொல் காப்பியரின் கருத்தாகும்.[13] வடநூலார் ஓதற் பிரிவுக்கு ஆறாண்டும், அறப்புறங் காவற்கு எட்டாண்டும் கூறுவர். இனி, வேட்டை மேற்சேறல், நாடு காணச் சேறல் முதலிய பிரிவுகளைப் பாலையொழுக்கமாகக் கொண்டு புலனெறி வழக்கம் செய்தல் கூடாது என்பது ஆன்றோர் கொள்கை. இங்ஙனம் ஒவ்வொரு பிரிவுக்கும் கால வரையறை கூறியவர்கள் அப்பிரிவுக்குரியார் யாவர் என்பதனையும் குறிப்பிட்டுள்ளனர். தொல்காப்பியர் காலத்திலேயே நால்வகைச் சாதிகள் வகுக்கப் பெற்றிருந்தன. இதனை எண்ணியே உரையாசிரியர்கள் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகியோர்க்கு இந்த இந்தப் பிரிவுகள் உரியவை என்று கூறிச் செல்லுகின்றனர். ஆனால், ஆசிரியர் தொல்காப்பியனார் இப்பிரிவு இவர்க்குரியது எனத் தெளிவாக நூற்பா செய்து காட்டவில்லை. எனவே, பிறப்பு காரணமாகத் தொல்காப்பியர் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற கொள்கையைக் கூறினார் இலர் என்பது சிந்திக்கற்பாலது. தமிழ்மறை அருளிய திருவள்ளுவரும்,

---

11. இறை. கள. நூற்-40 இன் உரை.
12. கற்பியல். 47.
13. ஷை—48, 49.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.[14]

என்று கூறியுள்ளதை நாம் நன்கு அறிவோம். தவிர, உலகியலில் இன்னார்தான் போர்க்காரணமாகப் பிரிய வேண்டும், இன்னார் தான் பொருளீட்டுவதற்குப் பிரியவேண்டும் என்ற நியதியும் என்றும் இருந்ததாகத் தெரியவில்லை. இன்று எல்லாச் சாதியினரும் எல்லாத் தொழில்களையும் செய்து வருவது கண்கூடு. பார்ப்பனர் போரில் ஈடுபடுகின்றனர்; அரசாங்க அலுவல் பார்க்கின்றனர்; வாணிகம் செய்கின்றனர்; உழவுத் தொழிலும் புரிகின்றனர். அங்ஙனமே வேளாளர் மறையோதுகின்றனர்; அரசாங்க அலுவல்களில் அமர்கின்றனர்; வாணிகத்திலும் ஈடுபடுகின்றனர். இங்ஙனமே ஏனைய சாதியினரும் எல்லாவிதத் தொழில்களிலும் ஈடுபடுகின்றனர். எனவே, மக்கள் தொழில் செய்யும் பொழுது, செய்யும் தொழில் காரணமாக அந்தந்தச் சாதியாகின்றனர் என்று கோடலே பொருந்தும்; பண்டும் இம்முறையே வழக்கிலிருந்திருக்க வேண்டும். நான் ஆசிரியத் தொழிலிலிருப்பதால், யான் பார்ப்பனன். என் மைந்தர்களில் ஒருவன் வாணிகம் செய்தால் அவன் வணிகன்; இன்னொருவன் உழவுத் தொழிலில் ஈடுபட்டால் அவன் வேளாளன்.[15] ஓதல், பகை, தூது என்று பிரிவுக்கு நிமித்தம் கூறும் தொல்காப்பியர்,

அவற்றுள்,
ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன.[16]

என்று கூறும்பொழுது 'உயர்ந்தோர்' என்று பொதுப்படையாக இருப்பது சிந்தித்தற் குரியது. பிறப்பினால் உயர்வு உண்டு என்ற கொள்கையில் அழுந்திய உரையாசிரியர்கள் 'உயர்ந்தோர்' என்பதற்குத் தத்தமக்குத் தோன்றியவாறு பொருளுரைத்தனர். இளம்பூரணர் 'நால்வகை வருணத்தினும் உயர்ந்த அந்தணர், அரசர்' என்றும், நச்சினார்க்கினியர் 'அந்தணர் முதலிய மூவர்' என்றும் பொருளுரைத்தனர். ஒவ்வொருவரும் தத்தம் மனப் பான்மைக் கேற்றவாறு ஒவ்வோர் அளவுகோல் கொண்டனர். இங்ஙனம் உரையாசிரியர்கள் சாதிப் பிரிவை யொட்டி 'உயர்ந் தோர்' என்று கூறியிருப்பது இக்காலத்திற்குச் சிறிதும் ஏற்காது;

14. குறள்—972.
15. இன்றும் ஆந்திரத்தில் ஆசிரியத் தொழிலுள்ளவர்கள் 'அய்யவாரு' (அய்யர்) என்று வழங்கப்பெறுவதை அறிக.
16. அகத்திணை-28.

எக்காலத்திற்கும் ஏற்காது; ஏற்கவும் முடியாது. எனவே, 'உயர்ந்தோர்' என்பதற்கு 'அறிவினாலும் ஒழுக்கத்தினாலும் சீலத்தினாலும் பண்பாட்டினாலும் உயர்ந்தோர்' என்று கோடலே பொருந்தும்; அஃதே அறிவுடையுமாகும். மேற் குறிப்பிட்ட நூற்பாவினை அடுத்து வரும் நூற்பாக்களிலும் பிரிவுகளைப்பற்றிப் பொதுப்படையாகவே கூறியிருப்பது இதனை வலியுறச் செய்யும்.

## ஐந்திணையில் பரத்தமை

செவ்விய சில இனிய காமநிலைகளையே எடுத்துக்கூறும் பண்பிலக்கியமாம் ஐந்திணையில், பொருள் வரம்பும் தெளிந்த நல்லொழுங்கும் பெறுமாறு தமிழறிஞர்கள் படைத்த ஆக்க இலக்கியத்தில் தலைவனது பரத்தமை நுவலப்படுதல் சரியா? சரியன்று என்பதுதான் வெளிப்படையான விடை. இதுபற்றிச் சிறிது ஆராய்வோம்.

(1) விறுவிறுப்பும் எழுச்சியும் இல்லாத இயல்பான காதலை நுவலும் அகப்பொருள் இலக்கியத்தில் பரத்தைக் காதலை ஒரு பொருளாகச் சேர்ப்பின் அகவிலக்கியம் நயமும் நாட்டமும் உடையதாகும் என்றவனப்பு கருதிச்சேர்த்திருக்க வேண்டும் என்று சிலர் கருதுவர். இது தவறு. அக இலக்கியம் ஒரு தொடர்பொருள் பற்றிய தன்று. ஆகவே, இதற்கு விறுவிறுப்புத் தேவை இல்லை. கற்போருக்குக் கிளர்ச்சியூட்டும் பாங்கில் அகத்திணையைப் பதப்படுத்த வேண்டும் என்று பண்டையோர் கருதியிருப்பின், பாங்கன் காதல், தோழிகாதல், காதல் மாற்றம் போன்ற பல்வேறு பகுதிகளை இணைத்து இல்லக் களத்தை எதிர்குதிராகப் பாடிச் சுவையூட்டியிருப்பர். அவர்கள் நோக்கம் அஃதன்று.

(2) தலைவன் எத்துணைக் கொடுமை செய்யினும் தலைவி கற்பினின்றும் சிறிதும் நிலை கலங்காப் பெற்றியுடையவள் என்பதனைப் புலப்படுத்துவதற்காகவே புலவர்கள் பரத்தமையைப் புனைந்துரைத்தனர் என்பதாக இன்னும் சிலர் கருதுவர்.[1] தலைவியின் கற்புடைமையைத்தெளிவாக நிலைநாட்டுவதற்காகத் தலைவனைப் பண்பற்றவனாகக் காட்டுதல், எவ்வாற்றானும் பொருந்தாது. தன் கணவன் ஒழுக்கக் குறைவை எந்தக் கற்புடைய

1. கலித்தொகைச் சொற்பொழிவுகள்—பக். 13.

தலைவியும் விரும்பாள் அப்படி விரும்பியதாகப் பாடல்கள் இல்லை. இருவரும் நிறையாளர்களாக இருப்பதுவே இனிய பெரிய சிறந்த இல்லறமாகும்.

(3) ஊடல் மிகின் இன்பம் பெருகும் என்பதற்காகத் தலைவன் பரத்தையை நாடுவான் என்ற கருத்தும் சிலர் கொண்டதாகும்.[2] மருதத்திணையின் உரிப்பொருளாகிய ஊடல் தலைவனது புறத்தொழுக்கம் காரணமாகத்தான் எழும் என்று கொள்ளும் கருத்தும் ஒப்புக்கொள்ளக் கூடியதன்று. நாகரிகமற்றது மருதத்திணை என்றே சான்றோர் கருதுவர். பரத்தையின்றே ஊடலைச் சிறப்பித்தார் வள்ளுவப் பெருந்தகை. புலவி, புலவி நுணுக்கம், ஊடல் என்ற அதிகாரங்களில் வரும் குறள்களை ஊன்றி நோக்குக. பெண்ணுக்கு ஊடல் பிறப்பியல்பு. பருவம் ஏற ஏற ஊடும் இயல்பும் உடன் வளர்கின்றது. ஊடல் இது என்று பெண்ணுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டியதில்லை. "தலைவியின் ஊடலுக்குக் காரணம் வேண்டும் என்பதற்காக இப்பரத்தையிற் பிரிவு அமைந்தது என்பது அத்துணைச் சிறந்த காரணமாகத் தோற்றவில்லை" என்பர் டாக்டர் அய்யர் அவர்கள்.[3]

(4) நாள்தோறும் பால் குடிப்பவன் அதன் இனிமையறியான் இடையே புளிங் காடியையும் ஒருகால் அருந்துவனாயின் பாலின் இன்சுவை அவனுக்கு விளங்கும். அதுபோல் கற்புடையாளின் தூய பேரின்பத்தைக் கண்டறிதற்காகத் தலைவன் வரைவின் மகளிரைச் சார்ந்து திரிவான் என்பது இறையனார் களவியலுரையாசிரியரின் கருத்து. இதனையும் இதனைத் தொடர்ந்து கூறும் செய்திகளும் ஒப்புக் கொள்ளத்தக்கதல்ல. அவை அறிஞர்க்கு அருவருப்பை விளைவிக்கின்றன.

(5) "பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் பரத்தையொழுக்கம் ஒருவகைக் குடும்ப வொழுக்கம்போல் பரவிக் கிடந்தது; வரைவின் மகளிர்தம் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் உகந்த சூழ்நிலை சமுதாயத்தில் நிலவியிருந்தது; இடையறா இன்பப் புணர்வுக் கென்று கணவன்மார்கள் 'வைப்பு' எடுத்துக் கொள்ளும் பழக்கம் சமுதாய மரபுபோல் ஊறி நின்றது" என்பர் டாக்டர் வ. சுப. மாணிக்கனார். இந்தச் சூழ்நிலையை, செல்வர்கள் வாழும்

2. இறை. களவியல் — 40 இன் உரை; திருக்கோவை-பரத்தையிற் பிரிவு-அவதாரிகை.
3. குறுந்தொகை : நூலாராய்ச்சி. பக். 79
4. **தமிழ் காதல்**—பக். 280.

செட்டி நாட்டுப் பகுதியில் இன்றும் காணலாம். எல்லா இடங்களில் செல்வர்களிடையேயும் மருத நிலக் கிழார்களிடையேயும், வணிக மன்னர்களிடையேயும், பட முதலாளிகள், நடிகர்கள் இவர்களிடையேயும், இப்பழக்கம் இன்றும் பெரு வழக்காக உள்ளது. எனவே, இக் கொள்கை ஒப்புக் கொள்ளத் தக்கது. எந் நிலைக் கணவனையும் நன்னிலைக் கணவனாகக் கொண்டொழுகுவதே மனைவியின் அருங் குணமாகத் திகழ்ந்தது.

தொல்காப்பியமும் சங்க இலக்கியத்தின் மருதத்திணைப் பாடல்களும் நுவலும் பரந்தை கீழ்மகள் அல்லள்; இல்லறத்தின் பகைத்தியுமல்லள். ஆடலும் பாடலும் சான்றவள். கலை பயின்றவள். குடும்பப் பண்பையும் கொண்டவள். தலைவியை வரைந்து கொள்ளுதல் போலப் பரத்தைக் குலத்தாளையும் வரைந்து கொள்ளும் உரிமை தலைவனுக்கு இருந்தமையால் தலைவிபோல் அவளும் உரிமை பெற்றுத் திகழ்கின்றாள், தலைவனையும் தலைவியையும் அன்னவர்தம் குழந்தையையும் மதித்தொழுகும் பெற்றியினள் என்பதனை மருதத் திணைச் செய்யுட்கள் புலப்படுத்துகின்றன. பரத்தமையைத் தொல்காப்பியமும் கடிந்து கூறவில்லை. மாறாக, அவளுடைய கூற்று நிகழும் இடங்கட்கு விதியும் வகுத்துக் கூறியுள்ளது.[5]

6. கணவனும் மனைவியும் ஒத்து இணங்கி வணங்கிப் போகும் நிலையைக் கண்ட சமுதாயம் கணவனின் பரத்தமைக்குப் பச்சைக் கொடியைக் காட்டியது போலும்! அஃது இல்லறத்திற்குப் பகைமை என்று கருதவும் இல்லை. மனைவியைத் துறந்து பரத்தையே கதியாக ஆடவன் மதி மயங்கித் திரியுங்கால் சமுதாயம் அன்னவனை இகழ்கின்றது; திருத்தவும் முற்படுகின்றது. வள்ளல் பேகன் நல்லூர்ப் பரத்தையை நாடிக் கண்ணகியைத் துறந்தபோது கபிலர், பரணர், அரிசிற் கிழார், பெருங் குன்றூர்க் கிழார் என் புலவர்கள் பேகனைத் தேருட்டிய வரலாறு புறநானூற்றால் அறியக் கிடக்கின்றது.

ஆகவே ஐந்திணையில் பரத்தை இடம் பெற்றமைக்குத் தமிழ்ச் சமுதாய மனப்பான்மையே காரணமாகலாம். தமிழகத்தில் பரத்தமை பரவிக் கிடந்தநிலை, அதனைச் சமுதாயம் பொறுத்துக் கொண்டிருந்தமை, இசை நடனம் முதலாய கலைத் துறையில் கணிகையருக்கு இருந்த செல்வாக்கு, தம்மை நாடிய ஆடவர்களைப்

5. கற்பியல்-10

போற்றி மதித்தொழுகும் பரத்தையர் சிலரின் குடிநலம், கணவன் என்றும் தன் மனைவியை உள்ளத்துள் உயர்வாகப் போற்றிய சால்பு, தற்காத்துக் தற்கொண்டானைப் பேணியொழுகும் தமிழ்ப் பெண்ணின் மரபுப் பொறுமை என்ற சமுதாய நிலைகள் ஐந் திணையில் பரத்தை இடம் பெற்றமைக்குக் காரணமாகலாம். உள்ளப் புணர்ச்சி என்னும் அகத்திணையின் தலையாய பண்பிற்கு வரம்புடைய பரத்தை என்றும் ஊறு செய்யாமலே திகழ்ந்தாள் என்பது எண்ணத்தக்கது.

இழிவான பரத்தையரும் தமிழ்ச் சமுதாயத்தில் இருந் தமைக்கும் சான்றுகள் உள்ளன. அதனைச் சில இலக்கியங்கள் சுட்டிக் காட்டவும் செய்கின்றன. தாதுண்டு பூவைத் துறக்கும் வண்டுபோலப் பொருளை உறிஞ்சி ஆளைத் தோலாக விடும் அரிவையரும் உளர். அவர்களைக் 'காதலிகள்' என நம்பி இல்லறம் துறந்த நம்பியரும் உளர். இவர்கள் எஞ்ஞான்றும் ஐந்திணையில் இடம் பெறார். இல்லறத்தை நல்லறமாக, தலையறமாக, மதித்த கணவன்மார்களையும் அன்னவர்களின் குடும்ப வாழ்க்கைக்கு இடையூறாக இராது ஒழுகிக் கொள்ளும் பரத்தைமார்களுமே ஐந்திணையில் இடம் பெறுகின்றனர். இத்தகைய பரத்தையொருத்தி நற்றிணையில் இடம் பெறு கின்றாள்.

> விழுமிதிற் கொண்ட கேண்மை நொவ்விதின்
> தவறுநன்கு அறியா யாயின் எம்போல்
> ஞெகிழ்தோட் கலுழ்ந்த கண்ணர்
> மலர்தீய்ந்து அனையர் நின்நயந் தோரே.[6]

[விழுமிது-சிறந்தது; கேண்மை-நட்பு; நொவ்விதின்-நுட்ப மாகி; நயந்தோர்-விரும்பப்படுவோர்; ஞெகிழ்தோள்-நெகிழ்ந்த தோள்;]

மனைவியை நினையாத தலைவனைப் பரத்தை கழறியுரைக்கும் பாடலாகும் இது. 'ஊரறிய வாழ்க்கைப் படுத்திய மங்கை நல்லாளைக் கைவிடும நீ எம்போல்வாரைக் கைவிடாதிருப்பாய் கொல்? தவற்றினை நன்கு உணர்க. மலரைக் கருக விடற்க' என்று இல்லறநெறிப் படுத்துகின்றாள் இப்பரத்தை. ஆகவே, ஐந்திணைப் பரத்தையைத் தொல்காப்பியரும் ''மனையோள்

6. நற். 315

ஒத்தலின்''[7] என நிகர்படக் கூறுவர். இப் பெண்டிர்களை பொருட் பெண்டிராக, விலைமாதர்களாகத் தொல்காப்பியமும் குறிப்பிடவில்லை. சங்க நூல்களும் காட்டவில்லை. தொல் காப்பியர் இத்தகைய பரத்தையைக் 'காமக் கிழத்தி'[8] என்று திரு நாமமும் சூட்டுவர். இதனால் இவர் உயர்வு பெறப்படும்.

பண்டைச் சமுதாயத்தில் கணிகை மடந்தையருக்கு ஒருவகைச் செல்வாக்கும் இருந்தது.

> பாணன் கூத்தன் விறலி பரத்தை
> யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்[9]

என்ற தொல்காப்பிய நூற்பாப் பகுதியால் பரத்தை கற்பினில் கூற்றுக்கு உரியவளாக எண்ணப் பட்டிருப்பது ஈண்டு நினையல் தகும். எட்டு இடங்கள் அவள் சொல் நிகழ்தற்கு உரியவை யாகும்.[10] சங்க இலக்கியத்தில் கற்புத் திணையில் உள்ள பாக்கள் 966. இவற்றுள் பரத்தமை பற்றியவை 279. பாடியோர் தொகை 50. ஓரம் போடியார், மருதன் இளநாகனார், பரணர், ஆலங்குடி வங்கனார், ஔவையார் நக்கீரர், மருதன் இளங்கடுங்கோ, மாங்குடி மருதனார் என்போர் பரத்தைத் துறை பாடுவதில் வல்லவர்கள். கற்புத் திணையில் சற்றேறக் குறைய மூன்றில் ஒரு பங்கு பரத்தைப் பாடல்களாக இருத்தலின் சங்க காலத்தில் இத் துறைப் பாடலுக்கு இருந்த நன்மதிப்பு ஒருவாறு அறியப்படும்.[11] பிறன்மனை நயத்தல்போல் பரத்தமை கடியப்பெற்றிருப்பின் வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்ற துறைகட்கே இடம் இருந்திருக்காது. முன்னது பரத்தமை தவறு என்பதையும் பின்னது தவற்றினைச் சுட்டித் தழுவிக் கொள்ள வேண்டும் என்பதையும் உணர்த்துகின்றன. இதனால்தான் இல்லறம் சிதை யாமல், கற்பு மகளிரின் மனமும் திரியாமல், மக்கட்பேறும் குறை யாமல் இருந்து வந்தது. பொதுமைப் பெண்ணும் பெருமையை அடைகின்றாள். பரத்தமை தமிழ்ச் சமுதாயத்தின் இயல்பு வழக்காக இருந்தமையால் அகத்திணையில் பரத்தையிற் பிரிவு இடம் பெற்றது.

மனைவியையன்றிப் பிற மாதரை நினையாத நிறையுடைக் கணவன் மார்களும் தமிழகத்தில் இருந்தனர்.

7. கற்பியல்-10
8. ஷெ-10
9. செய்யுளி-182
10. கற்பியல்-10
11. **தமிழ்க் காதல்**-பக். 291

நீதில் நெஞ்சத்துள் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே[12]

என்று ஒழுக்க வஞ்சினம் கூறிய சோழன் நலங்கிள்ளியும் 'சிறந்த பேரமர் உண்கண் இவளினும் பிரிக''[13] என்று தன் ஒருமைக் காதலைச் சூளுரைத்த பூதப் பாண்டியனும் இதற்குச் சான்றுக ளாவர். இத்தகைய ஒருமைக் கணவன் மார்க்கும் பரத்தைக் கணவன் மார்க்கும் வேறுபாடு காட்டாமல் இரு சாராரையும் ஐந்திணைத் தலைவர்களாகக் கொண்டது ஒரு குறையெனக் கருதுவர் டாக்டர் வ. சுப. மாணிக்கனார்.[1]

ஐந்திணைக் காதல் வாழ்வில் ஆடவனது பரத்தமைக்கு இடம் அளிக்காது அவனைத் தூய்மைப் படுத்தியவர் திருவள்ளுவர் பெருமான். எனினும் பரத்தமைக் குறிப்பை அவர் அறவே ஒதுக்கவில்லை. தன் கணவன் தவறிலன் என்பதை அறிந்தும், ஊடற் காலத்துத் தவறுடையான்போலச் சுட்டிக் காட்டிப் புலவி மிகுவிப்பாள். வள்ளுவர் படைத்த தலைவி. ஆகவே, வள்ளுவர் புனைந்த பரத்தைக் கற்பிதம் ஐந்திணைப் பாற்படும். ஆனால் சங்கச் சான்றோர் பாடியுள்ள மெய்யான பரத்தைச் செயல் ஐந்திணையில் அடங்காது என்பது டாக்டர் மாணிக்கனார் கருத்து. ஏறிய மடற்றிறம் பெருந்திணையாவதுபோல் கழிகாமம் மிக்க ஆடவனது பரத்தமை பெருந்திணை யாதலே பொருந்தும் என்பது அவர்தம் அதிராத் துணிபு. ஒரு நிலைக் காமம் நுகரும் ஆண்டகையே ஐந்திணைத் தலைவன் ஆதற்கு உரியவனாவான். இத்தகைய தலைவன் ஒருவனையும் சங்க இலக்கியத்தினின்றும் காட்டுவர் அவ்வறிஞர்.

பகன்றை வான்மலர் மிடைந்த கோட்டைக்
கருந்தாள் எருமைக் கன்று வெரூஉம்
பொய்கை யூரன் மகளிவள்
பொய்கைப் பூவினும் நறுந்தண் ணியளே.[15]

[பகன்றை-ஒருவித கொடி; வான் மலர்-தூய மலர்; கோடு-கொம்பு; கருந்தாள்-கரிய கால்; பூ-தாமரைப் பூ.]

---

12. புறம்-71
13. புறம்-71
14. **தமிழ்க் காதல்**-பக். 293
15. ஐங்குறு. 97.

என்பது அவர்காட்டும் பாடல். தலைவன் புறத்தொழுக்கம் இலனாயிருக்கவும் அவன் அவ்வாறு ஒழுகுகின்றான் என்று கருதித் தலைவி ஊடுகின்றாள். இங்குத் தலைவன் சினந் தானல்லன்; பாயற் பூசலும் செய்தானல்லன். இது அமளிக்கண் அரிவையரின் இயல்பு என்று மகிழ்ந்து புலவி நீக்கி மெய்யின்பம் நுகர்கின்றான். மேயச் சென்று வந்த எருமையின் கோட்டில் பகன்றைக் கொடியின் வெள்ளிய மலர்கள் செறிந்து கிடந்ததைக் கண்ட எருமைக் கன்று அவ்வெருமையைத் தாய் இல்லை என்று ஒருகால் மயங்கியதாம் என்று நகையாடினான். பாயற் பயனையும் கெடாமல் துய்த்தான்; இத்தலைவனே மருதத்திணைக்குரிய உண்மையான தலைவனாவான்.

# கற்பியல் மரபுகள்

களவில் ஒழுகி வரும் தலைமக்கள் கற்பில் புகுந்த பிறகும் அவர்கள் வாழ்க்கையில் காணப்பெறும் சில மரபுகள் உள்ளன. அவை :

(1) கற்பொழுக்கத்தில் பொருள்வயிற் பிரியும் தலைவன் கடும் பாலைச் சுரத்தில் கொடிய விலங்குகளாலோ, ஆறலைக் கள்வர்களாலோ நீரின்மை காரணமாகவோ இறந்து பட்டான் என்ற செய்தியைக் கேட்பதில்லை.

(2) வேற்று நாட்டிற்குச் சென்று பொருளீட்டும்பொழுது அங்குப் பரத்தையர்களின் வலையில் சிக்கிப் பொருளையெல்லாம் இழந்து தலைவன் வீடு திரும்பினான் என்று பாடும் மரபு இங்கு இல்லை.

(3) அங்ஙனமே, தலைவன் பிரிவால் துயருற்று வருந்தும் தலைவி காமச்சுரம் மிக்கு மெலிந்து நலிந்து உயிர் துறந்தாள் என்ற செய்தியும் இங்கு இல்லை.

(4) கணவனது பரத்தமைக்காக மனைவி அவனை வெறுத் தொதுக்கினாள் என்ற செய்திக்கும் இங்கு இல்லை. 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்பதே கற்பியலின் உயிர் நாடி.

(5) ஐந்திணைக் காதல் துறைகளில் அயலார், வெளியார் குறுக்கீட்டிற்கு இடம் இல்லை. தலைவனது தாய் தந்தை முதலான நெருங்கின உறவினருக்கும் கூட இடம் இல்லை.

(6) பருவம் எய்திய இருவர்தம் காதல் தொடங்கும் காலம் முதல் இளமை நீங்கும் காலம்வரை (மகப் பேறு அடையும் வரை) உள்ள காலமே ஐந்திணைக்குரிய காலமாகும். காதலர்களின் முதுமைக் கால வாழ்வுக்கு இங்கு இடம் இல்லை.

# VI. கைக்கிளை

இப்பகுதி வாதத்திற்கு இடனாக அமைகின்றது. இத்திணை விரிவற்றது. இத்திணைபற்றித் தொல் காப்பியம் கூறும், 'காமம் சாலா இளமையோள்' என்ற தொடரின் உண்மையான பொருளே இதன் உயிர்நாடி யாகும். இந்தத் திணையைக் கலித்தொகையில் நான்கு பாடல்கள் சித்திரிக்காட்டுகின்றன. 'கைக்கிளை' என்னும் குறியீடு இருபாலார்க்கும் கொள்ளத்தக்க பொது நிலையில்தான் அமைந்துள்ளது என்பது தெளிவு. கைக்கிளை என்பது ஒரு மன நிலையே. இளம் பெண்களைக் காணுங்கால் இயல்பாகத் தோன் றும் உள்ளத்தளவில் நிகழும் ஒருவித கிளர்ச்சி யாகும் இது. இதனைக் காமம் விளைவித்த பெண்ணும் அறியாள்; புறத்தார்க்கும் இது புலனாகாதது. இஃது இளைய ஆடவன் அகத்தில் பிறந்து நின்று மறைவது. இக்காதல் உணர்வு நிலைத்து நின்றது. சிறுபொழுதா யினும் தூய்மையானது; அன்புடையது; குற்றம் இல்லா தது. இன்ன தன்மையால் இஃது அகத்திணையாயிற்று; அகத்திணையில் ஒரு பிரிவாசவும், அதுவும் தொடக்கப் பகுதியாகவும் அமைந்து விட்டது. இத்தகைய கருத்துகள் இந்த இயலில் ஆராயப்பெறுகின்றன.

## கைக்கிளை

அகத்திணையில் அடங்கிய ஏழு திணைகளையும் எண்ணும் வரிசையில் கைக்கிளை முதலிடம் பெற்றாலும் அதன் இலக்கணம் ஐந்திணை விரிவுக்குப் பின்னரே தொல்காப்பியத்தில் இடம் பெறுகின்றது. இதனால் இதன் சிறுநிலை அறியப்பெறும். தொல்காப்பியர்,

> காமஞ் சாலா இளமை யோள்வயின்
> ஏமஞ் சாலா இடும்பை எய்தி
> நன்மையும் தீமையும் என்றிரு திறத்தான்
> தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
> சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்
> புல்லித் தோன்றும் கைக்கிளை குறிப்பே.[1]

[சாலா - அமையாத; ஏமம் - மருந்து; இடும்பை - துன்பம்; புல்லி - பொருந்தி.]

என்று இதற்கு இலக்கணம் கூறுவர். பருவம் எய்தாத நங்கையொருத்தியை (பருவம் எய்தினவளாக மயங்கி) ஒருவன் காதல் கொள்கின்றான்; காதல் துன்பமும் படுகின்றான்; நன்மை எனவும் தீமை எனவும் அவளைத் தன்னோடு உறவு படுத்திச் செருக்குறுகின்றான்; அவளிடமிருந்து மறுமொழியாக ஒரு சொல்லும் பெற்றான் இலன்; எனினும் தானே சொல்லிச் சொல்லி இன்புறுகின்றான். இது நூற்பாவின் நேர் பொருள். அகத்திணையைச் சார்ந்த கைக்கிளைக்கு ஒரே ஒரு துறைதான் உண்டு என்பது 'புல்லித் தோன்றும் கைக்கிளைக்குறிப்பே' என்பதால் பெறப்படும். இத்திணை விரிவற்றது, துறை பல பெறாதது என்பது இதன் பொருளாகும். கைக்குடை, கையேடு, கைவாள், கைத்தடி, கைக் குழந்தை, கைமாற்று, கையடக்கம், கைவண்டி, கைக்கடிகாரம்

1. அகத்திணை - 53

என்ற தொடர்களுடன் வைத்தெண்ணினால் இது தெளிவாகும். சங்கஇலக்கியம் முழுவதும் துருவி ஆராயின் நான்கு பாடல்களே இத்துறை பற்றியனவாகக் காணப்பெறுகின்றன. இந்நான்கு பாடல்களும் கலித்தொகையில் தான் உள்ளன.[2] இவற்றுள் மூன்று கபிலர் பாடியவை; ஒன்று நல்லுருத்திரனார் பாடியது.

மேற்குறிப்பட்ட நூற்பாவில் 'காமஞ் சாலா இளமையோள்; என்ற தொடரின் பொருள் சிந்திக்கத் தக்கது. இத்தொடர் இருவகையான கருத்து எழுவதற்கு இடந்தருகின்றது. **ஒன்று:** ஒருவன் பெண்ணொருத்தியைக் கண்டு காமஉணர்வு கொண்டான். ஆனால், அவளிடத்து யாதொரு குறிப்பும் புலனாகவில்லை. அதனால் இப்பெண் காமம் எழுவதற்குரிய பருவம் நிரம்பாத பெண் எனத் தெரிந்து கொண்டான். குமரி என எண்ணித் தன் காதலை அப்பெண்ணிடம் புலப்படுத்தினான் எனவும், அவளிடம் உடன்பாட்டிலோ எதிர் மறையிலோ யாதொரு எதிர்வினையும் (Rea tion) தோன்றாததால் இவள் பக்குவப் படாத கன்னி எனத் தன் காதல் ஓட்டத்தை நிறுத்திக் கொண்டான் எனவும் இதனால் தெளியப்படும். **இரண்டு:** வயதிற்கு வராத பெதும்பை எனத் தெரிந்தே ஒருத்தியை ஒருவன் காதலித்தான். அவள்பால் காதல் உணர்ச்சி எழாததால் தன் உணர்ச்சியைத் தடுத்து நிறுத்திக் கொண்டான் என்பது. இப்பொருளையே எல்லோரும் கருதி எழுதியும் வருகின்றனர். வயதுக்கு வராதவள் என்று தெரிந்திருந்தும் வேண்டுமென்றே காதல் விளையாட்டுப் புரிந்தான் என்ற கருத்து இந்நூற்பாவில் வரும் பின்வரும் தொடர்களுடன் பொருந்தவில்லை. ஆகவே, முதற்பொருளைக் கொள்வதே ஏற்புடைத்து.

இதற்கு மேலும் விளக்கம் தேவைப் படுகின்றது. கைக்கிளை என்பது, வயது வந்த இளைஞனொருவனுக்கும் தோற்றத்தால் எடுப்பே இல்லாத மிகச்சிறிய பெண்ணுக்கும் நிகழும் காதல் நிகழ்ச்சியைக் கூறும் திணை அன்று. இளைஞன் காதலித்த பெண் பூப்பெய்தாதவள் என்பது உண்மையேயாயினும், அணிமையில் வயதுக்கு வரக் கூடிய பெதும்பைப் பெண் என்பது அறியத் தக்கது.

> மின்னினழ நறுநுதல் மகள்மேம் பட்ட
> கன்னிமை கழியாக் கைக்கிளைக் காமம்[3]

---

2. கலி - 56, 57, 58, 100.
3. பரிபாடல் அடி - 135 - 36.

என்பர்நல்லந்துவனார் என்றசங்கப்புலவர். எனவே, 'காமஞ் சாலா இளமையோள்' என்ற தொடரால் காமம் சாலுதற்கு, காமச் செவ்வி உண்டாதற்கு, உரிய பருவம் அண்மையில் வருவதற்கு உரியவள் என்பதுவே இதன் பொருள் என்பது துணியப்படும். எனவே, காமப்பதம் நெருங்குதற்குரிய பெண்ணைத்தான், இளையவளைத்தான், 'காமஞ்சாலா இளமையோள்' எனக் குறித்தார் தொல்காப்பியர் என்பது பெறப்படும்.

பருவம் எய்திய நங்கையர் யாவரும் காதலித்தற்கும் மணங் காணுதற்கும் உரியவர்கள். அணிமையில் வயதுக்கு வந்த நங்கைக்கும் மெய் வேறுபாடு பெரிதும் இராது. கரணத்தினால் மேற்கொண்ட புற அடையாளம் இல்லாததாலும், மேனி வளத்திலும் குறிப்பிடத் தக்க வேறுபாடு இல்லாததாலும் இத்தகைய பக்குவம் எய்தாத நங்கையொருத்திபால் நம்பி ஒருவன் காதல் கொள்ளும் காட்சியைக் கலித்தொகை நன்கு சித்திரித்துக் காட்டுகின்றது. அவன் அவளைப் பாராட்டி வியத்தலை,

வாருறு வணரைம்பால்
  வணங்கிறை நெடுமென்தோள்
பேரெழில் மலருண்கண்
  பிணையெழில் மானோக்கின்
காரெதிர் தளிர்மேனிக்
  கவின்பெறு சுடர்நுதல்
கூரெயிற்று முகைவெண்பல்
  கொடிபுரை நுசுப்பினாய்.[4]

[ஐம்பால் - கூந்தல்; கார் - மேகம்; கவின் - அழகு; சுடர் - ஒளி; எயிறு - இடை]

என்ற பாடற் பகுதியில் காண்க. இதில் 'கோதி நெளிந்த அவளது கூந்தலையும், பருத்த மெல்லிய தோளினையும், மலர்போலும் குளிர்ந்த மையுண்ட கண்களையும், மான்போலும் மருண்ட பார்வையினையும் மழைபெற்ற தளிர்போலும் மேனியினையும், ஒளி பொருந்திய நெற்றியினையும், முகை போன்ற கூரிய வெள்ளிய பல்லொழுங்கினையும், கொடி போன்ற துவளும் இடையினையும் பாராட்டி வியத்தலைக் காணலாம். இன்னொரு தலைவன்

4. கலி - 58

பிறிதொருநங்கையிடம்' சூட்டு மயிரினையுடைய அன்னம் போன்ற நடையினையும் அழகிய மயில் போன்ற சாயலையும் அழகிய புறாவின் மடப்பத்தையும் பெற்றுள்ள நின் எழில் நலத்தைக் கண்டார் நின்பால் காம மயக்கம் கொள்ளாரோ?' என்று தன் காமத் துயரை அறிவிக்கின்றான்.[5] இங்ஙனம் பிதற்றும் அவ்விளைஞர்களின் காதற்பதிவை அந்நங்கைமார் எதிரேற்கவில்லை; அவர்கள் பாராட்டையும் செவி மடுக்கவில்லை; துயரையும் உணரவில்லை. இங்ஙனம் தம்மால் இளைஞர்கள் அவதியுறுவதை அந்நங்கைமார் அறியார். காரணம், அவர்கள் முன்னின்று அவ்விளைஞர்கள் அப்பெண்கள் கேட்கும்படியாகவும் உணரும்படியாகவும் நேர் நின்று யாதும் செய்வதில்லை. அவர்கள் தம் வாயளவில், தம் உள்ளத்தளவில், காதல் நிலைகளை ஆக்கிக் கொள்கின்றனரேயன்றி அப்பெண் மணிகளைத் தொடர்ந்து யாதும் செய்வதில்லை. காதலைப் புலனாக்கலாமா என்று அவன் உள்ளம் அவாவுகின்றது; அவ்வளவு தான்.

இந்த இளைஞர்களைப்பற்றியும் இவர்தம் உள்ளோட்டம் பற்றியும் காமஞ்சாலா இளமை மகளிர் ஒன்றும் அறியார். அம்மகளிர் தம்பாட்டுக்குப் போவதும் வருவதுமாக உள்ளனர். ஆனால் இளைஞர்களோ தாமாக ஒன்றை நினைத்து அவாவிக் கவல்கின்றனர். இளைஞன் ஒருவன்,

நேர்சிலம்பு அரியார்ப்ப
நிரைதொடிக்கை வீசினை
ஆர்உயிர் வௌவிக்கொண்டு
அறிந்து ஈயாது இறப்பாய்கேள்[6]

[நேர் - காலுக்குப் பொருந்தின; அரி - உள்ளிடு மணி; கொடி - வளையல்; இறத்தல் - கடத்தல்]

என்று பேசுகின்றான். சிலம்பு ஒலிப்பக் கைவீசித் தன் உயிரைப் பறித்துக்கொண்டு அறியாது செல்கின்றதாக ஒரு பெண்ணை நோக்கிப் பேசுகின்றவன் தன் உயிரைத் தானே பறித்துக் கொண்டு புலம்புதலை இவ்வடிகளில் காணலாம். இந்நிலையிலுள்ள பிறிதோர் இளைஞன் தான் கூறியவற்றால் தான் காணும் நங்கை பால் யாதொரு சிறு மாற்றமும் தோன்றாததனால்,

5. ஷை - 56
6. ஷை - 58
7. ஷை - 56

பேதுற்றாய் போலப்
பிறரெவ்வம் நீயறியாய்
யாதொன்றும் வாய்வாளாது
இறந்து ஈவாய் கேள்.[7]

[பேது - மயக்கம்; எவ்வம் - வருத்தம்; வாய் வாளாது - சொல்லாது; இறந்து ஈவாய் - கழிந்து போகின்றவளே ]

என்கின்றான். ஓரளவு உண்மையை உணர்ந்து தன் காதலரும்பைக் கிள்ளிக் கொள்ளுகின்றான். இங்ஙனம் இவன் மயங்கி மதி இழந்தமைக்கு ஒரே காரணம், தான் கண்ணுற்ற பெண் குமரி போலும் தோற்றம் அளித்தமையே. இம்மயக்கத் தோற்றத்தின் அடிப்படையில் கைக்கிளை காதல் முகிழ்க்கின்றது. ஆகவே, அகத்திணைக் கைக்கிளை என்பது காமப் பருவத்தை இன்னும் எய்தாத, ஆனால் அணிமையில் எய்தும் நிலையில் இருக்கும், பெதும்பைப் பருவப் பெண்ணைத் தோற்றத்தால் குமரி என மயங்கிப் பருவம் எய்திய இளைஞன் அறியாமல் தன்னுள் புலப்படுத்திய காதலின் முகிழ்ப்பை மட்டிலும் கூறி அமைவதாகும். இந்த அளவில் இத்திணையின் காமப் பொருள் முடிவு பெறுகின்றது.

இங்ஙனம் பருவ மயக்கத்தால் அறிவு மயக்கம் ஏற்பட்ட கைக்கிளை இளைஞர்கட்கு மன மாசு கற்பித்தலும் அறப்பிழை ஏற்றலும் எத்துணையயும் பொருந்தாது. தோற்றத்தால் ஒன்றனைப் பிறிதொன்றாகக் கருதிய கைகக்கிளை இளைஞன் குற்றமுடையவன் அல்லன்; மாசுடைய மனத்தவனும் அல்லன். தான் தவறாகக் காதலித்த நங்கை குமரியல்லள் என்று உணர்ந்த பின் தன் செயலை எண்ணித் தானே நகைத்துக் கொள்ளுகின்றான். தான் காதலித்த நங்கையும் குற்றமிலள், தானும் குற்றமிலன் என்று உணர்கின்றான். இவன் நிலையைக் கபிலர் பெருமான்,

நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது சொல்லற்க என்னா
இறையே தவறுடை யான்.[8]

[புறங்கடை - வெளியே; போதர - சொல்ல; நுமர் - உன் சுற்றத்தார்; இறை - அரசன்]

8. ஷை - 56.

என்ற கலிப்பாட்டுப் பகுதியில் புலப்படுத்துவர். ''வெளியே வந்த உன்மேலும் பிழை இல்லை; வெளியே செல்ல விடுத்த உன் பெற்றோர்பாலும் பிழை இல்லை. போர் யானை குளத்திற்கு நீர் குடிக்க வந்தால் அதன் வருகையைப் பறை அறைந்து அறி விப்பது அரச வழக்கம். அது போலவே உன் வருகையையும் அரசன் அறிவிருத்திருக்க வேண்டும். அங்ஙனம் செய்யாமையின் அவனே தவறுடையான்'' என்று கைக்கிளை இளைஞன் எவர் பாலும் தவறு இல்லை என்ற பொருள் விளங்கப் பேசுகின்றான். குமரி இல்லை என்றும், தன் காதலுக்குப் பொருளற்றவள் என்றும் சோழன் நல்லுத்திரன் கூறியாங்கு, 'வருந்தநோய் செய்திறப்பின் அல்லால் மருந்தல்லள்'[9] என்றும் அறிந்து கொண்ட பின்னர் அவன் பேசும் பேச்சினைச் 'சொல்லி இன்புறல்' என்று கூறுவர் தொல்காப்பியர். எண்ணிய மெய்யின்பம் பெறவில்லையே என்று அவ்விளைஞன் மனம் வருந்தான் என்பதும், கைக்கிளைச் செயல் அவன் சொல்லளவில் நின்றொழிவது என்பதும் பெறப்படும். இவன் பலவாறு புனைந்தும் வருந்தியும் இன்புற்றும் பார்த்தும் கூறுபவை யெல்லாம் இவன் செவியளவினவே, கண்ணளவினவே. இவன் காதல் கொண்ட நங்கை இதனைச் சிறிதும் அறியாள்; எண்ணவும் செய்யாள். இவ்வமைப்பு நிலையைக் கருத்தில்கொண்டு கைக்கிளைப் பாடல்களைக்[10] கற்றுத் தெளிய வேண்டும்.

கைக்கிளை என்னும் குறியீடு இருபாலார்க்கும் கொள்ளத்தக்க பொதுநிலையிற்றான் அமைந்துள்ளது என்பது தெளிவு. என்ற போதிலும் ஆண்பாற் படுத்திக் கூறுவதே, இளைஞனின் காதலை எடுத்துக் கூறுவதே, இலக்கண மரபாகும் என்பது நாவலர் சோம சுந்தர பாரதியாரின் கருத்தாகும்.[11] ''சொல்லெதிர் பெறாஅன்'' என்ற தொல்காப்பியரின் வாக்கும் இதனை வலியுறுத்தல் அறியப் படும். தமிழ்ச் சமுதாயத்தில் இளங் குமரியர் தம் காதலை முந்துற்றுக் காட்டும் மரபு இல்லை. தமிழ்ச் சமுதாயத்தில் நல்லன வற்றையும் தீயனவற்றையும் கண்ட தமிழ்ச் சான்றோர்கள் தீயன வற்றை அறவே விலக்கினர்; நல்லனவற்றைத் தேர்ந்து, தெளிந்து, இலக்கியப்படுத்தி இலக்கணமும் வகுத்தனர். சமுதாயத்தில் இல்லாத ஒழுகலாற்றை அன்னோர் யாண்டும் கூறினார் இலர். இன்னொரு முக்கிய செய்தியும் ஈண்டு நினைக்கத் தக்கது. பொது

9. ஷை - 109
10. ஷை - 56, 57, 58, 109
11. அகத்திணை-பாரதியாரின் உரை. பக் 185

வாக நங்கையைக் காட்டிலும் நம்பி சில ஆண்டுகள் மிக்கவனாக இருத்தல் வேண்டும் என்பது தமிழர் கண்ட மணமுறை.

மிக்கோ னாயினும் கடிவரை யின்றே.[12]

என்றுவிதியும் செய்வர் தொல்காப்பியர். குமரனாயினும் தம்மினும் இளையவனை மணக்கும் வழக்கம் தமிழ்ப்பெண்களிடம் என்றும் இருந்ததில்லை சில ஆண்டுகள் தம்மிலும் உயர்ந்தவனையே மணக்க விரும்புவது அன்னவர் இயல்பாகும். இத்தகைய மரபு பிழையாது தமிழ்ச்சமுதாயம் மகளிரை வளர்த்து வந்தது; இன்றும் அம்மரபு நின்று நிலவுவதைக் காணலாம். ஆதலின் பருவம் வந்த நங்கையர் பருவம் எய்தாத நம்பியைக் காமுறுதல் என்பது தமிழ் இலக்கியத்தில் காணாத வழக்கு. தமிழ்ப்பெண்டிர் கற்பைப் போலவே நாணத்தையும் காப்பவர்கள். கற்புக்காக நாணத்தைக் கைவிடுவரேயின்றிக் காதலுக்காக நாணத்தை இழக்க விழை யாதவர்கள். இந்நிலையினின்றும் வழுவினரேல் சமூகப் பழி வந்தெய்தும்; வாழ்வும் இழிந்து கெட்டுவிடும்.

பிறிதொரு செய்தியும் ஈண்டுச்சிந்திக்கத்தக்கது. மகன்மை எய் தாதவனாயினும் எய்தினவனாயினும் ஒரு நங்கை தன் காமவுணர் வைத் தானே முந்துற்றுக் கிளத்தல் இல்லை.

தன்னுறு வேட்கை கிழவன்முன் கிளத்தல்
எண்ணுங் காலை கிழத்திக்கு இல்லை.[13]

என்பது தொல்காப்பியம். இங்ஙனம் செய்வதை அவளது நாணமே தடுத்து நிறுத்தும்.

தாமுறு காமத் தன்மை
தாங்களே யுரைப்ப தென்பது
ஆமெனல் ஆவ தன்றால்
அருங்குல மகளிர்க்கு அம்மா[14]

என்று கம்ப நாடனும் தமிழ்ப் பெண்ணீர்மையைச் சூர்ப்பணகை வாய்மொழியாக எடுத்துரைப்பன். ஆகவே, அகத்திணைக் கைக் கிளையில் பெண்பாற்கு இடமே இல்லை என்பது இதனாலும் வலியுறும். இங்ஙனம் இடம் இல்லாதது தமிழ் நாகரிகத்தின் இயல் பும் பெருமையும் ஆகும். ஆண் தன் காதலைத் தானே முந்துற்று

12. களவியல்-2
13. ஷை-28
14. கம்பரா. ஆரணிய-சூர்ப்ப.

விளம்பிநிற்கும் பிறவியாகும். பெண்ணைப் போலவே ஆணும் நாணி தன் காதலுணர்வை அடக்கிக் கொள்ளுமேல் பின்னர் யார்தான் காதற்சிறையை உடைப்பவர்? யாவர்தாம் காதற்பயிரை வளர்க்கும் பொறுப்புடையவர்கள்?

> கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்து
> ஒடுங்கினள் கிடந்த ஓர்புறம் தழீஇ
> முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப[15]
>
> [கொடும்புறம் - முதுகு; கலிங்கம் - புடவை; புதை - மூடியிருந்த]

என்ற அகப்பாடற் பகுதியால் திருமண நாளில் கோடிப் புடவைக்குள் தன் உடலை வளைத்து முகம் மறைத்துக் கிடந்த காதலியைப் புறம் தழுவித் தலைவன் முகமறைவை எடுத்தான் என்று நல்லாவூர்க் கிழார் ஆடவனது நீர்மையை, காதலில் அவனது முதல் முயற்சியை, எடுத்துக்காட்டுவர். ஆகவே, ஒருபுடைக் காமம் ஆகிய அகத்திணைக் கைக்கிளைக்கண் ஆண்பால் ஒன்றே இடம் பெறுதல் இயல்பும் தமிழ்ச் சமுதாய முறையுமாகும் என்பது தெளியப்படும்.

'காமஞ்சாலா இளமையோள்' என்பதற்கு காமக் குறிப்பில்லா பேதைச் சிறுமி எனத் தவறாகப் பொருள் கண்டதால் தமிழ்ச் சமுதாயத்தில் குழந்தைமணம் இருந்தது போலும் என்று சிலரைத் தவறாக ஊகிக்கவும் இடந்தந்தது[16] இங்ஙனம் ஓர் இளைஞன் பேதைப் பருவப் பெண்ணைக் காதலிப்பதும் அவளுடைய பெற்றோர் அவன் காதலை ஏற்று மகளைப் பருவம் அடையா முன்னரே மணம் புரிவது மாகிய ஒரு நெறி நடைமுறையில் இருந்திருப்பின் "காமஞ்சாலா இளமையோள் வயின்" என்ற நூற்பாவில் குறிப்பிட்டுள்ள துன்பங்களையெல்லாம் அவ்விளைஞன் அநுபவித்திருக்க வேண்டா. பேதைக்காதல் தமிழ்ச் சசமுதாயத்தில் வழக்கிலிருந்திருக்குமேல் தொல்காப்பியர் கூறும் கைக்கிளைத் தன்மைக்கு அது பொருந்தி வாராமை அறியத் தக்கது. இத்தகைய மண நெறி உண்மையாக நிலவியிருப்பின் ஆசிரியர் தொல்காப்பியனாரும் துறை பல வகுத்துப் பேதைப்பெண்ணை வரையும் வரை முறையாக மொழிந்து சென்றிருப்பர். பேதையைக் காதலித்தல், அவள் பருவம் எய்தும்வரை காத்திருத்தல், காமம்

---

15. அகம்-86
16. தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி—பக் 15

சான்ற குமரியானபின் ஐந்திணைக் காதலன் ஆதல் என்று முறையாக ஓதி கைக்கிளைக்கும் ஐந்திணைக்கும் ஒரு தொடர்பும் காட்டியிருப்பர்.

இலக்கணம் இலக்கியம் அறநூல் என்ற முத்துறை நூல்களையும் ஆராய்ந்து காணின் தமிழ்ச் சமுதாயத்தில் நிலவியிருந்த நல்லனவும் தீயனவுமான காதற் போக்குகளை தெளிவாக அறிந்து தெளியலாம். பேதைக் காதல் இம் மூன்றிலும் இடம் பெறாமையின் அது தமிழ்ச் சமுதாயத்தில் என்றும் இருந்ததில்லை என்று துணியப்படும். கைக்கிளைப் பாடல்களில் பெண்ணுறுப்புகளை வருணிக்கும் முறையை நோக்கினால், அவ்வருணனை குமரிப் பருவத்தை அணுகும் நிலையையுடைய பெதும்பைக்கு உரியது என்பது தெளிவாகும்.

முற்றின கோங்க மாத்தினது இளைய முகையென்றும், தென்னைமரத்தின் கட்புலனான குரும்பைஎன்றும், மழைபெய்யுங்கால் உண்டாகும் மொக்குள் என்றும் பெண்ணின் முலை வருணனையும்,[17] மூங்கில் என்னும்படி திரண்ட தோளினையும் மணம் நாறும் கடை குழன்ற ஐம்பாலினையும், மானோக்கினையும் வென்ற மடப்ப நோக்கினையும், மயில் போன்ற சாயலையும், நுடக்கத்தால் கொடியெனவும், விளக்கத்தால் மின் எனவும், கட்புலனாகாமையின் வருத்த மெனவும், யாதொன்றும் தோன்றாத இடையினையும் உடைய பெண் வருணனையும்,[18] மேலும் அவள் உறுப்பும் வனப்பும் கண்டவர்தம் உயிரை வாங்க வல்லன எனவும்,[19] அவள் கண்ணோக்கு எல்லாருடைய உள்ளத்தையும் புண்ணாக்கும் எனவும் காட்டும் வருணனைகளும் அப்பெண் குமரிப் பருவத்தை அணுகும் நிலையையுடைய பெதும்பைப் பருவத்தாள் என்ற துணிவினுக்கே கொண்டு செலுத்து கின்றன.

பருவம் எய்தியவர்கட்கே திருமணம் கூட்டுவது என்பது தமிழ்ச் சமுதாய மரபாக இருந்து வந்ததையும் இலக்கியங்கள் காட்டுகின்றன. திருமணம் நடைபெற்ற அன்றே மணமக்கள் இன்பந் தலைப்பெய்வர் என்ற செய்தி ‘தமர் நமக்கு ஈந்த தலை நாள் இரவில் கோடிக் கலிங்கம் உடுத்தவளைக் கூடிக் கலந்தேன்’ என்று ஒரு மணமகன் நினைவு கொள்வதாலும்[20] ‘கோடிக் கலிங்கத்

17. கலி-56.
18. ஷை-57.
19. ஷை-59
20. ஷை-136.

துள் நாணி ஒடுங்கிய காதலியின் முக மறைவைத் திறந்து இன்புற்றேன்' என்று மற்றொரு தலைவன் தன் மண நாளை நினைத்தலாலும்,[21] உறுதிப்படுகின்றது. இவற்றால் மணமான அன்றிரவே மெய்ம் முயக்கம் உண்டு என்பதும். காமஞ்சான்ற குமரியைத் தான் மணம் செய்வர் என்பதும் தெளிவாகின்றன. சங்க இலக்கியம் முழுவதும் துருவி ஆராயினும், பிற்கால இலக்கியத்தை ஊன்றி நோக்கினும், இச்சிறு மணம் பற்றிய செய்தி குறிப்பாகக் கூட யாண்டும் காணப்பெறவில்லை.

இதுகாறும் கூறியவற்றால் நாம் அறிந்து கொள்வது கைக்கிளை ஒரு மனநிலையே என்பது. காமஞ்சாலாத இளையவளை—பக்குவம் எய்தாத பெண்ணை—ஓர் இளைஞன் காதலிக்கும் அகத்திணைக்கைக்கிளைக்குத்தமிழ்ச்சமுதாயவழக்குஇல்லை இத்தகைய திணைக் காதலை நிலைக் களனாகக் கொண்டு எந்த நிகழ்ச்சியும் நடந்த தில்லை, ஆயினும் இக் காமத் தன்மை தமிழ் மாந்தர் தம்உள்ளத்து நிகழும் ஒன்றேயாகும். ஒத்த தோற்றத்தால் பருவம் மயங்கிய ஆடவன் கொள்ளும் காமத்தின் மனநிலையைச் சுட்டிக் காட்டுவதே அகத்திணைக் கைக்கிளையாகும். இம் மனநிலை கனா மயக்கம் போன்று நீடித்து நில்லாதது. இஃது இளம் பெண்களைக் காணுங்கால் குமரர்கட்கு இயலபாகத் தோன்றும் உள்ளத்தளவில் உள்ள ஓர் உணர்ச்சியாகும். இது காமம் தந்த பெண்ணுக்கும் புறத்தார் யாருக்கும் புலனாகாதது. ஆயினும், ஓர இளைய ஆடவன் அகத்தில் பிறந்து நின்று மனறவது. இந்நுட்ப மன நிலையைக் கண்ட தமிழ் மூதறிஞர்கள் இந் நிலை குற்றமுடையதன்று எனவும், ஒருவித இயற்கையின் விளைவு எனவும் தெளிந்து இலக்கியத்திலும் வைத்துப் போற்றினர். மெய்ப் பருவத் தகுதியின்றி உள்ளமாகிய நிலத்துக் காம உணர்வு தோன்றாது. உள்ளப் புணர்வுக்கு உடற் பருவத்தின் இன்றியமையாமையைக் காட்டுவதே கைக்கிளையின் குறிக்கோளாகும்.

அகத்திணையின் பண்பு உள்ளப் புணர்ச்சி என்பதை நாம் அறிவோம். ஆயினும், உள்ளப் புணர்ச்சிக்கு இடந்தராத கைக்கிளையை அகத்திணையில் சேர்த்துள்ளனர். உள்ளப் புணர்ச்சி யாவது நெஞ்சத் தூய்மை, அன்புக் கூட்டுறவு ஆகும். கைக்கிளையில் யாருடைய தூய்மையும் கெடவில்லை. ஒருவன் தூய உள்ளத்துடன் காதலை நாடினான்; நாடப்பெற்ற பெண்ணோ

21. அகம்-86.

பருவச் செவ்வியில்லாதவள். அதனால் அகத்தளவில் தோன்றிய தன் காதலரும்பைக் கிள்ளி எறிந்தான். இவனுடைய காதல் நிலைத்து நின்றது சிறு பொழுதாயினும், தூய்மையானது; அன்புடையது; மாசு தராதது. "'காமஞ் சாலா' என்றதனால் தலைமைக்குக் குற்றம் வாராதாயிற்று" என்றார் இளம் பூரணரும். இன்ன தன்மைகளால் கைக்கிளை அகத்திணையா யிற்று. இவ்வகை உள்ளோட்டம் இளைஞர்கட்கு இயல்பாதலால் கைக்கிளை அகத்திணையின் ஒரு பிரிவாகவும் தொடக்கப் பகுதி யாகவும் அமைந்தது.

தமிழ் இலக்கியத்தில் அகத்தும் புறத்தும் காணப்பெறும் பல்வேறு கைக்கிளைகளைத் தொல்காப்பிய உரைகளும் நம்பி யகப் பொருளும் புறப் பொருள் வெண்பா மாலையும் விரித்தோது கின்றன. அகத்திணைக் கைக்கிளைக்கும் ஏனைக் கைக்கிளை கட்கும் பெரியதொரு வேறுபாடு உண்டு. ஆண்பாற் கைக்கிளை பெண்பாற் கைச்கிளை என இருபாற் கூற்றுக்கும் ஏனைக் கைக் கிளையில் இடமுண்டு. தம் ஒருபுடைக் காமத்தை இருவரும் உரைப்பர். ஆயினும், இருவரும் ஒருவரை யொருவர் நேர்நின்று உணர்வைப் புலப்படுத்தலும் உரைத்தலும் இல்லை. கைக்கிளை என்னும் பெயருக் கேற்ப, எதிர்ப்பாலாரின்றித் தமக்குத் தாமே மொழிந்து கொள்வர். 'சொல்லெதிர் பெறாமை' எல்லாக் கைக்கிளைக்கும் பொதுவான பண்பாகும். ஏனைக் கைக்கிளைக் காதலர்கள் காமஞ் சான்ற பருவ மக்கள்; காமத்தை உணரவும் நுகரவும் வல்லவர்கள். இவர்கள் விழைந்தாரைப் பெறுவது அரிது என்று முற்றிலும் அறிந்த பின்னரும் காதலை ஒழியார்; கவற்சியும் நீங்கார்.

நக்கண்ணையார் ஆமூர் மல்லன்மீது கொண்ட காதல் கைக் கிளைக் காமமாய் முடிந்ததை நாம் அறிவோம். இக் கைக்கிளை பற்றிய பாடல்கள் புறத்திணையில் அடங்கின.[22] பருவம் நிரம்பிய நக்கண்ணையார் ஒத்த பருவத்தனான மல்லனைக் காதலித்தாள். ஆனால், இருவருக்கும் பருவத் தகுதி யிருந்தும் உள்ளப் புணர்ச்சி இல்லை. அகத்திணைக் கைக்கிளை என்பது, அறியாமையால் ஓர் இளைஞனின் மனத்தில் சிறுபோது தோன்றி நீடியாது ஒழியும் காம மனநிலை. இங்கு ஆண், கைக்கிளைக்கு முதல்வனாயினும் 'ஆண்பாற் கைககிளை' என்ற பெயர் பெறுதல் இல்லை. இவனது

22. புறம்-83, 84, 85.

காமம் நிற்கும் காலம்சிறிதாதலின், யாதொருமெய்ப்பாடும் இவன்-கண் தோன்றுதல் இல்லை. ஏனைக்கைக்கிளையினர் காமம் காழ்ப்பு பெற்றவர்கள்; பிரிவுக் கவலை உறுபவர்கள்; இவனிடத்துப் புறத்தே புலனாகும் மெய்ப்பாடுகளும் தோன்றும். நக்கண்ணையார் தான் பசலை நிறம் அடைந்ததைத் தெரிவித்தல் காண்க.[23]

பருவம் எய்தின இருபாலாரிடை நிகழும் **அறிந்த** கைக் கிளைக்கும் பருவம் வாய்ந்த ஆண்மகனிடம் மட்டிலும் நிகழும் **அறியாக்** கைக்கிளைக்கும் உள்ளத்தில், உடலில், செயலில், காமத்தில், விளைவில் பெரும் வேறுபாடுகளும் மாறுபாடுகளும் உள்ளன. அகத்திணைக் கைக்கிளை ஆடவன் தன் அறியாமையை உணர்ந்து திருந்துகின்றான்; தூய்மையையும் காக்கின்றான்; ஐந்திணை வாய்ப்பையும் பெறுகின்றான். இங்குக் கைக்கிளை உள்ளத்தளவு சிறிவ காலம் நிகழினும், துறை விரிவு இலை யெனினும், உரனும் பெருமையும் உடையதாதலின் **திணை** என்ற பெரும் பெயர்க்கு உரித்தாயிற்று; எழுதிணையுள் ஒன்றாக, ஒரு பிரிவாகக் கருதப் பெறும் நிலையையும் அடைந்தது. ஏனைய கைக் கிளைகளோ புறத்திணையில் அடங்குவன வாயின; **துறை**யளவில் நின்றன.

23. புறம்-84

# V. பெருந்திணை

பெருந்திணையும் அகத்திணையுள் அடங்குவதாகும். இத்திணையில் நான்கு துறைகள் உள்ளன. ஏறிய மடல் திறம், இளமைதீர் திறம், தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறம், மிக்க காமத்து மிடல் என்பவையே இவை. உரையாசிரியர்களும் பிறரும் இத்திணைத் துறைகள் அமைந்த பாடல்கட்குத் தவறான பொருள் கண்டு மலைந்தனர். காரணம், ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணை என்ற மூன்றற்கும் அவர்கள் கொண்ட த ு றான பொருளே யாகும். இத்திணையின் 'பெரு' என்ற அடையின் பொருள் தெளிவாயின் திணைப் பொருள் விளக்கம் எய்தும். தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் வரும் பெருந்திணை-ஐந்திணை என்ற இரண்டு திணை பற்றிய கருத்துகளை ஒப்பிட்டு ஆராயின், ஐந்திணையின் ஒரு மிகு நிலையே பெருந்திணையாக வளர்கின்றது என்ற உண்மை தெளிவாகும். பெருந்திணைக்கண் வலிந்த காமத்துக்கு இடம் இல்லை; அகத்திணைப் பண்பிற்கு ஒத்ததுவே இது தொல்காப்பியரும் சங்கச் சான்றோர்களும் இத்திணையை அன்புடைக் காமமாகவே எண்ணிப் பாடியுள்ளனர். காதலர்களின் காமப் பாங்கு உள்ளத் தளவிலும் சொல்லளவிலும் காத்தோம்பிக் கொள்ளுங் கால் அவை ஐந்திணைக் கோலங்கொள்ளுகின்றன; அவை அங்ஙனம் காத்தோம்பப்பெறாமல் மிகு நிலை எய்துங் கால் பெருந்திணைப் பொருளாக வடிவங்கொள்ளுகின்றன. இந்தக் கருத்தின் அடிப்படையில் இத்திணைத் துறைகள் நான்கும் எடுத்துக்காட்டுகளுடன் விளக்கம் பெறுகின்றன இப்பகுதியில்.

# பெருந்திணை

ஏறிய மடற்றிறம் இளமைதீர் திறம்
தேறுதல் ஒழித்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணை குறிப்பே.[1]

என்பது பெருந்திணையைக் குறிப்பிடும் தொல்காப்பிய நூற்பா. பெருந்திணை நான்கு துறைகள் கொண்டது. அவை.

1. காதலியைப் பெறாத நிலையில், காதலன்மடலேறிச் செல்லுதல்.
2. கட்டிளமைக் காலத்துஇன்பம் துய்க்காது, கணவன் மனைவியை விட்டு நெடுங்காலம் பிரிந்திருத்தல்.
3. எவ்வகையானும் தேறுதல் அடையாமல் மனைவி காமம் முற்றுதல்.
4. காமம் காழ்க்கொண்ட மனைவியின் துணிவுச் செயல்.

பெருந்திணை அன்பு சான்ற அகத்திணையின் ஒரு பிரிவு என்பதனை மறவாது பெருந்திணைக் கருத்தை இன்னதென அறுதியிடல் வேண்டும். அதற்கு முன்னர் உரையாசிரியர்களும் பிறரும் இந்நாள்வரைக் கூறி வரும் பொருள்களைத் தொகுத்துக் காண்போம்.

1. பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்.
2. ஒருவன் ஒருத்தியிடம் கழிகாமம் கொள்ளுதல்; அவளை அடையப் பெறாவிடில் மடலேறுதல்.
3. தனக்கு இளைய பருவத்தாளைக் கூடுதல் அகத்திணை நெறியாகும்; அங்ஙனமின்றி ஒப்பும் மூப்பும் உடைய பருவத்தாளைக் கூடி இன்புறல்.

---

1. அகத்திணை-54

4. தலைவியின் இளமைக்கு ஒவ்வாது ஆடவன் மிக முதிர்ந்திருத்தல்.
5. இளமைக் காலம் கழிந்து முதிர்ந்த பருவத்தில் இருவரும் துறவு கொள்ளலே மேற்கொள்ளவேண்டிய நெறி; அதனை விட்டு இருவரும் காமம் நுகர்தல்.
6. தேறுதல் அடையப்பெறாது அறிவழிக்கும் கழிகாமம் கொள்ளுதல்.
7. கங்குகரையின்றி காமத்தால் தூண்டப்பெற்று விரும்பாத வரையும் வலிதிற்புணர்ந்து இன்பம் நுகர்தல்.

இத்தகைய பொருள் வேறுபாட்டிற்குக் காரணம் ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணை என்ற மூன்றிற்கும் கொண்ட தவறான பொருளேயாகும். ஐந்திணையாவது ஒத்த அன்பால் உண்டாகும் இன்ப ஒழுக்கங்கள் எனவும், கைக்கிளையாவது ஒருபக்க அன்பால் உண்டாகும் தாழ்ந்த இன்ப ஒழுக்கம் எனவும், பெருந்திணையாவது ஏற்றத்தாழ்வான இருபக்க அன்பால் உண்டாகும் மற்றொரு வகையான தாழ்ந்த இன்ப ஒழுக்கம் எனவும் உரைப்பர் இளவழகனார். அதன் பின்னர் பெருந்திணையின் தாழ்வுபற்றி அவர் தரும் விளக்கம்; ''முதலில் மடலேறுவேன் என்று தலைவன் சொல்லிப் பார்ப்பான். அதற்குத் தலைவியைச் சார்ந்தோர் இசையாவிடில் தலைவன் மடலேறவேண்டிய கட்டாயத்துக்கு வர நேரும். அப்போது தலைவியின்அன்பைவிடத் தலைவனின் அன்பு மிக்க உச்ச நிலையை எய்தும். மடலேறும் நிகழ்ச்சி வெறும் பேச்சு முறையில் இல்லாமல் இங்ஙனம் செயல் முறையில் வரும்போது தலைவனின் அன்புக்கும் தலைவியின் அன்புக்கும் ஏற்றத் தாழ்வு காணப்படும். இனித் தலைவன் இளமை நீங்கிய முதியோனாயிருந்து தலைவிஇளையவளாக இருந்தாலும், தலைவி மூத்தோளாயிருந்து தலைவன் இளைஞனாயிருந்தாலும் அல்லது இருவரும் இளமை நீங்கிய முதுமைப் பருவத்தர்களாயிருந்தாலும், அவர்கள் ஒருவருக்கொருவர் ஏற்றத் தாழ்வான அன்புள்ளவர்களாகவே இருப்பர். தலைவன் தலைவியர் இருவருள் ஒருவர் தெளிவிழந்து போன மிகுகாம நிலையில் உள்ளவராயிருந்தாலும் அவர்தம் அன்பு ஏற்றத் தாழ்வாகவே இருக்கும். இனி, மிக்க காமநிலையில் ஒருவரையொருவர் வற்புறுத்தி நிற்கும்போதும் அவர்கள் அன்பு ஏற்றத் தாழ்வாயிருக்கும் என்பது சொல்லாமலே பெறப்படும்.[2]

2. அகத்திணையியல்-விளக்கம்-பக் 132-4.

என்பது. இவ்விளக்கம் முன்னையோர் பெருந்திணைபற்றிக் கொண்ட கருத்தின் விரிவேயாகும். ஏனையோர் இத்திணைக்குத் தந்த விளக்கங்களில் மிகச் சிறு வேறுபாடுகள் காணப்பெறினும், ஒவ்வாக் காமத்தையும் வலிந்த காமத்தையும் நுவல்வதே பெருந் திணையாகும் என்ற கருத்துத் தேற்றத்தில் இன்றுவரை யாரும் வேறுபட்டிலர். நாவலர் பாரதியாரும், பேராசிரியர் கா. சு. பிள்ளை போன்றவர்களும் இக்கருத்தினையே கொண்டவராவர்.

**தவறான முடிவுகள்:** 'பெருந்திணை' என்ற குறியீட்டின் 'பெரு' என்ற அடையின் பொருள் தெளிவாயின் திணைப்பொருள் விளக்கம் எய்தும்.

(1) பெருந்திணைக் காமம் உலகினுள் பெருவழக்காக இருத்தலின் 'பெரு' என்ற அடை பெற்றதாகக் கூறுவர் இளம்பூரணர். ஒவ்வாத கூட்டமும் வலிந்த புணர்ச்சியும் சமுதாயத்தில் மிகுந்து காணப்படுவதாகக் கூறுவது, கருதுவது, பெரும்பிழையாகும். தமிழ்ச் சமுதாயத்தையே அவமதித்துக் கூறும் கருத்தாகும் இது.

(2) தமிழரின் எழுவகைத் திணைகளையும் ஆரியரின் எண் வகை மணங்களையும் தொடர்புபடுத்திக் கூறும் ஒருவகை மரபு உண்டு. ஆசுரம் இராக்கதம் பைசாசம் ஆகிய மூன்று வகை மணங்களையும் கைக்கிளையிலும், காந்தருவத்தை ஐந்திணையி லும் ஏனைய பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம் தெய்வம் ஆகிய வற்றைப் பெருந்திணையிலும் அடக்கிப் பேசுவர். இங்ஙனம் ஆரியமணம் நான்கையும் பெருந்திணைத் துறைகள் நான்கினையும் பொருத்திக் கண்டது பெரும்பிழையாகும் ஆரியமணம் நோக்கிப் பெருந்திணைப் பெயர் பெற்றதாகக் கொள்ளின், கந்தருவம் ஒன்றைமட்டிலும் பெறும் திணையை 'ஐந்திணை' என்றல் பொருந் தாது; 'குறுந்திணை' என்றே வழங்கல் வேண்டும் அங்ஙனமே, மூன்று மணங்களையே பெறும் கைக்கிளையை 'இடைத்திணை' எனல்வேண்டும் தமிழ் மணநெறிகளையும் ஆரியமண நெறிகளை யும் ஒப்புநோக்கி இன்னின்ன வகையில் ஒப்புடையன என்று காண்டல் அறிவின்பாற்பட்ட ஆய்வாகும். அதனைவிட்டு தமிழரின் தன்னேரில்லாப் படைப்பான அகத்திணையின் உட்பிரிவாகிய பெருந்திணைப் பெயர் ஆரிய மணப் பிரிவுகளை எண்ணி இடப் பட்டது என்று கூறுதல் தமிழ்ச் சான்றோர்அறிவையே அவமதிப்ப தாகும்.

(3) இழிநிலைக் காமத்தைக் கூறும் திணையைப் 'பெருந் திணை' என்றது தாலிபெருகிற்று என்பது போல 'மங்கல வழக் காக'க் கொள்வர் நாவலர் பாரதியார். சிறுதிணை என்று பெயரிட வேண்டிய ஒன்றைப் பெருந்திணை என்றது அவையல் கிளவியாகும் என்றும் விளக்குவர் அவ்வறிஞர். ஆசிரியர் சிறுதிணை என்று குறியீடு செய்திருப்பினும் அஃது அவையல் கிளவி ஆகாது. கைக் கிளை என்னும் மற்றொரு குறியீட்டைப் 'பெருங்கிளை' என்பது போல அமைத்திலர் என்பதை ஒப்பு நோக்கலால் இது பெறப்படும்.

இவ்விடத்தில் ஒன்று சிந்திக்கத்தக்கது. மக்களின் சமுதாய வாழ்க்கையில் ஒழுக்கமும் உணர்ச்சியும் நோக்கி மங்கல வழக்கு ஏற்படும். குறியீடுகளோ அறிவுத் தெளிவுக்கு அறிஞரால் ஆக்கப் பெறுபவை. குறியீடுகளை மங்கலமாக்குவதால் எண்ணிய கருத்து மயக்கத்தை விளைவித்துவிடும். ஆகவே, குறியீடுகளை நேர் படவே நுவல்வது நூலோர் போக்காகும். பெருந்திணையின் உட்பிரிவுகளாகிய தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம், மிக்க காமத்துமிடல் என்பவற்றை மங்கலமாக மொழியாதது ஒன்றே ஆசிரியரின் கருத்தைத் தெளிவாக்கும். உட்கூறுகளையே வெளிப் படையாகக் கூறியிருத்தலின் பெருந்திணை என்பது வெளிப்படை யான குறியீடே என்பது பெறப்படும்.

(4) பருவம் வந்த ஆடவரும் பெண்டிரும் ஒருவர்மேல் ஒருவர் கொள்ளும் ஒருபுடைக் காமம் ஒருவகைக் கைக்கிளையின் பாற்படும். 'மகண்மறுத்தல்', 'மகட்பாற் காஞ்சி' என்ற துறை களைப் புறத்திணையில் அடக்கினர் பண்டையோர். இந்நிலையில் வலிந்த பெருந்திணைக் காமம், பிறன்மனை நயக்கும் இராவண காமம், அகத்திணையில் அடங்காது என்பது வெள்ளிடைமலை. அங்ஙனமிருக்க, வழிவழிப் புலவர் உலகம் இதனையும் அகத் திணையில் வைத்து எண்ணியது மலையனைய பிழையாகும். இத்தகைய ஒரு பிழைமரபிற்கு அகத்திணையை ஐந்திணையாகக் கொண்டதும் கைக்கிளை, பெருந்திணைகள் அகமல்ல எனக் கருதியதுமே காரணங்களாகக் கொள்ளலாம்.

(5) அறம் பொருள் இன்பங்களில் வழுவாத அகத்திணை நன்மக்கள் கொள்ளும் காதல் நிலை எனவும், கைக்கிளை பெருந் திணைகள் குற்றேவல் கொள்வார் காதல்நிலைகள் எனவும், கூறித் தவறான மரபினை ஏற்படுத்திவிட்டார் இளம்பூரணர். இங்ஙனம்

3. தொல். பொருள்-25 (இளம்) நாடி 54, 55, 77 நச்.காண்க.

எழுதியவரே பின்னர் முரண்படுகின்றார். 'குற்றேவல் செய்வார். புறப்பொருட்கு உரியராயினார் என்க. எனவே, இவ்வெழுவகைத் திணையும் அகம் 'புறம்' என இருவகையாயின'[4] என்று கூறி நகைப்புக்கிடனாகின்றார். இங்ஙனம் இடைக்காலத்தில் முரணான கருத்து மரபாகிய காரணத்தால் ஐந்திணையை 'அகம்' எனவும் கைக்கிளை பெருந்திணைகளை 'அகப்புறம்' எனவும் பின்வந்தோர் பிழையான இலக்கண வழக்காற்றை ஏற்படுத்திவிட்டனர். இடைக் காலத்தில் தமிழ்ச் சமுதாயத்தில் சமயங்களும் சாதிகளும் பல கோட்பாடுகளைப் பரப்பியதால் அதே பார்வையைத் தொல் காப்பியம் சங்க இலக்கியம் போன்ற தொன்னூல்களிலும் செலுத்திப் 'பிழைபட்டனர். இதன் முடிவு பண்டைய எளிய கருத்துகள் அரியனவாயின; தெளிந்த கருத்துகளும் கலங்கிய நிலையை எய்தின.

**பெருந்திணை—ஐந்திணை ஒப்புநோக்கு**: தொல்காப்பியத்தி லும் சங்க இலக்கியங்களிலும் வரும் இந்த இரண்டு திணைபற்றிய கருத்துகளை ஒப்பிட்டு ஆராயின் ஐந்திணையின் ஒரு மிகு நிலையே பெருந்திணையாக வளர்கின்றது என்ற உண்மையினை அறியலாம். பெருந்திணையைப்பற்றி இதுகாறும் கொண்டிருந்த கருத்துகள் தவறானவை என்பதனையும் அறியலாம்.

(1). பெருந்திணைக்கண் வலிந்த காமத்துக்கு இடம் இல்லை; உள்ளப் புணர்ச்சி என்னும் அகத்திணைப் பண்பிற்கு ஒத்ததுவே இது. தொல்காப்பியரும் சங்கச் சான்றோர்களும் இத்திணையை அன்புக் காமமாகவே எண்ணிப் பாடியுளனர். என்பது சிந்தித்துக் காண்பார் அறியலாகும் ஓர் உண்மையாகும். அகத்திணையின் ஒரு பெரும் பிரிவான ஐந்திணையைப்போல் விரிந்து செல்ல வாய்ப்பு இல்லாதது; மிகச் சிறிய துறைகளையே கொண்டது. 'பெருந்திணைக் குறிப்பே'[4] என்பதனால் விரிவுக்கு இடமின்மை யையும், 'செப்பிய நான்கும்'[5] என்பதனால் துறைகள் விழுய இடமின்மையையும் ஆசிரியர் குறிப்பிட்டுக் காட்டுவதை நோக்குக. பெந்ருதிணைத் துறைகள் நான்கும் ஐந்திணைக்குமுற்றிலும் வேறு பட்டவை அல்ல; ஐந்திணையின் சில துறைகளே இங்ஙனம் வடிவு கொண்டுள்ளன. 'ஏறிய மடற்றிறம்' எனப் பெருந்திணை நூற்பா தொடங்குவதே, ஒரு பெரிய சான்றாக அமைகின்றது;

4. அகத்திணை-54
5. ஷை-54

'மடன்மா கூறும் இடனுமார் உண்டே'[16] என்ற ஐந்திணைக் களவடியையும் நினைவூட்டுகின்றது.

தலைவன் தலைவியர் தத்தம் காதற் பாங்குகளை உள்ளத் தளவிலும் சொல்லளவிலும் காத்தோம்பிக் கொள்ளுங்கால் அவை ஐந்திணைக் கோலங் கொள்ளுகின்றன; அவை அங்ஙனம் காத்தோம்பப்படாமல் சிலரிடம் மிகுநிலை எய்துங்கால் ஊரறியும் பெருந்திணைப் பொருளாக வடிவம் கொள்ளுகின்றன. ஐந்திணையை அளவுக் காதல் என்றும், பெருந்திணையை மிகுதிக் காதல் என்றும்சொல்லலாம்.'பெரும்' என்ற அடையே இம்மிகுதிப் பாட்டைக் குறிக்கின்றது. பெரு மூச்சு, பெருங்காற்று, பெருமழை, பெரு மிதம், பெரும் பேச்சு, பெருங் காஞ்சி, பெரு வஞ்சி என்ற சொற்றொடர்கள் உடன் வைத்து நோக்கின் அளவிலும் மிகை என்ற போக்கினைத் தெளிவாக அறியலாம்.

(2). இனி, பெருந்திணைத் துறைகளின்பால் கருத்தினைச் செலுத்தி அவற்றின் ஐந்திணைத் துறைகளின் மிகு நிலையைக் காண்போம்

**(அ) ஏறிய மடற்றிறம்:** இது தொல்காப்பியர் குறிப்பிடும் பெருந்திணையின் முதல் துறையாகும். ஐந்திணைக் களவில் தலைவன் தலைவியைத் தான் நினைத்தவாறு எல்லாம் கலந்து இன்புறத் துடிப்பான் என்பதையும், தோழி அவளது அத் துடிப்புக்கு இணங்காமல் பல் வேறு காரணங்களை கூறி வாயில் மறுத்துச் சேட்படுத்துவாள் என்பதையும் நாம் அறிவோம். இந் நிலையில் அதனைப் பொறாத தலைவன் 'அப்படிச் செய்வேன்', இப்படிச் செய்வேன்' என்று கூறி அச்சுறுத்துவான். இதனால் தலைவியைத் தன்னுடன் தோழி கூட்டுவிப்பாள் என்பது தலைவவனின் நம்பிக்கை. குறுந்தொகைத் தலைவன் ஒருவன் தோழியிடம் மடலேறு வதைப் பற்றிக் கூறுவதை,

மாவென மடலும் ஊர்ப; பூவெனக்
குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப;
மறுகின் ஆர்க்கவும் படுப;
பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே.[17]

[மா-குதிரை; குவிமுகிழ்-கூம்பியஅரும்பு; கண்ணி-தலையிற் சூடும்மாலை; மறுகு-தெரு; காழ்-வயிரம்]

16. களவியல்-11
17. குறுந்-17

என்ற பாடலல் அறியலாம். இங்ஙனம் தலைவன் தோழியிடம் **வாயளவில் கூறி நிறுத்திக் கொள்வது** ஐந்திணை. இன்னொரு தலைவன் தன் நெஞ்சினை நோக்கி (தோழி கேட்குமாறு) "இத் தோழியின் போக்கைப் பார்த்தால், மணியும் எலும்பும் அணிந்து ஒரு நாள் பனைமடற் கலிமா ஏற வேண்டி நேரிடுமோ? நாண்நீக்கிப் பிறர் எள்ளத் தெருவில் செல்ல வேண்டியதாய் விடுமோ?"[8] என்றுகூறுகின்றான். இவன்மடலேற நாணுகின்றான். இங்ஙனம் கூறி **நாணிய அளவில் நிற்பது** ஐந்திணையாகும்.

இவ்விடத்தில் ஒன்றை நினைவிற் கொள்ளுதல் வேண்டும், ஒரு நங்கை தன்னை காதலிக்க வேண்டும் என்றோ, தான் அவளைத் தன் வசமாகக்க வேண்டும் என்றோ ஐந்திணை நம்பி மடலேறுவதாக மொழிவது இலக்கிய மரபு அன்று. தான் காதலித்த நங்கையை அடைதற்கு இடையூறாகத் தோழி இருக்கின்றாள் என்று கருதுங்கால் மட்டிலும் தலைவன் மடலேற்றம் பற்றி இசைப்பான். தோழியை வற்புறுத்துவதற்குத் தலைவன் மடல் கூறுவதன்றித் தலைவியை வற்புறுத்துவதற்கன்று. தலைவி தன்மேல் காதலுடையவள், காதலித்து நிற்பவள் என்ற அன்பின் அடிப்படையில்தான் மடற் கூற்று இலக்கியத்தில் பேசப்பெறும்.

பெருந்திணையிலும் ஒவ்வாத் தலைவியை உடன்படுத்துவதற்காகத் தலைவன் மடலேறும் மரபு இல்லை, அவன் மெய்யாகவே மடல் மா ஏறி ஊரறியத் தனக்கு உரிய ஒருத்தியையும் அவள்பாற் தான் கொண்ட காதலையும் அவளைப் பெற்று அணையாமையால் தான் படும் காதல் உணர்ச்சியினையும் வெளிப்படுத்துவான். இந்நிலையைக் கலிப்பா ஒன்றில் காணலாம்.

சான்றவிர்! வாழியோ சான்றவிர்! என்றும்
பிறர்நோயும் தன்நோய்போற் போற்றி அறனறிதல்
சான்றவர்க் கெல்லாம் கடனானால் இவ்விருந்த
சான்றீர்! உமக்கொன் றறிவுறுப்பேன்.[9]

[சான்றவிர்-நற்குணங்கள் எல்லாம் அமைந்தீர்; அறன் அறிதல்-அறனை அறிந்து போதுதல்]

இதில் தலைவன் சான்றோர்கள்முன் தன் நிலையை எடுத்துக் கூறுவதைக் காண்க. விரும்பாத நங்கையை நச்சி ஒருவன் மடலேறும் வழக்கம் இல்லை. இப்போக்கிற்குச் சமுதாயம் இடங் கொடுத்

8. ஷை-182
9. கலி-139.

தால், எந்நங்கையையும் மடலேறிப் பெறச் சில காமுகர்கள் முனைவர். ஒருவனைக் கணவனாகத் தேர்ந்தெடுத்துக் கொள் ளும் உரிமை பெண்ணினத்திற்கு உண்டு. ஆதலின் தன்மாட்டு விருப்பமில்லாத நங்கையை வணக்கிப் பெற எந்த நம்பியும் மட லூரான் மடலேற்றம் ஒத்த காமம் உடையார்மாட்டே நிகழும்.

வேறு இரண்டு கலிப்பாடல்களில் வரும் நிகழ்ச்சிகளையும் காண்போம் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் தலைவன் ஒருவன் தலைவியைக் காண முடியாத நிலையையும் அதனால் கிளன்றெழுந்த காமப் பசியையும் பொறுக்க முடியாத தலைவன் அவளைப் பெறுதல் எப்படி என்று புலம்புகின்றான்[10]. அவள் தன்னை மகிழ்வித்த செயலை நினைந்து அசைபோடுகின்றான்.[11] தம் மகள் செய்கையை ஐயுற்ற பெற்றோர்கள் அவளை முற்றும் வெளியே செல்லாதவாறு இச்செறிப்பு செய்ததனால் இருவரிடை யேயும் சந்திப்பு நிகழ வாய்ப்பு இல்லை; இதனால் பிற கூட்டங் கள் நிகழ வாய்ப்பே இல்லாது போயிற்று. இதனால் கவற்சி பெருகிய காதலன் மடலேறத் துணிகின்றான். மடலேறுதல் பற்றி நுவலும் நான்கு கலிப்பாடல்களையும் ஆராயின் தன் காதலுக்குக் குறுக்கே தடையாக நிற்கும் பெற்றோர்களை வணக்குவதற்கே தலைவன் தன் நெஞ்சம் கவர்ந்தாளை ஊரறிய வெளிப்படுத்துவான் என்பதைத் தெளியலாம். மடலேற்றம் கண்ட ஊர்ப் பெருமக்கள் மகள் இசையுங்கால் பெற்றோர்கள் குறுக்கிடல் பொருந்தாது என்றும், இவன் காதலை இனியும் சோதித்தல் கூடாது என்றும் தம் கருத்துரைப்பர். இவன் காதலிக்கும் நங்கையும் இவனைக் காதலித்தலால் இது அன்பு டைக் காமம் என்று சான்றோரும் நெறி பகர்வர். தம் மகளும் ஊராரும் சான்றோரும் ஒப்புதலைத் தெரிவிக்கும் சூழ்நிலையில் விடாக் காதலனாக இருக்கும் தலைவனுக்குத் தம் மகளைப் பெற்றோர் மணம் முடிப்பதைத் தவிர வேறு வழி இல்லை. இத்தகைய நிகழ்ச்சியொன்றினைக் கலியில் காணலாம்.

வருந்தமா ஊர்ந்து மறுகின்கட் பாடத்
திருந்திழைக் கொத்த கிளவிகேட் டாங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக்கு அருந்திறை
போலக் கொடுத்தார் தமர்.[11]

10. ௸-138
11. ௸-139
12. ௸-141

[வருந்த-பார்ப்பவர் இரங்க; மா-குதிரை; மறுகு-தெரு; திருந்திழை-நங்கை; கிளவி-சொல்; பொருந்தாதார்-பகைவர்; வழுதி- பாண்டியன்; தமர்- உறவினர்]

என்ற கலிப்பாப் பகுதி பெருந்திணைத் தன்மையைக் கசடற விளக்கும். தலைவன் மடலேறுதலைக் கண்டவர்க்கு அவன் பால் இரக்கம் தோன்றியது. தலைவன் தெருவில் பாடிய காதல் பாட்டால் அவன் காதலிக்கும் பெண் யார் எனத் தெரிந்தது. பெற்றோர் தம் மகளின் உண்மைக் காதலனை அறிந்தனர். பாண்டியனுக்கு அஞ்சிப் பகைவர்கள் திறைப் பொருள் கொடுப்பது போலப் பெற்றோரும் தம் மகளை மடலேறிய நம்பிக்கு மணஞ் செய்து கொடுத்தனர். 'வருந்த' என்பதனால் ஊராரின் இரக்கம் தோன்றுதலையும், 'திருந்திழைக்கு ஒத்த கிளவி' என்பதனால், மகளும் இவனைக் காதலிக்கின்றாள் என்பதையும், 'பொருந் தாதார்' என்பதால் பெற்றோர்க்கு மனம் ஒப்பவில்லை என்பதை யும் அறிகின்றோம். அரசன் குடிமக்களின் நலங்கருதித் தன்மானம் பாராது திறை கொடுத்தேனும் அமைதியை நிலை நாட்டுவது போல[13], பெற்றோர்களும் தம் மகள் நலம் நோக்கித் தம் குடி மானம் கருதாது, அவள் உள்ளங் கவர்ந்த நம்பிக்கு அவளை மணங் கூட்டுவர். மணம் செய்ய வேண்டுவதே அறமாகும்.

ஆண் பெண் இருவர் உள்ளமும் ஒத்திருத்தலே—உள்ளப் புணர்ச்சியே — அகத்திணையாகும். பெற்றோர் முதலிய பிறர் உள்ளங்கள் எல்லாம் இவ்விருவர் உள்ளத்திற்கு இணங்கியே யாதல் வேண்டும் என்பதுவே அகநெறியாகும். 'அன்புறு கிளவி யாள்'[14] 'ஒண்டொடி நோய் நோக்கு'[15] என்ற தொடர்களால் நங்கை நம்பியின் காதலுக்கு இசைந்தாள் என்பதும், 'என் நெஞ் சாறு கொண்டாள்'[16], 'என் நெஞ்சம் இடிய இடைக் கொள்ளும் சாயல் ஒருத்தி'[17] என்ற தொடர்களால் நம்பி அவள்மேல் காதல் கொண்டமையும் தெளிவு. நம்பியும் நங்கையும் அன்புடைக் காதலர்கள்; இயற்கைப் புணர்ச்சிக்குமேல் கூட்டங்கள் நிகழ்த்த முடியாத நிலையிலுள்ள ஐந்திணைக் காதலர்கள். தலைவன் மடலேறி இடையூற்றினைத் தவிர்த்து, இற்செறிக்கப்பட்ட தலைவியைத் தன் பெரு முயற்சியால் இல்லக் கிழத்தியாக்கிக்

13. குறள்-680.
14. கலி-138.
15. ஷை-140
16. ஷை-139
17. ஷை-140

கற்பு நெறியில் கொண்டு செலுத்தினான். அப்பெரு முயற்சியில் அவன் நாண் அகன்றது; அவன் காதல் தொடர்பினை ஊர் அறிந்தது; இம்முறையினால் இசையாத பெற்றோரும் இசைய வேண்டியதாயிற்று. இவை எல்லாம் தலைவனது மிகு செயல் ஆதலின் பெருந்திணையாயிற்று. இங்குப் பெற்றோர் ஒவ்வாமையைக் காண்கின்றோமேயன்றி நம்பி நங்கையின் ஒவ்வாமையைக் காணவில்லை. பெற்றோர் ஒப்புதல் தராவிடினும் காதல் மாந்தர்கள் அகம் ஒத்த உள்ளப் புணர்ச்சியராதலின், **இப்பெருந்திணை அகத்திணையில்பாற் பட்டது.** களவை நாணின்றி வெளிப்படுத்திக் கற்பு நிலைக்குக் கொணரப்பெற்றதனால், **ஐந்திணை ஆகாமல் பெருந்திணை ஆயிற்று.**

(ஆ) **இளமைதீர் திறம்:** இல்வாழ்க்கையில் ஈடுபட்ட பின்னர் நம்பி நங்கையருக்கு இல்லறப் பொறுப்பு வந்து சேரும். அகலாது அணைந்து இன்பத்தைத் துய்த்துக் கொண்டிருத்தல் என்பது இயலாத செயல். குடும்ப வாழ்க்கை நடைபெறப் பொருள் வேண்டும். பொருளீட்டத்தில் நம்பியும் நங்கையும் பிரிந்திருக்கும் நிலை வந்து சேர்கின்றது. செல்வம் தேடும்பொருட்டு இளமை இன்பத்தை இழத்தல் கூடாது. இளமைப் பருவம் ஆற்றல் உடையது; வனப்பிற்கும் ஊக்கத்திற்கும் ஆக்கத்திற்கும் ஏற்ற பருவம் இது. இப் பருவத்தை இன்பமின்றி வீணாகக் கழித்தல் இல்வாழ்க்கை நடத்தும் நம்பி நங்கையர்க்கு அறம் ஆகாது; அறிவு மாகாது. இயன்றவரை இணைந்து வாழ்தலே சிறப்பாகும்; அதுவே இல்லற ஒழுக்கமும் ஆகும்.

இளமை சிறக்கவேண்டுமாயின் செல்வம் வேண்டும். வறியவன் இளமை இல்வாழ்க்கைக்கு வாட்டம் தரும்; இல்லற வேரை அரித்துவிடும்

புணரிற் புணராது பொருளே; பொருள் வயிற்
பிரிவிற் புணராது புணர்வே[18]

என்கின்றார் நற்றிணைப் புலவர் ஒருவர். இளமைக் காலத்தில்-தான் இன்பத்தை நன்கு துய்க்க முடியும். உலைவின்றித் தாழாது உஞற்றிப் பொருளையும் ஈட்ட முடியும் இன்பமோ இளமைக்கு உரியது; செல்வமோ இளமைக்கும் வேண்டும், முதுமைக்கும் வேண்டும். முதுமை இன்பத்திற்கும் உழைப்பிற்கும் இடங் கொடாததால், இளமையிலேயே இன்பத்தையும் துய்த்து

18. நற்.16.

முதுமைக்கு வேண்டிய சேமிப்பை இளமையிலேயே ஈட்டித் தொகுத்து எய்ப்பினில் வைப்பாக்க வேண்டும். எனவே, இளமைப் பருவம் இத்தகைய சவாலை ஏற்க வேண்டிய பருவம் ஆகும் என்ன செய்வான் இளைய நம்பி?

கார் காலமும் கூதிர் காலமும் இன்பம் துய்த்தற்கு ஏற்றப் பருவங்களாகும். ஆகவே, அப் பருவங்களில் கூடி வாழ்தலையும் ஏனைய பருவங்களில் பொருள் தேடுதலையும் மேற்கொள்ள வேண்டும். இதனால் கூடுதலும் பிரிதலும், பிரிதலும் கூடுதலுமாகிய ஓர் அளவு பட்ட வாழ்க்கை நெறியைக் கடைப் பிடிக்க வேண்டியது ஒரு கடமையாக அமைகின்றது.

இவ்விடத்தில் இன்னொரு செய்தியையும் நினைதல்வேண்டும். ஆணுக்கு நீடித்த இளமை உண்டு; முதுமையிலும் அவனுக்குக் காமச் செவ்வி உண்டு. பெண்ணின் இளமைப் பருவம் குறுகியது; ஐம்பது வயதிற்குள் காமஉணர்ச்சி மறைந்து விடும் பாங்குடையது. சூதக ஓய்வு (Menopause) ஏற்பட்ட பின்னர் இது அறவே இருக்காது இருவர் உடல்நிலைகளும்இயற்கையில்அங்ஙனம் அமைந்துள்ளன. ஆகவே, பெண் இளமையை வீணாக்காது காமப் பயன் கொள்ள விரும்புவது இயல்பு. கால எல்லைக்கு உட்பட்ட காமத்தை இனி தேட வேண்டிய, தேடிக் கொள்ளக் கூடிய பொருளுக்காகப் பணயம் வைக்க விரும்பாள். ''எம்மையும் பொருளாக மதித் தீத்தை''[19] என்று கலித் தொகைத் தலைவி கூறுவது இதனைவலியுறுத்தும். இன்னொரு தலைவியோ, ''உடுப்பதற்கு ஆடையில்லை; உள்ளது ஒன்றேயாயினும் அதனை இரு துண்டாக்கி உடுத்திக் கொள்வோம். வாட்டும் வறுமையிலும் கூட்டு வாழ்க்கையே வாழ்க்கை. கழிந்த இளமை எத்துணைச் செல்வம் கிடைப்பினும் திரும்ப வருமா?'' என்கின்றாள்.

ஒரோஒகை தம்முள் தழீஇ ஒரோஒகை
ஒன்றன்கூ றுடை யுடுப்பவரே யாயினும்
ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை அரிதரோ
சென்ற இளமை தரற்கு.[20]

[ஒரோஒகை - ஒரோவொரு கைகளாலே; தழீஇ - தழுவிக் கொண்டு ; ஒரோஒகை - ஒரோ வொருகைகளாலே; கூறு-பகுதி; தரற்கு - மீண்டு வருதற்கு]

---

19. கலி-14
20. ஷை-18

என்று வறுமையிலும் காமச் செவ்வி பாடுவதைக் காண்மின். இந்நங்கையின் உள்ளத்தை நம்பி மதித்து ஒழுக வேண்டும். நம்பியின் இளமை நீடித்தாலும் நங்கையின் இளமைக்குள்தான் தான் இன்பம் துய்த்துக் கொள்ள வேண்டும் என்பதை அவன் சிந்தித்து ஒழுகுவது அறிவுடைமையாகும். 'செலவழுங்கல்' என்ற அகத்துறை இதற்கு ஓருநற்சான்று. நம்பியின் பொருளீட்டும் செயலுக்கு நங்கையும் இசைவு தரல் வேண்டும். நங்கையர்தம் உள்ளுறும்மை காமவேட்கை வெளிப்படக் கிளவார். தொல்காப்பியரும்,

காமத் திணையிற் கண்நின்று வருஉம்
நாணும் மடனும் பெண்மைய வாதலிற்
குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை
நெறிப்பட வாரா அவள்வயி னான.[21]

என்று இதனைக் குறிப்பிடுவர். பெண் நாணத்தால் மறைத்துக் கொண்டிருக்கும் காமக் குறிப்பை ஆடவன் நுனித்து உணர்ந்து செயற்படல் அவன் கடமையாகும். மனைவியின் காமப் பதத்தைப் புரிந்து கொள்பவனே சிறந்த கணவனாவான்; இல்லறத்தை நல்லறமாக்கியவனுமாவான். இத்தகைய ஐங்குறு நூற்றுத் தலைவன் ஒருவன் செயலைக் காண்போம். பலருடன் பொருள்வயிற் பிரிந்த இவனுக்குத் தான் எண்ணிச் சென்ற அளவுடைப் பொருள் கிட்டவில்லை. தன் இல்லக் கிழத்தியின் நிலையை எண்ணியவனாய் வீடு திரும்பிவிடுகின்றான்.

திருந்திழை அரிவை நின்னலம் உள்ளி
அருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு உறுகெனச்
சொல்லாது பெயர்தந் தோனே பல்பொறிச்
சிறுகண் யானை திரிதரும்
நெறிவிலங் கதர கானத் தானே.[22]

[அரிவை-பெண்; உள்ளி-எண்ணி; பொருள பிணி-பொருளின் மீதுள்ள ஆசை; பெருந்திரு உறுக-மருங்கறக் கெட்டொழிக; பெயர்தந்தேன்-திரும்பி வந்தேன்; பொறி-புள்ளி; விலங்கு-விலகிவிடுதற்குக் காரணமான; அதர-கவர் வழிகளையுடைய]

---

21. களவியல்-10
22. ஐங்-355

என்று ஓதலாந்தையார் இவனைக் காட்டுவர். "பொருள் கிடக்க; நின்னலத்தை மதித்து வந்தேன்" என்று தன் மனைவியிடம் எடுத்துரைக்கின்றான் இத்தலைவன். மனைவியின் காமச் செவ்வியை உணர்ந்தவன் இவன். நற்றிணைத் தலைவி ஒருத்தி ஆடவரது இயல்பை நன்கு உணர்ந்தவளாகக் காணப்படுகின்றாள். இவளது கணவன்பொருள்வயிற் பிரிய எண்ணுகின்றான். தோழியிடம் தன் கருத்தைத் தெரிவிக்கவே, அவளும் "நன்றெனப் புரிந்தோய் நன்று செய்தனை" என்கின்றாள். இதனை அறிந்த தலைவியும்,

செயல்படு மனத்தர் செய்பொருட்கு
அகல்வர் ஆடவர்; அதுஅதன் பண்பே[23]

என்று ஆடவரது இயல்பினை நன்கு புரிந்து கொண்டு அவன் செயலுக்குப் பச்சைக் கொடி காட்டுகின்றாள். ஈண்டுக் காட்டிய ஐங்குறுநூற்றுத் தலைவனும் நற்றிணைத் தலைவியும் ஒருவர் போக்கைப் பிறிதொருவர் மதித்து ஒழுகுபவர்கள். இங்ஙனம் மதித்தொழுகும் பண்புகள் ஐந்திணைக்கு உரியவை.

இன்னொருஐந்திணைத்தலைவனின்ஒழுக்கத்தைக்காண்போம். இவன் காதலியிடத்து அன்புடையவனாயிருந்தும், மனக் குற்றம் யாதும் இல்லாதவனாக இருந்தும், அளவறி வாழ்க்கை அறியாதவன். நெடுநாள் காமத்தைக் கைவிட்டுப் பொருள் தேடுவதிலேயே கவனம் செலுத்துபவன். இவன் துணைவியும் இத்தகைய ஒத்துணர்வு கொள்ளின் இல்லறம் நன்கு அமையும் என்பதை நன்கு அறிந்தவள். பெண்உள்ளத்தை இளமையும் இன்பமுமே மகிழ்விக்கும் என்ற உண்மையை நற்றிணைத் தோழியொருத்தியின் கூற்றால் அறியலாம்.

வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலிற் கழியுமிவ் வுலகத்துக்
காணீர் என்றலோ அரிதே அதுநனி
பேணீர் ஆகுவீர்[24]

[வைகல்தோறும் - நாள்தோறும்; கணை - அம்பு; நனி- நன்றாக]

என்று கூறுவதைக் காண்மின். பொதுவாக பொருள்வயிற் பிரியும் ஐந்திணைத் தலைவன் தான் திரும்பிவருங் காலத்தைக் குறித்துச்

---

23. நற்-24
24. ஷை-46

செல்வான். அங்ஙனமே வருவான்; வருவதற்கும் துடிப்பான். இன்பத்தைத் துய்க்காது இளமை கழிதலை அவன் விரும்பான்.

இளமையிற் சிறந்த வளமையும் இல்லை;
இளமை கழிந்த பின்றை, வளமை
காமந் தருதலும் இன்றே.[25]

என்ற பாடலடிகளால் இவன் கருத்துத் தெளிவினைக் காணலாம். ஐந்திணைத் தலைவன் இதனை அறிந்து ஒழுகாது பொருளின் மீது பெருங் காதல் கொண்டு இளமை கழிய ஒழுகுவானாயின் அவன் பெருந்திணையாளன் ஆகின்றான். 'இளமைதீர் திறம்' என்ற தொடருக்குத் தன் இளமையும் தலைவியின் இளமையும் வறிதே தீரும்படி தலைவன் ஒழுகும் முறை என்பது பொருளாகும். எத்தகைய பிரிவுகளை மேற்கொண்டாலும் காலம் தாழ்த்தாது தலைவியுடன் இளமையில் காமம் நுகர வேண்டும் என்பது இதன் கருத்தாகும்.

இவ்விடத்தில் கலித்தொகையில் கூனும் குறளும் முடமும் செய்த சில காதற்காட்சிகளை[26] உரையாசிரியர்கள்பெருந்திணைத் துறைக்கு எடுத்துக் காட்டுகளாகக் கொண்டதும், நாவலர் பாரதியார் முடவனது காட்சியைக் காட்டியதும் தவறு என்று டாக்டர் வ. சுப. மாணிக்கனார் கொண்டமை ஏற்புடைத்தாகும். கூனி குறளன் குற்றேவலாளர் என்பதற்காக அவர்தம் காதலொழுக்கம் பெருந்திணையாகாது என்று அவர் காட்டிய நுட்பம் பாராட்டத் தக்கது. ஐந்திணை செல்வர்க்கே உரியது, ஏழையர்க்கு உரிய தன்று என்று உரையாசிரியர்கள் கொண்ட கொள்கை பெரும் பிழையாகும். எங்கு இருவர் மாட்டும் அன்புள்ளதோ அங்கு ஐந்திணை உண்டு என்பது அறியத் தக்கது.[27]

மேலும் அப்பேராசிரியர் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு என்ற தொகை நூல்களின் பாடல்களின் துறைகளின்மீது அகவிலக்கணத் தெளிவுடன் மறு பார்வை செலுத்தினால் சில பாடல்கட்குப் பெருந்திணைத் துறைகள் சொல்ல முடியும் என்பதையும் எடுத்துக்காட்டுவர்.

புதல்மிசை நறுமலர் கவின்பெறத் தொடரிநின்
நலமிகு கூந்தல் தகைகொளப் புனைய

25. ஷை-126
26. கலி-65, 94
27. **தமிழ்க் காதல்**-பக் 244-45

வாரா தமையலோ இலரே; நேரார்
நாடுபடு நன்கலம் தரீஇயர்
நீடினர் தோழிநங் காத லோரே[28]

[புதல்-புதர்; கவின்-அழகு; தொடரி-தொடுத்து; தகை-அழகு; தரீஇயர்-வழங்கும்பொருட்டு; நேரார்-பகைவர்; நண்கலம்-அணிகள்; நீடினர்-காலம் தாழ்த்தினர்]

இதில் தலைவன் குறித்துச் சென்ற காலம் வந்தும் தலைவன் வாராது காலந்தாழ்த்துகிறான். 'ஆற்றியிரு' என்று தலைவியிடம் சொல்லத் துணிவில்லாத தோழி 'நீடினர்' என்பதனை ஒப்புக் கொண்டு ஒன்னாரிடம்திறைவாங்குவதால் காலம்தாழ்த்தது போலும் எனக் காரணம் காட்டுகின்றாள். இளமைதீர் திறத்திற்கு இப்பாடல் நல்லதோர் எடுத்துக் காட்டு. 'என் உள்ளம் அவர்பாற் சென்றமையால் என் உடம்பு காமத்தால் மெலிந்து ஏங்கி வறிதாயிற்று. இனி அவர் வரினும் என் நோய்க்கு மருந்தாகார். ஆதலின் அவர் சென்ற இடத்திலேயே இருப்பாராக' என்று நற்றிணைத் தலைவியொருத்தி பெருந்திணை மொழிகின்றாள்.[29] தலைவனைப் பிரிந்து வருந்தியிருக்கும் அகநானூற்றுத் தலைவியின் 'தலைவனைப் பிரிந்து வாழும் வாழ்க்கை நம் தீவினையின் பயன் போலும்' என்ற கூற்றிலும் பெருந்திணைக் குறிப்பினைக் காணலாம்.[30]

இல்லற வாழ்க்கையில் இன்ப நுகர்ச்சிக்கு ஒத்த மதிப்புக் கொடாமல் இளமையை உரிமையுடன் வேண்டும் அளவு நுகராமல் பொருள் முதலியவற்றில் நாட்டம் கொண்டு ஒழுகுவது மிகையாதலின் 'இளமைதீர் திறம்' **பெருந்திணையாயிற்று** எனவும், காதலர்களின் உள்ளன்பிற்குக் குறையும் களங்கமும் இல்லையாதலின் **அகத்திணை யாயிற்று** எனவும் அறிதற்பாலது.

**(இ) தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்:** தலைவனின் பிரிவு ஐந்திணை தலைவிக்குத் துன்பத்தை விளைவிக்கின்றது. புல்வெளிக்கு மேயச்சென்று மன்று புகுதரும் ஆநிரைகளின் மணியோசையும், மாலைக்காலப் பிறச் சூழ்நிலைகளும், பறவையின் புணர்ச்சியும், விலங்கின் தழுவலும் அவள் அடக்கத்தை கிளறச் செய்யும். 'வருவான், வருவான்' என்ற நம்பிக்கையுடன் தன் காம

28. ஐங். - 463
29. நற்-64
30. அகம்-243

உணர்ச்சியை நாணங் கடவாது காத்துக் கொள்வாள். குறுந் தொகைப் பிரிவுத் தலைவியொருத்தி,

'இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும், புலம்பும்,
இன்றுகொல் தோழியவர் சென்ற நாடே.[31]

[இல் இறை-இல்லத்தின் சிறப்பு; பிள்ளை - குஞ்சுகள்; புலம்பும்-தனிமையும்; புண்கண்-துன்பம்]

என்று தானே சொல்லி அமைதி பெறுகின்றதைக் காண்க. சுற்றுப்புறக் காட்சிகள் விடாது தாக்கினாலும், காமம் பெருகி நெஞ்சிற் பரவி அலைத்தாலும் தலைவி நாண் கடவாள்; ஊரறிய உணர்ச்சியையும் காட்டாள். தானே ஆறுதல் அடைவாள்; அல்லது தோழியால் ஆற்றுவிக்கப் பெறுவாள். இஃது ஐந்திணை நெறி என்பதை நாம் அறிவோம் இந்நெறி வழுவிப் பிரிவுத் துன்பத்தால் தன்னை மறந்த நிலையில் ஊரறிய வெளிவந்து புலம்பும்பொழுது நாண் நீங்கி பெருந்திணை தோன்றுகின்றது.

கலித்தொகைத் தலைவியொருத்தியின் மண வாழ்க்கையில் கணவனுடன் அகம் மகிழ, மனம் நெகிழக் கூடிக் குலவி மன நிறைவு பெறுவதற்கு முன்னர்ப் பிரிவு நிகழ்ந்து விடுகின்றது.

புரிவுண்ட புணர்ச்சியுள் புல்லாரா மாத்திரை
அருகுவித்து ஒருவரை அகன்றலின் தெரிவார்கண்
........... ........ ......
பயனின்று மன்றம்ம காமம்[32]

என்று பாடலாசிரியரே இவள் இளம் பிரிவிற்கு இரங்குகின்றார். மணந்த சில காலத்திற்குள் பிரிவதாயின் காமத்திற்குப் பெருமையில்லையே என்று நகுகின்றார். இத்தலைவியிடம் யாதொரு குற்றமும் இல்லை. குற்றம் செய்யும் நிலையிலும் இவள் வளரவில்லை. தோழியரோடு விளையாடும் காலத்தும் பல்லெலாம் தெரியக் காட்டிச் சிரித்தறியாள். பல்நுனியும் தோன்றா வண்ணம் முறுவலை உள்ளடக்கி, மனமகிழ்ச்சியைக் கண்ணாலும் முகத்தாலும் மெல்லிதாகக் காட்டும் நாண்மிகுதியுடையவள். இத்தகையவளின் நெஞ்சென்னும் அடுப்பில் காமக்கொழுந்தைப் பிறப்பித்து

31. குறுந். 46
32. கலி-142

அகல்கின்றான் தலைவன்; அது மூண்டு நீண்ட எரியாகி அவளது நற்பண்புகளையெல்லாம் அழிக்கின்றது. ஊராருக்கெல்லாம் கேட்கும்படி கதறுகின்றாள்; பல்லெலலாம் தெரியக் காட்டிச் சிரிக்கின்றாள்; கண்களில் நீர் பெருக அழுகின்றாள்.

ஒண்ணுதல் ஆயத்தார் ஒராங்குத் திளைப்பினும்
முள்நுனை தோன்றாமை முறுவல்கொண்டடக்கித்தன்
கண்ணினும் முகத்தினும் நகுபவள் பெண்ணின்றி
யாவரும் தண்குரல் கேட்ப நிரைவெண்பல்
மீயுயர் தோன்ற நகாஅநக் காங்கே
பூவுயிர்த் தன்ன புகல்சால் எழிலுண்கண்
ஆயிதழ் மல்க அழும்.[33]

[நுதல்-நெற்றி; ஆயம்-தோழியர் கூட்டம்; திளைத்தல்-கூடிவிளையாடுதல்; முள்நுனை-கூரிய நுனி; முறுவல்-புன் சிரிப்பு; நிரை வெண்பல்-நிறைந்த வெள்ளிய பல்; மீயுயர்-மேல் எயிறு; பூ உயிர்த் தன்ன-பூவெடித்த தன்மையை யொத்த; எழில் அழகு; இதழ்-இமை]

என்ற பாடற் பகுதியில் நல்லந்துவனார் ஐந்திணைத் தலைவி பெருந்திணைத் தலைவியாக மாறும் நிலைகளைப்புலப்படுத்துவர். இதனால் நாணமும் காம அடக்கமும் ஐந்திணைப் பண்புகள் எனவும், நாணாமையும் அடக்காத் தன்மையும் பெருந்திணைப் பண்புகள் எனவும் தெளிகின்றோம். நிறையாப் புணர்ச்சியும் புணர்ந்தும் ஆராமையும் இம்மாற்றத்திற்குக் காரணமெனவும் நுண்ணிதின் உணர்கின்றோம்.

திருமணம் ஆன ஓர் ஐந்திணைத் தலைவியின் ஆராக் காம வுணர்வே, மனநிறைவு பெறாத ஏக்கமே, பெருந்திணைப் பொருளாகின்றது. மணந்த அணிமையிற் பிரிவது மனைவியின் உள்ளத்தை மிகவும் வாட்டும். 'ஆறுவாள், ஆற்றப்படுவதால் அடங்குவாள்' என்று எந்த அறிவுடைக் கணவனும் பிரியான். குழவி ஈன்ற மனைவிகூட தலைவனது பிரிவுக்கு இசையாள் என்பதைப் பல சங்கப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. ஐங்குறுநூற்றுத் தலைவன் ஒருவன் கார்ப்பருவத்தில் ஏதோ ஒரு நிமித்தமாகப் பிரியக் கருதுகின்றான். அவன் மனைவியோ பால் மணம் மாறாப் பச்சிளங் குழவியின் தாய். இந்நிலையிலும் தோழி தலைவனது அகற்சியைத் தடுக்க முனைகின்றாள்.

புறவணி நாடன் காதல் மடமகள்
ஒண்ணுதல் பசப்ப நீசெலின் தெண்ணீர்ப்

33. கலி-142.

போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வன் அழுமினி முலைக்கே[34]

[புறவு-காடு; ஒள்நுதல்-தலைவி; பசப்ப-பசலை பாய; போது அவிழ்-இதழ் விரியும்]

'நீ பிரிந்தால் குழவி பாலுக்கு அழும்' என்ற வாய் பாட்டால் 'நீ பிரிவையாயின் எம்பெருமாட்டி உயிர் விடல் உறுதி; குழவியும் பாலின்றி இறக்கும்' என்ற நிலையைப் புலப்படுத்துகின்றாள் (இப்பாடலின் வேறு நயங்களை எல்லாம் உரை நோக்கி அறிக). தாய்மை எய்திய தலைவியின் நிலையே இதுவாயின் மணந்தவுடன் தலைவியைப் பிரிதல் கொடிதினும் கொடிது அன்றோ? திருமணத்திற்குப்பின் வரும் பல கடமைகளையும் மனைவியுடன் இல்லிருந்து ஆற்றுவதே நல்லறமாகும்.

இன்னொரு சமுதாய உண்மையையும் ஈண்டு நினையல் தகும். இளநங்கையின் பெருந்திணைக் காமத்தை, தேறுதற்கரிய மிகு காமத்தைக் குற்றமாகவும் பழியாகவும் சமுதாயம் கருதவில்லை. தலைவியின் காம வேட்கையை அரைகுறையாகத் தணித்துப் பிரியும் போக்கையே அது கடிந்தது. கலித்தொகைத் தலைவி யொருத்தியின் நிலையால் இது தெளியப்படும். தலைவியைப் பிரிந்த தலைவன் எப்படியோ வீடு வந்து சேர்கின்றான். காதலியின் நோவையும், அழுகையையும், பெரு மூச்சையும், இரவு பகல் உறங்கா நிலையையும் காணும் அவன் அவளை நெருங்கிப் புல்லி ஆரத் தழுவுகின்றான். தலைவியும் காமக் கலக்கம் நீங்கி அறிவு நலம்பெறுகின்றாள்.[35] காமக் கலக்கம் கொண்ட அவ்விள நங்கை தான் இழந்த நலத்தையும் புன்முறுவலையும் மீண்டும் எய்தப் பெறுகின்றாள்.[36] அவளது நுதற்பசலையும் மறைகின்றது; அறிவிலார் கூறிய சில பழிகளெல்லாம் 'பொய்யாய்ப் பழங்கதையாய் மெல்லமெல்லப்' போயொழிகின்றன.[37]

பாயல்கொண் டுள்ளா தவரை வரக்கண்டு
மாயவன் மார்பில் திருப்போல் அவள்சேர
ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்ததென்
ஆயிழை யுற்ற துயர்.[38]

34. ஐங்குறு-424.
35. கலி-142;
36. ஷை-143.
37. ஷை-144.
38. ஷை-145.

[பாயல் படுக்கை, தூக்கம்; மாயவன்-திருமால்; திரு-இலக்குமி; ஆயிழை-தலைவி.]

என்பது நல்லந்துவனார் காட்டும் ஒரு தலைவியின் நிலை. தன் உறக்கத்தைக் கெடுத்துப் போன தலைவன் திரும்பிவரக் கண்டதும் தலைவி அவனை ஆரத் தழுவுகின்றாள். அவளது துயர் கதிரவனைக் கண்ட இருள்போல் பறந்தோடுகின்றது. முன்னைய நன்னிலைகளையெல்லாம் பெறுகின்றாள். இதில் திருமால் மார்பை 'அகலகில்லேன் இறையும்' என்று ஒன்றி உறையும் அலர்மேல் மங்கையை உவமையாக்கியதனால் இளந்தலைவியின் வேட்கையும் தூய்மையும் கற்பும் பொட்பும் பெறப்படும். தலைவியின் நாண் கடந்த செயல்களால் அவள் கற்பிழந்தாள் என்று ஆகாது. உள்ளங் கவர்ந்த ஒருவனையே ஊரறிய அழைக்கின்றாள்; நாடெல்லாம் கேட்கக் கதறிக்கூப்பிடுகின்றாள். இஃது ஒருவகையில் 'காமம் மிக்க கழிபடர் கிளவியும்' ஆகும்.

நல்லந்துவனாரின் தலைவியைப்பற்றிய சொல்லோவியங்கள் யாவும் தலைவியின் மாசற்ற மனநிலையையே காட்டுகின்றன. ஒருத்தியின் மனநிலையைக் காட்டுவது இது.

இன்னுயிர் அன்னார்க்கு எனைத்தொன்றும் தீதின்மை
என்னுயிர் காட்டாதே மற்று.[39]

இதில் 'என்னைவிட்டு அகன்றவன் யாதொரு நோயும் உறவில்லை; யாதொரு தீங்கினையும் எய்தவில்லை; நான் உயிரோடிருப்பதுவே அதற்குச் சான்றாகும்' என்று உயிரொருமை கூறுகின்றாள். மேலும் அவள்,

ஈண்டுநீர் ஞாலத்துள் எங்கேள்வர் இல்லாயின்
மாண்ட மனம்பெற்றார் மாசில் துறக்கத்து
வேண்டிய வேண்டியாங்கு எய்துதல் வாயெனின்
யாண்டும் உடையேன் இசை.[40]

[ஞாலம்-உலகம்; கேள்வர்-தலைவர்; மாண்ட-மாட்சிமைப் பட்ட; எய்துதல்-அடைதல்; யாண்டும்-எப்பொழுதும்; இசை-புகழ்]

39. கலி-143.
40. கலி-143.

என்று கூறுகின்றாள். இதில் 'ஒருகால் என் தலைவன் மரித்திருப்பானாயினும், நல்ல மனமுடையார் எண்ணியதை எண்ணியாங்கு துறக்கத்தில் எய்துவர் என்பது உண்மையானால், நானும் அவனை அடைந்தே தீருவேன்' என்று தன் மனத் தூய்மையை நவிலுகின்றாள். இவற்றால் காமக் கலக்குண்ட அவள் கற்பில் சிறிதும் கலங்கவில்லை என்பது வெள்ளிடை மலை. தொல்காப்பியரின் கருத்துப்படி கற்பு போய் வரும் பொருளில்லை. நாணோ ஒழுக்கத்தை விடாது அரிதிற் போய்வரும் தன்மையுடையது.

> உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
> செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று.[41]

என்பது தொல்காப்பியம். ஆதலின் நம்பியின் வரவால் நங்கையின் துயர் பறந்தோடுகின்றது. சென்றதுபோல் தோன்றிய நாணமும் திரும்ப வந்தடைகின்றது. நம்பியை வணங்குகின்றாள். பழைய பண்புகள் யாவும் நங்கையை வந்தடைகின்றன.

> காதலன் மன்ற அவனை வரக்கண்டாங்கு
> ஆழ்துயர மெல்லாம் மறந்தனள் பேதை
> நகையொழிந்து நாணுமெய் நிற்ப இறைஞ்சித்
> தகையாகத் தையலாள் சேர்ந்தாள் நகையாக
> நல்லெழில் மார்பன் அகத்து.[42]

[பேதை - நங்கை; இறைஞ்சி - வணங்கி; தகை - அழகு; தையலாள்-பெண்; எழில்-அழகு.]

என்று பெருந்திணையை ஐந்திணையாக முடித்துக் காட்டுவர் நல்லந்துவனார். ''நகையொழிந்து நாணு மெய் நிற்ப இறைஞ்சி'' என்று ஐந்திணைப் பண்புகளை மீண்டும் பொருத்திக் காட்டிப் பெண்ணின் பெருமையை நிறுவுவதைப் பாடலில் காண்க அந்துவனாரின் பெருந்திணைப் பாக்களின்[43] இறுதியடிகளைச் சிந்தித்து நோக்கினால் அவை புணர்ச்சியுடன் முடிந்து ஐந்திணையாதலைக் காணலாம். பெருந்திணைப் பாடல்களின் முடிவு இப்படித்தான் அமைதல் வேண்டும் என்பதை அந்துவனாரின் பாடல்கள் தெரிவிக்கின்றன.

மேற்காட்டிய பாடலின் தலைவி நாண் விட்டமையாலும் அவளது காமத்து மிகுதிறத்தாலும் அவள் ஒழுக்கம் பெருந்திணை

41. களவியல்-23
42. கலி-147.
43. ஷை. 142-147.

யாக முடிந்தது. தலைவனும் தலைவியும் உள்ளம் ஒத்த இல்லறத்தாராதலின் அவர்கள் ஒழுக்கம் **அகத்திணையில்** அடங்கியது மனைவியின் காம நாடியைக் கண்டு கணவன் ஒழுக வேண்டும் என்பது இத்துறையின் அறிவுரையாகும்.

(ஈ) **மிக்க காமத்து மிடல் :** 'காம மிகுதியானே எதிர்ப் பட்டுழி வலிதிற் புணர்ந்த இன்பம்' என்று நச்சினார்க்கினியரும் 'கரை கடந்த காமத்தால் விரும்பாதாரை வலிதிற் புணரும் வன்கண்மை' என நாவலர் பாரதியாரும் இத்தொடரை விளக்குவர் பிறர் பலரும் இதுகாறும் எழுதியுள்ள கருத்தும் இது போன்றதே. இக்கருத்து தவறுடையது என்பதை டாக்டர் வ சுப மாணிக்கனார் மிக அருமையாகத் தடைவிடைகளுடன் விளக்கிப் போவர். இவர் கருத்து அறிவுக்கும் வழி வழிவரும் அகத்திணை மரபுக்கும் நன்கு பொருந்துகின்றது. அதனை ஈண்டுக் காண்பாம்.

'மிக்க காமத்துமிடல்' என்ற தொடர் கட்டாயப்படுத்திப் புணர்தல் என்று பொருள் கொள்ளல் சிறிதும் பொருந்தாது. 'மிடல்' என்ற சொல்லுக்கு இப்பொருள் உண்டு என்று பலர் கருதலாம். ஆனால் ஒரு தொடரின் பொருள் காணவேண்டுமாயின் பொதுக் கருத்து, முன்னும் பின்னும் வரும் கருத்துத் தொடர்ச்சி, சொல்லின் இயல்பான பொருள் என்ற அடிப்படையில்தான் நோக்கிக் காணல் வேண்டும். 'ஏறிய மடற்றிறம்' எனத் தொடங்கும் நூற்பா அகத்திணையியலில் அமைந்துள்ளது. 'தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்' என்ற தொடரின் பொருள் தெளிவானது தலைவனது பிரிவால் தலைவி படும் ஆராத்துயரை அத்தொடர் குறிக்கின்றது. 'மிடல்' என்ற சொல்லுக்கு வலி, பேராற்றல், துணிவு என்பதே இயல்பான பொருளாகும்.

'உள்ளம் அழிய ஊக்குநர் **மிடல்**தபுத்து'[44]

'ஓடாப் பூட்கை மறவர் **மிடல்**தப'[45]

'அடங்காதார் **மிடல்**சாய அமரர்வந் திரத்தலின்'[46]

என்ற பாவடிகளில் வரும் சொல் இப்பொருளில் வந்துள்ளமை காண்க. **வலியினாற்** செய்தல் என்பது வேறு; **வலிந்து** செய்தல் வேறு. மிக்க காமத்து **அடல்** என்றிருப்பின், பிறரை வருத்தி வம்பு செய்தல் என்று பொருள்படும். பெருந்திணை அகத்திணை ஏழனுள்

44. பதிற்-13.
45. ஷை-57.
46. கலி-2.

ஒன்றாதலானும், அகத்திணை அன்புத்திணை யாதலானும் அகத்துறை எதற்கும் அன்பின் அடிப்படையிலுள்ள புணர்ச்சிக்கு முரணாக உரைகாணல் பெருந்தவறு; அடித்தவறு. பெருங் காமத்தால் தலைவி செய்யும் துணிவுச் செயல் என்பதுவே 'மிக்க காமத்து மிடல்' என்ற தொடரின் பொருளாகும். கழி காமுகன் ஒருவன் ஒரு பெண்ணை வம்பு செய்து கூடுதல் என்ற உரை மரபு எவ்வாற்றானும் பொருந்தாது இத்தகைய செயல்கள் உலகில் நடந்திரா என்பது வாதம் அன்று; நடந்தும் இருக்கலாம். இவற்றிற்கு தமிழ் மூதறிஞர்கள் ஆய்ந்து கண்ட அகத்திணைக் கண் இடம் இல்லை என்பது டாக்டர் மாணிக்கனாரின் துணிபு.

செய்வ தறிகல்லேன் யாதுசெய் வேன்கொலோ
ஐவாய் அரவின் இடைப்பட்டு நைவாரா
மையில் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கொளலும் அற்றெனக் கண்டன்று.[47]

[அரவு-பாம்பு; நைவாரா-வருந்தி; மதி- சந்திரன்; வெளவிக் கொளல்-வலிதிற் புணர்தல் ]

என்பது குறிஞ்சிக் கலியின் ஒருபகுதி. காதலனும் காதலியும் உறழ்ந்து உரையாடும் காட்சியை ஊடல் நடையில் அமைத்துக் காட்டுகின்றார் கபிலர் பெருமான். தலைவன் தலைவியை இழுத்துத் தழுவிக் கொள்ளுகின்றான். அவர்கட்குள்ளே நடை பெறும் உரையாடல் இது.

**தலைவி :** நான் விரும்பா நிலையில் என்னைக் கைப்பற்றி இழுத்துத் தழுவலாமா?

**தலைவன் :** எனக்கு அங்ஙனம் செய்ய விருப்பமாக இருந்தது. ஆதலால் உன்னைத் தழுவினேன்.

**தலைவி :** தனக்கு இனிது என்று வலிதில் பிறர்க்குத் துன்பம் தருதல் அறமா?

**தலைவன் :** நின் அறிவை மூட்டை கட்டிவை. தமக்கு இனிதென்று மக்கள் நீர் ப ரு கு வ ா ர் க ள். இனிதா என்று நீரைக் கேட்டுப் பருகுவார் உண்டோ? காமத் துயர்ப்படுகின்றேன்; யாது செய்வதென்று அறியேன். மதியை யொத்த முகத்தினையுடைய பெண்களைக் கைப்பற்றிக் கொள்ளுதலும் அறம் என்று கருதப்பெறும்.

---

47. ஷை-62.

**தலைவி :** (தன்னுள்) வெளவிக் கொள்ளுதல் அறமாம். இவனும் நம் சொல்லைக் கேளாது வருத்துகின்றான். முற்பிறப்பில் இருவரும் ஒன்றாக வாழ்ந்திருக்கின்றோம். இனி இவன் கருத்திற்கு இசைய வேண்டியதுதான்.

இங்ஙனம் இவர்கள் உரையாடல் புணர்ச்சியாக முடிவதைக் காண்கின்றோம். இந்த நிகழ்ச்சி கூடலை மிகுவிப்பதற்கு மேற் கொண்ட ஊடல் பேச்சேயன்றி, இக்காதலர்கள் அன்பற்றவர்கள், உள்ளம் ஒன்றாதவர்கள் என்பது ஆகாது. உள்ளம் ஒன்றாதவர்கள் இவ்வண்ணம் நெடிது உரையாடிக் கொண்டிரார். கபிலர் பெருமான் ஊடலில் காதலர்கள் உறழ்ந்து உரையாடும் ஒரு வகையைக் காட்டுகின்றார். 'ஈண்டுப் புலவி நுணுக்கம்' என்ற திருக்குறள் அதிகாரத்தை ஒப்பு நோக்கி எண்ணத்தக்கது. ஊட லுவகையில் வரும் காதல் மொழிகளை உணர்ச்சி நீக்கிப் பொருள் காண்டல் வேண்டும். 'வெளவி' என்ற சொல்லுக்கு 'வலிந்து' என்பது அகராதியில் உள்ள பொருள் என்ற போதிலும், அச்சொல் அகப்பாடலில் வருதலாலும், புணர்ச்சிக்கு முன்னர்க் காதலன் வாயினின்றும் வெளிப்படுதலானும், இடத்திற்கேற்பப் பொருள் கண்டு உரைத்தல் வேண்டும்.

மையில் மதியின் விளங்கு முகத்தாரை
**வெளவிக்** கொளலும் அறனெனக் கண்டன்று[48]

என்ற அடிகளை ஊன்றி நோக்கினால் உண்மைப்பொருள் தெளி வாகும். 'மலரினும் மெல்லிது காமம்'[49] என்பது வள்ளுவமா தலின் அன்புடைய காதற் பெண்களிடம் இனிது உரையாடல் வேண்டும்; நலம் பாராட்டி மெல்லிய உணர்வூட்டுதல் வேண்டும்; அதன் பின்னர் தழுவுதல் வேண்டும். இதுவே ஆண் மேற்கொள்ள வேண்டிய முறை. காமம் மிக்க காதலன் திடீரெனத் தழுவிக் கூடலும் உண்டு. இதனைத்தான் கபிலர் குறிப்பிடுவது. இது புணர்ச்சி முறைக்கு ஒவ்வாது எனினும் தலைவன் அன்பனாதலின் அறத்திற்குப் புறம்பாகாது; மாறாகாது.

கபிலர் புனைந்த இக் கலிப்பாடலில் வரும் மாந்தர்கள் ஏவல் செய்யும் அடியவர்களாதலின் இச்செயல் பெருந்திணையின்

48. கலி-62
49. குறள் - 1289

பாற்படும் என்று நச்சினார்க்கினியரும் பிறரும், கொள்வர். சாதி வேறுபாடும் தொழில் வேறுபாடும் இவர் கொள்கைக் கோட் பாட்டின் முக்கிய கூறாகலின் பணியாளர்க்குத் தலைமையும் ஐந்திணையும் இல்லை என்று இவர்கள் கொண்டனர். இப்பிழை யான கருத்தினால் தொல்காப்பியத்திற்கும் சங்க இலக்கியத் திற்கும் இவர்கள் காணும் உரைகளினால் அடிப்படை உண்மைகள் வழுவாகத் தோன்றுகின்றன. இப்பாடலின்,

வேறல்லம் என்பதொன்று
உண்டால் அவனொடு
மாறுண்டோ நெஞ்சே நமக்கு.

என்ற அடிகளால் தலைவியும் மனம் ஒன்றிக் காதலிக்கின்றாள் என்பது தெளிவாகின்றது. உள்ளம் ஒத்த அன்பும் உடல் ஒத்த புணர்ச்சியும் இப்பாடலில் நுவலப்படுதலின் இதில் வரும் தலை மக்கள் ஐந்திணைக்கு உரியவர்கள் என்பது சொல்லாமலே போதரும்.

'மிக்க காமத்து மிடல்' என்பதன் பொருள் ஆண் வலிந்து மேற் கொள்ளும் புணர்ச்சியன்று; ஐந்திணைத் தலைவி காமம் மிக்குச் செய்யும் துணிவுச் செயலாகும் என்பது அறியத்தக்கது. இப் பெருந்திணைத் துறைக்குச் சங்கப் பனுவல்களில் எடுத்துக்காட்டுகள் மிகுதியாக உண்டு என்று தோன்றவில்லை. எனினும், பாடல்களில் வரும் நிகழ்ச்சிகளினின்றும் இச்செயலை ஊகித்து அறிந்து கொள்ளலாம். சில காமக் கருத்துகள் எண்ணத்தளவிலும் சொல் லளவிலும் அடங்கி நிற்குங்கால், நாணஎல்லை **கடவாத நிலையில் அமையுங்கால், அவை ஐந்திணையாகும்** என்பது ஏற்கெனவே விளக்கப்பெற்றுள்ளது. சில நிகழ்ச்சிகளைக் காண்போம்.

நற்றிணையில் ஒரு நிகழ்ச்சி; களவுத் திணையில் வருவது: களவுத் தலைவன் தலைவியை விரைவில் மணக்க விரும்பவில்லை. களவொழுக்கத்தை நீடிக்கவே விரும்புகின்றான். ஒருநாள் சிறைப்புறத்தில் அவன் வந்திருப்பதை அறிந்து கொண்டும் அறியா தாள் போலத் தோழி அவன் இயல்பை இகழ்கின்றாள். ''இனி நாம் மேற்கொள்ள வேண்டியது ஒன்றே ஒன்று உண்டு. மலை நாடன் சான்றோனல்லன என்பது வெளிப்படை. நாம் நாணம்

ஒழிந்து அன்னையின் காவலையும் பெரிய தலைக்கடை வாயிலையும் கடந்துப் பலரும் காணப் பகற்காலத்திலேயே புறப் படுவோம். பலரும் அறியும்படி அவன் ஊர் யாது என்று வாய் விட்டுக் கூவுவோம். வரையாது ஒழுகும் நீயும் ஒரு சான்றோனா என்று அவனூர் சென்று கேட்டு விட்டுத் திரும்புவோம்''[50] எனத் தோழி அழுத்தமாகக் கழறி உரைக்கின்றாள்.

குறுந்தொகையில் ஒரு கற்புத்திணை நிகழ்ச்சி. பொருள் ஈட்டும் காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிந்து சென்ற தலைவன் நீண்ட நாட்களாகத் திரும்பி வந்திலன்: தலைவிக்கு ஏக்கம் மிகுந்து உடல் மெலிந்து வளைகளும் கழன்று போகின்றன; உறக்கமும் இல்லை. இல்லத்து இருப்புக் கொள்ளவும் இல்லை. தலைவன் சென்ற இடம் நெடுந்தொலைவிலிருப்பினும், தமிழ் நடையாடாத நாடாக இருப்பினும்,அவன் இருக்கும் இடத்திற்குப் போக நினைக்கின்றாள். 'உய்குவம் ஆங்கே; எழு இனி வாழி என் நெஞ்சே!' என்று நெஞ்சிற்குச் சுட்டுகின்றாள். இதிலும் நாண எல்லை கடக்கத் துணிகின்றாள்; ஆனால் அங்ஙனம் கடக்க வில்லை. இந்த இரண்டு நிகழ்ச்சிகளிலும் நாளைக் கடக்கும் நினைப்பும் கூற்றும் இருப்பினும், நாண் வரம்பு இகவானவாதால் அவை ஐந்திணையுள் அடங்குகின்றன. மிக்க காமமாயினும் தக்க எல்லைக்குள் அடங்கி நிற்கின்றன. இத்தகைய நிகழ்ச்சிகளை ஐங்குறு நூற்றிலும்[51] அகப்பாட்டிலும்[52] காணலாம்.

இனி 'மிக்க காமத்து மிடலுக்கு' ஓர் எடுத்துக்காட்டு தரு வோம். ஆதிமந்தியார் கூறும் நிகழ்ச்சியொன்றில் இதனைக் காணலாம்.

மன்னர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டும் காணேன் மாண்டக் கோனை
யானுமோர் ஆடுகள மகளே என்கைக்
கோடீர் இலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலுமோர் ஆடுகள மகனே.[53]

---

50. நற். 365.
51. ஐங்குறு. 114, 237
52. அகம் - 309
53. குறுந். 31

[மள்ளர் - போர் மறவர்; குழீஇய-குழுவிய, கூடிய; விழவு-சேரிவிழா; மான் தக்கோன் - தலைவன்; ஈர் - அறுத்தி யற்றிய: நெகிழ்த்த - கழலும் படி செய்த; பீடு - பெருமை; குரிசில் - தலைவன்]

என்று களவுத் தலைவி புலம்புகின்றாள். இங்குத் தலைவி மன்னரின் விழாவிற்கும் மகளிரின் துணங்கைக்கும் இல்லங் கடந்தே புறப்பட்டுச் சென்று விட்டாள். இத்தலை. ஈண்டு எண்ணம் சொல் அளவில் அமையாது செயலிலும் ஈடுபட்டு விட்டாது. இதுவே 'மிக்க காமத்து மிடல்' எனப்படும். இப்பாடலை இது காறும் ஐந்திணைக் களவுத் துறையாகக் கருதி வந்தது பிழை; பெரும் பிழை. நாண் கடந்த செயலால் களவுத் தலைவி பெருந் திணைத் தலைவியாகின்றாள். களவிலாயினும் கற்பிலாயினும் நாண் கடக்கும்செயல் பெருந்திணையாகும் என்பது அறியத்தக்கது. ஆடுகளமகள் காதலனை ஓடி ஆடித் தேடிய செயல் நுவலப்படும் இப்பாடல் பெருந்திணைக்கு இலக்கியமாகிறது. திருமணமாகிய தலைவியரும் தம் கணவன்மார் இருக்கும் இடம் தேடிப் புறப்பட்ட செய்திகளும் சங்க இலக்கியத்தில் உள்ளன. அன்புடைத் தலைவி யின் காதல்கள் நாணிறக்கும்போது பெருந்திணையாகின்றன. நாணழிவு கற்பழிவு ஆகாது. நாண் விட்டேனும் கற்பைக் காப்பது தமிழியம். இப் பெருந்திணைத் தன்மைகளை,

உயிரினும் சிறந்தன்று நாணே: நாணினும்
செயிர்தீர்க் காட்சிக் கற்புச் சிறந்தன்று எனக்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
காமக் கிழவன் உள்வழிப் படினும்
தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்
ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே.[54]

என்ற நூற்பாவில் காணலாம். இந்நூற்பாவினையும் ''ஏறிய மடற்றிறம்'' என்ற நூற்பாவின் பிற்பகுதியினையும் இணைத்துச் சிந்திப்பின் தெளிவு பிறக்கும். 'காமக் கிழவன் உள்வழிப் படுதல்' என்பதும், 'மிக்க காமத்து மிடல்' என்பதும் 'தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்' என்பதும் ஒன்றேயாகும். நாணைக்காட்டிலும் கற்புச் சிறந்தது என்று நெறி தெளிந்த பெண்கள் கற்புக் காவலின்

54. களவியல் - 123

பொருட்டு நாண் வேலியைக் கடந்து செல்வர் என்று தொல்காப்பியம் பேசுகின்றது; இதுவும் அகப்பொருளில் அடங்குகின்றது. 'ஆவகை பிறவும்' என்று அகத்திணை ஆசான் கூறுதலால், காமக் கூறுகள் மிகினும், நாணம் கடப்பினும் உள்ளப் புணர்ச்சிக்கு முரணின்றி நிகழுமாயின் அவை யாவும் அகப்பொருளில் அடங்கும் என்பது குறிப்பு. இவற்றிலிருந்து ஐந்திணை எந்நிலைக்கண் பெருந்திணையாகின்றது என்பது தெளியப்படும்.

# VI. அகத்திணை மாந்தர்

அகத்திணையுலகில் தலைமை மாந்தர்களாக விளங்குபவர்கள் தலைவனும் தலைவியும். இவர்தம் காதல், தழைத்து வளர்ந்து கணவன்-மனைவியாக ஆவதில் பல நிலைகள் உள்ளன. இவர்களைப் பெயர் சுட்டிக் கூறும் வழக்கம் இல்லை. அக இலக்கியத்தில் இவர்தம் காதல் நிகழ்ச்சிகளாக வருவன சமுதாயத்தினின்றும் நல்லனவாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றவையாகும். 'மக்கள் நுதலிய அகன்' என்று தொல்காப்பியர் கோடிட்டுக் காட்டுவதைக் காண்மின். சில நூற்பாக்களில் காணப் பெறும் சொற்போக்குகளும் இதனை வலியுறுத்துகின்றன. அகத்திணையில் காணப்பெறும் தலைவனிடம் ஒரு சில குறைகள் காணப்பெற்றாலும், தலைவி ஒரு குறிக்கோள் மகளாகவே காட்டப் பெறுகின்றாள். இல்லத்தில் சொல்லுரிமை உடையவள் இவள் என்பதைத் தொல்காப்பியர் ''அஞ்ச வந்த உரிமை'' என்று சிறப்பிப்பர். இல்லற வாழ்க்கையில் தலைவியும் தலைவனும் ஓருயிரும் ஈருடலும் போன்றிருப்பர்; இவர்தம் தொடர்பு பிறவி தோறும் தொடர்ந்து வருவதாகக் கூறப்பெறும்.

தலைவியின் நற்றாய், தலைவியின் தந்தை, செவிலி பாங்கன், தோழி, பரத்தையர் ஆகிய அறுவர் ஏதோ ஒரு முறையில் தலைமக்களுடன் உறவுடையோராகக் கொள்ளப்பெறுவர். இவர்தம் உறவுகளைப்பற்றிய விளக்கத்தை இப்பகுதியில் காணலாம். இவர்களுள் செவிலியும் தோழியும் தலைவியின் களவு நெறியிலும் கற்பு நெறியிலும் பெரும்பங்கு ஆற்றுவது இப்பகுதியில் நன்று விளக்கம் பெறுகின்றது. இலக்கியச் சான்றுகளும், இலக்கணவிதிகளும் ஈண்டு விதந்தோதப்பெறுகின்றன.

அக உலகில் தோழியைப் போன்ற ஓர் அற்புதப் படைப்பினைக் காண்டல் அரிது. இவளிடம் மட்டிலும்தான் தலைவி நன்கு நெருங்கிப் பழகுவாள் என்துப நன்கு எடுத்துக் காட்டப்பெற்றுள்ளது. இவளுடைய பெருமையை, தமிழ் நெஞ்சத்தைச் சங்க இலக்கியங்களில் பரக்கக் காணலாம். அகஉலகில் ஏனையோர் பெறும் பங்கும் ஓரளவு நன்றாகவே விளக்கம் பெறுகின்றது. பரத்தையரின் பங்கு, இவள் அகத்திணை யொழுக்கத்தில் பெற்றுள்ள இடம், இவள் படைப்பு பற்றிய கருத்து வேறுபாடுகள் ஆகியவை இப்பகுதியில் தெளிவு பெறுகின்றன.

தலைமக்களுடன் ஏதோ ஒருமுறையில் தொடர்புடையவர்கள் கண்டோர், அறிவர், பாணன், பார்ப்பார், விறலியர், கூத்தர், இளையோர், விருந்தினர், தேர்ப்பாகன் என்ற **ஒன்பதின்மர்**. இவர்களுள்ளும் பாணன், தேர்ப்பாகன் இவர்தம் பங்கே அதிகமாகக் காட்டப்பெறுகின்றது. சங்க இலக்கியத்தில் இவர்கள் தொடர்புடையனவாகவுள்ள பாடல்களை ஏனையோர் தொடர்புடையனவாகவுள்ள பாடல்களைவிட எண்ணிக்கையில் மிகுதியாகக் காணப்பெறுகின்றன என்பதுவே இதற்குக் காரணமாகும்.

மேற்குறிப்பிட்ட செய்திகள் இப்பகுதியில் **மூன்று** இயல்களில் விரிவாக விளக்கம் அடைகின்றன.

## தலை மக்கள்

அகத்திணையுலகில் உலவும் மாந்தர்களைப்பற்றித் தொல் காப்பியர்,

> மக்கள் நுதலிய அகனைந் திணையும்
> சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்[1]

என்ற அரியதொரு நூற்பாவினுல் குறிப்பிடுவர். இதன் முதலடியில் அகத்திணைக்கு உரிய நிலைக்களமும் அடுத்த அடியில் அகத்திணையுலகில் வரும் மாந்தர்கள் வழங்கப்பெறும் முறையும் கூறப்பெற்றிருத்தலைக் காணலாம். ஐந்திணைக் காதலொழுக் கங்கள் மண்ணுலகிலுள்ள மக்கள் அனைவரையும் கருதியதாதலின் தனியொருவர் பெயர் சுட்டி உரைக்கப்பெறும் மரவு இல்லை. 'ஐந்திணையும்' என்பதிலுள்ள எச்சவும்மையால் கைக்கிளை பெருந்திணையிலும் ஐந்திணையின் மரபே கொள்ளப்படும் என்பதையும் பெற வைத்தார் ஆசிரியர் தொல்காப்பியனார். அகப்பாடல்களை ஊன்றிப் பயில்வோர் அவற்றில் தலைவன், பாங்கன், பாணன், தந்தை எனவும்; தலைவி, தோழி, செவிலி, தாய், பரத்தை எனவும்; ஆண் பெண் மாந்தர்கள் சுட்டப் பெறுவதை அறிவர். அங்ஙனமே, நாடன், துறைவன், ஊரன், சேர்ப்பன் என்ற நிலப் பெயராலும்; உழவன், உழத்தி, ஆயன், ஆய்ச்சி என்று தொழிற் பெயராலும்; ஆடவன் நம்பி நங்கை எனப்பாற் பெயராலும்; அவன் அவள் என்ற சுட்டுப் பெயராலும் என்றவாறு யார்க்கும் ஏற்கும் பொதுனமப் பெயர்களாலேயே கூறப்பெற்றிருத்தலைக் காணலாம். எனவே, சங்க அகப்பாடல் களில் கிளவி மாந்தர்கட்கு இயற்பெயர் இல்லை என்பது அறியப் படும்.

---

1. அகத்திணை-57 (இளம்)

புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது
அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே[2]

என்ற நூற்பாவில் 'பெயர் புறத்திணையில் வந்தாலும் வரலாம்; அகத்திணையில் வருதலாகாது' என்ற கருத்தினைப் பெற வைத்தல் காண்க. மேலும், எழுதிணையும் அடங்க 'அகத்திணை மருங்கின்' என்ற பொதுச் சொல்லால் ஆசிரியர் கூறுதலும், இந்நூற்பாவின் உரையில் ''அகப்பொருள் ஒருவரைச் சாராது பொதுப்பட வரும்'' என்று இளம்பூரணர் குறிப்பிட்டிருத்தலும் இக்கருத்திற்கு அரணாக அமைதலைக் காணலாம்.

ஈண்டு அகத்திணை மாந்தர்களின் இயற்பெயர் கூறா நோக்கம் யாது என்பதைச் சற்றுச் சிந்திப்போம். பண்டையோர் கண்ட அகத்திணை ஒருவன் அல்லது ஒருத்தியின் நல்ல அல்லது தீய காதற்களங்களை வரன்முறையாகத் தொகுத்துக் கூறுவது அகத்திணை அன்று. மக்கள் சமுதாயத்தில் எல்லா மாந்தரிடமும் காதல் நிகழ்ச்சிகளில் நல்லன என்று தேர்ந்து மேற்கொண்ட தனிக் காதல் ஒழுக்கங்களைப் புனையும் வரம்புடையது அகத்திணை எனவே, ஒருவரின் தனி வாழ்வினின்றும் தோன்றாது, சமுதாயத்தின் பலர் காதல் வாழ்வினின்றும் இது தோன்றின மையின் தனியாரின் பெயரிட்டு வழங்குதல் யாங்ஙனம் பொருந்தும்? ஒன்று கூறுவோம்: தக்காளிப் பழம் உடலுக்கு நல்லது; ஆப்பிள் உடலுக்கு நன்மை பயக்கும்; சாத்துக்குடியை அதிகமாக உணவுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறுவோர் சாதாரண அறிவுடையவர்கள்; அநுபவ அறிவுடைய அறிஞர்கள். ஆயின், உணவியல் அறிஞர்கள் விட்டமின் சத்து உப்புப் பொருள்கள் இவை உடலுக்கு வேண்டுவன என்பர். இங்ஙனமே உடலுக்கு ஊட்டம் தரும் டானிக்குகளிலும், வேறு சத்து உணவுப் பொருள்களிலும் புரதம் இத்தனை விழுக்காடு, உப்புப் பொருள்கள் இத்தனை விழுக்காடு, மாப்பொருள்இத்தனை விழுக்காடு என்று குறிப்பிடப் பெற்றிருக்குமே அன்றி பருப்பு, பழ வகைகள், கீரை வகைகள், கோதுமை, அரிசி போன்றவைகளின் பெயர்களைக் குறிப்பிடும் வழக்கம் இல்லை. இத்தகைய ஒரு முறையே-பொது முறையே—அகத்திணையிலும் கையாளப் பெற்றுள்ளது. மணிவண்ணன், மலர்விழி என்பன போன்ற

2, தொல்-58

பெயர்கள் வராமல் நம்பி, நங்கை என்ற பெயர்களே இங்குக் காணப்பெறும். இன்பமும் துன்பமும் கலந்த களவியல் வாழ்க்கையில் பல்வேறுபட்ட நிலைகளில் வாழும் காதல் மாந்தர்களிடமிருந்து காதல் கூறுகளைத் தேர்ந்தெடுத்து அவற்றைத் தலைவன், தலைவி, தோழி முதலியவர்களிடம் இருப்பதாகப் படைத்துக் காட்டுவதே அகத்திணை இயல்பாகும். பெயரில்லாத இவர்கள் மக்களின் காதல் மனங்களைத்தாம் நமக்குக் காட்டுகின்றனர். மகக்ள் நுதலிய அகன்' என்று கூறிய தொல்காப்பியரும் சமுதாயத் தோற்றத்தையும் அதன் நோக்கத்தையுமே நமக்குக் காட்டினர் என்று கொள்ளலே பொருத்தமுடையதாகும். ஆசிரியர் தொல்காப்பியரும் தம்முடைய அகப்பொருள் நுதலும் நூற்பாக்களில் 'கிழவோன் மேன', 'தோழிக்கு உரிய', 'கிழவோள் செப்பல் என்று உறவுக் குறியீடு செய்திருத்தலாலும் இம்முறை மேலும் தெளிவு பெறும்.

இன்னொரு கருத்தும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. தலைவன், தலைவி, செவிலி, பாங்கன், காமக் கிழத்தி என்ற பெயர்களால் கூற்றுகள் வருதலின் செல்வச் சமுதாயத்திற்கே அகத்திணைக் காதல் வகுக்கப்பெற்றது போலும் என நினைக்கத் தோன்றும். சங்க இலக்கியத்தில் வரும் சில அகத்திணையாளர்களை நோக்கின் இந்நினைப்பு தவறெனத் தெளியலாகும். முல்லைப் பாட்டிற்கும் நெடுநல் வாடைக்கும் மன்னர் குலத்தினர் தலைமக்களாவர். போர்க்களத்திற்குச் சென்ற மன்னர்களை நினைந்து அவர் தம் மனைவிமார் பிரிவுத் துயரால் வருந்துவர். 'நீளுயர் கூடல் நகரில் நெடுங் கொடி எழ, மீளி வேல் தானையர் புகுதந்தார்'[3] என்று மன்னனது வரவைப் பாலைக் கலி பாங்குற மொழிகின்றது. முல்லை ஐங்குறுநூற்றில் படைத் தலைவர்களையும் போர் மறவர்களையும் காதலர்களாகப் பேயனார் அமைத்துக் காட்டுவதைக் காண்கின்றோம்[4] பெருஞ்சின வேந்தன் போர்த் தொழில் தணிந்தாலன்றோ தன் துணைவி விருந்து பெறுவாள் என்று ஒரு பாசறை மறவன் வருந்துவதைக் காட்டுகின்றார்.[5] அரச கருமத் தொழிலாளி ஒருவன் ஒரு குறுந்தொகைப் பாடலின் தலைமகனாக அமைகின்றான்.[6] குறவர் குறத்தியர், இடையர்

3. கலி-31
4 ஐங்குறு-427, 428, 429, 432, 442, 446, 448, 451, 459, 460, 461, 482, 500.
5. ஷை-442.
6. குறுந்-242

இடைச்சியர், உழவர் உழத்தியர், அளவர் அளத்தியர் என்ற நானிலத்தைச் சார்ந்த மக்கள் எண்ணிறந்த அகப்பாடல்கட்குத் தலைமக்களாக அமைகின்றனர். ஆயநம்பி ஒருவன் மோர் விலையாட்டியுடன் காதல் பகர்வதையும்[7], அகநானூற்றுப் பாடல்களில் உப்பு விளையாட்டி களவுக் காதலியாக அமைவதையும்,[8] பல கலிப்பாடல்களில்[9] குற்றேவல் புரியும் சிறுதொழில் மைந்தரும் மகளிரும் காதல் மாந்தர்களாக இலங்குவதையும் காண்கின்றோம்.

அகத்திணை இன்பத்திற்குப் பொருள்வளம் அடிப்படையன்று என்பதையும், பாவின்பம் சிறப்பதற்கு ஒன்றிய மனவளமே அடிப்படையாகும் என்பதையும் அகப்பாடல்கள் உணர்த்துகின்றன. 'ஓரான் வல்கிச் சீரில் வாழ்க்கை'[10] என்ற குறுந்தொகைப் பாடலிலும், ''ஓரா யாத்த ஒரு நூண் முன்றில்''[11] என்ற நெடுந்தொகைப் பாடலிலும் ஒரு பசுவை வைத்துக் கொண்டு வாழ்க்கை நடத்தும் மக்கள் தலைமக்களாகத் திகழ்கின்றனர். செல்வச் செல்வி ஒருத்தி ஏழையாடவன் ஒருவனைக் காதலித்த பெற்றியை நற்றிணைப் பாடலொன்று[12] காட்டுகின்றது. தலைவன் ஒருவனது வறுமைப் போராட்டத்தைக் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் புனைந்து காட்டுவதை ஓர் அகப்பாடலில் காண்கின்றோம்.[13]

> ஒன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினும்
> ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை.[14]

என்பது ஏழைத்தலைவியின் துணிபாகும். எனவே, அகத்திணை அமைப்பு தொழில், பொருள். பதவி முதலியவற்றின் அடிப்படையில் அமையவில்லை என்று துணிய மேலை விளக்கங்கள் துணை புரிகின்றன. உள்ளங் கலந்த பாலாரெல்லாம் அகத்திணைக்குச் சால உரிமையுடையவர்; உள்ளப் புணர்ச்சியே காதலுக்கு வேண்டும் இனிய அக வரம்பாகும். இக்கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு அகத்திணை மாந்தர்களை நோக்குதல்வேண்டும்.

7. கலி-108
8. அகம்-140, 390
9. கலி-62, 94, 110, 112
10. குறுந்-295
11. அகம்-369
12. நற்-110
13. அகம்-123
14. கலி-18

### (i) தலைமகன்

முதலாவதாக, அகத்திணையில் வரும் தலைமகனைப்பற்றி அறிவோம். இவன் கல்வி, அறிவு, ஒழுக்கங்களால் சிறந்தவன்; வழிவழியே வரும் உயர்குடியில் பிறந்தவன்; பெருஞ் செல்வத்தினன் இவனும் தலைமகளும் ஓருயிரும் ஈருடலும் போன்று நட்பினையுடையவர்கள். இவர்கள் தொடர்பு பிறவிதோறும் தொடர்ந்து வருவதாகக் கூறப்பெறும். இதனைத் தொல்காப்பியர்,

ஒன்றே வேறே என்று இரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்[15]

[பால்-ஊழ்; பாலது ஆணை-ஊழின் நியதி]

என்று சிறப்பிப்பர். தலைவனும் தலைவியும் நெஞ்சமும் உயிரும் ஒன்றெனக் கொண்டு, இருவரும் ஒருங்கிருத்தலைக் காட்டும் அகநானூற்றுச் சொல்லோவியம் இது:

உயிர்கலந் தொன்றிய தொன்றுபடு நட்பிற்
செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர்[16]

[ஒன்றிய-பொருந்திய; தொன்றுபடு-பல பிறவிகளிலும் தொடர்ந்து வரும்; செயிர்தீர்-குற்றமற்ற; செறிந்தோர்-இணைந்தவர்.]

இந்த அழகிய சொற்படத்தின் முன்னர் உலகத்து ஒளிப்படங்கள் காட்சியாலும் பொருளுணர்த்தலாலும் சிறிதும் நிற்க முடியாது என்பது வெளிப்படை.

'மகன்' என்ற சொல் வெறும் ஆண் மகனை மாத்திரம் குறிக்கும் சொல் அன்று. ஓர் ஆணிற்கு நல்லூழின் பெருக்கால் எய்தலாகும் எல்லா உயர்வுகளும் ஒருங்கு மேவிய பெருந்தகையை மட்டிலும் குறிப்பிடும் சிறப்பு வாய்ந்த சொல் அது. ஒரு பெருந்தகைச் செல்வனைக் கண்டு, வியந்து, காதலித்த ஒரு தலைவி ஒப்புயர்வற்ற அவன் பெருமையினைத் தன் தோழிக்குக் கூறுபவள்,

**'மகனே தோழி'** [17]

என்கிறாள். இங்ஙனமே, இப்பெருமைகளை இழந்து நிற்பான் என்று ஒருவனைச் சுட்டுவதற்கு 'மகன் அலன்' என்பதே போதிய சான்றாகும். பரத்தையின் வீடே கதி எனக் கிடக்கும் ஆண்மகன் ஒரு

15. களவியல்-2.
16. அகம்-205.
17. ஷை-48.

வனைக் குறிப்பிடுமிடத்து பரத்தையின் கூற்றாக (தோழியின் கூற்றாகவும்?) நற்றிணைப் புலவர்,

> நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்
> தண்கமழ் புதுமலர் ஊதும்
> வண்டென மொழிப மகன் என்னாரே[18]

எனக் குறிப்பிடுவதைக் காண்க. பாலைக் கலியினும் "தலைவியொருத்தி பொருள்வயிற் பிரியும் தலைவனை நோக்கி,

> அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
> பகல்முனி வெஞ்சுரம் உள்ளல் அறிந்தேன்
> மகனல்லை மன்ற இனி[19]

என்று கூறுவதைக் காணலாம். ஒரு பெண் மனம் உடைந்த நிலையில்தான் இத்தகைய சுடு சொல்லைக் கையாள்வாள் என்பது அறியத் தக்கது. வள்ளுவப் பெருந்தகையும்'

> பயனில்சொல் பாராட்டு வானை **மகன்எனல்**[20]

என்று கூறி இச் சொல்லை எதிர்மறையில் வைத்து விளக்குவதையும் காணலாம். இத்துணைச் சிறப்பு வாய்ந்த விழுமிய சொல்லுடன் '**தலை**' என்ற அடைமொழியும் சேர்ந்து '**தலை மகன்**' என்ற பெயரால் கூறப்பெறும் அகத்திணைத் தலைவனின் பெருமைகளை எண்ணி ஓர்க. இத்தகைய தலைமகனின் பெருமையைத் தொல்காப்பியமும்,

> பெருமையும் உரனும் ஆடூஉ மேன[21]

என்று சிறப்பித்துப் பேசுகின்றது. 'பெருமை' என்பதற்கு அறிவு ஆற்றல் புகழ் கொடை ஆராய்ச்சி பழிபாவங்கட்கு அஞ்சுதல்ஆகிய பெருமைக்குரிய குணங்கள் உரன் என்றும், என்பதற்குக் கடைப்பிடியும் நிறையும் கலங்காது துணிதலும் முதலிய வலிமையின் பகுதி என்றும் நச்சினார்க் கினியர் கூறுவர். இடையூறு வந்த காலத்தில் நெஞ்சமிழந்து வெகுள்தலும் இன்பம் வந்துற்றபோது மகிழ்தலும் போன்ற எளியோரிடம் காணப்பெறும் குணங்களின்றி எப்போதும் ஒரே பெற்றியினனாக இருக்கும் பெருமையினை உடையவன் இவன். இவன் கடமையை மறவாது போற்றுபவன் என்பதைப் பாலைபாடிய பெருங்கடுங்கோ,

---

18. நற்-290.
19. கலி-18 (அடி 4-7)
20. குறள்-196.
21. களவியல்-7

வினையே ஆடவர்க்கு உயிர்[22]

என்று குறிப்பிடுவர். மணம் நிகழாத களவொழுக்கத்தின்பொழுது தலைவியைக் கண்டுமகிழ மழைபொழியும் நடுநிசியில் ஏற்றிழிவுகளும் இடுக்கு நெறிகளும் உடைய அரிய நெறிகளில் ஆங்குள்ள அரவு யானை புலி சிங்கம் யாளி முதலை போன்றவற்றிற்கு அஞ்சாது செல்வதை அகத்திணைப் பாடல்களில் காணலாம். அங்ஙனம் சென்றக்கால் தலைவியைக் காணப்பெறாது ஒழியினும் அவளைச் சிறிதும் வெறுக்காது அவள்தம் அருமைப்பாடுகளை நினையாது அவளுக்கும் தனக்கும் வருத்தம் விளைவிக்க எண்ணிய அக்களவொழுக்கத்தையேவெறுத்து உள்ளம் அமையப்பெறுவான். தலைவனுடைய பெருமையும் உரனும் சங்க நூல்களில் யாங்கணும் ஒளிரும். இரவுக்குறியை நாடிவரும் தலைவனைக் குறுந்தொகைப் புலவர்,

ஒலிவெள் அருவி ஓங்குமலை நாடன்
சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித்
தொன்முரண் சோரும் துன்னரும் சாரல்
நடுநாள் வருதலும் வரூஉம்[23]

[வயப்புலி-வலியையுடைய புலி; முரண்-வலி; துன் அரும்-மக்கள் அடைதற்கரிய; நடுநாள்-நள்ளிரவு; வரூஉம்-வருதலைச் செய்வான்]

என்று பாடலில் குறிப்பிடுதல் காண்க. பன்னாள் முயன்றும் தலைவியைக் காணப்பெறாத அகநானூற்றுத் தலைவன்,

பெறலருங் குரையள் என்னாய் வைகலும்
இன்னா அடுஞ்சுரம் நீந்தி நீயே
என்னை இன்னற் படுத்தினை[24],

[பெறல்-பெறுதற்கு; அருங்குரையள்-அரியள்; என்னாய்-எண்ணாயாகி; நீந்தி-கடந்து; இன்னல்-துன்பம்]

என்று தன் நெஞ்சினை நோக்கிக் கூறுவான். மற்றும் அல்லகுறிப்பட்ட தலைவன் ஒருவன் அந்த இடையூறுகளைக் கண்டு நெஞ்சழியாது,

முயங்கல் இயையா தாயினும் என்றும்
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

22. குறுந். 135
23. ஷை. 88
24. அகம்-212 (அடி-10-13).

தவாஅ லியரோ நட்பே அவள்வயின்
அறாஅ லியரோ தூதே ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ...
முழங்கிரு முந்நீர்த் திறையினும் பலவே[25]

[முயங்கல்-தழுவுதல்; என்றும்-எஞ்ஞான்றும்; தவாஅலியர்-கெடாது நிலை பெறுவதாக; அவள் வயின்-அவளிடத்து; அறாஅலியர்-ஒழியாது செல்வதாக]

என்று கூறி விடாது முயன்று வெற்றியுற எண்ணுவதைக் காண்கின்றோம். இத்தகையவனின் முயற்சியை,

நன்றல் காலையும் நட்பிற் கோடார்
சென்று வழிபடூஉம் திரியில் சூழ்ச்சி[26]

என்று அகநானூறு போற்றுவதையும் காண்கின்றோம்.

உயர் குடிப்பிறப்பினனாகிய தலைவன் கடமையின்பொருட்டன்றித் தம் உற்றாரைப் பிரிந்துறைய நினையான்; அன்புடைய நெஞ்சினனாதலின் இன்சொற்களையே கூறும் இயல்பினன் இத்தகைய அகநானூற்றுத் தலைவன்,

குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியலன் அன்பினன்[27]

[குடி-உயர்குடிப் பிறப்பு; நா கெடு-நாவினுல் கெட்டவற்றை]

என்று புகழப்பெறுதலைக் காணலாம். தலைவனின் இயல்புகளைத் தலைவிக்குத் தோழி கூற்றாகக் கபிலர் கூறுவதைக் காண்க.

... ... ... ... ... ... ... ... ... உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்
வல்லாரை வழிபட்(டு) ஒன்றறிந் தான்போல்
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையும் உடையன்[28]

[புரப்பான்-காப்பான்; மதுகை-வலிமை; வல்லார்-மெய்ப்பொருள் கூறுவதில் வல்லவர்கள்; நல்லார்-நன்மக்கள்; புன்கண்-வறுமை; தணிக்க-போக்க; வண்மை-கொடை]

---

25. ஷை-338.
26. ஷை-113.
27. ஷை-352
28. குறிஞ்சிக்கலி-11.

இதில் ''உலகத்தைப் பாதுகாப்பவன் போன்ற வலிமையை யுடையவன்; அறிஞர்வாய்க் கேட்டு மெய்ப்பொருளை அறிந்தவன் போல் நன்மக்களைக் கண்டால் தோன்றும் மன அடக்கம் உடையவன்; வறியோரின் நல்குரவினைக் கொடையால் போக்கும் வலியன்'' என்று கூறுதலைக் காண்க. மணம் புணர்ந்த பின் தலைவி தலைவனைக் கணவன் என்ற முறையிலன்றித் தன்னைப் பெற்றவர்கள் நிலையில் வைத்துப் போற்றுவதையும் காணலாம்.

........................ அவர் நமக்(கு)
அன்னையும் அத்தனும் அல்லரோ? தோழி!''[29]

[அத்தன்-தந்தை]

என்று குறுந்தொகைப் புலவரின் கூற்று இதனை வலியுறுத்தும். எனவே, தலைவியின் நலனும் மகிழ்வும் தலைவனைப் பொறுத்தே உள்ளன என்பது அறியப்பெறும்.

பண்டைக் காலத்தில் தமிழ் மக்கள் தம் முன்னோர் திரட்டிய பொருளைக் கொண்டு வாழும் இயல்பினர் அல்லர். முன்னோரால் ஈட்டிவைத்த பொருள்கொண்டு இல்லறம் நடத்துதல் முறையன்று என்பது பண்டையோர் கொள்கை[30] இதனைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ,

உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினினும் இளிவுஎனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர்[31]... ..................

[உள்ளது-முன்னோர் தேடிய பொருள்; சிதைப்போர்-செல வழிப் போர்; உளர்-செல்வர்; இல்லோர்-தாமாக ஈட்டிய பொருள் இல்லாதார்; இரவு-யாசித்தல்; சொல்லிய வன்மை-சொன்ன ஆண்மைத் தன்மை]

என்று கூறுவர். பொருள் வயிற் பிரிந்த தலைமகனைப்பற்றித் தலைவி தோழியிடம் கூறுவதாக அமைந்தது இப்பாடல். இந்தக் குறிக்கோளைக் கொண்டே பண்டையில் ஆடவர் பொருளீட்டப் பிரிவர். தலைமகன் எத்தகைய காதல் கொண்டவனாயினும் தவறான வழியில் அதனைத் துய்ப்பதனை விரும்பான்.

29. குறுந் - 93.
30. இறையனார் களவியல்—35இன் உரை; திருக்கோவை—செய். 332 இன் உரை.
31. குறுந்-283.

கழியக் காதல ராயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்[32]

என்று அகநானூற்றுப் புலவர் குறிப்பிடுதலால் இது தெளியப் படும்.

அகப்பொருள் நூல்களில் தலைவன் பதினாராட்டைப் பிராயத்தானானாகக் கூறப்பெறுவன். இறையனார் களவியலுரையாசிரியர் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பவற்றைத் தலைமகனது குணங்களாகக் கூறுவர். அறிவு என்பது, எப் பொருளாயினும் அப் பொருட்கண் நின்று அம் மெய்ம்மையை அறிவது. நிறை என்பது, காப்பன காத்துக் கடிவன கடிந் தொழுகும் ஒழுக்கம். ஓர்ப்பு என்பது, ஒருபொருளை ஆராய்ந்து உணர்தல் கடைப்பிடி என்பது. கொண்ட பொருள் மறவாமை[33]. இங்ஙனம் பல்வேறு ஆண்களின் நல்ல கருத்துகளையுடைய உள்ளோட்டங்களை வெளிப்படுத்தும் குறிக்கோள் ஆடவனாக அகத்திணைப் புலவர்களால் படைக்கப் பெற்றவன் அகத்திணைத் தலைவன் என்பதனைத் தெளிவாக உணர்க.

## (ii) தலைமகள்

அகத்திணை மாந்தர்களுள் குறையொன்றும் இல்லாத பெற்றியையுடையவள் இவளே. அக உலகில், குடும்பத்தில், தலைவியே இறைமை உடையவள்; ஆட்சி புரியும் வேந்தும் ஆவாள். 'மனைவி' 'இல்லாள்' என்னும் வீட்டுச் சொற்கள் இவளுக்கே உரியவை என்பதும், இவற்றிற்கு நிகரான ஆண்பாற் கிளவிகள் இல்லாமையும் எண்ணுதற்குரியவை. புறத்தொழுக்கம் கண்ட தலைவனை இல்லில் நுழையற்க என்று இடித்துத் திருத்தும் சொல்லுரிமையும் உடைய பெருமகள் இவள். இதனை "அஞ்ச வந்த உரிமை"[34] என்று சிறப்பிப்பர் தொல்காப்பியர். வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்ற அகத்துறைகள் யாவும் கற்புடைய தலைவியின் உரிமையில் பிறந்தவை. இவளுடைய

32. அகம்-112.
33. இறை. களா. 2 இன் உரை.
34. கற்பியல் –5 (இளம்.)

பெருமையையும் உரிமையையும் குறித்துப் பல இடங்களில் பரக்கக் கூறும் தொல்காப்பியர் ஓரிடத்தில்,

கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும்''[35]

என்பவைகளைத் தலைவியின் குணங்களாகக் குறிப்பிடுவர். கற்பு என்பது, கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கம். காமம் என்பது, அன்பு. நற்பால் ஒழுக்கம் என்பது, தன் குலத்திற்கு ஏற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கம். மெல் இயற் பொறை என்பது, மெல் என்ற நெஞ்சினராய்ப் பொறுக்கும் பொறை. நிறை என்பது, மறைக்கக் கூடிய செயல்களைப் பிறர் அறியாதவாறு மறைக்கக் கூடிய நெஞ்சு. வல்லிதின் விருந்து புறந்தருதல் என்பது, வறுமையையோ செல்வத்தையோ கருதாது இயன்றவரை விருந்தினரைப் பாது காத்து அவர்களை மனம் மகிழ்வித்தல், சுற்றம் ஓம்பல் என்பது, தொடர்புள்ள மக்களைப் பாதுகாத்து, அவர்கள் உண்டபின் தான் உண்டல். அகப்பொருள் நூல்களில் தலைவி பன்னீராட்டைப் பிராயத்தாளாகக் குறிக்கப்பெறுவாள். நாண், மடம், அச்சம், பயிர்ப்புஎன்பவற்றை இவளது குணங்களாகக் காட்டுவர் இறையனார் களவியலுரையாசிரியர்.[36] நாண் என்பது பெண்டிர்க்கு இயல்பாக உள்ளதொரு தன்மை. மடம் என்பது, கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. அச்சம் என்பது, பெண்மையில் தான் காரணப்படாததொரு பொருள் கண்டவிடத்து அஞ்சுவது. பயிர்ப்பு என்பது, பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை. இத்தகைய சிறப்புகளையுடைய தலைவியாகப் பொலியக் கூடிய பெண் பிறவியை மலைநாட்டுத் தலைவன் ஒருவன் இறையை வேண்டிப் பெறுகின்றான். இதனை,

குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற என்வளைக் குறுமகள்[37]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடற் பகுதியால் அறிகின்றோம். இவளுடைய தனிப் பெருமையை உணர்த்துவதற்காகவே அகப்

35. கற்பியல்-11.
36. இறை. கள. 2 இன் உரை.
37. ஐங்குறு—257.

பொருள் நுதலும் நூல்கள் இவளுக்குத் தங்கை தமக்கை இருப்பதாகவே காட்டவில்லை போலும்.

இவள் சிறுமியாக இருந்த பொழுது மிகச் செல்லமாக வளர்க்கப் பெற்றவள் என்பதைப் பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பாலை உண்ண மறுக்கும் சிறுவிளையாட்டியாகவும்[38]

செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்
ஆடுபந்து உருட்டுநள் போல ஓடி
அஞ்சில் ஓதி இவளுறும்
பஞ்சி மெல்லடி நடைபயிற் றும்மே[39]

[இடன்உடை வரைப்பு - அகன்ற இடம்; அம்சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தலுடையவள்]

என்று பஞ்சு போன்ற மெல்லடியினை உடையாளாகவும் நற்றிணை குறிப்பிடுவதால் அறியலாம். இதனை அகநானூற்றுப் பாடல் ஒன்று மேலும் தெளிவுறுத்துகின்றது. இங்குச் சிறுமியாகிய தலைவி அதிக நேரம் விளையாடுவதைத் தாய் பொறுக்க முடியாத நிலையிலிருப்பதைக் காண்கின்றோம். விளையாட்டின் நடுவிலேயே ஒரு கிண்ணத்தில் பால் கொணர்ந்து அவளை அருந்தச் செய்கின்றாள். அவளோ ஒரு சிறிது அருந்தியதும் ஓடுகின்றாள். ''எனக்காகச் சிறிது குடித்தாய்; உங்கள் அப்பாவிற்காகச் சிறிது குடி'' என்று கெஞ்சித் தன் செல்வக்குழந்தையை அழைக்கின்றாள்.

சீர்கெழு வியநகர்ச் சிலம்புநக இயலி
ஓரை ஆயமொடு பந்துசிறி தெறியினும்
வாரா யோவென்று ஏத்திப் பேர்இலைப்
பகன்றை வான்மலர் பனிநிறைந் ததுபோல்
பால்பெய் வள்ளம் சால்கை பற்றி
என்பாடு உண்டனை யாயின் ஒருகால்
நுந்தை பாடும் உண்என்று ஊட்டிப்
பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்துயான்
நலம்புனைந் தெடுத்தஎன் பொலந்தொடிக் குறுமகள்
அறனி லாளனோடு இறந்தனள்[40]

[வியன்நகர் - பெரிய மனை; சிலம்பு நக இயலி - சிலம்பு ஒலித்து விளங்க; ஓரை ஆயம் - விளையாடும் தோழியர்

38. நற். 110
39. ஷை. 324
40. அகம். 219

கூட்டம்; பகன்றை - ஒரு வித பூ; பாடு - கூறு, பங்கு; பிறந்த நற்கொண்டும் - பிறந்தது முதல்; புனைந்து எடுத்த - நலம் பாராட்டி வளர்த்த; அறனிலாளன் - இங்கு தலைவன்; இறந்தனள் - கடந்து சென்றாள்]

இதில் செல்லமாக வளர்த்த தன்மகளைத் தலைவன் கூட்டிச் சென்று விட்டானே என்று தாய் வருந்துவதைக் காண்க.

தலைவி குமரிப் பருவம் எய்தினவுடன் தோழியின் நட்பைப் பெறுவதை நாம் காண்கின்றோம். தலைவியும் வீட்டின் புறத்தே நடமாடுவதையும் அறிகின்றோம். பூப்பறிக்கவும் புனலாடவும் தோழியுடன் தலைவி அடிக்கடி வெளியே செல்லுகின்றாள். தாய் இங்ஙனம் போதலால் ஏதம் விளையும் என எச்சரிக்கின்றாள்; அணங்கினால் தீண்டப்பெறுதல் கூடும் எனவும் குறிப்பிடுகின்றாள். வயது வந்தவள் இங்ஙனம் வெளிச்செல்லுதல் கூடாது எனவும் கூறுகின்றாள்.

முலைமுகஞ் செய்தன முள்ளெயிறு இலங்கின
தலைமுடி சான்ற தண்தழை யுடைய
அலமரல் ஆயமொ டியாங்கணும் படாஅல்
மூப்புடை முதுபதி தாக்கணங்கு உடைய
காப்பும் பூண்டிசின் கடையும் போகலை
பேதை அல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத்து ஒதுங்கினை புறத்தென்[14]

[முகம்செய்தல் - அரும்புதல்; முள் எயிறு - விழுந்தெழுந்த கூரிய பற்கள்; தலைமுடி - கூந்தல்; சான்ற - அமைந்தன; அலமரல் - சுழன்று திரிதல்; படாஅல் - போகற்க; அணங்கு - தெய்வம்; காப்பு - காவல்; பூண்டிசின் - எய்தினை; பேதை - 5-8 வயதுடையவள்; பெதும்பை - 9-10 வயதுடையவள்]

என்ற தாயின் கூற்றால் இதனை அறியலாம்.

**களவு நெறியில் :** இனி, களவு நெறியில் தலைமகளது குண நலன்களைக் காண்போம். ஊழ் வலியால் கூடிய இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகு தலைவி தலைவனையே நினைந்த வண்ணம் இருக்கின்றாள். தலைவனது பிரிவு நீட்டிப்பின் தன் உயிர் நீங்கும் என்கின்றாள் குறுந்தொகைத் தலைவியொருத்தி.

---

41. ஷை-7

யாமெங் காதலர்க் காணே மாயிற்
செறிதுனி பெருகிய நெஞ்சமோடு பெருநீர்க்
கல்பொடு சிறுநுரை போல்
மெல்ல மெல்ல இல்லா குதுமே[42]

[செறிதுனி - செறிந்த துயர்; பெரு நீர் - மிக்க வெள்ளம்; கல்பொரு - பாறையின்மீது மோதும்]

என்ற பாடற்பகுதியில் தலைவியின் உள்ளக் குறிப்பினை அறியலாம். தலைவனுடன் அளவளாவாவிடினும் அவனைக் காணும் மாத்திரத்தில் தலைவிக்கு இன்பம் பிறக்கும்.

பெருந்தேன் கண்ட இருக்கை முடவன்
உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
நல்கார் நயவா ராயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக் கினிதே[43]

[தேன் - தேனடை; முடவன் - எழுந்து நிற்க முடியாதவன்; உள் கை - உள்ளங்கை; சிறுகுடை - சிறிய குவிந்த பாத்திரம்; கோலி - குவித்து; சுட்டுபு - சுட்டி; நக்கியாங்கு உள்ளங்கையை நக்கி இன்புறுவதைப் போல்; பல்கால் - பலமுறை]

என்ற பாடற் பகுதியால் இதனை உணரலாம். தலைவனைப் பிரிதலால் தலைவியின் அழகைப் பசலைநோய் உண்ணும் என்பதாகப் பல பாடல்கள் அறிவிக்கின்றன.

ஊருண் கேணி உண்டுறைத் தொக்க
பாசி யற்றே பசலை; காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே[44]

[உண்துறை - உண்ணப்படும் நீரையுடைய கிணற்றின் துறை; பாசி - நீர்ப் பாசி; தொடுவுழி - முயங்குந்தோறும்; விடுவுழி - நீங்குந்தோறும்; பரத்தல் - பரவுதல்]

கலித்தொகைத் தலைவியின் நிலை இது:

---

42. குறுந். 290
43. ஷை - 60
44. ஷை - 399

விடுவழி விடுவழிச் சென்றாங்கவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற் பசப்பே[45]

திருவள்ளுவர் படைத்த தலைவி தன் நிலையை,

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு[46]

[புல்லி - தழுவி; புடைபெயர்தல் - விலகுதல்]

என்று கூறுவதும் இவ்விடத்தில் நினைக்கத் தக்கது. இவற்றால் தலைவன்பால் கொண்ட தலைவியின் அன்பு பெறப்படும். பெருந் தேன் இழைக்கும் நாடனொடு நட்பு,

நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே''[47]

[ஆர் அளவு - அருமை அளவு - அளத்தற்கரிய அளவு]

என்று தலைவியொருத்தி கூறுவதையும் காண்க. காதலர்தம் மனவொற்றுமையே அகத்திணையின் உயிர்ப் பண்பு என்பதனை நாம் அறிவோம். இவ்வொற்றுமையே 'உள்ளப்புணர்ச்சி' என்று குறியீடு செய்யப்பெற்றது என்பதும் நமக்குத் தெரியும். புறநடை இல்லாத இறைமை சான்ற இவ்வுணர்ச்சி அகத்திணை ஒழுக்கத்தில் ஊடுருவிச் செல்வதை யாங்கனும் காணலாம். தலைவியொருத்தி தலைவன்பால் தான் கொண்டுள்ள அன்பினைப் ''பிரிவரிதாகிய தண்டாக் காமம்''[48] என்று புலப்படுத்துகின்றாள். இன்னொருத்தி தலைவன் பிரியின் தன் உயிர் போம் என்கின்றாள். இதனை,

''விரிநீர்ச் சேர்ப்பன் நீப்பின் ஒருநம்
இன்னுயிர் அல்லது பிறிதொன்(று)
எவனோ தோழி நாம்இழப் பதுவே.[49]

[நீப்பின் - பிரிந்தால்; எவன் - யாது]

என்ற பாடற் பகுதியினால் அறியலாம்.

இத்தகைய இலக்கியத் தலைவியரின் குணங்களையெல்லாம் ஆய்ந்து கண்ட தொல்காப்பியர்,

45. நெய்தல் கலி - 13
46. குறள் - 1187
47. குறுந். 3
48. ஷை. 57
49. ஷை. 334

செறிவும் நிறையும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான[50]

என்ற நூற்பாவில் புலப்படுத்துவர். ஈண்டுச் செறிவு என்பது, அடக்கம்; நிறைவு என்பது, அமைதி; செம்மை என்பது, மனங் கோடாமை; செப்புஎன்பது, சொல்லுதல்; அறிவு என்பது, நன்மை பயப்பனவும் தீமை பயப்பனவும் அறிதல்; அருமை என்பது,உள்ளக் கருத்தறிதலருமை. இவை இளம்பூரணர் தரும் விளக்கமாகும்.

களவு நெறியில் தலைவிக்கு நேரிடும் இடர்ப்பாடுகள் பலப்பல. தினை அறுவடைக்குப் பின்னர் தினைப்புனங் காவலுக்குச் செல்லாளாதலால் தலைவனைச் சந்திக்கும் வாய்ப்பினை இழக்கின்றாள். இல்லத்திலோ அவள் புறத்தே தலை நீட்டாத படி இற்செறிப்பு.

யாயே கண்ணினுங் கடுங்கா தலளே
எந்தையும் நிலனுறப் பொறாஅன் சீறடிசிவப்ப
எவனில குறுமகள் இயங்குதி என்னும்[51]

என்ற அகநானூற்றுப் பாடற்பகுதியால் இதனை அறியலாம். இந் நிலையில் அவள்தன் திருமண ஏற்பாடு விரைவில் செயற்படல் வேண்டும் என்பதனைத் தோழிக் குணர்த்துவாள்.

மனைபட்டுக் கலங்சிச் சிதைந்தவழித் தோழிக்கு
நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்[52]

என்று இதற்குத் தொல்காப்பியர் விதி செய்து காட்டுவர். தோழி தலைவனுடன் சந்திப்பை ஏற்படுத்தப் 'பகற்குறியும்' 'இரவுக் குறியும்' அமைப்பாள். அடிக்கடி இவற்றை ஏற்படுத்தினால் தலைவன் களவு நெறியிலேயே ஆழ்ந்து விடுவான் என்று கருதும் இவள் தலைவனைப் பல்வேறு விதமாக அலைக்கழிப்பாள். இதனை,

'கங்குல் வருதலும் உரியை.'[54]

'பகல்நீ வரினும் புணர்குவை'[55]

என்பன போன்ற பாடற்பகுதிகளால் தெளியலாம். தோழியின் நோக்கம் விரைவில் திருமணத்தை முற்றுவிக்க வேண்டும் என்பதே தோழியின் கருத்தினைத் தொல்காப்பியர்,

50. பொருளியல் - 14
51. அகம் - 12
52. களவியல் - 21
53. அகம் - 2
54. ௸ - 18

இரவினும் பகலினும் நீவா என்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள என்ப.[55]

என்று விதி செய்து காட்டுவர்.

இற்செறிப்பினால் தலைவிக்கு ஏற்படும் மன நோயினால் உடலிலும் மாற்றம் காணப்பெறும். தாயர் இது தெய்வத்தினால் ஏற்பட்டதென்று சவன்று கட்டுவிச்சியின் துணைக்கொண்டு குறிபார்த்தலுக்கும் வேலனைக்கொண்டு வெறியாட்டயர்தலுக்கும் வழியமைப்பர். இவ்வமயம் தோழி அறத்தொடு நின்று உண்மை நிலையை உணர்த்துவள். இதன் விரிவினைக் குறிஞ்சிப் பாட்டில் கண்டு மகிழலாம். பெற்றோர் அவள் காதலித்த தலைவனுக்கு ஒருப்படாத நிலையில் 'உடன் போக்கு' நிகழும். வேறு வழி இல்லாத நிலையில் இஃது இறுதி வழியாக மேற்கொள்ளப்பெறும். இவ்வழியை மேற்கொள்ளுங்கால் உயிரினும் மேலாகக் கருதப்பெறும் தலைவியின் நாண் அழியச் செய்யும். ஆயின் அவள் நாணைவிட கற்பு உயர்ந்ததன்றோ?

உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந் தன்று[56]

என்பது தொல்காப்பிய விதி. உடன் போக்கினை மேற்கொள்ள இருக்கும் குறுந்தொகைத் தலைவி யொருத்தியின் கூற்று ஈண்டு கருதத்தக்கது. ''தோழியே, நாணம் மிக நெடுங்காலம் நம்முடன். இருந்து வருந்தியது. இனிமேல் வெள்ளிய பூவையுடைய கரும்பின் உயர்ந்த மணலையுடைய சிறிய கரை நீர் நெருங்கி அடித்தலால் அழிந்து வீழ்ந்தாற் போல, அது (நாண்) தடுக்கும் வரையில் தடுத்து, காமம் மேன்மேலும் நெருக்குதலால், என்பால் நில்லாது போய்விடும். அஃது இரங்கத்தக்கது''[57] இஃது நொதுமலர் வரைவு நோக்கித் தலைவி தோழியிடம் கூறியதாகும். ஐங்குறுநூற்றுத் தலைவியொருத்தி இடைச் சுரத்தில் கண்டோரை நோக்கித் தன் போக்கினைத் தன் தாய்க்கு உரைக்குமாறு வேண்டுகின்றாள்.

55. பொருளியல் - 15
56. களவியல்-23
57. குறுந்-149

வேறுபல் அருஞ்சுரம் இறந்தனள் இவள்எனச்
கூறுமின் வாழியோ ஆறுசென் மாக்கள்
நற்றோள் நயந்து பாராட்டி
எற்கெடுத் திருந்த அறனில் யாய்க்கே[58]

[இறந்தனள்-கடந்தனள்; ஆறு செல் மாக்கள்-வழிப்போக்கர்கள்; கெடுத்து-இழந்து.]

என்ற பாடற் பகுதியால் இதனை அறியலாம். இத்தகைய நிகழ்ச்சிகளைச் சித்திரித்துக் காட்டும் பல பாடல்களை இந் நூலில் கண்டு மகிழலாம்.[59]

தலைவன் மாட்டுத் தான் கொண்டுள்ள பேரன்பால் தலைவி உடன் போக்கில் பல்வேறு இடர்ப்பாடுகளையும் தாங்கும் நெஞ்சுறுதியுடையவளாக இருப்பதனைக் காண்கின்றோம். உடன் போய் மீண்ட தலைமகளைத் தோழி 'நின் தலைவன் ஊர் நன்னீர் இல்லா ஊர் என்பரே, அந்நீரை எவ்வாறு பருகினை?' என்று வினவ, அதற்கு அவள் கூறும் விடையிலிருந்து இதனை அறிகின்றோம்.

அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினும் இனிய அவர்காட்டு
உவலை கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே[60]

[படப்பை-வீட்டுத் தோட்டம்; மயங்குதல்-கலத்தல்; உவலை-தழை (சருகு); கூவல்-கிணறு; கலிழி-கலங்கல்]

தன் தாதையில்லத்துக்கொண்ட தேன் மயங்கு பாலினும், தன் கணவன் நாட்டுக் கலிழிநீரே இனிது எனக் கருதின தலைவியின் காதல் மாண்பும் அறமாண்பும் இதில் ஒருங்கே தோன்றுவதைக் கண்டு மகிழலாம். பொரியுடன் கலந்த பாலையும் மிகை எனக் கருதும் குறுந்தொகைத் தலைவி, தன் தலைவனுடன் செல்லுங்கால் நீர்வளமற்ற சுனையினருகில் மிக்க வெப்பத்தையுடைய கலங்கல் நீரைத் தவ்வென்ற ஓசையுடன் குடிக்கும் காட்சியையும் கண்டு மகிழ்கின்றோம்.[61]

---

58. ஐங்குறு-385
59. ஷை-38, 39, 40 ஆம் பத்துகள்
60. ஷை-203
61. குறுந். 356

**கற்பு நெறியில் :** மணம் புணர்ந்து கணவனுடன் வாழுங் காலத்திலும் தலைவியின் அரிய பண்புகளை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. கற்பு நெறியினைத் தொல்காப்பியர்,

மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்
இவைமுத லாகிய இயனெறி திரியாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பரிவொடு புண ் ந்தது கற்பெனப் படுமே.[62]

[மலிவு-மகிழ்ச்சி]

என்று காட்டுவர். நாளாக நாளாகத் தலைவி தலைவன்பால் வைத்த அன்பு வலிதாகின்றது. கணவன் கருத்துப்படி நடந்து' தன் அன்பையும் பண்பினையும் வெளிப்படுத்துகின்றாள்; குறிக் கோள் நெறியில் ஒழுகுகின்றாள். இவளுடைய இனிய மொழிகள் கணவனின் இதயத்தையும் உருக்குகின்றன.

அன்பும் மடனும் சாயலும் இயல்பும்
என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கையொ டோராங்கு முயங்கி
இன்றே இவணம் ஆகி[63]

[முயங்கி-தழுவி; இவணம் இவ்விடத்தேம்]

என்ற அகப்பாடற் பகுதியால் இதனை அறியலாம். இவள் வீட்டு வேலைகளை உவப்புடன் மேற்கொள்ளுகின்றாள் என்பதை,

'மனைமுதல் வினையொடும் உவப்ப'[64]

[மனைமுதல்-தலைவி; வினை-வீட்டு வேலை]

என்ற அகப்பாட்டடி எடுத்தியம்புகின்றது. இயல்பாகவுடைய அட்டில் தொழில் முதலியவை போக, அறவோர்க்களித்தல், அந்தணரோம்பல், விருந்தெதிர் கோடல் முதலியவற்றையும் மனமுவந்து செய்வதில் இவள் வல்லவளாகத் திகழ்கின்றாள்.

---

62. தொல். செய். 179
63. அகம்—225
64. ஷை—51

தலைவியின் இனிய இல்வாழ்க்கையை இவள் கூற்றாலேயே அறிகின்றோம். தலைவனைத் துணைவனாகக் கொண்டது தன் நற்பேறு எனக் கூறுகின்றாள் அகநானூற்றுத் தலைவி ஒருத்தி. திருமணம் நடைபெற்ற சின்னாள் கழித்து தோழி தலைவியின் இல்லத்திற்கு வருகின்றாள். அவளிடம் தான் தலைவனை அடைய அவள் மேற்கொண்ட முயற்சியைப் பாராட்டி நன்றி தெரிவிக்கின்றாள்.

'குடிநன்கு உடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியலன் அன்பினன்' எனநீ
வல்ல கூறி வாய்வதிற் புணர்த்தோய்
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும் இனியனால் எமக்கே.[65]

குடி-உயர்குடிப்பிறப்பு; கூடுநர்-கூடுகின்றவர்கள்; நா-நாவால்; கெடுமொழி-தீச்சொல்; அஞ்சி-அதியமான்; தொல்இசை-பழையபுகழ்; நிறீஇய-நிலைபெறச்செய்த; நிறுத்த-வரையறை செய்த]

என்ற பாடற்பகுதியால் தலைவியின் இனிய இல்லற வாழ்க்கையைக் காண்கின்றோம்; அவள் தன் கணவனிடம் கொண்டுள்ள பேரன்பினையும் பார்க்கின்றோம்.

இல்லற வாழ்க்கையில் தலைவி வள்ளுவர் வாய்மொழிக்கு இலக்கியமாகத் திகழ்வதனைக் காண்கின்றோம்.

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.[66]

என்பது வள்ளுவர் வாய்மொழி. ஈண்டு மாண்பு என்பது, நற்குண நற்செய்கைகள். நற்குணங்கள்: துறந்தார்ப் பேணலும், விருந்தயர்தலும், வறியோர் மாட்டு அருளுடைமையும் முதலாயின. நற்செய்கைகள்: வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டில் தொழில் வன்மையும், ஒப்பரவு செய்தலும் முதலாயின. இத்தகைய சீரிய குணங்களைத் தமிழியல் காட்டும்

65. ஷை-352
66. குறள்-51

தலைவியிடம் கண்டு மகிழலாம். இங்கு அட்டில் தொழில் தலைவியின் இன்றியமையாத பண்பாக அமைய வேண்டும் என்று கூறியிருப்பது கவனிக்கத் தக்கது. தலைவியின் அட்டில் தொழிலை ''முளிதயிர் பிசைந்த''[67] என்ற குறுந்தொகைப் பாடல் அழகாகச் சித்திரிக்கின்றது.

இல்லற வாழ்க்கையில் விருந்தோம்பும் பண்பு தலைவிக்கு மிகவும் இன்றியமையாதது.[68] தலைவியிடம் இப்பண்பினை அவளுடைய திருமணத்திற்கு முன்னரே அமைந்து கிடந்தது. தொல்காப்பியரும், தலைவிக்குரிய இப்பண்பினைப் பல இடங்களில் வற்புறுத்தியுள்ளார். எடுத்துக்காட்டாக,

> அருந்தொழில் முடித்த செம்மற் காலை
> விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணும்[69]

என்று கூறுவர். வினைமுற்றி மீளும் தலைவன் விருந்துடன் திரும்பிய காலை தலைவி அவர்கட்கு இனிய வரவேற்பு நல்குவதைக் குறிப்பிடுவது இது. விருந்தோம்புதலும் சுற்றந் தழுவுதலும் தலைவியின் பண்புகளாகும் என்பர் தொல்காப்பியர்.

> விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
> பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்[70]

என்ற அவர் விதி காண்க. இராப்பொழுதா யிருப்பினும் வந்த விருந்தைக் கண்டு மகிழா நிற்கும் தலைவியின் உயர் பண்பினை வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுவதை நற்றிணைப் பாடலொன்றில் காணலாம்.

> அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
> முல்லை சான்ற கற்பின்
> மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே.[71]

என்ற பாடற் பகுதியில் இதனைக் கண்டு மகிழ்க. தலைவனும் தலைவியும் சேர்ந்தே விருந்தோம்புவர். தலைவன் இல்லாக்காலை தலைவிக்கு விருந்தோம்பும் இன்பம் இல்லை. அகநானூற்றுத் தலைவி யொருத்தி இவ்வின்பம் பெறுவதற்கு விரைந்து தேரைக் கடவுமாறு கூறுகின்றான் வினைமுற்றி மீளும் தலைவன்.

---

67. குறுந். 167.
68. இதனைச் 'செவிலி'யைக் கூறும் இடத்தில் காண்க.
69. கற்பியல் -5
70. ஷை-11
71. நற்-142

செல்க தேரே நல்வலம் பெறுந
பெருந்தோள் நுணுகிய நுசுப்பில்
திருந்திழை அரிவை விருந்தெதிர் கொளவே.[72]

என்ற அகப்பாட்டுப் பகுதியால் இதனை அறியலாம்.

இல்வாழ்க்கையின் தலையாய பயன் மக்கட்பேறு என்று வள்ளுவர் கூறியதனை நாம் அறிவோம். மக்கட் பேற்றால் இம்மைப்பயனும் மறுமைப் பயனும் கைகூடும் என்று நூல்கள் நுவல்கின்றன.

இம்மை யுலகத் திசையொடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோரெனப்
பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
வாயே யாகுதல் வாய்த்தனம் தோழி.[73]

[இசை-புகழ்: மறு-குற்றம்; செறுநர்-பகைவர்; செயிர்தீர்—குற்றமற்ற; காட்சி-அழகு: செம்மலோர்- தலைமையை யுடையவர்; வாயே-உண்மையே]

என்று மகப்பேற்றின் பெருமையைப் பேசுகின்றாள் அகநானூற்றுத் தலைவியொருத்தி. தலைவி மைந்தன்மீது கழிபெருங் காதலை யுடையவள் என்பதை,

நெய்யும் குய்யும் ஆடி மையொடு
மாசுபட் டன்றே கலிங்கமும் தோளும்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்
புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே.[74]

[குய்-நறும்புகை; கலிங்கம்-ஆடை; திதலை-சுணங்கு; பிலிற்ற-பெருக; புனிறு-முடைநாற்றம்]

என்ற நற்றிணைப் பாடற் பகுதி புலப்படுத்துகின்றது.

பிள்ளைப் பேற்றால் பெற்றோர் அடையும் பேரின்பம் சொல்லுந்தரமன்று. இந்த நிலையை ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்று அழகாகச் சித்திரிக்கின்றது.

---

72. அகம்-374.
73. ஷை-66
74. நற்-380

புதல்வற் கவைஇயினன் தந்தை மென்மொழிப்
புதல்வன் றாயோ விருவருங் கவையினள்
இனிது மன்றஅவர் கிடக்கை
நனியிரும் பரப்பினிவ் வுலகுடன் உறுமே'[75]

[கவையினன்-அணைத்துக் கொண்டான்; இருவரும்-இரு வரையும்]

என்ற பாடலில் இதனைக் காணலாம். காதலர் தம் மகனுடன் கிடக்கும் இடம் சிறிதேயாயினும் அதனூடே உலகத்துயி ரனைத்தும்அடங்கும் சிறப்புடையது. ஈண்டுஅன்புஎன்னும் கடவுட் பண்பு கால்கொண்டு மனைவி மகன் கணவன் என்னும் தொடர் புடையார்மாட்டு நன்கு படர்ந்து பின்னி அடங்கிக் கிடந்து, பின்னர் அது பின்னும் பரவிப் படருங்கால் தொடர்புடையார் மாட்டு மட்டுமன்றிப் பரந்துபட்டுச் சென்று அனைத்துயிரையும் தன்னகத்தே அடக்கிக் கொள்வதாகிய அருட்பண்பாக மலர்கின் றது. 'அருள் என்னும் அன்பீன் குழவி'[76] என்ற வள்ளுவர் வாக்கும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

கலித்தொகைத் தலைவியொருத்தி தன் அருமந்த மைந்தனு டன் பொழுது போக்குகின்றாள். மாலை நேரத்தில் சிறுவன் சிறுதே உருட்டி விளையாடுகின்றான். அதுபோழ்து அவன் அணிந்துள்ள சதங்கைகள் ஒலியிடுகின்றன. அவள் அவனுக்கு 'அத்தா' என்று தந்தையின் பெயரைச் சொல்லிக் கொடுத்ததைச் சிறுவன் மழலை மொழியால் கூறிச் செல்லும்போது அவள் பேரின்பத்தை அடை கின்றாள். அப்போது தோன்றின அம்புலியைத் தன் மைந்த னுடன் விளையாட வருமாறு அழைக்கின்றாள். இங்ஙனம் தன் மகனுடன் விளையாடலைக் காணும் தலைவியின் இன்பம் அளவி டற்கரிது.[77] இன்னொரு கலிப்பாடலால் தலைவி தன் மகனுக்குப் பாலூட்டுதலால் பெறும் இன்பத்தைச் சித்திரிக்கின்றது. சிறுவன் பாலுண்ண மறுக்கின்றான். தலைவி தந்தைக்காக ஒரு முடக்கு பருகுமாறு வேண்டுகின்றாள். அடுத்து, செவிலித்தாயர்க்கு ஒரு முடக்கு பருகுமாறு வேண்டுகின்றாள். இறுதியாக, தனக்காகவும் ஒரு முடக்கு என்று கொஞ்சி வேண்டுகின்றாள். இங்ஙனம் சிறிது சிறிதாகக் கூறிட்டுப் பாலை ஊட்டிவிடுகின்றாள் தலைவி. சிறு வனின் பிடிவாதப் போக்கு சினத்தை எழுப்பக்கூடியதாயினும்

75. ஐங்குறு-409
76. குறள்-757.
77. கலி-80

அவனுடைய சிறு குறும்புகள் அனைவருக்கும் மகிழ்ச்சியைத் தரு கின்றன. இங்ஙனம் பிள்ளைப்பேறு தலைவிக்குப் பேரின்பம் பயக்கின்றது.[78] நச்சினார்க்கினியரின் 'புதல்வனால் தலைவிக்குச் செல்வமாகிய உவகை பிறந்தது. புதல்வனும் செல்வமாதலின்' என்ற உரை நயமும் சிந்தித்து மகிழத் தக்கது.

சிறுவன் தலைவன்-தலைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாக வும் அமைகின்றான். பரத்தை காரணமாகத் தலைவி ஊடுகின்றாள். பரத்தையிடமிருந்து திரும்பி வந்த தலைவனிடம் தன்மகன் செல் வதை விரும்பவில்லை சினம் மிக்க தலைவி. ஆயின், சிறுவனோ அன்னையின் சினத்தை யறியாதவனாய்த் தந்தையின் மார்பை நோக்கிப் பாய்கின்றான். இதனை,

குன்ற இறுவரைக் கோண்மா இவர்ந்தாய்குத்
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தான் அறனில்லா
அன்பிலி பெற்ற மகன்[79]

[இறுவரை-மலையின் அடிப்பகுதி: கோண்மா-சிங்கம்; இவர்ந்தாங்கு-பாய்ந்தாற் போல்]

என்ற கலிப்பாப் பகுதியால் அறியலாம். இத்தகைய ஓர் அகநா னூற்று நிகழ்ச்சியையும் காண்போம். செவிலியிடம் குழந்தை உள்ளது. பரத்தையிடமிருந்து திரும்பிய தலைவன் தலையை நெருங்குகின்றான். தலைவனின் பரத்தமையைப்பொறாத தலைவி 'நீவிர் பரத்தையரிடம் இருக்கத் தகுதியுடையவர்; யானோ என் செல்வக் குழவியுடன் இருக்கத் தகுதியுடையவள்' என்று கூறி மகனிடம் செல்லுகின்றாள். தலைவனும் 'யானும் நம் குழவியிடம் இருக்கத் தகுதியுடையவன்' என்று கூறிக் கொண்டே தலைவியை இறுகப் புல்லுகின்றான். தலைவியின் நெஞ்சமும் பலமுறை உழுது செம்மையான செய்யின் மண் மிகுந்து பெய்யும்மழைக்குக் கரைதல் போல் நெகிழ்ந்து விடுகின்றது; சினமும் இருந்த இடம் தெரியாமல் மறைகின்றது.[80]

நற்றிணைத் தலைவியொருத்தி பிள்ளைப் பேற்றால் பெரு மகிழ்வு எய்துகின்றாள். பரத்தையிற் பிரிந்து சென்ற தலைவன் தன்னிடம் மீண்டு வருங்கால் பெருமிதம் தோன்றப் பேசும் தலை வியின் பேச்சில் இது வெளிப்படுகின்றது.

78. கலி-85
79. ஷை-86
80. அகம்-26.

யாணர் ஊரநின் மாண்இழை மகளிரை
எம்மனைத் தந்துநீ தழீஇயினும், அவர்தம்
புன்மனத்து உண்மையோ அரிதே; அவரும்
பைந்தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து
நன்றி சான்ற கற்பொடு
எம்பா டாதல் அதனினும் அரிதே.[81]

[யாணர்-புது வருவாய்; இழை-கலன்; உண்மை-மெய்ம்மை எம்பாடு ஆதல்-எம் பக்கத்து அமர்தல்]

'தலைவரே, பரத்தையரை நம் இல்லத்தில் கொணர்ந்து குல மகளிரைப்போல் மணம் புணர்ந்தாலும், அவர்களிடம் உண்மை அத்தி பூத்ததுபோல் தோன்றும். அவர்களும் மக்கட்பேறு அடைந்து என்நிலையை எய்துதல் அதனினும் அரிது' என்றதில் தலைவியின் பெருமித உணர்ச்சி தெளியப்படும். சங்க இலக்கியங்களில் பரத்தையர் மகப்பேறு அடைந்த செய்தி யாண்டும் கூறப் பெறவில்லை என்பது ஈண்டு அறியத் தக்கது.

குறுந்தொகைப் பரத்தை யொருத்தியின் வாக்கினால் தலைவன் தலைவிக்கு அடங்கியிருக்கும் செய்தி அறியப்பெறும்.

கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉம் ஊரன்
எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையும் காலும் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே.[82]

[கழனி - வயல்; உகு - வீழ்கின்ற; பழனம் - பொய்கை; கதூஉம் - கவ்வி உண்ணும்; ஊரன் - மருநிலத் தலைவன்; ஆடி - கண்ணாடி; பாவை - கண்ணாடியில் தோன்றும் உருவம்; புதல்வன்தாய் - மனைவி; மேவன - விரும்பியன]

பரத்தையின் வாக்கினால் தலைவன் தலைவியின் மகப்பேற்றிற்குப் பிறகு அவளிடம் அதிக அன்புடையவனாதலையும், மனைவி என்ற நிலையில் காட்டும் அன்பைவிடப் புதல்வன் தாய் என்ற நிலையில் அதிகமான பரிவைக் காட்டுகின்றார் என்பதனையும் அறிகின்றோம்.

81. நற்-330.
82. குறுந்-8.

இல்லற வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருளைத் தேடும் பொருட்டுச் சென்ற தலைவன் பிரிவை மிகப் பொறுமையுடன் தாங்குகின்றாள். தலைவனின் சொல்லில் பெரு நம்பிக்கை வைக்கின்றாள்.

'காதலர்,
நிலம்புடை பெயர்வ தாயினும், கூறிய
சொற்புடை பெயர்தலோ இலரே'[83]

[புடை பெயர்தல்-நிலையினின்று மாறுதல்]

என்ற நற்றிணைத் தலைவியின் பேச்சால் இதனை அறியலாம். தலைவியொருத்தி தலைவனின் பிரிவு நீட்டிப்பினால் வேறுபாடு உறுகின்றாள். தன்னுடைய வேறுபாடுகளுக்குக் காரணம் தலைவன் பிரிந்துறையும் கொடுமையே ஆதலின், அக்கொடுமை கருதி அவனாற் சூளுறப்பட்ட கடவுள் அவனை ஒறுக்குமென்று கவல்கின்றனள். ஆதலின் தலைவன் கொடுமையுடையவன் அல்லன் என்று கூறி அவன் துன்புறாமற் செய்யவேண்டும் என்று தெய்வத்தைப் பரவுகின்றாள்.[84] இவற்றால் தலைவி தலைவன்மீது வைத்திருக்கும் உறுதியான நம்பிக்கை தெளிவாகின்றது.

குறுந்தொகைப் பாடலொன்றால் தலைவன்பால் தலைவி கொண்டுள்ள பேரன்பை அறிகின்றோம். பொருள்வயிற் பிரிந்து சென்ற தலைவன் வீடு திரும்புகின்றான். அன்றிரவு தலைவியுடன் பாயல் கொள்ளுகின்றான். இரவு கழிந்ததே தெரியவில்லை; ஓரிரவு அவளுக்கு மனநிறைவினைத் தரவில்லை. ஏம இன்றுயிலைத் தரும் அவ்விரவு விரைவிற் புலர்ந்தது கண்டு துயருறுகின்றாள். காம மயக்கத்தால், புலர்ந்ததென உணர்த்திய சேவலின்பாற் குறையுள்ளதாகக் கருதி 'எம்மை எழுப்பிய நீ இல்லெலி பார்க்கும் பிள்ளை வெருகிற்கு அல்கு இரையாகி மிக்க துன்பத்தை அடைக' என்று சபிக்கின்றாள். இதனால் தலைவன்பால் தலைவி கொண்டுள்ள அன்பின் உறைப்பு வெளியாகின்றது.

இல்லற வாழ்வில் தலைவன்-தலைவரிடையே எழும் காதல் பூசல் 'ஊடல்' எனப்படும். சங்க இலக்கியங்களும் கோவை நூல்களும் இது பரத்தை காரணமாகவே நேரிடுவதாகப் பரக்கப் பேசு

83. நற்-289
84. குறுந். 87

கின்றன. திருவள்ளுவர் பரத்தையரின்றியே ஊடல் துறையை மிக அற்புதமாகப் படைத்துக் காட்டியுள்ளமை அந்நூலில் கண்டு தெளிக.

அகத்திணைத் தலைவி மாசு மறுவற்ற ஓர் அற்புதப் படைப்பு. இவளைக் குறை கூறுவதாக அமைந்த ஒரு பாடலையேனும் காண்டல் அரிது. தலைவனிடம் குறையுள்ளதாகக் கூறும் பாடல்கள் யாவும் பரத்தையொழுக்கம் பற்றியவையே. சமய இலக்கியங்கள் பகவத் காமத்தைப்பற்றிப் பேசும்போது தலைவி (ஆன்மா) தன்னிடம் எல்லாக் குறைகளும் இருப்பதாகக் கூறிக் கொள்வாள். தலைவனோ (பரமான்மா) எவ்வித குறையும் இல்லாத புருடோத்தமனாகப் போற்றிப் புகழப்பெறுவான். இக் கருத்து ஈண்டுச் சிந்தித்து உணரத் தக்கது.

## தலைமக்களுடன் உறவுடையோர்

அகத்திணை உலகில் காணப்பெறும் தலைமக்களுடன் ஏதோ ஒருமுறையில் மிக நெருங்கிய உறவுடையோராகக் கருதப்பெறுபவர்கள் அறுவர். இவர்கள் தலைவியின் நற்றாய், தலைவியின் தந்தை, செவிலி, பாங்கன், தோழி, பரத்தையர் என்று வழங்கப் பெறுபவர்கள். தலைவனின் தாய் தந்தையர்களைப் பற்றிய குறிப்புகளே இல்லை. ஓரிடத்தில் உடன் போக்கில் தலைவியைக் கொண்டு கழிந்த கொடுமையை நினைந்து வருந்தும் நற்றாய் தலைவனின் தாயும் தன்னைப் போன்று பெருந்துயர் எய்தக் கடவதாக என்று கூறுகின்றாள்.

நினைத்தொறுங் கலிழும் இடும்பை எய்துக,
........ ..............................
வெஞ்சுரம் என்மகள் உய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே.[1]

[கலிழ்தல் - கண் கலங்கி அழுதல்: இடும்பை - துன்பம்; வம்பு அமை - புதிய மூங்கிலால் செய்யப்பெற்ற; விடலை - தலைவன்]

என்ற பாடலில் இக்குறிப்பினைக் காணலாம். நற்றிணையிலும் இத்தகைய தாய் ஒருத்தியினைக் காண்கின்றோம். இவளும் தம் மகளை உடன் கொண்டகன்ற காளையைப் பெற்ற தாயும் தன்னைப் போலவே நடுங்கி நொந்தழியுமாறு கூறுகின்றாள்,

விழவுத்தலைக் கொண்ட பழவிறல் மூதூர்ப்
பூங்கண் ஆயங் காண்தொறும் எம்போல்
பெருவிதுப் புறுக மாதோ எம்மில்

1. ஐங்குறு - 373

பொம்மல் ஓதியைத் தன்மொழிஇக் கொளீஇக்
கொண்டுடன் போக வலித்த
வன்கண் காளையை ஈன்ற தாயே.[2]

[விறல் - வெற்றி; பூ - நெய்தல் பூ; ஆயம் - தோழியர் கூட்டம்; விதுப்பு - துன்பம்; பொம்மல் - பொலிவு பெற்ற; ஓதி - கூந்தலையுடையாள்; மொழி - பொய்மொழி; கொளீஇ - கூறி; வலித்த - அழைத்துச் சென்ற; வன்கண் - வன்கண்மை; காளை - தலைவன்]

இதில் ''விழாக்கள் மலிந்த இவ்வூரில் என் மகளுடன் கூடி விளையாடும் ஆயத்தாரைக் காணும் பொழுதெல்லாம் நடுக்கமுற்றுத் துன்புறும் என்னைப் போன்றே என் மகளைப் பலவாய மாயப் பொய்மொழிகளைக் கூறி மருட்டித் தன்வழி ஒழுகச் செய்து, தன்னுடன் அழைத்துச் சென்ற வன்கண்மை மிக்க அக் காளை போன்றானை ஈன்ற தாயும் நடுக்கமுற்றுத் துன்பம் அடைந்து அழிவாளாக'' என்று கூறிப் பழிப்பதைக் காண்க. இவற்றைத் தவிர், வேறு குறிப்புகள் இல்லை என்றே தோன்றுகின்றது. அக இலக்கண இலக்கியங்களைப் பயிலும் நாம் இவர்களின் இயல்பு, இவர்கள் தலைமக்களின் வாழ்வில் கொண்டுள்ள பங்கு ஆகியவை பற்றிய குறிப்புகளை ஆங்காங்குக் காண்கின்றோம். இங்ஙனம் சிதறிக் கிடக்கும் செய்திகளை ஈண்டு ஒருவாறு தொகுத்துக் கூறுவோம்.

### (i) நற்றாய்

அகப்பொருள் இலக்கியங்களில் வரும் நற்றாய் என்பவள் தலைவியைப் பெற்றெடுத்த தாய். அக இலக்கியங்களில் இவளுடைய பங்கு மிகக் குறைவாகவே காணப்பெறுகின்றது. இவள் தன் மகளுடைய கரந்த வொழுக்கத்தைச் செவியுற்றதும், அவ்வொழுக்கத்தின் போக்கையும் தன் மகள் தேர்ந்தெடுத்த தலைவனுடைய பொருத்தத்தையும் தன் தோழியுடன் (செவிலியுடன்) ஆராய்ந்து வருவாள்.

2. நற். - 293

கிழவோன் அறியா அறிவினள் இவள்என
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே.[3]

என விதி செய்வர் தொல்காப்பியர். தலைவியின் பிற்கால வாழ்க்கையில் மிகவும் கருத்துடைய இவளைத் தலைவி தன் போக்கிற்கு இடையூறாக இருப்பதாக எண்ணி மனம் வருந்துவாள். இதனால் தலைவிநற்றாய்க்கு 'வல்லுரைக்கடுஞ் சொல் அன்னை[4]' 'பிணிகோளருஞ் சிறை அன்னை'[5] 'அறனில் யாய்'[6] என்றின்னவா றெல்லாம் பட்டம் அளிப்பதுண்டு. தலைவி தனக்குத் தக்க தலைவனைத் தானே தேர்ந்து கொள்வது இவளுக்கு உடன்பாடே யாயினும், இவர்கள் உடனே வரைந்து கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டுமென்பதே இவள் எண்ணமாகும்.

களவு நெறியில் செவிலிக்குரியனவாகக் கூறப்பெறும் பதின் மூன்று கிளவிகளும்[7] நற்றாய் செவிலியுணர்வோடு உடம்பட்ட உள்ளத்தளாயிருத்தலின், நற்றாய்க்கும் உரியவை என்று கூறுவர் தொல்காப்பியர்.

தாய்க்கும் வரையார் உணர்உடம் படினே.[8]

என் விதியால் இது பெறப்படுகின்றது. இவற்றைத் தவிர தலைமகள் உடன் போக்கில் சென்றபொழுது, தோழியுடனும் கண்டோர் மாட்டும் நற்றாய் புலம்பிக் கூறும் கிளவிகளாக, "தன்னும் அவனும்"[9] என்னும் நூற்பாவில் கூறியனவும் கொள்ளப்பெறும். தலைவியின் களவு வாழ்க்கையை இவள் நேரே வினவி அறியும் தன்மையள் அல்லள். ஒரோவழி ஐயுற்று அறிவள்; அல்லது செவிலியால் உணர்த்தப்பட்டு அறிவள்.

---

3. களவியல் - 115 (இளம்)
4. அகம் - 122
5. ஷை - 122
6. அகம் - 302; ஐங்குறு - 385.
7. களவியல் - 25 (இளம்)
8. ஷை - 26 (இளம்).
9. அகத்திணை-39 (இளம்)

தாயறி வுறுதல் செவிலியோ டொக்கும்.[10]

என்ற தொல்காப்பியரின் விதியால் பின்னர்க் குறிப்பிட்டது பெறப்படும். தலைவியின் நடத்தையில் தான் காணும் ஒரு சிறு வேறுபாடும் அவளை ஐயுறத் தூண்டும்.

முதிர்கறி யாப்பின் துஞ்சும் நாடன்
மெல்ல வந்த நல்லகம் பெற்றமை
மையல் உறுகுவள்,அன்னை;
ஐயம் இன்றிக் கடுங்கூ வினளே''[11]

[கறி-மிளகுக் கொடி; யாப்பின் - பின்னியிருப்பதன் கண்ணே; நல்லகம்-மார்பு; மையல்-மயக்கம்; கடுங் கூவினள்-கருங்குரலால் கூவுகின்றனள்]

என்று தோழி கூறுவதனால் நற்றாய் ஐயப்படுவதனை அறியலாம். தந்தை தலைவியைத் தினைப்புனக் காவலுக்குப் போகுமாறு கூறுகின்றான். ஆனால் அன்னையின் நோக்கம் மாறாக இருந்தது.

'நன்னாள் வேங்கையும் மலர்கமா, இனி'யென
என்முகம் நோக்கினள்: எவன்கொல்? தோழி!
செல்வாள் என்றுகொல்? செறிப்பல் என்றுகொல்?
கல்கெழு நாடன் கேண்மை
அறிந்தனள் கொல்லஃது அறிகலேன் யானே.[12]

என்று தோழி கூறுவதனாலும் நற்றாய் தன் மகள் நடத்தையில் ஐயுறுவது பெறப்படுகின்றது. ஐயப்படுகின்றவள் செவிலியை அது குறித்து வினவவும் செய்வள்.

கண்ணும் சேயரி பரந்தன்று; நுதலும்
நுண்வியர் பொறித்து வண்டார்க் கும்மே;
ஆங்கமை மென்றோள் மடந்தை
யாங்கா யினள்கொல்? என்னும்என் நெஞ்சே.[13]

என்ற சிற்றெட்டகச் செய்யுளால் நற்றாய் ஐயப்பட்டு வினவுவதை அறியலாம். செவிலி முன்னிலை மொழியால் அறத்தொடு நின்று உற்றதனை அவளுக்கு உரைப்பாள். இதனை நாற்கவிராச நம்பி,

10. ஷை - 48 (இளம்).
11. நற்-297
12. ஷை-206.
13. களவியல்-24 இன் உரை மேற்கோள்,

மின்னிடை வேற்றுமை கண்டுதாய் வினாவுழி
முன்னிலை மொழியான் மொழியும் செவிலி.[14]

[மின்-தலைவி]

என்ற விதியால் உணர்த்துவர்.

தலைமகள் தலைவனொடு உடன்போக்கு சென்று விடுகின்றாள். இதனை யறிந்த நற்றாய் ஒருத்தி விதியை வெகுண்டு கூறுகின்றாள்.

நாடொறுங் கலிழும் என்னினும் இடைநின்று
காடுபடு தீயிற் கனலியர் மாதோ
நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்
பூப்புரை உண்கண் மடவரல்
போக்கிய புணர்த்த அறனில் பாலே.[15]

[கலிழும் என்னினும்-வேதலினும் மிகுதியாக; கனலியர்-வெந்தொழிக (வியங்கோள்); நெடுநகர்-மாடங்களான் உயர்ந்த இல்லம்; பூப்புரை-நீலப் பூவை யொத்த; மடவரல்-மடப்பமுடைய பெண்; போககிய புணர்த்த-நீத்துப் போவதற்கு வழி செய்த; அறன்இல் பால்-அறப் பண்பற்ற போகூழ்]

இதில் "நாளும் நல்லறமே நயந்து செய்யும் மனைக்கண் வாழ்வோர் இவ்வாறு கண் கனிந்து அழுதுயரமாகிய தீயினிடை நின்று வெம்பிக் கலுழும் என்னைப் போன்றே அறனில் பாலும் காட்டுத் தீயிடை அகப்பட்டு உய்ய வழியின்றி நின்று வெந்தொழிக" என்று வெகுண்டு கூறியதைக் காண்க. தலைவன் ஒருவன் தன் மகளைக் கண்டு மகிழ அவள் இல்லத்தைச் சார்ந்த ஓரிடத்தின்கண் வந்து நிற்பதை அகநானூற்று நற்றாய் ஒருத்தி கண்டு கொள்கின்றாள். அவள் கூறுவது:

இல்வந்து நின்றோன் கண்டனள் அன்னை
வல்லே என்முகம் நோக்கி
நல்லை மன்னென நகூப்பெயர்ந் தோளே[17]

14. நம்பி. அகப். 178
15. ஐற்குறு-376
17. அகம்-248

[இல்-வீடு; வல்லே-விரைவா. க: நல்லைமன்-நீ மிகவும் நல்லவள்; ந கூ உ - நசாநின்று; பெயர்ந்தோள் - புறம் போயினள்]

தன் மகளது கரந்த ஒழுக்கத்தை நேரில் கண்ட நிலையிலும் இவள் மகளைக் கடியாது 'நல்லைமன்' என்கின்றாள். செய்தது, நகைத்து அகன்றது. இவ்வளவே அங்கு நிகழ்ந்தது! இங்குத் தாயர் நக்கது என்ன நகை என்பதைப் பேராசிரியர் "இது பிறர் எள்ளியது பொருளாகத் தன்கண் நகை பிறந்தது. என்னை? தன் மகள் தன்னை மதியாது இகழ்ந்தாள் என நக்கவாறு. இது வெகுளிப் பொருளாக நக்கதன்றோ எனின், அது வீரர்க்கே உரித்தாதல் வேண்டும். இவள் அவளை வெகுண்டு தண்டம் செய்வாள் அல்லள். அதற்கே உவப்பின் அல்லது என்பது"[18] என்று மெய்ப் பாட்டியலில் விளக்குவர். ஈண்டு நற்றாயின் பெருந்தன்மை புலனாகின்றதைக் காண்க. 'கடுஞ்சொல் அன்னை' என்று தன் மகள் தனக்கிட்டுள்ள பெயர்க்குரிய செயலைக் காட்டாத உண்மையிலேயே 'நற்றாயாதலை'க் கண்டு மகிழ்க.

தலைவின் ஈன்ற தாய் 'நற்றாயாய்' இருத்தலுக்கு வேறு சான்றுகளும் உள்ளன. தலைவன் தலைவியைப் புணர்ந்து உடன் போக்கில் சென்றபின் தோழியின் அறத்தொடு நிற்றலால் உண்மையை அறிகின்றாள். அறிந்தவள் கூறுவது:

தன்னமர் ஆயமொடு நன்மண நுகர்ச்சியின்
இனிதுஆம் கொல்லோ? தனக்கே பனிவரை
இனக்களிறு வழங்குஞ் சோலை
வயக்குறு வெள்வேல் அவற்புணர்ந்து செலவே[19]

[அமர் பெரிதும் விரும்பும்; ஆயம்-தோழியர் கூட்டம்; தனக்கே - அவளுக்கு; இனக்-களிறு - பிடியும் கன்றும்; வயக்குறு-வெற்றி தரும்; அவன் புணர்ந்து-நம்பியுடன் கூடி]

இதில் நற்றாய், "நம்மகள் கற்புக்கடம் பூண்டமையை முன்னமே அறிவித்திருந்தால் யாமே வரைவு எதிர்கொண்டு ஈண்டு நம் இல்லத்திலேயே வதுவை நிகழ்விப்போமே. அங்ஙனம் நிகழ்ந்திருந் தால் அவட்கும் இன்பம், அவள்பால் அன்புடைய ஆயமகளிர்க்கும்

18. மெய்ப்-3 ('எள்ளல் இளமை' என்பதில்)
19. ஐங்குறு-379

பேரின்பம் ஆகுமே. இப்பொழுதோ அவனுடன் புணர்ந்து செல்லுங்கால் வரும் ஓரின்பமே அன்றி, வழியில் அவட்கும் துன்பம், அந்நம்பிக்கும் துன்பம், நமக்கும் எல்லையில்லாத் துன்பமாக முடிந்ததே! இத்தகைய செயலை எற்றிற்குச் செய்தல் வேண்டும்?'' என்று நொந்து கூறியதைக் காண்க.

நற்றாய் ஒருத்தி தன் மகள் அறநெறியிஃதென உணர்ந்து உடன்போக்கினை மேற்கொண்டமைக்கு மகிழ்ந்து தன் மகள் சென்ற பாலை நிலம் தண்ணியதாகுக என்று தெய்வத்தைப் பராவுகின்றாள்.

சுரநனி யினிய தாகுக தில்ல
அறநெறி இதுவெனத் தெளிந்தஎன்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே.[20]

என்ற பாடற் பகுதியால் இதனை அறியலாம். எனினும், தன் மகளைப் பிறள் ஒருத்தி மகன் வஞ்சித்து அழைத்துப் போயினமை குறித்து நெஞ்சங் கவலும் தாய் தன்னைப்போலவே தலைவனுடைய தாயும் பெருந்துயர் எய்தட்டும் எனச் சபிக்கின்றாள்.

நினைத்தொறுங் கலிழும் இடும்பை எய்துக
புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மான்பிணை அணைதர வாண்குரல் விளிக்கும்
வெஞ்சுரம் என்மகள் உய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே.[21]

[கலை-ஆண்மான்; அணைதர-சேரும் பொருட்டு; உய்த்த-செலுத்திய; வம்பு அமை-புதிய மூங்கில்]

என்ற பாடலில் இதனைக் காணலாம். இங்ஙனம் தாயின் பல்வேறு உணர்ச்சிகளைக் கண்டு[22] அவள் தன் மகள்பால் கொண்டுள்ள பேரன்பினை உய்த்துணரலாம்

அகநானூற்று நற்றாய்[23] ஒருத்தியிடம் ஊர்ப் பெண்டிர்கள் பலகாலம் நாடோறும் ஓய்வு ஒழிவின்றி வந்து 'நின்மகள் இன்ன தலைவனைக் காதலிக்கின்றாள், இன்ன இன்னவாறெல்லாம் ஒழுகுகின்றாள்' என அலட்டுகின்றனர். அவளோ 'இவர்கட்

20. ஷை-371
21. ஷை-373
22. ஷை-38 ஆம் பத்தில்
23. 'செவிலி' என்றும் கூறுவர் (நாவலர் நாட்டார் உரை காண்க.).

கென்னையோ கேடு!' என எண்ணி அவர்களை வெறுக்கின்றாள். ஊர் அலர்களைத் தன் மகள் அறிவிப்பின் உள்ளம் நாணி வருந்துவள் என எண்ணி மறைத்து வருகின்றாள் (ஆயின், விரைவில் அம் மகட்கு அவள் காதலனுடன் மணம் புணர்ப்பதில் ஊக்கம் கொண்டு ஆவனசெய்து வருகின்றாள்). இதனை அவள்மகள் அறிந்திலள். தன் கரந்துறை ஒழுக்கத்தை அன்னை அறியாள் எனவும், அறியின் தான் மனையில் சிறிதும் தங்க இயலாதெனவும், ஒரோ வழித் தன் காதலன் கூட்டுறவு கிட்டா தொழிய நேரிடலாம் எனவும் எண்ணி மயங்கிக் காதலனுடன் அவன் இல்லிற்கேகி அங்கு மணம் செய்து கொள்ளத் துணிந்து, இரவில் தாய் அறியாமல் அவனுடன் வெளிப்பட்டுச் செல்லுகின்றாள். இதனை அறிந்த அன்னை அவள் நிலைக்கு இரங்கிக் கவன்று, "அந்தோ, இவள் என்னுள்ளம் அறிந்திலளே; அவள் எண்ணியது தவறு என்பதை அவள் உணரச் செய்வேன்" என்று உறுதி கொள்ளுகின்றாள். உடனே வேறு வழியாக அவர்கள் செல்லும் நெறியிலுள்ள ஒரு சிற்றூர்க்குச் சென்று அவர்கள் அறியாத மாற்றுருவில் நின்று அவர்கட்குத் தேவையான உதவிகள் செய்தனுப்ப எண்ணுகின்றாள் (எண்ணியவள் அவ்வாறே செய்தாள். பின்னர் தலைவி தனக்கு உதவி செய்தவள் நற்றாயே என உணர்ந்து கழிபெரும் மகிழ்ச்சிக் கடலுள் ஆழ்கின்றாள்). இந்நிகழ்ச்சியைக் **கபிலர்** தம் சொல்லோவியத்தால் ஒரு படக்காட்சியைக் காட்டுவதுபோல் காட்டுகின்றார்.[24] இந்நிகழ்ச்சியும் '**நற்றாய்**' என்ற பெயரை உறுதிப்படுத்துகின்ற தன்றோ?

தலைவி தலைவனுடன் உடன் போக்கில் பிரிந்து செல்லுகின்றாள். தலைவி கையாண்ட பாவை, பூவை, பைங்கிளி, பந்து கழங்கு முதலிய பொருள்களைப் பார்க்கும் பொழுதெல்லாம் நற்றாய் கண் கலங்கி வருந்துகின்றாள்.

...அத்தம்
சென்றனள் மன்றஎன் மகளே
பந்தும் பாவையும் கழங்கும் எமக்கு ஒழித்தே.[25]

[அத்தம்-பாலை நிலத்துப் பாதை; ஒழித்து-விட்டு வைத்து]

24. அகம்-203.
25. ஐங்குறு-377

என்று நற்றாய் கலங்கிச் சொல்லி வருந்தியதைக் காண்க. மறைந்த தலைவியைச் சேரியும் அயலும் தேடிக் காணாது வந்தாரைக் கண்டு நற்றாய் கூறி வருந்துவது நம் உள்ளத்தை மிகவும் உருக்கு கின்றது.

'இதுவென் பாவைக் கினியநன் பாவை;
இதுவென் பைங்கிளி எடுத்த பைங்கிளி;
இதுவென் பூவைக் கினியசொற் பூவை'யென்(று)
அலமரு நோக்கின் அலம்வரு சுடர்நுதல்
காண்டொறும் காண்டொறும் கலங்க
நீங்கின ளோஎன் பூங்க ணோளே.[26]

[அலம்வருதல் சுழலுதல்; பூங்கண்ணோளே-அழகிய கண்ணை யுடையவள்]

தன் மகள் விரும்பி யாடிய பொருள்கள் தன்னால் அடிக்கடி பார்க்கப்படுதலும் பார்க்கும்பொழுதெல்லாம் அவள் நினைவே தோன்றித் தன்னை வருத்தும் என்றும், அவளது சுழல் விழியும் சுடர் நுதலும் தன் நெஞ்சத்தே நின்று இடையறாது வருத்தும் என்றும் கலங்கிக் கூறுவதைக் காண்க. தன் மகள்பால் இவள் கொண்டுள்ள பற்று,

யாயேகண்ணினும் கடுங்கா தலளே.[27]

என்ற **கபிலர்** வாக்கினால் நன்கு அறியலாம். தலைவிக்கு அவள் 'கடுஞ் சொல் அன்னை'யாகத் தோன்றினும் அவளுடைய 'தாய்ப் பாசம்' அளவற்றது என்பதை நாம் அறிவோம்.

இத்தகைய நற்றாய் தன் மகளைப்பற்றி அலர் எழுங்கால் கடுஞ் சினம் கொள்வாள். இவள் எவ்வகையானும் அம்பலையோ அலரையோ விரும்புவதில்லை. இதனைக் கேட்டவுடன் இவள் மனம் கொதித்தெழும்.

கௌவை மேவல ராகி இவ்வூர்
நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ
புரைய அல்லவென் மகட்கு.[28]

[கௌவை-அலர்; நிரைய-இழிந்த; இன்னா-இன்னாத சொற்கள்; புரைய-பொருந்துவன].

26. ஷை-375
27. அகம்-12
28. ஷை-95

என்பதில் ஊரார் தன்மகளைப்பற்றிக் கூறும் பழிச்சொல் சிறிதும் பொருந்தாது என்று பெருமிதம் தோன்றக் கூறுவள். அலர்த் துறைகளைப்பற்றிய சங்கப் பாடல்களில் வெகுளித் தோற்றத் துடன் கூடிய நற்றாயைக் காணலாம். தன்மகள் ஊர்வாய்ப் படுதல் கூடாது, தன் பழங்குடி ஒழுக்கம் வழுப்படுதல் கூடாது என்று கவலையுடன் இருப்பவள் சங்க இலக்கிய நற்றாய். இக் காரணத் தால்தான் தன் மகளை இற்செறிப்பு செய்கின்றாள்; வேறு விதமாகவும் அலைக்கின்றாள்.

இங்ஙனம் நற்றாயின் சிறப்புகளைச் சங்க இலக்கியங்களில், குறிப்பாக எட்டுத் தொகை நூல்களில், பல இடங்களில் கண்டு மகிழலாம்.

## (ii) தலைவியின் தந்தை

அகப்பொருள் இலக்கியங்களில் தலைவியின் தந்தையைப் பற்றிய குறிப்புகள் மிகச் சிலவாகவே காணப் பெறுகின்றன. மகளைப் பெற்ற தந்தை தக்கான் ஒருவனுக்குத் தன் மகளை மணம் புணர்வித்தல் அவன் கடமையாக இருந்து வருவது தமிழ் மரபு.

> கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
> கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே''[29]

என்ற தொல்காப்பிய நூற்பாவினால் இஃது அறியப்பெறும். '' 'கொளற்குரி மரபிற் கிழவோன்' என்றதனால், ஒத்தகுலத் தானும் உயர்ந்த குலத்தானும் என்று கொள்க. 'கொளற்குரி மரபிற் கிழத்தி' என்றதனால், ஒத்த குலத்தாளும் இழிந்த குலத்தாளும் என்று கொள்க. 'கொடைக்குரி மரபினோர்' என்றதனால், தந்தையும் தாயும் தன்னையரும் மாதுலனும் இவரில்லாத வழிச் சான்றோரும் தெய்வமும் என்று கொள்க'' என்ற இளம்பூரணரின் உரையும் ஈண்டு கருதத் தக்கது. கொடைக்குரி மரபினோரில் தந்தை முதலிடம் பெறுவதை அறிக.

29. கற்பியல்-1 (இளம்)

தண்துறை ஊரன் வரைக
எந்தையும் கொடுக்க ......[30]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலாலும்,

வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு
இன்தீம் பலவின் ஏர்கெழு செல்வத்து
எந்தையும் எதிர்ந்தனன் கொடையே[31]

என்ற அகப்பாட்டடிகளாலும் இந்தமரபுஉள்ளமை மேலும் வலியுறு கின்றது. அன்றியும், தலைவியின் பிறப்பிடம் தந்தைக்குரிய நாடே என்று இலக்கியங்களில் குறிப்பிடப்பெறுவது இதற்கு மேலும் அரண் செய்வதாகும் "நன்மலை நாடன் காதன் மகளே"[32] "நுந்தை நும்மூர் வருதும்"[33] "சுடர் நுதல் தந்தையூரே."[34] என்ற இலக்கியக் குறிப்புகளைக் காண்க.

பெற்றோர்கள் தம் மகளைக் கண்ணெனப் போற்றி வளர்க்கும் பொறுப்பில் தந்தைக்கும் பெரும் பங்கு உண்டு. தலைவியின் இச்செறிப்பினைக் குறிப்பிடும் அகப்பாடலில்,

எந்தையும் நிலனுறப் பொறாஅன் சீறடிசிவப்ப
எவனில குறுமகள் இயங்குதி என்னும்"[35]

என்ற அடிகளால் தலைவி கால் நிலந்தோய நடப்பதையும் பொறுக்காத தந்தையைக் காண்கின்றோம். ஐங்குறுநூற்றுப் பாடலொன்றால் தனக்குப் பெண்மகவு வாய்க்க வேண்டும் என்று இறைவனை வழிபடும் தந்தை காணப்படுகின் றான்.

குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற வெள்வளைக் குறுமகள்[36]

என்ற பாடற்பகுதியால் இஃது அறியப் பெறும். இதனை எண்ணியே கவிமணியும்,

மங்கைய ராகப் பிறப்பதற்கு
மாதவம் செய்திட வேண்டுமம்மா[37]

30. ஐங்குறு-6.
31. அகம்-282.
32. நற்-44.
33. ஐங்குறு-92.
34. ஷை-94.
35. அகம்-12
36. ஐங்குறு-254.
37. ஆசிய ஜோதி-

என்று குறிப்பிட்டிருத்தல் வேண்டும் என்று எண்ணத் தோன்று கின்றது. தலைவியின் தந்தை செல்வம் மிக்கவன் என்ற குறிப்பு இலக்கியங்களில் காணப்பெறுகின்றது.

செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்[38]

என்ற நற்றிணையடியையும்,

இன்தீம் பலவின் ஏர்க்கெழு செல்வத்து
எந்தையும்[39]

என்ற நெடுந்தொகை அடியையும் இதற்குச் சான்றுகளாகக் கொள்ளலாம்.

நெறியுடன் வாழும் குடும்பத்தில் தந்தையின் சொல்லுக்கே அதிக மதிப்பு இருந்ததாகத் தெரிகின்றது. தந்தையின் இசைவு இன்றி எந்தச் செயலும் குடும்பத்தில் நடைபெறாது. தலைவியின் திருமணம்பற்றிய முடிவு தந்தையின் முடிவாகவே இருக்கும்.

.....................''நுந்தையும்
மன்றல் வேங்கைக் கீழிருந்து
மணநயந் தனன்நம் மலைகிழ வோற்கே[40]

என்ற கலிப்பாட்டடிகளால் தந்தை வரைவுடம் பட்டமையைத் தோழி தலைவிக்கு அறிவிப்பதை அறிக. தந்தை தன் மகள்மீது கொண்டுள்ள அளவற்ற அன்பினை, ''நன்மலை நாடன் காதல் மகள்''[41] ''மலையுறை குறவன் காதல் மடமகள்''[42] ''குன்றக் குறவன் காதல் மடமகள்''[43] என்ற சங்க இலக்கியக் குறிப்பு களால் அறிந்து மகிழலாம்.

38. நற் - 324
39. அகம் - 282
40. கலி - 41.
41. நற் - 44.
42. ஷ்டி - 201.
43. ஐங்குறு-255, 256, 258, 259, 260.

## (iii) செவிலி

பிறந்தநாள் தொட்டுத் தலைவியைச் சிறந்திட வளர்த்து வருபவள் செவிலி. இவளே தலைவியின் உயிர்த் தோழியாக இருப்பவளை ஈன்ற தாய்; நற்றாய்க்குத் தோழியாக இருப்பவள். இதனை.

செவிலி நற்றாய் தோழி யாகி
அவல நீக்கி அறிவும் ஆசாரமும்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே.[44]

என்று கூறுவர் நாற்கவிராச நம்பி. தொல்காப்பியரும்,

ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாய் எனப் படுவாள் செவிலியாகும்.[45]

என்றும்,

கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள்
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய ஆகும் என்ப.[46]

என்றும் இவளை அறிமுகம் செய்து இவளவு கடமைகளையும் தெளிவுறுத்துவர். இவற்றுள் முதல் நூற்பாவுக்கு உரை கூறும் நச்சினார்க்கினியர் "தாய்த்தாய்க் கொண்டு உயிர் ஒன்றாய் வருகின்றாளென்று ஆராய்ந்து துணியப்பெற்ற பெருஞ் சிறப்புக் காரணமாக கூறுதற்குரிய மறைப் பொருளெல்லாம் குறிப்பானன்றிக் கூற்றாற் கூறத் தக்காளாதலின் தாயெனச் சிறப்பித்துச் சொல்லப்படுவாள் செவிலியேயாம் என்றவாறு" என்று கூறியுள்ளதையும் காண்க. இவள்பொறுப்பில்தான் 'தலைவி' உடல் நலமும் உரன் நலமும் பெற்றுத் தலைவி என்ற பெயர்க்குரியவளாகின்றாள். செவிலியால் வளர்க்கப்பெற்றமையை அறிவதற்கு நேர் முறையில் பாடல்களைக் காண்டல் அரிது. ஆயின் வேறு செய்திகளைக் கூற வரும் இடத்தில் வரும் குறிப்புகளால் இதனை அறிகின்றோம். நற்றிணையில் உள்ள ஒரு பாடலின் பகுதி இது:

பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்
புடைப்பின் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்

44. நம்பி. அக 111
45. களவியல்.33(நச்).
46. கற்பியல்-12 (இளம்)

உண்ணென்று ஓக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
பரிமெலிந் தொழியப் பந்தர் ஓடி
ஏவல் மறுக்கும் சிறுவிளையாட்டி[47]

[பிரசம்-தேன்; விரிகதிர்-விரிந்த ஒளியினையுடைய; பூ தலை-மெல்லிய நுனி; ஓக்குபு-ஓச்சி; புடைப்ப-புடைப் பாகச் சுற்றிய; முத்து அரி-முத்துகளைப் பரலாக உடைய; தத்துற்று-பாய்ந்து; பரீஇ - மெலிந்து ஒழிய-பற்றமுடி யாமல் மெலிந் தொழியுமாறு; ஏவல் மறுக்கும்-சொல்லு வதை மறுத்துஉரையாடும்; சிறு விளையாட்டி-சிறிய விளையாட்டினை உடையவள்.]

தலைவி வரைந்தபின் இல்வாழ்க்கையின் மணமனைச் சென்று வந்த செவிலி பொற்றொடியின் கற்பியலை நற்றாய்க்கு உணர்த்துவதாக உள்ளது இப்பாடல். "அன்பே உருவாய் அ[illegible]செவிலி ஒரு கையில் தேன் கலந்த இனிய பாற்சோறு நி[illegible]பொற்கலத்தையும்,மற்றொரு கையில் மெல்லிய கோலை யும் ஏந்தி வருகின்றாள். சிறு பிள்ளையான தலைவி சிலம்பொலிக்க விளையாடுகின்றாள். செவிலி அவளை நெருங்கிச் சோற்றை உண்ணுமாறு வேண்டுகின்றாள். மகள் மறுக்கின்றாள். ஆகவே தாய் அவளைப் பிடித்து உண்பிக்க முயலுகின்றாள். செவிலி தன்னைப் பற்ற வருவதறிந்து மெல்ல ஓடுகின்றாள் மகள். செவிலி யும் தொடர்ந்து ஓடியும் அவளைப் பிடிக்க முடியாமல் இறுதியில் இளைத்து நிற்கின்றாள். முன்றிலின்கண் போடப்பட்டிருக்கும் முல்லைப் பந்தரின் அடியில் ஓடியவள் 'உண்ணேன்' என்று மறுத் துரைத்து விட்டு ஆடத் தொடங்குகின்றாள்." இங்ஙனம் தலைவி யின் இளமைப் பருவத்தின் நிகழ்ச்சி யொன்றால் அவள் செல்ல மாக வளர்க்கப் பெற்றதை அறிகின்றோம்.

அகநானூற்றிலும் இத்தகைய நிகழ்ச்சியொன்றினைக் காண் கின்றோம் உடன்போக்கில் சென்ற தலைவியை நினைந்து செவிலி கூறுகின்றாள்.

---

47. நற்-110.

சீர்கெழு வியநகர் சிலம்புநக வியலி
ஓரை ஆயமொடு பந்துசிறி தெறியினும்
வாரா யோவென்(று) ஏத்திப் பேரிலைப்
பகன்றை வான்மலர் பனிநிறைந் ததுபோல்
பால்பெய் வள்ளம் சால்கை பற்றி
என்பாடு உண்டனை யாயின் ஒருகால்
நுந்தை பாடும் உண்ணென்று ஊட்டிப்
பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்துயான்
நலம்புனைந் தெடுத்தஎன் பொலந்தொடிக்குறுமகள்
அறனி லாளனோடு இறந்தனள்[48]

[வியன் நகர்-பெரிய மனை; சிலம்புநக-சிலம்பு ஒலிக்க; ஓரை ஆயம்-விளையாடும் தோழியர் கூட்டம்; ஏத்தி-பாராட்டி; பகன்றை-ஒருவகைத் தாவரம்; வள்ளம்-கிண்ணம்; பாடு-பகுதி; பிறந்ததற் கொண்டு-பிறந்த நாள் தொட்டு; அறன் இலாளன்-தலைவன்.]

இதில் வரும் நிகழ்ச்சி : அகன்ற மனையகம் எல்லாம் சிலம்பொலி முழங்க ஓடியும் ஆடியும் விளையாடுகின்றாள் மகள். ஆயவெள்ளத்துடன் பந்தாடுகின்றாள். இதற்குள் அவளுடைய உடம்பு இளைத்தும் களைத்தும் விட்டதென்று எண்ணிய செவிலி பாற் சோறிட்ட வெள்ளிக் கிண்ணத்தைக் கையேந்திச் சென்று, "என் கண்ணே, வாராய்" என அன்புடன் அழைத்து, "என்க்காக ஒரு பிடி உண்டனை. உன் தந்தைக்காக ஒரு பிடி உண்க. அம்மே" என்று உரைத்து ஊட்டுவாள். இங்ஙனம் செல்லமாக வளர்ந்தவள் பிரிந்துபோய் விட்டாளே என்று கலங்குகின்றாள்.

தலைவியின் களவு நெறியிலும் கற்பு நெறியிலும் செவிலி ஆற்றும் பங்கு மிகப் பெரியது. இவளது பங்கினைச் சற்று விரிவாகக் காண்போம்.

**களவு நெறியில்:** செவிலி தலைவியை வளர்க்கும்பொறுப்பினை மேலே கூறினோம். அவளைப் பழியொடு படாத நிலையில் காத்தல், நன்னெறியில் மேவும் காதற் கூட்டத்தை ஏற்றல், அவளை நற்றாய்க்கு உரைத்துப் போற்றல், உடன்போக்கில் தேடி அலைதல், தலைவியின் வரைவிற்கு ஆவன செய்தல்

48. அகம்-216.

போன்றவற்றைத் தலைவியின் களவு நெறியில் இவள் மேற்கொள்ளும் பொறுப்புகளாகும். தலைவி உடன் போக்கில் சென்றவிடத்து அவளைத் தேடியலைதல் செவிலியின் முக்கிய பொறுப்பாக அமைகின்றது.

ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்
தாமே செல்லும் தாயரும் உளரே.[49]

என்று இதற்கு விதிசெய்து காட்டுவர் தொல்காப்பியர். இங்குச் செவிலி கன்றுபிரி காராவின் நிலையினை அடைகின்றாள்.

இலக்கியங்களில் இவற்றுக்குச் சான்றுகள் நிறையக் காணப் பெறுகின்றன. களவு நெறியில் பதின்மூன்று கிளவிகளை இவளுக்குரியனவாகக்கூறுவர் தொல்காப்பியர்.[50] கோழி தன் பார்ப்புகளை இறகிடை வைத்துப் பாதுகாப்பதுபோல் செவிலி தலைவியைப் பாதுகாப்பாள். இருவரும் ஒரே படுக்கையில் கூட இருப்பர் என்ற குறிப்புகளையும் இலக்கியத்தில் காண்கின்றோம். செவிலி கூற்றாக வரும் பாடல்களிலெல்லாம் இத்தகைய குறிப்புகளைக் காணலாம்.

ஐங்குறு நூற்றில் பாலைத் திணையில் ''மகட் போக்கிய வழித் தாயிரங்கு பத்து''[51] என்ற தலைப்பில் வரும் பத்துப் பாடல்களில் உடன் போக்கிற் சென்ற தலைவியை நினைந்து வருந்தும் செவிலி நற்றாய் இவர்களின் பல்வேறு உணர்ச்சி நிலைகளைக் காணலாம். தலைவி கற்புக்கடம் பூண்ட செய்தியைத் தகுந்ததொரு செவ்வியில் அறத்தொடுநிலை வகையாற் கூறித் தம் இல்லத்தே நன் மணம் நிகழ்விக்க வகைசெய்யாமல் அவள் தலைவனுடன் போந்துணையும் வாளாவிருந்த தன் மகளாகிய தோழியை வெறுத்துத் தன்னைத் தேற்றுவார்க்குச் செவிலி நொந்து கூறும் வகையில் உள்ள ஒரு பாடல் இது.

அத்த நீளிடை யவனொடு போகிய
முத்தேர் வெண்பல் முகிழ்நகை மடவரல்

49. அகத்திணை-40 (இளம்). ''தாயர்'' எனப் பன்மை கூறித் 'தாமே' எனப் பிரித்ததனால் சேரிக்கு நற்றாய் சேறலும் சுரத்திற்குச் செவிலித்தாய் சேறலும் புலனெறி வழக்கிற்குச் சிறந்ததென்று உணர்க'' என்பர் நச்சினார்க்கினியர்.

50. களவியல்—25 (இளம்)

51. பாலை—38வது பத்து.

தாயர் என்னும் பெயரே வல்லாறு
எடுத்தேன் மன்ற யானே
கொடுத்தோர் மன்றஅவள் ஆயத் தோரே[52]

[அத்தம்-வழி; அவன்-தலைவன்; முத்துஓர்-முத்தினை யொத்த; மடவரல்-மடப்பத்தை யுடையவள்; பெயர்-நற்பெயர்; வல்லாறு-இயன்றவகை]

இதில் செவிலி, ''ஒருவர் நற்பெயர் எடுக்க வேண்டுமாயின் ஆற்றலான் முயன்று எடுத்தல் வேண்டுமன்றே! அவ்வாறே நானும் அரிதின் முயன்று இன்னானோடு ஓடிவிட்ட இன்னவள் தாய் என்னும் பெயரை எடுத்துள்ளேன் காண்!'' என்று இகழ்ச்சிக் குறிப்பால் நொந்து கூறியதைக் காண்க.

தலைவியைத் தன் கையகலாது அகத்தும் புறத்தும் பேணி வளர்த்தவளாதலின், தலைவியின் உடன்போக்குப் பிரிவின்கண் செவிலியின் கூற்றுகள் மிக்க இரக்கங் கொண்டனவாக இருக்கும். தலைவி தமரை விட்டுத் தலைவனுடன் உடன் போக்கில் பிரிகின்றாள். இதனை அறிந்த செவிலி கூறுவது:

பெயர்த்தனென் முயங்க,யான் வியர்த்தனென் என்றனள்
இனியறிந் தேன்அது துனியா குதலே[53]

[பெயர்த்து-மீண்டும்; முயங்குதல்-தழுவுதல்; துனி-வெறுப்பு]

''நான் நேற்று வழக்கம்போல் என் மகளைத் தழுவவும் அவள் அதனை வெறுத்தாள்; அதன் காரணத்தை அப்பொழுது அறிந்திலேன்; இப்பொழுது அறிந்தேன்'' என்று செவிலி கூறி இரங்குவதைக் காண்க. ஒரு தலைவனது முயக்கத்தையே இன்பமாகக் கருதியவளாதலின் முன்பு விருப்பாயிருந்த தன் முயக்கம் தற்பொழுது வெறுப்பாயிற்றுப் போலும் என்று செவிலி குறிப்பாகப் புலப்படுத்துவதை உணர்ந்து மகிழ்க.

அகநானூற்றுச் செவிலி யொருத்தி முன்னாள் ஈன்றணிமை கொண்ட கன்றினைக் கண்டு நெகிழும் கறவையெனத் தலைவியைக் கண்டு அணுகி நுதல் நீவித் தழுவினள்; தலைவி பிற்றை ஞான்று பிரிய விருத்தலின் எஞ்ஞான்று மில்லாதவாறு பலகால்

52. ஐங்குறு-380
53. குறுந். 84

செவிலியை முயங்கினள். அவள் அங்ஙனம் முயங்கிய கருத்தினை அது காலை உணராதவள் அடுத்த நாள் உணர்ந்து வருந்து கின்றாள்.

கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத் தியாத்த
கடுங்கட் கறவையிற் சிறுபுற நோக்கிக்
குறுக வந்து குவவுநுதல் நீவி
மெல்லெனத் தழீஇயினே னாக,என்மகள்
நன்னர் ஆகத் திடைமுலை வியர்ப்பப்
பல்கால் முயங்கினள் மன்னே அன்னோ
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
காடுடன் கழித லறியிற் றந்தை
அல்குபத மிகுந்த கடியுடை வியனகர்ச்
செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போலக்
கோதை யாயமோ டோரை தழீஇத்
தோடமை யரிச்சிலம் பொலிப்ப அவள்
ஆடுவழி யாடுவழி அகலேன் மன்னே[54]

[கொடுந்தொடை-வளைந்த தொடை; குழவி-கன்று; யாத்த-கட்டப் பெற்ற; கடுங்கண்-விரைந்து விரைந்து பார்க்கும் கண்; கறவை-பசு; சிறுபுறம்-முதுகு; குவவுநுதல்-வளைந்த நெற்றி; நன்னர்-நன்கு; ஆகம்-மார்பு; முயங்கினள்-தழுவினள்; அல்குபதம்-வைத்திருந்து உண்ணும் உணவு; கடி-காவல்; வியனகர்-மனை; ஆயம்-தோழியர் கூட்டம்; ஓரை-விளையாட்டு; தோடு-தொகுதி; ஆடுவழி-விளையாட்டிடம்]

என்ற பாடலில் செவிலி வருந்துவதைக் காண்க. பாடலின் பிற்பகுதியில் செவிலி தலைவியை வளர்த்த அருமை புலனாதல் கண்டு தெளிக.

செவிலி இங்ஙனம் கூறும் இடமெல்லாம் தலைவியது மென்மைத் தன்மையும் சுரத்தின் கடுமையும் நினைந்து நினைந்து உருகுவதைக் காணலாம். குறுந்தொகைச் செவிலி யொருத்தி இரங்குதலை இப்பாடலில் காண்க.

54. அகம்-49.

பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்
விளையாடு ஆயமொடு அயர்வோள் இனியே
எளிதெனை உணர்ந்தனள் கொல்லோ முளிசினை
ஓமை குத்திய வுயர்கோட்டு ஒருத்தல்
வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்
மழைமுழங்கு கடுங்குரல் ஓர்க்கும்
கழைதிரங்கு ஆரிடை அவனொடு செலவே[55]

[மேவாள் - விரும்பாள்; அயர்வோள் - விளையாடியவள்; முளிசினை-உலர்ந்த கிளை; ஒருத்தல்-ஆண் யானை (களிறு); வெ அரை கவாஅன்-வெம்மையான அடிவாரம்; மழை-மேகம்; ஓர்க்கும்-கேட்கும்; கழை-மூங்கில்; திரங்கு-உலர்ந்த]

இதில் செவிலி தலைவியின் இளமைத் தன்மையையும் பாலையின் கொடுமையையும் நினைந்து வருந்துவதைக் கண்டு தெளிக.

இங்ஙனமே, அகநானூற்றுச் செவிலியும் தலைவியின் மென்மைத் தன்மையையும் அருஞ்சுரத்தின் கடுமையையும் நினைந்து நினைந்து உருகுவதை,

வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்
இளந்துணை ஆயமொடு கழங்குடன் ஆடினும்
உயங்கின்று அன்னைஎன் மெய்என்று அசைஇ
மயங்குவியர் பொறித்த நுதலள் தண்ணென
முயங்கினள் வதியும் மன்னே ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
நொதுமலாளன் நெஞ்சறப் பெற்றஎன்
சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
வல்லகொல் செல்ல ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
அருஞ்சுரக் கவலைய அதர்படு மருங்கின்
நீளரை இலவத் தூழ்கழி பன்மலர்
விழவுத் தலைக்கொண்ட பழவிறல் மூதூர்
நெய்யுமிழ் சுடரில் கால்பொரச் சில்கி
வைகுறு மீனில் தோன்றும்
மைபடு மாமலை விளங்கிய சுரனே[56]

---

55. குறுந். 396
56. அகம்-17

[வளம்-செல்வம்; கெழு-பொருந்திய; திருநகர்-மனை; ஆயம்-தோழியர் கூட்டம்; உயங்கிற்று-வருந்திற்று; அசைஇ-தளர்ந்து; வதியும்-அமர்வள்; நொதுமலாளன்-ஏதிலாளன்; முதுக்குறைவி-மூதறிவுடையவள்; வல்லகொல்-வல்லுநவோ; கவலைய-கவர்த்த; அதர்-வழி; நீள் அரை-நீண்ட அடி; ஊழ்கழி-முதிர்ச்சிமிக்க; விறல்-வெற்றி; கால்-காற்று; வைகுறு-விடிகின்ற; மை-மேகம்]

என்ற அகப்பாடலில் கண்டு தெளியலாம்.

தலைவி தலைவனுடன் உடன் போக்கில் சென்ற பிறகு செவிலி அவர்களைப் பாலைநிலத்தில் தேடிச் சென்று காணாமல் வருந்திக் கூறுகின்றாள்.

காலே பரிதப் பினவே; கண்ணே
நோக்கி நோக்கி வாள்இழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றஇவ் உலகத்துப் பலரே.[57]

[கால்-கால்கள்; பரிதப்பின-நடை ஓய்ந்தது; வாள்-ஒளி; விசும்பு-வானம்; மீன்-நட்சத்திரம்]

"நடந்த கால்களும் ஓய்ந்தன; பார்த்த கண்ணும் பூத்தன. இருவரையும் கண்டேன் இல்லை" என்று செவிலி வெறுத்துக் கூறுவதைக் காண்க. உடன் போக்கில் இவர்கள் சென்றதைத் தோழி மூலம் அறிந்த செவிலியொருத்தி நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும் காட்சியையும் காண்கின்றோம்.

வாயா கின்றே தோழி ஆய்கழல்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே[58]

[வாய் ஆகின்று-உண்மையாயிற்று; ஆய்கழல்-அழகிய வீரக் கழல்; விடலை-தலைவன்; மடந்தை-தலைவி]

என்ற பாடற்பகுதி இதனைப் புலப்படுத்துகின்றது. இங்ஙனம் எத்தனையோ நிகழ்ச்சிகளை அகத்துறைப் பாடல்கள் சித்திரித்துக் காட்டுகின்றன.

---

57. குறுந். 44.
58. ஷை-15.

**கற்புநெறியில்** : சற்புக் காலத்தில் தலைவன் மனைக்குச் செல்கின்றாள் செவிலி. அங்குத் தலைவனும் தலைவியும் ஆவியும் உடலும்போல ஒருவரை யொருவர் இன்றியமையாராய் அன்பால் கலப்புற்று இன்புற்றமர்ந்து வாழ்கின்ற நல்வாழ்க்கையைக் கண்ணுறுகின்றாள். ஆங்குத் தான் நெஞ்சும் கண்ணும் குளிரக் கண்ட காட்சிகளை நற்றாய்க்குக் கூறி அவளை மகிழ்விக்கின்றாள். இங்ஙனம் உவந்த உள்ளத்தளாய் செவிலி கூறுங் பத்துப் பாடல் களை ஐங்குறுநூற்றில் "செவிலி கூற்றுப் பத்து"[59] என்ற தலைப்பில் ஒருசேரக் காணலாம். அவற்றுள் ஒரு காட்சி.

மறியிடைப் படுத்த மான்பிணை போலப்
புதல்வன் நடுவணன் ஆக நன்றும்
இனிது மன்றஅவர் கிடக்கை; முனிவின்றி
நீல்நிற வியல்அகம் கவைஇய
ஈனும் உம்பரும் பெறலருங் குரைத்தே[60]

[மறி-மான்குட்டி. நடுவணன்-நடுவில் இருப்பவன்; நன்றும்-பெரிதும்: முனிவு-பெறுப்பு; மன்ற-தேற்றமாக; நீல்நிறம்-நீலநிறம்; வியல் அகம்-அகன்ற வானவெளி; ஈனும்-இந்த உலகமும்; உம்பர்-தேவர் உலகம்]

மனைமாட்சியின் மங்கலத்தையும் மக்கட்பேற்றின் நன்கலத்தினையும் ஒருங்கே பெற்றுத் தலைவலும் தலைவியும் காதல் என்னும் இன்பக் கடலுள் மூழ்கிக் கிடப்பதைக் கண்ட செவிலி 'இதுவே இன்பத்தின் கொடுமுடி' என்பதை நற்றாய்க்கு உணர்த்துகின்றாள்.

குறுந்தொகைச் செவிலி யொருத்தி தன் மகளின் இல்லறம் நடத்தும் கடிமனைக்குச் செல்லுகின்றாள்; அங்கு அவள் செய்யும் அறத் துறைகளை காண்கின்றாள். தலைமகனது சிறப்பும், இருவரது வாழ்க்கைச் சிறப்பும் செவிலிக்குப் பெரு மகிழ்ச்சியைத் தருகின்றன. பின்னர் அவள் தன் மனைக்கேகி ஆங்கு நற்றாயைக் கண்டு அவளிடம் தலைவி, தலைமகனை உண்பிக்கும் திறத்தைச் சிலவாய சொற்களால் பலவாய பொருள் பொதுள இனிது கூறுகின்றாள்.

59. ஐங்குறு-41-ஆம்பத்து.
60. ஷை-401

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை யுண்கண் குய்புகை கமழத்
தான்துழக்(து) அட்ட தீம்புளிப் பாகர்
இனிதுஎனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்தன்று ஒண்ணுதல் முகனே[61]

[முளிதயிர்-முற்றிய தயிர்; கழுவுறு கலிங்கம்-துடைத்துக் கொண்ட ஆடை; கழாஅது-துவையாமல்; உடீஇ-உடுத்துக் கொண்டு: குய்புகை-தாளிப்பின் புகை; கமழ-மணப்ப; துழந்து-துழாவி; அட்ட-சமைத்த; தீபுளி பாகர்-இனிய புளிக் குழம்பு; ஒள்நுதல்-தலைவி.]

இறுகிய தயிராதலின் தலைவி புளிக்குழம்பு செய்யும் பொருட்டுத் தன் மெல்விரலால் துழாவித் தாளிதம் செய்தாள். விரைவில் சமைக்க வேண்டும் என்ற விருப்பினளாதலின் தயிர் பிசைந்த கையைத் துடைத்த ஆடையைத் துவைத்தலை மறந் தாள். ''ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது வானோர் அமுதம் புரையுமால்எமக்கென''[62] விரும்புபவனாதலின் மகிழ்ந்து உண்டான். தலைவி கொண்ட அகமகிழ்ச்சியை அவள் முகம் புலப்படுத்தியது. இயல்பாகவே பொலிவு பெற்ற நுதல் மகிழ்ச்சி யால் பின்னும் பொலிவுடையதாயிற்று. அம்மகிழ்ச்சியை மிகுதி யாக வெளிப்படுத்தாமையின் 'நுண்ணிதின் மகிழ்ந்தன்று' என்றான். இதனால் தலைவி தற்கொண்டானைப் பேணுந் தகை சிறந்தாள் என்பதைச் செவிலி உணர்த்துவது அறியப்படும்.

இங்ஙனமே நற்றிணைச் செவிலியொருத்தி தன் மகள் நடத்தும் இல்லற வாழ்க்கையை வியந்து கூறுவதைப் பிறிதொரு பாடலில் காணலாம்.[63] குறுந்தொகைச் செவிலி யொருத்தி ஒரு நாள் தலைமகளின் கடிமனைக்குச் சென்று வருகின்றாள். இவள் தலைவியின் அயரா அன்பினை வியந்து பேசுகின்றாள். ''தலைவன் தலைவியை இறையேனும் பிரியாது உறைகின்றான்; எச்செயல் பொருட்டும் பிரிந்து செல்வதில்லை. அரசன் ஏவல் கடத்தற் கரிதாகலின், அதன்பொருட்டு மாத்திரம் அரிதிற் சில கால் பிரிந்து வேற்றூர் போவான்; போயினும் உடனே மீள் வான்''[64] என்பதாக.

61. குறுந்-167.
62. கற்பியல்-5அடி (12-13) (இளம்)
63. நற்-110,
64. குறுந்-242

இது காறும் கூறியவற்றைக் கூர்ந்து நோக்கின் தலைவிபால் அன்பு வைத்தார் எவரினும் செவிலி அன்பிற் குறைத்திலள் என்று கூறி முடித்திடலாம்.

### iv பாங்கன்

பாங்கன் என்பவன் தலைவனுக்குத் தோழனாக இருப்பவன். தலைவன் களவு ஒழுக்கத்தில் ஒழுகும்போது அவனுக்கு உற்ற துணைவனாக இருந்து கொண்டு அவன் செயல்களில் உதவி புரிபவன். இடந்தலைப்பாட்டிற்கு அடுத்ததாகத் தலைவியுடன் நிகழும் கூட்டம் இவன் துணையாலே நிகழ்வது. தலைவியைச் சந்தித்து அவளுடன் கரந்து ஒழுகும் ஒழுக்கத்தால் அவன் உடலில் காணும் சில தோற்ற வேறுபாடுகளைக்கண்டு அவற்றிற் குரிய காரணத்தை வினவுகின்றான்.

கடற்கோடு செறிந்த வளைவார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த இரும்பல் கூந்தல்
கான ஞாழல் கவின்பெறு தழையள்
வரையர மகளிரின் அரியள் என்
நிறையரு நெஞ்சம் கொண்டொளித் தோளே[65]

[கோடு-சங்கு; வளை முன்கை வார் முன்கை எனத் தனித் தனி கூட்டுக. தொடர்ந்த-கூட்டப் பெற்ற; இரும்-கரிய; கானல்-கடற்கரைச் சோலை; ஞாழல்-ஒருவகை மரம்; அரு நிறை-அழித்தற்கரிய நிறை]

இதில் தன் நெஞ்சத்தைக் கவர்ந்தவள் 'வரையர மகளிரின் அரியள்' என்கின்றான். பாங்கன் தலைமகன் கூறிய குறிவழிச் சென்று அவளைக் காண்கிறான். கண்டவன் தன்னுள்ளே கூறுகின்றான்.

இரவி னானும் இன்துயில் அறியாது
அரவுறு துயரம் எய்துப தொண்டித்
தண்ணறு நெய்தல் நாறும்
பின்னிருங் கூந்தல் அணங்குற் றோரே.[66]

---

65. ஐங்குறு-191; ஒப்பிடுக-255.
66. ஷை-173.

[துயில்-உறக்கம்; அரவுறு துயரம்-மணியை இழந்த பாம்பு போன்று அல்லலுறுதல்]

இதில் "எம்பெருமான் துயிலறியாது வருந்துதல் அவன் பிழையன்று" என்று உணர்கின்றான் பாங்கன். இதற்கு முன்னர் கழறியுரைத்தவன் இப்போது உண்மையை உணர்கின்றான். தலைவனை பாங்கன் இடித்துரைக்கும் உரிமை பெற்றவன்.

'குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்'[67]

என்ற தொல்காப்பிய விதியால் பாங்கன் வினாதலும் தலைமகன் உரைத்தலும் போன்ற உரிமைகள் பெறப்படும். இடித்துரைக்கும் உரிமை,

மொழிஎதிர் மொழிதல் பாங்கற் குரித்தே[68]

என்ற விதியால் பெறுகின்றான். ஆயின் இங்ஙனம் குறித்ததற்கு எதிர் கூறுதல் அருகியே தோன்றும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுவர்,

குறித்தெதிர் மொழிதல் அஃகித் தோன்றும்[69]

என்பது அவர் கூறும் விதி.

தலைவன் தலைவியை மணந்து கொண்டு வாழ்க்கை நடத்தும்போதும் அதில் பாங்கனுக்கும் பங்குண்டு. பல்வேறு காரணங்களால் தலைவி தலைவன் இவர்களிடையே பிணக்கு நேரிடும்பொழுது அவற்றைத் தீர்த்து வைக்கும் வாயில்களுள் பாங்கனை நான்காவது வாயிலாகக் குறிப்பிடுவர் தொல்காப்பியர். அகப்பொருள் விளக்க ஆசிரியராகிய நாற் கவிராச நம்பி பார்ப்பனப் பாங்கன், சூத்திரப் பாங்கன் என இருவகைப் பாங்கர்களைக் குறிப்பிடுவர்[70] தலைவனின் பெற்றோர் இவர்களிடம் தலைவனை அடைக்கலமாகக் கொடுக்கப் பெற்றதாகவும் கூறுவர் அந்த ஆசிரியர்[71]

ஐந்திணை நெறியில் பாங்கன் படைப்பு இருவகைப் பயனுடையது. முதலாவது : அவன் ஓர் அறிவிப்பாளனாகப் பயன்படுகின்

67. களவியல்-11 (அடி-9)
68. ஷை-41 (இளம்)
69. கற்பியல்-42 (இளம்)
70. நம்பி அகப்-100, 101.
71. ஷை-107

றான். இவன் பாங்கற் கூட்டத்தில் செயற்படுவதனால் இதனை அறியலாம். தலைவியை நேர் நின்று காணலும் அவள் முன்னின்று மொழிதலுமின்றி ஒரு வழிப் போக்கன்போல் தலைவியிருக்கும் இடம் சென்று திரும்புவதைக் காண்கின்றோம். தலைவனின் தோழர்கள் யாவர் என்பதைத் தலைவியும் அறியாளாதலின் இவன் நடமாட்டத்தைப்பற்றி ஐயுற்று யாதொன்றையும் கருதாள். "தோழியிற் கூட்டம்போலப் பாங்கன் உரையாடி இடை நின்று கூட்டாமையின்"[72] என்று நச்சினார்க்கினியரும், "தன் வயிற் பாங்கன் அவள்வயிற் பாங்கு செய்யான்"[73] எனப் பேராசிரியரும் பாங்கனின் பங்கினை வரையறை செய்திருத்தல் காண்க.

**இரண்டாவது:** பாங்கன் அறிவுறுத்துபவனாகவும் காணப் பெறுகின்றான். இவன் ஒரு பற்றுக்கோடாக நின்று காமச்சுரத்தால் தாக்கப்பெற்று நிற்கும் தலைவனின் மனவேகத்தைத் தணிவிக்கும் கருவியாக அமைகின்றான் இன்ப வெள்ளத்தாலோ அன்றித் துன்பப் புயலாலோ நம் நெஞ்சு அலைவுறுங்கால் அவற்றைப் பிறரிடம் பேசினால் நமக்கு ஆறுதல் உண்டாவதை நாம் நன்கு அறிவோம். இஃது ஓர் உளவியல் உண்மை. இவ்வாறு பாங்கன் தலைவனது காமப் புதுமையைக் காது கொடுத்துக் கேட்கும் செவியனாய் அமைவதை அகப்பாடல்களில் காண்கின்றோம்.

தலைவனின் புதிய உணர்ச்சியையும் புதிய உறவையும் அவன் பேச்சால் அறிந்து கொள்ளும் பாங்கன் அவன் குலமும் குணமும் அறிவும் சுட்டி அவனது ஒழுக்கத்தினின்றும் மாற்ற முயல்கின்றான். பாங்கன் கழறியுரைத்தலை "குன்றம் உருண்டால் குன்றி வழியடையாகாதவாறு போலவும், யானை தொடுவுண்ணின்[74] மூடுகலம் இல்லது போலவும், எம் பெருமான்! நின் உள்ளம், அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடியின் வரைத்தன்றிக் கைம்மிக்கு ஓடுமேயெனின் நின்னைத் தெருட்டற்பால நீர்மையார் உளரோ?...... அப்பெற்றியாய நீ, இன்னதோர் இடத்து இன்னதோர் உருவு கண்டு 'என் உணர்வு அழியப் போந்தேன்' என்றல் தக்கின்று"[75]

---

72. களவியல்-11 (நச்.)
73. செய்யு-186 (பேரா.)
74. திருடித் தின்றால்.
75. இறை. கள. 3 இன் உரை.

என்ற உரைப்பகுதியால் அறியலாம். தன் முயற்சி பயனின்மை கண்டபின் விட்டுப் பிரியாத தோழமை கொண்டவன் அவன் தலைவனுடன் இணைந்து செல்லுவதை நிறுத்திக் கொள்ளுகின்றான். இங்ஙனம் அகத்திணை உலகில் வரும் பாங்கனின் பங்கு களவின் தொடக்கத்தே நின்று போகின்றது. தலைவனின் இல்வாழ்க்கையின்போது இவனுக்குப் பங்கு உண்டு என்று இலக்கணம் கூறினும் அதற்குச் சான்றாக இலக்கியம் காணப்பெற்றிலது.

## (v) தோழி

தலைவன் தலைவியின் காதல் வாழ்க்கையில் பெரும் பங்கு எடுத்துத் துணை புரிபவள் தோழி. அகத்திணை நாடகத்திற்கே உயிர்நாடியாக இருப்பவள் இவளே; இங்குக் காணும் உறுப்பினர்களுள் மிக்க பொறுப்பினை வாய்ந்தவளும் இவளேயாகும். இவள் தலைவியுடன் ஒன்றிய நெஞ்சத்தினையுடையவள். தலைவிக்கும் தோழிக்கும் இடையேயுள்ள நட்புரிமையைத் தலைவனுக்கும் பாங்கனுக்கும் இடையேயும் காணமுடியாது.

யாமே
பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓர்உயி ரம்மே[76]

[இயைந்த-கூடிய: துவரா-உவர்த்தல் இல்லாத; ஓர் உயிரம் ஓர் உயிரினம்]

என்ற தோழியின் கூற்றினால் இதனை அறியலாம். தலைவியினுடையசெயல்கள் யாவற்றையும் இவள்நன்கு அறிவாள். தலைவன், தலைவி, நற்றாய், செவிலி, பரத்தை, பாணன் என்ற உறுப்பினர்க்கெல்லாம் அவரவர்கட்கு அமைவனவற்றை அறிவுறுத்தி அக வாழ்க்கையைச் செப்பஞ் செய்யும் திறத்தினள். தன்னலம் சிறிதுமின்றி தலைவன் தலைவியரது நலத்தையே பெரிதும் கருதிப் பல வகை இடுக்கண்கட்கிடையிலும் சதுரப்பாட்டுடன் செயலாற்றும் திறத்தினையுடையவள். தலைவனைக் கண்டவுடன் மயங்கிவிடும் தலைவி போலன்றி, பன்னாளும் தலைவனின் பண்புகளை ஆய்ந்து

76. அகம்-12.

தேர்ந்து முடிவில் தலைவியிடம் அவனைக் கூட்டுவிப்பாள். தலைவியின் களவு நெறியில் அளவுடன் குறியிடங்களை ஏற்படுத்தித் தலைவன் தலைவியைச் சந்திக்கும் வாய்ப்புகளைத் தருவாள். இவளின்றி தலைவன் தலைவி இவரிடையேயும் சந்திப்பே இருத்தல் இயலாது. இத்தகைய சந்திப்புகளை இயன்றவரை குறைத்து விரைவில் வரைந்து கொள்ளுமாறு நயமாக வற்புறுத்தும் தோழியின் பண்பினை அகப்பாடல்களில் கண்டு நுகர வேண்டிய அருமைப் பாடாகும். தலைவனுடைய பிரிவுகளின் பொருத்தங்களை ஆய்ந்து ஒப்பித் தலைவியும் ஒப்புமாறு வற்புறுத்தும் பண்புடையவள். தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியைப் பல்லாற்றானும் தேற்றுபவள். ஒரோ வழித் தலைவன்பாற் குறைகள் காணின், கழறியுரைத்து அவனையும் திருத்துபவள். நற்றாய் செவிலித்தாயர்க்குத் தலைவன் தலைவியர் கூட்டுறவுகளைத் திறம்பெற உரைத்து—சிறந்த முறையில் அறத்தொடு நின்று—உடன்பாடு பெறும் சீலம் உடையவள். களவு, கற்பு என்னும் இருவகைக் கைகோள்களினும் இத்தோழியின் தொடர்பு இல்லாத இடன் இல்லை என்று கூறத் தக்க முதன்மை வாய்ந்தவள்.

தோழி தானே செவிலி மகளே[77]

என்ற தொல்காப்பிய விதிப்படி செவிலியின் மகளாகக் கருதப் பெறும் இவளுடைய சதுரப்பாடமைந்த பேச்சுகள் அகப்பாடல்களின் சுவையை மிகுதிப்படுத்துவனவாக இருக்கும்.

இத்தகைய சிறப்புப் பண்புகளைக் கொண்ட தோழியின் பங்கினைத் தொல்காப்பியர் திறம்படக் காட்டுவர். தலைவியின் களவு நெறியில் முப்பத்திரண்டு கிளவிகளையும்,[78] அவளது கற்பு நெறியில் இருபது கிளவிகளையும்[79] தொகுத்துக் கூறுவர். அவற்றை விளக்கும் முறையில் உரையாசிரியர்கள் காட்டும் பாடல்கள் அவளது பெரும் பங்கினை மேலும் நமக்குத் தெளிவுறுத்தும். இப்பகுதிகளை நுணுகி ஆராயின், மக்கள் மன நிலையை அவர்தம் தோற்றம் ஒழுக்கம் முதலியவற்றால் உய்த்துணரும் மனப் பயிற்சியும் ஒத்த அன்பினராகிய தலைவனையும் தலைவியையும் உலகியல் கூறித் தீதொரீஇ நன்றின்பால் உய்க்கும்

77. களவியல்—35 (இளம்)
78. ஷை-, 24.
79. ஷை. கற்பிறல்—, 9.

நல்லறிவும், உள்ளக் கருத்தறிதல் அருமையும், தன் அறிவின் திறத்தைப் பிறர் அறியாது ஒழுகும் அடக்கமும், மறை புலப் படாமல் நிறுத்தும் நல்லுள்ளமும், மாசற்ற அறிவுணர்ச்சியும், செய்யத்தகுவன அறிந்து கூறலும் ஆகிய பெண்மைக் குணங்கள் முழுவதும் தோழியினிடத்து ஒருங்கமைந்திருத்தல் புலனாகும் இவ்வாறு பெறுதற்கரிய பெருங் குணங்கள் யாவும் ஒழுங்கு வாய்க்கப்பெற்றவளே தோழி எனப் பாராட்டுவதற்குரியவள் என்பார் 'தாங்கருஞ்சிறப்பின் தோழி' எனத் தொல்காப்பியரும் அடைகொடுத்துச் சிறப்பிப்பர். இருவகைக் கை கோள்களிலும் ஒரு சில இடங்களில் தோழியின் இன்றியமையாத பங்கினைக் கண்டு தெளிவோம்

## (அ) களவு நெறியில்

**மதியுடம் படுத்தல்:** இந்தக் கட்டத்தில் தோழியின் உயரிய உய்த்துணர்வினைக் காண்கின்றோம். தன் இயற்கைப் புணர்ச்சியைத்தோழிக்கும் புலப்படுத்தவில்லை தலைவியொருத்தி. ஒருநாள் தலைவியும் தோழியும் தினைப்புனம் காத்து நின்ற விடத்து தலைவன் கையுறை கொண்டுவந்து அவர்களிடம் குறை வேண்டுவான்போல் நிற்கின்றான். தோழி அப்போது நிகழும் அவ்விருவர் மெய்ப்பாடுகளையும் கூர்ந்து நோக்கி அவர்களிடையே கூட்டமுண்மையைத் துணிகின்றாள்.

ஏனல் காவல் இவளும் அல்லள்;
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்;
நரந்தங் கண்ணி இவளோடு இவனிடைக்
கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே;
நம்முன் நாணுநர் போன்று தம்முள்
மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல
உள்ளத் துள்ளே மகிழ்ப;
சொல்லும் ஆடுப கண்ணி னானே[80]

[ஏனல்-தினை; கரந்த உள்ளம்—மறைத்த நோக்கம்; சொல் ஆடுதல்-உரையாடுதல்]

இந்த அழகிய பாடலில் தோழியின் உய்த்துணர்வு செயற்படு வதைக் கண்டு மகிழ்க.

80. களவியல்-23 (நச்சினார்க்கினியர் உரை மேற்கோள்)

**குறியிடங்கள் அமைத்தல்:** தொல்காப்பியரின் 'புணர்ச்சி வேண்டியனும்'[81] என்ற விதியால் இவை தோழியால் அமைக்கப் பெறும். இரவு வருவானைப் பகல் வாவென்றலும், பகல் வருவானை இரவு வாவென்றலும், குறிபெயர்த்தலும் எல்லாம் இவ்விதியாலேயே கொள்ளப்பெறும். தலைவியைக் குறியிடத்து உய்த்துத் தலைமகனிடம் கூறுகிறதாக அமைந்த குறுந்தொகைப் பாடல்:

நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பி
நின்குறி வந்தனென்; இயல்தேர்க் கொண்க!
செல்கம் செலவியங் கொண்மோ அல்கலும்
ஆரல் அருந்த வயிற்ற
நாரை மிதிக்கும் என்மகள் நுதலே.[82]

[பாவை கிடப்பி - பாவையை வளர்த்திவிட்டு; நின்குறி - நீ இருக்குமிடம்; கொண்க - தலைவனே; செல்கம் - போகின்றோம்; செலவியங்கொண்மோ - அவளைப் போகும்படி நீயே ஏவுவாய்; அல்கலும் - இரவு வருதலும்; நுதல் - நெற்றி].

இதில் தலைவியைக் குறியிடத்து நிறுத்தி வந்த தோழி, தலைவனிடம் அதனைக் குறிப்பாகப் புலப் படுத்துகின்றாள். 'வந்தனென்' என்று முதலில் ஒருமையால் கூறிப் பிறகு 'செல்கம்' எனப் பன்மையாற் கூறினமையின் தோழியுடன் தலைவி வந்துள்ளாள் என்பதையும், அவளைக் குறியிடத்தே நிறுத்தித் தோழி வந்தனள் என்பதையும் தலைவன் அறிவான்.

இன்னோர் இடத்தில் பகற்குறியின்கண் வந்து அளவளாவிய தலைவனுக்குத் தாம் பயிலும் இடத்தை மாற்றி வேறிடம் கூறுகின்றாள் தோழி.

ஊர்க்கும் அணித்தே பொய்கை: பொய்கைக்குச்
சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே;
இரைதேர் வெண்குரு(கு) அல்லது யாவதும்
துன்னல்போ கின்றுஆல் பொழிலே யாம்எம்
கூழைக்(கு) எருமண் கொணர்கம் சேறும்;
ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே[83]

81. ஷை—24 (அடி-22) (இளம்).
82. குறுந். 114.
83. ஷை-113.

[அணித்து-அருகிலுள்ளது; சேய்த்தும்-தொலைவிலுள்ளதும்; கான் யாறு-காட்டாறு; குருகு-நாரை; யாவதும்-வேறுஒன்றும்; துன்னல்-நெருங்கல்; கூழைக்கு-கூந்தலுக்கு; எருமண்-களிமண்; கொணர்கம்-கொண்டு வருதற்கு]

''ஊருக்கு அருகிலுள்ளது பொய்கை; பொய்கைக்கும் அருகிலுள்ளது கான்யாறு. தலைவி அந்த ஆற்றங்கரையிலுள்ள பொழிலுக்கு வருவாள்.'' என்று தோழி மாற்றிடம் கூறுவதைக் காண்க. இந்த இடத்திற்குத் ''தாங்கள் வரல் எளிது'' என்பதைக் குறிப்பால் புலப்படுத்துகின்றாள். இந்த எளிதான இடத்தில் தனியிடமும் உண்டாங்கொல்லோ என்று ஐயம் நிகழாதபடி ''யாவதும் துன்றுதல் நீங்கியது அப்பொழில்'' என்கின்றாள். தாம் வருதல் தம் கூழைக்கு எருமண் கொணர்தற்கே யாதலின், தாம் கான்யாற்றம் கரையில் நிற்றலன்றிப் பொழிலில் புகவேண்டியஅவசியம் இல்லைஎன்பதையும் அறிவித்துப் 'பொழில்,குறியிடம்' என்பதைப் பெறவைக்கின்றாள், இதில்,

தோழியின் முடியும் இடனுமார் உண்டே.[84]

என்னும் தொல்காப்பிய விதிபற்றி தோழி குறியிடம் கூறினாள் என்பது அறிதற்பாலது. இந்த இரண்டு பாடல்களிலும் தோழியின் குறியிடம் அமைக்கும் அருமைப்பாடு பாராட்டுதற்குரியது.

**வரைவு கடாதல்:** களவொழுக்கத்தில் தலைவியைத் தலைவன் அடிக்கடிச் சந்திக்கும் வாய்ப்பினைத் தருவதில்லை உலகியலறிந்த தோழி. மதிநுட்பம் மிக்க தோழிவரைவுகடாதலில் பல முறைகளைக் கையாளுவதை அகப்பாடல்களில் கண்டு மகிழலாம். ஈண்டு இரண்டினைக் காட்டுவோம்.

**முதலாவது :** தினை முற்றியது கூறி வரைவு கடாதல். தலைவனுக்கும் தலைவிக்கும் சந்திப்பதற்கு வாய்ப்பாக இருந்தது தினைப் புனம். இதில் கிளிகள் முதலிய புட்கள் பகலிற் படிந்து தினையினைக் கவரா வண்ணம் தலைவியைக் காவற்கு அனுப்பியிருந்தனர். அதனால் அடிக்கடி அங்கு இருவரது கூட்டமும் நிகழ்ந்தது. தலைவனிடம் இந்த வாய்ப்பு இனி இராது என்கின்றாள் தோழி

84. (இளம்) களவியில்-31.

குன்றக் குறவன் காதல் மடமகள்
மென்றோள் கொடிச்சியைப் பெறற்கரிது தில்ல
பைம்புறப் படுகிளி யோப்பலர்
புன்புல மயக்கத்து விளைந்தன தினையே.[85]

[குறவன்-கானவர் தலைவன்; காதல்-அன்பு கெழுமிய; கொடிச்சி-மலைநாட்டுப் பெண் (தலைவி); ஒப்பலர்-ஓப்புதற்கு எம்மை விடார்; புன்புல மயக்கம்-பண்படுத்தப் பெற்றமையான் மண்ணும் எருவும் பிறவும் கலந்த நிலம்]

"தினை முற்றிவிட்டது. இனி, காவலுக்கு இடம் இல்லை. தலைவியும் வீட்டைவிட்டு வெளியேற முடியாது. அதனால் அவளைக் காணவும் முடியாது" என்கின்றாள் தோழி. ஆகவே, "விரைந்து வரைந்து கொள்" என்பது குறிப்பு. இது எச்சத்தாற் பெறப்படும் பொருள்.

**இரண்டாவது,** வெறியறிவுறுத்தி வரைவு கடாதல். களவில் ஒழுகும் தலைவி ஊணும் உறக்கமும் துறந்து உடல் வேறுபடுகின்றாள். தாய் பெரிதும் கவலை கொண்டு புனங்காக்கச் சென்ற விடத்தில் அணங்கு ஏறப்பெற்றாளோ என்று எண்ணி வேலன் வெறியாட்டால் அதனை அறிவதற்குத் திட்டமிடுகின்றாள், இதனை சிறைப்புறத்திலிருக்கும் தலைவனுக்கு அறிவிக்கின்றாள் தோழி.

பொய்யா மரபின் ஊர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னம் தூக்கி
முருகுஎன மொழியும் ஆயின்
கெழுதகை கொல்இவள் அணங்கி யோற்கே.[86]

[பொய்யா - பொய் கூறாத; மெய்படுத்து - உண்மையை வெளிப்படுத்தி; கன்னம்-தாயத்துபோன்ற ஒருபொருள்; முருகு - முருகன்; கெழுதகைகொல் - உரிமையுடைய தாகுமோ; அணங்கியோற்கு - வருத்திய தலைவனுக்கு.]

---

85. ஐங்குறு-260
86. ஷை-245

"செவிலி வெறியாடுதலால் தலைவியின் துயரம் மிகும்; பெரு நாணினள் ஆகலின் இறந்துபடுதலும் கூடும். ஆதலால் விரைந்து வரைந்து கோடலே முறை" என்பதைக் குறிப்பால் பெறவைக்கும் தோழியின் திறம் மெச்சத் தக்கது.

களவுக் காதலர்கள் வெளிப்படையாக மணந்து இல்லறம் நடத்தவேண்டும் என்பதே அகத்திணையின் நோக்கம் என்பதை நன்கு அறிந்தவள் தோழி. இந்த நோக்கத்தைப் பொறுப்புடன் நிறைவேற்றுபவள் இவளே. இக்காரணத்தால் கற்பொழுக்கத்திற் காட்டிலும் களவொழுக்கத்தில் இவள் பங்கு மிகவும் இன்றியமை யாதது என்பது உணர்தற்பாலது. அகத்திணைப் பாடல்களில் குறியிடங்கள் அமைப்பதிலும் பிறவற்றிலும் தோழி தலைவனை அலையவைத்து அலைக்கழிவு செய்பவள்போல் தோன்றுவாள். தோழியின் செயல்கள் யாவும் 'வரைதல் வேட்கைப் பொருளன' வாக இருக்கும். நாள் நீட்டிக்காமல் எப்படியாயினும் தலைவியை மணம் புணர்க்கவேண்டும் என்பதே பொறுப்புடைய தோழியின் கருத்தாகும்.

**அறத்தொடு நிற்றல்:** இதில் தலைவியின் காதலைச் செவிலிக்குக் குறிப்பாகப் புலப்படுத்துகின்ற திறம் மிக அற்புத மானது; தோழியின் நுண்ணிய அறிவுத்திறனை ஈண்டுக் காணலாம்.

தலைவியொருத்தி இற்செறிக்கப்பெறுகின்றாள். வீட்டில் காப்பும் மிகுதியாகின்றது. தலைவியின் உடல் மெலிவு கண்டு உண்மையை அறிய வேலனைக்கொண்டு வெறியாட்டெடுக்க நினைக்கின்றனர் அவள் வீட்டார். இந்நிலையில் தோழி செவிலிக்கு வெறிவிலக்கி அறத்தொடு நிற்கின்றாள்.

அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைப்
புலவுச்சேர் துறுகல் ஏறி அவர்நாட்டுப்
பூக்கெழு குன்றம் நோக்கி நின்று
மணிபுரை வயங்கிழை நிலைபெறத்
தணிதற்கும் உரித்துஅவள் உற்ற நோயே.[87]

[படப்பை-புழைக்கடைத் தோட்டம்; புலவுசேர்-புலால் நாற்றம் தங்கிய; துறுகல்-குண்டுக்கல்; மணிபுரை-நீல மணியையொத்த; வயங்கு இழை-ஒளிரும் அணிகலன்களை யுடையவள்]

87. ஷை-210

''இவளுடைய நோய் தணிதற்கு எனக்கு ஒரு வழிதெரியும். வீட்டிலே செறிக்கப்பெற்றிருப்பது நீங்கி அவள் அத்தலைவனுடைய குன்றினைக் காண்பாளேயாயின், அவள் நோய் தணிதற்கு உரியது'' என்கின்றாள் தோழி. இல்லத்தே வாழ்வார்க்குப் பிணி முதலியன வந்தெய்தியபொழுதெல்லாம் அந்நோய்க்குரிய காரணம் யாதென்று ஆய்ந்து அதற்கேற்பத் தீர்வு காண முயலாமல் எல்லாம் தெய்வக் குறையென்றேகொண்டு அத்துறுகல்மிசை ஆடு முதலியவற்றைப் பலி செய்தலாலே அக்கல் எப்பொழுதும் புலால் நாறுவதாயிற்று என்று அவர்தம் பேதைமையை குறிப்பாலே விதந்து கூறுவாள் 'நம் படப்பைப் புலவுச் சேர் துறுகல் என்கின்றாள். 'அவர்' என்றாள், 'அவர் யார்?' என்னும் ஆராய்ச்சி அறிவினைச் செவிலியின் நெஞ்சத்தே பிறப்பித்தற்கு என்க. 'பூக்கெழு குன்றம்' 'மணிபுரை குன்றம்' எனத் தனித்தனியே கூட்டிப் பொருள் கொண்டால், காட்சிக்கினிமை கூறுகின்றதாக முடியும். இதனால் உருவும் திருவும் சிறந்தானொரு தலைவன் இவட்குளன் என்னும் இறைச்சி தோன்றக் கூறிய தலைவியின் மதி நுட்பம் புலனாதல் அறியப்பெறும். அவன் ஒரு நாட்டிற்கே தலைவன் என்பது தோன்ற 'அவர் நாடு' என்று குறிப்பிட்ட நயமும் சிந்திக்கற்பாலது. குன்றத்தின்கண் மறி கொன்று பெரிதும் ஆடுதலாகின்ற வெறியாடற் செயலிலும், இச்செயல் சிறந்ததும் எளியதும் ஆகும் என்பாள், 'குன்றம் நோக்கி நின்று நிலைபெறத் தணிதற்கும் உரித்து'என்று கூறி, செவிலியிடம் சூழ்ச்சி பிறக்குமாறு செய்த தோழியின் திறம் பாராட்டத் தக்கது.

தலைவியொருத்தியின் உடல் வேறுபாடு கண்ட தாய் முதலியோர் வெறியாட்டெடுக்கின்றனர். தோழி அறத்தொடு நின்று உண்மை நிலையை வெளிப்படுத்துகின்றாள்.

மரங்கொல் கானவன் புனந்துளர்ந்து வித்திய
பிறங்குகுரல் இறடி காக்கும் பிறந்தாழ்
அஞ்சில் ஓதி அசையியற் கொடிச்சி
திருந்திழை அல்குற்குப் பெருந்தழை உதவிச்
செயலை முழுமுதல் ஒழிய அயல(து)
அரலை மாலை சூட்டி
ஏமுற்று றன்றுஇவ் அழுங்கல் ஊரே.[88]

88. குறுந்-214

[மரம் கொல்-மரங்களை வெட்டிய; துளர்ந்து-உழுது; குரல்-கதிர்; இறடி-தினை; காக்கும்-காவல் செய்யும்; அசை இயல்-மெல்லிய சாயல்; கொடிச்சி-தலைவி; தழை-தழை ஆடை; உதவி-அளித்து; செயலை-அசோகு; அயலது-அருகிலுள்ளது; அரலை-அரளி; அழுங்கல் ஊர்-ஆரவாரத்தையுடைய ஊர்; ஏம்உற்றன்று-மயக்கம் உற்றது]

''இவளுக்குத் தழை உடை உதவி அன்பு செய்தவன் ஒருவன் இருப்ப அதனை அறியாது இது முருகனால் வந்தது என மயங்கி வெறி எடுப்பதனால் பயனில்லை'' என்று இதில் தோழி அறத்தோடு நின்று உண்மையை வெளிப்படுத்துகின்றாள். அயலது - அயன்மையுடையது; இதனைச் சூட்டுவதனால் பயனில்லை என்ற குறிப்பும், அரலை மாலை கொய்வார் அதனருகே நின்ற செயலையின் நிலை கண்டு அது தழையின்றி நிற்பதன் காரணத்தை ஆய்ந்திலர் என்ற குறிப்பும் தோன்றுமாறு கூறும் தோழியின் நயவுரை மகிழ்ந்து போற்றுதற்குரியது.

ஐங்குறுநூற்றில் நெய்தல் திணையில் ''தாய்க்குரைத்த பத்து''[89] என்ற தலைப்பில் தோழி செவிலித் தாய்க்கு அறத்தொடு நிலைவகையால் கூறும் பத்துப் பாடல்கள் உள்ளன. பல்வேறு உணர்ச்சி நிலைகள் பல்வேறு வகையால் கூறப் பெற்றுள்ள அப்பாடல்கள் பன்முறை பயின்று நுகர்தற்குரியவை.

**உடன்போக்கு :** இதிலும் தோழியின் திறம் பாராட்டும் வகையில் அமைந்திருக்கும்.

தலைவியொருத்தியின் காதல் வாழ்வில் இற்செறிப்பும் காப்பு மிகுதியும் நேரிடுகின்றன. தலைவி கோரிய காதலனுக்கு வரைவுடன்பட மறுக்கின்றனர் பெற்றோர்கள்; தலைவியை வேறோர் இளைஞனுக்கு மணம் பேசவும் முனைகின்றனர். காதலர்கள் சந்திக்கும் வாய்ப்பும் இல்லாமல் போய்விடுகின்றது. இந்நிலையில் உடன்போக்கு ஒன்றே வழியெனத் துணிகின்றாள் தோழி. இதற்குத் தலைவனை உடன்படுவித்து அச்செய்தியைத் தலைவிக்குக் கூறி அவளையும் உடன்படுவிக்க முனைகின்றாள்.

89. ஐங்குறு - 11ஆம் பத்து

குன்றக் குரவன் ஆரம் அறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்தள் நாறும்
வண்டிமிர் சுடர்நுதல் குறுமகள்
கொண்டனர் செல்வர்தம் குன்றுகெழு நாட்டே.[90]

[ஆரம் - சந்தன மரம்; அறுத்தென - அறுத்துச் சுட்டமையால்; நாறும் - கமழும்; இமிர் - இசை பாடும்; நுதல் - நெற்றி; கொண்டனர் - அழைத்துப் போவார்; செல்வர் - தலைவர்]

''தலைவர் நின்னைத் தம் நாட்டுக்குக் கொண்டு போக உடன்பட்டுவிட்டனர்'' என்ற செய்தியைத் தலைவிக்கு உணர்த்துகின்றாள் தோழி. 'குன்றக் குரவன் ஆரம் அறுத்துச் சுட்டமையால் நறும் புகை சூழ்ந்து காந்தள் மலர் மணத்தோடு விரவிக் கமழும்' என்பது உள்ளுறை. இதில் ஆரம் - சுற்றத்தினர். அதனை அறுத்துச் சுடுதல் - அவர் தொடர்பறுத்து விடுதல்; நறுபுகை - தலைவி; காந்தள் மலர் மணம் - தலைவனோடு கூடிச் செய்யும் இல்லறப் புகழ். ''நீயும் நின் சுற்றத்தார் வருந்தினும் அவரைப் பிரிந்து போய்த் தலைவருடன் அவர் மனைக்கண் இருந்து அறம் விளைவித்துப் புகழ் விளைக்கக் கடவை'' என்பது உள்ளுறையாற் போந்த பொருள். இங்ஙனம் சாதுர்யமாகக் குறிபெச்சப் பொருளுடன் பேசும் தோழியின் திறத்தை எண்ணி மகிழ்க.

தலைவியொருத்தி தன்னுடன் உடன் போக்கிற்கு இசைந்தமையை உணர்ந்த தலைவன் தோழியிடம் பாலை நிலத்தின் கொடுமையையும் தலைவியின் மென்மையையும் கருதிசெலவழுங்கலுறுகின்றான். தோழி அவனுடன் இனிமையாகப் பேசி செலவு உடம்படச் செய்கின்றாள்.

நீர்கால் யாத்த நிறையிதழ்க் குவளை
கோடை யொற்றினும் வாடா தாகும்
கவணை [யன்ன பூட்டுப்பொரு]தசாஅ
உமணெருத் தொழுகைத் தோடுநிரைத் தன்ன
முளிசினை பிளக்கும் முன்பின் மையின்
யானை கைமடித் துயவும்
கானமும் இனியவாம் நும்மொடு வரினே.[91]

90. ஷை - 254
91. குறுந். 388

[கால் - அடியில்; யாத்த - கட்டப்பெற்ற; கோடை - மேல் காற்று; ஒற்றினும் - வீசினாலும்; கவணை - கவண்; பூட்டு - பிணிப்பு; பொருது - பொருதமையால்; அசா - வருந்துதலையுடைய; உமண் எருது - உப்பு வாணிகரின் எருதுகள்; ஒழுகை - வண்டிகளின்; தோடு - தொகுதி; முளி சினை - உலர்ந்த மரக்கிளை; முன்பு - வலிமை; கை - துதிக்கை; உயவும் - வருந்துகின்ற; கானம் - பாலை நிலம்]

''தலைவி உம்முடன் வந்தால் பாலைநிலமும் இனியதேயாகும்'' என்று கூறுகின்றாள் தோழி. ''நும்மொடு வாராளாயின் வீடும் இன்னாத தாகும்'' என்பது குறிப்பு. இதில் தோழி தலைமகனை உடம்படுத்திய திறம் பாராட்டத் தக்கது.

உடன்போக்கில் தலைவனுடன் போகும்படி உய்க்கும் தோழி ஓம்படை செய்யும் நிகழ்ச்சியைக் கூறும் பாடல் இது:

அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஓம்புமதி பூக்கேள் ஊர![92]

[அண்ணாத்தல் - நிமிர்தல்; வனம் - அழகு; நீத்தல் ஓம்பு - கைவிடாது பாதுகாப்பாய்]

இதில் தோழி, ''இவளை முதுமை எய்தினும் கைவிடாது பாதுகாப் பாயாக'' என்று கூறுதல் நம் மனத்தை உருக்குகின்றது. தலைவி பால் தோழி எவ்வளவு பற்றும் பாசமும் கொண்டிருக்கின்றாள் என்பது தெளிவாகின்றது.

கிட்டத்தட்ட இதே கருத்தினைக் கொண்ட குறுந்தொகைப் பாடலையும் காண்போம். ''இவளை எக்காலத்தும் அன்பு வைத்துப் பாதுகாப்பாயாக'' என்று தோழியின் கூற்றாக வரும் பாடல்:

பெருநன்று ஆற்றின் பேணாரும் உளரே
ஒருநன்று உடையள் ஆயினும் புரிமாண்டு
புலவி தீர அளிமதி இலைகவர்பு
ஆடமை யொழுகிய தண்ணறுஞ் சாரல்

92. நற் - 10

மென்னடை மரையா துஞ்சும்
நன்மலை நாட! நின்னல திலளே.[93]

[பெருநன்று - பெரிய நன்மை; ஆற்றின் - செய்தால்; பேணாரும் - போற்றாதாரும்; ஒரு நன்று - சிறிதளவு நன்மை; புரி மாண்டு - விருப்பம் மாட்சிபட்டு; தீர-நீங்கும் படி; அளிமதி - பாதுகாப்பாயாக; ஆடுஅமை - அசைகின்ற மூங்கில்கள்; ஒழுகிய - நீண்டு வளர்ந்த; மரைஆ - காட்டுப் பசு]

இதில் "இவள் நினக்குப் பல வகையிலும் இன்பம் தரும் நிலையில் உள்ளாள்; இவள்பால் இப்பொழுது நீ அன்பு பூண்டு பாதுகாத்தல் பெரிதன்று; பெரிய உதவி செய்தாரைப் பாதுகாத்தல் உலகில் யாவர்க்கும் இயல்பே. ஆதலின் இவளால் இப்பொழுது பெறும் இன்பத்தை அடைய முடியாத முதுமைப் பருவத்திலும் இவளுக்கு நின்பாலுள்ள அன்பொன்றையே கருதிப் பாதுகாத்து வருவாயாக இவளைப் பாதுகாப்பதற்கு வேறு யாரும் இலர்" என்று தோழி கூறித் தலைவியைத் தலைவனுடன் விடுத்தலைக் காண்க.

### (ஆ) கற்பு நெறியில்

**தலைவனைத் தெருட்டுதல்:** பரத்தையிற் பிரிவினை அறிந்த தோழி அவன் வாயில் வேண்டி வந்தபொழுது அவனைத் தெருட்டும் நிகழ்ச்சிகளை அகப்பாடல்களில் காண்கின்றோம். தோழிக்குரிய இந்த உரிமையைத் தொல்காப்பியரும்,

பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி
இழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்[94]

என்ற விதியால் பெறவைப்பர். 'பிழைத்து வந்திருந்திருந்த கிழவன்' என்பதற்குப் 'பரத்தையர் மனைக்கண் தங்கி வந்து அகனகர் புகுதாது புறத்திருந்த தலைவன்' என்று பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர். இதற்குப் பொருந்தும் ஒரு சில நிகழ்ச்சிகளைக் காட்டுவோம்.

---

93. குறுந். 115
94. கற்பியல்—9 (அடி 8-9) (இளம்)

தலைவனின் புறத்தொழுக்கத்தை நன்கு அறிந்த தலைவி வருத்தம் மிகுந்து உடல் மெலிவுற்றிருக்கின்றாள். இந்நிலையில் தன் தீயொழுக்கத்தைத் தலைவி அறியாள் என எண்ணித் தான் தூயனே என்று தெளித்துக் கூறுவதைக் கேட்கின்றாள் தோழி அவனுக்கு மறுமாற்றம் உரைக்கும் முறையில் வரும் பாடல் இது:

பகல்கொள் விளக்கோ டிராநாள் அறியா
வெல்போர்ச் சோழர் ஆமூர் அன்னஇவள்
நலம்பெறு சுடர்நுதல் தேம்ப
எவன்பயஞ் செய்யுநீ தேற்றிய மொழியே?[95]

[சுடர்நுதல்-ஒளியையுடைய நெற்றி; தேம்புதல்-ஒளி மழுங்குதல்; தேற்றிய மொழி-தெளிவுறுத்திக் கூறிய சொல்; ஆமூர்-சோழ நாட்டின் கண்ணதாகிய ஓரூர்.]

''பண்டு (களவில்) நீ செய்த தேற்றுரையால் நலம் பெற்ற இவள் நுதல், நீ அவ்வுரை பொய்ப்ப ஒழுகுவதனால் இன்று அழகிழந்து ஒளி மழுங்குவதாயிற்று. நின் தெளிவுரைகள் பயனில் பொய்ம் மொழிகளேயாகும்'' என்று கூறி வாயில் மறுக்கின்றாள்.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனைத் தலைமகள் புலந்து கொள்ளுகின்றாள். இதனைத் தோழியினால் தணிக்கக் கருதி அவள்பாலுறுகின்றான். தோழி தலைவியின் ஊடல் தீரும் வண்ணம் அவனைக் கடிந்து கூறித் தெருட்டுவதுடன் வாயிலும் நேர்கின்றாள்.

அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்
மறுகால் உழுத ஈரச் செறுவின்
வித்தொடு சென்ற வட்டி பற்பல
மீனொடு பெயரும் யாணர் ஊர!
நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
செல்வம் அன்றுதன் செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கண் செல்வஞ் செல்வமென் பதுவே.[96]

95. ஐங்குறு—56
96. நற். 210.

[அரிகால்-நெல் அறுத்து நீங்கப்பெற்ற வயல்; ஈரச்செறு-சேற்றில்; வட்டி-கடகப் பெட்டி; நெடிய மொழிதல்-அரசரால் மாராயம் பெறுதல்; வினைப் பயன்-வினைப் பயனால் எய்தப்பெறுவன; புன்கண்-துன்பம்; மென்கண்-இனிய தன்மை, கண்ணோட்டம்]

இதில் தோழி, "ஐய, உம் செல்வமும் பெருமைகளும் உமக்குச் சிறப்பாகா. உம்மை நம்பினோர்மீது நீர் காட்டும் கண்ணோட்டம் ஒன்றே செல்வம் என்று கூறத்தக்க தாகும். சான்றோர் ஒப்பும் செல்வமும் அதுவேயாதலின், தலைவியைக் கைவிடாது தழுவி வாழ்வீராக" என்று தலைவனை நொந்தும் தலைவிபால் இரங்கியும் கூறுதலைக் காண்க.

தலைவி ஊடியிருக்கின்றாள் ஏதோ ஒரு காரணத்தின் பொருட்டு. அவளுடைய உடம்பாடு பெறுவதற்குத் துணை புரியுமாறு தலைவன் தோழியை வேண்டுகின்றான். தோழி அவனுக்கு மறுமாற்றம் உரைக்கும் முறையில் கூறுவது இது:

வேம்பின் பைங்காய்என் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர் இனியே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
'வெய்ய உவர்க்கும் என்றனிர்'
ஐய! அற்றால் அன்பின் பாலே.[97]

[தேம் பூ கட்டி-இனிய பொலிவு பெற்ற வெல்லக் கட்டி; இனி-இப்பொழுது; திங்கள்-மாதம்; தண்ணிய-குளிர்ந்த; பனி-குளிர்ச்சியையுடைய; வெய்ய-வெப்பத்தையுடைய; அன்பின்பால்-அன்பின் பகுதி; அற்று-அத்தகையது]

இதில் "இயல்பாகவே கைப்புடையதாகிய வேப்பங்காய் முன்பு (களவில்) தலைவியின் கைப்பட்ட காரணத்தால் நுமக்கு இனிதாயிற்று. இயல்பாகவே இனிய நீர் இவள் கைப்பட்ட காரணத்தால் இப்பொழுது நுமக்கு உவர்ப்புடையதாயிற்று. அன்றும் இவளே தந்தனள்; இன்றும் இவளே தந்தனள். ஆயினும் நும்பால் இம்மாறுபாடு உண்டாயதன் காரணம் நும் அன்பு மாறியதே யாகும்" என்று தோழி தலைவனது அன்பின் திரிபைப்

97. குறுந். 196.

புலப்படுத்தியது காண்க. "ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது வானோர் அமிர்தம் புரையுமால் எமக்கென, அடிசிலும் பூவும் தொடுத்தற்கண்"[98] தலைவன் கூறிய கூற்றினைத் தோழி கொண்டு கூறுவது உணர்தற்பாலது.

**தலைவியை அறிவுறுத்தல் :** பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் வாயில் வேண்டுகின்றான். தோழி அவனை எதிரேற்று முகமன் வழங்குகின்றாள். ஆயின் அவள் இதனைத் தலைவிக்குணர்த்தியபொழுது அவள் உடன் படவில்லை. உடனே அவளுக்கு அறிவுறுத்துகின்றாள். தொல்காப்பியரும்,

அடங்கா ஒழுக்கத்து அவன்வயின் அழிந்தோளை
அடங்கக் காட்டுதற் பொருளின் கண்ணும்[99]

[அழிந்தோள்-நெஞ்சழிந்தோள், வருந்துபவள்]

என்று இதற்கு விதி செய்து காட்டுவர். நற்றிணையில் ஒரு நிகழ்ச்சி: மேற் கூறிய நிலையிலுள்ள தலைவியை நோக்கிக் கூறு கின்றாள்.

பழனப் பால் முயிறுமுசு குடம்பை
கழனி நாரை உரைத்தலிற் செந்நெல்
விரவுவெள் அரிசியின் தாஅம் ஊரன்
பலர்பெறல் நசைஇம் இல்வா ரலனே;
மாயோள், நலத்தை நம்பி விடலொல் லாளே;
அன்னியும் பெரியன் அவனும் விழுமிய
இருபெரு வேந்தர் பொருகளத் தொழித்த
புன்னை விழுமம் போல
என்னொடு கழியும் இவ்இருவரது வரவே.[100]

[பாகல்-பலா; குடம்பை-கூடு; கழனி-வயல்; உரைத்தல்-உறிஞ்சுதல்; பலர்ப்பெறல் நசைஇ-பரத்தையர் பலரை முயங்குதலை விரும்பி; நம்பி-விரும்பி; விடல்-துனியை

98. கற்பியல்-5 (இளம்)
99. ஷை-9 (இளம்)
100. நற்-180. அன்னிக் குடியிலுள்ள அன்னி என்பவன் குறுக் கைப் பறந்தலை என்னும் போர்க்களத்தில் தேரழுந்தூரி லுள்ள திதியன் என்பானது காவல் மரமாகிய புன்னையை வெட்டி வீழ்த்திய வரலாறு இதில் குறிக்கப் பெறுகின்றது (ஒப்பிடுக. அகம். 26, 145)

விடல்; பெரிய அவன்-திதியன்; விழுமிய-சிறந்த; பொரு களம்-குறுக்கை; ஒழித்த-வெட்டிச் சாய்த்த; விழுமம் புன்னை-பூவும் மலரும் மிக்க புன்னை]

இதில் "அவர் விரும்புங்கால் நீ மிஞ்சுகின்றாய்; நீ விரும்பினால் அவர் மிஞ்சுகின்றார். குறுக்கைப் பறந்தலைப் போரில் வீழ்ந்த புன்னைபோல நான் இறக்கும் நாளில்தான் நீங்கள் சேர்ந்து வாழ்வீர்கள். நான்தான் உங்கள் பூசலுக்குக் காரணம் போலும்" என்று மனம் உருகப் பேசுகின்றாள் தோழி. இதனால் தலைவி யின் ஊடல் தீர்கின்றது.

தலைவன் பாணனைக் கருவியாகக் கொண்டு பரத்தையிற் பிரிகின்றான். இதனால் நெஞ்சழிந்த தலைவியின் ஊடல் மிஞ்சிப் போகின்றது; தணியாத நிலையை அடைகின்றது. பாணன் கேட்கு மாறு தலைவியிடம் கூறுகின்றாள் தோழி:

வயல்வெள் ஆம்பல் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
ஓய்விடு நடைபகடு ஆரும் ஊரன்
தொடர்புநீ வெஃகினை யாயின் என்சொல்
கொள்ளல் மாதோ முள்ளெயிற் றோயே!
நீயே பெருநலத் தகையே; அவனே
நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்
தலைகமழ் புதுமலர் ஊதும்
வண்டென மொழிப மகன் என்னாரே.[101]

[சூடு-நெற்சூடு; புனிறுஆ-அணிமையில் ஈன்ற பசு; மிச்சில்-மிகுந்த உணவு; ஓய்விடு நடை-உழுதுவிட்ட ஒய்ந்த நடையை யுடைய: பகடு-எருது; ஆரும்-தின்னும்; வெஃகு தல் விரும்புதல்; கொள்ளல்-கொள்வாய்; நலத்தகை இளமையும் தகுதிப்பாடும் உடையை; நடுநாள்-நடுயாமம்; மகன் என்னார்-ஆண்மகன் என்று சொல்லார்]

இதில், "புனிற்றா தின்ற மிச்சிலை உழுதுவிடு பகடு சென்று தின்றாற்போல நீ இளமைச் செவ்வி யெல்லாம் அவனை நுகர்ந்து புதல்வனைப் பயந்த பின்னர் நீ உண்ட மிச்சில் போன்ற அவனைப்

101. நற்-290.

பிறர் நுகர்கின்றனர்; அது நினக்கு இழுக்கன்று'' என்று கூறி அறிவுறுத்தித் தோழி அவள் ஊடலைத் தணித்தல் கண்டு மகிழத் தக்கது.

இங்ஙனமே திருவள்ளுவர் படைத்துக் காட்டும் தோழி,

''உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்''[102]

[நீளவிடல்-அளவறிந்து உணராது கலவிமேல் எழுந்த குறிப்பு கெடும் அளவும் செல்லல்.]

என்று கூறித் தலைவியின் புலவியொழிந்து வாயில் நேரும் வகையில் சொல்லிய அவளது சதுரப்பாட்டினை எண்ணி மகிழ்க.

இங்ஙனம் தமிழ் நெஞ்சம் கண்ட தோழியின் திறனெல்லாம் தொல்காப்பியம், இறையனார் களவியல், நம்பி அகப்பொருள் போன்ற இலக்கண நூல்களில் தொகுத்து உரைக்கப்பெறும்; சங்க இலக்கியங்கள் இவளைப் பல்வேறு கோணங்களில் விரித்துப் பேசும். சுருங்கக் கூறினால் தமிழ் நெஞ்சம் படைத்த தோழி,

...தாய்போற் பிரியமுற ஆதரித்து
நண்பனாய் மந்திரியாய் நல்லா சிரியனுமாய்
பண்பிலே தெய்வமாய் பார்வையிலே சேவகனாய்
எங்கிருந்தோ வந்தான்.[103]

என்று பாரதியார் படைத்துக் காட்டும் கண்ணன்-சேவகனுடன் ஒப்பிட்டுப் பேசக் கூடிய பெருமை வாய்ந்தவள்.

## (vi) பரத்தையர்

அகப் பொருள் நூல்களில் 'பரத்தையர்' என்று கூறப்பெறும் ஒருவகைப் பெண்டிர் அக்காலத்தில் இருந்தனர். இன்று செல்வர் வாழும் பகுதிகளில் இத்தகையவர் பலர் இருப்பது போலவே, அன்றும் இருந்திருத்தல் கூடும். இவர்கள் அக்காலத்தில் அறவே இலர் என்று கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. இல்லா

102. குறள்-1302
103. பாரதியார் கண்ணன்-என் சேவகன், அடி (52-55)

தைப் புலவர்கள் படைத்து மொழிந்தனர் என்று நினைத்தலும் சரியன்று. பரத்தையரைப்பற்றி இளம்பூரணர் கூறுவது: ''பரத்தையராவார் யாவரெனின், அவர் ஆடலும் பாடலும் வல்லராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டுந் தங்காதார்''[104] என்பது. பண்டைக் காலத்தில் இங்ஙனம் ஒருவகையார் உளராய உண்மையினை மறைக்காது எடுத்துக் காட்டிய ஒரு சிறப்பினானே நாம் நம் பண்டைய நூல்களிடத்து, அவை கூறும் ஏனைய தலைவன் முதலியோர் பெருமைகளை உள்ளதை உள்ளபடியே கூறும் உண்மைக் கூற்றுகளாகத் தெளிந்து ஒரு தனி மதிப்புக் கொள்ளுகின்றோம். உரையாசிரியர்களும் இப்பரத்தையர் இவ்விக் காரணங்களால் படைத்து மொழியப்பெற்றவர், உண்மையில் இல்லாதவர் என்று எளிதில் கூறி ஒதுக்கி விடாமல் இவர்களையும் இவர்களுடன் ஒரோவழிக் கூட்டுறவு கொள்ளும் தலைவர்களையும் இயன்றவா லெல்லாம் போற்றி எழுதிச் செல்வாராதலையும் காண்கின்றோம்.

நெருப்போரன்ன நீதி நூலுடையோர் இத்தகையோரை இறப்பவும் வெறுத்துக் கூறுதல் அவர் கொண்ட கொள்கைக்குச் சாலுவதேயாகும். ஆயினும், நம் இலக்கண இலக்கிய நூலோரும் அவற்றின் உரையாசிரியர்களும் இவர்பால் இரக்கமுடையராகி இவர்கள் படிப்படியாக உயரும் நிலைகளையும் அமைத்துக் காட்டுகின்றனர். அகப்பொருள் விளக்க ஆசிரியர்,

> யாரையும் நயவா இயல்பிற் சிறந்த
> சேரிப் பரத்தையர் மகளி ராகிக்
> காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர்.[105]

என்பதாகக் காதற் பரத்தையரை அறிமுகப் படுத்துவர். அவர் ஒளுள்ளும் தலைமகன் வரைந்து கொள்வதற்கும் உரியர் என்பதனை.

> அவருளும் வரைதற் குரியோர் உளரே.[106]

என்ற நூற்பாவால் புலப்படுத்துவர். இங்ஙனம் பண்டை ஆசிரியர்கள் பரத்தையரினின்றும் காதல் பரத்தையர் ஆவதற்கும் அதன் மேல் காமக் கிழத்தியாக, இற்கிழத்தியராக வரைந்து கொள்ளும்

104 கற்பியல்-10 இன் உரை.
105. நம்பிஅகப். 114
106. ஷை-115

நிலை மேவற்கும் இடம் அமைத்துச் செல்லுகின்றனர். தொல் காப்பியர் பரத்தையர்களை 'காமக் கிழத்தியர்' என்ற பெயரால் குறிப்பர்; இவர்களுக்குரிய கிளவிகளாக ஏழு கிளவிகளையும் புலப் படுத்துவர்.[107] இவ்விடத்தில் இளம்பூரணர் கூறுவது: "காமக் கிழத்தியராவார் பின் முறை ஆக்கிய கிழத்தியர். அவர் மூவகைப் படுவர்: ஒத்த கிழத்தியரும், இழிந்த கிழத்தியரும், வரையப் பட்டாரும் என. ஒத்த கிழத்தியர் முந்துற்ற மனையாளன்றிக் காமம் பொருளாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல். இழிந்தாராவார்—அந்தணர்க்கு அரச குலத்தினும் வணிக குலத்தினும் வேளாண் குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு ஏனை இரண்டு குலத்தினும் கொடுக்கப்பட்டாரும் வணிகர்க்கு வேளாளர் குலத்தில் கொடுக்கப்பட்டாரும். வரையப் பட்டார்-செல்வராயினர் கணிகை குலத்தினுள்ளார்க்கும் இற் கிழமை கொடுத்து வரைந்து கோடல். அவர், கன்னியில் வரையப் பட்டாரும் அதன் பின்பு வரையப்பட்டாரும் என இரு வகையர். அவ்விருவரும் உரிமை பூண்டமையால் காமக்கிழத்தியர்பாற் பட்டனர்'' என்பது. இதே இடத்தில் நச்சினார்க்கினியர், "காமக் கிழத்தியராவார் கடனறியும் வாழ்க்கையுடையராகிக் காமக் கிழமை பூண்டு இல்லறம் நிகழ்த்தும் பரத்தையர். அவர் பலராதலிற் பன்மையாற் கூறினர். அவர் தலைவனது இளமைப் பருவத்திற் கூடி முதிர்ந்தோரும் அவன்தலை நின்று ஒழுகப்படும் இளமைப் பருவத்தோரும், இடைநிலைப் பருவத்தோரும் காமஞ் சாலா இளமையோரும் எனப் பல பகுதியினராம். இவரைக் 'காமக் கிழத்தியர்' எனவே, 'கண்ணாத காமக்கிழத்தியரும்' உளராயிற்று. அவர் கூத்தும் பாட்டும் உடையராகி வரும் சேரிப்பரத்தையரும், குலத்தின்கண் இழிந்தோரும் அடியரும் வினைவல பாங்கினரும் பிறருமாம்'' என்று உரைப்பர். இவற்றையெல்லாம் மனத்திற் கொண்டு பிற்காலத்து நாற்கவிராச நம்பி,

ஒருவன் தனக்கே உரிமை பூண்டு
வருகுலம் பரத்தையர் மகளி ராகிக்
காமக்கு வரைந்தோர் காமக் கிழத்தியர்.[108]

[காமக்கு-காமங் காரணமாக]

---

107, கற்பியல்-10
108. நம்பி அகப்-113.

என்று காமக்கிழத்தியரின் இலக்கணமும் வகுப்பாராயினர். அகப் பொருள் நூல்களில் காணும் பரத்தையர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தலைவனைப்பற்றி நின்றவர் என்று கொள்ள இடம் உண்டு. இளம்பூரணரும் "இற்கிழத்தி, காமக்கிழத்தி என்பார் உள்ளப் புணர்ச்சியானாதல் மெய்யுறு புணர்ச்சியானாதல் வரையப்பட்டாராகப் பொருட் பெண்டிராகிய காதற்பரத்தையர் கூட்டம். ஒத்த காமமாகியவாறு என்னை எனின், அவரும் பொருளானாதல் அச்சத்தானாதல் அன்றி, அன்பினாலாதல் கூடு தலின், அதுவும் கந்தர்வத்தின்பாற்படும். அவ்வாறன்றி அவரைப் பிறிது நெறியாற் கூடுமாயின் இவன் (தலைவன்) மாட்டுத் தலைமையின்றாமென்பது உணர்ந்து கொள்க" என்று காதற் பரத்தையரின் சிறப்பினைக் கூறியிருத்தல் காண்க.

அகத்திணை யொழுக்கத்தில் மருதத்திணைப் பகுதி ஒப்புயர்வற்ற குணங்களாற் சிறந்த தலைவன் பெருமைக்கு இழுக்காகவே தோன்றுகின்றது. இதனைத் தலைவியின் ஒழுக்கந் தவறாத கற்புத் திறனைப் புலப்படுத்தல் கருதியும் அவள் ஊடற்குக் காரணமாய் இன்பம் மிகுவித்தல் கருதியும் நாடக வழக்காகப் புலவர்கள் அமைத்த வழக்கு என்று கொள்ளலே ஏற்புடைத்தாகும். பரத்தைமை தமிழர் வாழ்க்கை நாகரிகத்தில் ஒரு பகுதி எனக் கோடல் தவறு. இதனால் தமிழகத்தில் பரத்தைமையே இல்லை என்று சாதித்தலும் அறிவுடைமையன்று. பரத்தைமை இல்லாத நாடே இல்லை என்பதுதான் உண்மை. இதனை நன்குணர்ந்த தொல்காப்பியர்,

> இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்
> அவையில் காலம் இன்மை யான[110]

என்றும்,

> காமப் பகுதி கடவுளும் வரையார்[111]

என்றும் உண்மை இயல்பினை உணர்த்திய பெருமை உணர்ந்து போற்றற்குரியது. நச்சினார்க்கினியரும் தம் உரையில்[112] "அவன்

109. களவியல்-16 இன் உரை.
110. பொருளியல்-52 (இளம்)
111. புறத்திணை-23 (இளம்)
112. களவியல்-20 (நச்)

கண் பரத்தைமை இன்றேனும் காதல் மிகுதியால் அங்ஙனம் கருதல் பெண் தன்மை'' எனக் குறிப்பிட்டிருத்தலும் அறியத் தக்கது. தமிழர் வாழ்வில் பரத்தைமை ஒரு பகுதியாக இருந் திருப்பின் வள்ளுவப் பெருந்தகையும் காமத்துப் பாலில் பரத்தைமை என்ற பகுதியை அமைத்திருந்திருப்பார். ''பரத்த நின் மார்பு''[113] என்று தலைவனைக் குறிப்பிடும் பெறும் ஓரிடந் தவிர, பரத்தையர் எனப் பெண்பாலார் ஒரு தனி வகுப்பினராய் இருந்ததாகக் கொள்ளவும், ஆண்மக்களும் பரத்தை உறவு கொள்ளை நாகரிகமாகக் கொண்டனர் என்று கருதவும் இடம் இல்லை. பரத்தமை அவ்வியல்பைக் கொண்ட தனிப்பட்ட மக்களைக் குறிப்பனவே அன்றி அவ்வியல்பு கொண்ட ஓரினத் தாரைக் குறிப்பதாகக் கொள்ளல் சிறிதும் பொருக்தாது.

பண்டைய அக இலக்கியங்களில் பரத்தமைபற்றிக் காணப் பெறும் ஒரு சில கருத்துகளை ஈண்டுக் காண்போம். பரத்தையர் களை மலர்களாகவும் தலைவனை வண்டாகவும் உருவகித்துக் கூறும் மரபு உண்டு.

அவனே,

'நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்
தண்கமழ் புதுமலர் ஊதும்
வண்'டென மொழிப 'மகன்'என் னாரே.[114]

என்று விறலிமேல் வைத்துப் பரத்தை கூறுவதைக் காண்க. தலைவனைத் தான் சூழ்ச்சி செய்து மடக்கிக் கொள்கின்றதாகத் தலைவி தன்னைப் பழி தூற்றுவதாகக் கேள்வியுறுகின்றாள் பரத்தையொருத்தி. உடனே பாங்காயினாரை நோக்கிக் கூறு கின்றாள்:

மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்
'வண்டின் மாண்குணம் மகிழ்நன்கொண் டான்கொல்?
அன்ன தாகலும் அறியாள்,
எம்மொடு புலக்குமவன் புதல்வன் தாயே.[115]

113. குறள்-1311 (புலவி நுணுக்கம்)
114. நற்-290
115. ஐங்குறு-90

[மகிழ்நன் - தலைவன்; அன்னதாகலும் - அத்தகையது ஆதலும்; புலக்கும்-வெறுக்கும்; புதல்வன் தாய்-கலவிக்கு உதவாதவள் என்ற குறிப்பில் கூறியது]

இதில், ''மலர்தோறும் சென்று வண்டுகள் படிந்து மதுவுண்டு களிப்பதுபோல் அவள் தலைவனும் அளவிறந்த காதற் பரத்தை யரைத் தோய்ந்து காமவின்பம் நுகர்கின்றான். வண்டுகளின் பண்பு கண்டு இவன் பயின்றனனா? இவன் பண்பு கண்டு வண்டுகள் இவனிடம் பயின்றனவா? என ஐயமுறும்படி அவன் செயல் இருக்க நான்தான் காரணம் என்று என்னோடு பிணங்கு கின்றாளே தலைவி? என்னையும் ஒரு காலத்தில் விட்டுப் பிரிந்து தான் போவான்'' எனப் பரிவுடன் கூறுவாள்போலப் பரத்தை பகர்வதை அறிக.

காதற் பரத்தையொருத்தி தன்னைத் தலைவி இகழ்ந்து கூறினாளென்று அறிகின்றாள். உடனே சினந்து தலைவியின் பாங்காயினார் கேட்கும்படி கூறுகின்றாள்.

கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉம் ஊரன்
எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையும் காலுந் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே.[116]

[கழனிமாத்து-வயலருகிலுள்ள மாமரத்தினது; உகு-வீழ் கின்ற; பழன வாளை-பொய்கையிலுள்ள வாளை மீன்கள்; கதூஉம்-கவ்வி உண்ணுதற்கு இடமாகிய; எம் இல்-எம் வீட்டில்; பெருமொழி-எம்மை வயமாக்குதற்குரிய பெரு மொழி; புதல்வன் தாய்-மனைவி]

இதில் தலைவன் வீட்டில் இறைமை தலைவியின் பாலதாக, அவள் இயக்கியாங்கு இயங்குதல் தலைவனது பண்பாகக் காட்டுகின்றாள் காதற்பரத்தை. தலைவியைத் தலைவனுக்கு மனைவி என்று கூறப்பொறாத இவள் அவளைப் புதல்வன்தாய் என்கின்றாள்; தலைவியின் முதுமையையும் இகழ்ந்த இகழ்ச்சிக் குறிப்பு இதில் தொனிக்கின்றது. இது மனம்வேறுபட்ட பரத்தையின் கூற்றாதலின்

116. குறுந்-8.

தலைவனின் பெருமைக்கு இழுக்காகாது. இன்னொருத்தி தலைவி அங்ஙனம் தன்னை இகழ்ந்து கூறியதாகக் கேட்டு, ''நானும் தலைவனும் புதுப்புனலாடப் புகுகின்றேம்; அவள் வல்லளாயின் தலைவனை என்னிடமிருந்து மீட்டுக் கொள்வாளாக'' என்கின்றாள்.[117]

தலைவியொருத்தி தன் கணவனைக் காதற்பரத்தை வலிதின் நயப்பித்துக் கொண்டாள் என்பதாகப் பழி கூறுகின்றாள். அதனைச் செவியுற்ற அப்பரத்தை ''வாளைமீன் தானிருந்த இடத்திலிருந்தே முயற்சியின்றித் தேமாங் கனியைப் பெற்றது போல் நானும் முயலாமலே தலைவனைப் பெற்றேன். அவன் என் பால் வலிய வந்தானேயன்றி யான் நயப்பிக்க வந்தான் அல்லன்'' என்கின்றாள்.[118] மற்றொரு பரத்தை தலைவிக்குப் பாங்காயினார் கேட்ப இவ்வாறு கூறுகின்றாள்: ''தலைவன் ஈண்டு எம்மொடு கூடாது வாளாவிருப்பின் இரண்டுடலை உடையேமாயும், கூடின் ஒருடலையுடையேமாயும் உள்ளேம். ஆதலின் அவன் கருத்திற்கேற்ப ஒழுகுதலன்றி யாம் வலிந்து அவனைக் கொண்டிலம்'' என்கின்றாள். இங்கு, 'பொய்கை யாம்பல் அணி நிறக் கொழுமுகை, வண்டுவாய் திறக்கும்' செய்தி கூறப்பெற்றுள்ளது. ஆம்பற்போது மலரும் செவ்வியறிந்து வண்டு வாய் திறக்கும்; தலைவன் பரத்தையுடன் இருக்குங்கால் அவள் உள்ளக் கருத்துக்கு ஏற்ப ஒழுகுவான் என்ற குறிப்பு இந்த உள்ளுறையினால் பெறப்படுகின்றது.

தலைவன் ஒருவன் காதற் பரத்தை யொருத்தியை மணம் புணர்ந்து கொண்டான். இதனைக் கேள்வியுற்ற தலைவி புலந்து கூறுகின்றாள்:

> வடுபுனல் வையை வார்மணல் அகன்றுறைத்
> திருமரு தோங்கிய விரிமலர்க் காவின்
> நறும்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு
> வதுவை அயர்ந்தனை என்ப; அலரே
> ... ... ... ... ... ...

117. ஷே-80.
118. ஷே-164

எழூவர் நல்வலம் அடங்க ஒருபகல்
முரசொடு வெண்குடை அகப்படுத் துரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்ற
வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே.[119]

[புனல்-நீர்; வார்மணல்-மிக்க மணல்; கா-சோலை; வதுவை-மணம்; அகப்படுத்து-பற்றிக் கொண்டு; உரை-புகழுரை; செல-பரவ; ஆர்ப்பு-ஆரவாரம்]

இதில் ''நறும்பல் கூந்தல் பரத்தையை மணந்து கொண்ட செய்தி பற்றிய அலர் தலையாலங் கானத்துப் பெரும் போரில் நெடுஞ் செழியன் வெற்றி கொண்டபோது மகிழ்ச்சிப் பெருக்கால் வீரர் களிடையே தோன்றும் ஆரவாரத்தினும் பெரிதாகப் பரவியது'' என்று தலைவி கூறுவதைக் காண்க.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் தன் ஆற்றாமை வாயி லாகப் புகுந்து பள்ளி இடத்தானாகின்றான். தலைவனை நெருங்கும் தலைவி சொல்லுகின்றாள்:

என், தொல்கவின் தொலையினும் தொலைக! சார
விடேஎன்: விடுக்குவென் ஆயின், கடைஇக்
கவவுக்கை தாங்கும் மதுகைய குவவுமுலை
சாடிய சாந்தினை; வாடிய கோதையை;
ஆசில் கலங்கழீஇ அற்று;
வாரல்; வாழிய கவைஇநின் றோளே![120]

[கவின்-அழகு; சார-நெருங்க; கவவுக்கை-அகத்திடுகைகள்; மதுகை-வலிமையுடைய; கோதை-மாலை; கலங்கழீஇ அற்று-கலங்கழித் தெறிந்த தாழியைத் தீண்டிய தன்மை போலாகும்]

இதில் தலைவி, ''என் பழைய அழகெல்லாம் கெட்டொழியினும் உன்னை என் அருகில் நெருங்க விடேன். நீ பரத்தையுடன் முயங்க லால் துவண்ட மாலையையுடையை. நீ சார்த்திக் கழித்த பாண்டம்'' என்று சொல்லுவதைக் காண்க. குறுந்தொகைத் தலைவியொருத்தி ஊடுவதையும் காண்போம். இங்குத் தலைவன் தன்பால் பரத்தைமை இல்லையென்று தெளிவிக்க, அதனைக் கேட்கும் தலைவி கூறுகின்றாள்:

---

119. அகம்-36
120. நற்-350

சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டின்
தெற்றென இறீஇயரோ ஐய மற்றுயாம்
நும்மொடு நக்க வால்வெள் எயிறே:
பாணர், பசுமீன் சொரிந்த மண்டை போல
எமக்கும் பெரும்புல வாகி
நும்மும் பெறேஎம் இரீஇயர்எம் உயிரே[121]

[சுரம்-பாலை நிலம்; கல்-மலை; கோடு-கொம்பு; தெற்றென-விரைவாக; இறீஇயர்-முறிவனவாக; எயிறு-பற்கள்; புலவாகி-வெறுப்பைத் தருவதாகி; நும்மும்-நும்மையும்; இரீஇயர்-அழிக.]

இதில், ''நும்மொடு நகை செய்த பற்கள் மலையைச் குத்திய யானையின் கொம்பைப்போல் முறிவனவாக; எம் உயிரும் மீன் நாற்றத்தைப் பெற்று வெறொன்றுக்கும் பயன் படாத பாணர் மண்டை (வாயகன்ற பாத்திரம்) போல் எமக்கே வெறுப்பு தருவதால், நும்மையும் பெறாமல் அழிவதாகுக'' என்று தலைவி வெறுப்புடன் கூறுவதைக் காண்க. இங்ஙனம் தலைவி ஊடலைக் காட்டும் இடங்கள் சங்க நூல்களில் அதிகமாகக் காணலாம்.

இனி, காதற் பரத்தையர் தலைவியுடன் எத்தகைய பகையும் கொள்ளாது, இயலுமிடங்களில் அவர்களுடன் நெருங்கிப் பழகு வதையும் இலக்கியங்களில் காணலாம். அகநானூற்றுக் காதற் பரத்தை யொருத்தி தலைவியை அணுகி,

மையீர் ஓதி மடவோய்! யானுநின்
சேரி யேனே அயலி லாட்டியேன்
நுங்கை யாகுவென நினக்கெனத் தன்கைத்
தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர
நுதலும் கூந்தலும் நீவிச்[122]

[மை ஈர்-கரிய பெரிய; ஓதி-கூந்தல்; அயலிலாட்டியேன்-அயல் மனைக்கு உரியவள்; நுங்கை-உனக்குத் தங்கை; தொடுமணி மெல்விரல்-மோதிரம் அணிந்த மெல்லிய விரல்: தைவர-தடவ]

121. குறுந்-169
122. அகம்-382.

சென்ற செய்தியை அறிகின்றோம். இன்னொரு தலைவியின் சிறிய புதல்வன் ஒருமுறை தேரோடும் வீதியில் நடந்து செல்வதைக் காண்கின்றாள் தலைவியின் பரத்தை. அவனது எழில் நலம் அவனுடைய தந்தையின் எழில் நலத்தைப்போல் விளங்கியதைக் கண்டு அச்சிறுவனின் அருகிற் சென்று, அங்கு ஒருவரும் இல்லை என்பதை உணர்ந்து அச்சிறுவனை நோக்கி 'என் உயிரனையாய்! வருக' என அழைத்துத் தன் மார்பகத்தே அணைத்துக் கொண்டாள். இதனைக் கண்ணுற்ற தலைவி அப் பரத்தையை நோக்கி, 'குற்றமற்ற குறுமகளே! நீ ஏன் மயங்குகின்றனை? நீயும் ஒரு முறையில் இச்சிறுவனுக்குத் தாயாகின்றாய்' என்று கூறினாள். தலைவியைக் கண்ட பரத்தை தன் களவினை ஒத்துக் கொள்வள்போல் தலை குனிந்து நின்றாள்.[123] ஈண்டுத் தலைவியின் பரந்த நோக்கமும் நாகரிகப்பண்பும் போற்றற்குரியனவாகும். சில பரத்தையர்கள் இங்ஙனம் தழுவுவதுடன் அணிகள் அணிந்தும் விடுக்கும் நிகழ்ச்சிகளையும் சங்கப் பாடல்களில் காணலாம். இன்னோர் ஆண்டின் முதியராயின் தலைவன் தலைவியருக்குள் நிகழும் பிணக்குகளைத் தீர்த்து வைக்கவும் முன் வந்து, தலைவிக்கு நன்மதி கூறி, அவளைத் தலைமகனுடன் கூட்டி வைத்து மகிழும் நிகழ்ச்சிகளையும் ஆங்குக் காணலாம். இதனை,

காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையில்
தாய்போற் கழறித் தழீஇய மனைவியைக்
காய்வின் றவன்வயிற் பொருத்தற் கண்ணும்[124]

என்னும் தொல்காப்பியக் கற்பியல் நூற்பாப் பகுதியால் உணரலாம்.

காதற் பரத்தையரின் பொருட்பற்றில்லா உள்ளப் பெருமையினையும் அவர் தலைவன்பால் உண்மை அன்புடையவர் என்பதற்கும் சான்றுகள் உள்ளன. தலைவியொருத்தி சேரிப் பரத்தையின்மீது இல்லாத பழியினை ஏற்றிக் கூறுகின்றாள். அதனைக் கேட்ட அப்பரத்தை தலைமகட்குப் பாங்காயினர் கேட்பக் கூறுகின்றாள்: "வாளை மீனை உண்ண வேண்டும் என்ற விருப்பங் கொண்ட நாரை அம்மீன் தன்னை அறியாவகை பையப் பையச் செல்லும். அதுபோல, தலைவன் வேறு பரத்தையரிடம் செல்லாமல் என்னுடன் வருவதற்கு யான் பையப் பையச் செல்கின்றேன். அவன் யான் வசிக்கும் சேரிக்கு வரட்டும்.

123. அகம்-16.
124. கற்பியல்-10

அவ்வாறு அவன் வந்தால் அவனுடைய பெண்டிர் காணும்படி அவனுடைய தாரும் தானையும் (ஆடை) பற்றி ஆரியர் பிடி யானையால் களிற்றைப் பிடிப்பதுபோல் என் அழகினால் யான் அவனை என் வயமாக்குவேன். அவ்வாறு செய்யேனாயின்,

இறந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாய் ஓம்பிய நாணே[125]
[யாய்-தாய்; ஓம்பிய-பாதுகாத்த; நலன்-அழகு]

என்று வெகுண்டு கூறுவதனால் அறியலாம் இதனால் சேரிப் பரத்தைக்குத் தலைவன் மாட்டுள்ள அன்பு எத்தகையது என்பது தெற்றெனப் புலனாகின்றது.

சிலப்பதிகாரத்து மாதவியின் குணங்களையும் அவள் கண்ணகி யின்பால் கொண்டிருந்த நன் மதிப்பினையும் நாம் நன்கு அறி வோம். இந்த வரலாற்று நூல்களில் பெயருடன் வரும் காதற் பரத்தையிடத்தும், அகப்பாடல்களில் சுட்டி ஒருவர் பெயர் கூறப் பெறாது வரும் காதற் பரத்தையரிடத்தும் உயர்ந்த குணங்களே காணப்பெறுதலை நாம் உணரலாகும். பரத்தையும் மனிதப் பிறவியே. அவள் ஓர் ஆடவனுடன் கூடி வாழ வேண்டும் என்பது இயல்பேயன்றோ? ஏதோ சூழ்நிலையின் காரணமாக, ஒருகால் ஆண்மக்களைவிடப் பெண்கள் பெருந்தொகையினராக இருப்ப தன் காரணமாக, பல பெண்டிர்கட்கு இங்ஙனம் 'பரத்தை வாழ்க்கை' நேரிடுகின்றது ஆயினும்,பொருளுக்காகத் தம் உடலை விற்கின்றனர் என்ற கருத்து அகப்பாடல்களில் யாண்டும் காணப் பெறவில்லை. மாறாக, அவர்கள் ஆணுடன் சேர்ந்து வாழ விரும்புதலையே காண்கின்றோம்.

சுருங்கக்கூறின், இப்பரத்தையர் கூட்டுறவு மதிக்கண் மறுப் போல் கருதப்பெறுவதொன்று. அம்மறுவும் மதியினை விட்டக லாது அம்மதிக்கும் அதன் ஒளிக்கும் அவற்றாலாகும் உலக நன்மைக்கும் எத்தகைய இடையூறும் விளையாது அம்மதியினைச் சார்ந்து நிற்பதால் அம்மதியுடன் பலரா லும் போற்றப்படுகின்றது. அங்ஙனமே இப்பரத்தையர்க்கூட்டுறவு தலைவற்கும் தலைவிக்கும் அவர்தம் வாழ்க்கை அறங்கட்கும் இடையூறு விளைக்காதிருத் தலின், அகநூலார் இதனையும் போற்றிக் கூறுவாராயினர் என்பது உணர்தற்பாலது.

---

125. அகம்-276

# தலைமக்களுடன் தொடர்புடையோர்

அகத்திணை உலகில் ஏதோ ஒருவகையில் தலைமக்களுடன் தொடர்புடைய மாந்தர்கள் ஒன்பதின்மர் காணப்பெருகின்றனர். அவர்கள் கண்டோர், அறிவர், பாணன், பார்ப்பார், விறலியர், கூத்தர், இளையோர், விருந்தினர், தேர்ப்பாகன் என்போர். அகப்பொருள் பற்றிய இலக்கண இலக்கிய நூல்களில் இவர்கள் காட்டப்பெறும் திறத்தினை இந்த இயலில் காண்போம.

## (1) கண்டோர்

இவர், களவுக் காலத்தில் தலைவியின் பெற்றோர் அவள் களவினை உணர்ந்து அவளை வேற்றவர்க்கு மணம் நிச்சயிக்கப் போகும்போதும், தலைவி தலைவனுடன் சென்று அவன் மனையில் வரைந்து கொள்ளும் நோக்குடன் செல்லும்போதும் காட்டு வழியில் சந்திக்கும் மாந்தர். இவர் கூற்று நிகழும் இடங்களைப் "பொழுது மாறும்"[1] என்ற நூற்பாவில் தொகுத்துக் கூறுவர் தொல்காப்பியர். உடன்போக்கில் தலைவனும் தலைவியும் தமரின் நீங்கிச் சென்ற காலத்தில் அவர்களைத் தேடிச் சென்ற செவிலியிடம் இடைச் சுரத்துக் கண்டோர் கூறியதாக ஒரு குறுந்தொகைப் பாடல் உள்ளது.

வில்லோன் காலன கழலே; தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்
யார்கொல் அளியர் தாமே யாரியர்

1. அகத்திணை-43 (இளம்)

சயிற்றொடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற்(று) ஒலிக்கும்
வேய்பயில் அழுவம் முன்னி யோரே.[2]

[வில்லோன்-வில்லையுடையவன்; காலன-காலில் உள்ளன; தொடியோள்-தோள் வளையை அணிந்தவள்; மேலவும்-மேல் உள்ளனவும்; அளியர்-அளிக்கத் தக்கார்; கால்-காற்று; வேய்-மூங்கில்; அழுவம்-பாலை நிலம்; முன்னி யோர்-கடந்து செல்ல நினைந்து வருபவர்கள்]

தலைவி காலில் அணிந்திருந்த சிலம்பினால் அவ்விருவருக்கும் மணம் நடைபெறவில்லை என்பதை உணர்ந்து இரங்கிக் கூறுகின் றனர். கண்டோர் சொல்லியதாக நற்றிணையிலும் ஒரு பாடல் வருகின்றது.

வையெயிற்(று) ஐயள் மடந்தை முன்னுற்று
எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே[3]

[வையெயிறு கூரிய பற்கள்; ஐயள்-மெல்லியள்; முன்னுற்று முன்னே செல்ல விடுத்து; கால்-காற்று; மால்வரை-பெரிய துறுகற்கள்; மிளிர்க்கும்-மோதும்; உரும்-இடி]

இதில் ''மடப்பமும் இளமையும் பொருந்திய இவளை முன்னே செல்ல விடுத்துப் பின்னே செல்லும் இந்த இளைஞனின் உள்ளம் காற்றொடுபட்ட மாரிக் காலத்தே மலை பிளக்க இடிக்கும் இடியைக் காட்டிலும் கொடியது போலும்;'' என்று கண்டோர் வருந்திக் கூறிச் செல்வதைக் காண்க. குடிப்பிறப்புடையாளை மயக்கி அவள் சுற்றத்தினின்றும் பெயர்த்து அழைத்தோடுகின் றான் என்னும் இறைச்சிப் பொருள் தோன்றுமாறு 'காலொடு பட்ட மாரி மால்வரை மிளிர்க்கும் உரும்' என்று கூறிள்யுள நயம் உணர்ந்து அநுபவிக்கத் தக்கது. ஐங்குறு நூற்றில் ஒரு பதிகம் முழுவதும் கண்டோர் கூற்றாகவும் பிறவாகவும் அமைந் துள்ளது.[4]

2. குறுந்-7
3. நற்-2
4. ஐங்குறு-36ஆவது பத்து (பாலை)

புன்கண் யானையொடு புலிவழங்(கு) அத்தம்
நயந்த காதலற் புணர்ந்து சென்றனளே
நெடுஞ்சுவர் நல்இல் மருண்ட
இடும்பை யுறுவிநின் கடுஞ்சூல் மகளே.[5]

[புன்கண்-புல்லிய கண்கள்; புலிவழங்கு-புலிகள் திரிகின்ற; அத்தம்-பாலைக் கொடுநெறி; நல்இல்-நல்ல இல்லம்; மருண்ட-மயங்கிய; இடும்பை-பெருந்துன்பம்; உறுவி-நுகர்பவள்; கடுஞ்சூல்-முதற்சூல்]

இதில், "நீ மருண்டு உன் வீட்டில் இற்செறித்த கொடுமை பொறாது, நின் நல்லில்லில் நின்னோடு உறைதலினும் யானையும் புலியும் வழங்கும் காட்டுவழியில் தன்னை நயந்தானோடு போதலே அறமாம் என்று துணிந்து போயினள்" என்று கூறுவர். 'அஃது அவட்கு அறமே ஆகும். ஆதலால் நீ வருந்தற்க' என்ற குறிப் பெச்சமாகப் பெற வைத்த நயம் உணர்ந்து மகிழத் தக்கது.

உடன் போக்கில் செல்லும் தலைவனையும் தலைவியையும் காணும் கண்டோர் கூறுவது. "அறியாச் சிறுபருவத்தில் தலைமயிரைப் பற்றிக் கலாம் விளைத்துக் கொண்டிருந்தனர்; செவிலித் தாயராலும் இதனைத் தடுக்க முடிவதில்லை. இவர்களைக் காணும் நிலை மகிழ்ச்சியைத் தருகின்றது" என்று கூறி,

நல்லைமன் றம்ம பாலே மெல்லியல்
துணைமலர்ப் பிணையல் அன்ன இவர்
மணமகிழ் இயற்கை காட்டி யோயே.[6]

[நல்லை-நன்மையுடையாய்; மன்ற-நிச்சயமாக;பால்-ஊழ்; துணை பிணையல்-இரட்டை மாலை; மணம் மகிழ்-மணம் புரிந்து மகிழும்; காட்டியோய்-உண்டாக்கினாய்]

என்று பால்வரைத் தெய்வத்தை வழுத்திச் செல்லுகின்றனர்.

ஐங்குறுநூற்றில் பாலைத் திணையில் 'உடன் போக்கின்கண் இடைச் சுரத்து உரைத்த பத்து[7] என்ற தலைப்பில் கண்டோர் கூற்றாகப் பல பாடல்கள் உள்ளன. பிரிந்து செல்லும் தலைவியின் உணர்ச்சி, தேடிச் செல்லும் செவிலித் தாயின் பல்வேறு உணர்ச்சி

5. ஷை-386
6. குறுந்-229
7. ஐங்குறு.-39ஆம் பத்து.

நிலைகள், தலைவி தலைவனுடன் செல்லும் நிகழ்ச்சியைக் குறித்துக் கண்டோர் கொள்ளும் பல்வேறு கருத்துகள் ஆகிய வற்றை ஈண்டுக் காணலாம்.

### (ii) அறிவர்

இவர் துறவுள்ளமும் முக்காலத்தையும் அறியும் ஆற்றலும் உடைய பெரியோர். இவரைத் தொல்காப்பியர்,

> மறுவில் செய்தி மூவகைக் காலமும்
> நெறியின் ஆற்றிய அறிவன்[8]

என்று சிறப்பிப்பர். முக்காலமும் உணர்ந்த முனிவர் என்பர் புறப்பொருள் வெண்பா மாலை உரையாசிரியர். கற்பு முதலிய நல்லவற்றைக் கற்பித்தலும் தீயவற்றைக் கடிதலுமாகிய செயலையுடையார் இவர்.[9] தலைவனும் தலைவியும் இவரது ஏவலைச் செய்து நிற்பர்; அவர்களை இடித்துரைத்து நல்வழி யிலே நிறுத்துதல் இவர்தம் இயல்பு.[10] தலைவன் தலைவியர் கற்பு நெறியில் ஒழுகுங்கால் இவர் வாயிலாக அமைவர்[11] இவர் கூற்றை யாவரும் கேட்டு அதன்வழி ஒழுகுவர்.[12] அறிவரின் உரிமையைக் குறித்து நம்பி அகப் பொருளும்,

> அறிவர் கிழவோன் கிழத்தியென் றிருவர்க்கும்
> உறுதி மொழிந்த உயர்பெருங் குரவர்[13]

என்ற நூற்பாவால் குறிப்பிடும். தலைவன் குறித்துச் சென்ற

8. புறத்திணை—16 (இளம்) ''அறிவன் என்றதுகணியனை. மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றுத லாவது, பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும் மின்னும் ஊர்கோளும் தூமமும் மீன் வீழ்வும் கோள் நிலையும் மழை நிலையும் பிறவும் பார்த்துப் பயன் கூறல். ஆதலான் 'மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன்' என்றார்'' என்று உரைப்பர் இளம்பூரணர்.
9. கற்பியல்-13 (இளம்)
10. ஷை-14 (இளம்)
11. ஷை-52 (இளம்): செய்யு-182 (இளம்)
12 ஷை செய்யு-189 (இளம்)
13. நம்பி அகப்-112

பருவம் (திரும்பும் காலம்) யாதென்று தோழி இவரை வினவிய தாகக் குறுந்தொகையில் ஓர் அழகான பாடல் உள்ளது.

ஆசில் தெருவில் நாய்இல் வியன்கடைச்
செந்நெல் அமலை வெண்மை வெள்ளிழு(து)
ஓரில் பிச்சை ஆர மாந்தி
அற்சிரம் வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே
மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை
எக்கால் வருவது என்றி
அக்கால் வருவர்எங் காத லோரே[14]

[ஆசு-குற்றம்; நாய்இல்-நாய் இல்லாத; வியன்கடை-அகன்ற வாயில்; அமலை-உருண்டை; இழுது-நெய்; ஓர்இல் ஒரு வீட்டில்; ஆர மாந்தி-வயிறு நிரம்ப உண்டு; அற்சிரம்-முன்பனிக் காலம் (அச்சிரம்); பெறீஇயர்-பெறுவாயாக; மின் இடை-மின்னைப் போன்ற இடையையுடைய தலைவி; கடைப் பெயல்-இறுதி மழை; எக்கால்-எப் பொழுது; என்றி-என்பாய்]

தலைவன் வாடைக் காலத்தில் வருவதாகக் கூறிச் சென்றான். அப்பருவம் எப்பொழுது வரும் என்று அறியும் பொருட்டுத் தோழி அறிவரை வினவுகின்றதாக அமைந்துள்ளது இப்பாடல்.

தலைவனைக் கழறி எல்லையின் கண்ணே நிறுத்துதல் அறிவர்க்குரியது என்பதற்கு எடுத்துக் காட்டாக இளம்பூரணர் ஒரு குறுந்தொகைப் பாடலைக் காட்டுவர்.

உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே; இஃதோ
ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை
பெருநிலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற்(று) என்னும்இவ் வூரே.[15]

---

14. குறுந்-277. அறிவர் பெறும் உணவை 'ஓரில் பிச்சை' என்று சிறப்பித்ததனால் இதனை இயற்றிய புலவர் **ஓரில்பிச்சையார்** எனப் பெயர் பெற்றார்.

15. குறுந்-295 இது உ. வே. சா. அவர்களால் தோழி கூற்றாகக் கூறப்பெற்றுள்ளது.

[உடுத்தும்-உடையாக உடுத்தும்; தொடுத்தும் - மாலை யாகத் தொடுத்து அணிந்தும்; பூண்டும்-குழை முதலிய அணிகலன்களாக அணிந்தும்; செரீஇயும்-கூந்தலில் செருகி யும்; ஆயம்-பரத்தையர் கூட்டம்; துவன்றி-நெருங்கி; ஆன்-பசு; வல்சி-உணவு; பெருநலம்-மிக்க அழகு; குறு மகள்-இளைய தலைவி; இனி-இப்பொழுது]

இதில், ''நீ நீர் விழாவை அயர்ந்து வருகின்றாய். தலைவியை நீ மணப்பதற்கு முன்னர் இவ்விழவுக்குரியவளம்[16] நின்பால் இல்லை. இவள் நின் துணைவியாக வந்த பிறகே நீ செல்வம் பெற்றாய் என்று ஊரார் கூறினர் இப்படியிருப்பவும் நீ இவளைப்புறக்கணித் தாய்'' என்று அறிவர் தலைவனை இடித்துக் கூறியதைக் கண்டு மகிழ்க. தலைவியை மணந்த பிறகே தலைவனுக்குச் செல்வம் உண்டாயிற்று என்பதை ''விழவு முதலாட்டி'' (குறுந் 10) என்று தலைவியை **ஓரம்போகியார்** சிறப்பித்தலாலும் அறியலாம்.

இவர் தலைவியையும் இடித்துரைப்பர் என்பதை அகப்பாட் டொன்றால்[17] அறியலாம். பரத்தையிற் பிரிந்து வரும் தலை மகனுடன் தலைவி ஊடல் கொள்ளுகின்றாள். அவள் அவனை வீட்டிற்குள் அநுமதிக்கவும் மறுக்கின்றாள். இந்நிலையில் அறிவர் அவளுக்கு அறிவு கொளுத்தித் தெருட்டுகின்றனர். ''கற்புடைய பெண்ணாகிய நீ அவனுடன் ஊடுதல் பொருந்துமோ? தலைவனை விட்டுப் பிரிந்து வாழ்வோரிடமிருந்து திருமகள் நீங்குவாள். தேன் மொழிப் புதல்வர் பாலின்றிச் சுருங்கிய முலையைச் சுவைக்க, தனி யாகச் சமைத்து உண்டு வாழும் வாழ்க்கை எளிமையாக முடியும் என்பதை நீ நன்கு அறிவாய். அப்படியிருந்தும் நீ ஊடுதல் அறியாமையே'' என்று அறிவுறுத்துவர்.

தலைவியொருத்திக்கு நீக்குவித்தாலும் நீங்காத ஊடல்- உணர்ப்புவயின் வாராஊடல்-உண்டாகின்றது. இதனைக் கண்ட தலைவனுக்கு அவளை நீத்துச் செல்லும் நிலை ஏற்படுகின்றது. இந்நிலையில் அறிவர் தலையீடு ஏற்படுகின்றது.

---

16. 'ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை' என்ற கருத்து 'ஓரா யாத்த ஒருதூண் முன்றில், ஏதில் வறுமனை' என்று நெடுந் தொகையிலும் (அகம்-369) வந்துள்ளது.

17. அகம்-316 (இளம்பூரணர் காட்டியது.)

புண்கிடந்த புள்மனுநின் நீத்தொழுகி வாழினும்
பெண்கிடந்த தன்மை பிறிதரோ—பண்கிடந்து
செய்யாத மாத்திரையே செங்கயற்போற் கண்ணினாள்
நையாது தான்நாணும் ஆறு.[18]

[புண்-போர்ப் புண்; புள்மனு-நிமித்திகன் போன்ற மனுவின் அறநெறி; நின்-உன்னை; நீத்து-நீங்கப் பெற்று; ஒழுகி-தீய ஒழுக்கத்தை மேற்கொண்டு; பெண்-பெண்மையாகிய பேரரசுக் குணம்; கிடந்த தன்மை-பொருந்திக் கிடக்கும் போக்கு;பண்-இசைப் பாக்கள்;கிடந்து-பொருந்தப்பெற்று; செய்யாத மாத்திரையே-பாணர் பாடத்தொடங்கும் முன்னரே; கயல்-மீனினை; நையாது-வருந்தாமல், நாணும்-வெட்க முறும்; ஆறு-வகை.]

இப்பாட்டில் அறிவர் தலைவனிடம் சென்று ''அன்பனே, நிமித்தி கன்போன்று மக்கட்கு எதிர்கால ஏற்பாடாகச் செய்திகளைச் கூறிச்சென்ற மனுவின் அறநெறி உன்னை விட்டு விலகியதனால் நீ தீயவொழுக்கத்தில் வாழினும், கயல்மீனினைப் போன்ற கண் களையுடைய தலைவி ஊடலை மேற்கொண்டு வருந்தாமல் அவளிடம் பெண்மைக் குணம் பொருந்திக் கிடக்கும் போக்கு யாண்டும் காணவொண்ணாத காட்சியாகும்'' என்று கூறி அவனை அவளுடன் சேர்ந்து வாழுமாறு தெருட்டியதைக் காண்க. இதுவும் மேற்கூறிய பாடல்களில் தலைவியைக் கழறியுரைத்தமை யும் தொல்காப்பியரின்,

இடித்துவரை நிறுத்தலும் அவர தாகும்
கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்.[19]

என்ற விதியினாற் கொள்ளப்பெறும் என்பது அறிதற்பாலது.

## (iii) பாணன்

பாணன் அகத்திணை நாடகத்தில் வரும் சிறுமாந்தர்களுள் ஒருவன். பண் என்பது, இசை. இசையில் வல்லுநனாக இருப்பவன் பாணன். யாழினை இயக்கி அதனைப் பக்க வாத்தியமாகக்

18. திணை. நூற்-149
19. கற்பியல்-14 (இளம்)

கொண்டு பாடவல்லவனாதலின் இவன் யாழ்ப்பாணன் எனவும் வழங்கப்பெறுவான். கைகவர்நரம்பிற் பனுவற் பாணன்''[20] என்று நற்றிணையிலும், ''முல்லை நல்யாழ்ப் பாணன்''[21] ''கைவல்சீறி யாழ்ப் பாணன்''[22] என்று ஐங்குறுநூற்றிலும் பிற இடங்களிலும் இவனைப்பற்றிய குறிப்பு வருதலினின்றும் இதனை ஒருவாறு அறியலாம். அகப்பாடல்களில் காணப்பெறும் இவன் தலைவனைப் பரத்தையரிடம் கூட்டி வைப்பதற்குக் கருவியாக அமைபவன். அகத் திணைத் தலைவன் திருவொடு பொருந்தி வாழ்வன் என்பதனை நாம் அறிவோம்; பரத்தையிற் பிரிவு இவன் வாழ்வையொட்டியது என்று இலக்கியங்களில் பேசப்பெறுகின்றது. சில சமயங்களில் பாணன் தலைவனைப் பரத்தையுடன் கூட்டிவைப்பதற்குக் கருவி யாகவும் இருப்பான். இதனால் தலைவி பாணனிடம் பெரும் பாலும் வெறுப்புக் கொண்டவளாகவே இருப்பாள். இருப்பினும், அவனிடம் நாகரிகத்துடனேயே பேசுவாள். தன் கணவனின் பரத்தமைக்கு வாயிலாக அமைந்த பாணனைத் தலைவி பழிந் துரைப்பதாகவுள்ள பாடல் ஒன்றில் இத்தகைய நாகரிகப் பேச்சினைக் காணலாம்.

ஈட்டு புகழ்நந்தி பாண!நீ எங்கையர்தம்
வீட்டிருந்து பாட விடிவளவும்-காட்டிலழும்
பேயென்றாள் அன்னை; பிறர்நரியென் றார்;தோழி
நாயென்றாள்; நீயென்றேன் நான்.[23]

தலைவியின் வெறுப்பு எள்ளல் குறிப்பாக வெளிப்படுவதைப் பாடலில் கண்டு மகிழ்க. தோழியின் இகழ்ச்சிக் குறிப்பினை இன்னொரு பாடலில் காண்போம். தலைவன் புறத்தொழுக்கத் தில் நெடுநாள் ஒழுகுகின்றான். பிறகு 'இது தகாது' என்று தெளிந்த மனத்தனாய் மீண்டும்தலைவியுடன் கூடிவாழ்கின்றான். பாணனே தலைவனின் பரத்தை வாழ்க்கைக்குக் கருவியாக இருந் தான் என்பதைத் தோழி நன்கு அறிவாள். ஒருநாள் தோழியுடன் சொல்லாடிய தலைவன் தன் புறத்தொழுக்கத்தின்பொழுது தன்னைப்பற்றி அவர்கள் நினைத்த திறம் யாது என வினவிய பொழுது அவள் கூறும் விடையாக அமைந்த பாடல் பகுதி இது.

20. நற்-200
21. ஐங்குறு-478
22. ஷை-472
23. நந்திக் கலம்பகம்-106

நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க
பாணனும் வாழ்க எனவேட் டேமே[24]

[நனைய-பூக்களையுடைய; சினைய-முட்டைகளையுடைய; வேட்டேம்-விரும்பியுறைந்தேம்.]

தலைவி மாபெருந்துயரத்தைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருந்தாள் என்பதனை அவள் வாயல் முறுவலே தமக்குக் காட்டலின், எம்பெருமான் தீ நெறியிலிருந்து உய்தல் வேண்டுமே என்று தெய்வத்தை நினைந்து வாழ்த்தியிருந்ததாகக் கூறுபவள் 'யாம் ஊரன் வாழ்க என வேட்டேம்' என்றும், தலைவன் இங்ஙனம் தீ நெறிக்கண் ஒழுகக் காரணம் ஆன காரணம்பற்றி 'பாணனும் வாழ்க' என்று இகழ்ச்சிக் குறிப்பாள் ஓதினள் என்றும் உணர்த்துவதைக் காண்க. மேலும், இதன்கண் 'நனைய காஞ்சிச் சினைய சிறுமீன் ஊரன்' என்றது உள்ளுறை. 'நறுமணம் கமழும் மலருடைய காஞ்சியையும், புலால் நாறும் சிறுமீனையும் ஒருங்கே உன்னூர் உடைத்தாயிருத்தல் போன்று நீயும் இத்தகைய மாண்புடைய தலைவியையும் இழிகுணமே நிரம்பிய பரத்தையரையும் ஒப்ப மதித்து ஒழுகா நின்றனை' எனத் தலைவனின் கொடுமை உள்ளடக்கிக் கூறப்பெற்றிருத்தல் உய்த்தறிந்து மகிழத் தக்கது.

தலைவனின் பரத்தைப் பிரிவுக்குக் காரணமாயிருந்த பாணன் தலைவியுடன் கூட்டிவைப்பதற்கும் வாயிலாக வருகின்றான். தலைவி வெகுளுவதனை அறிந்த தோழி வாயில் மறுக்கின்றாள். அப்பொழுது அவ்வழியே ஊரில் திருவிழா நடப்பதனை ஊரார்க்குத் தெரிவிக்குமாறு போந்த குயவனை நோக்கிப் பேசுவதாக அமைந்த நற்றிணைப் பாடல் இது:

...அகனெடுந் தெருவில்
சாறென நுவலும் முதுவாய்க் குயவ!
இதுவும் ஆங்கண் நுவன்றிசின் மாதோ
ஆம்பல் அமன்ற தீம்பெரும் பழனத்துப்
பொய்கை ஊர்க்குப் போவோய் ஆகிக்
கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்

---

24. ஐங்குறு-1

செய்த அல்லல் பல்குவ வையெயிற்று
ஐதகல் அல்குல் மகளிர்! இவன்
பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே.[25]

[அகல் நெடும் தெரு-அகன்ற நீண்ட தெரு; சாறு-விழவு; முதுவாய்-அறிவு வாய்ந்த; நுவன்றிசின்-கூறிப் போவாய்; அமன்ற-நெருங்கிய; பழனம்-வயல்; பொய்கை-குளம்; கவர்-விரும்பும்; அல்லல்-துன்பம்; பல்குவ-பலவாகி வளர்வனவாயின; வைஎயிறு-கூரிய பற்கள்; ஐது அகல் அல்குல்-மெல்லியதாய் அகன்ற அல்குல்; பொய்பொதி-பொய் நிரம்பிய; ஓம்புமின்-பாதுகாத்துக் கொள்வீர்]

"அறிவு வாய்ந்த குயவனே, நீ திருவிழாச் செய்தியினை அறிவிக்கும்பொழுது ஆங்காங்குள்ள மகளிரிடம் 'மங்கைமீர், இசையால் மயக்க வல்ல பாணன் செய்த துன்பங்கள் பலவாகி வளர்வன வாயின. ஆகவே, பொய் பொதிந்த அவன் சொல்லினின்றும் நும்மைப் பாதுகாத்துங் கொள்ளுவீர்களாக' என்றும் சேர்த்துச் சொல்க" என்று தோழியின் கூற்றில் பாணன் செய்த கொடுமை புலப்படுவதைக் காண்க.

தலைவனைப் பரத்தையரிடம் கூட்டுவிக்க நினைக்கும் பாணன் தன் வீட்டருகில் யாழ் வாசித்துவிட்டு அவள் இல்லம் நோக்கிச் சென்று கொண்டிருந்தபொழுது ஈன்று அணிமையுடைய பசு ஒன்று அவன்மீது பாய, அவன் அதற்கு அஞ்சித் தான் வைத்திருந்த யாழினைத் தெருவிலே போட்டுவிட்டு ஓடி வந்து தம் மனையில் வந்து புகுந்ததையும், தான் அவனுக்கு மறுமாற்றம் அளித்ததையும் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

நகையா கின்றே தோழி...
....................................
தண்டுறை ஊரன் திண்டார் அகலம்
வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
பரிவொடு வரூஉம் பாணன் தெருவில்
புனிற்றாப் பாய்ந்தெனக் கலங்கி யாழிட்(டு)
எம்மனைப் புகுதந் தோனே அதுகண்டு
மெய்ம்மலி உவகை மறையினென் எதிர்சென்(று)

25. நற்-200

இம்மனை அன்றஃ தும்மனை என்ற
என்னும் தன்னும் நோக்கி
மம்மர் நெஞ்சினோன் தொழுதுநின் றதுவே.[26]

[தண்துறை-குளிர்ந்த துறை; தார்-மாலை; அகலம்-மார்பு; புணரிய-புணர்க்க; பரிவு-அவா;புனிற்றுஆ-ஈன்று அணிமை யுடைய பசு; இட்டு-கீழே போகவிட்டு; புகுதந்தோன்-புகுந்தான்; மெய்மலி-உடல் விம்மஎழுந்த; மறையினென்-மறைத்து; என்ற-என்று சொல்லிய; மம்மர்-மயக்கம்; தொழுது நின்றது-தொழுது நின்ற நிலை.]

“பாணன் நம் வீட்டில் நுழைந்தபொழுது எனக்கு அடக்க முடியாத உவகை தோன்றிற்று. அதனை யான் அடக்கிக்கொண்டு அவனை நோக்கிச் சென்று, ‘அப்பனே, இஃது உன் வீடு அல்ல; அதோ தெரிகின்றதே, அஃதுவே உன் வீடு!’ என்று கூறினேன். அவன் சாலவும் இளிவந்து எனது இகழ்ச்சியும் அவனது இளிவரவும் தோன்றும்படி வருந்தி என்னைத்தொழுது நின்றான். இது நகையாகின் றதன்றோ?” என்று தலைவி கூறிய நாகரிகப் பண்புடன் விளங்கும் கூற்று சாலவும் நாம் வியத்தற்குரியதன்றோ?

இக்கூறியவற்றால் நாம் பாணனை மிகத் தாழ்ந்தவன் என்று கருதத் தோன்றுகின்றதல்லவா? உண்மையாக அதுதான் இல்லை; அவன் தரக்குறைவான நடத்தையை உடையவன் அல்லன். ஆயினும், அகப்பாடல்களை ஊன்றிப் பயின்றால் இந்த உண்மை ஒருவாறு தெளிவாகும். பாணன் செய்வதெல்லாம் தலைமகனின்மீது தான் கொண்டிருந்த அன்பு, பரிவு, அக்கறை இவற்றின் பொருட்டேயாகும். எப்படியாயினும் தலைவன் மகிழ்ச்சி தரும் வாழ்க்கை நடத்தவேண்டும் என்பதே அவன் நோக்கமாகும். சில சமயம் தலைவியின் பொருட்டும் தூது சென்று தலைவனைத் தெருட்டி அவளை மகிழ்விக்கும் சந்தர்ப்பங்களும் உள்ளன. நெடுந்தொகைப் பாடல் ஒன்று இத்தகைய நிகழ்ச்சியைச் சித்திரித்துக் காட்டுகின்றது.

வண்டினம் தவிர்க்கும் தன்பதக் காலை
வரினும் வாரா ராயினும் ஆண்டவர்க்கு
இனிதுகொல் வாழி தோழி யெனத்தன்
பல்லிதழ் மழைக்கண் நல்லகஞ் சிவப்ப

---

26. அகம்-56

அருந்துய ருடையள் அவளென விரும்பிப்
பாணன் வந்தனன் தூதே நீயும்
புல்லார் புரவி வல்விரைந்து பூட்டி
நெடுந்தேர் ஊர்மதி வலவ!
முடிந்தன்று அம்மநாம் முன்னிய வினையே.[27]

[வண்டு இனம்-வண்டுக் கூட்டம்; தவிர்க்கும்-தடுக்கும்; தண்பதக் காலை-குளிர்ந்த கார்காலத்தில்; ஆண்டு-அவர் சென்ற இடம்; பல்இதழ்-பல இதழ்கள்; அரும்துயர்-பொறுத்தற்கரிய துயரினை; முன்னிய-எண்ணி முயன்ற; புல்ஆர்-புல்லினைத் தின்ற; புரவி-குதிரை; முடிந்தன்று - முடிவுற்றது; ஊர்மதி-செலுத்துவாயாக-வினை; செயல்.]

இதில் தலைவன் தன் பாகனை நோக்கிப் பேசுகின்றான்: 'தோழியே, நமது தலைவர் வத்தாலும் சரி, வாராதொழியினும் சரி, அவர் சென்ற இடம் அவருக்கு இனியதுபோலும் என்று தன் தோழியிடம் கூறிக்கொண்டு தாமரை மலர்போன்ற தன் கண்ணின் உள்ளிடம் எல்லாம் சிவந்து காணும்படி பொறுத்தற் கரிய துயரினையுடையவளாக இருக்கின்றாள் நின் தலைவி' என்று கூறிய வண்ணம் தலைவியிடமிருந்து பாணன் தூது வந்த செய்தியைத் தலைவன் தன்பாகனுக்கு உரைக்கின்றான். தான் வந்த வேலை முடிந்ததால் தேரினைப் பூட்டி விரைந்து கடவுமாறு அவனுக்குப் பணிக்கின்றான். இங்ஙனம் தலைவியிடமிருந்து பாணன் தூது வந்த நிகழ்ச்சியை ஐங்குறு நூற்றின் பாடலொன்றி லும் காண்கின்றோம்.[28]

ஐங்குறு நூற்று இன்னொரு பாடலால் பாணனின் உயர்ந்த பண்பாட்டையும் அவன் தலைவனைத் மருட்டித் தெருட்டும் முறையால் அவன் தலைவிபால் கொண்டுள்ள பேரன்பையும் உரிமையையும் காண்கின்றோம்.

நினக்கியாம் பாணரும் அல்லேம்; எமக்கு
நீயும் குருசிலை யல்லை மாதோ;
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
ஈரிதழ் உண்கண் உகுத்த
பூசல் கேட்டும் அருளா தோயே.[29]

27. ஷை-244
26. ஐங்குறு-479.
28. ஷை-480

[பாணரும்-வழிவழி வருகின்ற பாணரும்; குருசில்-தலைவன்; வெம் காதலி-விருப்பத்திற்கிடனான தலைவி; பூசல்-கண்ணீரின் மிகுதி; அருளாதோய்-இரங்குகின்றிலை.]

பாசறையிலிருக்கும் தலைவனை நெருங்கிப் பாணன் பகர்ந்ததாக உள்ளது இப்பாடல். "நின்னுடைய மூதாதையர் பேரன்புடையராய்ப் புரவலராய் விளங்கினமையின் எம் மூதாதையரும் நின் குடிப் பாணராயிருந்து பெருமை பெற்று வந்தனர். இப்பொழுது நின்பால் வன்கண்மை தோன்றா நின்றது. நின் ஆருயிர்க் காதலியின் துயர நிலையை உணர்த்தியும் நீ வாளா இருக்கின்றனை. 'தம் ஆருயிர்க் காதலிமாட்டும் அன்பில்லாதவர் நம்மாட்டு என்னாவர் கொல்லோ?' என்று நாங்கள் உன்னை ஐயுறுகின்றோம். ஆதலின் நின் குடிப் பாணராய் வாழ விரும்புகின்றிலம்" என்று கூறுகின்றான். "வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கையையுடையவராக இருக்கும் யாம் எளியரே யாயினும் 'மிகப் பேரெவ்வம் உறினும் எனைத்தும், உணர்ச்சியுள்ளோர் உடைமை உள்ளேம்; நல்லறிவுடையோர் நல்குரவே உள்ளுதும்' " என்று மேலும் உணர்த்துகின்றான். இத்தகைய நிகழ்ச்சிகளால் பாணன் தலைமக்களால் கேண்மை கொள்ளக் கூடிய பெருந் தன்மையுடையன் என்பதனையும் அறிகின்றோம்.

## (iv) பார்ப்பார்

பார்ப்பார் என்பார், பார்ப்பன குலத்துப் பிறந்தவர்; தலைவனுக்கு அடிக்கடி அறவுரை கூறுபவர். 'பார்ப்பார்' என்ற சொல் 'கூர்ந்து நோக்குவர்' என்ற பொருளைத் தருவதால், அருமறைகளை ஆய்ந்து பார்க்கும் மக்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

காமநிலை உரைத்தலும் தேர்நிலை உரைத்தலும்
கிழவோன் குறிப்பினை எடுத்துக் கூறலும்
ஆவொடு பட்ட நிமித்தம் கூறலும்
செலவுறு கிளவியும் செலவழுங்கு கிளவியும்
அன்னவை பிறவும் பார்ப்பார்க்(கு) உரிய.[30]

---

30. கற்பியல்-6. (இளம்)

என்ற நூற்பாவால் பார்ப்பார்க்குரிய கிளவிகளைத் தொகுத்துக் கூறுவர் தொல்காப்பியர்.

காமநிலை உரைத்தல் என்பது, 'நீ பிரியின் இவள் காமம் மிகும்' என்று கூறுதல். தேர்நிலை உரைத்தல் என்பது, ஆராய்ச்சி நிலையாற் கூறுதல். கிழவோன் குறிப்பினை எடுத்துக் கூறலும் என்பது, தலைவன் குறிப்பினைத் தலைவிக்கு விளங்கக் கூறுதல். ஆவொடு பட்ட நிமித்தம் கூறலும் என்பது, பசுவுடன் பொருந்திய நிமித்தங்களைக் கூறுதல். செலவுறு கிளவி என்பது, தலைமகன் பிரிந்து ஏகினான் என்பன போன்று கூறுதல். செலவழுங்கு கிளவி என்பது, பிரிந்து ஏகுதலைக் தவிர்க்க வேண்டும் எனக் கூறுதல். இவற்றிற்கெல்லாம் இலக்கியம் காண்டல் அரிது.

ஐங்குறு நூற்றில் இடைச்சுரத்துச் செவிலியால் வினவப்பட்ட அந்தணர் அவளுக்குச் சொல்லியதாக ஒரு பாடல் வருகின்றது. 'அந்தணர்' என்பதற்குப் 'பார்ப்பனர்' என்று கொண்டால், அவர்கள் கூற்றுக்கு இப்பாடல் பொருத்தமாகலாம்.

'அறம்புரி அருமறை நவின்ற நாவில்
திறம்புரி கொள்கை அந்தணிர்! தொழுவல்[31]'

[திறம்புரி கொள்கை-கற்றாங்கு ஒழுகும் ஆற்றலையுடைய]

என்று விளித்து அவர்களிடம் தன் மகளைப் பற்றி வினவுகின்றாள் செவிலி. அவர்கள்,

"........—பேதைஅம் பெண்டே,
கண்டனெம் அம்ம சுரத்திடை அவளை
இன்துணை இனிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கல் மலையிறந்தோளே"

[அம்ம-கேட்பாயாக; இன்துணை-மனக்கினிய காதலன்; பிறங்கல்-விளங்கா நிற்கும்; இறந்தோள்-கடந்தோள்]

என்று கூறுகின்றனர். இதில் "பேதைப் பெண்ணே, அவளைக் கண்டோம். இனிய துணைவன் அவளை இனிது பாராட்ட மலைகளைக் கடந்து சென்றாள்" என்று அவர்கள் கூறுவதைக் காண்க. இளம்பூரணரும் "எஞ்சியோர்க்கும்"[32] என்ற நூற்பாவின் கீழ்ப் பார்ப்பார் கூற்றாகக் காட்டும் ஐங்குறு நூற்றுப் பாடல் இது.

31. ஐங்குறு-387.
32. அகத்திணை-45 (இளம்)

துறந்ததன் கொண்டு துயரடச் சாஅய்
அறம்புலந்து பழிக்கும் அண்க ணாட்டி
எவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளேநின் மடமகள்
வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே[33]

[துறந்ததன்-துறந்ததனை ஏதுவாக; அட-வருத்த; சாஅய்-உடல் மெலிந்து; அறம்-அறக்கடவுள்; புலந்து-பிணங்கி; அண்கணாட்டி-அயலிடத்து இருப்பவள்; எவ்வம்-துன்பம்; ஏமம்-பாதுகாவல்; விடலை-பெருங்குடித் தோன்றல்; முந்துற-முன்வாரா நிற்ப]

இதில் ''அன்னாய், நின்னைத் துறந்து சென்ற அவளை நினைத்துக் கொண்டு துன்பம் வருத்த மெலிந்து நல்வினையைப் பழித்து வருந்தும் தாயே, இதோ வந்து கொண்டிருக்கின்றாள் நின்மகள். தலைவன் முன்னே வர நின்மகள் பின்னால் வருகின்றாள். வருத்தத்தை விடுக'' என்று அப்பார்ப்பார் கூறுவதைக் காண்க.[34]

## (v) விறலியர்

விறலியர் என்பார், ஆடலும் பாடலும் நிகழ்த்தும் ஒருவகைச் சாதிப் பெண்டிர். பாடல் பாடுவோரைப் 'பாடினி' என்றும், அரங்கில் நடிப்போரை 'விறலியர்' என்றும் பிரித்துப் பேசுவதும் உண்டு.[35] விறலி-விறல் படப் பாடி ஆடும் மகள்; விறல்-சத்துவம்.

செலவில் தேற்றலும் புலவியில் தணித்தலும்
வாயில் வேண்டலும் வாயில்நேர் வித்தலும்
தெரிஇழை விறலிக் குரிய தாகும்.[36]

என்று விறலிக்குரிய செயல்களைத் தொகுத்துப் பேசுவர் நாற் கவிராச நம்பி.

33. ஐங்குறு-393.
34. நூலைப் பதிப்பித்து உரை கூறுவோர் நற்றாய்க்கு அயலார் கூறுவதாகவே கொண்டுள்ளனர்.
35. பாடினி-தலைவிமாட்டுப் பாங்காயொழுகும் பாடினி: விறலியர்-தாமே ஆடலும் பாடலும் நிகழ்த்தும் விறலியர் (கற்பியல்-52நச்.உரை). பாடினியைப் 'பாட்டி'என்றும் வழங்குவது உண்டு.
36. நம்பி அகப்-96

பரத்தையிற் பிரிந்த தலைவன் தலைமகளது புலவியைத் தீர்க்குமாறு விறலியை அனுப்புகின்றான். அதனை நன்கு அறிகின்றாள் தோழி, எனினும், இவ்விறலியே தூதாக நடந்து தலைவனைப் பரத்தை இடத்துச் சேர்ப்பித்தனள் எனக் கருதுகின்றாள். ஆகவே, அவள் ஆயத்தாரை நோக்கி, "இந்த விறலி நம் தலைவனை மற்றுமொரு பரத்தைபால் உய்க்கவே வருகின்றாள். நாம் அவனைக் காத்துக்கொள்வோம்; எழுவீராக. இவள் கருத்து முற்றும் எனின், நாம் இருந்து பயன் என்ன?" என்று வெகுண்டு கூறுவதாக வரும் நற்றிணைப் பாடல்:

மடக்கண் தகரக் கூந்தல் பணைத்தோள்
வார்ந்தவால் எயிற்றுச் சேர்ந்துசெறி குறங்கின்
பிணையல் அம்தழைத் தைஇத் துணையிலள்
விழவுக்களம் பொலிய வந்துநின் றனளே;
எழுமினோ எழுமின்எங் கொழுநற் காக்கம்
ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடி யாங்குநம்
பன்மையது எவனோஇவள் நன்மைதலைப் படினே[37]

[மடக்கண்-மடப்பத்தையுடைய நோக்கு; தகரம்-மயிர்ச் சாந்து; வால் எயிறு-வெள்ளிய பற்கள்: செறிகுறங்கு-நெருங்கிய தொடை; துணைஇலள்-ஒப்பு இல்லாத விறலி; காக்கம்-காப்பேம்; துவன்றிய-நெருங்கிய; நன்மை தலைப் படுதல்-காரியம் கைகூடுதல்; ஒரு வேல்-ஒப்பற்ற வேல்; நம் பன்மை-நம் கூட்டம்.]

இதில், "ஆரியர் துவன்றிய மூள்ளூரின் போர்ப்பறந்தலையிலே அவ்வாரியர் பலரும் ஒருங்கே உருவிய வாட்படைகள் அனைத்தும் பேரிசை மலையனது ஒரோ ஒரு வேற்படைக்கு ஆற்றாது இரிந்தோடினாற் போன்று யாமும் இவள் ஒருத்திக்குப் புறங்கொடுத்து ஓடவேண்டியதுதான். நாம் கூட்டமாக இருந்து பயன் என்ன?" என்று தோழி ஆயத்தாரை நோக்கிக் கூறியது காண்க. இப்பாடல் தோழி விறலிக்கு வாயில் மறுத்ததாக வந்துள்ளது.

---

37. நற்-170

> பாணர் கூத்தர் விறலியர் என்றிவர்
> பேணிச் சொல்லிய குறையினை எதிரும்[38]

என்ற தொல்காப்பிய விதிக்கு இலக்கியம் காட்டுவர் நச்சினார்க்கினியர். " 'எதிரும்' என்றது, அவர் வாயில்வேண்டியவழித் தோழி அவர்க்கு மறுத்தலும், மறுத்தாள் போல நேர்தலும் கூறியதாம்" என்று விளக்குவர் அவர். தலைவன் பரத்தையிற் பிரிந்து சென்று வீடு திரும்புகின்றான். விறலியை வாயில் வேண்டுமாறு தூது அனுப்புகின்றான் தலைவியிடம், தலைவி வாயில் மறுக்கின்றாள்: "மாமை நிறத்தினையுடைய மேனியினையும் ஆய்ந்த அணியினையுமுடைய பரத்தையின் முத்து மாலையை ஏந்திய முலையினையுடைய மார்பினை ஆராக்காதலுடன் தழுவினான்; இதனால் அவள் அணிந்திருந்த பூமாலையும் குழைந்து போயிற்று. அளவற்ற வெள்ளையுப்பின் குவியல் பெருமழையால் உருகினாற் போல என் மெல்லிய தோள்கள் மெலிந்தன; வளையல்களும் கழன்றொழிந்தன. இப்பொழுது நீசொல்லுவதென்னை?"[39] என்கின்றாள். சங்க இலக்கியத்தில் விறலி பங்கு பெறும் பாடல்கள் அரியனவாகவே உள்ளன,

## (vi) கூத்தர்

கூத்தர் என்பார், தலைவனுக்கு இன்றியமையாத கூத்து நடத்தும் ஆண்கள். இவர்கள் தலைவன்-தலைவியரின் கற்பு நெறியில் வாயில்களாகச் செயற்படுவர். தொல்காப்பியர்,

> தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்
> பல்லாற்றானும் ஊடலில் தணித்தலும்
> உறுதி காட்டலும் அறிவுமெய் நிறுத்தலும்
> ஏதுவின் உரைத்தலும் துணியக் காட்டலும்
> அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன[40]

என்ற நூற்பாவால் அவர்களுக்குரிய செயல்களைத் தொகுத்துக் கூறுவர். தொல்லவை உரைத்தல் என்பது, முன்புள்ளார்

38. கற்பியல்-9
39. அகம்-206.
40. கற்பியல்-27 (இளம்)

இவ்வாறு செய்வரெனக் கூறுதல். நுகர்ச்சி ஏத்தல் என்பது, இனியது ஒன்று எனப்புகழ்தல். பல்லாற்றானும் ஊடலில் தணித்தலும் என்பது, பல நெறியானும் ஊடலினின்றும் தலைமகளை மீட்டல்; அஃதாவது, இவ்வாறு செய்தல் குற்றம் என்றானும் அன்புடையார் செய்யாரென்றானும், மனைக்கிழத்தியர்செயலன்று என்றானும் இவ்வாறு கூறுதல். உறுதி காட்டல் என்பது, இவ்வூடல் தணிந்ததனால் பயன் இது எனவும், நன்மை பயக்கும் எனவும் கூறுதல். அறிவு மெய்ந்நிறுத்தல் என்பது, தலைமகள் மெய்யின்கண் மிக்க துணிவினால் கெட்ட அறிவை இது தக்கது அன்று என அறிவு கொளுத்துதல். ஏதுவின் உரைத்தல் என்பது, இவ்வாறு செய்யின் இவ்வாறு குற்றம் பயக்கும் என ஏதுவினால் கூறுதல். அது பிறள் ஒருத்தி கெட்டபடி கூறுதல். துணியக் காட்டல் என்பது, அவள் துணியுமாறு காரணம் காட்டுதல். அணி நிலையுரைத்தல் என்பது, இவ்வாறு உளதாகிய அணியைப் புலர விடுகின்றதனல் பயன் என்னை எனக் கூறுதல். இவ்வாறு விளக்குவர் இளம்பூரணர்; இவற்றிற்குச் செய்யுள் காண்டல் அரிது. நம்பியாரும் இவரது செயல்களைத் தொகுத்து நூற்பா அமைத்துக் காட்டுவர்.[42]

## (vii) இளையோர்

இவர் தலைவன் தலைவி இவர்களை விட்டுப் பிரியாது அவர்களுடன் இருந்து அவர்கட்குக் குற்றேவல் செய்யும் ஏவலர்.

ஆற்றது பண்பும் கருமத்து வினையும்
ஏவன் முடிபும் வினாவும் செப்பும்
ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியும்
தோற்றம் சான்ற அன்னவை பிறவும்
இளையோர்க் குரிய கிளவி என்ப.[43]

---

41. நச்சினார்க்கினியர் வேறு பொருள் கூறுவர்: 'முலையினும் தோளினும் முகத்தினும் எழுதுங்கால் புணர்ச்சி தோறும் அழித்தெழுதுமாறு இது எனக் கூறுதல்' என்பது அது.
42. நம்பிஅகம்-97
43. கற்பியல்-29 (இளம்)

என்ற நூற்பாவால் இளையோர்க்குரிய கூற்றுகளாகத் தொகுத்துக் கூறுவர்.

உழைக்குறுந் தொழிலும் காப்பும் உயர்ந்தோர்
நடக்கை யெல்லாம் அவர்கட் படுமே[44].

என்று மேலும் அவர்கள் செயல்களைக் குறிப்பிடுவர். நம்பியாரும் அவர்கட்கு உரிய செயல்களை,

மடந்தையை வாயில் வேண்டலும் வாயில்
உடன்படுத் தலும்அவள் ஊடல் தீர்த்தலும்
கொற்றவர்க் குணர்த்தலும் குற்றேவல் செய்தலும்
சென்றுமுன் வரவு செப்பலும் அவன்திறம்
ஒன்றிநின் றுரைத்தலும் வினைமுடி புரைத்தலும்
வழிஇயல்பு கூறலும் வழியிடைக் கண்டன
மொழிதலும் இளையோர் தொழிலென மொழிப.[45]

என்ற நூற்பாவால் தொகுத்து உரைப்பர். இச்செயல்கட்கு இலக்கியம் காண்டல் அரிதாக உள்ளது. உரையாசிரியர்களாகிய நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் "விருந்தும் பெறுகுநள்" என்ற நெடுந்தொகைப் பாடலை இளையோர் கூற்றுக்கு எடுத்துக் காட்டாகக் கூறுவர். அதன் கருத்தை விளக்குவோம்.

வினை முற்றிய தலைமகன் வீடு திரும்புகின்றான். அவனுக்குக் குற்றேவல் புரியும் இளையர் கூறுகின்றனர்:

விருந்தும் பெறுகுநள் போலும் திருந்திழைத்
தடமென் பணைத்தோள் மடமொழி அரிவை
..........................................
வளிசினை யுதிர்த்தலின் வெறிகொள்பு தாஅய்ச்
சிரசிறகு ஏய்ப்ப அறற்கண் வரித்த
வண்டுண் நறுவீ துமித்த நேமி
தண்ணில மருங்கில் போழ்ந்த வழியுள்
நிரைநெல் பாம்பின் விரைபுநீர் முடுகச்
செல்லும் நெடுந்தகை தேரே
முல்லை மாலை நகர்புகல் ஆய்ந்தே.[46]

[இழை-அணி; பணை-மூங்கில்; அரிவை-பெண் (தலைவி); வெறி-மணம்; கொள்புதாய்-கொண்டு பரந்து; சிரல்-

44. ஷை-30 (இளம்)
45. நம்பி அகப்-98
46. அகம்-324

சிச்சிலிப் பறவை; ஏய்ப்ப-ஒப்ப; அறல்-நொய் மணல்; வரித்த-கோலம் செய்த; வீ-பூ; துமித்தல்-அறுத்து ஏகுதல்; நேமி-சக்கரம்; போழ்ந்த-பிளந்த; விரைவு நீர் முடுக-விரைந்து நீர் முடுகிச் செல்ல; நெடுந்தகை-தலைவன்]

இதில், ''(முல்லை நிலத்தில்) சிச்சிலிப் பறவையின் சிறகினையொத்த அறலில் வண்டுகள் தேனுண்ணும் நறிய பூக்களைக் காற்று உதிர்த்துக் கோலம் செய்துள்ளது. தலைவனுடைய தேர் அக்கோலத்தை அறுத்துச் செல்கின்றது. தேருருள் பிளந்து சென்ற சுவட்டில் வரிசையாகச் செல்லும் பாம்பு போல் நீர் முடுகிச் செல்லுகின்றது. இத்தகைய தண்ணிய முல்லையங் காட்டினைக் கடந்து தலைவியிருக்கும் ஊருக்குள் தேர் செல்லுகின்றது. இன்று தலைவி இல்லத்தில் விருந்து கட்டாயம் இருக்கும்'' என்கின்றனர் இளையர்.

### (viii). விருந்தினர்

இவர் தலைவனும் தலைவியும் அன்பு செய்து விருந்தோம்பும் மக்கள். தலைவியின் ஊடல் தீர்க்கும் வாயில்களுள் ஒருவராக இவர்களையும் குறிப்பர் தொல்காப்பியர்.[47] பரத்தையிற் பிரிந்த தலைவன் தலைவியின் ஊடல் தணியப் பெறாது என்று கருதி விருந்தோடு வீடு புகுகின்றான். தலைவி தன் ஊடலை அடக்கி விருந்தினை எதிர் கொண்டு வரவேற்கின்றாள். இதனால் மகிழ்வுற்ற தலைவன் கூறுவதாக நற்றிணைப் பாடல் அமைந்துள்ளது.[48] ''என்னுடன் முனிவுற்றிருந்த எம் தலைவி விருந்து வந்ததும், வாழை இலையைக் கொய்து வந்து அதன் அடிக்காம்பு பருத்திருந்ததால் அதனை வகிர்ந்து பரிக்கலம் அமைத்தாள். அட்டிலறைக்குச் சென்று அட்டில் தொழிலைத் தொடங்கினாள், நெற்றி முழுதும் வியர்வை அரும்ப, அதையும் தன் முன்தானையால் துடைத்துக் கொண்டாள். நான் சென்று அங்கு அவளை உற்று நோக்கினேன். என்ன இளஞ்சிரிப்பு! இப்படி ஒரு விருந்து நாடோறும் வந்தால் நன்றாக இருக்கும். பிணக்கு என்பதே

47. கற்பியல்-52
48. நற். 120

அங்குத் தலை காட்டாது. மனை நிறைந்த வாழ்வாக இருக்கும்'' என்று கூறி மகிழ்கின்றான் தலைவன்.

இந்த நற்றிணைப் பாடலைத் தலைவற்குரிய கிளவிகளை யெல்லாம் தொகுத்துணர்த்தும், ''கரணத்தின் அமைந்து முடிந்த காலை''[49] என்னும் நூற்பாவின்கண் 'நன்னெறிப் படரும் தொன்னலப் பொருளினும்' என்ற விதியை விளக்க எடுத்துக் காட்டினர் இளம்பூரண:. நன்னெறியாவது, அறம் பொருள் இன்பம் வழுவாத நெறி. தலைமகன் சிறப்புத் தொன்று தொட்டு வருதலின் குடிநலத்தைத் 'தொன்னலம்' என்றார். இப்பாட லினுள் ஊடற் குறிப்பினளாகிய தலைவி மனை வாழ்க்கைத் தரும மாகிய விருந்து புறந்தருதல் விரும்பினளாகலின் நன்னெறிப் படர்தல் ஆயிற்று. புலவி கூர்ந்தும் சிறு காலை அட்டில் புக்குச் செம்மையுற அடிசிலாக்குதலும் அவள் மாண்பினை உணர்த்துதல் உணர்தற்பாலது.

இங்ஙனம் தலைமகள் விருந்துடன் வருங்கால் தலைமகள் சினம் கொண்டு கண் சிவக்காது குறு முறுவல் கொண்ட முகத் தினளாக இருப்பதைக் கண்ட தலைமகனின் மகிழ்ச்சியை,

புரவே யெதிர்ந்த நமக்கு
    விருந்துஇன்று போலஎன்றும்
வரவே புணர்ந்தநம் மாதவம்
    வாழிய! வாணன் தஞ்சைக்
குரவேய் கருமுகில் கொந்தள
    பாரக் குரும்பைக் கொங்கை
அரவேய் நுடங்குஇடை யாள்விழி
    ஊர்சிவப் பாற்றுதற்கே[50]

மன்ற தஞ்சைவாணன் கோவைச் செய்யுளிலும் கண்டு மகிழலாம்.

## (ix). தேர்ப்பாகன்

இவன் தலைமகனுடைய தேரோட்டி; தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் போதும், மீண்டும் தலைவன் தலைவியை நாடி

49. கற்பியல் - 5 (இளம்)
50. தஞ். கோ. 396

வரும் போதும் இவன் தலைவனின் தேரைக் கடவுபவன். குதிரையின் இயல்பை அறிந்து விரைவாகத் தேரை ஓட்டிச் செல்வதில் வல்லவன் இவன். தலைவற்குரிய கிளவிகளை யெல்லாம் தொகுத்துக் கூறும் தொல்காப்பியர் பாகனைக் குறிப்பிடுங்கால்,

பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும்[51]

என்று கூறுவர். தலைவியைப் பிரிந்துறையுங்கால் இவன் ஒருவனே தலைவனின் அணுக்கத் தொண்டனாக இருப்பதால் இவனிடம் மட்டிலுமே தன் கடமைகளை இனிதே முடித்த மகிழ்ச்சியையும் பிறவற்றையும் புலப்படுத்துவான்.

"........................ முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்"[52]

என்ற தொல்காப்பியர் கூற்றால் இதனை அறியலாம். எட்டுத் தொகைநூல்களில், சிறப்பாக நற்றிணையிலும் அகநானூற்றிலும், தலைவன் தலைவியைச் சந்திக்க விரும்பும் தன் ஆரா விருப்பத்தை புலப்படுத்தும் நிகழ்ச்சிகள் அடங்கிய பாடல்கள் பலவற்றைக் காணலாம்.

எல்லிடை யுறாஅ அளவை வல்லே
கழலொலி நாவில் தெண்மணி கறங்க
நிழலொலிப் பன்ன நிமிர்பரிப் புரவி
வயக்குறு கொடிஞ்சி பொலிய வள்பாய்ந்து
இயக்குமதி வாழியோ கையுடை வலவ!
பசப்புறு படர்அட வருந்திய
நயப்பின் காதலி நகைமுகம் பெயவே.[53]

[எல் - இருள்; உறாஅளவை - படரா முன்னரே; வல்லே; விரைந்து; ஒலிநா - ஒலிக்கும் நா; தெள்மணி - தெளிந்த மணி; கறங்க - ஒலிக்க: நிமிர்பரி - நிமிர்ந்த செவிலினை யுடைய; வள்பு - கடிவாளம்; கொடிஞ்சி - தேரின் உறுப்பு பசப்பு - பசலை; படர் - துன்பம்; அட - வருந்த; நயப்பு - அன்புமிக்க]

இப்பாடற் பகுதியில் "என் காதலியின் முறுவலித்த முகத்தினைக் காண்பதற்காக, தேரிலுள்ள மணி ஒலிக்க நிமிர்ந்த செலவினை

51. கற்பியல் - 5 (வரி 48)
52. அகத்திணை - 44 (அடி - 19, 20)
53. அகம் - 344

யுடைய குதிரைகளை, கடிவாளத்தை ஆய்ந்து செலுத்தி, கொடிஞ்சி பொலிவுற்றுக் காணுமாறு தேரினைச் செலுத்து வாயாக'' என்று பாகனை நோக்கித் தலைவன் கூறுவதைக்காண்க.

தலைவன் பாகனிடம் பேசும் பொழுதெல்லாம் தலைவியின் நற்பண்புகளைப் புகழ்வதுடன் தானும் அவளும் அன்புடன் இனிய வாழ்வு நடத்தியபோது ஏற்பட்ட இனிய நிகழ்ச்சிகளைக் குறிப் பிட்டுப் பேசுவதைக் காணலாம். இதனால் தலைவன் தன் பாகன் மீது கொண்டுள்ள நம்பிக்கையும் மதிப்பும் தெளிவாகப் புலனா கின்றன. தேரினைக் கடவும் பாகனின் திறன் அடிக்கடி தலைவனால் குறிப்பிடப்பெறுவதைப் பாடல்களில் காண கின்றோம்.

''செல்க தேரே நல்வலம் பெறுந''[54]

''நூலறி வலவ! கடவுமதி''[55]

''இடிமறந் தேமதி வலவ!''[56]

''ஊர்மதி வலவ! தேரே''[57]

''வல்விரைந் தூர்மதி நல்வலம் பெறுந''[58]

தான் விரைவில் வீட்டை அடைய வேண்டும் என்ற அவாவினால் இங்ஙனம் பாகனைப் புகழ்கின்றான். தலைவன் பாகனும் இதனால் உற்சாகமுற்றுத் தேரினை விரைவாகச் செலுத்துகின்றான்.

தலைவியை விட்டுப் பிரிந்து வினைமேற் சென்ற தலைவன் திரும்பி வருகின்றான்; தேரின்மீது வருகின்றான். தேர்ப்பாகனை நோக்கி ''இன்று மாலை வருவதற்குள் தலைவி இருக்குமிடத்திற்கு விரைவில் தேரைச் செலுத்து வாயாக'' என்கின்றான். இச்செய்தி யைக் கொண்ட குறுந்தொகைப் பாடல்:

பரவலற் படுநீர் மாந்தித் துணையோ(டு)
இரலை நன்மான் நெறிமுதல் உகளும்
மாலை வாரா அளவைக் கால்இயல்
கருமாக் கடவுமதி பாக! நெடுநீர்ப்
பொருகயல் முரணிய உண்கண்
தெரிதீம் கிளவி தெருமரல் உயவே[59]

54. ஷை - 34
55. ஷை - 114
56. ஷை - 134
57. ஷை - 154
58. ஷை - 234
59. குறுந் - 250

[பரல் - பருக்கைக் கல்; அவல் - பள்ளம்; படுநீர் - தங்கிய நீர்; மாந்தி - உண்டு; இரலை நல்மான் - ஆண்மான்; நெடு நீர் - ஆழ்ந்தநீர்; பொரு கயல் - போராடும் மீன்கள்; கிளவி - சொல்; தெருமரல் - துன்பம்; உய - நீங்க]

இதில் ''மாலை நேரம் வருவதற்குள் தலைவி இருக்கும் இடத்திற்குத் தேரைச் செலுத்துவாயாக!'' என்று தலைவன் பாகனை நோக்கிக் கூறுவதைக் காண்க. இன்னொரு குறுந்தொகைத் தலைவன் பாகனைப் பாராட்டும் முறை நெஞ்சில நிறுத்தும் பான்மையுடையதாய்த் திகழ்கின்றது. ''பருக்கையையுடைய கரம்பை நிலத்தில் புது வழியை உண்டாக்கி நோயினால் வருந்தி உறையும் தலைவியை இறந்து படாமல் நல்குதற்குக் காரண மாயினை. இன்று நீ தேரையா தந்தனை? தலைவியையே தந்தனை'' என்கின்றான்.

முரம்புகண் ணுடைய வேகிக் கரம்பைப்
புதுவழிப் படுத்த மதியுடை வலவோய்
இன்று தந்தனை தேரோ
நோயுழந் துறைவியை நல்க லானே[60]

என்ற தலைவனின் பேச்சினைக் காண்க.

நற்றிணையில் இத்தகைய காட்சிகளை நவிலும் பலபாடல்கள் உள்ளன என்று மேலே குறிப்பிட்டோம். அவற்றுள் ஒன்றைக் காண்போம்.

செல்க பாக! நின் செய்வினை நெடுந்தேர்
விருந்து விருப்புறூஉங் பெருந்தோள் குறுமகள்
மின்னொளிர் அவிரிழை நன்னகர் விளங்க
நடைநாள் செய்த நவிலாச் சீறடிப்
பூங்கண் புதல்வன் தூங்குவயின் ஒல்கி
'வந்தீக எந்தை!' என்னும்
அந்தீம் கிளவி கேட்க நாமே.[61]

[வினைசெய் - இயங்கும் தொழிலையுடைய; விருப்பூறாஉம் - எதிரேற்க விருப்பம் கொண்ட; குறுமகள் - இளமையுடைய என் காதலி; அவிர் இழை - விளங்கிய அணிகலன்; நகர்-மாளிகை; நடை செய்த நவிலாச் சீறடி - நடத்தலைப் பயின்று அறியாத சிறிய அடிகள்; தூங்குவயின் - தூங்கும்

60. குறுந்-400
61. நற். 221

இடம்; ஒல்கி - சென்று; வந்தீக - வருக; அம் தீம்கிளவி - அழகிய இனிய சொல்]

இதில், "பாகனே, என் மாளிகையில் என் அருமை மகன் மெருகிட்ட அணிகலன்களை அணிந்த வண்ணம் துயில்வான். நம் வருகையை அறியும் தலைவி நம்மை எதிர்கொள்ள 'எந்தாய் வருக' என்று மகனை எழுப்புவாள். இருவரும் வந்து என்னைக் காண்பர். அந்தக் காட்சி நெடுவழி வந்த வருத்தத்தைப் போக்கும். காதலியின் சொல் எனக்கு அமிழ்தமாகவும் இருக்கும். ஆதலின் அவ் வினிய சொல்லை யான் கேட்குமாறு நின் கைவன்மையால் விரைந்து தேரைக் கடவுக" என்று தலைவன் கூறுவதைக் காண்க.

முன்னர்க் குறிப்பிட்டவாறு அகநானூற்றிலும் வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகனுக்குச் சொல்லியதாகப் பல பாடல்கள் உள்ளன. ஒன்றில் வரும் காட்சியைக் காண்போம்.

முன்இயங்கு ஊர்தி பின்னிலை ஈயாது
ஊர்க பாக ஒருவினை கழிய
....................................
தண்குட வாயில் அன்னோள்
பண்புடை ஆகத் (து) இன்துயில் பெறவே[62]

[முன் இயங்கும் - முற்படச் செல்லும்; பின் நிலை ஈயாது - இனிப் பின் இல்லாதபடி; கழிய - சுரத்தை நாம் கழிய; குடவாயில் - ஓர் ஊர்; ஆகம் - மார்பு; இன்துயில் - இனிய துயில்]

இதில், "குளிர்ந்த குடவாயில் என்னும் ஊரையொத்த சிறப்பினளாகிய என் தலைவியின் ஆகத்தின் கண்ணே இன்துயில் பெற விரும்புகின்றேன். ஆகவே, இச்சுரத்தைக் கடந்து செல்லும் நோக்கத்துடன் தேரினை விரைந்து செலுத்துவாயாக" என்று பாகனை நோக்கித் தலைவன் கூறுவதைக் காண்க. இன்னொரு தலைவன் பகைவயிற் பிரிந்து சென்றவன்; பகைவென்று அவன் தன் இல்லிற்கு மீளுகின்றான். பாகன் தேரை விரைந்து செலுத்த ஒல்லையில் இல்லம் எய்துகின்றான். இவன் பாகன் திறத்தினை மனமாறப் போற்றுவதுடன் தன் ஆகத்துடன் கட்டித் தழுவித்தன் மகிழ்ச்சியையும் புலப்படுத்துகின்றான்.[63]

---

62. அகம் - 44
63. நற். 121

இங்ஙனம் பல்லாற்றானும் தன் நிலையையும் தன் காதல் நிலையையும் கூறி வரும் தலைவன் மகிழுமாறு பாகன் கூறியதாக நற்றிணையில் ஒருபாடல்[64] உள்ளது. அதிலுள்ள காட்சியைக் காண்போம். பாகன் கூறுகின்றான்: "தலைவ, நின் கண்ணி வாழ்க! வினை முடிந்து நேற்றுதான் அரசன் விடை தந்தான் என்று கருதற்க. கலைமானோடு பிணைமான் கூடி விளையாடும் இம்முல்லைதான் நின் தலைவியின் இருப்பிடம். மான்களின் விளையாட்டினைக் காணும் அவளும் அத்தகைய மகிழ்ச்சியைப் பெற விரும்புவது இயல்பேயன்றோ? அவள் கவலாமலும் நீ வருத்தமுறாமலும் விரைந்து தேரினைக் கடவுவேன். நம் குதிரைகள் காற்றினும் கருகி ஓடும் தன்மையன. என் கைவன்மையால் கான்யாற்று மணற்கரை பின்னே செல்லுமாறு தேர் செல்லாநிற்கும். நீவிர் இருவீரும் விரைவில் கலந்து மகிழ்வீர்" என்பதாக.

நாற்கவிராச நம்பி பாகற்குரிய செயல்களாகச் சிலவற்றைத் தொகுத்து கூறுவர்.

சேயிழைக் கிழத்தியை வாயில் வேண்டலும்
வாயில்நேர் வித்தலும் வயங்குதுனி தீர்த்ததும்
வினைமுடித் ததன்பின் வியன்பதி சேய்த்தென
இனைவோற் றேற்றலும் பாகற் இயல்பே.[65]

இந்த நூற்பாவில் குறிப்பிட்டுள்ள முதல் மூன்று கிளவிகட்கும் இலக்கியம் காண்டல் அரிது.

64. நற் - 121
65. நம்பி அகப் - 102

# VII. அகப் பாடல் நோக்கியல்

அகத்திணைப் பாடலின் அமைப்புபற்றிய விளக்கம் இப்பகுதியில் இடம் பெறுகின்றது. பாடல்களில் தலைமக்களின் பெயர்கள் குறிப்பிடப்பெறும் மரபு இல்லை. முறைப் பெயர்களைக் கொண்டே கூற்றுகள் நிகழும். பாடல்களில் பாடல்களை யாக்கும் கவிஞன் தன் கூற்றாகப் பேசும் வழக்கமும் இல்லை. தலைவன் தலைவி செவிலி, தோழி, பாங்கன், பார்ப்பான் இவர்களே கூற்றுகள் நிகழ்த்துவர். பிறருக்கு இதை நிகழ்த்துவதற்கு இடம் இல்லை. பாடல்களில் அந்தந்தத் திணைக்குரிய முதல், கரு, உரி என்ற பொருள்கள் வரும். முதல், கரு வந்தாலும் வரலாம்; வராமலும் இருக்கலாம். உரிப் பொருள் கட்டாயம் வந்தே தீரும். உரிப் பொருளின்றி அகப் பாடல்கள் அமையா. பாடல்கள் நாடக வழக்காகவும், உலகியல் வழக்காகவும், புலனெறி வழக்காகவும் பாடப்பெறும். ஆதியில்-தொல்காப்பியருக்கு முன்-கலிப் பாவும் பரிபாடலும் அகப்பாடல்களின் யாப்பாக அமைந்திருந்தன. தொல்காப்பியருக்குப் பிற்பட்ட காலத்தில் ஆசிரியம், வெண்பா, வஞ்சிப் பாக்களிலும் பாவினங்களிலும் பாக்கள் அமைக்கப்பெற்றன.

அகத்திணைப் பாடல்களில் நாடகக் காட்சிகள் அமைந்திருக்கும். கூற்று முறையில் பாக்கள் அமைந்திருப்பதே இதற்குக் காரணம் என்று கூறலாம். பாடல்களின் அடிகளைக் கொண்டும், சொந்த வாக்கியங்களைக் கொண்டும் சில திணைகளில் நடைபெறும் சில காதற் காட்சிகள் நாடகக் காட்சிபோல் அமைந்திருப்பது சில எடுத்துக்காட்டுகளால் விளக்கப்பெறுகின்றது.

உள்ளுறை உவமும் இறைச்சிப் பொருளும் அகப் பாடல்களில் அமைந்து அவற்றின் சுவையை மிகுவிக்கின்றன. இந்த இரண்டு உத்திகளும் சங்கக் கவிஞர்களின் கைவந்த சிறப்பு. இந்த இரண்டு உத்திகளும் பாடல்களில் அமைந்திருக்கும் பாங்கு பல எடுத்துக் காட்டுகளால் விளக்கம் அடைகின்றது.

# அகத்திணைப் பாடல்கள்

இதுகாறும் கூறியவற்றால் அகப் பொருளின் பெருமையை ஒருவாறு கண்டோம். அகப்பொருள் வரம்புடையது என்றும், தனிமையுடையது என்றும், ஞால நோக்குடையது என்றும் அறிந்து தெளிந்தோம். பல்வேறு காதல் நிலைகளிலிருந்து அகப்பொருள் என்ற ஒன்றைப் புடமிட்டுத் தூய்மைப் படுத்தி உலகுக்கு அளித்தனர் தமிழ் மூதறிஞர்கள். ஞாலமக்களனைவருக்கும் பொதுவான அகமரபு நெறிகளை வகுத்துக் காட்டினர். அந்த அகமரபு நெறிகள் தாம் சங்கத்துச் சான்றோர்களின் அகத்திணைப் பாடல்களில் ஊடுருவிச் சென்று அவற்றிற்குப் பெருமையையும் ஞால நோக்கினையும் அளித்துள்ளன என்ற பேருண்மையை அப்பாடல்களில் ஆழங்கால்பட்டுத் திளைப்பவர்களே நன்கு அறிவர். அங்ஙனம் அந்நெறிகள் ஊடுருவிச் சென்றுள்ள அகத்திணைப் பாடல்களின் பொதுப் பண்புகளை ஈண்டு எடுத்துக் காட்டுவோம்.

**பெயர் சுட்டாப் பண்பு:** அகத்திணை யுலகில் காணப் பெறும் மக்களைப்பற்றிய குறிப்பினைத் தொல்காப்பியர்,

மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்.[1]

என்ற நூற்பவால் தருவர். இந்நூற்பாவில் முன்னடி அகத்திணைக் குரிய நிலைக் களத்தையும் பின்னடி அகத்திணை பாடும் இலக்கிய நெறியினையும் குறிப்பிடுவது தெளிவு. ஐந்திணைக் காதலொழுக் கங்கள் மன்பதை அனைத்தையும் கருதியவையாதலின் இவற்றைத் தனியொருவர் பெயர் காட்டிப் புலவர்கள் பாடார் என்பது தொல் காப்பியர் கூறும் உண்மை. சங்க இலக்கியத்திலுள்ள 1862 அகப் பாடல்களிலும் காதலாட்களுக்கு, கிளவிமாந்தர்கட்கு, இயற்பெயர் கள் சுட்டப் பெறவில்லை என்பது ஈண்டு அறியப்பெறும். 'ஐந்திணை

1. அகத்திணை-57 (இளம்).

யும்' என்பதிலுள்ள எச்ச உண்மையால் கைக்கிளை, பெருந்திணை என்ற திணை நிகழ்ச்சிகளைச் சுட்டும் பாடல்களிலும் இயற் பெயர்கள் வருமாறு பாடும் மரபு இல்லை என்பது பெறப்படு கின்றது. அகத்திணையை நுணுகி ஆராயின் ஏன் இவ்வமைப்பு ஏற்பட்டது என்பது தெளிவாகும்.

**முதலாவது :** தனிப்பட்டோர் வாழ்வில் காணப்பெறும் காதலுறவுகள் அனைத்திலும் இனியனவாகச் சுட்டக் கூடிய நற்கூறுகள் யாவும் நிரம்பியிருக்கும் என்று சொல்ல இயலாது. இலக்கியத்திற்கு அவை குறைவற்ற எடுத்துக் காட்டுகளாகும். வாழ்க்கை என்பது இன்பமும் துன்பமும் கலந்த ஒரு கலவையா தலின், இலக்கியப் புலவன் சமுதாயத்தில் பல்வேறுபட்ட நிலைகளில் வாழும் காதல் மாந்தர்களிடம் காணப்பெறும் நற்காதற் கூறுகளைத் தேர்ந்தெடுத்து அவற்றைக் கொண்டு பண்பும் பதமும் இனிமையும் கொண்ட இலக்கியத்தைப் படைப்பான் என்று திறனாய்வாளர் காட்டும் உண்மையையே அக இலக்கியம் நமக்குக் காட்டுகின்றது. ஆகவே, ஒரு காதல் நிலையில் ஆண்பாலார் பெண்பாலார் பலருடைய உள்ளோட்டங் களை வெளிப்படுத்துவது அகத்திணையின் பண்பாகும் என்பது அறியப்படும். பெயர் சுட்டப்பெறாமையால் மக்களனைவரின் காதல் மனங்களை அது நமக்குக் காட்டுகின்றதேயன்றி தனிப் பட்டோரின் மனங்களை அன்று. பல்வேறு வாழ்வு நிலையுடைய மக்கள் குறிப்பிட்ட ஒரு காதல் நிலையில் எவ்வெவ்வாறெல்லாம் நினைப்பர், சொல்லுவர், செய்வர் என்ற உணர்வுத்திறங்களையே அகத்திணை சுட்டி உரைக்கின்றது என்பது உணர்ந்து தெளிய வேண்டிய தொன்றாகும்.

**இரண்டாவது :** அகப்பாடல்களில் முதல் கரு உரி என்ற மூன்று பொருள்களும் வரும் என்பதை நாம் அறிவோம். அங்ஙனம் வருங்கால் முதல் கரு என்ற இரண்டிலும் மக்களின் இயற்பெயர் களும் வரலாறுகளும் வரலாம்; உவமைப் பகுதிகளிலும் அவை வரலாம். ஆயின் உரிப்பொருள் கூறுமிடத்து அகத்திணை மாந்தர்களை இயற்பெயர்களுடன் வரலாற்றுச் சுவடு காணும் வகையில் சுட்டி உரைத்தலாகாது. காரணம், அகம் என்பது உரிப் பொருள். தனிப்பட்டோர் வாழ்க்கையில் காணும் மெய்யான நிகழ்ச்சிகளையே அகப் புலவன் பாடினும், அவை தூய முதல் நிலையில் வைத்து பொது நிலைக்கு உயருமாறு பாடப்பெறும். அகத்திணை மாந்தர் கூற்றுகளில் யாண்டும் மக்களின் இயற்

பெயர்கள் வாரா. அங்கு எவ்வகையான மெய்ப் பெயருக்கும் புனை பெயருக்கும் இடம் இல்லை.

**இருவகை வழக்குகள் :** செய்யுட்களை யாப்போர் இருவகை வழக்குகளை மேற்கொள்வதைக் காண்கின்றோம். மக்கள் வாழ்க்கையில் இயல்பாகக் காணப்பெறும் ஒழுக்கம்—நடக்கை முறை—உலகியல் வழக்கு எனப்படும். அவ்வுலகியல் வழக்கில் சிறந்தனவாயுள்ளவற்றை அறிஞர்கள் தேர்ந்தெடுத்துப் பிற்கால மக்களின் உலகியல் வழக்குத் திருத்தமுறச் செவ்வையாக நடைபெறுதற் பொருட்டுப் பாடல்களாகப் பாடி வைப்பர். அப்பாடல் உலகியல் வழக்கின் உயர்வு தோன்றுமாறு பலபடப் புனைந்து செய்யப்பெறும், தொல்காப்பியரும் இதனை,

வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான.[2]

என்று கூறுவர். இதற்குப் பேராசிரியர், "வழக்கென்று சொல்லப் படுவது உயர்ந்தோர் வழங்கிய வழக்கே; என்னை? உலகத்து நிகழ்ச்சியெல்லாம் அவரையே நோக்கினமையின்" என்று பொருள் கூறுவர். எனவே, இத்தகைய பாடல்களாகிய நூல் வழக்கு **நாடக வழக்கு** எனப்படும். உலகியல் வழக்கும் நாடக வழக்கும் சேர்ந்ததே, அகப் பொருட் **புலனெறி வழக்கம்** அல்லது **செய்யுள் வழக்கம்** ஆகும். இதனை ஆசிரியர் தொல் காப்பியனார்,

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல்'சான்ற புலனெறி வழக்கம்.[3]

[புலன் நெறி வழக்கம் - நூல் நெறி வழக்கம்]

என்று கூறுவர். இதற்கு இளம்பூரணர் தரும் விளக்கம்: "நாடக வழக்காவது, சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தன வாகத் தொகுத்துக் கூறுதல். அஃதாவது, செல்வத்தானும், குலத்தானும், ஒழுக்கத்தானும், அன்பினானும் ஒத்தார் இருவ ராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ் வழிக் கொடுப்போருமின்றி அடுப்போருமின்றி வேட்கை மிகுதி யாற் புணர்ந்தார் எனவும் பின்னும் அவர் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையால் வரைந்தெய்தினார் எனவும், பிறவும் இந் நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தன

2 மரபியல்-94. (இளம்)
3. அகத்திணை - 56 (இளம்)

வாகக் கூறுதல். உலக வழக்காவது, உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்துவருவது. பாடல் சான்ற புலனெறி வழக்காவது, இவ்விரு வகையானும் பாடல் சான்ற கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுவாயாகக் கூறப்படுகின்ற அகப்பொருள்'' என்பது. இதனால் களவு, கற்பு நிலைகள் தமிழரிடையே தொன்று தொட்டு வழங்கிய உலகியல் வழக்கங்களேயாகும் என்பதும், இவையே பின்னர் புலவர்களால் சிறப்பித்துப் பாடப்பெற்றும், இலக்கணம் கற்பிக்கப்பெற்றும் செய்யுள் வழக்கு அடைந்தன என்பதும் பெறப் படுகின்றன. இதற்கும் ஆசிரியர்,

> உயர்ந்தோர் கிளவி வழக்கொடு புணர்தலின்
> வழக்குவழிப் படுதல் செய்யுட்குக் கடனே.[4]

என்றும்,

> அறக்கழி வுடையன பொருட்பயன் படவரின்
> வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப.[5]

என்றும் விதிகள் செய்வர். எனவே, பழந்தமிழ் நூல்கள் யாவும் உலக வழக்கைத் தழுவிச் செய்யப் பெற்றவையே ''யாகும் என்பது ஈண்டு அறியத் தக்கது. நச்சினார்க்கினியரும், இஃது (செய்யுள் வழக்கு) இல்லதெனப்படாது, உலகியலேயாம், உலகியலின்றேல், 'ஆகாயப் பூ நாறிற்று' என்றவழி அது சூடக் கருதுவதுமின்றி மயங்கக் கூறினானென்று உல்கம் இழித்திடப் பெறுதலின் இதுவும் இழித்திடப்பெறும். இச்செய்யுள் வழக்கினை நாடக வழக்கென மேற்கூறினார், எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது, உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தல் முதலாகப் புனைந்துரை வகையாற் கூறும் நாடகஇலக்கணம்போல் யாதானும் ஒரோ வழி ஒருசாரார் மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமும் காலமும் நியமித்துச் செய்யுள் செய்தல் ஒப்பு நோக்கிச் செய்யப்பட்டதாகலின்'' என்று கூறுதல் காண்க.[6] மேலும் அவர், மேற்குறிப்பிட்ட 'நாடக வழக்கினும்' என்ற நூற்பாவிற்கு உரை கூறுங்கால், ''புனைந்துரை வகையாற் கூறுப என்றலின் புலவர் இல்லனவும் கூறுபவாலோ எனின், உலகத்தோர்க்கு நன்மை பயத் தற்கு நல்லோர்க் குள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக் கருதி, அந் நல்லோர்க் குள்ளனவற்றில் சிறிது

---

4. பொருளியல் - 21 (இளம்)
5. ஷை - 22 (இளம்)
6. அகத்திணை - 3 இன் உரை (நச்).

இல்லனவும் கூறுதலின்றி யாண்டும் எஞ்ஞான்றும் இல்லன கூறார் என்றற்கே 'நாடகம்' என்னாது 'வழக்கு' என்பாராயிற்று'' என்றும் ''இப் புலநெறி வழக்கினை இல்லது இனியது புலவரால் நாட்டப் பட்டது என்னாமோ எனின், இல்லது என்று கேட்டோர்க்கு மெய்ப் பாடு பிறந்து இன்பம் செய்யாதாகலானும், உடன் கூறிய உலகியல் வழக்கத்தினை ஒழித்தல் வேண்டுமாகலானும் அது பொருந்தாது', என்றும் கூறியுள்ளதை நாம் சிந்தித்து அறிதல் வேண்டும். எனவே, தொல்காப்பியர் கூறியுள்ள அகப்பொருள் விகற்பங்கள் யாவும் புனைந்துரை வகையால் புலவர்கள் பாடி வைத்த உலகியல்களே என்பது வெளிப்படை.

**கூற்று நிகழும் முறை:** அகத்திணை முற்றும் கூற்று வகையால் அமைந்த நாடகப் பாங்கினது. பாடல்களைப் பாடும் புலவனும் பாத்திரங்களோடு ஒன்றிவிடும் நாடகப் புலவனைப் போலவே தன் சுவடு தோன்றாது தன்னை ஒளித்து அழித்துக் கொள்கின்றான். தன்னிலை தோன்றப் பாடும் வழக்கம் அவனிடம் இல்லை. கூற்றோடு வேற்றுமையின்றிக் கலந்து விடுகின்றான். நாடகத்தில் வரும் மாந்தர்கட்கு மக்கட் பெயர்கள் இருப்பது போல அகத்திணை மாந்தர்கள் மக்கட் பெயர்களைப் பெறார். களவில் கூற்று நிகழ்த்தற்குரியர் பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி ஆகிய **அறுவர்** என்பதை,

> பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
> சீர்த்தகு சிறப்பின் கிழவன் கிழத்தியொடு
> அளவியல் மரபின் அறுவகை யோரும்
> களவினிற் கிளவிக் குரியர் என்ப.[7]

என்ற நூற்பாவால் அறிகின்றோம். இங்ஙனமே,

> பாணன் கூத்தன் விறலி பரத்தை
> யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்
> பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
> முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்
> தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்.[8]

என்ற நூற்பா கற்பின்கண் கூறத் தகுவாரை பாணன், கூத்தன், விறலி, மரத்தை, அறிவர், கண்டோர் என்பதாகச் செப்புகின்றது. ஆனால் ஊரார், அயலார், சேரியார், நோய் மருங்கறிநர் தந்தை,

---

7. செய்யு. 181 (இளம்)
8. ஷை - 182 (இளம்)

தன்னை ஆகிய அறுவரும் கூறுவதாகச் செய்யுள் புனையும் வழக்கம் இல்லை.

ஊரும் அயலும் சேரி யோரும்
நோய்மருங் கறிநரும் தந்தையும் தன்ஐயும்
கொண்டெடுத்து மொழியப் படுதல் அல்லது
கூற்றவண் இன்மை யாப்புறத் தோன்றும்.[9]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். அஃதாவது, இவர் கூற்றாகப் பிறர் சொல்லின் அல்லது இவர்தாம் கூறார் என்பது கருத்து. பேராசிரியரும்" 'கொண்டெடுத்துமொழியப்படுதலல்லது' என்பது, இவர் கூற்றாகப் பிறர் சொல்லின் அல்லது இவர்தாம் கூறார் என்றவாறு"[10] என்று கூறியிருத்தல் ஈண்டு அறியத் தகும். எடுத்துக்காட்டாக,

'எந்தையும் நிலனுறப் பொறாஅன் சீறடிசிவப்ப
எவன்இல குறுமகள் இயங்குதி என்னும்'[11]

என்ற அகப்பாட்டடிகளில் தோழி தலைவனுக்குத் தலைவியின் இற்செறிப்பை உணர்த்துங்கால் தந்தையுட்கொண்டு கூறியதைக் காண்க. மேலும்,

அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்ஐயர்க் குய்த்துரைத்தாள் யாய்;
அவருந்,
தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபகல் எல்லாம் உறுத்தெழுந்து ஆறி
இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை.[12]

என்ற கலிப்பாட்டடிகளில் தன்ஐயர் வரைதலுக்கு ஒருவாறு உடன்பட்டமையைத் தோழி தலைவிக்கு உரைத்ததை அறிக. இன்னும்,

ஊர் அலர்எழச் சேரி கல்லென
ஆனாது அலைக்கும் அறனில் அன்னை[13]

என்ற குறுந்தொகை யடிகளில் தலைவி தலைவனுடன் செல்வதால் ஊரில் அலர் எழுதலையும் சேரியில் ஆரவாரம் நிகழ்தலையும் தோழி தலைவிக்குப் புலப்படுத்தலை உணர்க.

9 ௸ - 183 (இளம்)
10. ௸ - 191 (பேரா) உரை.
11. அகம் - 12
12. கலி. 39. அடி (20-25)
13. குறுந். 262

தலைவனொடும் தலைவியொடும் (அவளைப் பெற்ற) நற்றாய் கூறியதாகக் கூறும் வழக்கமில்லை என்று புலப்படுத்துவர் ஆசிரியர்.

கிழவன் தன்னொடுங் கிழத்தி தன்னொடுங்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது.[14]

என்ற நூற்பாவால் இதனை அறியலாம். எனவே, நற்றாய் ஏனையோரை நோக்கியே கூறுவதாகச் செய்யுள் செய்யப்பெறும்.

எம்வெங் காமம் இயைவ தாயின்
..........................
செறிந்த சேரிச் செம்மல் மூதூரர்
அறிந்த மாக்கட்கு ஆகுக தில்ல
..........................
மென்தோள் அஞ்ஞை சென்ற ஆறே.[15]

[காமம்-விருப்பம்; இயைவது-கைகூடுவது; செம்மல்-தலைமை வாய்ந்துள்ள; அறிந்தமாக்கட்கு—முகமறிந்த மக்களை உடையது; அஞ்ஞை-அன்னை (மகள்); ஆறு-வழி]

என மகட்போக்கிய நற்றாய் கூறுவது காண்க.

கண்டோர்கூற்று நிகழும்இடங்களைப் ''பொழுதும் ஆறும்''[16] எனத் தொடங்கும் அகத்திணை இயல் நூற்பாவால் புலப்படுத்துவர் ஆசிரியர். இவர்கள் யாரோடு கூற்று நிகழ்த்துவர் என்பதையும்,

ஒண்தொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்டது என்ப.[17]

என்ற நூற்பாவால் உரைத்துச் செல்வர். ஈண்டு ஒண்தொடி மாதர்' என்பது நற்றாய், செவிலி, தோழி ஆகியோரை எனவே, நற்றாய் செவிலி தோழி என்னும் இவர்களோடும் தலைவனோடும் தலைவியோடும் கண்டோர் உரையாடுதல் உலகியல் வழக்கமாகும்.

---

14. செய்யு-184 (இளம்)
15. அகம் 15
16. அகத்திணை 43 (இளம்)
17. செய்யு - 185 (இளம்)

வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலன சிலம்பே.[18]

என்பது செவிலிக்குக் கண்டோர் கூறுவது.

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே.[19]

என்று முக்கோர் பகவர் இடைச்சுரத்தில் கண்ட செவிலியிடம் கூறியதும் ஈண்டு நினைக்கத்தக்கது.

தலைவனும் தலைவியும் அல்லாத ஏனைய பதின்மரும்[20] தலைமகனும் தலைமகளுமாகிய இருவரோடும் இடமும் காலமும் நோக்கி உரை நிகழ்த்தும் மரபுகளையெல்லாம் தொல்காப்பியர் நன்கு விளக்குவர். ஆனால், அவர் பிற்காலத்து அகப்பொருள் இலக்கணம்போல் இக்கூற்றுகளை துறை வரிசைப் படுத்தி மொழிய வில்லை என்பது அறியத் தக்கது தொல்காப்பியத்தில் தலைவன், தலைவி, தோழி முதலியோர் கிளவி நிகழ்த்தும் இடங்களே தொகுக்கப் பெற்றுள்ளன. இங்ஙனம் தனித்தனி வைத்துக் காட்டப்பெற்ற கூற்றுகளைக் கோவைக் கிளவிகள் போலத் துறைப் படுத்திக் கூறுவதற்கு ஆசிரியர் காலத்து வழங்கிய அகப் பொருள் முறை வைப்பு இன்னதென்பதை விளக்கும் இலக்கியம் கிடைக்கவில்லை. எனவே, அவற்றைத் தொல்காப்பியர் கூறும் முறைப்படி விளக்குதற்குத் தடையாகின்றது. கடைச்சங்க நாளில் அகத்திணைபற்றி எழுந்த நற்றிணை, நல்ல குறுந்தொகை முதலிய தொகை நூல்கள் பிற்காலத்துக் கோவை நூல்களில் கண்ட துறைகளையே பெரும்பான்மை கூறினும், அவை கோவை போலக் காட்சி முதலாகத் தொடங்கிப் பரத்தைப் பிரிவு இறுதி யாக வைத்துக் கூறவில்லை. அவை யாவும் குறிஞ்சி பாலை என்னும் திணை முறைப்படியே வைத்து ஓதுகின்றன. எனவே' அவற்றில் ஒரு துறைக்கு மற்றொரு துறை தொடர்பின்றியே காணப்பெறும். இங்ஙனம் தொல்காப்பியனார் அவ்வவர் கூற்று

18. குறுந். 7
19. கலி - 9 அடி (13-15)
20. **பதின்மராவார் :** பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, பாணன், கூத்தன், விறலி, பரத்தை அறிவர், கண்டோர் என்போர்(இவர்உரையாடும் திறம் இந்நூலில் பிறிதோரி டத்தில்விளக்கப்பெற்றுள்ளது.)

களைக் கோவைபடக் கூறாமல் சென்றதையும், பழைய இலக்கியங்களும் அதற்கேற்பக் காணப்பெறுவதையும் நோக்கும்போது, பண்டைக் காலத்தில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணையில் ஒரு முறைபற்றிப் பாடுதலே பெருவழக்காக இருந்த தென்பதை ஊகித்து அறியலாம்.[21] எனினும், நுணுகி ஆராய்ந்தால் தொல்காப்பியத்திலுள்ள அகப்பொருள் முறை வைப்பினை இன்ன தென்பதை நன்கு அறிந்து கொள்ளலாம். இதற்குத் தொல்காப்பியர் கருத்துகளையே பெரும்பான்மை தழுவியமைந்த இறையனார் களவியலுரையும் நம்பியகப் பொருளும் பெரிதும் துணை செய்யும்.

**முறைப் பெயர்கள் :** அகத்திணைப் பாடல்களில் வரும் கூற்றுகளில் தனி ஆண் பெண் பெயரிட்டு வழங்குதல் இல்லை என்பதைப் பிறிதோரிடத்தில் விளக்கியுள்ளோம்.[22] இப்பாடல் களில் முறைப்பெயர்களைக் கொண்டே கூற்றுகள் நிகழும். அவை தம்பி, தம்முன் என்பனவும்; கிழவன், தோழன் என்பனவுமாகும்.

முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொல்
நிலைக்குறி மரபின் இருவீற்றும் உரித்தே [23]

என்பது விதி. தலைவன், தலைவி, தோழி, பாங்கன் ஆகிய நால்வரும் ஒருவரையொருவர் அழைத்தற்குரிய பொதுப் பெயர் 'எல்லா' என்பது. இச்சொல்லால் தலைவியும் தோழியும் பெரும் பான்மை தலைவனையும், அத்தலைவன் சிறுபான்மை தலைவி யையும் பாங்கனையும் அழைத்துக் கொள்வர் என்று நச்சினார்க் கினியர் குறிப்பர்; சில எடுத்துக்காட்டுகள்:

எல்லா
தமக்கினி தென்று வலிதில் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ'[24]

இது தலைவி தலைவனை நோக்கிக் கூறியது; இஃது **ஆண்பால்** மேல் வந்தது.

'முற்றிழை யேஎர் மடநல்லாய் நீபாடுஞ்
சிற்றில் புனைகோ' சிறிதென்றான்; 'எல்லாநீ

21. நாலைந்திணைப் பாடல்களின் வைப்புமுறை இங்ஙனம் ஊகிக்க இடம் தருகின்றது.
22. அகத்திணை மாந்தர் - vi ஆம் பகுதி காண்க. (பக். 310).
23. பொருளியல் - 26 (நச்)
24. கலி - 62 (6-8)

பெற்றேம்யாம் என்று பிறர்செய்த இல்லிருப்பாய்
கற்ற தில்லைமன்ற காண்' என்றேன்; முற்றிழாய்!
தாதுசூழ் கூந்தல் தகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கு' என்றான்; 'எல்லாநீ
ஏதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதெ'ன்றேன்.[25]

என்று உரையாடல் முறையில் அமைந்த இம்முல்லைக் கலியில் வந்துள்ள 'எல்லா' இருமுறையும் தலைவி தலைவனை நோக்கி விளித்ததே யாகும்; ஆகவே **ஆண்பால்**மேல் வந்ததாகும்.

எல்லா இஃதொத்தன் என்பெறான் கேட்டைக்காண்[26]

என்ற குறிஞ்சிக் கலியடியில் தோழி தலைவியை விளித்தது; இது **பெண்பால்**மேல் வந்தது.

'அதிர்வில் படிறெருக்கி வந்தென் மண்மேல்
முதிர்பூண் முலைபொருத ஏதிலாள் முச்சி
உதிர்துகள் உக்கநின் ஆடை யொலிப்ப
எதிர்வளி நின்றாய்நீ செல்;
இனியெல்லா'[27]

[படிறு - வஞ்சனை; எருக்கி - வருத்தி; ஏதிலாள்-பரத்தை; முச்சி - முடி; வளி - காற்று]

இது தலைவியைத் தலைவன் விளித்தது. எனவே, **பெண்பால்** மேல் வந்தது. 'எல்லா' என்ற சொல் 'எலா', 'எல்ல', 'எலுவ எனவும் திரிந்து வழங்கும். "எலுவ சிறா அர்"[28] "யாரை எலுவ யாரே"[29] என்ற இடங்களில் தலைவனைத் தோழி விளித்தமை காண்க.

மேலும், 'அன்னை', 'என்னை' என்ற முறைப் பெயர்களும் இப்புலனெறி வழக்கில் வழங்கும். 'அன்னை' என்பது தலைவி தோழியையும், தோழி, தலைவியையும் அழைக்கும் சொல்லாகவும் 'என்னை' என்பது அவ்விருவரும் தலைவனை விளிக்கும் சொல்லா கவும் வழங்கப்பெறும்.

25. ஷை - 111 (9-16)
26. ஷை - 61 அடி. 1
27. கலி-81. வரி (29-33)
28. குறுந். 129.
29. நற். 395.

அன்னை என்னை என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்
தோன்றா மரபின என்மனார் புலவர்.[30]

என்று ஆசிரியர் இதற்கு விதி செய்வர்.

'அன்னாய் இவனோர் இளமா ணாக்கன்'[31]

'புல்லின் மாய்வ தெவன்கொல் அன்னாய்'[32]

இவை தோழியைத் தலைவி 'அன்னாய்' என்றன.

'அன்னாய் வாழிவேண் டன்னை'[33]

'அன்னாய் வாழிவேண் டன்னை'[34]

இவை தோழி தலைவியை அன்னை என்றன.

'எனக்கும் ஆகாது என்ஐக்கும் உதவாது'[35]

'ஒரீஇனன் ஒழுகும் என்ஐக்குப்
பரியலென் மன்யான் பண்டொரு காலே.[36]

இவை தலைவி தலைவனை 'என்ஐ' என்றன.

**அகப்பாடல்களின் யாப்பமைதி** :மனித இனம் வளர்த்த கலைகள் யாவும் அவ்வினம் வளர்ந்த வரலாற்றை ஒட்டியுள்ளன என்று கலை வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவர். மானிட வாழ்க்கையிலிருந்து முளைத்த கலைகள் வாழ்க்கையில் ஓய்வான இன்பப் பகுதிக்காக என்றே ஒதுங்கி வளர்ந்தன என்றும், இவை வாழ்க்கையின் உழைப்புப் பகுதியில் சேராமல் இன்பப் பகுதிக்கு மட்டும் உரியனவாக நின்றன என்றும் கூறுவர். இவ்வாறு பிறந்து வளர்ந்த இசை என்னும் கலை தொடக்கத்தில் பொருளற்ற ஒலியொழுங்கும் பொருளுடைய ஒலியொழுங்கும் கலந்ததாகநின்றது. இன்றும் அவை இசையில் ஓரளவு கலந்தே நிற்பதைக் காணலாம் பொருளற்ற ஒலியொழுங்கு உணர்ச்சியைப் புலப்படுத்த வல்லதாக இருப்பதால்தான் அஃது இன்றும் போற்றப்படுகின்றது. பொருள் ஒலிகள் அமைந்த முறையே பாட்டு என்பது.

---

30. பொருளியல்-52 (நச்)
31. குறுந்-33
32. ஷை-150
33. ஐங்குறு-206
34. ஷை-206
35. குறுந்-27
36. ஷை-203

''பொருளற்ற உணர்ச்சி ஒலிகளையே இசைத்து மிக்க இன்பங் கண்ட மனிதன் மெல்ல மெல்ல மாறிப் பொருள் ஒலிகளை மிகுதி யாக இசைத்து இன்பம் காணத் தொடங்கினான் பறவைகளைப் போல் உணர்ச்சி ஒலிகளை மிகுதியாக இசைத்த காலத்தில் அவனுடைய செவிப்புலன் வாயிலாக உள்ளம் குழைந்து இன்புற் றான். இம்மாறுதல் நேர்ந்த பிறகு, பொருள் ஒலிகளை மிகுதி யாக இசைத்துப் பயின்றபோது, செவிப்புலன் வாயிலாக மட்டும் அல்லாமல், அறிவின் வாயிலாகவும் உள்ளம் குழைந்து இன்புற் றான். இன்னும் கூறப் புகுந்தால், செவிப்புலன் வாயிலாகப் புகுந்த இன்பம் குறைந்து அறிவின் வாயிலாகப் பெறும் இன்பம் மிகுந்தது எனலாம். இந்த நிலையில், பாட்டு என்னும் கலை, உணர்ச்சி ஒலிகளின் துணையையும் கடந்து, இசைக் கருவிகளின் துணையையும் வாழவல்லதாய் விளங்கிற்று. 'பாட்டு' (Poetry) என்னும் உயர்கலை பிறந்த நிலை இதுவே ஆகும்''[37] இத் தகைய ஒரு நிலையில் இன்ப உணர்ச்சியைப் புலப்படுத்தும் அகப் பாடல்கள் எழுந்திருக்கலாம். இசையின்பம் மிக்க கலிப்பாட்டும் பரிபாடலும் ஆதியில் அகப்பொருள் பாடலின் யாப்பு முறைகளாக அமைந்தன என்று தொல்காப்பியர் குறிப்பிடுவர்.

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்[38]

என்ற விதியால் இதனை நன்கு அறியலாம். மேலும் ஆசிரியர் பரி பாடலின் உறுப்புகளைக் குறிப்பிடும்பொழுது,

காமங் கண்ணிய நிலைமைத் தாகும்[39]

என்று கூறுவதாலும் பரிபாடல் இன்பப் பகுதிபற்றியே பாடப் பெற்றது என்பதை உணரலாம். இதனால், ஆசிரியர் தொல் காப்பியர் காலத்தில் எல்லாப் பாக்களிலும் அகப்பொருள் அதிக மாக வழங்கப்பெறாமை அறியப்படும். ஆனால், தொல்காப்பி யருக்குப் பின்னருள்ள காலத்தில் இவ்வரையறை இல்லாமல் போய் விட்டது. கடைச் சங்க நூல்களில் கலிப்பாட்டு நீங்க ஒழிந்தவும் பிற்பட்ட நூல்களும் ஆசிரியம், வெண்பா, வஞ்சிப்

37. மு. வ: **இலக்கிய ஆராய்ச்சி** பக் 113-114
38. அகத்திணை-56 (இளம்)
39. செய்யு-117 (இளம்)

பாக்களில் அமைக்கப்பெற்றிருப்பதால் இதனை உணரலாம். நச்சினார்க்கினியரும் 'நாடக வழக்கினும்' என்று மேற்குறிப் பிட்ட நூற்பாவின் உரையில் பிற்காலத்தில் நேர்ந்த மாறு பாட்டை, "ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புறம் என்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடுந்தொகையும் புறமும் கீழ்க்கணக்கும் மதுரைக் காஞ்சியும் பட்டினப் பாலையும் என்பனவற்றுட் காண்க" என்று உரையிற் கொண்டு அமைப்பர்[40]

40. அகத்திணை-53 (நச்) உரை.

## உரிப் பொருள் ஒன்றே நுவலும் பாடல்கள்

அகத்திணைப் பாடல்கள் நீளமாக அமைந்தால்தான் முதல் கருப்பொருள்கள் அமைவதற்கு இடம் தரும். திருக்குறள் - காமத்துப்பால் மிகச் சிறிய இரண்டடிகளால் அகப்பொருளைச் சுருக்கமாகத் தெரிவிக்கும். இச்சிறு வெண்பாக்கள் முதல் கருப் பொருள்களைச் சிறிது புனையவும் இடந்தாரா. ஆதலின் திருவள்ளுவர் உரிப்பொருளே பொருளாகக் காமத்துப்பாலை இயற்றியுள்ளார். அகப்பாட்டின் அடி நீள நீள இயற்கைப் புனைவுக்கு இடமுண்டு.

கண்ணொடு கண்ணினை நோக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல![1]

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.[2]

என்ற குறட்பாக்கள் தெளிவுறுத்தும். அடி சுருங்கின் அப்புனைவு சுருங்கிவிடும்.

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.[3]

நீரும் நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது[4]

என்ற அடிகளால் இதனைத் தெளியலாம். ஐங்குறுநூற்றுப் பாக்கள் 3-6 அடி எல்லையைக் கொண்டவை. இவ்வடிச் சிறுமை யால் இந்நூலும் குறுந்தொகை போல உரிப்பொருளையே சிறப்பாகப் பாடுகின்றது. எனினும், குறுந்தொகை நல்கும் இலக்கியச் சுவைக்கு இந்நூல் தரும் சுவை ஈடாகாது என்றே

1. குறள்-1100
2. ஷை-1101
3. ஷை-1102
4. ஷை-1309

சொல்லவேண்டும். காரணம், குறுந்தொகை இருநூற்றுக்கு மேற் பட்ட புலவர்களின் பாடற்றொகுதியாதலால் அவர்தம் அறிவுக் கூர்மை ஆங்குச் சுவை செய்ய வாய்ப்பு கிடைத்துள்ளது.

உரிப்பொருள் ஒன்றே நுவலும் பாக்கள் எட்டுக்தொகை நூல்களாகிய குறுந்தொகையிலும்ஐங்குறுநூற்றிலும்தான்காணப் பெறுகின்றன. இப்பாக்கள் பாலைத்திணை முல்லைத்திணை எனச் செவ்விதின் பெயர் பெறுகின்றன. காரணம் திணைமை யாவது உரிப்பொருளே பற்றியது. முதற்பொருளும் கருப்பொரு ளும் அப்பொருட்குத்துணையாக நிற்றல் அத்துணையே. இதனால் அகத்திணை எழுமைப் பகுப்பு காதலர்களின் கைக்கிளை புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் பெருந்திணை என்னும் காம ஒழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டது என்பது தெளிவு. உரிப்பொருளை மட்டிலும் கொண்ட ஒருசில பாடல்களை ஈண்டுக் காட்டுவோம்.

நோமென் நெஞ்சே நோமென் நெஞ்சே
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநங் காதலர்
அமைவில ராகுதல் நோமென் நெஞ்சே.[5]

[தீய்ப்பு-தீயச் செய்யும் கருவி; கண்ணீர் தாங்கி-கண் ணீரைத் துடைத்து; அமைதற்கு-அளவளாவுதற்கு]

தலைவர் இப்பொழுது உடனிராமையால் தன் நெஞ்சு வருந்து வதாகத் தலைவி கூறுவதாக அமைந்தது இப்பாடல்; உரிப் பொருளாகிய 'தலைவர் கண்ணீரைத் தாங்கியவராதலின் மீண்டும் அருள்வார் என்று நினைந்து ஆற்றுவதாகக் கூறுகின்றாள் தலைவி.

மாவென மடலும் ஊர்ப; பூவெனக்
குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப;
பிறிதின் ஆகுப காமம்காழ்க் கொளினே.[6]

[மா-குதிரை; மடல்-பனைமடல்; ஊர்ப-ஊர்வர்(ஆண்கள்) கண்ணி-மாலை; மறுகு-வீதி; ஆர்க்கவும்-ஆரவாரிக்கவும்; பிறிது-வரை பாய்தல் முதலியவை]

5. குறுந்-4
6. ஷை-17

தலைவன் தான் மடலேறத்துணிந்துள்ளமையைத் தெரிவிக்கின்றான் இப்பாடலில்.

அருளும் அன்பும் நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோர் உரவோ ராயின்
உரவோர் உரவோ ராக
மடவ மாக மடந்தை நாமே.[7]

[நீக்கி-துறந்து; துணை-துணைவி; உரவோர்-அறிவுடையோர்; உரம-அறிவு; ஆக-ஆகுக; மடவர்-அறிவிலேம்.]

தன்னைப் பிரிந்து செல்லுதல் அறிவுடைய தலைவர்க்கு அழகன்று என்பதாகத் தலைவி கூறுகின்றாள். பெண்ணென்னும் பொதுமை பற்றித் தன்பால் அருளேனும் துணைவி என்னும் சிறப்பு பற்றி அன்பேனும் உளராயின் நீங்காரென்பது குறிப்பு.

காலே பரிதப் பினவே; கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே;
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றஇவ் வுலகத்துப் பிறரே.[8]

[கால்-கால்கள்; பரி-நடை; தப்பின-ஓய்ந்தன; வாள்-ஒளி]

உடன் போக்கில் தான் தேடிச் சென்ற தலைவன்-தலைவி இவர்களைத் தவிர எண்ணற்றவர்களைச் சந்தித்தாகக் கூறுகின்றாள் செவிலித்தாய்.

உடலினேன் அல்லேன் பொய்யா துரைமோ
யாரவள் மகிழ்ந! தானே தேரொடு
தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின்
வளமனை வருதலும் வெளவி யோளே!

[உடலுதல்-மாறுபடுதல்; உரைமோ-கூறுவாய்; உள்ளி-நினைந்து; வெளவியோள்-தடுத்தவள்]

தலைவி மகப்பயந்த பின்னர்த் தலைவன் மகவின்பால் பேரன்புடையவனாகத்தான் இருந்தான். ஏதோ ஒரு காரணத்தின் பொருட்டு ஒரு நாள் சிறிது பிரிந்து மீண்டான். தலைவி அவன் பரத்தமை மேற்கொண்டனன் என்று கருதி அவனோடு புலந்து கூறுகின்றாள்.

---

7. ஷை-20
8. ஷை-44

அம்ம வாழி தோழி நன்று
எய்யா மையின் ஏதில பற்றி
அன்பிலன் மன்ற பெரிதே
மென்புலக் கொண்கன் வாரா தோனே.[9]

[எய்யாமை-அறியாமை; ஏதில-வீண் செயல்கள்; பற்றி-மேற் கொண்டு; மென்புலம்-உறுதியற்ற நிலம்; நெய்தல் நிலம்]

களவுத் தலைவியின் வாழ்க்கையில் இற்செறிப்பும் அலரும் நிகழ்கின்றன. தலைவி விரைவில் வரைந்து கொள்ளுமாறு குறிப்பாகப் புலப்படுத்தியிருப்பவும் வரையாது காலங்கடத்துகின்றான். களவின்பத்தையே விரும்புபவன்போலும் இவன். இத்தலைவன் ஒருநாள் சிறைப்புறத்தே வந்துழி தலைவி அவனைக் காணாதாள் போன்று அவன் கேட்பத் தோழிக்குக் கூறுவதாக அமைந்தது இப்பாடல்.

பொய்யா மரபின் ஊர்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னம் தூக்கி
முருகென மொழியும் ஆயிற்
கெழுதகை கொல்லிவள் அணங்கி யோற்கே.[11]

[மரபு-முறை; மெய்ப்படுத்து-ஆராய்ந்து உண்மையினை வெளிப்படுத்தி; கன்னம்-தாயத்து போன்ற ஒருபொருள்; அணங்கிய-வருத்திய.]

தலைவன் சிறைப்புறத்தானாக உள்ளான். தோழி வெறியெடுப்பதை அவன் கேட்பத் தலைவனுக்கு உணர்த்தி வரைவு கடாவுகின்றாள். இதன்கண், செவிலி வெறியாடலுறுகின்றாள், ஆனால் தலைவியின் துயரம் மிகும், பெருநாணினள் ஆதலின் இறந்துபடுதலும் கூடும், ஆதலான் விரைந்து அவளை வரைந்து கொள்ளவேண்டும் என்பதே இப்பாடல் உணர்த்தும் பொருளாகும்.

அறஞ்சா லியரோ அறஞ்சா லியரோ
வறன்உண் டாயினும் அறஞ்சா லியரோ
வாள்வனப் புற்ற அருவிக்
கோள்வல் என்னையை மறைத்த குன்றே.[12]

9. ஐங்-66
10. ஷை-119
11. ஷை-245
12. ஷை-312

[அறஞ்சாலியர்-தனக்குரிய அறத்தானே என்றும் நிறைக: வறன்-வற்கடம், பஞ்சம்; வாள்-ஒளியுடைமை; கோள்-கொள்கை; என்னை-எம்பெருமான்]

தலைவியை ஓம்படை செய்து தலைவனுடன் உடன் போக்கிய பின்னர், தலைவியின் தமையன்மார் செய்தியறிந்து பின் தொடர்ந்து போய்க் காணப்பெறாமல் வறிதே மீண்டனர். பின்னொருநாள் தலைவன் இல்லத்திற்குச் சென்ற தோழி அவளை நோக்கி உற்றது வினாவ, தலைவி தலைமகன் மறைதற்குத் துணை நின்ற மலையை வாழ்த்தியதாக அமைந்தது இப்பாடல்.

மாத ருண்கண் மகன்விளை யாடக்
காதலித் தழீஇ யினிதிருந் தனனே
தாதார் பிரசம் ஊதும்
போதார் புறவின் நாடுகிழ வோனே.[13]

[உண்கண்-மை ஊட்டப்பெற்ற கண்; தழீஇ-தழுவிக் கொண்டு; பிரசம்-தேன்; போது-மலர்; புறவு-முல்லை நிலம்]

கற்புக் காலத்தில் தலைவன் மனைக்குச் சென்று மீண்ட செவிலி தலைவியும் தலைவனும் உயிரும் உடம்பும்போல் அன்பால் கலப்புற்று இன்புற்றமர்ந்து வாழ்கின்ற நல்வாழ்க்கையின் மாண்பினை நற்றாய்க்குக் கூறி மகிழும் செய்தியை இப்பாடல் தெரிவிக்கின்றது.

மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கின் அம்பகட் டிளமுலைப்
பெருந்தோள் நுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே.[14]

[வைப்பு-போகம்; சுணங்கு - தேமல்; பகடு - பெருமை; நுணுகிய-நுண்ணிதாகிய; நுசுப்பு-இடை; கல்கெழு-கற்கள் பொருந்திய; நல்குறு மகள்-பெற்றமகள்.]

இவளைப் பிரியின் காமநோய்க்கு மருந்தில்லை யென்றும், அம் மருந்தும் தான் இன்பம் பெறும்பொருட்டுத் தேடிச் செல்ல எண்ணிய செல்வமும் இவளே யாதலின் இவளைப் பிரிந்து செல்லுதல் இயலாது என்றும் தலைவன் சொல்லியதாக அமைந்தது இப்பாடல்.

13. ஐங்-406
14. குறுந் - 71

உழுந்துடைக் கழுந்திற் கரும்புடைப் பணைத்தோள்
நெடும்பல் கூந்தல் குறுந்தொடி மகளிர்
நலனுண்டு துறத்தி யாயின்
மிகநன் றம்ம மகிழ்நநின் சூளே[15]

[உழுந்து-உழுத்தங் காய்; கழுந்து-தடி; கரும்புஉடை-கருப்பெழுதிய; பணை-பருத்த; தொடி-வளையல்; மகளிர்-பரத்தையர்]

பரத்தையரிடமிருந்து திரும்பிய தலைவன் "அங்கு அவர் யாரையும் அறியேன்" என்று சூள் செய்தான். "நீ இங்ஙனமே பரத்தையர்மாட்டும் சூள்செய்து அவர் நலம் நுகர்ந்து இப் பொழுது பிரிந்தாய். அவ்வியல்பே ஈண்டும் நின்பால் உள்ள தாதலின் நின் சூள் ஏற்கத்தகுவதன்று" என்று தோழி கூறி வாயில் மறுப்பதாக அமைந்தது இப்பாடல்.

சங்க இலக்கியத்தில் உரிப் பொருளையே நுவலும் பாடல்கள் நல்கும் இன்பம் சிறப்புடையது. இயற்கை யழகையே கொண்டு செயற்கைப் புனைவு யாதுமின்றித் திகழும் நங்கையை யொத்தன இத்தகைய பாடல்கள். படித்துத் துய்ப்போருக்கு இவை நல்கும் இன்பம் தனிச் சிறப்புடையது; தாமரைக் கண்ணான் உலகில் பெறும் இன்பத்தை யொத்தது.

**அகப்பொருளின் பெருமை :** கைக்கிளை ஐந்திணை, பெருந் திணை என்ற ஏழு திணைகளையும்பற்றிப் புலவர்கள் பாடி வந்த வழக்கம் தொல்காப்பியனார் காலத்துக்கு முற்பட்டே பெருகி யிருத்தல் வேண்டும். இதனை,

முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி
புலந்தொகுத் தோன்

என்ற தொல்காப்பியப் பாயிரப் பகுதியால் வலியுறும். அங்ஙனமே தொல்காப்பியருக்குப் பிற்பட்ட காலத்திலும் அவரிட்ட ஆணை வழியே நூல்கள் யாக்கப்பெற்றுப் பெருகி இருந்தன. எட்டுத் தொகை நூல்களுள் புறநானூறும் பதிற்றுப் பத்தும் ஒழிய நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பரிபாடல், கலித் தொகை, அகநானூறு ஆகிய ஏனைய ஆறும், பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் திருக்குறள் (காமத்துப் பால்), கார் நாற்பது,

15. ஷை-384

ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது திணைமொழி ஐம்பது, கைந்நிலை ஆகிய ஏழும், பத்துப் பாட்டில் முல்லைப் பாட்டு, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப் பாலை, நெடுநல் வாடை ஆகிய நான்கும் அகத்திணைபற்றி அமைந்த நூல்களேயாகும். இவற்றுள் நற்றிணை முதலிய தொகை நூல்கள் பல புலவர்களால் பாடப்பெற்றவை. அஃதாவது, ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு திணை, துறை விகற்பங்கள்பற்றிப் புலவர்கள் பாடிப் போந்த செய்யுட்கள் பிற்காலத்தொருவரால் தொகுக்கப் பெற்று முறைப்படி கோக்கப் பெற்றன. இங்ஙனம் அகப்பொருளைப் பொருளாகக் கொண்டு தம்மை ஆதரித்த அரசர் செல்வர் முதலியவர்களைப் பாட்டுடைத் தலைவராக்கிப் பாடும் வழக்கு முன்னாளில் தமிழ் மக்களால் பெரிதும் மதிக்கப் பெற்று வந்தது.[16] ஒவ்வொரு திணையின் முதல் கரு, உரிப் பொருள்களின் இயற்கைச் சிறப்புகளை எடுத்து விளக்கி அழகாகப் பாடி வந்த அருமைபற்றிப் பண்டைப் புலவர்களில் சிலர் பாலை பாடிய பெருங் கடுங்கோ, பாலைக் கௌதமனார் மருதனிள நாகனார், நெய்தற் கார்க்கியன், வெறிபாடிய காமக் கண்ணியார், மடல் பாடிய மாதங்கீரன் என்று அகத்திணை துறைப் பெயர்களால் சிறப்பித்து வழங்கப்பெறுவாராயினர். மேலும், பண்டைக் காலத்தில் பொருளிலக்கணத்தை அறிந்திராமை பெரியதோர் இழுக்காகவும் கருதப்பெற்று வந்தது. கடைச்சங்க நாளில் ஒரு காலத்தே பொருளிலக்கண மறிந்த புலவர் கிடைக்காமையால் பாண்டியன் புடைபடக் கவன்றபோது, "என்னை? எழுத்தும் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே. பொருளதிகாரம் பெறேமே எனின், இவை பெற்றும் பெற்றிலேம்" என அவ்வரசன் கூறினதாகவுள்ள வரலாற்றால் இதனை அறியலாம்.[17] அன்றியும், இறையனார் கண்ட பொருளிலக்கணத்திற்குப் புலவரைக் கொண்டு பொருளறிந்த வரலாறு பொருளாராய்ச்சியில் முன்னோர்க் கிருந்த ஊக்க மிகுதியைப் புலப்படுத்தும். பொருளதிகாரத்தில் கூறப் பெறும் செய்தி தமிழ் மொழிக்கே சிறப்புடையது. இதன் பொருட்டே ஆரிய அரசன் பிரகத்தனும் தமிழறிய விரும்பினான்.

16. இம்முறை பிற்காலத்தில் (அண்மைக் காலத்தில்) சிற்றிலக்கியங்களாக வடிவெடுக்கும் பொழுது சில நூல்கள் நாகரிகமற்ற முறையில் மிகவும் கீழ்த்தரமாகப் பாடப் பெற்றுள்ளன.
17. இறை-களா. 1 இன் உரை.

கபிலர் என்னும் நல்லிசைப் புலவர் குறிஞ்சிப் பாட்டு என்ற ஓர் அழகான பாட்டினை இயற்றி அவனுக்குத் தமிழின் நீர்மையினை உணர்த்தினார். இவனே பின்னர், தமிழில் கவிபாடும் அளவுக்குத் தமிழ்ப் புலமை பெற்றுத் திகழ்ந்தான்.[18] அறம் உரைக்க வந்த திருவள்ளுவனாரும் காமத்துப் பாலைக் களவு, கற்பு எனப் பகுத்து அவற்றின் விகற்பங்களைத் தமிழ் இலக்கணத்துடன் பொருந்தக் கூறிச் செல்வதிலிருந்தும் அகப்பொருளின் பெருமையை நன்கு உணரலாம்.

உயர்ந்த அன்பு நிலையை வெளிப்படுத்துவதற்கு அகத்துறைகளைவிட உயர்ந்த இடம் பிறிதினின்று. எனவே, முழுமுதற் கடவுளிடத்துப் பேரன்பு செலுத்தி ஆடிப்பாடி அகம் குழைந்து நெக்குருகின அடியார்களும் கூடி அக்கடவுளையும் தம்மையும் தலைவன் தலைவர்களாகக் கொண்டு இவ்வகத் துறைகள் வாயிலாகவே பக்தி என்னும் பெருவெள்ளத்தில் இழிந்து மூழ்கிக் களிப்பாராயினர். கடவுளிடத்துக் செலுத்தும் காமப் பகுதியைக் புறத்திணைக்குரியதாக ஆசிரியர்கள் இலக்கணம் வகுத்திருப்பினும், அதன் பொருட் கூறுகள் யாவும் அகத்திணைத் தொடர்புடையனவாகவே அமைந்துள்ளன. இந்த அருமைப் பெருமைகளைத் தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் முதலிய பக்திப் பனுவல்களால் அறியலாம். எனவே, சிற்றின்பத்திற்கு மட்டுமின்றிப் பேரின்பக் கடலில் இறங்குவதற்கும் இந்த அகத்துறைகள் உரிமைபூண்டுத் திகழ்வனவாகும்.

---

18. குறுந். 184. ஆரிய அரசன் யாழ் பிரமதத்தன் என்பானால் இயற்றப்பெற்றது. பிரமதத்தனும் பிரகதத்தனும் ஒருவனே என்று ஊகித்தற்கு இடம் உண்டு.

## அகத்திணை நாடகக் காட்சிகள்

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்.[1]

இந்த தொல்காப்பிய நூற்பாவில் 'நாடக வழக்கு' என்பதற்கு இளம்பூரணர்கூறும் உரைசிந்தித்தற்குரியது அவர்கூறுவது:"நாடக வழக்காவது,சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வருவனவாகத் தொகுத்துக் கூறுதல். அஃதாவது செல்வத்தானும், குலத்தானும், ஒழுக்கத்தானும், அன்பினானும் ஒத்தார் இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப் போருமின்றி அடுப்போருமின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தார் எனவும், பின்னும் அவர் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையான் வரைந்தெய்தினார் எனவும், பிறவும் இந்நிகரனவாகிச் சுவைபட வருவன வெல்லாம் ஒருங்கு வந்தனவாகக் கூறுதல்"[2] என்பது. சாதாரணமாகக் கூத்து அல்லது நாடகம் நடைபெற வேண்டுமாயின் அரங்கு ஒன்று அமைக்கப் பெறுதலும், அதன்கண் பன்னிறத் திரைகளும் வீழ்த்தப்பெறுதலும், அந்த ஆடரங்கில் தோன்றும் நாடகமாந்தர் பல்வேறு வேடந் தாங்கித் தோன்று தலும், அவர்கள் ஒருவருக் கொருவர் கூற்றும் மாற்றமுமாய் (வினாவும் விடையுமாய்) உரையாடல் நிகழ்த்தி அந் நாடகத்தைக் காண்போர் உள்ளத்தில் நகை முதலிய எண்வகைச் சுவைகளையும் தோற்றுவித்து அவர்களை மகிழ்விக்கின்றனர் என்பதையும் நாம் நன்கு அறிவோம். இங்ஙனம் நாடகப் புலவர்கள் பருப் பொருள் களால் அமைத்துக் கொள்ளும் உத்தி முறைகளையே இயற்றமிழ்ப் புலவர்கள் தமது செய்யுளில் மேற்கொண்டுள்ளனர். இவர்கள்

1. அகத்திணை - நூற். 56 (இளம்)
2. அகத்திணை - 56 (உரை)

தமது செவ்விய மதுரஞ் சேர்ந்த தீஞ்சொற்களால் முதற் பொருள்' கருப்பொருள் என்ற திணைக்கு உரிய பொருள்களால் இடமும் காலமுமாகிய களத்தினைப் படைத்துக் கொள்ளுகின்றனர். இத் தகைய கற்பனை அரங்கின்கண் தம் கற்பனையிற் பிறந்த தலைவன் தலைவி தோழி செவிலி முதலிய உறுப்பினர்களைக் கொண்டுவந்து தம் பாடல்களை ஓதுவோர் அகக்கண் முன்னர்க் கண்கூடாகக் கொண்டுவந்து நிறுத்துகின்றனர். இந்தக் கற்பனை நாடகத்தில் புலவர் சில சமயம் தன் கூற்றாலும் பெரும்பாலும் நாடக மாந்தர்களின் கூற்றாலும் உரையாடல்களை நிகழ்வித்து அழகிய மானதக் காட்சி நாடகங்களை நிகழச் செய்கின்றனர். இத்தகையநாடகங்களை ஓதுவோரின்அகக்கண்முன் காட்டலையே தொல்காப்பியர் 'நாடக வழக்கம்' என்று குறிப்பிட்டனர் என்று கோடலாலும் இழுக்கொன்று மில்லை.

நாடக அரங்கில் நாடக மாந்தர்கள் கூற்றும் மாற்றமுமாக உரையாடல் நிக்ழ்த்துவதற்கு ஏனைய பாடல்களிலும் கலிப்பாவும் பரிபாடலுமே சாலத் தகுதியுடையன என்பதற்குக் காரணமும் உண்டு. இந்த இரண்டு பாடல்களிலும் தரவு தாழிசை, கொச்சகம், அராகம், சுரிதகம், எருத்து, சொற்சீரடி முருகியலடி போன்ற செய்யுள் உறுப்புகள் எல்லாம் அமைந்திருப்பதால் இயற்றமிழ்ப் புலவர்கள் தாம் படைக்கும் கற்பனை நாடக மாந்தர்களின் உரையாடல்களை இயல்பாகவும் எளிதாகவும் அமைத்தற்கு வாய்ப்பாக உதவுகின்றன. இனி, இத்தகைய கற்பனை நாடகக் காட்சிகள் அகப்பொருள் இயற்றமிழில் அமைந்திருக்கும் அருமைப் பாட்டினைப் புலவர்களின் சொற் களாலும் நம் சொற்களாலும் ஒன்றிரண்டு காட்டுவோம்

## காட்சி—1

**காலம் :** வைகறை

**இடம்:** மருத நிலத்தில் அமைந்த தலைவனின் மாளிகை.

**உறுப்பினர் :** தலைவன், தலைவி, தோழி.

**நிகழ்ச்சி :** பரத்தையர் இல்லம் புகுந்த தலைவன் சின்னாள் கழித்துப் பரத்தையர் சேரியினின்றும் திரும்பித் தன் இல்லம் புகுகின்றான். தலைவியை நெருங்கி (அச்சங் கலந்த) அன்புடன் அவள் கூந்தலைப் பற்றுகின்றான்.

**தலைவி :**

(சினந்து, ஒரூஉநீ எம்கூந்தல் கொள்ளல்யாம் நின்னை
வெரூஉது காணும் கடை!!

**தலைவன் :**

தெரியிழாய்,
செய்தவ றில்வழி யாங்குச் சினவுவாய்
மெய்பிரிந் தன்னவர் மாட்டு.

**தலைவி :**

ஏடா,
நினக்குத் தவறுண்டோ? நீவீடு பெற்றாய்
இமைப்பின் இதழ்மறைபு ஆங்கே கெடுதி!
நினைப்பா லறியினும் நின்னைப்
புலப்பா ருடையவர் தவறு!

**தலைவன் :**

அணைத் தோளாய்,
தீயாரைப் போலத் திறனின்று உடற்றுதி
காயுந் தவறிலேன் யான்!

**தோழி :**

மான் நோக்கி நீயடி நீத்தவன் ஆனாது
நாணில னாயின் நலிதந் தவன்வயின்
ஊடுதல் என்னோ? இனி.

**தலைவி :**

(தனக்குள்) இனி,
யாதுமீக் கூற்றம் யாமிலம் என்னும்
தகையது காண்டைப்பாய் நெஞ்சே! பனியானப்
பாடில்கண் பாயல் கொள!
(காட்சி நிறைவுற்றுத் திரை வீழ்த்தப்பெறுகின்றது,)[3]

[ஒரூஉ விலகிப்போ; காணும் கடை-காணும் பொழுது; யாங்கு-எவ்வாறு; நிலைப்பால் அறியினும்-நின்னுடைய நிலைமையின் கூறுபாடுகளை அறிந்து வைத்தும்; நீத்தவன்-பிரிந்தவன்; மீக் கூற்றும்-மேலே கூறும் சொல்; காண்டைப்பாய்-காண்பாய் (வினைத்திரிசொல்)

3. மருதக்கலி-22. (இது தரவும் போக்குமின்றி ஐஞ்சீர் அடுக்கி வந்த உறழ் கலி.

## காட்சி—2

**காலம் :** மாலை.

**இடம் :** முல்லை நிலத்தில் ஓர் சிற்றாற்று மணல் இடை.

**உறுப்பினர் :** ஆயர் மகன், ஆயர் மகள்.

**நிகழ்ச்சி :** யாதோ ஒரு வினை காரணமாகச் சென்று திரும்பும் ஆயர் மகன் ஒரு குளிர்ந்த பொழிலிடத்து ஆற்றிடையிலுள்ள ஓர் அகன்ற பாறையில் ஆயத்துடன் விளையாடித் தனியே வரும் ஆய்மகளைச் சந்திக்கின்றான். இருவரிடையே சொல்லாட்டம் நிகழ்கின்றது.

**ஆயர்மகன் :**

நலமிக நந்திய நயவரு தடமென்றோள்
அலமரல் அமருண்கண் அந்நல்லாய்! நீயுறீஇ
உலமரல் உயவுநோய்க்கு உய்யுமாறு உரைத்துச்செல்.

**ஆயர்மகள் :**

போரேமுற் றார்போல முன்னின்று விளக்குவாய்
யார்? எல்லா! நின்னை யறிந்ததூஉ மில்வழி.

**ஆ.மகன் :**

தளிரியால் என்னறிதல் வேண்டின் பகையஞ்சாப்
புல்லினத் தாயர் மகனேன் மற்றுயான்.

**ஆ.மகள் :** ஒக்குமன்,

புல்லினத் தாயனைநீ யாயிற் குடஞ்சுட்டு
நல்லினத்து ஆயர் எமர்.

**ஆ.மகன் :**

எல்லா,
நின்னொடு சொல்லின் ஏதமோ இல்லைமன்.

**ஆ.மகள் :** ஏதமன்று, எல்லை வருவான் விடு.

**ஆ.மகன் :**

விடேன்,
உடம்பட்டு நீப்பார் கிளவி மடம்பட்டு
மெல்லிய வாதல் அறியினும் மெல்லியால்!
நின்மொழிகொண் டியானோ விடுவேன் மற்(று)
என்மொழி கொண்(டு)
என்னெஞ்சம் ஏவல் செயின்,

ஆ.மகள் :

நெஞ்சேவல் செய்யா தெனநின்றாய்க்(கு) எஞ்சிய
காதல்கொள் காமம் கலக்குற ஏதிலார்
பொய்ம்மொழி தேறுவது என்.

ஆ-மகன் :

தெளிந்தேன் தெரியிழாய்! யான்.

ஆ.மகள் :

பல்கால்யாம் கான்யாற்(று) அவிர்மணல் தண்பொழில்
அல்கல் அகலறை ஆயமொடு ஆடி
முல்லை குருந்தொடும் உச்சிவேய்ந்(து) எல்லை
இரவுற்ற(து); இன்னம் கழிப்பின்
அரவுற்றுருமின் அதிரும் குரல்போல் பொருமுரண்
நல்லேறு நாகுடன் நின்றன
பல்லான் இனநிரை நாமுடன் செலற்கே[4]

[நந்துதல்-பெருகுதல்; அமர்தல்-விரும்புதல்; உறீஇ-உற்று; ஏமம்-பித்து, அது 'ஏம்' எனக் குறைந்து நின்றது; வருவான்: வினையெச்சம்: விடு-இப்பொழுது என்னைப் போக விடு; எஞ்சிய காதல் கொள் காமம்-எஞ்சிய காமம், காதல் கொள் காமம் எனத் தனி தனி இயையும். எஞ்சிய காமம்-மிக்குச் செல்லும் காமம்; காதல் கொள் காமம்-அன்பொடு கலந்த காமம்; எல்லை-பகல்; அரவுற்று-அரவு உற - பாம்புவரக் கண்டு]

கலிப்பாவிலும் உறழ்கலி என்னும் கலிப்பா ஒருவரோடொருவர் சொல்லாடல் நிகழ்த்துவதற்கென்றே இயன்றதொரு பாடலாகவே அமைந்துள்ளது. மேற் காட்டிய இரண்டு காட்சிகளும் உறழ்கலியாலே அமைந்திருத்தல் நோக்கற்பாலது.

---

4. முல்லைக் கலி-13. (இது தரவும், இரண்டு அடியால் இரண்டு கொச்சகமும், தனிச்சொல்லும், குறுவெண் பாட்டும், தனிச் சொல்லும், ஓரடியால் இரண்டும், தனிச்சொல்லும், நெடுவெண்பாட்டும், குறுவெண் பாட்டும், சிந்தடி ஓரடியான் ஒன்றும், சொற்சீரடியும், ஐஞ்சீரும் வந்து போக்கு இலக்கணமில்லாத ஆசிரியச் சுரிதகமும் பெற்ற உறழ் கலி.)

## காட்சி—3

**காலம் :** மாலை.

**இடம் :** ஏறு தழுவும் களம்.

**உறுப்பினர் :** ஆயர்மகள், அவளுடைய தோழி.

**நிகழ்ச்சி :** முல்லை நிலத்தில் ஆயர் மகள் தன் களவு ஒழுக்கத்தை அறத்தொடு நிற்றல்மூலம் தோழிக்குப் புலப்படுத்துகின்றாள். தோழி அவளுக்குத் தமர் வரைவுடன்பட்டமையைக் கூறுகின்றாள்.[5]

**ஆயர்மகள் :** ஏடி, நம் சுற்றத்தார் ஏறு தழுவலே சிறந்ததென்று தொழுவிலே ஏறுகளைப் புகவிட்டனர். ஏறுதழுவின ஒருவன் சென்னியிற் கிடந்த முல்லைப்பூக் கண்ணியை அவ்வேறு, கோட்டிற்கொண்டு துள்ளிக் குதித்தது. இந்நிலையில் கண்ணி என் தலைமயிரிலுள்ளே வந்து வீழ்ந்தது. இழந்த பொருளை மீட்டும் பெற்றாரைப்போல் யான் அக்கண்ணியை எடுத்து என் கூந்தலில் முடித்துக் கொண்டேன். இதனை என் அன்னை அறிந்திருப்பாளோ?

**தோழி :** அக்கண்ணி அவனுடையது. அவன் வரைந்து கோடல் தாழாதவனன்றே! அன்னை கேட்டால் அதற்கு யாம் செயத்தக்க தீர்வு யாது? ஒன்றும் வேண்டா. வாளாகிட.

**ஆ.ம :** தோழி, நீ பூ முடித்தால் மயிர் நாறும் என்பதை யான் அறியாதவள். அயலான் ஒருவன் கண்ணியைத்தான் அவன் மீது கொண்ட மயலால் சூட்டிக் கொண்டாள் எனத் தாய் அறிந்தால் என்னை வெகுளாமல் யாதுதான் செய்வாள்?

**தோழி :** இனி, எல்லாத் தவறுகளும் நீங்கிப் போயின.

**ஆ.ம :** (வியந்து) அத்தவறுகள் எங்ஙனம் நீங்கின?

**தோழி :** அவனும் ஆயர் மகன். நீயும் ஆயர் மகள். அவன் உன்னை விரும்பினான். நீயும் அவனை விரும்பினாய். இதனால் அன்னை நின்னை நோதக்கது யாதும் இல்லை.

**ஆ.ம :** அன்னையின் கருத்து இதுவென நின் நெஞ்சு அறியுமாயின் அவள் என்னை நோகாள் என்பது உறுதியாமோ?

---

5. ஷை-7.

**தோழி :** இன்னும் உண்மை விளங்கவில்லை போலும்! ஆயர் மகளையும் நீ மையல் கொள்ளுகின்றாய். தாயையும் கண்டு அஞ்சுகின்றாய். அப்படியாயின், நீ கொண்ட காம நோய்க்கு மருந்தில்லை காண்!

**ஆ.ம :** ஏடி, யானுற்ற வருத்தத்திற்கு மருந்தில்லையேல், வருந்துவதைத் தவிர என் செய்வேன்?

**தோழி :** வருந்தற்க. தலைவன் கண்ணிச் செய்தியைப் பிறர் கூற அன்னை அறிந்து, நின் தந்தையோடும் தமையன் மாரோடும் கலந்தாய்ந்து திருமால் இவளுக்கு ஒரு மணாளனைத் தந்தான் என மகிழ்ந்து, களவொழுக்கம் பிறர் அறியாமற் காக்கும் பொதுதற்கு உன்னைக் கொடுக்கத் துணிந்தாள்.

## காட்சி 4

**காலம் :** மாலை.

**இடம் :** முல்லை நிலத்தில் பலரும் திரிதரும் மன்றம்.

**உறுப்பினர் :** ஆயர் மகன், ஆயர் மகள்.

**நிகழ்ச்சி :** வெண்ணெய் விற்கச் செல்லுகின்றாள் ஆயர் மகள் ஒருத்தி. வேறோர் அலுவலாகச் சென்ற ஆயர் மகன் ஒருவன் அவளைப் பலரும் திரிதரும் மன்றத்தில் சந்திக்கின்றான். அவளை மெய் தீண்டித் தன் ஆற்றாமையை அறிவிக்கின்றான். அவள் அதற்குத் தக்க மாற்றம் உரைக்கின்றாள்.[6]

**தலைவி :** ஏடா, குறும்பிடத்தே யுள்ள ஆட்டிடையரின் குடிதோறுமுள்ள மகளிரை விரும்புகின்றனை. தேள் கடுப்புத் தீர அப்பொழுதே இட்டுத் தீர்க்கும் மருந்துபோல நினது காம வேட்கை தோன்றியபொழுதே தீரக் கூடிய மருந்தினை எதிர் பார்க்கின்றனையா? இஃது இயலுவ தொன்றா? அல்லவே. நின்னோடு ஒரு நகை செய்தலைக் குறித்து நீ மெய்யைத் தீண்டுதற்கு இடம் தந்தேன். நீயோ என்னைப் புணர்ச்சிக்கும் எளியளெனக் கொண்டாய். மோரை வேண்டினார்க்குச் சிறிது மோரை வார்த்து எளியளானால், வெண்ணெய் வேண்டினும் அது கொடுத்து எளியளாவள் எனக் கருதுவதற்குத் தகுதியோ?

6. கலி-10.

**தலைவன் :** ஒண்ணுதால், நீயோ கூட்டத்தை மறுக்கின்றாய். அது வேண்டா. யானும் இதோ நின்னை விட்டு நீங்குவேன். ஒன்று கூறுவேன். ஆய்மகள் மத்தைச் சுற்றிய கயிறு போல நின் நலத்தையே சூழ்ந்து சுழன்று திரிகின்றது என் நெஞ்சம், நீ என்னிடத்துக் கூறிய சொற்கள் அச்சத்தை விளைவிக்கின்றன. அதனால் என் நெஞ்சு உன்னிடத்தினின்றும் மீள்கின்றது; பின்னர் நிலை பெறாது நிற்கின்றது. மீட்டும் புறப்பட்டுத் தடுமாறுகின்றது. தலையீற்றுப் பசு பொழுது விடிந்த பின்னரும் மேய்புலம் செல்லாது தொழுவிற் கட்டிய தன் கன்றினையே நினைந்து நினைந்து சூழ்வதைக் கண்டாயன்றோ? அதுபோலவே யானும் உள்ளேன். இஃது என் நிலையாகும். என்னிடத்து எந்நாளும் வருத்தம் மிக்கது. என் உயிர் பாலில் மருந்திட்டு வெண்ணெய் கடைந்தெடுத்த பால் நுகர்வார்க்குச் சிறிதும் பயன் தராதவாறு போலக் கைசென்று தோய்ந்து விடுகின்ற அளவாய் விட்டது. செய்வதின்னதென்று அறியாது தடுமாறுகின்றேன்.

**லைவி :** ஒகோ, நீ அத்தன்மை யுடையாயோ? ஆயின் செய்தியொன்று கூறுவேன். இது பலரும் திரிதரும் மன்றம். எதிர்ப்பட்ட அப்பொழுதே மன அமைதி குலைந்து, மன அமைதி மிக்குடையார் மகளிரைப் 'புனரேனேல், உயிர் வாழேன்' என்கின்றாய். இனி, நீ இவ்விடத்தில் நிற்றலும் தீது. சுற்றத்தார் காண்பர். இன்றுபோல் நாளைக்கும் புலத்திற்குக் கன்றுகளை ஓட்டிச் செல்வேன். ஆண்டு வந்து இவையெல்லாம் சொல்க. ஈண்டு இனி நில்லாதே, செல்க. இடம் அது.

[இவ்வாறு குறியிடம் அமைக்கின்றாள் ஆய்மகள்]

௪௭

## காட்சி—5

**காலம் :** மாலை.

**இடம் :** மலையருகில் ஒரு பாறை.

**உறுப்பினர் :** தலைவி, தோழி, பகற்குறியை நாடிவரும் தலைவன் (சிறைப் புறமாக ஒதுங்கி நிற்றல்).

**நிகழ்ச்சி :** தலைவியும் தோழியும் பாறையாகிய உரலில் மூங்கில் நெல்லையிட்டு யானைக் கோட்டாலாகிய உலக்கையால் குற்றிக் கொண்டே வள்ளைப் பாட்டொன்றைப் பாடுகின்றனர். தலைவி தலைவனை இயற்பழித்தலும் தோழி

இயற்பட மொழிதலும் நிகழ்கின்றன; இவையே பாடற் பொருள்.

பாடுகம் வாவாழி தோழி வயக்களிற்றுக்
கோடுலக்கை யாகநற் சேம்பின் இலைசுளகா
ஆடுகழை நெல்லை அரையுர லுட் பெய்திடுவோம்
பாடுகம் வாவாழி தோழிநற் றோழிபாடுற்று.[7]

[வயக்களிறு-வலியுடைய யானை; கோடு-கொம்பு; சேம்பு-ஒருவகைச் செடி; ஆடுகழை-மூங்கில்; அரை உரல்-பாறையாகிய உரல்.]

என்று பாடல் தொடங்குகின்றது. உரையாடலாகப் பாடல் அமைகின்றது.

**தலைவி :** என்ன வியப்பு! சூள் பொய்த்த நம் தலைவனின் வெற்பிலும் அருவி நிறைய நீர் உள்ளதே!

**தோழி :** சூள் பொய்த்தவனோ? அவன் சூளில் பொய் தோன்றுமாயின் **அது திங்களில் தீத்தோன்றியது போலாம்.**

**தலைவி :** என்னிடம் கூறியபடி வாராதவன் மலையில் இள மழை ஆடுகின்றதே, என்ன வியப்பு!

**தோழி :** வாராதிருப்பனோ? அவன் அருளிடத்தே கொடியது தோன்றும் என்பது **குளத்து நீரில் உள்ள குவளை வெந்தது போலாம்.**

**தலைவி :** என் மேனியை அணையாது துறந்தவனது மாலை நீலமணி போலத் தோன்றுகின்றதே, என்ன வியப்பு!

**தோழி :** தலைவன் நம்மைத் துறப்பவன் அல்லன். அவன் உறவில் கொடியவை தோன்றல் என்பது **ஞாயிற்றுள் இருள் தோன்றியது போலாம்.**

இவர்கள் இங்ஙனம் பாடிக் கொண்டே நெற்குற்றுதலைச் சிறைப்புறமாக இருந்த தலைவன் உற்றுக் கேட்கின்றான்; "நாம் இவளை மணக்கத் தாழ்த்தலால் வருந்தியன்றோ தலைவி நம்மை இயற்பழிக்கின்றாள்? ஆதலின் உடனே விரைந்து வரைந்து கொள்ளல் நலம்" என முடிவு செய்கின்றான். மணம் பேசவரும் அவனைத் தலைவியின் தந்தையேற்று **வேங்கை மரத்தடியில்** அமர்ந்து மணம் பேசி முடிக்கின்றான்.

7. கலி-41. (குறிஞ்சி-5)

## காட்சி—6

**காலம் :** மாலை (மயக்கம்).

**இடம் :** தலைவி, தலைவன்.

**நிகழ்ச்சி :** பருவம் எய்தப்பெறாத இளமகள் ஒருத்தி ஓர் இள மரக்காவில் மலர் கொய்து கொண்டு நிற்பதை ஓர் ஆடவன் கண்ணுறுகின்றான். (தலைவன் தன்னுள்ளே) ''மலரும் மயிரும் தம்முள் மயங்கும்படி முடித்துக் கொண்டு நிறைமதி இனிய பசுங்கதிர்களைப் பரப்பிவருவது போல் முகவொளி வீசி நிற்கும் இவள் யார்கொல்? கொல்லிமலைப் பாவையோ? நல்லார் உறுப்பெல்லாம் கொண்டு வல்லானாகிய அவன் வகுத்த அழகியோ? ஆடவர்மீதுள்ள வெறுப்பினால் பெண் வடிவு கொண்டு வந்த கூற்றமோ? இல்லை. இவள் இவ்வூரிலுள்ள செல்வமகளாகவே இருத்தல் வேண்டும். இவளைக் காத்துப் போந்தவர்கள் இவளைத் தனியே விடுதல் கொடிது''. என்று கருதுகின்றான்.

பின்னர் அவளை நோக்கி ''நல்லாய், யான் கூறுவதைக் கேட்பாயாக'' என்று அவளிடம் பேச்சுத் தொடர்பு கொள்ளு கின்றான்.

''கண்டவர் காதல் கொள்ளும் பண்புடைய பெண்மணியே, அன்ன நடையும், அணிமயிற் சாயலும், புறவின் மடப்பமும் ஒருங்கே பொருந்திய நின்னுடைய எழில் நின்னைக் கண்டோர் கருத்தினை மயக்க முறுத்தி ஈர்க்கும். நீ அறிவாயோ? அறியா யோ?'' என்று வினவுகின்றான்.

''வளைந்த முன்கையினையும் வெள்ளிய எயிற்றினையு முடைய அழகிய நல்லாய், நிறத்தாலும் திரட்சியாலும் முங்கிலை யொத்தும், மென்மையால் நுண்ணிய துகிலினையுடைய அணியை யொத்தும், காமக் கடலை நீந்தத் தெப்பமாதலால் வேழங் கோலால் செய்த புணையையொத்து விளங்கும் நின்னுடைய மெல்லிய தோள்கள் நின்னைக் கண்டார்க்கும் துன்பம் விளைக்கும் என்பதை நீ அறிவாயோ? அறியாயோ?'' என்று கூறுகின்றான்.

''நேரிதான மயிர்வரிகளையுடைய முன்கையையும் மடப்பத் தையும் உடைய நல்லாய், முற்றின கோங்க மரத்தின் இளமுகை யையும் அடிவரைந்து கட்புலனான குரும்பையினையும், மழை

மொக்குளையும் ஒத்துள்ள பெருத்த நின்னுடைய இளைய முலைகள் நின்னைக் கண்டார் உயிரை வாங்கும் என்னும் நிலையை நீ அறிவாயோ? அறியாயோ?'' என்று கேட்கின்றான்.

அவள் பேசாது வாளா நிற்கின்றாள்; அவ்விடத்தை விட்டு அகல முயல்கின்றாள். அவ்வமயம் அவன், ''மறுமாற்றம் மொழியாது செல்கின்றவளே, யான் கூறுவதைக் கேட்பாயாக; நீயும் குற்றமுடையை அல்லை; நின்னைப் புறத்தே புறப்படச் செய்யும் நுமரும் தவறிலர். மதம் பிடித்த யானையைப் பறையறைந்த பின் வெளிச் செல்ல விடுத்தல்போலப் பறை சாற்றியபின் உன்னை வெளியே வரவிடக் செய்யாத **'அரசனே தவறுடையான்'** என முடிக்கின்றான். காட்சியும் முற்றுப் பெறுகின்றது.[8]

இதில் ''தருக்கிச் சொல்லிச் சொல்லெதிர் பெறான்.''[9] இன்புறுவதைக் கண்டு மகிழலாம். 'கைக்கிளைக் குறிப்பாக' வரும் நாடகக் காட்சி நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றதன்றோ?

கற்றறிந்தார் ஏத்தும் கலிப் பாக்களைப் பொருளுணர்வுடன் பயில்வோர் தம் உள்ளமாகிய அரங்கில் அழகு மிக்க அன்பு பெருகிய வானுலகத்துத் தெய்வக் கூத்தர்களே திறம்பட நடிக்கின்ற ஒப்பற்ற நாடகங்களைத் தம்முள்ளே தமது அகக் கண்ணால் கண்டுகளிக்கும் பேற்றினைப் பெறுவார்கள். இங்ஙனம் பாடல்களைப் பயின்று துய்ப்பதற்கு உள்ளத் தூய்மையும் சுவைக்கும் பழக்கமும் வேண்டும். உலக இயல்பிற்குப் படம்போல் அமைத்துக் காட்டும் பாடல்கள் சுவைகளை உணர்ந்து இன்புறுவதற்காகவே பாடப்பெற்றுள்ளன. கருவிலே திருவும் கல்விபெறுங் காலத்தில் நல்ல பயிற்சியும் பெறுவோர் இத்தகைய பாடல்களை நன்கு துய்க்கலாம்.

அகப்பாடல்கள் யாவும் கூற்று வடிவிலேயே அமைந்துள்ளன. நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு, குறுந்தொகைப் பாடல்கள் அனைத்தும் நாடகக் காட்சிகளே. அனைத்தையும் நாடகக் காட்சி வடிவில் அமைக்கலாம். அகத்தில் ஒன்று காட்டுவேன்.

---

8. குறிஞ்சிக் கலி-20
9. அகத்திணை-53

## காட்சி—7

**இடம்:** மலைச்சாரல்.

**காலம்:** நள்ளிரவு.

**உறுப்பினர்:** தலைவி, தோழி, தலைவன்.

**சூழ்நிலை:** இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறமாக இருக்கின்றான். மணம் செய்து கொள்ளும் கருத்தின்றி இருப்பவன் இவன். இவனை வரைவுடம் படுத்தற்குத் தலைவியும் தோழியும் செய்த சூழ்ச்சியே நாடகத்தின் சூழ்நிலையாகும். தோழியும் தலைவியும் படப்பையினூடு சொல்லாடி நிற்றலைத் தலைவன் காண்கின்றான். தன் வரவை அவர்கள் அறியா வண்ணம் வேலியின் பக்கத்தே மறைந்து நின்று ஒற்றிக்கேட்கின்றான். ஆயினும் அம்மகளிர் அவன் சேய்மையில் வரும் பொழுதே அறிந்து கொண்டுவிட்டனர்; அறியாதவர் போலவே நடிக்கின்றனர். தலைவன் கேட்கும் அளவில் அவர்களிடம் பேச்சு நடைபெறுகின்றது. அப்பேச்சு வருமாறு:[10]

**தோழி:** (தலைவியை நோக்கி) அன்பே, இக்கூதிர்காலத்து நள்ளிரவு எத்துணை அச்சுறுத்துகின்றது. முன்னொரு நாள் களிறும் புலியும் தம்முள் போரிட்ட ஆரவாரங்கேட்டு நம் உள்ளம் கலங்கினதன்றோ? அப்போரில் களிறு தன் கூரிய கோட்டால் புலியைக் குத்திக் கொன்றிருக்கும்.

**தலைவி:** உண்மையே; நானும் அப்படித்தான் எண்ணினேன். புலியின் குரல் அவிந்து களிறுமட்டிலுமே நீண்ட நேரம் பிளிறி நின்றது. யானையின் கொம்பு புலியின் குருதியில் தோய்ந்து கறையுற்றிருக்கும் அன்றோ?

**தோழி:** கறையுற்றால் என்ன? யானைகள் அருவி நீரில் ஆடுவதில் மிகவும் விருப்புடையவை. கூர்ந்து கேட்பாயாக. தீண்டி வருத்தும் தெய்வங்கள் உறையும் அந்த நெடிய குவட்டை யுடைய மலையினின்றும் வீழ்கின்ற பேரருவியின் முழக்கம் எத்துணை ஆரவாரமாக முழங்குகின்றது! அருவியில் நீராடும் யானையின் நுதலையும் கொம்புகளையும் அருவிநீர் கழுவி விட்டிருக்கும்.

---

10. அகம்-272

**தலைவன் :** ஏடி, அம்மலையினை நோக்கவே எனக்குப் பேரச்சம் உண்டாகின்றது. இருளினுள் இருள்புடைத்தாற் போலத் தோன்றுகின்றது, விண்ணையளாவி நிற்கும் அம் மலையின் தோற்றமும் அதன் அருவி முழக்கமும் குலை நடுங்கும் அளவுக்கு அச்சத்தை விளைவிக்கின்றன.

**தோழி :** தேவி, அம்மலையிலுள்ள குகைகளை நீ கண்ணுற்றா யாகில்...

**தலைவன் :** கண்ணுற்றால் என் உயிரே போய்விடும். ஏன் நேற்றிரவு வானம், பேரிருள் கிழியும்படி 'பளீச், பளீச்' என்று மின்னிக் கொண்டிருந்தபொழுது அக்குகைகள் என் கண்ணிற் கும் தென்பட்டன. அவற்றின் அருகே செல்வதற்கு யாருக்குத் தான் துணிவு பிறக்கும்?

**தோழி :** ஏன்? இந்த மின்னல் ஒளியில் தன் வேலையே துணை யாகக் கொண்டு அம்மலை வழியேதான் நம் பெருமான் இரவுக்குறி வருகின்றனன். அச்சமில்லாமையால்தானே அவன் அங்ஙனம் வருகின்றனன்? கடுங்குளிரையும் அவன் பொருட் படுத்துவதில்லையே!

**தலைவி:** ஏடி பேதாய், அதனை என்னிடம் கூறற்க. என்குலை நடுங்குகின்றது. நீ அவனைப்பாராட்டுகின்றனை. அங்ஙனம் வருங்கால் வல் விலங்கு, பெரும் பாம்பு, சூரரமகளிர் நட மாடும் வழியில் நம் பெருமானுக்கு ஏதேனும் ஏதம் விளைந் தால் என்னாகும்? அதன் விளைவினை ஓர்ந்து பார்க்க. அவனுக்கு இரவுக்குறி நேர்ந்தது நீ தானே! இத்தகைய பெருந் தவறு நீ செய்திருத்தல் கூடாது.

**தோழி :** அதற்கு நான் என் செய்வேன்? ஒருநாள் இரவில் அவன் வந்து அளி செய்யாவிடினும் உன்னால் பொறுக்க முடிய வில்லை. உன் ஆற்றாமையை என்னால் சகிக்க முடியவில்லை. நின்னைக் காப்பாற்றுதல் என் கடமை யன்றோ? வேறு வழியின்மையால்தானே இதனைச் செய்ய நேர்ந்தது?

**தலைவி :** தோழியே, என் உயிர் போயினும் போகட்டும். நம் பெருமான் என் பொருட்டு இந்தப் பேரிருள் நெறியில் வரு வதற்கு யான் ஒரு பொழுதும் ஒப்புக் கொள்ளேன்.

**தோழி :** தேவி, நான் இப்பொழுது இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்புபோல் ஆகி விட்டேன். இரவில் வரற்க

என்றால் நம் பெருமானும் ஆற்றுகிலான். தவிர, புதுவதோர் இடையூறும் இன்று தோன்றியுள்ளது. நீ அதனை அறியின் ஆற்றுகிலாய். அஃது ஒரு நாணழிவு ஆகும்.

**தலைவி :** அடி பாவி, அஃதென்ன கேடு? விரைந்து நுவல்யாக. மகளிர்க்கு நாணம் உயிரினும் சிறந்ததன்றோ? நாணம் அழிந்தபின் உயிர் வாழ்தலும் கூடுமோ? புதுவதாக நிகழ்ந்த தனைக் கூறுவாயாக.

**தோழி :** நேற்றிரவு நம் பெருமான் ஈண்டுப் போந்தபொழுது வானம் மின்னிக் கொண்டிருந்ததை நீ அறிவாயல்லா?

**தலைவி :** ஆம். அப்பொழுது சாளரத்தின் வழியே நம் பெருமான் வருகையை நோக்கிய வண்ணம் இருந்தேன். ஒரு கொடி மின்னல் தோன்றியது. அதன் ஒளியில் நம் பெருமான் வருகையைக் கண்டு மகிழ்ந்தேன். வேறென்ன நிகழ்ந்தது?

**தோழி :** அதனை நினைந்தால் எனக்கு நகைப்பு வருகின்றது. கேட்டால் நீயும் சிரித்து விடுவாய்.

**தலைவி :** அது கிடக்கட்டும். சுற்றி வளைக்காமல் நிகழ்ந்ததனை விரைந்து சொல்லுவாயாக.

**தோழி :** சொல்லுவேன். நம் பெருமான் வருகையை யானும் மின்னொளியில் அறிந்து கொண்டேன். அவன் தடையின்றி இல்லத்தினுள் வரும்பொருட்டு ஓசையின்றித் தாழ் நீக்கிக் கதவினைத் திறந்து வைத்துவிட்டுப் படப்பையுள் இறங்கி இல்லத்தின் குறிய இறப்பின்கீழ் மறைவாக நின்றேன் அல்லவா?

**தலைவி :** ஆம்; அப்படித்தான் நின்றாய். யானும் சாளரத்தின் அருகே நின்று மின்னுந்தோறும் அவன் பேரழகைக் கண்டு மகிழ்ந்து நின்றேன். அப்பொழுது!...

**தோழி :** நம் பெருமான் படப்பையுள் புகுந்து நம் வரவேற்பினால் மெய்ம்மலி உவகையனாய் இல்லத்தினுள் புகுமுன்பு ஒரு முறை மின்னல் தோன்றிற்று. அப்பொழுது நம் அன்னை...

**தலைவி :** அன்னையா! ஏடி, அவள் என்ன செய்தாள்?

**தோழி :** அம் மின்னல் ஒளியிலே நம் பெருமான் நின்றதனைப் படப்பைக்கு அப்பால் நின்று நம் அன்னை கூர்ந்து நோக்கினாள். ஒரு நொடிப் பொழுதில் இருள் கவிந்து கொண்டது.

**தலைவி :** (பதறுவாள்போல் நடித்து) ஐயகோ! கெட்டொழிந் தேன்! ஏடி, என்ன இது! என்ன இது! நீ அப்பொழுது ஒன்றும் கூறாமல் அவ்விருளில் படப்பையுள் மறைந்து விட்டாயே. பின்பு என்ன நிகழ்ந்தது?

**தோழி :** நம் பெருமான் இல்லத்தினுள் புகுந்தவுடன் யான் அக் காரிருளில் அன்னையின் செயலை அவள் அறியாமல் ஆராயத் தொடங்கினேன்.

**தலைவி :** அங்ஙனமாயின் நம் களவொழுக்கத்தை நம் அன்னை கண்கூடாக அறிந்து கொண்டார் என்று சொல்.

**தோழி :** தேவி, அஞ்சற்க. துணிந்து அப்படியும் சொல்வதற் கில்லை.

**தலைவி:** பின் என்ன வென்று சொல்வது?

**தோழி :** அவசரப்படாமல் கேள். அவள் பின்னர் என்ன செய் வாளோ என்று அஞ்சியே அந்த மையிருளில் அவளைத் தொடர்ந்து சென்றேன்.

**தலைவி :** சரி; அவள் என்ன செய்தாள்?

**தோழி :** அவள் மேற்கொண்ட செயலால் அவள் நம் களவொழுக் கத்தை அறிந்து கொள்ளவில்லை என்பது உறுதியாயிற்று. பின்னரே ஓரளவு அமைதி கொண்டேன்.

**தலைவி :** நேராகச் செய்திக்கு வா. அன்னை என்னதான் செய் தாள்? அதனையும் சொல்.

**தோழி :** அன்னை கண்டது ஓரளவு உண்மைதான். மின் னொளியில் ஒரு நொடிப் பொழுதுதானே கண்டாள்? வேலேந்திய நம் பெருமானை நம்மைக் காக்கும் முருகப் பெருமானாகவே கருதி விட்டாள். ஆதலின் அவள் நம் களவொழுக்கத்தைத் தெரிந்து கொள்ளவில்லை.

**தலைவி :** அப்படியா? நன்று, நன்று. அப்படி அவள் கருதியிருப்பா ளாயின் அது நம் நற்பேறே. அன்னை பிறழ உணர்ந்ததனை நீ எப்படி அறிந்தாய்?

**தோழி :** சொல்வேன். கேட்டுச் சிரித்து ஒலி செய்து விடாதே. முருகன் என்று கருதியவள் உடனே இல்லத்துள் புகுந்து ஒருபிடி செந்தினையை ஒரு கையிலும், மற்றொரு கையில் பொற்சிரகத்தில் நீருங்கொண்டு முன்றிலில் வந்து முருகவேள் திருக்கோயில் கொண்டருளிய மலையின் அணங்குடை நெடுங்

கோட்டை நோக்கி அத்தினையைத் தூவி நீரைத் தெளித்தனள். பின்னர் நீர்க்கலத்தை நிலத்தில் வைத்துவிட்டு, முருகவேள் எழுந்தருளியிருக்கும் அத்திசையை நோக்கி 'முருகா, முருகா' என்று மெல்லப் பன்முறை ஒலித்து வாழ்த்துப் பாடல் பாடியவண்ணம் நெடுநேரம் நின்றனள்.

**தலைவி :** (புன்முறுவலுடன்) அன்பே, நம் பெருமானின் தோற்றமும் அப்படித்தானே அமைந்துள்ளது? அன்னை அவ்வாறு நினைப்பது இயல்புதான். ஒருவாறு உய்ந்தேன்!

**தோழி :** அங்ஙனம் உவப்பது பிழை. ஒரு பொழுதைக்குப் பிழைத்தேன் என்று சொல்.

**தலைவி :** ஏன்? மீண்டும் அச்சுறுத்துகின்றாய்?

**தோழி :** ஆம்; அஞ்சத் தான் வேண்டும். நீயோ நம் பெருமானைக் கண்டவுடன் பேரழகுடன் பொலிகின்றாய். அவனைப் பிரிந்திருக்கும் பகற்பொழுதில் உள்ளமும் உடலும் மெலிந்து வேறொருத்திபோல் மாறிக் காணப்படுகின்றாய். உன் மெலிவு கண்டு வாட்டமுற்ற அன்னை துயில் துறந்து இரவெல்லாம் நம் இல்லத்தைச் சுற்றி வந்த வண்ணம் உள்ளாள் என்பது இந்நிகழ்ச்சியால் தெரியவில்லையா? பல நாள் திருடன் ஒரு நாள் பிடிபடாமலா போய் விடுவான்?

**தலைவி :** அதோ முன்றில் அருகில் ஏதோ காலடியரவம் கேட்கின்றது. நம் பெருமானும் ஏனோ இன்னும் வந்திலன்?

**தோழி :** ஆம்; அன்னை வந்தாலும் வரக் கூடும். யாம் இனி வீட்டினுள்ளே போய்விட வேண்டியதுதான்.

இருவரும் இல்லத்துட் புகுந்து மறைகின்றனர்.

(காட்சி முடிகின்றது)

மேலும், நல்லுருத்திரனார்பற்றிக் கூறும் இடத்தில் நாடகப் பாங்கில் அமைந்த 'உரையாடல்' காட்டப் பெற்றுள்ளன. ஆண்டுக் கண்டு தெளிக.

---

11. இயல் - 32.

## உள்ளுறை உவமம்

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுட்களின் கருத்தைத் தெளிவுறக்காட்டற்குரிய உவமத்தை 'உள்ளுறை உவமம்', 'ஏனையுவமம்' என இரண்டாகப் பகுத்துக் கூறுவர். ஏனையுவமம் அகம் புறம் என்ற இருபொருள்களிலும் பொதுவாகப் பயின்று வருவது. இஃது உள்ளத்தால் ஆய்ந்துரை வேண்டாது சொல்லியுள்ள சொற்களின் துணையானே உணரும் தன்மையது; இது செய்யுளில் பொருளினின்றும் தனியாக நிறுத்திக் கூறப்பெறும். உள்ளுறை உவமமோ அகப்பொருள் பாடல்கட்கே சிறப்பாக உரியது இதனால்தான் தொல்காப்பியனார் உவமஇயலுள் இதன் இலக்கணம் கூறினாலும் அதற்கு முன்னதாகவே அகத்திணை இயலுள்ளும் இவ்வுவமையை விரித்தோதியுள்ளார். இவ்வுள்ளுறை உவமம் தலைவி தோழி முதலியோர் தாம் கூறக் கருதிய பொருளை வெளிப்படையாக வேறு பொருள் படத் தொடுத்து அத்தொடர் தாம் கருதிய பொருட்கு உவமம்போல் அமைந்து அவ்வுவமத்திற்குப் பொருளாகத் தாம் கூறும் கருத்தினை கேட்கும் நுண்ணறிவுடையோர் உணர்ந்து கொள்ளும்படி வியத்தகு முறையில் அமைத்துக் கொண்ட உரையாடும் ஓர் உத்தியாகும். அகப்பாடல்களில் பயின்று வரும் இதில் வெளிப்படையாகத் தோன்றும் கருத்துகள் உள்ளே அடிப்படையாக உறைந்து கொண்டிருக்கும் கருத்துகளுக்கு உவமையாக வரும்படி அமைக்கப் பெற்றிருக்கும் சாதாரணமாக வெளிப்படை உவமமானால் அதில் உவமேயமும் இருக்கும்; உள்ளுறை உவமத்தில் உவமேயம் வெளிப்படையாகத் தெரியாது. ஆனால், உவமை போலக் கொண்டு இதற்கு ஒப்பான வேறு பொருளை நுண்ணுணர்வால் சிந்தித்து அறிந்து கொள்ள முடியும் ஆசிரியர் தொல்காப்பியனார் இதனை,

> உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென
> உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை யுவமம்![1]

1. அகத்திணை - 51(இளம்)

என்று கூறியுள்ளார். கவிஞன் தனது பாட்டில் புலப்படக் கூறும் உவமையுடன் புலப்படக் கூறாத உவமிக்கப்படும் பொருள் ஒத்து முடிவதாக என்று தன் உள்ளத்தே கருதி, அப்பாட்டைக் கேட் போர் உள்ளத்திலும் அவ்வாறே நிகழுமாறு செய்து அங்ஙனம் உணர்த்துதற்கு உறுப்பாகிய சிறப்பான சொற்களைக் கொண்டு முடிப்பதாகும் என்று இதனை விளக்குவர் அகப்பொருள் விளக்க ஆசிரியர்.

> உள்ளுறை யுவமம் உய்த்துணர் வகைத்தாய்ப்
> புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்'.[2]

என்ற நூற்பாவால் இதனைப் புலப்படுத்துவர்.

ஓர் எடுத்துக் காட்டால் இதனை விளக்குவோம். தலைவன் ஒருவன் மகப்பேறு வாய்த்த தலைவியைப் பிரிந்து பன்னாள் பரத்தை வீடே கதி என்று அங்கேயே தங்கிவிடுகின்றான். பின்னர், தலைவி புனலாடிப் புனிறு தீர்ந்தமையை அறிந்து தன் பிரிவாற் றாமையையே வாயிலாகக் கொண்டு தன் இல்லில் வந்து புகுகின் றான். தலைமகள் அவனைக் கண்டு வெகுண்டு கூறுவதாகவுள்ள பாடல்.

> கரும்புநடு பாத்தியில் கலித்த தாமரை
> சுரும்புபசி களையும் பெரும்புனல் ஊர!
> புதல்வனை ஈன்றஎம் மேனி
> முயங்கன்மோ தெய்யநின் மார்புசிதைப்பதுவே.[3]

[கலித்த-தானே தோன்றின; சுரும்பு-வண்டு; மேனி-உடல்; முயங்கல்-தழுவாதே; தெய்ய என்பது அசைநிலை]

என்பது. இப்பாடலில் தலைவி, ''தலைவா, இந்த இல்லம் எமக் காக அமைக்கப்பெற்றதல்லவே. நுமது காதற் பரத்தைக்கும் இற்பரத்தைக்கும் அமைக்கப் பெற்றதன்றோ இது? கரும்பு நடுவ தற்கென்று அமைந்த பாத்தியில் தாமரை தானாகவே முளைத் துத் தழைத்துத் தன் மலர்த்தேனினால் வண்டுகளின் பசி தீர்ப்பது போல, நான் இவ்வில்லத்தில் இருந்து கொண்டு விருந்தோம்பி இல்லறமாகிய நல்லறத்தைப் புரிகின்றேன். ஒருத்தி இல்லில் ஒருத்தி உறைவது எவ்வளவு இழிதக்கது! கருவுயிர்த்தமையால்

---

2. நம்பி அகப்-238.
3. ஐங்குறு-65

இளமையும் அழகும் கெட்டுப் பேய்போல் விளங்குகின்றேன் என்று என்னை இகழ்ந்து சென்ற நீ இப்போது என்னை விரும்பி வந்து தழுவினால், பரத்தையரால் கோலம் செய்யப்பெற்ற நின் அழகிய மார்பு பொலிவிழந்து போகுமே! ஆதலின் என்னை முயங்கற்க'' என்று கூறுகின்றாள். தலைவனது ஊரின் கருப்பொருளால் உள்ளுறையமைத்துத் தன் வெறுப்புள்ளமும் துன்பமும் ஒருங்கே புலனாகும்படி கூறியிருக்கும் ஓரம்போகியாரின் திறன் கற்போருள்ளத்தை மிகவும் கவரும் தன்மையது என்பது பெறப்படும்.

**உள்ளுறை அமைக்கும் முறை :** அகப்பாடல்களைப் புனையும் கவிஞர்கள் உள்ளுறை உவமையைஅமைக்கும் போது அந்தந்த நாட்டிலுள்ள கருப்பொருள்கள் வருமாறு அதனை அமைப்பர். கேட்போருக்கு அப்பொருள்களின் தன்மைகளை வெளிப்படையாக எடுத்து வருணித்து உரைப்பதுபோல் தோன்றும். ஆனால், அப்படிச் செய்யும்பொழுது வருணனையின் உள்ளே அடிப்படையாக வேறொரு கருத்து உறைந்திருக்கும். வருணனையில் வரும் பொருள்கள் அவற்றுக்கு ஒப்பான ஒவ்வொரு கருத்தை அறிவதற்குப் பயன்படும் உவமைபோல் இருக்கும். இவ்வாறு உள்ளுறை உவமத்தில் வரும் பொருள்களைக் கொண்டு வேறு ஒரு பொருளைக் கருத முடிவதால் இலக்கண ஆசிரியர்கள் உளளுறை உவமையை '**உவமப் போலி**' என்று மற்றொரு பெயராலும் குறிப்பிடுவர்.

மேற்காட்டிய ''கரும்புடு நடு பாத்தியில்'' என்ற பாடலில் தலைவியின் பேச்சில் கரும்பு, ஆம்பல் போன்ற மருதநிலத்திலுள்ள கருப்பொருள்களே வந்துள்ளன. குறிஞ்சித் திணைப் பாடலாக இருப்பின் இதில் வாழை, பலா, தேன், சந்தன மரம் போன்ற குறிஞ்சிநிலக் கருப்பொருள்களே அமைக்கப்பெற்றிருக்கும் இங்ஙனமே பிற திணைப் பாடல்களில் அந்தந்த நிலத்துக் கருப் பொருள்கள் அமைக்கப்பெறும் என்பது அறியற் பாலது. ஓர் உண்மையும் ஈண்டு உளங்கொளத் தக்கது தமிழர்கள் தெய்வ வழிபாட்டில் சிறந்து தெய்வத்திற்கு முதல் இடம் தந்து வாழ்கின்றவர்களாதலின், இவ்வுலக வாழ்வினையொட்டி வரும் நிகழ்ச்சிகளைக் கூறும் சந்தர்ப்பங்களில் உள்ளுறை உவமையை அமைக்கும்போது கருப் பொருள்களில் தெய்வம் நீங்கலாக ஏனையவற்றை மட்டிலுமே கொண்டனர். தம் வாழ்க்கையுடன் தெய்வத்தைச் சார்த்திப் பேசி அதன் சிறப்பை அவர்கள் குலைக்க

விரும்பவில்லை. இதனை நன்குணர்ந்த தொல்காப்பியனாரும் தாம் நூல் செய்யும்போது இவ்வுள்ளுறையை அமைக்கும் முறையை,

உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம்எனக்
கொள்ளும் என்ப குறிஅறிந் தோரே.[4]

[குறி-இலக்கணம்]

என்ற விதியால் குறிப்பிடுவர்.

**உள்ளுறை உவமவகை :** தொல்காப்பியர் பொருளதிகாரத்தி லுள்ள உவம இயலில் இவ்வுள்ளுறை உவமங் குறித்து விரிவாகப் பேசுவர். உள்ளுறை உவமம் ஐந்து வகைப்படும் என்று அவர் கூறுவர்.

உவமப் போலி ஐந்தென மொழிப.[5]

என்பது அவர் கூறும் விதி. உரையாசிரியராகிய இளம்பூரணர், "அவையாவன இதற்கு உவமை இல்லை எனவும், இதற்கு இது தானே உவமை எனவும், பல பொருளினும் உளதாகிய உறுப்பு களைத் தெரிந்தெடுத்துக் கொண்டு சேர்த்தின் இதற்குவமையாம் எனவும், பல பொருளினும் உளதாகிய கவின் ஓரிடத்து வரின் இதற்கு உவமையாம் எனவும், கூடாப் பொருளொடு உவமித்து வருவனவும்" என்று விளக்கம் கூறிச் சான்றுகளையும் காட்டுவர். இந்த ஐந்துவித உள்ளுறை உவமைகளும் வினை, பயன், உறுப்பு, உரு, பிறப்பு என்ற ஐந்தின் ஏதுவாகச் சொல்லப்பெறும் என்பது அவர் கருத்து. இதனை,

தவலருஞ் சிறப்பின் தன்மை நாடின்
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வரூஉம் திறத்த என்ப.[6]

என்று கூறுகின்றார் என்பது அவர் கொண்ட கொள்கை. "நினக்கு உவமை இல்லை என்னும் வழிச் செயலானாதல், பயனானாதல், உறுப்பானாதல், உருவானாதல், பிறப்பானாதல் ஒப்பார் இல்லை எனல் வேண்டும் என்பது கருத்து. பிறவும் அன்ன" என்று அவர் இதற்குக் கூறும் உரையால் அவர் கருத்தினை அறியலாகும். ஆனால், பேராசிரியர் என்ற உரை

4. அகத்திணை-50 (இளம்)
5. உவ-24
6. ஷை-25

யாசிரியர் இந்த இரண்டு நூற்பாக்களுக்குப் பொருள் கூறுங்கால் வினை, பயன், உறுப்பு, உரு, பிறப்பு என்ற ஐந்து வகையாக உள்ளுறை அமைக்கப்பெறும் என்று கூறுவர். இஃது அவர் உரை நோக்கி அறியப் பெறும். 'தவலரும் சிறப்பின்' என்று தொல்காப்பியர் சிறப்பித்தது அகப் பொருளுக்கு உள்ளுறை உவமத்தின் இன்றியமையாமையைப் புலப்படுத்துவதற்கே யாகும்.

**உள்ளுறை கூறுவோர்:** இந்த உள்ளுறை உவமை கூறுங்கால் தலைவன் முதலியோர் கூறும் முறைகட்கும், இன்னின்னார் தாம் உள்ளுறை உவமம் கூறுவதற்கு உரியவர்கள் என்பதற்கும், அங்ஙனம் கூறும்போது யார் யார் எப்பொருள்களை அமைத்துக் கூறவேண்டும் என்பதற்கும் விதிகளை வகுத்துள்ளார் தொல்காப்பியனார். பெரும்பாலும் இவ்வுவமை அகவாழ்வில் நேரிடும் இன்பதுன்பங்கள்பற்றியே வரும். ஆசிரியர் தொல்காப்பியனார்,

இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்
உவம மருங்கில் தோன்றும் என்ப.[7]

[இனிதுறுகிளவி - மகிழ்ச்சி பயக்கும் கூற்று; துனியுறுகிளவி-புலவி பயக்கும் கூற்று]

என்று இதனைப் புலப்படுத்துவர். தலைமகள் அதிகமாக வெளியில் திரிந்து அனைத்தையும் அறிந்தவள் அல்லளாதலின், அவள் அவளறிந்த கருப்பொருள்களை மட்டிலுமே அமைத்துக்கூறுவாள். தோழிக்கு அதிகத் தொலைவு செல்லும் பழக்கம் இல்லையெனினும் தலைவி உறையும் நிலத்தைப்பற்றி நன்கு அறிந்திருப்பவளாதலின் அந்நிலத்திலுள்ள எல்லாக் கருப்பொருள்களையும் அமைத்து உள்ளுறை உவமம் கூறுவாள். தொல்காப்பியர் இதனை,

கிழவி சொல்லின் அவளறி கிளவி
தோழிக் காயின் நிலம்பெயர்ந் துரையாது[8]

என்று விதியால் பெற வைப்பர். அன்றியும், தலைவி இந்த இன்ப துன்பங்களைப் புலப்படுத்தும் இடங்களில் மட்டுந்தான் கூறுவதற்கு உரியவள் என்பது இளம்பூரணர் கருத்து.

7. உவம - 30
8. ஷை - 26 (பேரா)

கிழவோட்கு உவமை ஈரிடத்து உரித்தே.[9]

என்ற நூற்பாவிற்குப் பொருள் கூறுமிடத்து இங்ஙனம் குறிப்பிடுவர். ஆனால், பேராசிரியர் என்பார் 'ஈரிடம்' என்பதற்கு 'மருதமும் நெய்தலும்' என்று பொருள் கூறி மருதத் திணையிலும் நெய்தல் திணையிலும்தான் தலைவி உள்ளுறை உவமம் கூறுதற்குரியவள் என்று விதந்து ஓதுவர். தலைவன் உவமை கூறுங்கால் தன் தலைமைத் தன்மை தோன்றக் கூறுவான்.

கிழவோற் காயின் உரனொடு கிளக்கும்.[10]

என்பது தொல்காப்பியரின் விதி. இவனுக்கு எல்லாப் பொருள்களையும் அமைத்துக் கூறும் உரிமையும் உண்டு.

கிழவோட் காயின் இடம்வரை வின்றே.[11]

என்ற விதியில் இந்த உரிமையைக் காண்க. அங்ஙனமே, நற்றாய் செவிலி பாணன் முதலியோர் சொல்லுங்கால் இடம் வரையறுக்கப் பெறாது சொல்லுவர்.

ஏனோர்க் கெல்லாம் இடம்வரை வின்றே[12]

என்று இதற்கு விதியும் வகுத்துள்ளமை அறியப்பெறும்.

தலைவியின் வாழ்க்கையில் நேர்முகமாக அதிகத் தொடர்பு கொள்பவர், செவிலியும் தோழியும் ஆவர். தலைவியின் நுண்ணிய பண்புகளையெல்லாம் நன்றாக அறிந்தவர்கள் இவர்களே. எனவே இவர்கள் காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்துமாறு உள்ளுறை உவமம் கூறுவர். தொல்காப்பியர் இதனை,

தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற்குரியர் கொள்வழி யான.[13]

என்ற விதியால் பெற வைப்பர். இந்த உண்மைகளையெல்லாம் நன்கு மனத்திற் கொண்டு அகப்பொருள் பாடல்களைப் பயின்றால் தான் ஆண்டுக் காணும் உள்ளுறை உவமத்தின் சிறப்பையும் நயத்தையும் நன்கு அறியமுடியும். இனி, எட்டுத்தொகை, பத்துபாட்டு இவற்றிலுள்ள அகப்பொருள் நூல்களிலுள்ள சில உள்ளுறை உவமைகளைக் கண்டு நுகர்ந்து களிப்போம்.

---

9. உவம - 31 (இளம்)
10. ஷை - 28 (இளம்)
11. ஷை - 32 (இளம்)
12. ஷை - 29
13. உவம - 33 (இளம்)

**எட்டுத் தொகையில் :** எட்டுத் தொகை நூல்களிலுள்ள சில உள்ளுறை உமமைகளில் ஆழங்கால் படுவோம். முதலாவதாக மிகச் சிறிய பாடல்கள் அமைத்த 'ஐங்குறு நூற்றில்' சிலவற்றைக் காண்போம். இந்த நூலில் உள்ளுறை அமைந்திருப்பதைப் போல் வேறு எந்த நூலிலும் அஃது அமைந்திருப்பதைக் காணல் இயலாது. ஈரடியிலும் உள்ளுறை; ஓரடியிலும் உள்ளுறை. அவை மிகச் சுருங்கிய அளவில் பெருகிய பொருளை உள்ளடக்கி நிற்கின்றன. சில சொற்கள் நின்று பலவகையான பொருளைக் காட்டுகின்றன. பேருருவங்களைக் கண்ணாடி தனக்குள் அடக்கிக் காட்டுவது போலப் பெரும் பொருளை அடக்கிக் காட்டுகின்றன. சில உள்ளுறை உவமைகளை எடுத்துக் காட்டி விளக்குவோம்.

(1) ''நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாணர் ஊரன்''[14]

என்பது மருதத்திணை உள்ளுறை. 'அரும்புகளையுடைய காஞ்சி மரத்தின் கிளைகளில் சிறிய மீன்கள் தங்கி இருக்கும் புதுமை வாய்ந்த மருதநிலத் தலைவன்' என்பது இதன் பொருள். ஆற்றங் கரை யடுத்துக் காஞ்சி மரம் வளைந்து நீரில் படிந்திருப்பதை இன்றும் முசிறி, திருவரங்கம் போன்ற இடங்களில் காவிரியில் நீராடுவோர் நன்கு அறிவர். அம் மரத்தின் பல கொம்புகளில் நறுமணம் கமழும் மலர்கள் பூத்துக் குலுங்கி நிற்கும். நீரோட்டத்தைத் தழுவிய நிலையில் தாழ்ந்திருக்கும் கொம்புகளில் சிறு மீன்கள் துள்ளி விழுந்து தங்கிப் பின் நீரில் விழும். அதனால் பூவின் நறுமணமும் மீனின் புலால் நாற்றமும் ஒருங்கே கலந்து கமழும். இந்தகைய சிறப்புடையது மருத நிலம். அது போல அந்நிலத் தலைவனும் பரத்தையர் சேரியை அடுத்து வாழ்க்கைத் துணைவியுடன் புகழ் பரவ வாழ்கின்றான். இல்லறம் இனிதே நடை பெறுகின்றது. பரத்தையர் இடை இடையே தலைவனைப் பற்றி வசப்படுத்திப் பின் பிரிகின்றனர். அதனால் பழியும் புகழும் கலந்து ஊரில் பரவுகின்றது என்பது விளக்கம்.

இது தோழியின் கூற்றாக அமைந்துள்ளது. புறத்தொழுக்கத்தில் நெடு நாள் ஒழுகி 'இது தகாது' எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டும் தலைவியொடு ஒழுகி நின்ற காலத்தில் தலைவன் தோழியுடன் சொல்லாடி 'யான் அவ்வாறு ஒழுக நீயிர் நினைத்த திறம் யாது?' என்று வினவியபொழுது அவள் சொல்லியது. இதில்

14. ஐங்குறு. 1

குறிப்பிற் கூறும் தோழியின் நுட்பமான அறவுரை (அறிவுரை!) உணர்ந்து மகிழத் தக்கது.

(2) ''வெள்ளாய் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநட நாரை
காணலம் பெருந்துறைத் துணையொடு கொட்கும்
தண்ணந் துறைவன்''[15]

[குருகு - கொக்கு; காணிய - கண்டு அளாவ; கொட்கும் - சுற்றித் திரியும்]

இதில் வெள்ளாங்குருகினைக் காணிய சென்ற நாரை (மீண்டு வந்து) கானலம் பெருந்துறை யினிடத்துத் தன் துணையொடு சுற்றித்திரியும் தண்ணந்துறைவன் என்பது நெய்தல் திணை உள்ளுறை- இதில் 'வெள்ளாங்குருகு' காமக் கிழத்தியாகவும், பிள்ளை' என்றது தலைவனுக்கும் அவளுக்கும் உள்ள ஒழுக்கமாக யும், 'செத்து' என்றது அவ்வொழுக்கம் இடையறவு பட்டதாக யும், 'காணிய சென்ற மடநடைநாரை' என்றது அவளது ஊடல் தவிர்க்கச் சென்ற வாயில்களாகவும், 'துணையொடு கொட்கும்' என்றது மீண்டும் தலைவியிடத்து வந்தமையாகவும் கொள்ளும் படி உள்ளுறை உவமத்தால் தோழி தலைமகனுக்கு வாயில் மறுக் கின்றாள்.

தலைமகன் காமக்கிழத்தி ஒருத்தியிடம் நட்புகொண்டு ஒழு கினான். அவ்வொழுக்கம் யாதோ ஒருகாரணத்தால் இடையறவு பட்டது; அவளது ஊடலைத் தீர்க்க முயன்றும், அது தீராமையால் மீண்டுவந்து தலைவியுடன் அளவளாவ முயல்கின்றான் தோழி வாயில் மறுக்கின்றாள். ''அன்பனே, நீ மெய்யன்பால் ஈண்டு வந்தாய் இல்லை; நின் காமக்கிழத்தி ஊடியதனாலே வந்தனை. நீ ஈண்டு வந்தமையால் அவள்இரட்டைத்தாழ்க் கொளுவி விடுவாள் ஆகவே, ஆண்டுச் சென்று அவள் ஊடலைத் தீர்க்கவே முயலுக. ஈண்டுத் தலைவி நின்பொய்யுரையில் மருளாள் காண்'' என்று வாயில் மறுத்தாளாயிற்று. தோழி அவளால் அறியப்பெற்ற குருகு நாரை ஆகிய நெய்தற் கருப்பொருள்களைக் கொண்டே தொல்காப்பிய விதிபிறழாமல் தன் கருத்தினை வெளிப்படுத்திய தாகச் செய்யுள் யாத்த அம்மூவனார் திறன் அறிந்து மகிழ்வதற் குரியது.

15. ஷை - 158.

(3) கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்
அருவரைத் தீந்தேன் எடுப்பி அயலது
உருகெழு நெடுஞ்சினைப் பாயும் நாடன்[16]

என்பது குறிஞ்சித்திணை உள்ளுறை 'குரங்கின் தொழிலை நன்கு கற்றறியாத மந்தியின் பார்ப்பு தேன் இறாலின்கண் தேன்பருக எண்ணி அதன்கண் உள்ள ஈக்களை அலைத்து எழுப்பிவிட்டுப் பின் அவற்றிற்கு அஞ்சி அருகிலுள்ள மரக்கிளையுள் பாயும் நாட்டையுடையவன்' என்பது இதன் பொருள். இதன்கண் தலைவனது தவற்றினை உள்ளுறையாக அமைத்துக் கூறும் தலைவியின் திறம் வியக்கத் தகுந்ததாக அமைந்துள்ளது. தலைவன் நாட்டிலுள்ள மந்தியின் பார்ப்புக்கு தேன் பருகும் அவாமட்டிலும் இருந்தது. அஃது ஆண்குட்டியாக இருப்பினும் தேனினை எவ்வாறு எடுத்துண்பது என்ற வழிதுறை அறியும் போதிய ஆற்றலின்மையால் நஞ்சுடைய ஈக்களை இறாலின் கண்ணின்றும் எழுப்பிவிட்டுப் பின்னர் அவற்றிற் கஞ்சி உயிர் தப்பினால்போதும் என்று பின்னும் கேடு தரும் இயல்பினையுடைய அச்சந்தருமாறு உயர்ந்திருக்கும் பெரிய மரக்கிளையில் பாய்கின்றது. அங்ஙனமே தலைவனும் இரவுக் குறிக்கண் வரும் உபாயம் உணராது தலைவியும் தோழியும் கூறிய குறியைப் பிழைத்து அல்லகுறிப்பட்டுத் தாய் முதலியோருக்குத் தன் வருகையை உணர்த்திப் பின்னர் அவர் ஆரவாரம் கேட்டு உருகெழுகாட்டினூடே ஓடிப் போயினான்.

இது தலைவியின் கூற்றாக அமைந்துள்ளது. முதல் நாள் இரவுக் குறிக்கண் வந்த தலைவன் அல்லகுறிப்பட்டு, இடையூறு எய்தி வந்தே மீள்வானாயினன். இவற்றால் பெரிதும்வருந்தியிருந்த தலைவி மறுநாள் தலைவன் சிறைப்புறத்தில் வந்து நிற்றலை அறிந்து தவற்றிற்குக் காரணம் தலைவனது பேதைமையே என்பது தோன்ற முதல்நாள் இரவு நிகழ்ந்தவற்றைத் தோழிக்குக் கூறுவ தாக அமைந்துள்ளது இது. இதற்கெல்லாம் தீர்வு காண்டல் விரைந்து வரைந்து கோடலேயாகும் எனக் குறிப்பால் வரைவு கடாயவாறும் நுண்ணிதின் உணர்ந்து மகிழத்தக்கது,

(4) வள்ளெயிற்றுச் செந்நாய் வயவுறு பிணவிற்குக்
கள்ளியங் கடத்திடைக் கேழல் பார்க்கும்
வெஞ்சுரக் கவலை[17]

16. ஷை-272
17. ஷை-323

[வள்எயிறு-கூரியபல்; வயவு-வயாநோய்; கேழல்-காட்டுப் பன்றி; கவலை-கவர்த்த வழிகள்]

என்பது பாலைத்திணை உள்ளுறை அமைந்த பகுதி. இதன்கண், கூரிய பற்களையுடைய செந்நாய்பன்றி இறைச்சியைத் தின்ன வயா நோய் கொண்டுள்ள தன் பெண் நாயின் பொருட்டுக் கள்ளியில் மறைந்து பன்றியை எதிர்பார்த்துக் கிடக்கும் இடமான வெவ்விய பாலை நிலம் கவர்த்த வழிகளையுடையது என்று கூறப் பெற்றுள்ளது. இங்ஙனமே, தலைவனும் தன் ஆருயிர்க் காதலியோடிருந்து அவள் இயற்றும் அறத்திற்கு ஆக்கம் செய்யும் பொருட்டு இந்த வெஞ்சுரக் கவலை நீந்தி பொருள்தேடும் நற்செயலை மேற்கொண்டுள்ளான்.

தலைவனின் கூற்றாக அமைந்தது இது. பொருள்வயிற் பிரிந்து வெய்ய பாலை நிலத்தில் செல்லுகின்ற தலைவனின் நெஞ்சம் தலைவியினது தண்ணிய குணநலங்களிலே ஈடுபடுதலான் அவனுக்கு அந்நெறியின் கொடுமை தோன்றாமை கண்டு மகிழ்ந்து அந்த நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்துள்ளது.

(5) தாதார் பிரசம் ஊதும்
போதார் புறவின் நாடுகிழ வோனே[18]

[பிரசம்-வண்டு; போது-மலர்; புறவு-முல்லை நிலம்]

என்பது முல்லைத்திணை உள்ளுறை இம்முல்லை நிலம் யாண்டும் தேன் பொதுளிய நறுமலர்களோடு அரிபெறா நிற்ப வண்டுகள் நாற்றிசையின்றும் வந்து தாம் வேண்டியாங்கு மலரின்கண் தேனைப் பருகிக் களிகொண்டு இன்னிசைப் பாடித் திரிகின்றன என்பது இதன் பொருள். இங்ஙனமே, தலைமகனும் தலைமகளும் அன்பால் நிரம்பிய நன்னர் நெஞ்சத்தோடு இனிதே இருப்ப, அவர் தம் செல்வ மனைக்கண் நாற்றிசையிலுமிருந்து விருந்தினரும் இரவலரும் வந்து தாம் விரும்பிய வண்ணம் உண்டு உடுத்து அவர் இனிய புகழைப் பாடிப் பரவா நிற்பர் என்ற பொருள் இந்த உள்ளுறைக்கண் அமைந்து கிடப்பதைக் கண்டு மகிழலாம்.

இது செவிலிகூற்றாக அமைந்துள்ளது. கற்புக் காலத்தில் தலைவன் மனைக்கண் சென்று அங்குத் தன் மகளும் மருமகனும் ஆவியும் உடலும்போல் ஒன்றி இன்புற்று அமர்ந்து வாழ்கின்ற நல்வாழ்க்கையின் மாண்பினைக் கண்ணும் நெஞ்சும் குளிரக் கண்டு

18. ஷை-406

மீண்டு வந்து அந்த மாண்பினை நற்றாய்க்குக் கூறி மகிழ்வித்தலே பொருளாக அமைந்தது இது. முல்லைத் திணையின் உரிப் பொருளாகிய **இருத்தல்** பலவகைப்படும் என்பதை நாம் அறிவோம். அவற்றுள் தலைசிறந்தது இஃதேயாகும்.

**குறுந்தொகையில்:** சில உள்ளுறைகளைக் கண்டு மகிழ்வோம்.

(1) உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
சூன்முதிர் பேடைக் கீனி லிழைஇயர்
தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்
நாறா வெண்பூக் கொழுதும்
யாணர் ஊரன்[19]

[குரீஇ-குருவி; சேவல்-ஆண்பறவை; சூல்-கருப்பம்; பேடை-பெண் குருவி; ஈன்இல்-கரு உயிர்க்கும் இடம்; இழை இயர்-அமைக்கும் பொருட்டு; தேம்-தேன்; தீ கழை-இனிய கோல்; நாறா-மணம் வீசாத; கொழுதும்-கோதி எடுக்கும்; யாணர்-புது வருவாயையுடைய.]

என்பது உள்ளுறை. 'தன் பேடை கருவுயிர்த்தலுக்கு இடம் அமைத்தற்பொருட்டு ஆண் குருவி சுவை இனிமையையுடைய கருப்பங் கழியை நீக்கி மணம் வீசாத வெண்மையான அதன் பூவைக் கோதி எடுக்கும்' என்பது இச்செய்யுட்பகுதியின் பொருள். இதனுள் அடங்கியிருக்கும் பொருள் இது: அறத்தொடு பொருந்திய இன்பத்தை நல்கும் தலைவி இருப்பவும், அவள்பால் அன்பின்றி, அன்பும் கற்பும் இல்லாத பரத்தையரைத் தலைவன் விரும்பினான் என்பது.

பரத்தை யொழுக்கத்தில் ஒழுகின தலைவன் பாணனைத் தலைவிபால் தூது அனுப்புகின்றான். பாணன் தோழியைச் சந்தித்துத் 'தலைவன் மிக்க அன்புடையவன்' என்று பாராட்டி வாயில் வேண்டியபொழுது, 'இவன் சொல்லத்தான் அவரது அன்பு புலப்படுகின்றது. மற்று அவர் செயலால் அறிந்திலம்' என்று கூறி வாயில் மறுக்கின்றாள். மேற்கூறிய உள்ளுறையால் தலைவனது பரத்தை ஒழுக்கத்தையும் குறிப்பிட்டுக் காட்டு கின்றாள்.

(2) மாரி யாம்பல் அன்ன கொக்கின்
பார்வல் அஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு

19. குறுந்-85

கண்டல் வேரளைச் செலீஇயர் அண்டர்
கயிறுஅரி எருத்தின் கதழும் துறைவன்[20]

[பார்வல்-பார்வை; பருவரல்-துன்பம்; ஞெண்டு-நண்டு; கண்டல்-தாழை; அளை-வளை; செலீஇயர்-செல்லும் பொருட்டு; அண்டர் - இடையர்; கதழும் - விரைந்து செல்லும்.]

என்பது உள்ளுறை. 'மாரிக்காலத்து ஆம்பல் மலரைப் போன்ற தோற்றத்தையுடைய கொக்கினது பார்வையை அஞ்சிய நண்டு தாழை வேரினிடையே உள்ள வளைக்குட் செல்லும்பொருட்டு இடையரால் பிணிக்கப்பெற்ற கயிற்றை அறுத்துச் செல்லும் எருதைப்போல் விரைந்து செல்லுதற்கு இடமாகிய கடல்துறையை உடையவன்' என்பது செய்யுட்பகுதியின் பொருளாகும்.

கொக்கின் பார்வைக்கு அஞ்சிய நண்டு வளைக்குள் தங்குதல் போல, ஊராருடைய அலருக்கு அஞ்சித் தலைவன் தலைவியை விரைவில் மணந்துகொண்டு தன் அகத்தே இல்லறம் நடத்தற் குரியவன் என்ற பொருளை இந்த உள்ளுறை உணர்த்துகின்றது. வரைந்து கொள்ளாமல் நெடுநாள் களவொழுக்கத்தில் ஒழுகி வருகின்றான் தலைவன். ஒருநாள் அவன் சிறைப்புறத்திலிருக்குங் கால் தோழி அவன் கேட்குமாறு கூறுகின்றாள்: "இவர் வரைந்து கொள்ளாமல் களவு நெறியில் ஒழுகுதல் அச்சம் தருதற்குரியது. இங்ஙனம் நம் உள்ளத்தே அச்சம் தரும்படி வருவதினும் வாரா தமைவதே நலம் தரும்'' என்பதாக. இதனால் களவுப் புணர்ச்சி யினால் வரும் அச்சத்தையும் அது பெறாவிடில் தலைவிக்கு உண்டாகும் துன்பத்தையும் வெளியிட்டு, இவ்விரண்டும் நீங்க விரைவில் வரைந்து கொள்ளுதலே தக்கதென்னும் கருத்தைக் குறிப்பிடுவாளாயினள்.

(3) செவ்வரைச் சேக்கை வருடை மான்மறி
சுரைபொழி தீம்பால் ஆர மாந்திப்
பெருவரை நீழல் உகளும் நாடன்[21]

[வரை-மலை; சேர்க்கை-பக்கம்; வருடைமான்-எட்டுக் கால் களையுடைய தொரு விலங்கு; மறி-குட்டி; சுரைபொழி தீம்பால்-தாயின் மடியினின்றும் சுரக்கின்ற இனிய பால்; ஆர-வயிறு நிறைய; மாந்தி-உண்டு; பெருவரை-பெரிய மலைப் பக்கத்தில்; உகளும்-துள்ளும்]

20. ஷை-117
21. ஷை-187.

'வருடை மானின் குட்டி தாயின் மடியிலுள்ள பாலை வயிறாரப் பருகிப் பெரிய மலைப்பக்கத்தில் துள்ளுதற்கிடமாகிய நாட்டையுடையவன்' என்பது இப்பாடற் பகுதியின் உள்ளுறைப் பொருளாகும். தலைவன் வரைந்து கோடற்குரிய பொருளை நிரம்பப் பெற்று ஈண்டு வந்து வரைந்து கொண்டு இல்லறம் நடத்துவான் என்பது இவ்வுள்ளுறையால் உணர்த்தப் பெறும் பொருளாகும். வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் வரைந்து கொள்ளாது காலம் நீட்டித்தானாக அக் காலக் கழிவினை ஆற்றாளாகிய தலைவியை ஆற்றுவிக்கின்றாள் தோழி. அவ்வமயம் தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழியும் முறையில் தலைவியின் கூற்றாக அமைந்தது இப்பாடல்.

(4) சோலை வாழைச் சுரிநுகும் பினைய
அணங்குடை யருந்தலை நீவலின் மதனழிந்து
மயங்குதுயர் உற்ற மையல் வேழம்
உயங்குயிர் மடப்பிடி உலைபுறம் தைவர
ஆம்இழி சிலம்பின் அரிதுகண் படுக்கும்
மாமலை நாடன்'[22]

[சோலை - வாழைத் தோட்டம். சுரிநுகும்பு - சுருண்ட குருத்து; இனைய-தான் வருந்தும்படி; அணங்கு-தெய்வம்; தலை-மத்தகம்; நீவலின்-தடவுதலால்; மதன்-வலி; மயங்கு துயர்-கலங்கிய துயரம்; உற்ற-அடைந்த; மையல்-மயக்கம்; வேழம்-களிறு; உயங்கு உயிர்-வருந்திய மூச்சையுடைய; பிடி-பெண் யானை; உலை-வருந்தும்; புறம்-முதுகு; தைவர-தடவ; ஆம்-நீர்; இழிதல்-இறங்கியோடுதல்; சிலம்பு-பக்க மலை; கண்படுக்கும்-துயிலும்]

'யானையின் மத்தகத்தை வாழையின் சுருண்ட குருத்து தடவுதலால் அது வலியழிந்து மயக்கத்தை அடைந்து அதன் பின்னர் துயிலப்பெறும்' என்பது இப்பாடலில் அமைந்த உள்ளுறை. ''நாம் வரைவு கடாவினமையின் மயங்கிய தலைவன் வரைந்து கொண்டு இடையீடில்லாத இன்பத்தைப் பெறுவான்'' என்று தோழி குறிப்பிடும் பொருள் இவ்வுள்ளுறையில் அடங்கியுள்ளது. வரைவிடை வேறுபட்ட தலைவியை நோக்கி ''நின்

22. ஷ்ஷ-308

பொருட்டே தலைவன் பிரிந்தான்'' என்று தோழி கூறுவதாக அமைந்தது இது.

**நற்றிணையில்** ; சில உள்ளுறை உவமங்களைக் கண்டு மகிழ்வோம்.

(1) பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரைப்
புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கால் அலவன் கொண்கோட் கூர்ந்து
கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்
இரைதேர் நாரை எய்தி விடுக்கும்
துறைகெழு மாந்தை[23]

[திரை-அலை; பொருத-அலை மோதிய; அடைகரை-அடுத்த கடற்கரை; புன்கால்-புல்லிய காம்பு; பொதி-களி பொருந்திய; கிளை-இனம்: செத்து-கருதி; தும்பி-வண்டுகள்; அலவன்-நண்டு; கோள்-கோட்பாடு; இமிரும்-ஒலிக்கும்; பூசல்-போரிடும் ஒலி; தேர்-தேடுகின்ற]

இந்த நெய்தல் திணைப் பாடற்பகுதியில் வெளிப்படையாக உள்ள கருத்து இது: கடற்கரை மணலில் நாவல்கனி யொன்று உதிர்ந்து கிடக்கின்றது. அதனைத் தம் இனம் என்று கருதி வண்டுகள் சூழ்ந்து மொய்க்கின்றன. அதனைக் கனி என்றே தேர்ந்து நண்டொன்று அதனைப் பற்றி இழுத்துச்செல்லுகின்றது. வண்டுகள் அச்செயலை விலக்குவதற்குப் பெரும் பூசலிட்டு ஒலிக்கின்றன. அப்பொழுது இரைதேடி வரும் நாரையொன்று அவ்விடத்திற்கு ஏகுகின்றது. நாரைக்கு வெருவிய நண்டு பற்றிய கனியை விட்டொழித்து வளையினுள் புகுந்து கொள்ளுகின்றது.

இங்ஙனம் வெளிப்படையாகவுள்ள கருத்தில் அடிப்படையாக அமைந்த கருத்து இது: இதில் நாவற்கனி தலைவியையும், தும்பி தோழியையும், அலவன் தலைவிமேல் தவறிழைக்கும் தலைவனையும், இரைதேர் நாரை தலைவனையும் குறிக்கும் உள்ளுறையாக அமைந்துள்ளது. கனியைத் தும்பி மொய்த்தல் தலைவியைத் தோழி சார்ந்திருப்பதை உணர்த்துகின்றது. இந்நிலையிலும் கனியை அலவன் பற்றுவது தோழியைச் சார்ந்திருந்தும் தலைவி

23. நற்-35

யைத் தமர் முதலாயினோர் இற்செறிக்கின்றனர் என்பதைக் காட்டுகின்றது. நாரை வரவால் கனி விடுதலை பெறுவது போல், தலைவன் வரவால் தமர் முதலாயினோர் அவனுக்கு மகட் கொடை நேர்ந்து, தலைவியை இற்செறிப் பொழிக்கின்றனர்.

தலைவன் களவொழுக்கம் நீங்கித் தலைவியை மணந்து கொண்டு இல்லறம் நடத்துகின்றான். அப்போது தலைவியைப் பார்த்துப் போக வந்த தோழியிடம் அவள் தலைவியைக் கள வொழுக்கக் காலத்தில் நன்கு ஆற்றுவித்ததாகப் புகழ்கின்றான். அதற்கு மறுமொழி கூறும்முகத்தால் தான் தாய்க்கு அஞ்சியிருக்கும் காலத்தில் தலைவனே விரைய வந்து தலைவியை மணந்து தன் அச்சத்தை நீக்கினானேயன்றித் தான் செய்தது ஒன்றுமில்லை என்று தோழி முகமன் கூறுவதாக அமைந்தது மேற்குறிப்பிட்ட பாடற்பகுதி.

(2) கிடங்கில் அன்ன விட்டுக்கரை கான்யாற்றுக்
கலங்கும் பாசி நீரலைக் கலாவ
ஒளிறுவெள் அருவி ஒண்துறை மடுத்துப்
புலியொடு பொருத புண்கூர் யானை
நற்கோடு நயந்த அன்பில் கானவர்
விற்சுழிப் பட்ட நாமப் பூசல்
உருமிடைக் கடியிடி கரையும்
பெருமலை நாடன்[24]

[கிடங்கில் - ஓர் ஊர்; விட்டுக் கரை - விட்டுக் விட்டுக் கரைத்துச் செல்லும்; கான் யாறு - காட்டாறு; ஒளிறு - விளங்கிய; மடுத்து-பாய்ந்து; பொருத- போரிட்ட; புண்கூர்-புண்மிக்க; கோடு - கொம்பு, தந்தம்; கானவர்- வேடர்; நாமப் பூசல்-அச்சம் தரும் பிளிற்றலின் பேரொலி; உரும் - இடி; கரையும் - ஒலிக்கும்]

இந்தக் குறிஞ்சித்திணைப் பாடற்பகுதியில் வெளிப்படையாகப் புலனாகும் கருத்து இது: கான்யாற்றில் அடித்துக் கொண்டு வரப் பெறும் பாசி நீர் அலைத்தலால் யாண்டும் கலக்கின்றது. இந் நிலையில் வெள்ளிய அருவியோடும் துறையில் புலியுடன் யானை யொன்று பொருகின்றது. இந்நிலையில் யானையின் தந்தத்தை விரும்பும் அன்பில்லாத வேடர்கள் வில்லினின்றும் யானையின்மீது

24. ஷை - 65

அம்பு மாரி தொடுக்கின்றனர். அம்புபட்ட புண்ணின் வேதனை பொறுக்க மாட்டாது யானை கேட்போர் அச்சம் தருமாறு பேரொலியுடன் பிளிறுகின்றது. இவ்வொலி இடிமுழக்கம் போல் கேட்கின்றது. இத்தகைய நாட்டின் தலைவன் இவன்.

வெளிப்படையாகத் தோன்றும் இந்தக் கருத்தில் அடிப்படையாகக் குறிப்பிடப்பெறும் கருத்து இது: இந்த உள்ளுறை உவமத்தில் யானை தலைவியாகவும், புலி காம நோயாகவும், வேடர் ஏதிலாட்டியராகவும் கொள்ளப்பெற்றுள்ளது. புலி பொருதலால் புண்பட்டு வருந்தும் யானை காமநோய் பொருதலால் வருத்தமுற்ற தலைவியாகவும், வேடர் யானையின் மருப்புப்போகக் கணை தொடுப்பது ஏதிலாட்டியர் தலைவியின் உயிருக்கே ஏதம் உண்டாகும்படி அலர் எடுத்ததாகவும், அம்பு பட்ட யானை பூசலிடுவது அலரைப் பொறாளாய தலைவி வருந்துவதாகவும், அப்பூசல் மலையில் சென்று மோதுதல் அவ்வருத்தச் செய்தி தலைவன் காதுக்கும் எட்டிவிட்டதாகவும், அத்தகைய மலை நாடனாதலின் இன்னே வருகுவன் என்றும் கொள்ளப் பெறும்.

பொருள்வயிற் பிரிந்து சென்ற தலைவன் குறித்த பருவத்தில் திரும்பி வரவில்லை. அதனால் வருந்தும் தலைவியைத் தோழி தேற்றுகின்றாள்; தான் கேட்ட நன்னிமித்தம் கூறி தலைவியைத் தேற்றுவதாக அமைந்தது இப்பாடல். விரைவில் திரும்பித் தலைவியை மணந்து கொள்வான் என்பது தோழியின் குறிப்பு.

(3) கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை
பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத்
தண்டுசேர் மள்ளரின் இயலி அயலது
குன்றுசேர் வெண்மணல் துஞ்சும் ஊர.[25]

[கழுநீர் - குவளை மலர்; கருந்தாள் - கரிய கால்; பழனம் - வயல்; முனைஇ - வெறுத்து; தண்டு - தடி; மள்ளரின் - மள்ளரைப் போல; இயலி - செருக்கி நடந்து; துஞ்சும் - உறங்கும்]

இந்த மருதத்திணைப்பாடலில் வெளிப்படையாகப் புலப்படும் கருத்து இது: குவளை மலரை மேய்ந்த கரிய கால்களையுடைய எருமை அயலிலுள்ள வயலில் படர்ந்த தாமரையின் குளிர்ந்த மலரைத் தின்பதனை வெறுத்துவிட்டுக் குன்றுபோல் குவிந்து

25. ஷெ - 260

கிடக்கும் மணலை நோக்கிச் செருக்கி நடந்து துயிலா நிற்கும். தலைவனுடைய ஊரில் இத்தகைய செயல் நடைபெறுகின்றது.

தலைவனுடைய ஊரைப்பற்றி உள்ளுறை உவமமாகக் கூறும் இப்பாடற் பகுதியில் அடிப்படையாக உறையும் கருத்து இது: தாமரை மலர் தலைவிக்கும், குவளை மலர் காதற் பரத்தைக்கும், மணற்குன்று சேரிப்பரத்தைக்கும், எருமை தலைவனுக்கும் உவமை யாக வந்தன, தலைவன் தலைவி நலனை வெறுத்துக் காதற் பரத்தையிடம் இன்பந் துய்த்துச் சேரிப் பரத்தையின் மனையின் கண்ணே உறங்குவானாயினன் என்பது.

இது தலைவியின் கூற்றாக வந்தது. பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் தலைமகளை அணைகின்றான். அவள் அவன்மீது கொண்டிருந்த சினத்தை உள்ளடக்கிக் கொண்டு உடன் பட்டாள் போன்று, ''ஊரனே, நீ, இப்பொழுது மிக்க விருப்பமுற்றாய் போன்று புல்லுகின்றனை. முன்பு என் கோதை வாடுமாறு கை யகன்று ஒழிந்தாய் என்பதை யான் அறிவேன்'' என அவன் பரத் தையிற் பிரிந்து சென்றதனைக் கூறி, ஊடல் நீங்கா நிலையில் உள்ளாள் என்பதைக் காட்டுவது இப்பாடல்.

**அகநானூற்றில் :** ஒரு சில உள்ளுறை உவமங்களைக் கண்டு இன்புறுவோம்.

(1) தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து பரத்தையிடத்துச் செல்லுகின்றான். சில நாட்கள் கழிந்த பின்னர் மீண்டும் தலைவியை நாடி வருகின்றான். அவ்வாறு வாயில் வேண்டிச் சென்ற தலைமகட்கு வாயில் மறுக்கின்றாள் தோழி. தோழி தலைவனை நோக்கிக் கூறுகின்றாள்.

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமலர் ஆரும் ஊர![26]

[முனைஇய - வெறுத்த; காரான்- எருமை; ஊர்மடிகங்குல் ஊரார் துயின்ற இருள்; நோன்தளை - வலிய தளை பரிந்து-அறுத்துக் கொண்டு; கோடு - கொம்பு; நீர் முதிர் -

26. அகம் - 46

நீர் மிக்க; பழனம் - வயல்; இரிய - ஓட; அம்தூம்பு - அழகிய உள்துளை; பனிமலர் - குளிர்ந்த மலர்]

"சிவந்த கண்களையுடைய எருமை தனக்கு இருப்பிடமாகிய கொட்டிலைச் சேறாக்கிக் கொண்டு தளையையும் அறுத்துக் கொண்டு பழனத்திற்குக் காவலாக விளங்கிய வேலியைத் தன் கொம்பால் ஒடித்து, மீன்கள் பயந்து ஓடத் தாமரை சூழ்ந்த வள்ளையை மயக்கி, மலர்தலின்றி விளங்கும் தாமரையை அருந்தும் ஊர!" என்று அவனை விளிப்பதாக அமைந்துள்ளது மேற்கூறிய பாடற்பகுதி.

இம் மருதத்திணைப் பாடலில் எருமை தலைவனுக்கும், கொட்டில் தலைவிக்கும், தளை நாணத்திற்கும், கோடு பாணனுக்கும், வேலி விறலிக்கும், மீன்கள் பரத்தையரின் தோழி மாருக்கும், வள்ளை பரத்தையரின் தாய்மார்க்கும், மலர்ச்சியின்றி வண்டொடு குவிந்த தாமரை அகமலர்ந்து ஏற்றுக் கொள்ளாத பரத்தையர்க்கும் உவமைகளாக நின்று தோழி கருதும் பொருளை உணர்த்துகின்றது. தலைவன் தன்னால் ஆதரிக்கப் பெற்ற தலைவியை வேறுபடுத்தி, தனக்குரிய நாணத்தையும் குலைத்துக் கொண்டு, பாணனைக் கருவியாகக்கொண்டு விறலியை அப்புறப்படுத்தி, பரத்தையருடன் உறையும் தோழிமார்களையும் எப்படியோ நாற்புறமும் சென்று நீங்கச் செய்து, அப்பரத்தையரின் தாய்மாரையும் மயக்கி அகமலர்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளாத பரத்தையரை நுகர்ந்தவன் அன்றோ என்று கூறாமல் கூறித் தலைவனை விளிப்பதை இந்த உவமையில் காண்கின்றோம். நாகரிகமான முறையில் குறிப்பாகச் செய்திகளை உணர்த்திக்-குறிப்பாகத் தலைவனது புறத்தொழுக்கத்தைக் குத்திக்காட்டிக்-கடிந்து வாயில் மறுக்கும் தோழியின் திறம் எண்ணி எண்ணி மகிழ் வதற்குரியது.

(2) தலைவியின் களவொழுக்கம் அவளை வேறுபடுத்திக் காட்டுகின்றது. அவளது உடல் மெலிவும் சுணங்கு படர்ந்த உடல் மாற்றமும் அன்னையரின் உள்ளத்தைக் கவலச் செய்கின்றன. அவர்கள் உண்மையறியாது கலங்கித் தம் மகளுக்கு நேர்ந்த இவ் வேறுபாடு தெய்வத்தால் வந்ததெனக் கருதி வேலனைக்கொண்டு வெறியாட்டெடுக்க ஏற்பாடு செய்கின்றனர். இதனைக் காணும் தலைவி தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ள பாடலில் வரும் உள்ளுறை இது:

வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்
கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்
உடுவுறு கணையிற் போகிச் சாரல்
வேங்கை விரியிணர் சிதறித்தேன் சிதையூஉப்
பலவின் பழத்துள் தங்கும்
மலைகெழு நாடன்.[27]

[வரை-மலை. கழுது-பரண். உடுஉறு-இறகினைப் பொருந்திய; கணையில்-அம்புபோல்; சாரல்-பக்க மலை; விரி இணர்-விரிந்தபூங்கொத்துகள்; சிதையூஉ-அழித்து; மலை கெழுநாடன்-மலை நாட்டையுடைய தலைவன்]

இக்குறிஞ்சித் திணைப் பாடற்பகுதியில், "யானையின் வலிய நடையைக் கூர்ந்து அறிந்த வேட்டுவன் பரண்மீது ஏறிக் கவண் கொண்டு யானையை நோக்கிக் கல் எறிகின்றான். அது இறகினைப் பெற்ற அம்புபோல் விரைந்து சென்று பக்க மலையிலுள்ள வேங்கை மரத்தின் விரிந்த பூங்கொத்துகளைச் சிதறித் தேன் அடையைச் சிதைத்துப் பலாப்பழத்துள் சென்று தங்கி விடுகின்றது. இத்தகைய நாட்டையுடையவன் நம் தலைவன்" என்று தலைவனைத் தோழியிடம் குறிப்பிடுகின்றாள் தலைவி.

வெளித்தோற்றத்திற்குக் குறிஞ்சி நில நிகழ்ச்சியொன்றினைக் காட்டுவதுபோல் தோன்றும் இதில் வேறொரு பொருள் உணர்த்தப்பெறுவதைக் காணலாம். மேற்கூறிய நிகழ்ச்சியில் யானை தலைவனுக்கும், தினைப் புனம் குறியிடத்துக்கும், வேட்டுவன் வேலனுக்கும், கவண்கல் வீசுதல் வெறியாடலுக்கும், கவண்கல் அலருக்கும், தேன் தலைவியின் இன்பத்திற்கும், பலாப் பழம் தலைவியின் உள்ளத்திற்கும் உவமையாக நின்று அப்பொருளை உணர்த்துகின்றது. வேலன் வெறியாடலால் எழும் அலர் தலைவன் குறியிடத்து வருதலைக் கெடுத்து, தலைவியின் இன்பத்தை அழித்துத்தலைவியின் உள்ளத்தில் தங்கிஅவளை வருத்தும் என்பது உணர்த்தும் பொருளாகும்.

(3) தலைவன் திருமணத்திற்கு இணங்கி அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யும் செய்தியைத் தோழி தலைவியிடம் கூறுகின்றாள்; வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் திருமணத்தின் பொருட்டுத் திரும்பும் செய்தியைத் தோழி கூறுவதுபோல் உணர்த்தும் பாடலின் பகுதி வருமாறு:

27. ஷை-292 ஒப்பிடுக: குறிஞ்சிக் கலி-5.

அடும்புக்கொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்
குப்பை வெண்மணல் பக்கஞ் சேர்த்தி
நிறைச்சூல் யாமை மறைத்தீன்று புதைத்த
கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டைப்
பார்ப்பிட னாகும் அளவைப் பகுவாய்க்
கணவன் ஓம்பும் கானலஞ் சேர்ப்பன்.[28]

[அடும்பு-ஒருவகைத் தாவரம்; வாங்கி-இழுத்து; கொடுங் கழி-வளைந்த கானல் கழி; குப்பை-மணல்மேடு; சூல்-கருப்பம்; மறைத்து-மறைய; கோடு-யானைக் கொம்பு; வட்டு-சூதாடு காய்கள்; பார்ப்பு-குஞ்சு; கணவன்-ஆண் யாமை]

இந்த நெய்தல் திணைப் பாடற்பகுதியில் வரும் செய்தி இது: நிறைந்த சூலுடன் உள்ள பெண்யாமை அடும்புக் கொடி சிதையு மாறு இழுத்து வந்து உப்பங்கழியின் அருகிலுள்ள மணல் மேட்டில் சேர்க்கின்றது. யாரும் அறியாமல் தான் ஈனும் முட்டைகளை அம் மணலில் மறைக்கின்றது. அம்முட்டைகள் பக்குவப்பட்டு குஞ்சு கள் வெளிப்படும்வரை ஆண்யாமை அவற்றைப் பாதுகாக்கின்றது. இத்தகைய நாட்டினையுடையவன் நம் தலைவன்.

மேலாகப் பார்ப்பதற்கு நெய்தல் நில நிகழ்ச்சிபோல் தோன்றும் இதில் குறிப்பிடப்பெறும் வேறொரு கருத்து உண்டு. நிறைச் சூல் பெண்யாமை காமம் நிறைந்த தலைவியாகவும், அடும்புக் கொடி தலைவி அன்னையர்பால் கொண்டுள்ள அன்புத் தளையாகவும், வெண்மணல் தலைவனின் பக்கமாகவும், முட்டை களவொழுக்கமாகவும், முட்டையை மறைத்துப் புதைத்தது கள வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்து வைத்த தன்மையாகவும், முட்டை புலவு நாறுதல் அலர் எழும் தன்மை யாகவும், முட்டை பார்ப்பாகும் அளவு ஆண்யாமை ஓம்புதல் தலைவன் தலைவியை வரைந்து மாட்சிமைப் படுத்தும்வரை அவன் குறிவழியொழுகித் தலைமகளை ஓம்பின தன்மையாகவும் நின்று வேறொரு கருத்தினை உணர்த்துவதனை அறியலாம். தலைவன் தலைவியை களவு முறையில் மணந்து கற்பொழுக்கத் தில் புகும்வரையிலுள்ள பல்வேறு செய்திகளைப் பாங்குறப் புலப்படுத்தும் முறை பன்முறை சிந்தித்து மகிழத் தக்கது.

---

28. ஷை-160

**கலித்தொகையில்**: சிலஉள்ளுறைகளைக்காட்டிவிளக்குவோம்.

(1) இடியுமிழ் பிரங்கிய விரவுபெயல் நடுநாட்
கொடிவிடு பிருளிய மின்னுச்செய் விளக்கத்துப்
பிடியொடு மேயும் செய்புன் யானை
அடியொதுங் கியக்கங் கேட்ட கானவன்
நெடுவரை ஆசினிப் பணவை ஏறிக்
கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி
ஆசினி மென்பழம் அளிந்தவை உதிராத்
தேன்செய் இறாஅல் துளைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துணர் உழக்கிக்
குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப்
பலவின் பழத்துள் தங்கும் மலைகெழுவெற்பன்[29]

[பெயல்-மழை; இருளிய-இருண்ட; பிடி-பெண் யானை; செய்புன்-புன்செய்; அடி-அடிகள்; இயக்கம்-ஓசை; கானவன்-வேடன்; பணவை-பரண்; கவணை-கவண்; கைவிடுதல்-எறிதல்; இறுவரை-முறிந்த மலை; வீ-பூ; அணிந்தவை-நெகிழ்ந்தவை; இறாஅல்-தேன் அடை; போகி-ஊடுருவி; பைந்துணர்-பசிய கொத்து; உழக்கி-கலக்கி; கொழுமடல்-கொழுவிய இலை]

இக் குறிஞ்சிக்கலிப் பாடலில் அடங்கிய உள்ளுறை: இரவில் யானையின் காலடி ஓசையைக் கேட்ட தினைப்புனக் காவவன் ஓசை வந்த திசையை நோக்கிக் கவண் கல்லை வீசி விட்டனன்; அக்கல் வேங்கைப் பூக்களைச் சிதறச் செய்தது; கனிந்த ஆசினிப் பலாப் பழங்களை உதிர்த்தது; தேன் அடையைத் துளைத்தது; மாங்கொத்துகளை உழக்கியது; வாழை மடலைக் கிழித்தது; இறுதியில் அக்கல் பலாப் பழத்துள் தங்கி விட்டது.

இந்த உள்ளுறையில் அடங்கிய பொருள்: இயக்கம் கேட்ட கானவன் கல் கைவிடுதலைத் தலைவன் மின்னல் வழிகாட்ட வந்து தலைவியோடு புணர்ந்த நிலைமை அலர் கூறக் கேட்ட செவிலி தன் மனையிடத்தே வெளியாக இருந்து கடுஞ்சொல் கூறி இற்செறித்தலாகவும், அக் கல் வேங்கையினது செவ்விப் பூவைச் சிதறின தன்மை தலைவன் இன்பம் நுகர்கின்ற மனவெழுச்சியைக்

29. குறிஞ்சிக் கலி-5

கெடுத்ததாகவும், ஆசினிப் பழத்தைப் பயன்படாமல் உதிர்த்த தன்மை அவள் நுகர்கின்ற இன்பத்தைக் கெடுத்ததாகவும், அஃது இறாலில் தேனைப் பயன்படாது உகுத்த தன்மை தலைவி நலம் தலைவற்குப் பயன்படாமல் கெட்டதாகவும், அது மாவின் குலையைச் சிதறுவித்த தன்மை ஆயவெள்ளம் தலைவியோடு கூடி விளையாடாமல் நீங்கினதாகவும், அது வாழை மடலைக் கிழித்த தன்மை தோழியை வருத்தினதாகவும், அது பழவின் பழத்துள் தங்கின தன்மை அக்கடுஞ்சொல் தலைவி நெஞ்சத்தில் தங்கினதாகவும் கொள்ளல் வேண்டும்.

களவில் ஒழுகும் தலைவன் சிறைப் புறமாக வந்து நிற்கின்றான். தோழியும் தலைவியும் மூங்கில் நெல்லைக் குற்றிக் கொண்டே வள்ளைப் பாட்டுப் பாடுகின்றனர். தலைவி தலைவனை இயற்பழிப்பதாகவும், தோழி இயற்பட மொழிவதாகவும் பாட்டு அமைந்துள்ளது.

(2) அகன்றுறை அணிபெறப் புதலொடு தாழ்ந்த
பகன்றைப்பூ உறநீண்ட பாசடைத் தாமரை
கண்பொர ஒளிவிட்ட வெள்ளிய வள்ளத்தால்
தண்கமழ் நறுந்தேறல் உண்பவன் முகம்போல
வண்பிணி தளைவிடூஉம் வயலணி நல்லூர.[30]

[புதல் - சிறு தூறு; பகன்றைப்பூ-ஒருவகைப் பூ; பாசடை - பசிய இலை; கண் பொர - கண்ணில் குத்திக் கூசும்படி செய்தல்; வள்ளம் - கிண்ணம்; வண்பிணி - வளவிய முறுக்கு].

மருதக்கலிப் பாடலின் முற்பகுதி இது. தலைவனது ஊரை வருணிக்கின்றது இப்பகுதி. அவன் ஊரில் ஓடுகின்ற ஆற்றில் பலர் இறங்கி நீர் பருகக் கூடியவாறு துறை அமைந்துள்ளது. இந்த ஆறு பாய்வதால் வயல் வளம் மிக்கதாகப் பொலிகின்றது. நீரோட்டத்தில் அடித்துக் கொண்டு வரப்பெற்ற பகன்றைப் பூ சிறு தூருடன் வந்து தன் அடியில் கிடக்கும் அளவுக்கு பசிய இலையுடன் கூடிய தாமரை வளர்ந்து கிடக்கின்றது. கண் வெறி கொள்ளும்படி ஒளி வீசும் அந்த வயலில் வெள்ளிக் கிண்ணத்தால் நறிய கள்ளை உண்ணும் பெண்ணின் முகம்போல் தாமரை முகையின் முறுக்கு அவிழ்ந்துப் பூத்துக் கிடக்கின்றது. இந்த வருணனை தலைவியின் கூற்றாக அமைந்துள்ளது.

30. மருதக் கலி - 8

தலைவன் பரத்தை வீடே கதியாகக் கிடந்து ஒரு நாள் தன் வீடு திரும்புகின்றான். தலைவியைப் பலவாறு தேற்ற முயல் கின்றான்; அவள் குற்ற மற்றவள் என்கின்றான். அதனைப் பொறாத தலைவி "நீ பேசுவது நன்றாகத்தான் உள்ளது. இப் பேச்சினை என் தங்கையரிடம் (பரத்தையர்) சென்று கூறுக" என்று சொல்லி ஊடுகின்றாள். தலைவியின் கற்பு ஒழுக்கத்தில் அவள் கூற்று நிகழும் இடங்களை யெல்லாம் தொகுத்துக் கூறும் நூற்பாவில் "தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி, எங்கை யர்க்கு உரை என இரத்தற் கண்ணும்"[31] என்பதற்கு இப் பாடலை எடுத்துக்காட்டாகக் கொள்வர் இளம்பூரணர்

மேற்கூறிய தலைவியின் உள்ளுறை உவமத்தால் விளக்ப் பெறும் பொருள் இது: இங்கு ஆற்றின் அகன்ற துறை பரத்தையக சேரியாகவும், அழகு பெறும்படி புதலொடு வந்து தாழ்ந்த மண மில்லாத பகன்றைப் பூ பாணர் முதலிய வாயில்களுடன் வந்து தங்கின அன்பில்லாத பரத்தையராகவும், அதனை உற நீண்ட தாமரை அப்பரத்தையரிடத்தே சேர்ந்த தலைவனாகவும், அத் தாமரை கள்ளைத் தீதென்று உணர்ந்து வைத்தும் அதனை உண்டு களிக்கின்றவள் முகம்போலத் தளை விடுதல் (மலர்தல்) அன்பில்லாத மகளிரிடத்துப் பெறுகின்ற இன்ப நுகர்ச்சி தீதென்று உணர்ந்து வைத்தும் அதனை நுகர்ந்து மகிழ்கின்ற தலைவ னாகவும் கொள்ளப்பெற்றுத் தலைவி தன் கருத்தை உணர்த்தித் தலைவனிடம் வெறுப்புணர்ச்சி காட்டி ஊடுவதைப் பாட்டின் பகுதியில் கண்டு மகிழ்க.

(3) ஒண்சுடர் கல்சேர, உலகூருந் தகையது
தெண்கடல் அழுவத்துத் திரைநீக்கா எழுதரூஉம்
தண்கதிர் மதியத் தணிநிலா நிறைத்தரப்,
புள்ளினம் இரைமாந்திப் புகல்சேர, ஒலிஆன்று
வள்ளிதழ் கூம்பிய மணிமருள் இருங்கழி
பள்ளிபுக் கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப![32]

[ஒண்சுடர் - ஞாயிறு: கல் - மேற்கு மலை; ஊர்தல் - பரவு தல்; அழுவம் - கடற் பரப்பு; திரை - அலை; புகல் - புகு மிடம்; கழி - நெய்தல் நீரோடை]

31. கற்பியல்-6 (இளம்).
32. நெய்தற் கலி - 4

நெய்தல் ஒழுக்கத்தைக் காட்டும் கலிப் பாடலின் முற்பகுதி இது. நெய்தற் கழியின் இயல்பை விளக்குவதாக அமைந்துள்ளது இப் பகுதி: "ஒளி பொருந்திய ஞாயிறு மேற்கு மலையில் சேர்கின்றது. உலகமெல்லாம் தன் தண்ணிய ஒளி பரக்கும் தன்மையதாய், தெளிந்த கடற் பரப்பில் அதன் திரை நீக்கிக்கொண்டு தோன்றும் முழுமதி தன் அழகிய ஒளியை நிரப்புகின்றது. பல வகையான பறவைக் கூட்டங்கள் தத்தம் இரைகளை அருந்திப் பசியாறித் தத்தம் இருப்பிடங்களைச் சேர்கின்றன. இப்போது கழியின் ஆரவாரம் அடங்கித் தோன்றுகின்றது. பகலின் ஒளி மங்கி விட்டமையால் கழியிலுள்ள வளமான குவிந்த நீல மலர்களும் இதழின் பிரிவு தெரியாமல் மொத்தமாய்க் குண்டுகள் போல் தோன்றுவதால் ஒவ்வொன்றும் ஒவ்வொரு நீல மணியே என்று மற்றவர்கள் மருண்டு நோக்குவதற்கு இடந் தருகின்றது. ஆரவாரம் அடங்கி இருளிற் காணப்பெறும் பெரிய கழி உறக்கத்தில் புகுந்து விட்டது போல் தோன்றுகின்றது."

இது தோழியின் கூற்றாக அமைந்துள்ளது. காலத்துக்கும் இடத்திற்கும் ஏற்றபடி இடத்தின் அமைப்புகளை அழகுற இடித்துரைக்கும்போதே தன் உள்ளத்திற் கொண்டுள்ள வேறு கருத்துகளையும் குறிப்பாய்ப் புலப்படுத்துகின்றாள். தலைவியின் களவொழுக்கத்தைப்பற்றி ஊரில் அலர் எழுந்ததால் தலைவன் ஒருவழித் தணந்தவிடத்துத் தோழி தலைவியின் ஆற்றாமை கூறித் தலைவியை வரைந்து கொள்ளுமாறு கூறும் இடம் இது. ஒளி கொடுத்துக் கொண்டிருந்த பகலவன் மேற்கு மலையில் போய் மறைந்தான் என்பதனால், தலைவிக்கு இன்பம் ஊட்டிக் கொண்டிருந்த தலைமகன் இப்போது தன் ஊரில் மறைந்து கொண்டான் என்பதும்; முழுமதியம் விளக்கமாய் எழுந்தது என்பதால், இல்லத்தில் காவல்கள் முழு அளவில் விளக்கமாய் விழித்துக் கொண்டுள்ளன என்பதும்; புள்ளினங்கள் ஆரவாரம் அடங்கித் தத்தம் இருப்பிடங்களை (கூடுகளை) அடைந்தன என்பதனால், அயல் மாதர்களின் பழிச் சொற்கள் அடங்கி அவர்கள் தத்தம் இல்லத்தில் அமைந்து விட்டனர் என்பதும்; நீல மலர்களை நீல மணிகள் என்று மருள்கின்றனர் என்பதனால், தலைவியை இல்லத்திலுறைவோர் மருண்டு மருண்டு நோக்குகின்றனர் என்பதும்; கழி உறக்கத்தில் புகுந்ததுபோல் உள்ளது என்பதனால், ஊர் அமைதியாய் உள்ளது என்பதும்; குளிர்ந்த சேர்ப்பனே என்பதனால், தலைவன் ஏதும் அறியாதவன்போல் இனிமையாயுள்ளான் என்பதும் தோழி தலைவனுக்கு நிலத்தின் இயற்கை

யைப் புனைந்துரைப்பதுபோல் குறிப்பாகப் புலப்படுத்தும் கருத்துகளாகும். முடிவான கருத்து தலைவியைத் திருமணம் புரிந்து கொள்ள ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும் என்பதே யாகும்.

'**பத்துபாட்டில்:** குறிஞ்சிப் பாட்டி'லுள்ள உள்ளுறை யுவமம் ஒன்றினைக் காண்போம். செவிலிக்கு அறத்தொடு நிற்கும் தோழி படிப்படியாகத் தலைவியின் களவொழுக்கத்தை வெளிப்படுத்து கின்றாள். தலைவியிடம் உள்ளுறு புணர்ச்சிமூலம் நட்புக் கொண்ட தலைவனைக் குறிப்பிடுங்கால் அவனது மலையின் இயல்பினைப் புனைந்துரைக்கும் முகத்தால் சில செய்திகளை வெளியிடும் பகுதி இது.

......அவ்வழிப்
பழுமிளகு உக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் தீங்கனி உதிர்ந்தெனப்
புள்ளெறி பிரசமொடு ஈண்டிப் பலவின்
நெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல்
நீர்செத்து அயின்ற தோகை வியலூர்ச்
சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி
அரிக்கூட் டின்னியம் கறங்க ஆடுமகள்
கயிறூர்ப் பாணியில் தளரும் சாறல்
வரையற மகளிரின் சாஅய் விழைதக
விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தள்
தண்கமழ் அலரி தாஅய் நன்பல
வம்புவிரி களத்திற் கவின்பெறப் பொலிந்த
குன்றுகெழு நாடன்[33]

[அவ்வழி-அப்பொழுது; உக்க-உதிர்ந்து கிடக்கும்; முழு முதல்-பெரிய அடி; கொக்கு-மா மரம்; புள்-வண்டுகள்; பிரசம்-தேன்; ஈண்டி-கூடி; நெகிழ்ந்துஉகு-விரிந்து தேன் துளிக்கும்; தேறல்-கள்ளின் தெளிவு; நீர்செத்து-நீர் என்று கருதி; அயின்ற-பருகிய; தோகை-மயில்; வியல்-அகன்ற; சாறு-விழா; இயம்-இசைக் கருவிகள்: கறங்க-ஒலிக்க; பாணி-தாளம்; சாஅய்-தன்னலம் சிறிது கெட்டு; பொரு-

33. குறிஞ்சிப் பாட்டு-அடி (186-199)

தீண்டும்; சென்னி - கொடுமுடி (சிகரம்); கிளைஇய-கிளைத்த; அலரி-பூக்கள்; தாஅய்-உதிர்ந்து பரவி; வம்பு-கச்சை; கவின்-அழகு; குன்றுகெழு-மலை பொருந்திய]

தோழியின் புனைந்துரையிற் கூறப்பெறும் கருப்பொருள் நிகழ்ச்சிகளை உவமையாகக்கொண்டு அவள் சொல்லக் கருதிய வேறு பொருள்களை செவிலி உய்த்துணர்தல் வேண்டும். அகப்பொருள் ஒழுகலாற்றில் இங்ஙனம் சொல்லால் வெளியிட்டுக் கூறுவதற்கு உரியவல்லாத எண்ணங்களை நாகரிகமாக மறைத்துக் கூறுதற் பொருட்டு அமைத்துக் கொண்ட உரையாடல் முறையே உள்ளுறை யுவமமாகும் என்பதையும், இந்தக் கருப்பொருள்; நிகழ்ச்சிகளை உவமையாகக் கொண்டு தலைவன் தலைவி என்பவர் களின் ஒழுகலாறுகளைக் கேட்போர் உய்த்துணர்ந்து கொள்ளச் செய்தல் இந்த உள்ளுறையின் நோக்கம் என்பதையும் நாம் அறிவோம்.

மேற்கூறிய பாடற்பகுதியில் உள்ள கருப்பொருள்நிகழ்ச்சிகளை முதலில் காண்போம். முற்றிப் பழுத்த மிளகுகள் சிந்திக் கிடக்கின்ற பாறையின் பாங்கர் அழகிய சுனையொன்று உள்ளது. அச் சுனையின் கரையில் மாவின் பழங்களும் பலவின் கனிகளும் கனிந்து சாறாய் ஒழுகுகின்றன. அவற்றின்மேல் மலையுச்சியிற் கட்டப் பெற்றுள்ள தேனடை கிழிய அதன் உள்ளே உள்ள தேன் தன்கட் படியும் தேனீக்களையும் தள்ளிக் கொண்டு முற்கூறிய பழச் சாற்றில் பாய்ந்து சுனையிற் கலக்கின்றது. அவ்வாறு பாய்ந்த தேறலை அங்குத் திரியும் மயில் இயல்பான சுனை நீர் என்று கருதிப் பருகுகின்றது. அத்தெளிவைப் பருகியதால் களிப்புற்ற அம்மஞ்ஞை மூங்கிற் கழிகளில் இழுத்துக் கட்டிய கயிற்றின்மீது தாளம் தவற ஆடும் பெண் மகள்போன்று தளர்ந்து ஆடுகின்றது. இத்தகைய சாரல் தலைவனது குன்றின்கண் உள்ளது. இவை பாடற்பகுதியில் கூறப்பெற்றுள்ள நிகழ்ச்சிகள் ஆகும்.

இனி, இவ்வுள்ளுறை யுவமத்தில் வெளிப்படையாகத் தோன்றும் கருத்துகளைக்கொண்டு கவிஞன் உணர்த்த இருக்கும் அடிப்படையான கருத்துகளை விளக்குவோம். நன்கு முற்றின மிளகுகள் சிந்திக் கிடக்கின்ற பாறை வீரம் மிக்க மலைவாணர் வாழும் ஊராகவும், அப்பாறையிலுள்ள பெரிய சுனை தலைவன் தோன்றின சிறப்பு மிக்க குடியாகவும், மாம்பழத்தாலும் பலாப் பழத்தாலும் விளைந்த தேறல் இனிய நீர்மையராகிய தாய்

தந்தையரால் உளனாகிய தலைவனாகவும், தேன் அடையிலிருந்து ஒழுகிய தேன் இவ்விருவரையும் கூட்டிய பால்வரைத் தெய்வமாக வும், அத்தேறலைப் பருகுகின்றோம் என்னும் நினைவின்றி விடாயினாற் பருகிய மயில் உயர்ந்த தலைவனை அடைகின்றோம் என்னும் எண்ணமின்றி நுகர்ந்த அச்சத்தாற் சார்ந்த தலைவியாக ம், அத்தேறலாற் பிறந்த களிப்பு தலைவன் இவ்வாறு முன்னர்த் தன் மெய்தொட்டுப் பயின்றறியாத புத்துணர்வால் தலைவி யுள்ளத்தில் களவொழுக்கத்தினால் பிறந்த பேரின்பமாகவும், மயில் களிப்பு மிகுதியால் ஆடஇயலாதன்மை தலைவி தான் பெற்ற புத்துணர்வின் மயக்கத்தால் செய்வதறியாது திகைத்து வருந்தும் தன்மையாகவும் செவிலி உய்த்துணரும்படித் தோழி உள்ளுறை கூறுகின்றாள்.

மேலும் அவள் தலைவனுடைய நாட்டையும் உள்ளுறை உவமத்தாலேயே சிறப்பிக்கின்றாள். விண்ணுறவோங்கிய மலை யின் கொடுமுடிகளில் கிளைத்த செங்காந்தளினுடைய குளிர்ந்த மணம் நாறும் பூக்கள் வரையர மகளிர் பரவி விளையாடுதலால் நலம் சிறிது கெட்டு விரும்பும் வண்ணம் கீழே பரவி அவ்விடத்தை நன்றாகிய பல கச்சு விரிக்கப்பெற்று அழகுறப் பொலியும் களம் போன்று அழகு பெறப் பொலிந்த குன்றுகெழு நாடு எனத் தலைவனது நாட்டினைத் தோழி சிறப்பித்துரைக்கின்றாள்.

இதிலும் உள்ளே உறையும் அடிப்படைக் கருத்துகளைக் கண்டு மகிழ்வோம். உயர்ந்த நிலத்தே பூத்த செங்காந்தள் உயர் குடியிற் பிறந்த தலைவனாகவும், அத்தகைய காந்தள் மலர் வரையரமகளிரின் விளையாட்டால் நலஞ் சிறிது குறையக் கீழ் நிலத்தே உதிர்ந்து பரந்தமை பால்வரை தெய்வத்தின் விளை யாட்டால் தலைவன் தனது பெருமை சிறிது குறைய எளியனாய் வந்த செயலாகவும், காந்தள் தான் வீழ்ந்த இடத்தைப் பொலி வுடைய தாக்கி மணங்கமழ்தல் அரியனாகிய தலைவன் எளியனாகி வந்து தலைவியை மணந்துகொண்டு அவள் குடிக்கு அழகு தரும் சிறப்பாகவும் செவிலி உய்த்து உணர்ந்து கொள்ளுமாறு தோழி உள்ளுறை அமைத்துக் கூறிய திறம் அவளது நுண்ணிய அறிவின் மாட்சியினைத் தெளிவுபடுத்துகின்றது.

இந்த உள்ளுறைகளால் தலைவனது உயர்குடிப் பிறப்பும் அவளால் தலையளிக்கப்பெற்ற தலைவியின் வேட்கையும் எத் துணையும் சிறந்தானாகிய அவனை இங்ஙனம் தலைவிக்கு

எளியனாக்கியது பால்வரை தெய்வமே என்னும் உண்மையும், இவன் தலைவியை எதிர்ப்பட்டமை அவள் குடிக்கு அழகும் ஆக்கமுமாகும் என்பதாம் ஆகிய எண்ணங்களைத் தோழி செவிலிக்குக் குறிப்பாக அறிவுறுத்தும் முறை பெரிதும் பாராட்டு வதற்குரியது. இங்ஙனம் நாகரிக முறையில் புலப்படுத்தும் முறை தமிழ்ப் பொருளிலக்கணத்தின் சிறப்பாக அமைந்துள்ளது. மேலும், இப்பகுதியில் தலைனது நாட்டைச் சிறப்பித்துக் கூறினமையாலும் இவ்வளவு உயர்ச்சியையுடைய தலைவன் தன் பெருமையை மறந்து தலைவியுடன் கூடியமை கூறினமையாலும் முறையே அறத்தொடு நிற்கும் திறங்களுள் 'ஏத்தலும்' 'எளித்தலும்' முறையே அமைந்து திகழ்வதையும் உணர்ந்து மகிழலாம்.

**உள்ளுறையின் சிறப்பு :** இதுகாறும் சங்க இலக்கியங்களில் பயின்றுவரும் சில உள்ளுறையுவமங்களை நுகர்ந்து திளைத்தோம். உள்ளுறை உவமத்தின்மூலம் கவிஞர்கள் ஒரே சமயத்தில் இரண்டு நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளுகின்றனர். முதன் முதலாகத் தாம் எடுத்துக் கொண்ட திணையின் முதல், கருப் பொருள்களை வருணிக்கின்றனர். வெளித் தோற்றத்திற்கு அஃது அந்த நில வருணனை அல்லது ஒரு நிகழ்ச்சி கூறப்பெறுவது போல் தோன்றும். ஆயின் ஆழ்ந்து நோக்குழி, அஃது உணர்த்துவது தலைவனின் களவொழுக்கம், தலைவியின் துயரம், தலைவனை வரைவு கடாவுதல், உடன் போக்கு நயத்தல், இவற்றுள் யாதாவ தொன்றினைப் புலப்படுத்துவதாக அமையும். தலைவனின் இனிய பண்பினையோ அல்லது கொடிய இயல்பினையோ கூறு வதாகவும் இருக்கலாம். இவற்றையெல்லாம் வெளிப்படையாகத் தோழியோ அன்றித் தலைவியோ சொல்லுவது நாகரிகப் பண் பினுக்கு ஏற்றதன்று; அகப்பொருளில் அங்ஙனம் கூறுவது முறையு மன்று. புறப்பொருளில் கூட பல்வேறு இங்கித முறைகளைக் கையாளவேண்டும் என்பதை அறிந்த நமக்கு அகப்பொருளில் இந்நுட்பம் தேவைப்படும் என்பது புலனாகாமற் போகாது.

பொருளிலக்கணத்திற்கு ஏனைய உவமம் உரியதாயினும், இவ்வுள்ளுறை உவமமே மிகவும் சிறந்தது என்பது தொல்காப்பிய னாரின் கருத்து. பேராசிரியரும் "மற்றிவையெல்லாம் அகப் பொருட்கே உரியவாக விதந்தோதிய தென்னை, புறப்பொருட்கு வாராதன போலவெனின்: ஆண்டு வருதல் அரிதாகலின் இவ்வாறு அகத்திற்கே கூறினான் என்பது" என்று எழுதினார்.[34] இதுபற்றியே

34. உவம - 31 இன் உரை காண்க. (பேரா)

இவ்வுள்ளுறை உவமத்தைத் தொல்காப்பியரும் அகத்திணையில் வைத்து ஓதுவாராயினர் என்பதனையும் நாம் அறிதல் வேண்டும்.[35]

உவமைதான் எல்லா அணிகளிலும் எளிமையானது; ஏனைய அணிகட்குத் தாய் போன்றது. இத்தகை உவமையினின்றும் தோன்றிய உள்ளுறை உவமம் பட்டை தீட்டப்பெற்ற வயிரம் போன்றது; கவிஞனின் கூர்த்த மதியினை ஒளிவிட்டுக் காட்டி நிற்கும் பான்மையது. கவிஞர்கள் தாம் கூற வேண்டிய ஒன்றிற்கு விளக்கம் தர வேண்டியும், அப்பொருளினிடத்து உள்ளே அமைந்து கிடக்கும் ஓர் இயல்பையோ பல இயல்புகளையோ எடுத்துக்காட்ட வேண்டியும் உவமையைக் கையாளுகின்றனர். இவ்வாறு சாதாரணக் கவிஞர்களிடம் சிறந்தக் கவிதைக் கருவியாக இலங்கும் உவமை கூறும் இயல்பு தமிழ்க் கவிஞர்களிடம்—சிறப்பாகச் சங்கக் கவிஞர்களிடம்—சிறந்த முறையில் பண்பட்டுக் கிடந்தது. அந்த இயல்பை அவர்கள் சிறந்த முறையில் வார்த்து நயம்படக் கூறும் உள்ளுறை உவமைகளை அமைத்துப் பாடல்களை ஆக்கினர். உள்ளுறை அமைந்த பாடல்கள் சங்கத் தமிழின் இணையற்ற மணிகள். அவை பயில்வார் நாவில் தேன் சுரக்கச் செய்து அவர் கட்குப் புலமை வளத்தையும் நல்கிக் கன்னித் தமிழின் எழிலைப் பாரெங்கும் காட்டும் ஆற்றல் பெற்றுத் திகழ்கின்றன. இத்தகைய சங்கத் தமிழ்ப் பாடல்களைச் சுவையறிந்து படித்துப் பயன் பெறுவது இன்றைய தமிழ் மக்களின் கடமை.

---

35. அகத்திணை - (49-51) (இளம்)

# இறைச்சிப் பொருள்

இன்பமே நுதலி வருகின்ற அகப் பொருட் பனுவல்கள் பெரிதும் குறிப்புப்பொருள் மிக்கனவாகவே இருத்தல் வேண்டும் என்பது பண்டையோர் கொண்ட கொள்கையாகும். காதல் வாழ்க்கையே குறிப்பினால் ஆக்கப்பெறும் இயல்புடையது என் பதை நாம் அறிவோம். காதலர் ஒருவரோடொருவர் சொல்லா டுங்கால் அம்மொழிகள் தமது வெளிப்படைப் பொருளால் அவ் விருவரும் பகையுடையோர்போன்று காட்டிநிற்க, அவற்றினின்றும் குறிப்பாகப் புலனாகும் பொருளோ அவர்தம் ஆழ்ந்த காதலை உணர்த்துவனவாக இருக்கும். இவ்வாறு பயின்றுவரும் மொழிகள் உரைநடையில் அமையினும் அவை பயில்வோர்க்குப் பேரின்பம் தருவனவாக இருக்கும் ஆயின், இவை உணருந்தோறும் இன்பம் நல்கும் கவிதை மொழியில் அமைந்து விட்டாலோ சொல்ல வேண் டியதில்லை; வானமிழ்தம் உண்டலால் பெறும் இன்பத்தினும் நனி சிறந்து திகழும். இக் குறிப்புப் பொருளை அகப்பொருள் நூல்களில் நிரம்பப் பொதியும் பொருட்டே அவற்றிற்கெனச் சிறப் பாகச் சில விதிகளையும் வகுத்தனர் நம் பண்டைத் தமிழ்ச் சான்றோர். இவை உள்ளுறை உவமும் இறைச்சிப் பொருளு மாகும். கவிதை இன்பம் துய்ப்பார்க்கு உள்ளுறை உவமம் சிறந்த விருந்தாக இருக்கும் என்பதையும் அவை சங்க அகப்பாடல்களில் அதிகமாகப் பயின்று வரும் என்பதனையும் முன்இயலில் விளக்கி னோம்.

உள்ளுறை உவமத்தை விட நுட்பமாக உணர்த்தப்பெறுவது இறைச்சிப் பொருள்; இதுவும் சங்க அகப்பாடல்களில் பயின்று வரு கின்றது. இறைச்சி என்பது என்ன? கவிஞர்கள் தாம் கூறும் சொற்கட்கு அடைமொழியாகக் கூறப்பெறும் சொற்கள் வறிய அடைமொழி மாத்திரையாகவே நில்லாமல், தமது ஆற்றலாலேயே பிறிதொரு பொருளைக் குறிப்பாகப் புலப்படுத்துமாறு சொல்

திறம் தேர்ந்து அமைத்துக் கொள்ளப்பெறும் ஒரு சிறந்த முறையாகும். உள்ளுறையும் இறைச்சியும் அகப்பொருள் நுதலும் தமிழ் இலக்கியங்கட்கே இயன்றதொரு புல்னெறி வழக்கமாகும் என்பது ஈண்டு நினைவு கொள்ளற்பாலது. புலவன் தான் சொல்லுகின்ற உவமத்தோடு **ஒத்துக் கூறக் கருதிய பொருள் வந்து முடியுமாறு** அமைந்திருப்பது உள்ளுறை உவமம். புலவன் தான் கூறிய **செய்யுளின் பொருளுக்குப் புறத்தே தோன்றுவது** இறைச்சி. இரண்டுக்கு முள்ள வேற்றுமை இதுவே. ஆசிரியர் தொல்காப்பியனார் இறைச்சியை 'உடனுறை' என்றும் குறிப்பர். இலக்கணக் கடலின் நிலை கண்டு உயர்ந்த பன்மொழிப் புலவர் உயர்திரு **வே. வேங்கடராஜுலு ரெட்டியார்** அவர்கள் " 'இறு' தங்கு" என்பதன் அடியிற் பிறந்த பெயர் இறைச்சி என்று கூறியுள்ளார்கள்[1]. எனவே, 'இறைச்சி' என்பதும் 'உடனுறை' என்பதும் ஒரு பொருளைக் குறிக்கும் சொற்கள் என்பதனை நாம் அறிதல் வேண்டும்.

**உள்ளுறை வகை :** ஆசிரியர் தொல்காப்பியனார் பிறிதொரு பொருள் தோன்ற நிற்குமாறு உள்ளுறையாகக் கூறுவதை ஐந்து வகையாகப் பிரித்துரைப்பர்.

> உடனுறை உவமம் சுட்டுநகைச் சிறப்பெனக்
> கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே.[2]

என்பது அவர் கூறும் விதி. இவற்றுள் 'உடனுறை' என்று கூறப்பெறும் இறைச்சியும் உள்ளுறை உவமும் இலக்கியங்களில் பயின்று வருவன; வழக்கில் உள்ளன. ஏனைய சுட்டு, நகை, சிறப்பு என்பன அதிகம் பயின்று வருதலில்லை; வழக்கிலும் இல்லை. எனவே, உள்ளுறை உவமம் இறைச்சிப் பொருள் ஆகிய இரண்டிற்கு மட்டிலுந்தான் தொல்காப்பியர் விதி கூறி விளக்கியுள்ளார். ஏனைய மூன்றன் பெயர்களைக் குறிப்பிட்டனரே யன்றி அவற்றின் இலக்கணத்தை வரையறுத்துக் கூறினாரிலர். ஆனால், உரையாசிரியர்கள் இவற்றைச் சிறிது விளக்கியுள்ளனர்.

**இளம்பூரணரின் விளக்கம்:** உடனுறையாவது, உடனுறைவதொன்றினை சொல்ல, அதனாலே பிறிதொரு பொருள் விளங்குவது. அது கருப் பொருள்பற்றி வரும். உவமம் என்பது, உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது.

1. கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழாமலர் ('இறைச்சிப் பொருள்' என்ற கட்டுரையில்)
2. பொருளியல் - 46

சுட்டு என்பது, ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதொரு பொருட் படுதல். நகையாவது, நகையினாற் பிறிதொரு பொருள் உணர நிற்றல். சிறப்பு என்பது, இதற்குச் சிறந்தது இஃது எனக் கூறுவத னானே பிறிதொரு பொருள் கூறக் கிடப்பது. இங்ஙனம் விளக்கிய உரையாசிரியர் ஒவ்வொன்றுக்கும் எடுத்துக்காட்டுகளையும் தந்துள்ளார். இவற்றைப் பயின்று உளங்கொள்க.[3]

**நச்சினார்க்கினியரின் விளக்கம்:** உடனுறையாவது, நான்கு நிலத்தும் உளவாய் அந் நிலத்துடன் உறையும் கருப்பொருளாற் பிறிதொன்று பயப்ப மறைத்துக் கூறும் இறைச்சி. உவமமாவது' அக் கருவாற் கொள்ளும் உள்ளுறை உவமமும் ஏனையுவமமும். நகையும் சிறப்பும் பற்றாது ஒன்று நினைந்து ஒன்று சொல்வனவும், அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டி வருவனவும் சுட்டெனப் படும். நகையாவது, நகையாடி ஒன்று நினைந்து ஒன்று கூறுதல். ஏனையுவமம் நின்று, உள்ளுறை உவமத்தைத் தத்தம் கருப் பொருட்குச் சிறப்புக் கொடுத்து நிற்பது, சிறப்பு என்னும் உள்ளுறையாகும். இவை ஐந்தும் ஒன்றனை உள்ளுறுத்தி அதனை வெளியிடாமற் கூறுதலின் 'உள்ளுறை' எனப் பெற்றன என்று விளக்குவர் நச்சினார்க் கினியர்.

**இறைச்சி-விளக்கம்:** இனி, இறைச்சிப் பொருள் இன்ன தென்பதை ஓர் எடுத்துக்காட்டு கொண்டு விளக்குவோம்.

அன்னாய் வாழிவேண் டன்னை என்னை
தானு மலைந்தான் எமக்குத் தழையாயின
பொன்வீ மணியரும் பினவே
என்ன மரங்கொல்? அவர் சார லவ்வே.[4]

[வேண்டு - விரும்பிக் கேட்பாய்; என்னை - எம் பெருமான்; மலைந்தான் - அணிந்து கொண்டனன்; தழை - ஆடை; பொன் வீ - பொன் போன்ற மலர்; அவர் சாரல - அவர் வாழும் சாரலின்கண் உள்ளன]

தலைவி ஒருத்தி தலைவன் ஒருவனுடன் களவு முறையில் உறவு கொண்டுள்ளாள். இன்னும் நாடறியத் திருமணம் நடை பெற வில்லை. இந்த உறவினைத் தலைவியின் தமர் அறியார். ஆகவே, அவர்கள் வேறொருவனுக்கு மணம் பேசுகின்றனர். தலைவி

3. ஷை - 46 இன் உரை (இளம்)
4. ஐங்குறு:- 201

தன் கற்புக்கு அழிவு நேரும் எனக் கருதித் தான் தலைவனுக்குக் கற்புக் கடன் பூண்டிருக்கும் மறைச் செய்தியைச் செவிலியும் குறிப்பான் உணரும்பொருட்டு அவள் கேட்குமாற்றால் தோழியை நோக்கிக் கூறுகின்றாள்.

இச் செய்யுளின் வெளிப்படைப் பொருள் இது: "தோழீ, அந்த நம்பியின் மலைச் சாரலிலுள்ள மரங்கள் என்ன மரங்களாக இருக்குமோ? யான் அவற்றை இன்னவை யென அறியக் கூடவில்லை. அந் நம்பி அவற்றின் தளிரையும் மலரையும் தானும் சூடிக் கொண்டுள்ளான். நமக்கும் அவை சிறந்த தழையாடையாகி அழகு தருவதைப் பார்த்தனையா? இம் மலர்களை நோக்குக. பொன்னாற் செய்யப்பெற்றவைபோல் தோன்றுகின்றன; இவற்றின் அரும்புகளும் மணிபோல் மின்னுகின்றன. இப்படிப் பொன் மலரும் மணியரும்பும் உடைய மரம் என்ன மரமோ? இவை எனக்குப் பெரிதும் வியப்பூட்டுகின்றன'' என்பது.

தலைவி ஈண்டுச் செவிலிக்கு உணர்த்த வேண்டிய பொருள் இது: ''அன்னையே, யான் ஒரு நம்பியைக் காதலித்து விட்டேன். ஆதலின் என்னை மணக்கக் கருதிப் பெண் வேண்டிவரும் நொதுமலர்க்கு எந்தை மகட்கொடை நேராமல் தடுத்து விடுக. நான் காதலிக்கும் அத்தலைவனுக்கே என்னை மணம் செய்விக்க வேண்டுவனவும் இன்னே செய்வாயாக'' என்பது. இப் பொருள் அவள் கூற வேண்டிய பொருளாகவும் அவள் கூறிய மொழிகளோ வெளிப்படையில் இப் பொருட்குத் தொடர்பில்லாதது போலவும் தோன்றுதல் காண்க. 'இறைச்சி தானே பொருள் புறத்ததுவே'[5] என்ற தொல்காப்பிய விதிக்கு ஏற்றதாக இருப்பதையும் அறிக.

தலைவி கூறிய மொழிகள் அவள் கூறக் கருதிய பொருளை எங்ஙனம் உணர்த்துகின்றன என்பதைக் காண்போம். தலைவி பெரிதும் வியத்தற்குக் காரணமான அந்த மரந்தான் என்ன மரம் என்று அறிந்து கொள்வதற்கு அவள் மொழியைக் கேட்கும் செவிலிக்கு விருப்பம் தோன்றுதல் இயல்பன்றோ? இயல்பாகவே தலைவியின் கூற்று செவிலியின் உள்ளத்தில் ஆராய்ச்சி அறிவினைத் தூண்டி விடுதல் உணரப்படும். ஆராய்ச்சி அறிவு தலைப்பட்டவள் அத்தழை யாடையையும் அதன்கண் அழகுற்றுத் திகழும் மலரையும் அரும்பையும் நோக்கி அதுதானும் வேங்கைத் தழையும் மலரும் அரும்புமே ஆக இருப்பதைக் கண்ணுறுகின்றாள்

5. பொருளியல் - 33 (இளம்)

பின்னர்த் தலைவியின் கூற்றினை மேலும் ஆராயும்பொழுது 'என்னை'[6] என்றதனால் இவள் ஒரு தலைவனுக்குக் கற்புக் கடம் பூண்டனள் என்பதனையும் அறிந்து கொள்ளுகின்றாள். மேலும் 'எமக்குத் தழையாயின' என்னும் தொடரால் அத் தலைவன் இவட்குத் தழையைக் கையுறையாகக் கொடுக்க இவள் அதனை ஆர்வத்துடன் ஏற்று அணிந்து கொண்டனள் என்பதனையும் தெரிந்து கொள்ளுகின்றாள். இங்ஙனம் தலைவி தோழிக்கு அறத் தொடு நிற்குங்கால் செவிலியிடம் சூழ்ச்சி பிறந்து அவள் தோழியை வினவுவாள். வினவவே, தோழி பின்னும் விளக்கமாக அதனைச் செவிலிக்கு உணர்த்துவாள். இங்ஙனம் தலைவியின் பேச்சால் உணரப்படும் குறிப்புப்பொருள் இறைச்சியின்பாற் படும்.

இன்னும் இப்பாடலை நுணுகி ஆராயுங்கால் 'அவர் சாரல வாகிய மரங்கள் பொன்வீயும் மணியரும்பும் உடையன' என்புழித் தலைவனது திருவுடைமை சிறப்பிக்கப்பெறுவதால் இஃது அறத் தொடு நிலைவகையில் 'ஏத்தலும்', 'எமக்குத் தழையாயின' என்புழி, அவன் அன்போடு கையுறை நல்கினான் என அவன் அன் புடைமை சிறப்பிக்கப் பெறுதலான் 'வேட்கை யுரைத்தலும்', கையுறை தந்தான் எனவே 'அளித்தலும்', 'என்னை' என்ற தனால் தம்முள் தாம் தலைமை பெற்றமை தோன்றலின் 'தலைப் பாடும்' ஆகிய பிற அறத்தொடு நிலைவகைகளும்[7] தோன் றுதல் கண்டு மகிழலாம்

இனி, எட்டுத்தொகை நூல்களிலுள்ள சில இறைச்சிப் பொருள்களைக் கண்டு அவற்றில் ஆழங்கால் படுவோம்.

**ஐங்குறு நூற்றில்:** சில இறைச்சிப் பொருள்களைக் கண்டு நுகர்வோம்.

(1) களவில் ஒழுகிய நெய்தல் நிலத்தலைவன் பொருளீட்டும் பொருட்டுத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லுகின்றான். அங்ஙனம் சென்றவன் பொருளீட்டிக் கொண்டு திரும்புகின்றான்.

---

6. தோழியைத் தலைவி 'அன்னை' என்றலும், தலைவியைத் தோழி 'அன்னை' என்றலும், இருவரும் தலைவனை 'என்னை' என்றலும் புலனெறி வழக்கிற்குப் பொருந்தி வரும் ஒரு பழைய நெறியாகும் (தொல் - பொருள். பொருளியல் நூற்பா 50 இளம். காண்க.)

7. அறத்தொடு நிலை ஏழுவகைப் படும் என்பது 'எளித்தல்' எனத் தொடங்கும் பொருளியல் நூற்பா 12 ஆல் அறியப் பெறும்.

வீடு நோக்கித் திரும்பி வருகின்றவன் தன் நெஞ்சொடு கிளந்து மகிழ்கின்றான். தலைவன் கூற்றாக வரும் பாடல்:

மள்ள ரன்ன தடங்கோட் டெருமை
மகளி ரன்ன துணையொடு வதியும்
நிழல்முதிர் இலஞ்சிப் பழனத் ததுவே
கழனித் தாமரை மலரும்
கவின்பெறு சுடர்நுதல் தந்தை ஊரே.[8]

[மள்ளர்-மறவர்; தடம்கோடு-பெரிய கொம்பு; துணை-காதல் துணை; நிழல்முதிர்-நல்நிழல் மிக்க; இலஞ்சி-நீரோடை; பழனம்-வயல்; கவின்-அழகு; நுதல்-நெற்றி]

இந்த மருதத் திணைப் பாடலின் வெளிப்படைப் பொருள் இது "மறவரையொத்த பெரிய கொம்பினையுடைய எருமைக் கடாக்கள் தத்தம் காதல் துணையாகிய பெண் எருமைகளுடன் இனிதாக உறைதற்கிடனாகவும், ஞாயிற்றின் வரவு கண்டு தாமரை மலர்கின்ற வயல்களையுடையதாகவும் உள்ள நன்னிழல் மிக்க நீரோடையையுடைய பழனங்களின் நடுவில் இருப்பதுவே அழகுடன் ஒளி பொருந்திய நெற்றியையுடைய என் காதலியின் தந்தையினுடைய ஊராகும்" என்பது.

தலைவனின் கருத்தில் இருக்கும் பொருள் இது: தலைவியை வரைந்து கொண்ட பிறகு அவளுடன் தான் இன்ப வாழ்வு வாழலாம் என்பதுவும், தன் வரவு கண்டு தலைவியும் பிறரும் கண்டு மகிழ்வர் என்பதுவுமாகும். இக்கருத்து தலைவனின் கூற்றால் எங்ஙனம் பெறப்படுகிறது? 'எருமை துணையொடுவதியும்' என்பதால் தான் இனித் தலைவியுடன் மகிழ்வுடன் வதியலாம் என்ற தலைவனின் நினைவைக் குறிப்பிடுகின்றது. 'தாமரை மலரும்' என்றது பொருள்வயிற் பிரிந்த தன்னுடைய வரவால் தலைவியும் அவளுடன் ஒருமித்த கருத்துடைய பிறரும் முகமலர்ந்து மகிழ்வர் என்ற அவன் நினைவையும் உணர்த்துகின்றது. தலைவன் கூற்றினின்றும் வேறொரு பொருள் உணர்த்தப்படுவதால் இஃது இறைச்சியாயிற்று.

(2) பாலது ஆணையால் தலைவனும் தலைவியும் ஒரு பொழிலகத்தில் சந்திக்கின்றனர். இயற்கைப் புணர்ச்சியும் நடைபெறுகின்றது. தலைவி ஆயத்தோடு செல்லுவதைக் காணும் தலைவன் சொல்லுவதாக அமைந்த செய்யுள் இது.

8. ஐங்குறு-94.

திரையிமிழ் இன்னிசை அளைஇ அயலது
முழவிமிழ் இன்னிசை மறுகுதொ றிசைக்கும்
தொண்டி அன்ன பணைத்தோள்
ஒண்டொடி அரிவைஎன் நெஞ்சுகொண்டோளே.[9]

[திரை-அலை: இமிழ் ஒலிக்கின்ற; அளைஇ-கலந்து; முழவு-மத்தளம்; பணைதோள்-மூங்கில் போன்ற தோள்கள்; தொடி-வளையல்; அரிவை-நங்கை.]

இந்த நெய்தல் திணைப்பாடலில் வெளிப்படையாகப் புலனாகும் பொருள் இது: ''என்னுடைய உள்ளம் முழுவதையும் கவர்ந்து கொண்ட இந்நங்கை கடல் அலைகள் எழுப்பும் ஒலியுடன் மத்தளத்தின் இனிய ஓசை முழங்கும் தெருக்களையுடைய 'தொண்டி' என்றும் பட்டினத்தைப்போன்று கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிகின்ற ஐவகை இன்பங்களையும் தன்பால் கொண்ட மூங்கிலையொத்த தோள்களையும் ஒள்ளிய வளையல் களையும் உடைய நங்கையாவள்'' என்பது.

தலைவனின் கருத்தில் அடிப்படையாக உறையும் பொருள் இது: ''என்னுடன் புணர்ந்த நங்கை இயற்கையழகும் செயற்கை அழகும் நிறைந்த நங்கையாவள்'' என்பது. இக்கருத்துள்ள பொருள் தலைவனின் கூற்றால் பெறப்படுகின்ற திறத்தைக் காண்போம். 'திரை இமிழ் இன்னிசை' என்பதனால் இயற்கை யழகும், 'முழவு இமிழ் இன்னிசை' என்பதனால் செயற்கையழகும் பெறப்படுகின்றன. இயற்கையழகு இல்லாத வழி செயற்கையழகு சிறவாமையால் அது முற்படக்கூறப்பெற்றது. 'மறுகுதொறிசைக் கும்' என்றதால் தலைவியின் உறுப்பெல்லாம் பேரின்பம் நல்கும் இயல்புடையனவாதல் அறியப்பெறும். இவ்வாறு கொள்ளும் பொருளே இறைச்சியாகும்.

இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கே.[10]

என்பது தொல்காப்பியம். இறைச்சி-சொல்லப்பெற்ற பொருளின் புறத்தே தங்குவது என்னும் பொருளுடையது. இறை-தங்குதல். இதனை ஆராய்ந்து உணர்பவர்கள் மட்டுமே அறிதல் கூடும். இதனை வடநூலார் 'தொனி' என்பர். ஈண்டு மாந்தர் நுகர்வதற் குரிய ஐந்து வகை இன்பங்களையும் தொண்டி தன்பால் கொண்

9. ஷை-171
10. பொருளியல்-34 (இளம்.)

டிருத்தல் போன்று இவளும் அவ்வின்பங்கள் அனைத்தையும் தன் பாலுடையளாயினள் என்று கருதுவோன் 'தொண்டியன்ன அரிவை' என்றான். தொண்டியன்ன அரிவை, பணைத்தோள் அரிவை, ஒண்டொடி அரிவை எனத் தனித்தனி இயைத்துத் தலைவன் கருதும் இறைச்சியின் நுட்பத்தை அறிந்து மகிழ்க.

(3) தலைவியொருத்தி தலைவன் ஒருவனுடன் களவு முறையில் கற்புக் கடன் பூண்டுவிடுகின்றாள். பெற்றோர் இதனை அறிந்திலர். நொதுமலர் அவளை மணம் பேச வருவதை அவள் அறிகின்றாள்; மிகவும் வருந்துகின்றாள். இதனை அறிந்த செவிலி தோழியை நோக்கி, 'இவள் இவ்வாறு வருந்துவதற்குக் காரணம் என்ன?' என்று வினவுகின்றாள். தோழி அறத்தொடு நிற்றல் முறையில் இதனைச் செவிலிக்கு உணர்த்தும் முறையில் அமைந்த பாடல் இது.

அன்னாய் வாழிவேண் டன்னையென் தோழி
நனிநாண் உடையள் நின்னும் அஞ்சும்
ஒலிவெள் அருவி ஓங்குமலை நாடன்
மலர்ந்த மார்பின் பாயல்
துஞ்சிய வெய்யள் நோகோ யானே.[11]

[தோழி - (இங்கு) தலைவி; நனி - மிகவும்; நின்னும் - உனக்கும்; அஞ்சும் - அஞ்சுபவள்; ஒலி - ஆரவாரிக்கின்ற; ஓங்கு - ஓங்கி நிற்கும்; துஞ்சிய - இன்துயில் கொள்ள; நோகு - நோகின்றேன்]

இந்தக் குறிஞ்சித் திணைப் பாடலில் வெளிப்படையாகத் தெரியும் பொருள் இது: ''அன்னையே, நான் கூறுவதை விரும்பிக் கேட்பாயாக. நின் அருமை மகள் மிகவும் நாணம் உடையவள்; அவள் நினக்கு மிகவும் அஞ்சுபவள் என்பதையும் நீ நன்கு அறிவாய். இவ்வாறிருந்தும் மலைநாட்டுத் தலைவன் ஒருவனின் விரிந்த மார்பில் இன்துயில் கோடற்குப் பெரிதும் விருப்பமுடையவளாய் மெலிந்து போகின்றாள். யானும் இவள் நிலைபற்றி மிகவும் வருந்துகின்றேன்'' என்பது.

தோழியின் கூற்றில் அடிப்படையாகவே மற்றொரு கருத்து உள்ளது. அது இது: ''மலைநாடன் ஒருவனுக்கு இவள் களவு

11. ஐங்குறு - 205

முறையில் கற்புக்கடன் பூண்டு விட்டாள். இது பாலது ஆணை யால் நேரிட்டது'' என்பது. இக்கருத்து தோழியின் கூற்றால் எங்ஙனம் பெறப்படுகின்றது என்பதைக் காண்போம். இதன்கண் 'ஒலி வெள்ளருவி ஓங்கு மலைநாடன்' என்பதால் தலைவன் பெரும் புகழும் பெருந்திருவும் உடையான் என்பதும், அவன் ஏசாச் சிறப்பின் இசை விளங்கு பெருங்குடித் தோன்றல் என்பதும் உணர்த்தப்பெறுகின்றன. 'ஒளி வெள்ளருவி' என்றது மண் தேய்ந்த பெரும்புகழையும், 'ஓங்குமலைநாடன்' என்றது உயர் குடிப் பிறப்பையும் திருவாளன் என்பதையும் உணர்த்துகின்றன. 'யான் நோகு' என்பதால் பாலது ஆணையால் நிகழ்ந்தது என்பது போதருகின்றது. இதில் தோழியின் கூற்று பிறிதொரு பொருளை உணர்த்தியதால் இறைச்சியாயிற்று. மேலும், இது அறத்தொடு நிலை வகையில் 'உண்மை செப்பல்', 'வேட்கை உரைத்தல்', 'ஏத்தல்' என்ற மூன்று வகைகளையும் மேற்கொண்டிருந்தல் நுண்ணிதின் அறிந்து மகிழத் தக்கது.

(4) வினைமேற் சென்ற தலைவன் ஒருவன் மீண்டு வருகின் றான். வந்தவன் தான் விரைந்து மீள்வதற்குக் காரணமாயிருந்த தலைவியின் நற்குணங்களைப் பாராட்டிக் கூறுகின்றான். தலை வனின் கூற்றாக அமைந்த பாடல்:

உள்ளுதற் கினிய மன்ற செல்வர்
யானை பிணித்த பொன்புனை கயிற்றின்
ஒள்ளெரி மேய்ந்த சுரத்திடை
உள்ளம் வாங்கத் தந்தநின் குணனே.[12]

[உள்ளுதல் - நினைத்தல்; பொன்புனை கயிறு - பொன் னிறத்தால் அழகு செய்யப்பெற்ற கயிறு; சுரம் - பாலை நிலம்; உள்ளம் - மனம்; வாங்க - கவர்ந்து கொள்ள]

இந்தப் பாலைத்திணைப் பாடலில் வெளிப்படையாக அறிவிக் கப்படும் பொருள்: "அரும் பெறற் பாவாய்! ஆருயிர் மருந்தே! யான் வெம்மை மிக்க பாலைப் பரப்பிடையே வருங்கால் பொன்னால் செய்யப்பெற்ற கயிறு போன்ற நின் பெண்மை நலங்கள் என்னை கவர்ந்திழுந்தலால் விரைந்து வர முடிந்தது'' என்பது

தலைவனின் கூற்றில் அவன் உணர்த்தக் கருதும் பொருள்: "செல்வர் அடங்காத யானையைத் தம் திரு மதுகையால் கட்டித்

12. ஷை - 356

தம் வயத்ததாக்கிக் கோடல்போன்று, நீயும் நின்னலத்தின் மதுகையால் என்நெஞ்சினைக் கட்டி முற்றும் நின்னுடையதாக்கிக் கொண்டனை'' என்பது. தலைவன் கூற்றில் பிறிதொரு பொருள் தோன்றியதால் இஃது இறைச்சியானவாறு காண்க. இக்கருத்து பெறப்படும் முறையினையும் விளக்குவோம்: 'செல்வர்'-உலகி லுள்ள பொருட்செல்வம் எல்லாம் இயல்பாகவே உடையர் ஆதல் போன்று நீயும் பெண்டிர்க்குரிய நலம் எல்லாம் இயல்பாக உடையை என்பதும், 'பொன்புனை கயிறு' காட்சிக்கினியவாதல் போன்று நின் குணமாகிய என் நெஞ்சு பிணிக்கும் கயிறு நினைத்தற்கரியது என்பதும், 'ஒள்ளெரி மேய்ந்த சுரத்திடை நின் குணன் உள்ள மன்ற' என்றதனால் வெப்பம் மிக்க சுரத்தின் கொடு மைக்கு நின்குணம் மருந்தாகி அதனை மாற்றி விட்டது என்பதும் நுணுகி அறிந்து மகிழத் தக்கது. பாலையின் வெப்பம் நெஞ்சிற்குப் புலனாகாது அவள் பண்பே புலனாகிக் குளிர்வித்தது என்று விதந்து கூறிய தலைவனின் அருமைப்பாடு உணர்ந்து அநுபவிக்கத் தக்கது.

(5) அண்மையில் திருமணம் புரிந்து கொண்ட தலைவன் ஒருவன் யாதோ ஒரு காரணத்தால் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லுகின்றான். போனவன் இன்ன பருவத்தே வருகுவன் என்று சொல்லியும் போகின்றான். அப்பருவம் வந்தும் அவன் வரவில்லை தலைவி பெரிதும் வருந்துகின்றாள். தோழி அவளைத் தேற்றி. உரைப்பதாக வரும் பாடல் இது:

கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென
இவர்கொடிப் பீரம் இரும்புதல் மலரும்
அற்சிரம் மறக்குநர் அல்லர்நின்
நற்றோள் மருவரற் குலமரு வோரே[13]

[கண் என - கண்ணைப் போன்று; கருவிளை - கருவிளங் கொடிகள்; இவர் - படர்ந்துள்ள; பீரம் - பீர்க்கு; இரும் புதல் - பெரிய புதர்; அற்சிரம் - பனிபடு பருவம்; மரு வரற்கு - தழுவதற்கு; உலமருவோர் - மனம் சுழன்று திரிபவர்]

இந்தப் பாலைத் திணைப் பாடலில் தோழிவெளிப்படையாகக் கூறும் பொருள் இது: "நின் தோளை அணைவதற்குச் சிறிது இடையூறு நேர்ந்தவிடத்தும் பெரிதும் மனம் சுழன்று திரிபவர்

13. ஐங் - 464

நின் காதலர் என்பது நாம் கண்கூடாகக் கண்ட உண்மையன்றோ? இத்தகைய பேரன்புடையோர் கருவிளை நின்கண்போல் மலரவும், பீர்க்கு நின்மேனியையொத்துப் பொன்போல் மலரவும் கண்டு காதலர் பிரிந்துறைதற்கியலாத இந்தப் பனிபடு பருவத்தில் மறந்து றைவாரல்லர்; இன்னே வருவர்'' என்பது.

தோழி இதில் உணர்த்தக் கருதும் பொருள்: ''காதலர் உறையும் நாட்டிலும் இப் பருவத்தில் கருவிளை நின் கண்ணைப் போன்று மலர்ந்து நின்னை இடையறாது நினைப்பிக்கும். நின் பசலையைப் பீர்க்கம் பூக்கள் நினைப்பிக்கும். ஆதலின் அவர் நின்னை நொடிப் பொழுதும் மறத்தல் இயலாது.'' என்பது. தோழியின் கூற்றில் பிறிதொரு பொருள் தோன்றினமையால் இறைச்சிப் பொருள் ஆயினமை காண்க. தோழி கூற்றில் இப் பொருள் பெறப்படும் முறையையும் காண்போம். 'கண்ணெனக் கருவிளை மலர' என்றதால், கருவிளை மலர்நின் கண்ணை நினைப் பித்து நின்னை மருவுவதற்கு விரும்புவர் என்பதும், 'இவர் கொடிப் பீரம் இரும்புதல் மலரும்' என்றதால், பீர்க்கம் பூ நின் பசலையை நினைப்பித்து நினக்குப் பரிவர் என்பதும் பெறப்படுதலை அறிக. ஆதலால் 'இன்னே வருகுவர், வருந்தற்க' என்று குறிப்பெச்சமாக நின்று பாட்டின் சுவையை மிகுவிக்கின்றதையும் கண்டு மகிழ்க.

**குறுந்தொகையில்** : சில இறைச்சி பொருள்களைக் காண் போம்.

(1) களவு முறையில் ஒழுகும் தலைவன் இரவுக் குறியை நாடி வருகின்றான். இரவுக் குறியில் அவனுக்கு நேர இருக்கும் தீங்குகளை எடுத்துக் காட்டி இரவில் வருவதைத் தவிர்க்குமாறு வேண்டிக் குறி மறுக்கின்றாள் தோழி.

கருங்கட் டாக்கலை பெரும்பிறிது உற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதல் சேர்த்தி
ஒய்குவரை அடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
சாரல் நாட...[14]

[கருங்கண் - கரிய கண்; தா கலை - தாவுதலையுடைய ஆண் குரங்கு; பெரும் பிறிது - இறந்து பாடு; உய்யா - போக்க மாட்டாத; மந்தி - பெண் குரங்கு; பறழ் - குட்டி; சேர்த்தி - ஒப்பித்து; செகுக்கும் - மாய்த்துக் கொள்ளும்]

14. குறுந். 69

இப்பாடலில் தோழி வெளிப்படையாகக் கூறும் பொருள் இது: "ஆண் குரங்கு இறந்ததாக அதனை அறிந்த பெண் குரங்கு கைம்மைத் துன்பத்தைப் பொறுக்க மாட்டாது மலையுச்சியில் ஏறி கீழே மாய்ந்து உயிரை விடும். அத்தகைய நாட்டின் தலைவன்" என்பது.

லோழி உணர்த்த விரும்பும் பொருள்: "நின் நாட்டில் விலங்கு களும் பேரறிவுடையவை. நீ களவின்மீது காதலால் நல்லறமாகிய இல்லறம் கொண்டாய் அல்லை. நின் பெருமைக்கு இது தகாது. அன்றியும், நீ இரவில் வருங்கால் ஆறும் கொடிய விலங்குகளும் அல்லல் இழைப்பின் தலைவியின் நிலை என்னாகும்? ஆகவே, இரவில் வாரற்க" என்பது. இதில் தோழி கூற்றில், பொருட் புறத்தவாகிய வேறு பொருள் தோன்றினமையால் இறைச்சி யாயி னமை காண்க.

(2) தலைவன் பிரிவினால் தலைவி வருந்துகின்றாள். முன் பனிக் காலத்திலும் அவன் வந்திலன். அவன் பிரிவை ஆற்றாது தலைவி மெலிந்து கூறுகின்றாள்.

பூழ்க்கா லன்ன செங்கால் உழுந்தின்
ஊழ்படு முதுகாய் உழையினம் கவரும்
அரும்பனி அச்சிரம் தீர்க்கும்
மருந்துபிறி தில்லையவர் மணந்த மார்பே.[15]

[பூழ் - குறும்பூழ்ப் பறவை; ஊழ்படு - மிக முதிர்ந்த; உழை இனம் - மான் கூட்டங்கள்; அச்சிரம் - முன்பனிக் காலம்].

இதில் தலைவி வெளிப்படையாகக் கூறும் பொருள்: "பனிக் காலத்தில் மான் கூட்டங்கள் தம் இனத்துடன் தாம் வேண்டி யதை உண்டு இன்பதுடன் வாழ்கின்றன" என்பது.

தலைவி உணர்த்த விரும்பும் பொருள்: "இந்தப் பனிக் காலத்தில் யான் துணையின்றி இன்பமும் இன்றித் துன்புறலா னேன்" என்பது. தலைவியின் கூற்றில் வேறு பொருள் தோன்றி இறைச்சியாயினமை கண்டு மகிழ்க.

(3) இதுகாறும் களவில் ஒழுகிய தலைவன் வரைவுக்குரிய பொருளுடன் வருகின்றான். செவிலி அவனை ஏற்றுக் கொள்ளு கின்றாள். இதனைத் தோழி செவிலியை வாழ்த்தும் வாயிலாகத் தலைவிக்கு உணர்த்துகின்றாள்.

15. குறு - 68

அரும்பெறல் அமிழ்தம் ஆர்பத மாகப்
பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை
தம்இல் தமதுண் டன்ன சினைதொறும்
தீம்பழம் தூங்கும் பலவின்
ஓங்குமலை நாடனை வரும்என் றோளே.[16]

[அரும்பெறல் - பெறுவதற்கு அறிய; ஆர்பதம் - உண்ணும் உணவு; பெரும் பெயர் உலகம் - சுவர்க்கம்; பெறீ இயர் - பெறுவாளாக; தம் இல் - தம் வீடு; தமது - தமது முயற்சியால் ஈட்டிய பொருள்; சினை - கிளை.]

இப்பாட்டில் தோழி கூறும் வெளிப்படையான கருத்து: "இனிமை தரும் சுளைகளை அகத்தே கொண்டிருந்தும் புறத்தே இன்னாத முட்களையுடையனவாய்க் காணப்படும் பலாக் கனிகளையுடைய நாடன் வரும் என்று செவிலி கூறினாள்" என்பது.

தோழி உணர்த்த விரும்பும் கருத்து: "உள்ளே வரைந்து கொண்டு இல்லறத்தொழுகி இன்பம் செய்வதாயிருந்தும், புறத்தே இன்னல் தரும் களவிலே காதலுடையான்போல் காணப்பட்டான் தலைவன்" என்பது. தோழிக்கூற்றின் புறத்தே பிறிதொரு பொருள் தோன்றினமையான் இறைச்சி ஆதலை அறிக.

(4) களவில் ஒழுகி வரும் தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிகின்றான். தாம் அவன் விருப்பப்படி செய்த நன்றியை மறவாது விரைவில் வரைந்து கொள்ளுமாறு வேண்டுகின்றாள் தோழி. இதனை உணர்த்தும் பாடற்பகுதி:

கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட![17]

[பயம்முலை-பாலுள்ள முலை; மாந்த-குடித்து நிற்ப; முன்றில்-வீட்டின் முன்னிடம்; பிடி - பெண் யானை; பெருங்கல்-பெரிய மலைகள்]

இதில் தோழி உணர்த்திய வெளிப்படைப் பொருள் இது: "கன்று தன் முலையை மாந்திக் கொண்டேயிருப்பத் தன் பசியைப் போக்குவதற்கும் அக் கன்றுக்குரிய பாலைப் பெறுவதற்கும் பிடி

16. ஷை. 83.
17 ஷை. 225.

தினையை உண்கின்றது. அத்தகைய பிடிகள் நிறைந்த நாட்டின் தலைவன்'' என்பது.

இதில் தோழி உணர்த்த விரும்பின பொருள்: ''நீயும் யாங்கள் நின் வரவை எதிர் நோக்கி மகிழ்ந்திருக்குங்கால் நின்கடப் பாட்டையும் இவளை வரைவதையும் ஒருங்கே செய்வித்தற்குக் கருவியாகிய பொருளை ஈட்டி வருதற்குரியை'' என்பது. இதில் தோழிக் கூற்றினின்றும் பிறிதொரு பொருள் பயந்து இறைச்சி யான நுட்பத்தை ஓர்ந்து அறிக.

**நற்றிணையில்:** சில இறைச்சிப் பொருள் அமைந்த பாடல் களை அநுபவிப்போம்.

(1) பல நாள் பரத்தையின் வீடே கதி எனக் கிடந்து திரும்பி வருகின்றான் தலைவன். தலைமகள் ஊடி நிற்கின்றாள். அவளது ஊடலைத் தீர்க்க விறலியை அனுப்புகின்றான் தலைவன். அவளைக் கண்ணுற்ற தோழி வெகுண்டு கூறுவதாக அமைந்தது இப் பாடல்:

விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச்செவி அன்ன பாசடை தயங்க
உண்துறை மகளிர் இரியக் குண்டுநீர்
வாளை பிறழும் ஊரற்கு நாளை
மகட்கொடை எதிர்ந்த மடங்கெழு பெண்டே!
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட் டோராத் தாயரோ டொழிபுடன்
சொல்லலை கொல்லோ?...''[18]

[சுடர்-ஒளி; பாசடை-பசிய இலை; தயங்க-அலைபட; இரிய-அஞ்சி ஓட; குண்டு நீர்-ஆழமாகிய நீர்மிக்க பொய் கையில்; மகட்கொடை-அடுத்த நாளைக்கும் ஒருத்தியை; எதிர்ந்த-நேர்ந்த; மடம்-அறியாமை; பெண்டே-பெண்ணே; உலைந்த-குலைந்த; குறுமொழி-தாழ்மையுடைய சொல்]

இந்த நெய்தல் திணைப் பாடற்பகுதியில் தோழி வெளிப் படையாகக் கூறுவது; ''தாமரை வருந்த மகளிர் இரிந்தோடக் குண்டு நீரில் வெடிபாய்ந்து பிறழும் ஊரினையுடைய எம் தலைவற்குப் பரத்தையரை அமைத்துக் கொடுக்கும் விறலியே! நீ

18. நற். 310

வழக்கம் போல் உன்னுடைய குறுமொழிக்கு உடன்பட்டு ஓர்தலில்லாத பரத்தையரின் தாய்மார்க்கு நாளை ஒரு மகள் வேண்டுமென்று அவர் உடன்படுமாறு உன் யாதுமில்லாத பொய் மொழியைச் சொல்ல வில்லையோ? சொல்லியிருப்பின் இங்கு வந்திராய்'' என்பது.

தோழி விறலிக்கு உணர்த்த நினைக்கும் கருத்து: ''வாளை மீன் தாமரை வருந்த, மகளிர் இரிந்தோட, குண்டு நீரில் வெடி பாய்ந்து பிறளும் என்பது, தலைமகள் யாம் வருந்தக் காமக் கிழத்தியர் இரிந்தகல விருந்தாக நீ புணர்த்திய புதிய பரத்தை யிடத்தே சென்று தங்காநிற்கிறான்'' என்பது. தோழியின் கூற்றில் வேறொரு பொருள் தோன்ற நின்று இறைச்சியாயினமையை உணர்ந்து மகிழ்க. 'பாசடைதயங்க......ஊரற்கு' என்றதினின்றும் தலைவனின் பரத்தை யொழுக்கமாகிய வேறொரு பொருள் தோன்ற நின்றதைக் காண்க. விறலியின் பயனற்ற சொல் பரத்தையர்க்கும் அவரன்னையர்க்கும் ஏற்பதன்றி இங்குப் பயன் படாதென்ற குறிப்பையும் உணர வைக்கின்றாள் தோழி.

(2) தலைமகளைத் தலைமகன் கொண்டுதலைக் கழிந்தமை யைக்[19] கேள்வியுறுகின்றாள் செவிலித்தாய். இதனை மிக வருந்திய நிலையில் நற்றாய்க்குக் கூறுகின்றாள். தலைவியை ஈன்ற தாய் அவ்வாறு தன் மகள் சென்றது அறத்தாறு எனக் கொண்டாளாயினும் பண்டுதன்னைச் சிறிதுபொழுது பிரியினும் நொந்து புலம்பக் கூடியவள் எவ்வாறு பாலை நிலத்தில் செல்லு வளோ என்று மகளது அச்சத்தன்மை முதலாயவற்றுக்கு அச்ச முற்று இரங்கிக் கூறுகின்றாள். நற்றாயின் கூற்றாக அமைந்த பாடற் பகுதி:

நின்ற வேனில் உலந்த காந்தள்
அழலவிர் நீளிடை நிழலிடம் பெறாஅது
ஈன்றுகான் மடிந்த பிணவுப்பசி கூர்ந்தென
மான்ற மாலை வழங்குநர்ச் செகீஇய
புலிபார்த் துறையும் புல்லதர்ச் சிறுநெறி
யாங்குவல் லுனள்கொல்![20]

19. கொண்டுதலைக் கழிதல்-உடன்போக்கு.
20. நற்-29

[உலந்து-காய்ந்து வாடிய; அழல்-நெருப்பு; கான்-காடு; மடிந்த-காவல் செய்திருந்த; பிணவு-பெண்புலி; பசி கூர்ந்தென-பசியுடையதென்று; மான்ற-மயங்கிய; வழங்குநர்-செல்பவர்; செகீஇய; கொல்லும்பொருட்டு]

இந்தப் பாலைத் திணைப்பாடலில் நற்றாய் வெளிப்படையாக உணர்த்தும் பொருள் இது: நிலைபெற்று நிற்கும் வேனிற் பருவத்தில் காய்ந்து வாடிய காந்தளையுடைய அழல் வீசும் வெஞ்சுரத்தில் நிற்கவும் நிழல் பெறாது குட்டிகளை ஈன்று காவல் புரிந்து வரும் பெண்புலி மிகவும் பசியுடையதென்று அதன் பசியைப் போக்குவதற்காக மாலையில் வழியில் போவாரைக் கொல்லுவதற்கு அற்றம் பார்த்திருக்கும் ஆண்புலி அந்நெறியை நோக்கியிருக்கும். அத்தகைய வழியில் என் மகள் எங்ஙனம் நடக்க வல்லுநளோ?'' என்பது.

தாய் இதில் உணர்த்தக் கருதும் பொருள்: ''(i) தலைவியின் அயர்ச்சியைப் போக்கவேண்டித் தலைமகன் மாலைப் பொழுதிலே தங்குமிடம் தேடி ஆங்கு இருவரும் தங்குவர். (ii) தலைமகள் இனி மக்களொடு மகிழ்ந்துமனையறம்காக்கும்என்று ஆற்றுவாள்'' என்பது. இக்கருத்து எங்ஙனம் பெறப்படுகின்றது? 'பிணவின் பசியைப் போக்கப் புலி உணவு தேடி நெறியிற் பார்க்கும் கானம்' என்றதனால், முதற்கருத்தும், 'ஈன்று கான்மடிந்த பிணவு' என்றதனால் இரண்டாவது கருத்தும் பெறப்படுகின்றன. இதில் காணும் கருத்துகள் நற்றாயின் கூற்றுக்குப் புறத்ததாகக் காணப் பெறுதலால் இறைச்சியாயிற்று என்பது உணரப்பெறும்.

(3) களவுக் காலத்தில் இருவகைக் குறியானும் வந்தொழுகும் தலைமகன் யாதோ ஒரு காரணத்தால் இடையீடுபட்டு வாராதொழிகின்றான். இதனால் தலைவி வரைதல் வேட்கை விருப்பினளாய் வேட்கை பெரிதும் கிளர்ந்தெழும் நிலையில் கிள்ளையை நோக்கிச் செய்தி கூறுமாறு வேண்டுகின்றாள். 'காமம் மிக்க கழிபடர் கிளவியாக' வந்த பாடல்:

கொடுங்குரல் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி!
அஞ்சல் ஓம்பி ஆர்பதம் கொண்டு
நின்குறை முடித்த பின்றை என்குறை
செய்தல் வேண்டுமால்; கைதொழுது இரப்பல்;
பல்கோட் பலவின் சாரல் அவர்நாட்டு
நின்கிளை மருங்கிற் சேறி யாயின்

அம்மலை கிழவோர்க்கு உரைமதி இம்மலைக்
கானக் குறவர் மடமகள்
ஏனல் காவல் ஆயினள் எனவே.[21]

[குரல்-தினைக்கதிர்; குறைத்த-கொய்த: ஆர்பதம்-உணவு; கோள்-காய்: கானம்-காடு; ஏனல்-தினைக் கொல்லை.]

இக் குறிஞ்சித் திணைப் பாடலில் தலைவி வெளிப்படையாக உணர்த்தும் பொருள்: "பசிய கிள்ளாய், அஞ்சற்க. உணவு கொள்ளும் நின்குறையை முடித்த பிறகு நின்கிள்ளையிடத்துச் செல்லின், ஆண்டுள்ள மலைகிழவோர்க்குக் குறவர் மடமகள் ஏனல் காவலாயினள் என்ற என் குறையை உரைக்குமாறு கைகளைக் குவித்துத் தொழுது இரந்து கூறுகின்றேன்" என்பது.

இதில் "என்னைக் கைவிட்ட கொடுமையையுடையவர் சாரலாயிருந்தும் அச்சாரலின்கண் உள்ள பலாமரங்கள் பிறர்க்குப் பயன்படுமாறு காய்க்கின்றனவே; இஃதென்ன வியப்பு?" எனப் பொருட்புறத்தே இறைச்சி தோன்றியதை நுணுகி அறிந்து மகிழ்க. 'பல்கோட் பலவின் சாரல் அவர் நாடு' என்பதனால் "அவர் மலைச் சாரற்குச் செல்வையாயின் இத்தினையினும் இனிய பலாச் சுளையை ஆர்பதமாகப் பெறலும் பெறுகுவை" என்று ஆண்டுச் செல்லுவதற்கோர் ஊதியத்தையும் குறிப்பாகப் புலப்படுத்துவதும் அறியப்பெறும்.

**அகநானூற்றில்:** ஓர் இறைச்சிப் பொருள் கண்டு மகிழ்வோம்.

களவில் ஒழுகி வரும் தலைவன் ஒரு நாள் இரவுக் குறியை நாடி வருகின்றான். தோழி அதனை மறுத்து பகற்குறி அமைக்கின்றாள்; அக்குறியிடத்து வருமாறு தலைவனைப் பணிக்கின்றாள். இப்பொருள் அமைந்த பாடற் பகுதி வருமாறு :

"....................................
நாம அருந்துறைப் பேர்தந்து யாமத்து
ஈங்கும் வருபவோ? ஓங்கல் வெற்ப!
ஒருநாள் விழுமம் உறினும் வழிநாள்
வாழ்குவள் அல்லள்என் தோழி; யாவதும்
ஊறுஇல் வழிகளும் பயில வழங்குநர்

21. ஷை-102

நீடுஇன்று ஆக இழுக்குவர்; அதனால்
உலமரல் வருத்தம் உறுதும்; எம்படப்பைக்
கொடுந்தேன் இழைத்த கோடுஉயர் நெடுவரைப்
பழந்தூங்கு நளிப்பில் காந்தள்அம் பொதும்பில்
பகல்நீ வரினும் புணர்குவை; அகன்மலை
வாங்குஅமைக் கண்ணிடை கடுப்பயாய்
ஓம்பினள் எடுத்த தடமென் தோளே[22]

[நாமம்-அச்சம் தரும்; பேர் தந்து-தாண்டி; விழுமம்-துன்பம்; வழிநாள்-மறுநாள்; ஊறு-இடையூறு; இழுக்குவர்-தவறு எய்துவர்; உலமரல்-மனம் சுழலுதல்; உறுதும்-அடைவோம்; படப்பை - தோட்டம்; வாங்கு அமை-வளைந்த மூங்கில்; கண்-கணு; கடுப்ப-ஒக்க; யாய்-செவிலி; கொடுந்தேன்-வட்டமாகிய தேன் இறால்; கோடு-சிகரம்; நளிப்பில்-மரச் செறிவினுள்; பொதும்பு-புதர்]

இக்குறிஞ்சித்திணைப் பாடலில் தோழி வெளிப்படையாகக் கூறும் பொருள் இது: "(தோழி இரவின் பயங்கரமான சூழ் நிலையை எடுத்துக் காட்டி) இதிலும் மக்கள் வருவார்களா? தலைவன் முதல் நாள் துன்பம் உறினும் மறு நாளே தலைவி உயிர் துறந்து விடுவாள். இடையூறு இல்லாத வழிகளிலும் அடிக்கடி அங்குப் போய் வருபவர்கள் கூடத் தவறி விழாமல் இருப் பதில்லை. அதனால் நானும் தலைவியும் வருந்துகின்றோம். ஆகவே, இனி நீ பகலில் வருவாயாக. எங்கள் வீட்டுத் தோட்டத்தினை அடுத்துள்ள மலையிலுள்ள காந்தள் புதரிடத்து வந்தால் தலைவியை ஒரு வித இடையூறுமின்றிச் சந்திக்கலாம்" என்பது.

இங்குத் தோழி அமைக்கும் பகற்குறியில் இறைச்சிப் பொருள் உள்ளது. 'கொடுந்தேன்...பொதும்பில்' என்றமையால், இரவுக் குறி விலக்கிப் பகற்குறி உடன் பட்டாள் போலக் கூறினும், 'தேன் அழிப்பதற்கு வருவாரும், பழம் எடுப்பதற்கு வருவாரும், பூப்பறித் தற்கு வருவாரும் பலராகலின் பகலிலும் வாராதி; வரைந்து கொண்டு செல்' என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றாள். இதுவே இறைச்சிப் பொருள்; வடநூலார் கூறும் தொனி. இது. சொற்பொருளினும் சிறந்து விளங்குவது கண்டு மகிழத் தக்கது.

22. அகம்-18

**கலித்தொகையில் :** சில இறைச்சிப் பொருள்களைக் கண்டு மகிழ்வோம்.

(1) தலைவியின் களவொழுக்கக் காலத்தில் இற்செறிப்பு நேரிடுகின்றது; காவலும் மிகுதியாகின்றது. ஆற்ற இயலாத தலைவி தலைவன்பாற் சென்ற தன் நெஞ்சினை நோக்கிக் கூறியதாக அமைந்த பாடற் பகுதி இது:

கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறும்
சுரும்பு ஆர்க்கும் குரலினோடு இருந்தும்பி இயைபூத
ஒருங்குடன் இம்மென இமிர்தலிற் பாடலோ(டு)
அரும்பொருள் மரபின்மால் யாழ்கேளாக் கிடந்தான்போல்
பெருங்கடல் துயில்கொள்ளும் வண்டிமிர் நறுங்கானல்[23]

[கோடு-கொம்பு; சினை-கிளை; சுரும்பு-வண்டினம்; இருந்தும்பி-கருநிற வண்டு; இயைந்து-சேர்ந்து; இமிர்தல்-ஒலித்தல்; மரபு-முறைமை; கானல்-கடற்கரைப் பகுதி]

இந்த நெய்தற்கலியில் தலைவி வெளிப்படையாக உணர்த்தும் பொருள்: "கரிய கொம்பினையுடைய புன்னையின் சினையில் உள்ள மலர்களை நுகர்தற்குச் சுரும்பினம் செவ்வி பார்த்து ஆரவாரிக்கின்றது. அதன் ஓசையுடன் கரிய தும்பிகளும் ஒலிக்கும் ஓசையும் சேர்ந்து 'இம்' என்ற ஓசை எழுகின்றது. இந்நிலையில் பாட்டையும் யாழையும் கேட்டுப் பள்ளி கொண்டு உறங்கும் பரந்தாமனைப்போல கடலும் ஒலியவிந்து உறக்கத்தை மேற்கொண்டு விட்டது. இத்தகைய கானல்" என்பது.

தலைவியின் கருத்தில் இருக்கும் பொருள்: "யாமும் காமச் செவ்வியறிந்து நம் தலைவருடன் நுகரப் பெற்றிலோம்; நாமும் பாட்டையும் யாழையும் போலும் ஓசை கேட்டுத் தலைவனிடம் துயிலப் பெறுகின்றிலோம்" என்பது. இக்கருத்து தலைவனின் கூற்றினின்றும் பெறப்படும் முறையைக் காண்போம். புன்னை மலரும் செவ்வி பார்த்து அவற்றை நுகரும் சுரும்பினமும் தும்பியினமும் நுகர்கின்றன என்றதால், முதற் கருத்தும், பாட்டையும் யாழையும் கேட்டுக் கடல் உட்படத் துயில்கின்ற காலத்தே என்றதால் இரண்டாவது கருத்தும் பெறப்படுகின்றன. இதில் தலைவியின் கூற்றின் புறத்தே தோன்றும் பொருளினால் இறைச்சி தோன்றியதை நுண்ணிதின் உணர்க.

23. நெய்தற் கலி-6

(2) தலைவியும் தோழியும் வள்ளைப் பாட்டு பாடிக் கொண்டே மூங்கில் நெல்லைக் குற்றுகின்றனர். அதில் வரைவு கடாவும் குறிப்பு இருந்தது. சிறைப்புறமாக வள்ளைப் பாட்டைக் கேட்டுக் கொண்டிருக்கும் தலைவன் வரைந்து கோடலை வேண்டு கின்றான். தலைவியின் தந்தையும் வரைவுடன்படுகின்றான். இச்செய்தியைத் தோழி தலைவிக்கு உரைப்பதாக அமைந்த பாடல் இது:

பாடுகம் வாவாழி தோழி வயக்களிற்றுக்
கோடுலக்கை யாகநற் சேம்பின் இலைசுளகா
ஆடுகழை நெல்லை அரையுரலுள் பெய்திருவாம்
பாடுகம் வாவாழி தோழிநற் றோழி பாடுற்று.[24]

[வயக்களிறு-வலிய யானை; கோடு-கொம்பு; சுளகு-புடைக்கும் சாதனம்; ஆடு கழை-மூங்கில்; அரையுரல்-பாறையாகிய உரல்]

இக்குறிஞ்சிக் கலியில் தோழி வெளிப்படையாக உரைக்கும் பொருள் இது: "தோழி! வாழ்வாயாக! நாம் பாடுவோம் வா. இருவரும் மூங்கிலின் நெல்லைப் பாறையாகிய உரலில் பெய்து யானைக் கொம்பாலாகிய உலக்கையால் குற்றிச் சேம்பின் இலையாகிய சுளகால் புடைத்துக் கொண்டு பாடுவோமாக" என்பது.

இதில் தோழி உணர்த்த விரும்பும் பொருள் இறைச்சிப் பொருளாக அமைந்திருப்பதை விளக்குவோம். உயர்ந்த மூங்கிலின் கண்ணினின்றும் தானாக உதிர்ந்த நெல்லை எடுத்துக் கொண்டு உரலில் பெய்து என்றதனால் உயர்ந்த தலைவனை தெய்வந்தானே கொண்டு வருதலின் அவனை நம் வயத்தனாக் கினேம் என்றும், வள்ளைப்பட்டிற்கு ஏதுவாகிய கோடு உலக்கை யாக என்றதனால் கோடு நெல்லைப் பயன்படுத்தினாற் போல நம் வரைவு கடாவலால் இத்தலைவனை இல்லறப் பயனை எய்து விக்கின்றேம் என்றும், சேம்பிலை புடைத்தல் தொழிலை முற்ற முடித்து அரிசியை ஆக்காத தன்மைபோல இக்களவொழுக்கத் தால் நம் தலைவன் வரைந்து கோடலை முற்ற முடியாதிருக் கின்றோம் என்றும் இறைச்சி பொருட்புறத்ததாய் நின்றவாறு நுண்ணிதின் உணர்ந்து மகிழ்க.

---

24. குறிஞ்சிக் கலி-5

**திருச்சிற்றம்பலக்கோவையாரில் :** இறுதியாக மணிவாசகப் பெருமானின் சொல்லோவியங்களில் ஒன்றினைக் காண்போம்.

களவொழுக்கம் ஒழுகா நின்ற தலைமகன் கழுநீர் மலரைக் கையுறையாகக் கொண்டு சென்று அதனை ஏற்றுக் கொள்ளுமாறு தோழியை வேண்டுகின்றோன். அவள் ஒரு காரணம் கூறி கை யுறையை மறுக்கின்றாள். தோழி கூற்றாக அமைந்த திருப்பாடல் இது:

நறமனை வேங்கையின் பூப்பயில்
 பாறையை நாகநண்ணி
மறமனை வேங்கையென நனியஞ்சு
 மஞ்சார் சிலம்பா!
குறமனை வேங்கைச் சுணங்கொ(டு)
 அணங்(கு) அலர் கூட்டுபவோ
நிறமனை வேங்கை அதள்அம்
 பலவன் நெடுவரையே.[25]

[நறவு - தேன்; மனை - இடம்; நாகம் - யானை; நண்ணி - அடைந்து; மறம் - வீரம்; நனி - மிகவும்; மஞ்சு - மேகம்; சிலம்பன் - குறிஞ்சி நாடன்; சுணங்கு - பசலை; அணங்கு அலர் - தெய்வத்திற்குரிய பூக்கள்; அதள் - தோல்; வரை - மலை]

இப்பாடலில் தோழி கூறும் வெளிப்படைப் பொருள் இது: ''தேனிற்கு இடமாகிய வேங்கைப் பூக்கள் மலிந்துள்ள பாறையை யானை சென்று அணைந்து அப்பாறையைத் தறுகண்மைக்கு இடனான புலி என்று எண்ணி மிகவும் அஞ்சும் மேகந் தவழும் மலையினையுடைய தலைவனே, நிறந் தங்கிய புலித் தோலை அணிந்த அம்பலவனது இந்த நீண்ட மலையின்கண்ணே குறவர் மனையில் உளவாகிய வேங்கையின் சுணங்கு போன்ற பூக்களுடன் தெய்வத்திற்கு உரிய கழுநீர் முதலிய பூக்களைக் கூட்டுவரோ?'' என்பது.

இதன்கண் 'வேங்கை மலர்களால் மூடப்பெற்றுள்ள கற் பாறையைக் கண்ட யானை அதனைப் புலியென அஞ்சும் நாடன்' எனத் தலைவனுக்கு அமைந்த அடைமொழி இறைச்சிப் பொருள்

25. திருக்கோவை - 96

பட வந்தது. 'ஒன்றனைப் பிறிதொன்றாகப் பிறழவுணரும் நாதன் ஆதலின், தெய்வத்திற்குரிய நறுமலரைச் சூடாத குறமகளிராகிய எம்மை அம்மலரைச் சூடுவோம் என்று பிறழவுணர்ந்தாய்' என்பது இதன்கண் அமைந்த இறைச்சிப் பொருள். 'ஒத்த தோற்றம் உடைமைபற்றி, அஞ்சப்படாததனையும் அஞ்சுதற்கு இடனாயது எமது மலை நிலமாதலின், எம் குலத்திற்கு ஏலாததாய் நீ தரும் தெய்வமலரைச் சூடுதற்கு யாம் அஞ்சுதல் சொல்ல வேண்டுமோ?' எனக் கூறித் தோழி மறுத்ததாக இறைச்சிப் பொருள் கொள்ளினும் பொருந்தும் என்பர் பேராசிரியர்.

இதுகாறும் சங்கப்பாடல்களில் வரும் இறைச்சிப் பொருளில் ஆழங்கால்பட்டு நுகர்ந்தோம். சொற்பொருளுக்குப் புறத்தே தோன்றும் பொருள்தான் இறைச்சியாகும் என்பதனைத் தெளிவாக அறிந்தோம். இறைச்சிப் பொருளினின்று தோன்றும் பொருளும் உண்டு. வடநூலார் இதனை **'அனுரணன த்வனி'** என்பர். ஒரு பொய்கையின் நடுவில் ஒரு கல்லை எறிந்தால், அதனால் ஓர் அலை தோன்றி, அதிலிருந்து ஒவ்வொன்றாகப் பல அலைகள் தோன்றிக் கரைவரைக்கும் வருவன போல, கவிதையிலும் ஒரு பொருளிலிருந்து பல பொருள்கள் தோன்றுவதுண்டு. இவ்வாறு தோன்றுவதை, **'வீசி தரங்க நியாயம்'** (தரங்கம்-அலை) என்பர் வடநூற் புலவர். தொல்காப்பியரும்,

> இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
> திறத்தியல் மருங்கில் தெளியு மோர்க்கே.[26]

என்று விதி கூறியுள்ளார். இதற்கு உரை கூறும் இளம்பூரணரும் 'சொற்பொருளுக்குப் புறத்தே தோன்றுவதாகிய இறைச்சிப் பொருளினின்று தோன்றும் பொருளும் உள' என்று உரைப்பர். அஃதாவது, குறிப்புப் பொருளினின்று தோன்றும் குறிப்புப் பொருளும் உண்டு என்பது இதன் கருத்து. 'பொருளுமாருளவே' என்று கூறுவதால், இவ்வாறு தோன்றும் பொருள் சிறுபான்மையாகவே இருக்கும் என்பது போதருகின்றது. 'திறத்தியல் மருங்கி தெளியுமோர்க்கே' என்பதால், இப்பொருளை உணரும் ஆற்றலுடையாரும் சிலரே என்பதும் பெறப்படுகின்றது. வடநூலாரும் குறிப்புப் பொருளை அறிதலே அருமை என்று கூறியுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்கி உணர்தற்பாலது.

---

26. பொருளியல் - 34 (இளம்)

ஓர் எடுத்துக்காட்டால் இதனை விளக்குவோம்.

எல்லா உதுக்காண் எழில்நீர்ப் பொய்கைப்
பரந்த தாமரைப் பாசடைக் குருகு
துளக்கமில் உடலதாகிப் பசுங்கலத்து
வளையொளிர்ந் தாஅங் கொளிசெய் வதுவே.

[எல்லா - தலைவனே; உதுக் காண் - அதோ பார்; எழில் - அழகு: பொய்கை - குளம்; பாசடை - பசுமையான இலை; குருகு - நாரை; துளக்கம் இல் - அசையாத; வளை - சங்கு]

என்பது ஒரு பொய்கை வருணனைச் செய்யுள்; தலைவனை நோக்கிக் கூறுவதாக அமைந்துள்ளது. பசிய தாமரை இலையிலுள்ள நாரை அசையாது இருக்கின்றது என்பது 'துளக்கமில் உடலதாகி' என்பதன் சொற்பொருள். அதனால் 'அந்த இடம் மக்கள் நடமாட்டம் இல்லாதது' என்ற குறிப்புப் பொருள் தோன்றும். அக்குறிப்புப்பொருளிலிருந்து 'அவ்விடம்குறியிடத்திற்கு ஏற்றது' என்னும் குறிப்பும், அதனால் 'புணர்ச்சி நெடிது நிகழ்தல் கூடும்' என்ற குறிப்பும் தோன்றுவதை அறிக. எனவே, குறிப்புப் பொருளின் சிறப்பும் அதன் அருமையும் ஒருவாறு தெளியப் பெற்றது. குறிப்புப் பொருள் சொற்பொருளினின்றும் சிறக்கும் பொழுது அதனைத் 'தொனி' என்று கூறுவர் வடநூலார்.

முடிவில்லாத அகப்பொருள் ஒழுகலாற்றில் பெறும் இன்பம் அனைத்தும் குறிப்புப் பொருள்களால் விளங்கித் தோன்றும்படி வகுத்துரைத்தனர் நம் முன்னையோர். இதனைத் தொல்காப்பியர்,

அந்தமில் சிறப்பின் ஆகிய இன்பம்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே.[27]

என்ற விதியால் கூறுவர். தலைவன் தன் தன்மையென்ப தொன்றன்றி நந்தன்மை எனக் கருதுதலின், யாம் ஒன்றை நினைந்து ஒன்று கூறினும் அவன் அச் சொற்களைக் கேட்டு வெகுளாது இன்பம் எனக் கொள்வன் என்ற கருத்தால் தலைவியும் தோழியும் அவனுடைய குறைகளைக் குறிப்பாகப் புலப்படுத்தி இடித்துரைக்கும் நிலையில் கூறிய உள்ளுறைப் பொருண்மையினைக் கேட்ட தலைவன் 'இவை இன்பந் தரும்' என்றே ஏற்றுக் கொள்வன் என்பது நச்சினார்க்கினியர் இதற்குத் தரும் விளக்கம். எனவே, இத்தகைய உள்ளுறைப் பொருண்மையாலும் இறைச்சிப் பொருண்மையாலும் தலைமக்களது இன்ப உணர்வு வளர்ந்து சிறத்தலைக் காணலாம்.

27. ஷை - 49 (நச்)

# VIII அகத்திணைச் சிறப்பியல்

நமக்குக் கிடைத்துள்ள சங்கச் சான்றோர் இயற்றிய பாடல்கள் 2381; இயற்றியவர்களின் தொகை 473. இப் பாடல்கள் அகத்திணை, புறத்திணை ஆகிய இரண்டு திணைகளும் பற்றியவை. இவற்றுள் அகத்திணைக்கு மட்டிலும் உரிய செய்யுட்கள் 1862; இவற்றை இயற்றிய வர்கள் 378 சான்றோர்கள் ஆவர். இவர்தம்முள் பெண் புலவோர் இருபத்து மூவர்; இவர் பாடிய பாடல்களின் தொகை 97 ஆகும்.

மேற்குறிப்பிட்ட 473 சங்கச் சான்றோர்களுள் அகத் திணை பாடாது புறத்திணையை மட்டிலும் பாடியவர் களின் தொகை 95; இவர்தம்முள் ஆண்பாலார் 86; பெண்பாலார் 9. புறத்திணை பாடாது அகத்திணை மட்டிலும் பாடியோரின் தொகை 301; அகத்திணை, புறத்திணை ஆகிய இரண்டுதிணைகளையும் பாடியோரின் எண்ணிக்கை 71. அகத்திணையுள்ளும் கற்பியல் பாடாது களவியல் மட்டிலும் பாடியோரின் தொகை 145; கள வியல் பாடாது கற்பியல் மட்டிலுமே பாடியோரின் தொகை 140; களவு, கற்பு என்ற இரு கைகோள்களையும் பாடியவர்கள் 93 பேர் ஆவர். இவர் தம்முள் ஒரு திணை பாடிச் சிறப்புப் பெயர் பெற்றவர்களும் உள்ளனர்; ஒரு துறை பாடி சிறப்புப் பெயர் பெற்றவர்களும் உள்ளனர். முதல், கருப்பொருள்களைச் சிறிதும் காட்டாது உரிப் பொருள் மட்டிலும் நுவலும் அகப்பாடல்களும் சங்கச் சான்றோர்களின் பாடல்களுள் பல உள்ளன. கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய் எழுதிணை என எண் ணுங்கால், குறிஞ்சி முதலாம் சொற்களைக் கருதுங்கால் நிலமில்லாக் கைக்கிளை பெருந்திணைகளோடு எண்ணப் படுதலின் இவற்றுக்கு நிலப்பொருள் செய்தல் கூடாது; உரிப்பொருள் கோடலே என்பது தெளிவாகின்றதன்றோ?

இவ்விடத்தில் பேராசிரியர்டாக்டர் வ.சுப.மாணிக்கம் அவர்கள் கூறிய கருத்துகள் சிந்திக்கத் தக்கவை. நீண்ட காப்பியம் செய்யும் புலவனுக்குரிய ''கட்டுப்பாடுகள் அகப்புலவனுக்கு இல்லை. காதலை நினைத்த துறையில், நினைத்த கூற்றில், அடியளவில் பாடலாம். ஆண் புலவர்கள் தலைவி, தோழி, செவிலி கூற்றாகவும்; பெண் புலவர்கள் தலைவன், பாங்கன், பாணன் கூற்றாகவும் பாடலாம். துறைத்தேர்ச்சி முதலியனவெல்லாம்அவரவர் விருப்பம். அகப்புலவன் தனிப் பாடல் செய்பவன். நல்லதொரு சிந்தனை தோன்றுமேல், ஒரு பாடல் எழுதி உலகிற்கு அறிவிக்கும் பெருவாயில் அவனுக்கு உண்டு. அகத்திணையின் அமைப்பால் பலர்தம் சிந்தனைகளைச் சமுதாயம் அறிய முடிகின்றது. யார் கண்ட காதற் கருத்தும் ஒன்று, சிறிது என்பதற்காக உள்ளடக்கவேண்டுவதில்லை; ஒரு சிறுபாட்டாக வேனும் உருப்படுத்தும் ஆற்றலை அகத்திணை வகுக்கின்றது. பாடுவார்க்கு அகத்திணைபோல் பாடுரிமை வழங்கும் இலக்கியம் பிறிதில்லை என்பது என் கருத்து. ஓரிலக்கிய நெறிபற்றிய நானூறு புலவர்களை எம்மொழியிலாவது காண முடியுமா? தமிழ்மொழி காட்டுதலின் அதன் இலக்கியச் சிறப்பு மிகப் பெரிது என்று உணர்க. அகத்தமிழ் இலக்கியம் தலையாயது என்று அறிக.

''அகத்திணைப் புலவன் உணர்ச்சித் திறமும், உலக அறிவும் உடையவன்; நிலவியற்கையும் கால இயற்கையும் மரஞ்செடி கொடி விலங்குகளின் கல்வியும் பெற்றவன். காதல் உரிப் பொருளைப் பாடுகின்றவன் புணர்ந்தார் பிரிந்தார் என்று வெறுமனே பாடிவிடுதல் இயலாது; பாடினும் சிறவாது. உரிப்பொருளுக்கேற்ப இயற்கைச் சூழ்நிலைகளைப் புனையவேண்டும். நிலமும் காலமும் கருப்பொருளுங்காட்டி உரிப் பொருளைத் திறப்படுத்த வேண்டும்.

முதல்கரு உருப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை'

1. அகத்திணை-3

என்பதனால் அகப்புலவனுக்கு முதற்பொருள் கருப் பொருள் அறிவு இன்றியமையாதது. அவ்வறிவு பொது வாக இருந்தாற் போதாது. உரிப்பொருளுக்கேற்ப இயற் கையை வடித்துக் காட்டும் தனித் திறம் வேண்டும். இத் திறம் இல்லாப் புலவன் அகம் பாடுதற்கு உரியவனல்லன் என்று கூடக் கூறலாம். ஆதலின் சங்கத் தமிழ்ப் புலவர்கள் அகத்திணைக் கல்வியையும் இயற்கைக் கல்வியையும் ஒருங்குப் பெற்றனர். அகப்பாடல்களின் இயற்கைப் பகுதி களையும் வரலாற்றுப் பகுதிகளையும் நீக்கி விட்டால் உரிப் பொருளின் கதி என்னாகும்? பாடு பெறுமா? நீடு பெறுமா? அகப்பாட்டின் யாப்பில் முதல் கருப்பொருள் கட்கு நீண்டு விரிந்த இடம் இருத்தலால், புலவன் மிக்க இலக்கிய உரிமை பெறுகின்றான். உரிப் பொருளைத் தலையாக வைத்து உலகத்தையே சொல்லும் வாய்ப்புப் பெறுகின்றான். திணை மயங்கலாம், கருப்பொருள் மயங் கலாம் என இலக்கணம் விட்டுக் கொடுத்தலின், வேண்டி யவாறு சூழ்நிலை அமைக்கும் புனைவுரிமை பெறுகின் றான். நடுநிலை பெற ஆராய்ந்து காணுங்கால் அகத் திணையின் காதற்பொருள், கோவையற்ற தனித் தனிக் காதலுணர்ச்சிகள், தனிச் செய்யுளமைப்பு, முதல் கருப் புனைவு, உள்ளுறையுவமம், மெய்ப்பாடுகள் எல்லாம் இளம் புலவனின் புதுக் கூர்மையை வெளிப்படுத்து கின்றன; வளர்க்கின்றன; வனைவுறுத்துகின்றன. நல்ல பிள்ளைபோல் அகவிதிகட்கு அடங்கி இலக்கியம் கண்ட மையாற்றான், சங்கப் புலவரின் அறிவு (ஒளிச்) கதிர் போல் ஒளிறுகின்றது; சங்கப் பனுவல்கள் ஞாயிறு திங்கள் போல் நின்று பரந்து வாழ்வொளி வீசுகின்றன.''[2]

இந்த இயலில் திணையைப் பாடினதாலும், துறையைப் பாடினதாலும், உவமையை அழகாக அமைத்துப் பாடினதாலும், நயஞ்செறிந்த தொடர்களை அமைத்துப் பாடினதாலும் சிறப்புடன் திகழும் சங்கச் சான்றோர் பற்றிய செய்திகளும் அவர்தம் பாடல்களின் சிறப்பும் ஆராயப்பெறுகின்றன.

---

2. **தமிழ்க் காதல்** (இரண்டாம் பதிப்பு)-பக் (363-64)

# திணையால் சிறப்புப் பெயர் பெற்றோர்

குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற இவை ஐந்திணையுள் அடங்கியவை; தனித்தனித் திணையாகக் கருதப் பெற்றவை. ஆகவே, சங்கப் புலவர்கள் ஐந்திணைமேலும் பாடாமல் தலைக்கு ஒரு திணையாகப் பாடினர். ஐங்குறு நூற்றினைப் பாடியவர்களை,

மருதம்ஓ ரம்போகி; நெய்தல்அம் மூவன்;
கருதும் குறிஞ்சி கபிலன்;-கருதிய
பாலைஓதல் ஆந்தை; பனிமுல்லை பேயனே;
நூலையோ தைங்குறு நூறு.[1]

என்ற வெண்பாவால் அறியலாம்; கலித்தொகைப் பாடல்களையும் ஐந்து சான்றோர்கள் பாடினர் என்பதை,

பெருங்கருங்கோன் பாலை; கபிலன் குறிஞ்சி;
மருதன்இள நாகன் மருதம்; அருஞ்சோழன்
நல்லுத் திரன்முல்லை; நல்லந் துவன்நெய்தல்;
கல்விவலார் கண்ட கலி.[2]

என்ற வெண்பா புலப்படுத்துகின்றது. எட்டுத் தொகையில் ஐங்குறு நூறும், கலித்தொகையுமே பாடினோர், எண்ணிக்கை குறைந்த நூல்களாகும். இவர்களுள் பெருங் கடுங்கோ **'பாலை பாடிய'** என்ற அடையையும் பெற்றுள்ளார். இங்ஙனமே, இவர் தம்பி இளங்கடுங்கோ **'மருதம் பாடிய'** என்ற அடையைப் பெற் றுள்ளார். அம் மூவனார் (**நெய்தல்**), ஓதலாந்தையார் (**பாலை**), இளநாகனார் (**மருதம்**), ஓரம்போகியார் (**மருதம்**), கபிலர் (**குறிஞ்சி**), நல்லுத்திரன் (**முல்லை**), நல்லந்துவனார் (**நெய்தல்**)

1. தனிப்பாடல்
2. தனிப் பாடல்

பேயனார் (முல்லை) ஆகியோர் அடைகளைப் பெற்றிலர் எனினும் அவ்வத் திணைகளைப் பாடுவதில் வல்லவர்களாகத் திகழ்ந்தனர் என்பதற்கு ஐயமில்லை. இவர்களைப்பற்றி இந்த இயலில் குறிப்பிடுவோம்.

### (i) நல்லு(ரு)த்திரனார்

இவர் அகத்திணையில் முல்லைக் கலியைத் தவிர (17 பாடல்கள்) வேறு பாடவில்லை. பிறதொகைகளில் இவர்தம் பாடல்கள் இலவாதலின் இவர் பாடிய யாப்பு கலிப்பாவைத் தவிர வேறு இல்லை. பிற அகப்பாடலாசிரியர்களிடம் காண இயலாத ஒரு தனிக் கூர்மை இவரிடம் உண்டு. **நாடக வழக்கை விடுத்து உலகியல் வழக்காகவே முல்லைக் கலியை ஆக்கியிருத்தல்** இவர்தம் தனிச் சிறப்பு. முல்லைத் திணை புலவர்தம் கற்பனை செறிந்த இலக்கியப் புனைவுக்கு பெருவாய்ப்பு தருவதில்லை. இதில் உருத்திரனார் இத்திணைக்கு உரிய முதல் கருப் பொருள்களை அமைத்துக் கொண்டாரேனும், இத்திணைக் குரிய இருத்தல் என்ற உரிப் பொருள் பாடாது, குறிஞ்சித் திணைக் குரிய புணர்தலைப் பாடி இலக்கிய வெற்றி கண்டார். உரிப் பொருள் மாற்றத்தாலும், ஆயர்தம் அன்றாட ஒழுகலாறுகளை அமைத்துக் கொண்டதாலும் முல்லைக் கலி முத்தெனப்புத்தொளி பெற்றுத் திகழ்வதாயிற்று.

முல்லைவாழ் கோவலர்களின் சமுதாய இயல்புகளையும் அவ்வியல்புகளுக் கேற்ப அமைந்த காதலையே புனைந்தாலும் அகத்திணை இலக்கணம் சிறிதும் ஊறுபடாதவாறு முல்லை ஒழுகலாறுகளைநயமாகப் பொருத்திக்காட்டியிருப்பது பாராட்டத் தக்க இவர்தம் பண்பாகும். கொல்லேற்றினை மடக்கிய வனுக்கே பெண் கொடுப்பது முல்லை வழக்கமாக இருந்தது. காளையை எவன் மடக்கினாலும் அவனைப் பெண் மணந்து கொள்ள ஒருப்படுவாள். ஏறு தழுவாததற்கு முன்னரே ஆய மகனுக்கும் ஆய மகளுக்கும் உள்ளப் புணர்ச்சி உண்டு (கலி-101) என்பதை உருத்திரனார் சுட்டிக் காட்டுவர். ஏறுகோள் வழக்கம் அகத்திணை ஒழுகலாற்றிற்கு இயைந்து நடை பெறுகின்றது.

முல்லைத்திணையின் உரிப்பொருள் இருத்தல்; அதாவது, தலைவனது பிரிவுக் காலத்தில் ஆற்றியிருப்பது. தலைவன் குறித்துச் சென்ற பருவ வரவு கண்டு தலைவி வருந்துதல், வருந்துபவளைத் தோழி ஆற்றுவித்தல், வினைமுடிவில் தலைவன் தேர்ப்பாகனுக்கு உரைத்தல் போன்ற நிகழ்ச்சிகள், சங்க இலக்கியத்தில் நிரம்பக் காணப்பெறும் துறைகள், முல்லைக் கலியில் இடம் பெற்றில. இவர்தம் 17 பாடல்களுள் ஒன்றே ஒன்று மட்டிலும் (கலி-109) கைக்கிளைத் திணையாக அமைந்துள்ளது; ஏனைய 16ம் களவியல் துறைகளாம். பிறர்போல் கற்புத் துறைகளை இவர் அமைத்திலர். முல்லைச் சமுதாயத்தின் காதல் ஒழுகலாறுகளைக் காட்டுவதற்காகவே இவர் முல்லைக் கலிகளை அமைத்தார் போலத் தோன்றுகின்றது. முதல் ஏழு கலிப் பாடல்கள் ஏறுகோள் விழாவினையே பெரிதும் புனைந்து காட்டு கின்றன.

திணைதோறும் காதற் களங்கள் — காதலர்கள் சந்தித்துப் பேசும் இடவாய்ப்புகள் — நிலத்தில் வாழும் மக்களின் தொழிலுக் கேற்பக் கவிஞர்கள் காதலர்களின் காண்பிடங்களைப் புனைந்து காட்டுவர். இக்காதற் களங்கள் முற்றிலும் உலகியல் ஒழுகலாறு களுக்குப் பொருந்துவனவாகவே அமையும். முல்லை நிலக் குறுமகள் மோர் விற்கச் செல்வாள்; இடைக் குல ஆண்களும் ஆடு மாடுகளை மேய் நிலங்கட்கு ஓட்டிச் செல்வர். ஆதலின் நல்லுருத்திரனார் இவ்விடங்களைக் காதற் களங்களாகத் தம் பாடலில் புனைந்து காட்டுவர். காதற் காட்சிகள் நானிலங்களில் நிகழ்வனவே; காதற் காட்சி பாலை நிலத்தில் நிகழ்வதில்லை என்பது அறியத்தக்கது.[3] இலக்கியங்களில் பாலைநில மக்கள் தலைமக்களாகவும் வருவதில்லை; பாலை நிலச் சூழ்நிலையும் காதலர் காட்சிக்குக் கூறப்பெறவில்லை.

உருத்திரனாரின் முல்லைக் கலிப் பாடல்களில் உரையாடல்கள் நயமாக அமைந்துள்ளன. முல்லை நிலத்தார் ஆடு மாடுகளை மேய்க்கும் குறும்பர்கள். பரந்த மேய்ச்சல் தொழிலுக்கு ஏவலாட்களை அமர்த்திக் கொள்வர். இந்த ஏவலாட்களைத் தலைமக்களாகக் கொண்டு பாடிய திணைச் சிறப்பு இப் புலவர் பெருமானுக்கு உரியது. இவர்தம் காதலையும் பேச்சுகளையும் ஆறு கலிப் பாடல்களில் காட்டியுள்ளார் இப் பெருந்தகை.

3. **தமிழ்க் காதல்** - பக். 193.

ஐந்திணைத் தன்மை குன்றாதவாறும் முல்லைச் சமுதாயத்திற்கு ஏற்பவும் இப்பாடல்கள் அமைந்துள்ளன.

ஓர் ஆயமகளுக்கும் ஆயமகனுக்கும் நடைபெற்ற பேச்சு இது:

"ஏடா, நீ இடையர் குடிதோறும் உள்ள மகளிரை விரும்பா நின்றாய் தேள் கடிக்கு மருந்து உடனே இட்டுத் தீர்ப்பதுபோல நின் காமவேட்கை தோன்றியபொழுதே தீர்க்க வேண்டுவ தொன்றோ? அல்லவே. விளையாட்டாக நீ என் மெய்யைத் தீண்டுதற்கு யான் நின்னை அணைந்து என் மெய்யைத் தந்தேன். நான் புணர்ச்சிக்கும் எளியேன் என்று கொண்டாய். இது மோரை வேண்டினார்க்குச் சிறிது மோரை வார்த்து எளியளானவ ளொருத்தி வெண்ணெய் வேண்டினார்க்கு வெண்ணெயையும் தந்து எளியளாயிருப்பாள் என்று நினைப்பது போலல்லவா உள்ளது?" என்று ஊடலூட்டிப் பேசுகின்றாள்.

"ஒண்ணுதால், நீ கூட்டத்தை மறுத்தாயாயின் அக் கூட்டம் இல்லையாவதாகுக; என்னை விட்டு நீங்குக" என்று கூறியவன் பேச்சை முறித்துக் கொள்ளாது மேலும் தன் காதலைப் பலவாறு புலப்படுத்துவான்.

"ஆய்ச்சாதி அருமருந்தே, மத்தைச் சுற்றிய கயிறுபோல நின்னையே சுற்றித் திரிக்கின்றது என் நெஞ்சு. நீ கூறியவற்றால் சிறிது அச்சம் உண்டாகி அதனால் நின்னை விட்டு நீங்கினாலும், தான் நிலைபெற மாட்டாது தடுமாறுகின்றது" என்கின்றது.

மேலும் கூறுவான்:

"முதல் சூல் கொண்ட பசு விடிந்த பொழுதும் மேயப் போகாது தொழுவத்தில் கட்டி வைத்துள்ள தன் கன்றினைச் சூழ்ந்து திரிவதைப்போல என் நெஞ்சும் நின்னையே கண்டு சுற்றித் திரிகின்றது; வருத்தத்தையும் உறுகின்றது" என்கின்றான்.

பின்னும் பேசுவான்:

'என்னிடத்து எந்நாளும் வருத்தம் மிகுகையினாலே, என் உயிர், மருந்தையிட்டு நெய்யைக் கடைந்து வாய்கின பால் நுகர் வார்க்குச் சிறிதும் பயன்படாமல் அவர் கைச்சென்று தோய்ந்து விடும் நிலையாய் விட்டது; தான் செய்வதோர் செயலையும் அறியாது நிற்கின்றது" என்கின்றான்.

இவற்றைக் கேட்ட ஆய்மகள் காதலருள் பாலிக்கின்றாள். மறுமொழியும் தருகின்றாள்:

"நீ அத்தன்மையுடையையோ? பலரும் திரிகின்ற மன்றத்தில் எதிர்ப்பட்டபொழுதே புணர்ச்சி வேண்டுகின்றாய்; புணர்ச்சியின் றாயின் உயிர் வாழேன் என்கின்றாய். இவ்விடத்து நாம் நின்றால் எம் சுற்றத்தார் காண்பர்; நாளையும் புலத்திற்குக் கன்றுகளை ஓட்டிச் செல்வேன்; ஆண்டு வந்து உனக்கு உற்றவற்றை மேலும் சொல்லுவாய்: ஈண்டு இனி நில்லாது ஏகுக" என்று குறியிடமும் அமைக்கின்றாள் (கலி-110).

மோர்விற்றுச் செல்லும் ஆயமகள் ஒருத்தியை இடைமறித்துப் பேசுகின்றான் ஆயமகன் ஒருவன்.

"மோர் விற்றுச் செல்லும் சிறு நங்காய், நீ மோர் விற்றுத் திரும்பும்போது செம்முல்லை நெருங்கினதோர் காட்டினிடத்து, சிற்றாற்றின் அருகில், மாவடுவைப் பிளந்தாலொத்த நின் கண் விழியால் என் நெஞ்சை அடிமை கொண்டு விட்டாய்; என்னை மயக்கி என் உள்ளத்தைக் கொண்ட நீ ஒரு கள்வி" என்றான்.

> நின்னெஞ்சம்
> களமாக் கொண்டு யாம்ஆளல் எமக்கெவன் எளிதாகும்;
> புனத்துளான் என்னைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ
> இனத்துளான் எந்தைக்குக் கலத்தொடு செல்வதோ
> தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க்கிற்பதோ.

"உன் மனம் எனக்கு அடிமையாவதால் எனக்கு என்ன பயன்? அது புனத்திடத்தானாகிய என்அண்ணனுக்குச் சோறு கொண்டு போய்க் கொடுக்குமா? பசுத்திரள்களிடத்தானாகிய எந்தைக்குக் கறவைக் கலம் கொண்டு செல்லுமா? தினை அறிந்த தாளிடத்தே என் அன்னை மேயவிட்ட கன்றை மேய்த்துக் காத்து நிற்குமா?" என்று நகையாடுகின்றாள் அந்த ஆய நங்கை (கலி-108)

"நின்முன் நின்று சொல்லாடுதல் தகாது என்பது எம் தமர் கட்டளை" என்று ஆற்றிடை சந்தித்த ஓர் ஆய நங்கை தெரிவித்ததும் மறுத்துக் கேட்கின்றான் ஒரு காதற் குறும்பன். "ஆம்; நின் உறவினர் கூறியது ஒக்கும், ஒக்கும். என்னுடன் உரையாடலாகாது என்று சொன்னார்களேயன்றி புல்லுதல் ஆகாது என்றனரோ?" இஃது அன்பும் குறும்பும் கலந்த மறுமொழி என்பது தெளிவு (கலி-112). இன்னோர் ஆயமகன் ஓர்ஆயமகளை ஆற்றிடை

யில் தடுத்து நிறுத்துகின்றான். "பயிர் செய்யும் எம்தோட்டத்திற்கு ஏகுகின்றோம். முன்பு ஓர் முறை இப்படித்தான் தடுத்து நிறுத்தினாய், இன்றும், விலக்குகின்றாய். என்ன, நீ பித்தேறினாயோ? என்னைப் போகவிடு" என்கின்றாள். "நான் போக விடேன்" என்கின்றான் ஆய மகன். "நீ இவ்விடத்தினின்றும் அகன்று போவாயாக. தன்னுடைய கன்றினை அணுகுவார்மேல் சினத்துடன் புனிற்றா செல்வது போல, நீ என்மேல் வந்தது காணில் என் அன்னை தறுகண்மையுடையளாய் வந்து சீறுவாள்" என்று எச்சரிக்கின்றாள் ஆய மகள். அது கேட்டு அவன்,

யாய்வருக ஒன்றோ பிறர்வருக மற்றுநின்
கோவரினும் இங்கே வருக தளரேன்யான்
நீயருளி நல்கப் பெறின்.

என்று தன் அச்சமின்மையைக் கூறுகின்றான். "நீ அருள் செய்து என்னைக் கூடினால், நின் ஆய் வரினும் வரட்டும்; அயலார் வரினும் சரியே; அவர்களே யன்றி நின் தந்தைதான் வரினும் வருக. யான் தளர்ச்சியுறேன்" என்கின்றான். (கலி-116).

ஏறுகோள் கூறினும் ஆயர்தம் பிற பழக்கங்களைத் தலைமக்களாகக் கூறினும், நளினச் சொல்லாட்டங்களை நவின்றாலும் திணை இலக்கணம் பிறழாதவாறு பாடுவர் நல்லுருத்திரனார். உள்ளப் புணர்ச்சி என்னும் ஒரு திருமணமே அகத்திணையின் ஒரு தலையாய குறிக்கோள். அயலவர்தம் மணப்பேச்சு அசைத்துப் பார்க்கும் ஒரு பெரிய நெம்புகோல். இது தலைவனது வரைவு நீட்டிப்புக்கும் அத்தகையபேச்சுக்கும் இடம்அளிக்கின்றது. ஆதலின் கற்பிற் சிறந்த தமிழ்க் களவுக் காதலி தமிழ்ச் சமுதாயத்தில் தூய வாழ்க்கைக் குறிக்கோளைத் தோழிக்கு நினைவு கூர்கின்றாள். நொதுமலர் வரைவு உடனே தடுக்கப்பெறல் வேண்டும் எனவும், தலைவன் விரைந்து வரைந்து கொள்ள ஏற்பாடு செய்தல் வேண்டும் எனவும் அறிவு கொளுத்துகின்றாள். இன்றேல் அறக்கேடும் உயிர்க் கேடும் நிகழும் என்பது அவளது குறிப்புரை. தலைவியின் தலையாய குறிக்கோள், தமிழினத்தின் காதல் நெறி, புலவர் பெருமானின் அறிவுரை எல்லாம் கலந்த ஒரு முல்லைக் கலி,

விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்லியல் பன்றே[4]

4. கலி-114.

[நீர்-கடல்; இல்லியல்பு-குடிப்பிறப்பு]

என்று பேசுகின்றது.

### (ii) பேயனார்

பேயனார் 104 அகப்பாடல்களின் ஆசிரியர். ஐங்குறுநூற்றில் முல்லைத் திணைப் பாடல்கள் 100 இவர் பாடியவை. அகநானூற்றில் ஒன்றும் (234), குறுந்தொகையில் மூன்றும் (233, 359, 400) இவர்தம் பாடல்களாகும். புறமாக யாதும் இவர் பாடிற்றிலர். ஐந்து திணைகளுள் முல்லையும் அதன் உரிப்பொருளான இருத்தலும் இலக்கியப் புனைவுக்குப் பெருவாய்ப்பு நல்குவன அல்ல. **புலவரின் கற்பனைத் திறத்தால்தான் முல்லைப் பாடல்கள் வளம் பெறுதல் வேண்டும்.** இதில் பேயனார் வெற்றி பெற்றுள்ளார் என்றே சொல்லலாம்.

இவர்தம் ஒரே ஓர் அகநானூற்றுப் பாடலில் முல்லைச் சூழ்நிலை காட்டப் பெறுகின்றது. மழை பெய்துள்ளது. நுண்மணல் பரவிய குளிர்ந்த நீர்நிலையிடத்து அன்னப் பறவைகள் வரிசையாகப் பறக்கின்றன. பெண் மான்கள் ஆண் மான்களுடன் புணர்ந்த இன்பத்திற்குப் போக்கு வீடாக இடையூறின்றித் துள்ளித் திரிகின்றன. அழகிய சிறகினையுடைய வண்டினங்கள் முல்லை நறுமலர்த் தாது நயந்தூதித் தம் களிப்பிற்கு அறிகுறியாக இன்னிசை பாடுகின்றன. இது முல்லை நிலத்து மாலைக் காலச் சூழ்நிலை. இந்தச் சூழ்நிலையி லமைந்திருந்த ஓர் ஊரின்கண்ணே வாழும் தலைவியை நோக்கி வருகின்றான் வினை முற்றி மீளும் தலைவன்.[5]

பேயனாரின் ஐங்குறுநூற்றுப் பாடல்கள் மிகக் குறைந்த அளவு அடிகளைக் கொண்டனவாதலால் கருப்பொருள் புனைவுக்கு இடந்தர வில்லை. எனினும், முதல் கரு உரி என்ற மூன்றானும் மரபுப்படி சிறிதும் உள்ள சிறப்புக் குன்றாது பாட முடியும் என்பதை நிலைநாட்டிய பெருமை இவருக்கு உண்டு.

5. அகம்-234

நல்ல துறைகளாகத் தேர்ந்தெடுத்துப் பாடப்பெற்ற இவர்தம் பாடல்கள் கற்பவர்க்கு நல்ல இல்லற வழிகாட்டியாக அமைந்துள் ளன. இவை பெருந் துயரும் பெருங் களிப்பும் ஆகிய மிகை உணர்ச்சிகள் இல்லாமல் அமைதியாக இயங்குகின்றன. பிற ஐங்குறுநூற்றுப் புலவர்கள்போல் பல்வேறு துறைகளைக் கையாளாமல், ஒரே துறையில் பப்பத்து உள்ளங்களைக் காட்டி அமைவர்; துறையைப் பலவாக்கி உள்ளங்களைப் பலவாக்காமல் துறை ஒன்றின்மேலேயே உள்ளப் புனைவு பலவாறு செய்தல் இவர்தம் தனிச் சிறப்பு.

பேயனார் காட்டும் தலைவன் ஒரு போர் மறவன்; வேந்தன் துணைவன். இல்லறத்தை நினைந்து போற்றுபவன். பகைவன் திறை கொடாமையால் போர் தொடர்ந்து நடைபெறுகின்றது. பாசறைக்கண் உள்ள தலைவன் தான் சொல்லி வந்த பருவ வரவு கண்டு தலைவி மனங்கவல்வாளே என்று சிந்திக்கின்றான். அரசன் போரினைக் கைவிடுவானேல் நெடுந் தொலைவினைக் கருதாது ஒல்லெனச் சென்று,

இலங்கு நிலவின் இளம்பிறை போலக்
காண்குவென் தில்லவள் கவின்பெறு சுடர்நுதல்

என்று தன்னுட் கூறி ஏங்குகின்றான் (ஐங்-443). கடமை முடிவு பெறுகின்றது.

ஆறுவனப் பெய்த அலர்தா யினவே;
வேந்துவிட் டனனே; மாவிரைந் தனவே;
முன்னுறக் கடவுமதி பாக!
நன்னுதல் அரிவை தன்னலம் பெறவே.[6]

[வனப்பு-அழகு; அலர்-மலர்; தாயின-பரவின; விட்டனன்-விடையீந்தனன்: மா-குதிரை; கடவுமதி-செலுத்துக; நுதல்-நெற்றி; நலம்-அழகு]

தலைவனுக்குக் காதல் பொங்குகின்றது; உவமை மீதூர்கின்றது விரைந்து தேரினைச் செலுத்துமாறு பாகனைத் தூண்டுகின்றான். பாடலின் சிறு தொடர்கள் மகிழ்ச்சி பொங்குதலைப் புலப்படுத்து கின்றன.

போர்முடிந்த தலைவனது காதல்நிலைகளைப் பல்வேறு வகை யால் புனைந்து காட்டுவர் பேயனார். பாகனுக்குக் கட்டளையிடும்

6. ஐங்-483.

சொற்களிலும், வழியில் காணும் காட்சிகளிலும் அவன் உள்ள மயக்கத்தை அறியலாம். பாகனின் விரைவு தலைவனது உள்ள விரைவுக்குக் குறைவாகவே காணப்பெறுகின்றது. எனவே,

முள்ளிட்டு ஊர்மதி வலவ!

என்று குதிரையைத் தாற்றுக்கோலால் குத்தி விரைவு செய்க என ஏவுகிறான் (ஐங்-481). வினை நீட்டித்த விடத்தும், கார்ப்பருவம் கண்டவிடத்தும், பாணன் தூது வந்தபொழுதும் தலைவனின் எண்ண அலைகள் அவனது காம உணர்வைக் காட்டுகின்றன.

சொல்லுமதி பாண! சொல்லுதோ றினிய
நாடிடை விலங்கிய எம்வயின் நாடொறும்
அரும்பனி கடந்த அருள்இல் வாடை
தனிமை எள்ளும் பொழுதில்
பனிமலர்க் கண்ணி கூறிய தெமக்கே[7]

[விலங்கிய-ஒதுங்கிய; எள்ளும்-இகழ்தற் கிடனான.]

என்று தூதாய் வந்த பாணனுக்குத் தலைவன் கூறியதைக்காண்க. இத்தகைய உணர்வினன் ஆகலின் சிலபோது பருவத்திற்கு முன்னதாகவே வந்து தலைவியொடு கலந்து இன்புறுகின்றான். இத்தகைய நிகழ்ச்சிகளால் கவிஞர் தலைவியின் வேட்கையை மதிக்க வேண்டும் என்பதை வற்புறுத்துகின்றார்.

தலைவன் பரத்தையரோடு நீராடுதல் தலைவியின் ஊடலுக்குக் காரணமாயிற்று என்று புலவர்கள் பாடும் பொது வழக்கிற்கு மாறாகப் பேயனார் படைத்துக் காட்டும் தலைவன் செயல் புரிகின்றான்.

ஆர்குரல் எழிலி அழிதுளி சிதறி
கார்தொடங் கின்றாற் காமர் புறவே;
வீழ்தரு புதுப்புனல் ஆடுகம்
தாழிருங் கூந்தல்! வம்மதி விரைந்தே.[8]

[ஆர்குரல்-நிறைந்த முழக்கம்; எழிலி-மேகம்; அழிதுளி-மிக்க துளி; புறவு-முல்லை நிலம்; வீழ்தரு-பெருகி வரும்; வம்-வருக]

பிரிந்து சென்ற தலைவன் கார்காலம் தொடங்குவதற்குமுன் வந்து தன் இல்லக்கிழத்தியிடம் சொல்லும் பாடல் இது. தன்

7. ஷை-479.
8. ஷை-411.

மனைவியைப் புதுப்புனல் ஆட அழைக்கின்றான். முல்லைக் காட்டின் இயற்கை எழில்களைக் காட்டி இன்புறுகின்றான். "நின் நுதல்போல் மணக்கும் முல்லைக் காட்டில் நின் சாயல்போல் மயில் ஆடுவதைக் காண்பாய் (ஐங்-413); புள்ளும் மாவும் புணர்ந் தினிது களித்து ஆடுதலைக் நோக்காய் (ஷை 414); அழகிய பூம் புதர்களினிடையே மதக்களிறும் மடப்பிடியும் முயங்குவதைப் பாராய் (ஷை 416)" என்றெல்லாம் தலைவிக்குக் காட்டி இயற்கை எழிலில் ஈடுபடுகின்றான் தலைவன்.

உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மை
பிரிந்துறல் அறியா, இருந்து கவவி
நம்போல் நயம்வரப் புணர்ந்தன
கண்டிகும் மடவரல்! புறவின் மாவே.[9]

[உயிர்-உள்ளம்; செயிர்தீர்-குற்றமற்ற; பிரிந்து உறல் அறியா-பிரிய மாட்டாத; விருந்து-புதுமையுற; கவவி-தழுவி; கண்டிகும்-காண்பாய்: மடவரல்-மடப்பமுடைய நங்கை; புறவு-முல்லை நிலம்; மா-மானும் முயலும்]

உயிர்க் கலப்பு, ஒன்றியகேண்மை, பிரிவறியாமை, மெய்யணைவு ஆகிய காதற்பண்புகள் முல்லை நில உயிர்களிடமும் காணப்பெறு கின்றன என்பதைச் சுட்டி உணர்த்துகின்றான் காதலன். பேய னாரின் இம்முல்லைக் காட்சிகள் குடும்ப நல்லுறவை வளர்ப்பன. களவிலாயினும் கற்பிலாயினும் முன்னியங்க வேண்டியவன் ஆடவன்; இவனது காதலியக்கம் நாணத்தால் உள்ளோடிக் கொண்டிருக்கும் தலைவியை இயங்கச் செய்யும். பேயனாரின் தலைவன் இல்லற நம்பியருக்கு வழிகாட்டியாக அமைகின்றான்.

செவிலி கூற்றில் வரும் பாடல்கள் மட்டிலும் பேயனாரின் புலமை வித்தகத்தைக் காட்டுதற்குப் போதுமானவை. இங்கு குழந்தையுடைய குடும்பத்தைப் பார்க்கின்றோம்; குழந்தை குடும்பத்தைப் பிணிக்கும் அரிய கருவியாக அமைகின்றது; தலைவன் பரத்தமை நினையாக் காதலனாகக் காட்சியளிக்கின் றான்: கணவனைவிட்டுப் பிரிவறியாக் காதலி நம்முன் நிற்கின் றாள். இங்ஙனம் யார்க்கும் வழிகாட்டும் இல்லியலாகவும் அமை கின்றது பேயனாரின் முதற்பத்து. புதல்வனை நடுவிற்கிடத்தித் தலைவனும் தலைவியும் பாயல் கொண்டுள்ளனர். "இக்கிடக்கை

9. ஷை-419

இனிது; அதன்கண் உலகு உடன் அடங்கும்'' என்கின்றார் கவிஞர். தந்தை புதல்வனைக் காதலால் அணைத்துக் கிடந்தான்; தலைவியோ தன் ஆராக் காதலால் இருவரையும் அணைத்துக் கிடந்தாளாயினள் (ஐங்-409). மகன் விளையாடும்பொழுது காதலன் காதலியை அணைத்து இனிதிருந்து காண்கின்றான் (ஷை-406).

இதோ செவிலி காட்டும் இன்னோர் இன்பக் காட்சி:

மாலை முன்றில் குறுங்கால் கட்டில்
மனையோள் துணைவி யாகப் புதல்வன்
மார்பின ஊரும் மகிழ்நகை இன்பப்
பொழுதிற் கொத்தன்று மன்னே
மென்பிணித் தம்ம பாணனது யாழே.[10]

[முன்றில்-முற்றம்; ஊரும்-தவழ; மகிழ்-மகிழ்ச்சி; நகை-நகைப்பு.]

மாலைக் காலத்து வீட்டின் நிலா முற்றத்தில் ஒரு குறுங்கால் கட்டிலில் துணைவி அருகிருக்கத் தலைவன் படுத்திருக்கின்றான். தனயன் தந்தை மார்பிலேறி விளையாடுகின்றான். அவ்வமயம் பாணன் யாழை மிழற்றுகின்றான். இஃது ஒரு சிறிது இடையூறாக இருக்கின்றது என்கின்றார் கவிஞர். மைந்தன் மழலை மொழிக்கு பாணனின் யாழ் ஓசை ஒரு சிறு இடையூறாக இருந்ததால் தந்தை மைந்தனின் மழலை மொழி கேட்டு மகிழமுடியவில்லை. இங்ஙனம் அகக் காதலர்தம் பொழுதுபோக்கையும் கலையுணர்வையும் இலக்கியப்படுத்திக் காட்டுவர் பேயனார். இஃது புனைந்துரையன்று; இன்றும் சில இடங்களில் காணத்தக்க காட்சியாகும்.

## (iii) கபிலர்

சங்கச் சான்றோர்களுள் தலை சிறந்தவர் கபிலர். ''குறிஞ்சிக் கபிலன்'' எனச் சிறப்பிக்கப்பெற்றவர். பலரைப் பாடிய பெருமையும் இவர்க்கு உண்டு; பலரால் பாடப்பெற்ற

10. ஷை-410.

பெருமையும் இவர்க்கு உண்டு. வள்ளல் பாரியின் கெழுதகை நண்பர். பெரும்பாலும் பாரியினது பறம்பு மலையில் அதிகம் பழகினவராதலராலும் இவர்தம் அரசத் தோழர்களான பேகன், காரி, செல்வக் கடுங்கோ மலைநாடுகளை ஆண்டவர்களாதலாலும் **குறிஞ்சித்திணையைப் புனைந்து பாடுதலில் வல்லவராயினார்** என்று கருதலாம். கபிலர் பாடிய அகப் பாடல்கள் 197. சங்க நூல்களில் பத்துப் பாட்டிலும் (குறிஞ்சிப் பாட்டு) பரிபாடல் நீங்கலாக ஏழு தொகை நூல்களிலும் இவர்தம் பாடல்கள் உள்ளன. பெருந்திணைபற்றி இவர் யாதும் பாடிற்றிலர் என்பது டாக்டர் வ சுப. மாணிக்கனார் அவர்களின் ஆய்ந்த முடிவு.''

அகத்திணைக்கண் பயின்று வரும் பல புனைவுகட்கு உண்மைப் பொருள் கண்டு தெளிதல் வேண்டும். அப்பொழுதுதான் அகத்திணை மாந்தர்களின் உள்ளத்தின் ஆழத்தையும், உணர்ச்சியின் வாயிலையும், கவிஞரின் பாடு திறனையும் பாங்குறப் புரிந்து கொள்ள முடியும். தலைவன் பிரிந்தால் தலைவி இறந்து படுவாள் என்ற தோழியின் கூற்றுக்குப் பிரிவு வருத்தம் இறப்பிற்கு ஒப்பப் பெரிதாகும் என்பது குறிப்பு. புறவொழுக்கம் ஒழுகிய தலைவன் தலைவியின் கால்மேல் வீழ்வான் என்பது மருதப் புனைவு.

மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய.[12]

என்பது தொல்காப்பியம். இதனால் அறியப்பெறுவது தலைவன் தன் குற்றத்தை உடன்பட்டு நாணிப் பணிந்து வேண்டுவான் என்பது. கன்னிப் பெண்களை ஐயப்பட்டு வெளியில் செல்லற்க என அன்னை கோலால் அடிப்பாள் என்று பாடு பெறும். மிகக் கடிந்து உரைப்பாள் என இதற்குப் பொருள் கொள்ளல் வேண்டும்.

களவொழுக்கத்தைக் கற்பனைத் திறத்துடன் பாட வல்லவர் கபிலர். களவின் பல துறைகளும் இவரிடம் பாடுபெறுகின்றன. களவுத் துறைகளுள்ளும் வரைவுத் துறைகளை விரும்பிப் பாடும் இயல்பினர் என்பதும் அறியக் கிடக்கின்றது. அமிழ்தினுமினிய தமிழ் மொழியின் மீது ஆராக் காதல் கொண்டு தமிழகத்திற்குப்

11. **தமிழ் காதல்** (இரண்டாம் பதிப்பு) - பக். 405, 409.
12. பொருளியல் - 31.

போந்து பல்லாண்டுகள் தமிழ் வாழ்வு வாழ்ந்து தமிழகப் பெருஞ் செல்வருள் ஒருவனாகத் திகழ்ந்த வடநாட்டுக் குறுநில மன்னன் **யாழ்ப் பிரகத்தன்** என்ற அறிவு மதுகையுடைய சான்றோனுக்கு எம் மொழியிலும் அமையாத தமிழ்ப் பொருளிலக்கணத்தை அறிவித்தற்பொருட்டுப் பாடி யருளியது **குறிஞ்சிப் பாட்டு.** 261 அடிகளால் அமைந்த இப்பாட்டில் பலதுறைகளுக்கு இடன் உண்டு; எனினும் எல்லா அடிகளும் **அறந்தொடு நிலை** என்னும் ஒரு துறை நோக்கியே செல்லுகின்றன. அறத்தொடு நிலை என்ற துறைமேல் எழுந்த பாடல்களில் முன்னிகழ்ச்சிகள் ஓரளவேனும் நுவலப்பெறும். தோழி செவிலிக்கு தலைவியின் மறை வொழுக்கத்தைப் புலப்படுத்தும்போது தலைவிக்கு ஒருவனோடு உறவு கொண்ட காரணங்களைத் தொடர்புபடச் சொல்லும் கடப் பாடு உடையவள் என்பதுவே இதற்குக் காரணமாகும். ஒரு துறைக்கு ஒரு பாட்டாகப் பொறுக்கி எடுத்து வேற்று மொழி யனுக்குக் கற்பித்தல் அருமை என்ற காரணத்தால் தாமே களவுத் துறைகள் பலவும் அடங்க ஒரு பாடலை இயற்றிக் கொண்டார் என்பது எண்ணத்தக்கது. களவொழுக்கப் பகுதிகள் பல பாட்டில் வருதலின் **குறிஞ்சிப்பாட்டு** எனவும் பெயரிட்டு வழங்கினர்.

> நிகழ்ந்த வண்ணம் நீநனி உணரச்
> செப்பல் ஆன்றிசின் சினவா தீமோ.[13]

என்று தோழி அடிக்கல் நாட்டுவதிலிருந்தே குறிஞ்சிப்பாட்டு ஒரு கோவைப் பாட்டு என்பது தெளிவாகின்றது. தலைவியும் தோழியும் தினைப் புனம் காக்கச் செல்லல், சுனையாடிப் பூக்கொய்து கிளியோட்டடல், நாய்கண்டு அஞ்சல், இளைய வீரன் ஒருவன் எதிர்ப்படல், அவன் தான் எய்த விலங்கினங்களைக் காண்டீரோ என வினவுதல், தலைவியும் தோழியும் மறுமொழி கூறாது வாளாவிருத்தல், களிறு தருபுணர்ச்சி, யாறு தரு புணர்ச்சி, பகற்குறி இரவுக் குறிகள், இரவுக்குறி இடையீடுகள் ஆகிய நிகழ்ச்சிகள் தொடர்பாக இப்பாட்டின்கண் இழையோடுகின்றன,

என்ற போதிலும், இந்த நீண்ட பாடல் ஒரு துறையின் விளக்கம் என்பதைப் பாட்டின் தொடக்கத்திலிருந்தே அறிந்து கொள்ளலாம்.

---

13. குறிஞ்சிப் பாட்டு - அடி 33 - 34

அன்னாய்,ன் வாழி!வேண் டன்னை ஒண்ணுதல்
ஒலிமென் கூந்தல்என் தோழி மேனி
விறலிழை நெகிழ்ந்த வீவரும் கடுநோய்
அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்
பரவியும் தொழுதும் விரவுமலர் தூயும்
வேறுபல் லுருவிற் கடவுட் பேணி
நறையும் விரையும் ஓச்சியும் அலவுற்று
எய்யா மையலை நீயும் வருந்துதி—[14]

இதில் தன் அருமை மகள் மேனி மெலிவைக் கண்டு தாய் கலக்க மடைகின்றாள்; பலரை உசாவுகின்றாள்; வெறியாட்டெடுக் கின்றாள்; தெய்வம் பரவுகின்றாள். அன்னையின் அவலநிலை யைக் கண்டும், தலைவியின் கற்பு மேம்பாட்டைக் கருதியும் தோழி உள்ளது சொல்ல முன் வருகின்றாள். இவ்வாறு அறத் தொடுநிலை என்னும் ஒரு துறையை முன் வைத்துப் பாடல் புனைவர் கபிலர். இங்ஙனம் அறத்தொடு நிற்கும் தோழி,

எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுதல் உசாவுதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்பும் கிளவியொடு[15]

முதலிய ஏழு பகுதிகளைக் கொண்டு நிற்கின்றாள் என்பது பாட்டை ஊன்றிப் படிப்பார்க்குப் புலனாகும். இப்பாடலில் தோழியின் அறத்தொடு நிலைக்கு அன்னையின் வெறியாட்டெடுத்தலே ஏது வாகக் கூறப்பெறுகின்றது.

இங்ஙனம் பன்னலம் பிறங்கும் 'பெருங் குறிஞ்சி' எனவும் வழங்கப்பெறும் கபிலர்பெருமானின் சொல்லோவியத்தை உயர்ந்த முறையில் தயாரிக்கப்பெற்ற ஓர் அரிய 'கிறிஸ்துமஸ் கேக்' என்று சொல்லலாம், திருவேங்கடமுடையானின் சந்நிதியில் வினி யோகிக்கப்பெறும் இலட்டு' என்று சொல்லி வைக்கலாம். இப் பாவினை நுகர்வோர் அவர் விரும்பும் பொருள் நயத்தினை யெல் லாம் மாந்திக் களிக்கலாம். "மாம்பழச்சாறு பெய்த குடுவையின் எப்பக்கத்தே பொத்திட்டு நாவை நீட்டினும் அதன் வழியே ஒழுகும் அச்சாறு தித்தித்தல் போல, இவ்வரிய செய்யுளின் எவ்விடத்தே அறிவு தோயினும் ஆண்டு இனிமையே விளையா

14. ஷை - அடி (1-8)
15. பொருளியல் - 12.

நிற்கின்றது''[16] என்ற மறைமலையடிகளின் கூற்று இப்பாட்டிற்கு எவ்வகையானும் பொருந்தும். முல்லைப் பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப் பாலை ஆகிய மூன்றும் புறப்பகுதிகள் கலந்த அகப் பாட்டுகள். இதிலோ புலவர் புறம் கலவாது எல்லா அடிகளையும் அகமாகவே ஆக்கியுள்ளார். அப் பெருமான் பெற்றிருந்த ஒரு திணை முழுப் பயிற்சியே இத்தகைய சிறப்பாக்கத்திற்குக் காரணம் என்று கருதலாம்.

கபிலர் படைத்துக் காட்டும் தோழி உலகியலை நன் கறிந்தவள்; அறிவுக் கூர்மையுடையவள். களவியலைக் கற்பனைத் திறத்துடன் நெடிது இயக்குபவள் இவளே. கபிலர் பாடல்களில் தோழி கொள்ளும் பங்கு மிகப் பெரிது. அவர் பாடிய 197 அகப் பாடல்களுள் 120 பாடல்கள் தோழி கூற்றாகவே வருகின்றன. 'பெருங்குறிஞ்சியும்' தோழியின் கூற்றே. தலைவியின் வாழ்க்கை யொடு முற்றும் ஒன்றியவளாக இயங்குகின்றாள் இவள்.

யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே.[17]

என்று தன்னையும் தலைவியையும் ஓருயிரின் இருதலையாகக் கொள்வதைக் காண்மின். பிறிதோரிடத்தில் தோழி தலைவியின் களவினைப் பெற்றோர் அறிவாராயின் நாணத்தாலும் அச்சத் தாலும் இறந்துபடுவள் என்றும், அவள் இறப்பின் தானும் மரிப்பது உறுதி என்றும் எடுத்துரைக்கின்றாள்; விரைவில் வரைந்து கொள்ளுமாறு தலைவனை முடுக்குகின்றாள் (கலி-52).

கார் காலத்தின் நள்ளிரவில் அடாது மழை பெய்து ஓய்ந்தது. அன்னை உறங்குகின்றாள்; அன்று தந்தையும் இல்லத்தில்தான் உள்ளான். வீட்டின் விளக்கும் அணைந்துவிட்டது. மராமரத்தி லிருந்து கூகை குழறுகின்றது. இவ்வமயம் தலைவன் தோட்டத் தில் வந்து நிற்கின்றான். இந்தச் சூழ்நிலையில் தலைவிக்குப் புதுத் துணிவு பிறக்கின்றது. மையிருட்டைக் கண்டு மயங்கிலள்; கூகையின் குழறலுக்கும் வெருவிலள். முருகன் அன்ன சீற்றம் கொள்ளும் தந்தையையும் பொருட்படுத்திலள். கனத்த காதணி கள் ஒளி காட்ட, பின்னிய கூந்தலில் மலர் சூடிக் கொண்டாள். ஏணி வழியாக ஏறி வரையினின்றிழியும் மயிலைப் போல இறங்கித்

16. மறைமலையடிகள்: **பட்டினப்பாலை ஆராய்ச்சி யுரை**-பக். 76
17. அகம் - 12

தலைவனுடன் அளவளாவி இன்புற்றுத் திரும்பி வந்து முன் போலவே படுக்கையிலிருந்தாள். மறுநாள் அன்னை தோழியிடம் "மகள் ஏணிமேல் ஏறி இறங்கக் கண்டேன்" என்று கூறிக் கொதித்தெழுகின்றாள். இதற்குத் தோழியின் சாதுரியம் அமைந்த மறுமொழி இது:

அலையல் வாழிவேண்டு அன்னைநம் படப்பைச்
சூருடை சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண்டுருவன் அணங்குமார் வருமே
நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவாண்டு மருட்டலும் உண்டே
... ... ... ... ...
முருகன் அன்னை சீற்றத்துக் கடுந்திறல்
எந்தையும் இல்லன் ஆக
அஞ்சுவள் அல்லளோ இவளிது செயலே.[18]

[அலையல்-வருத்தாதே; வேண்டு-விரும்பிக்கேள்; படப்பை-தோட்டம்; சூர்-தெய்வம்; அணங்கு-ஒரு தெய்வம்; வாயே போல-உண்மைத் தோற்றம் போல; துஞ்சுநர்-துயில்வோர்; மருட்டல்-மயக்கல்; சீற்றம்-சினம்; திறல்-வலிமை]

பேய் நம்பிக்கையும் கனவு நம்பிக்கையும் தமிழ்ச் சமுதாயத்தில் உள்ளவை. ஆதலின் தெய்வம் விரும்பிய உருவங்கொண்டு யாண்டும் திரியும் என்றும், நனவு போலவே கனவும் தோன்றும் என்றும் கூறி அன்னையை ஏமாற்றுகின்றாள் தோழி. "தந்தை இல்லத்திலிருக்குங்கால் இதனைத் துணிவாளா?" என்று மேலும் சான்று கூறுகின்றாள்.

தோழியின்பால் தலைவிக்கும் நிறைந்த அன்பு உண்டு. தோழி கூறுவனவற்றை வெல்லாம் தலைவி நம்புவாள். குற்றத்தையும் குணமாக எடுத்துக் கொள்வாள்.

ஊசலூர்ந் தாட ஒருஞான்று வந்தானை
ஐய சிறிதென்னை ஊக்கி எனக் கூறத்
தையால் நன்றென்று அவனூக்கக் கைநெகிழ்பு
பொய்யாக வீழ்ந்தேன் அவன் மார்பின் வயாச்செத்து
ஒய்யென ஆங்கே எடுத்தனன் கொண்டான்மேல்
மெய்யறியா தேன்போற் கிடந்தேன்மன்[19]

18. அகம்-158
19. கலி-37

[ஊக்கி-ஆட்டுவாய்; கைநெகிழ்பு-கைநெகிழ்ந்து; வயா செத்து-மயக்கம் நீங்கி; ஒய்என-விரைய]

இவ்வாறு தோழி தலைவிக்குக் கூறும் கருத்தினைத் தலைவி 'கயிறு விடுவதாகவே' எடுத்துக் கொள்வாள்; தன் உள்ளோட்டத்தை அறிதற்குத் தோழி மேற்கொள்ளும் ஓர் உத்தி என்றே எண்ணுவாள். அன்புடையோர் அன்புடையோரிடத்துக் கூறும் போது பொய் வரலாம் என்பது அகத்திணைச் சான்றோர் துணிபு. சொல்வோரும் கேட்போரும் பொய் என்பதை அறிவர். ஒரு நற் பயன் நோக்கிக் கையாளும் மறைமுறை என்றே இருவரும் பொருள் கொள்வர்.

அறக்கழி வுடையன பொருட்பயன் படவரின்
வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப.[20]

அன்பினை அடிப்படையாகக் கொண்ட அகப்பொருளுக்குத் துணை செய்யுமாயின், உலகியல் அறங்கட்கு மாறுபட்டனவும் இலக்கிய வழக்காக வரலாம் என்பது தொல்காப்பியர் செய்த இலக்கணம். விரிவஞ்சி ஐங்குறுநூறு (குறிஞ்சிப்) பாடல்களைத் தொடவில்லை.

### (iv) மருதம்பாடிய இளங்கடுங்கோ

இவரும் சேரர் மரபினர்; பாலை பாடிய பெருங்கடுங்கோவின் இளவல் என்று ஊகிக்கப்பெறுகின்றார்; இவர் மருதத் திணை ஒன்றையே பாடியவர். அதனை மிகவும் சிறப்பித்துப் பாடும் ஆற்றலுடைய வராதலால் **மருதம் பாடிய இளங் கடுங்கோ** என்று சிறப்புப் பெயருடன் திகழ்கின்றார். இவர் பாடியனவாகக் கிடைத்துள்ள பாடல்களில் அகநானூற்றில் இரண்டும் (பாடல் 96, 176) நற்றிணையில் ஒன்றும் (பாடல் 50) உள்ளன.

மருதத்திணைக் காட்சிகளை இடங்கட்கேற்பப் புனைந்து காட்டலில் வல்லவர் இக்கவிஞர் பெருமான். இவர் மருதத் திணை

20. பொருளியல்-22

யில் அமைந்துள்ள உள்ளுறை உவமம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பான்மையது. பரத்தையிற் பிரிந்து சென்று திரும்பிய தலைவன் வாயில் வேண்டித் தோழியிடம் வருகின்றாள்; அவள் வாயில் மறுக்கின்றாள். தோழி தலைவனை விளிப்பதாக அமைந்துள்ள பாடலின் முற்பகுதியில் உள்ளுறை அமைந்துள்ளது.

நறவுண் மண்டை நுடக்கலின் இறவுக்கலித்துப்
பூட்டறு வில்லில் கூட்டுமுதல் தெறிக்கும்
பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்
அரவாய் அன்ன அம்முள் நெடுங்கொடி
அருவி ஆம்பல் அகலடை துடக்கி
அசைவரல் வாடை தூக்கலின் ஊதுலை
விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழும்
கழனியம் படப்பைக் காஞ்சி ஊர.[21]

[நறவு-கள்; மண்டை-மொந்தை; நுடக்கல்-கழுவப் பெறல்; இறவு-இறா மீன்; கலித்து-செருக்குற்று; கூட்டு முதல்-நெற்கூடுகள்; தெறிக்கும்-துள்ளி விழும்; பழனம்-மருத நிலம்; அம்முள்-அழகிய முள்; அருவி ஆம்பல்-நீர்க்குறை வற்ற ஆம்பல்; அகல் அடை-அகன்ற இறை; அசைவரல்-அசைந்து வரும்; தூக்கலின்-அசைத்தலின்; விசைவாங்கு தோல்-விசைத்து இழுத்து விடும் துருத்தி; வீங்குபு-புடைத்து, ஞெகிழும்-சுருங்கும்; கழனி-வயல்; படப்பை-தோட்டம்]

இதில் மருதநில வருணனை மாண்புற அமைந்துள்ளது. ஒரு பொய்கைக் கரை. அங்குக் கள்ளுண்ட கலத்தைக் கழுவின நீரை இறால் மீன் பருகுகின்றது. இதனால் மீன் களிப்புற்று களிப்புக்குப் போக்கு வீடாக நெற்கூடுகளின் அடிகளில் துள்ளிக் குதிக்கின்றது. பொய்கைக் கரையில் அரத்தின் வாய்போன்ற அழகிய முட்களை யுடைய பிரம்பின் நீண்ட கொடி நீர்வளத்தால் செழித்து வளர்ந்துள்ள ஆம்பலின் அகன்ற இலையைச் சுற்றிக் கொள்ளுகின்றது. வாடைக் காற்று வீசுதலால் அந்த இலை ஊதப்பெறும் கொல்லன் உலைக் களத்து விசைத்து இழுத்துவிடும் துருத்தியைப்போல் புடைத்துச் சுருங்கும். "இத்தகைய பழனப்பொய்கையையும் வயல் களையும் தோட்டங்களையும் உடைய காஞ்சி மரங்கள் செறிந்த ஊரனே!" என்று தலைவனை விளிக்கின்றாள்.

21. அகம்-96.

தொடர்ந்து கூறுவாள். "நீ பரத்தையர் கூட்டத்தினுள்ளும் இளையாள் ஒருத்தியை நயந்து கொண்டனை என்று ஊராரிடம் பேச்சு எழுவதாயிற்று. அஃதை என்பாளின் தந்தை சோழன் ஒரு புறமும் சேரர் பாண்டியர் மறுபுறமும் இருந்து வெண்ணெல் விளையும் இடங்களையுடைய பருவூர்ப் போர்க் களத்தில் நடைபெற்ற போரில் வெற்றி பெற்ற சோழன் பகை வேந்தர்களின் களிறுகளைக் கவர்ந்தபோது எழுந்த ஆரவாரம் போல, நின்பரத்தைமை பலர் வாய்ப்பட்டு அலராகிவிட்டது." இவ்வாறு கூறி வாயில் மறுக்கின் றாள் தோழி.

'நறவுண்...யூர' என்றதில் 'பரத்தையர் சேரியைச் சூழ்ந்து திரியும் பாணன் காமஞ் சாலா இளமை யோளாகிய பரத்தையைத் தலைமகனோடு கூட்டத் தலைமகன் அவளை முயங்கியவிடத்து அவள் களிப்படைகின்றாள்; நீங்கியவழி மெலிகின்றாள்' என்ற செய்தி அடங்கியுள்ளது. இதன்கண் பொய்கையைப் பரத்தையர் சேரியாகவும், முள்ளுடைப் பிரப்பின் கொடியை அதனைச் சூழ்ந்து திரியும் நெஞ்சு வலிய பாணனாகவும், ஆம்பல் இலையைக் காமஞ் சாலாக் குறுமகளாகவும், அதனைக் கொடி துடக்கியதனைப் பாணன் அவளைத் தலைமகனோடு கூட்டியதாகவும்,வாடையைத் தலைமகனாகவும், அது தூக்குந்தோறும் அவ்விலை வீங்கித் தூக்காதவழி நெகிழ்ந்ததனைத் தலைமகன் அவளை முயங்கியவழி அவள் களிப்புற்று, நீங்கியவழி மெலிந்த தன்மையாகவும் கொள்க. மற்றும், இதில் 'நறவுண்ட...தெறிக்கும்' என்றது நறவு கலந்த இழிந்த நீரையுண்ட இறால் அச்செருக்கினால் கூட்டுமுதற்றெறித் தது போலப் பரத்தையரின் இழிந்த இன்பத்தை நுகர்ந்த தலைவ னும் செருக்குற்றுத் தனக்குப் புறம்பாகிய வேறிடத்தே தங்கிக் கிடக்கின்ற தன்மையாகவும் கொள்க. இதில் மருதத் திணை முதல் கருப்பொருள்களுடன் உரிப்பொருள் (ஊடல்) சிறந்த முறை யில் இணைக்கப்பெற்றுள்ளதையும் உளங்கொண்டு மகிழ்க.

இன்னோர் அகப்பாடலிலும்[22] தோழி தலைமகனை வாயில் மறுக்கும் செய்தி அழகாகச் சித்திரிக்கப்பெறுகின்றது. இதில் குறிப்பிடப்பெறும் தலைவனும் பரத்தையிற்பிரிந்து திரும்பினவன், இதிலும் மருதநில வருணை மிக அழகாக வருகின்றது. ஓர் அகன்ற வயல். நீர்வள மிக்க அந்த வயலில் தாமரை மண்டிக் கிடக் கின்றது. தாமரை இலைகள் யானைச் செவிபோல் காட்சி அளிக்

---

22. அகம்-176.

கின்றன; அவற்றினிடையே மொட்டுகள் செழித்து வளர்ந்துள்ளன. இந்த மொட்டுகளிடையே தாமரைப் பூக்கள் புன்முறுவல் பூத்த முகம்போல் மலர்ந்து காணப்பெறுகின்றன. இந்த வயலில் வேம்பின் அரும்பினையொத்த கண்களையுடைய ஒரு ஞெண்டு பரத்தமைக்குப் பிரிந்து சென்றது. இந்து இரைக்காக அற்றம் பார்த்திருந்த வெண்குருகினைக் கண்டு அஞ்சி அயலிலுள்ள தழைத்த சிவதையினையுடைய கரிய சேற்றுப் பிழம்பில் தேமல் போல் வரியுண்டாக ஓடிச் சென்று விரைந்து ஈரம் மிக்க மண் அளையுட் பதுங்கிக் கொண்டது. இத்தகைய ஊர்ப் பகுதியைச் சேர்ந்த தலைவன் பரத்தையிற் பிரிந்து திரும்பி தோழியை வாயில் வேண்டி நிற்கின்றான். இந்தத் தலைவனை விளித்துப் பேசுகின்றாள் தோழி.

"ஊரனே, மலரையொத்த மையுண்ட கண்ணினையும் மாண்புற்ற அணியினையும் உடைய நின் பரத்தை தன்முன் கைகளினால் நின்னைப் பிணித்திருந்த நெடிய பிணிப்பினை விடுத்துச் சென்ற அளவிலே வெகுண்டனள்; தன் முகவனப்பு கெட ஏங்கி அழுதனள். சினத்தினால் விரல்களைப் பன்முறை நொடித்தும் எயிற்றினைத் திருகியும் சிறிதும் பொறுமையின்றி ஊரெங்கும் அலர் கூறப் பெறும் நின்னைக் காண்டற்குத் தேடிச்செல்வாள் அவள். எம் போல் புதல்வனைப் பயந்து விருந்தோம்பியும் நீண்ட மனையில் நின்னைப் பிரிந்த நிலையிலும் நினக்கு இருமைக்கும் ஏதுவாகிய மனையறத்தில் வழுவாதொழுகுகின்றோம்." என்று கூறி வாயில் மறுக்கின்றாள் தோழி.

இப்பாடலில் நண்டு குருகிற்கு அஞ்சிச் சேற்றில் தேமல்போல் வரியுண்டாக விரைந்து சென்று மண்ணளையில் செறியும் என்ற உள்ளுறையினால் பரத்தைச் சேரிக்கண் அவர் நலத்தினை நுகர்ந்திருந்த தலைவன் அலர் எழுதலை அஞ்சிப் பிறர் கூறும் பழிக்கு நாணித் தன் மனைக்கண் விரைந்து வரலாயினன் என்ற வெளிப்படைப் பொருள் பெறப்படும், இப்பாடலில் 'புதல்வற் பயந்து' என்றது, தலைவியின் முதுமையை எண்ணிப் பரத்தையிற் பிரிந்தான் எனப் புலப்படுத்தியவாறாம். 'ஊர் முழுதும் நுவலும்' என்றமையால், 'பிறர் கூறும் பழி கருதி ஈண்டு வருகின்றாயன்றி அன்பினால் வருகின்றாயல்லை' என்றுகூறி வாயில் மறுக்கின்றாள். தலைவிக்கும் தனக்கும் உள்ள ஒருமைப்பாட்டினால் தோழி 'எம் போல்' எனத் தலைவியைக் கூறினாள் என்பது அறியத் தக்கது.

நற்றிணைப் பாடல் ஒன்றில்[23] தோழி பாணனுக்கு வாயில் மறுக்கின்றாள்; பரத்தையிற் பிரிந்து சென்ற தலைவன் சிறைப் புறத்தில் இருந்து கொண்டு வாயில் வேண்டிச் செல்லுமாறு பாணனை அனுப்புகின்றான். பாணனை மறுக்கின்ற தோழி தலைமகன் கேட்குமாறு தலைவியை நோக்கிக் கூறுகின்றாள்: ''அன்னாய் ஊரன் நின்னையஞ்சிக் குழை பெய்து மாலை சூடிக் குறிய பசிய தொடியணிந்து மகளிர் வடிவங் கொண்டு விழாக் களத்துத் துணங்கையாடுகின்றான் என்று கேள்வியுற்று அவனைக் கைப்பிடியாகப் பற்ற வேண்டும் என்று சென்றேன். அங்ஙனம் சென்றபொழுது அயலானாகிய அவன் மகளிர் கோலத்துடன் வேறொரு வழியில் விரைவில் வந்து எதிர்ப்பட்டான். ''இங்ஙனம் செய்யும் நின்னைக் கேட்போருண்டோ? இல்லையோ?'' என்று யான் கூறினேன். அவனும் ஒன்றும் அறியாதவன் போல் என்கண் பசலை அழகுடைய தென்றனன். அவன் செம்மாப்புடையவனாயினும் அவனை வணங்காமல், ஆராயாமல் துணிந்து, 'எலுவ, நீ நாணுடையை அல்லை' என்று கூறிவந்தேன்'' என்கின்றாள். அயலான் என்றது, பாணன் நீங்குதற் பொருட்டு. பசலை அழகுடையது என்றது பெண்பால் ஒருத்தி இவளெனத் தோழி கருதுதற் பொருட்டு. துணங்கையாடியதையும் மகளிர் வடிவம் பூண்டதையும் கூறியது, சினம் மாறாள் என்று பாணன் கருதுதற் பொருட்டு. இங்ஙனம் பல்லாற்றானும் மருதத் திணையை அழகுறப் புனைந்து காட்டுதலால் கவிஞர் 'மருதம் பாடிய' என்ற சிறப்புடைய அடையைப் பெற்றதில் வியப்பொன்றும் இல்லை.

### (v) மருதன் இளநாகனார்

ஐந்து திணைப் பொருள்களிலும் கற்பனை நயத்துடன் பாட வல்ல பெற்றியராக விளங்கும் இப்பெருமகனார் 74 அகப்பாடல்களின் ஆசிரியர். **மருதக்கலி இவர்தம் ஒப்பற்ற இலக்கியக் கொடை.** 35 கலிப்பாக்களைத் தவிர, இவர் பாடியனவாக அகநானூற்றில் 23, நற்றிணையில் 12, குறுந்தொகையில் 4 பாடல்கள் உள்ளன.

இப்புலவர் பெருமான் இரு துருவங்களில் இருப்பவர்கள்போல் நாணுடைத் தலைவன் ஒருவனையும் நாணில் தலைவன் ஒருவனை

23. நற்-50.

யும் படைத்துக் காட்டுவர். முன்னவன் களவியல் தலைவனாகவும் பின்னவன் கற்பியல் தலைவனாகவும் காட்சியளிக்கின்றனர்.

களவியல் தலைவன் நாணமே உருக்கொண்டவன். தன் காம வேட்கையைச் சொல்லால் புலப்படுத்தக் கூசுகின்றான். இவன் நாள்தோறும் தலைவியின் இருப்பிடத்தருகில் வருவான்; வாய் வாளாது திரும்புவான். நெய்தல் நிலக்காட்சிகள் இவன் நெஞ்சத்தில் காமப்புண்ணை உண்டாக்குகின்றன. தனக்கு நேரிட்டதை நவில நா எழவில்லை. காமம் தன்னிடம் எழாதபடி காக்கவோ நெஞ்சுக்கு வன்மை இல்லை. காமம் முற்றத் துறந்த முனிவர்களையும் பதம் பார்த்து, அவர்களைத் தளர்வெய்யச் செய்யும் ஆற்றல் மிக்கது. காதல் உணர்வுக்கு அயர்வும் இல்லை; சோர்வும் இல்லை. காதல் உணர்ச்சி உள்ளத்தே கால்கொண்டுவிடின், அதனை அகற்றுதல் என்பது குதிரைக் கொம்புதான். காதலுக்கு உரியாரை எய்தும்வரை அவ்வுணர்ச்சி பொங்கிக் கொண்டிருக்குமேயன்றி அடங்குதல் இல்லை. வாய் பேச அஞ்சும் எனினும், அஞ்சிப் பேசும் பேச்சிலும் காதல் தலைக்காட்டாமல் போகாது. மெய் நெருங்க அஞ்சும் எனினும், அஞ்சும் அந்நிலையிலும் காமத் துடிப்பு புலனாகும்.

முன்னாட் போகிய துறைவன் நெருநை
அகலிலை நாவல் உண்டுறை உதிர்ந்த
கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்
தாழை வேரளை வீழ்த்துணைக் கிடூஉம்
அல்வற் காட்டி நற்பாற் றிதுவென
நினைந்த நெஞ்சமொடு நெடிதுபெயர்ந் தோனே
உதுக்காண் தோன்றும் தேரே இன்றும்.[24]

[நெருநை - நேற்று; உண்துறை-நீருண்ணும் துறை: அளை-வளை; அலவன் - நண்டு; உதுக்காண் - உதோபார்]

இது தோழி தலைவிக்குக் கூறுவதாக அமைந்த பாடல்; தலைவனது உள்ளோட்டத்தைப் புலப்படுத்துகின்றாள்: ''அடிக்கடி இவண் வந்து போகும் அன்பன் நேற்று ஒன்று செய்ததைக் கூறுவேன். நீருண்ணும் துறைக்கருகில் நாவற் பழங்கள் உதிர்ந்து கிடந்தன. நன்கு பழுத்த நாவற் கனியொன்றை ஆண் நண்டு எடுத்துச் சென்றது. அதனை வளையில் தங்கியிருந்த பெண் நண்டிற்குக்

24. அகம் - 320

கொடுத்தது. இதனைக் கண்ட அவ்வன்பன் என்னை நோக்கி 'இது நல்ல செயல் அன்றோ?' என்று சொல்லி மேலொன்றும் கூறாது சென்றுவிட்டான்; எதனையோ எண்ணிக் கொண்டே சென்றான் என்பதை மட்டிலும் யான் ஊகித்தேன் அவன் இதோ இன்றும் வருகின்றான்'' என்கின்றாள். தோழியின் இந்தக் கூற்றில் தலைவனது அடக்கம் தெரிகின்றது. அடங்கிய காமம் (Subdued passion) துடிப்பதையும் காண்கின்றோம். கவிஞர் காட்டும் களவியல் தலைமகனின் சீரிய பண்பு இது.

இளநாகனார் மிகுதியும் பாட மேற்கொண்ட உரிப்பொருள் மருதப் பரத்தமையாகும்; தலைவியின் ஊடற் பண்பை படிப் போரின் உளங்கொள்ள வைக்கும் முயற்சியாகும். இதனாற்றான் 'மருதன்' என்ற அடைமொழி தன் பெயருடன் இணைந்து **மருதன் இளநாகனார்** என்ற சிறப்புப் பெயரையும் பெற்றார். அகத் திணையில் இவர் முதல் கரு உரி என்ற மூன்று பொருள்களையும் மிகவும் அற்புதமாக அமைத்துப் பாட வல்லவர் என்றும், அகத் திணைக்கு இன்றியமையாத உள்ளுறை உவமம், இறைச்சி என்ப வற்றை நயஞ் செறிந்த நிலையில் அமைக்கவல்லவர் என்றும் தெளி கின்றோம். தலைவனது தண்டாப் பரத்தமையை இவர்தம் மருதக்கலி பாடல்கள் மாண்புற அடுக்கிச் செப்புகின்றன. அவனது பரத்தையரின் தொகை ஓர் ஊர் அளவுக்கு இருக்கும்; ஒரு பெரிய குடியிருப்பு (Colony) போல் அமையும்.

> ''ஒருூர் தொக்கிருந்த நின்பெண்டிர்''[25]

என்பது கவிஞரின் வாக்கு. பலப்பல ஆறுகள் வந்து கலப்பினும் நிறையாத கடல்போலப் பரத்தையர் பலரோடு உறவாடியும் அவன் உள்ளத்துக்குக் காமநிறைவில்லை; நாளும் புதுவோரை விரும்புபவன், வகைப் பெருக்கம் வாழ்க்கையின் சுவை (Variety is the spice of life) என்ற கொள்கையையுடையவன் எனத் தலை வனது தண்டாக்காமம் சிறப்பாகப் புனையப்பெறுதலை இக்கவிஞர் கோமானின் மருதத் திணைப் பாடல்களைப் பயில்வதால் அறியலாம்.

> 'நீயே பெருநலத்தையே; அவனே
> நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்
> தண்கமழ் புதுமலர் ஊதும்
> வண்டெனா' மொழிப; 'மகன்'என் னாரே.[26]

25. கலி - 68
26. நற்-290

களைப் பற்றியதன்று; அப்பாக்களை யாத்த கவிஞர்களின் புலமை பற்றியதே என்பதை அகத்திணை ஆராய்ச்சியில் புகுவார் மனத்தி லிருத்த வேண்டிய விதிகளில் ஒன்றாகும்.

இளநாகனார் படைத்துக் காட்டும் திணைத்தலைவி இல்லறத் திலகமாகத் திகழ்பவள். தலைவனது பெரும் பரத்தமையையும் பொறுத்துக் கொள்ளும் பண்பு அவளுக்கு உண்டு. தலைவன் பரத்தைக் குறியோடு வரினும் அவன்பால் உள்ளம் நெகிழ்ந்து ஏற்கும் உயர்பண்பு அவளிடம் காணப்பெறும். தலைவன் பரத் தையர் வீடே புத்தேளிர் உலகம் எனக் கொண்டு ஆண்டிற்கு ஒரு முறை வரினும் கூட அவன் வரவை மழை வரவு போல மதிப்பாள்.

ஆராத் துவலை அளித்தது போலுநீ
ஓர்யாட் டொருகால் வரவு[28]

[துவலை-தூற்றல்; ஒருகால்-ஒரு முறை]

தலைவன் வருவதற்கு முன்னே அவன் வரவை உடன்பட்டு ஏற்தலாகாது, நெஞ்சம் நெகிழ்தலாகாது, இன்முகம் காட்டலா காது என்று மனஉறுதி கொண்டிருப்பினும், அவனைக் கண்டதும் தன் கடனைஉணர்கின்றாள்; அவனதுகுற்றங்களைமறக்கின்றாள்.

மாய மகிழ்நன் பரத்தமை
நோவென் தோழி! கடன்நமக் கெனவே.[29]

தலைவனின் இழிவுப் போக்கை உணராதவள் அல்லள் என்பதைப் பல கலிப்பாடல்களால் அறியலாம். அவன் சிறந்த ஒழுக்கத்தன் என்று தன்னை ஏமாற்றிக் கொள்பவளும் அல்லள் என்பதையும் பல பாடல்களால் தெளியலாம். தலைவனை ஏற்று இன்புறல், இன்புறுத்தல் தனது கடன் என்ற ஓர் உயர் அறத்தையே கடைப் பிடிப்பவள் இளநாகனார் காட்டும் தலைவி. இக்கவிஞர் கோமானின் மருதக்கலியில்[30] பரத்தையர்க்கு முதன்மை இல்லை; தலைவனது பரத்தமைக்கும் முதல் இடம் இல்லை. தலைவனது புறத்தொழுக்கத்தையெல்லாம் அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலப் பொறுத்துத் தாங்கி அவனுக்கு வாயில் நேர்ந்து பாயல் கொண்டு அணைந்து மகிழும் தலைவிக்கே முதன்மையான இடம். **மருதக் கலிகள் சுரிதகத்தில் குறிஞ்சியாக முடிவதே இதனைத் தெளிவாக்கும்.**

---

28. ஷை-71.
29. ஷை-75
30. ஷை-88.

இணைத்து வைக்கும் பாலம்போல் தனயன் அமைகின்றான். பகல் முழுதும் வேறிடத்துத் தங்கிய பரத்தனே என்று தலைவி சீற்றங் கொள்ளுங்கால் தலைவன் யாதும் மறுமொழி பகராது மகனைத் தழுவிக்கொண்டு தூங்குவது போலக் கிடப்பான் (கலி-79). 'மகன் அருகில் செல்லற்க; எதிரில் நில்லற்க' என்று தலைவி அவனுடன் மாறுபட்டிருக்கும்போது 'மேதக்க எந்தை பெயரனை யாம் கொள்வோம்' என்று சொல்லிக் கொண்டு தாவா விருப்பொடு கன்று இருக்கும் இடம் செல்லும் ஆபோல் மகன் இருக்குமிடம் பாய்வான் (கலி-81). மகன் கைபுனை வேழ வண்டியை இயக்கி விளையாடும் நிலையில், மகனுக்கு அறம் உரைப்பவள்போல் தலைவி அவன் தந்தையை இடித்து உரைக்கின்றாள். 'சில நல்ல பண்புகளில் தந்தையை யொப்பாய்; சில தீய பண்புகளில் அவனை ஒவ்வாதே' என்று கூறிப் பொழுது போக்குகின்றாள். இந்நிலையில் தலைவியின் பின்புறமாகத் தலைவன் வந்து நிற்கின்றான். மகன் அவனைப் பார்த்து நகுகின்றான். தலைவி திரும்பிப் பார்க்கத் தலைவன் நிற்பதைக் காண்கின்றாள். 'இவனை என்னிடம் தருக' என்கின்றான் தலைவன். தாயின் பிடியை விலக்கிக் கொண்டு தந்தையின் மார்பில் பாய்கின்றான்

குன்ற இறுவரைக் கோண்மா இவர்ந்தாங்கு
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தான் அறனில்லா
அன்பிலி பெற்ற மகன்.[34]

[குன்ற-மலையிடத்து உறுகின்ற; இறுவரை-அடிவரை; கோண்மா-சிங்கம்; இவர்ந்தாங்கு-பாய்ந்தாற் போல்; வியன் மார்பு-அகன்ற மார்பு; அன்பிலி-அன்பு இல்லாதவன்.]

என்று பெருமித உவமை கூறுகின்றாள். இதனால் ஊடல் தீர்கின்றாள் என்பது பெறப்படுகின்றது.

தலைமகன் பரத்தை வீட்டிலிருக்கும்போது தலைவிக்கு மகன் ஆறுதல் அழிக்கும் பொருளாக அமைகின்றான். கிண்கிணி ஆரவாரிக்க அசைந்தசைந்து நடக்கும் தளர்ந்த நடையைக் கண்டும், பார்வையால் ஈர்க்கின்ற அழகினையுடைய அவன் 'அத்தத்தா' என்று கூறும் தேமொழியைக் கேட்டும், 'திங்கட் குழவி வருக' என அவனுக்கு அம்புலி காட்டியும் ஆறுதல் அடைய

34. கலி-86.

முயல்கின்றாள் ஓர் இல்லற நங்கை (கலி-80). பல்வேறு அணிகலன்களைப் பூண்டு ஆடைவகைகளை அணிந்து நடைவண்டி தள்ளி வரும் அருமை மகனைப் பாலுண்ண அழைக்கின்றாள் மன்றொரு தலைவி. நுந்தைக்கு ஒருவாய், நின் வளர்ப்புத் தாய்மார்க்கு ஒரு வாய், நின் தாய்க்கு ஒருவாய் என்று சொல்லிச் சொல்லிப் பாலைப் பகுத்தூட்டுகின்றாள் (கலி-85). இங்ஙனம் மருதக் கலியில் தூய பெண்ணின் தாய்மையைக் காண முடிகின்றது; பரத்தைத் தலைவனுக்கு மகப்பற்று உண்டு எனவும், அப்பற்று குடும்பப் பற்றினைப் பெருக்கும் எனவும் தெளிகின்றோம்.

மருதக் கலி பல்வகை மாட்சியுடையது; தலைவியின் கற்பு மேம்பாட்டையும் அவளது ஊடற்கலையையும் காட்டி நிற்பது. சில பாடல்களில் தலைவன் மெய்யான பரத்தனாகக் காணப் பெறுகின்றான்; சிலவற்றில் பரத்தனாகக் கருதப்பெறுகின்றான். சில புலவிக் காட்சிகள் வள்ளுவர் புனைந்து காட்டும் புலவிக் காட்சிகளையொத்துள்ளன. ஆடவனுக்கு ஒரு மணவரம்பு இல்லாததால் அவ்வரம்பு உடைய தலைவி கணவனைப் பல மனத்தனாகக் கருதுவாள்; அவனுக்கு முன்னர் வெளிப்படையாகவும் கூறுவாள். இதனைப் பொறுக்கலாற்றாத தலைவன்,

செய்யாத சொல்லிச் சினவுவ திங்கெவன்
ஐயத்தால் என்னைக் கதியாதி தீதின்மை
தெய்வத்தால் கண்டீ தெளிக்கு.

என்று தலைவியை வேண்டுகின்றான். (கலி-91)

வந்தெனைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தை யாலும் தொடேனென்ற செவ்வரந்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.[35]

[வைகல்வாய்-அந்நாளில்]

என்பது இராமன் சீதைக்கு வரங்கொடுத்த செய்தியைக் கூறும் இராமாயணக் குறிப்பு. இதனைக் கிடைத்தற்கரிய வரமாகப் போற்றுகின்றாள் சீதை. ஆடவன் மணவரம் பற்றவன் என்பது சமுதாய அமைப்பு. 'இருமனைவி' என்னாது 'இருமாதர்' என்பதனால் பரத்தை வழக்கியலை உளங்கொண்டு இராமன் வரம் நல்கினான் என்று கொள்ளலாம். பகைவர் சிதைந்தோடுமாறு பொரேனாயின்,

35. கம்ப. சுந்தர-சூளாமணி-34.

தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் தாரே,[36]

[பல்லிருங் கூந்தல் மகளிர்-பொதுப் பெண்டிர்; ஒல்லா-பொருந்தா; முயக்கு-புணர்ச்சி; தார்-மாலை.]

என்று சோழன் நலங்கிள்ளி வஞ்சினம் கூறினான். இங்ஙனம் கூறும் வழக்கு இற்பெண்டிற்கு இல்லை அன்றோ? எனவே, ஆடவன் மெய்யாகப் பரத்தன் அல்லன் ஆயினும், சமுதாயக் கண்ணுக்கும் மனைவியின் உள்ளத்துக்கும் பரத்தன்போலத் தோற்றம் அளிக்கின்றான். இதுவே சில மருதக் கலிக்கு அடித்தள மாக அமைந்தது.

புலவொழுக்கத்தின்பாற்பட்ட கணவன் தான் துறவகத்திருக்கும் முனிவர்களாகிய கடவுளர்களிடம் தங்க வந்ததாகக் கூறுகின்றான். நெட்டிருங் கூந்தல் உடைய கடவுளா? என்று நகையாடிப் புலந்தாள் அவன் துணைவி (கலி-93). வெளியில் சென்று மீண்ட தலைவனை 'எங்குச் சென்றிருந்தாய்?'' என வினவிய தலைவிக்குக் ''குதிரை ஏறிவருகிறேன்'' என்றான் அவன். ''கூந்தலும் மேகலையும் சிலம்பும் உடைய காமக் குதிரையை 'அணிநிலா முற்றத்தில்' இவர்ந்து விளையாடினையோ? அக் குதிரை விளையாட்டு உன் அழகைக் கெடுக்கும்'' என்று புலந்தாள் இல்லக் கிழத்தி கலி-96) இன்னொரு தலைவன் ''நம் வலைக்குள் ஒரு யானை மாட்டிக்கொண்டது. அந்தப் புதிய யானையைக் கண்டு களித்து வந்தேன்'' என்கின்றான். ''ஆம்; உண்மைதான். நானும் கேள்வியுற்றேன். அந்த யானைக்கு நெற்றியிலே திலகம் உண்டு. தொய்யில் ஓவியம் வரைந்த வனமுலை உண்டு. காதில் மகரக்குழை உண்டு. மணப்பொடி பூசி நறுங்கள்ளுண்டு எல்லாரையும் பிணித்தற்குக் கதவுக்கருகில் சாய்ந்து நிற்பதும் உண்டு. மதம் மிகுந்துவிடாதபடி அதனை மெல்லெனப் பரிகரித்துக் கொள்'' என்று புலந்து கூறினாள் இல்லக்கிழத்தி (கலி-97). பிறிதொரு தலைமகன்,

''பொருகரை வாய்சூழ்ந்த பூமலி வையை
வருபுன லாடத் தவிர்ந்தேன்.

அதனால் காலங் கடந்தது'' என்கின்றான். ''உண்மையே. நீ ஆடிய புனலுக்குக் கருமணல் கூந்தலாகும்; மீன்கள் நயனங்களா

36. புறம்-37.

கும்; அப்புதுப் புனல் நாணாகிய கரையை உடைத்துக் கொண்டு பகற் காலத்தில் ஓடிவரும் என்று அறிந்தேன்'' என்று கூறி நகைத்தாள் கற்புக் கடம் பூண்ட காரிகை (கலி-98). கடவுள், குதிரை, யானை, புனல் இவை பலவகைப் பரத்தையர் எனக் கருதி ஊடல் மிகுந்தாள் தலைவி. இக்கலிப் பாக்களின் போக்கை ஆராய்ந்தால் தலைவன் உண்மையில் பரத்தன் அல்லன் என்பதும், பரத்தனாகப் படைத்து மொழிந்து ஊடற் கிளவி தொடுகின்றாள் என்பதும் தெளிவாகும்.

பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்த! நின் மார்பு.[37]

[நண்ணேன்-பொருந்தேன்]

என்று புலவி நுணுக்கம் கூறும் வள்ளுவரின் வாக்கையும் எண்ணுக.

இளநாகனார் காட்டும் தலைவன் பரத்தனாயினும் பரத்தனல்லனாயினும் துணைவியின் ஊடலை மதித்துப் போற்றுபவன். இங்ஙனம் பரத்தன் என்று தன்னைப் பொய்படப் புனையுங்கால் இதனைக் காதற் பாங்கு என்று உணர்ந்து ஊடல் மிகத் தானும் உளறிக் கொட்டுவன். இத்தகைய ஊடலறிவு காதல் நம்பியர் கருத்திற் கொள்வார்களாக.

மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலை புலவியுள் உரிய.[38]

என்பது தொல்காப்பியரின் புலவிக் கலை. ''சோராத காதல் பெருஞ் சுழிப்பில்'' (இராமாநுச, நூற். 15) பொய் மெய்யாகும்; தாழ்வு உயர்வாகும். காதற் போர்க்களத்தில் கணவனின் அடிமையும் மனைவியின் தலைமையும் வெறியூட்டி இன்ப வெற்றியை நல்குகின்றன. இந்த உண்மையை நன்கறிவர் இளநாகனார். இந்த உண்மை இவர்தம் கலிப்பாடல்களில் காட்டும் அகத்திணைத் தலைவன் தலைவிமுன் செய்யும் பணி நிலைகளாலும் மொழியும் பணிவுரைகளாலும் தெளிவாகும்.

37. குறள்-1311
38. பொருளியல்-31

## (vi) ஓரம்போகியார்

ஓரம்போகியார் 109 அகப்பாடல்களை நமக்குத் தந்த பேராசான். ஐங்குறுநூற்றில் முதல் 100 பாடல்களை (மருதத் திணை) இயற்றியவர். இவை தவிர குறுந்தொகையில் ஐந்து (10, 70, 122, 128, 374), நற்றிணையில் இரண்டு (20, 360), அகத்தில் இரண்டு (286 316) ஆக ஒன்பது அகங்களின் ஆசிரியர். **மருதத் திணையை விரித்து** அந்நிலத்திற்குரிய கருப்பொருள்களைத் திணைக்கேற்ற பொருள்களாகக் கொண்டு உள்ளுறை உவமம், இறைச்சி முதலாயவற்றை அமைத்துப் பலவகைச் சத்துவமும் புலப்படக் காட்டிப் பரத்தையிற் பிரிவு முதல் எல்லாவற்றையும் **தெளிவாகக் கூறும் ஆற்றலுடையவர்.** இவர் பாடிய பாடல்கள் அனைத்தும் மருதத்திணை பற்றியவையே. இவர்தம் களவுப் பாடல்களில் தலைவி கூற்று இடம் பெறவில்லை. கபிலர், அம் மூவனாருக்கு அடுத்தபடியாக அதிகமான பாடல்களை இயற்றி யவர் இப்பெருமகனார்.

மருதத்திணைப் புலவராகிய இவர் பரத்தமைத் துறைகளை பல்வேறு வகையாகச் சிறப்பித்துப் பாடியவர். பரத்தையிற் பிரிந்து சென்ற தலைவன் இல்லம் திரும்பித் தோழியை வாயில் வேண்டி நிற்கின்றான். வந்தவன் "அங்கவர் யாரையும் அறியேன்" என்று சூள் செய்கின்றான். தோழி, "பரத்தையர் மாட்டும் நீ இங்ஙனமே சூள் செய்து அவர் நலன் நுகர்ந்து இப்பொழுது பிரிந்தாய் அவ்வியல்பே ஈண்டும் நின்பால் உள்ள தாதலின் நின்சூள் ஏற்கத்தகுவதன்று என்று கூறித் தோழி வாயில் மறுக்கின்றாள் (குறுந் 384) இன்னொரு தலைவன் "யாரையும் அறியேன்" என்று சொல்லிக் கொண்டு வருகின்றான். தலைவி அவனை நோக்கி, "ஐயனே, நேற்று நின்னைப் புணர்ந்த குறிப்பை யாம் நோக்கி ஏக்கமுற அக்குறிப்புகளோடு பரத்தை யொருத்தி இத்தெருவில் வந்தாள். அவளே இன்று நின்னைப் பிரிதலாலே நின் முயக்கம் நீங்கினவளாகி ஏக்கத்துடன் வந்ததை இன்று இத்தெருவில் கண்டேன். ஏன் வீணாகப் பொய் புகலு கின்றனை" என்று வெகுண்டு கூறுகின்றாள் (நற். 20) தலைவன் ஒருவன் பரத்தையிற் பிரிந்து வருகின்றான். தலைவி அவனிடத்துச் சினமுடையவளாக இருக்கும் குறிப்பை யறிந்த தோழி "எம்பெருமானே, பலரும் இகழ்ந்து கூறுதல் பொறாது நீ வெள்கி யுற்ற தன்மைக்கு மகிழா நிற்பேன்; இம்மனையின் கண்ணே வந்து துயில்வது பிறிதொரு பொழுதினும் கைகூடும். ஆதலால்,

நேற்றைப் பொழுதில் வந்து நின்னை முயங்கிய பரத்தையருடைய புதிய நலனையெல்லாம் கொள்ளை கொண்டாய். இன்று பாணனால் கொணர்ந்து தரப்பெறுகின்ற பரத்தைருடைய மெல்லிய தோளையணையும் வண்ணம் விரைந்து செல்வாயாக; நின்னொடு நின் பரத்தை நீடு வாழ்வாளாக'' என்று கூறி வாயில் மறுக்கின்றாள் (நற். 360)

தலைமகனது புறப்போக்கு பற்றி மிகவும் கவல்கின்றாள் தலைவியொருத்தி. எவ்வாற்றானும் அவள் மனம் தலைவனை இல்லத்தினுள் அனுமதிக்க இசையவில்லை. இந்நிலையில் அறிவுடைத் தோழி அவளை நெருங்கிப் பேசுகின்றாள்:

பரத்தமை தாங்கலோ இலன்என வறிதுநீ
புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை
அதுபுலந் துறைதல் வல்லியோரே
செய்யோள் நீங்கச் சில்பதம் கொழித்துத்
தாம்அட் டுண்டு தமிய ராகித்
தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப
வைகுந ராகுதல் அறிந்தும்
அறியா ரம்மவஃ துடலு மோரே.[39]

[வறிது-பயனின்றி; வல்லியோர்-வன்மையுடையோர்; பதம்-அரிசி; அட்டு-சமைத்து; திரங்குமுலை-சுருங்கிய முலை; உடலுமோர்-மாறுபடுவோர்]

''ஊடல் பொருந்தாது. இதனால் குடும்பத்தினின்று திருமகள் நீங்குவாள். தனியாகத் தலைவி வாழின், குழந்தைகள் மெலிவு எய்தும்; இல்லறமும் வற்றிவிடும்'' என்கின்றாள். ''பொறுக்க அறியாமையினால் கெட்ட குடிகளை காணாயோ?'' என்று எடுத்துக் காட்டுகின்றாள். பொறுப்பதே அகத்தலைவியின் பொறுப்பு என்பது தோழியின் அறவுரை; நல்லுரை. இல்லறப் பிணிப்பிற்குப் பொருட் பிணிப்பு ஒரு காரணம் என்பதைக் கவிஞர் இப்பாடலில் வைத்து அறிவுறுத்துவதைக் காண்க.

தலைவனது பரத்தமை எத்தகைய பெண்டிரின் உள்ளத்தையும் குலைக்கவே செய்யும் என்பது உளவியல் உண்மை தலைவன் முதற் பரத்தையை விட்டு நீங்கி மற்றொரு பரத்தையை நாடும்

39. அகம்-316. (அகச் செய்யுட்களுள் அரியதொரு பாடல் இது)

போது முதற் பரத்தை கூட உள்ளம் நோகின்றாள் (ஐங்-42). கணவனது இழிவொழுக்கத்தைக் கண்டு எம்மனைவியும் மகிழ்ந்திராள். ஓரம்போகியார் தலைவனது பரத்தமைக்கு உள்ளம் பொங்குவர்; சிறிதும் இசைந்து வாழ மனம் ஒருப்படார்; எதிர்ப்பும் காட்டுவர்.

மாநீர்ப் பொய்கை யாணர் ஊர!
தூயர்; நறியர்நின் பெண்டிர்;
பேஎய் அனையம்யாம்; சேய்பயந் தனமே [40]

[மாநீர்-மிக்கநீர்; யாணர்-புதுவருவாய்; நறியர்-மணம் கமழ்பவர்; சேய்-மகவு.]

என்பது ஒருதலைவியின் கடிந்து கூறும் வல்லுரை. "சின்னஞ்சிறு குழந்தை போல இங்ஙனம் நடந்து கொள்ளலாமோ? ஊர் சிரிக்காதோ?" என்பது ஒரு தலைவியின் அறிவுரை.

சிறுவரின் இனைய செய்தி;
நகாரோ பெரும!நிற் கண்டிசி னோரே. [41]

[நகுதல் - எள்ளி நகைத்தல்; கண்டிசினோர் — நினது தீநெறிச் செலவினைக் கண்ட சான்றோர்].

என்பது ஓரம்போகியாரின் வாக்கு. "தாய்போற் களறித் தழீஇக் கோடல், ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப" (தொல். பொருள். கற். 32) என்பது இதற்குத் தொல்காப்பியர் கூறும் விதி. "தற்கொண்டாற் பேணுதலும் தகைசான்ற சொற்காத்தலும்" (குறள்-56) குலமகளின் கடமையாதலின் இங்ஙனம் தலைவனைக் கழறுதல் தலைவிக்கு அறமாயிற்று. இன்னொரு தலைவி,

எம்நலம் தொலைவ தாயினும்
துன்னலம் பெரும!பிறர்த் தோய்ந்த மார்பே. [42]

[துன்னலம் - முங்குவேம் அல்லேம்]

என்று கொதித்து மொழிகின்றாள். "நின் தந்தை தாயரைக் காட்டிலும் ஒழுக்கத்தில் நின்னை இடித்துரைக்கும் உரிமை எம் தலைவிக்கு உண்டு" என அமைதி காட்டுகின்றாள். (ஐங் 98). இங்ஙனம் பல்வேறு எதிர்ப்புத் தலைவியரைக் காட்டுவர் ஓரம்போகியார்.

---

39. ஐங்குறு - 70
40. ஷை - 85
42. ஷை - 63

ஓரம்போகியார் ஐங்குறு நூற்றில் படைத்துக் காட்டும் தலைவன் பரத்தையரே கதி என அவர் வீட்டில் கிடக்கும் ''பண்பாளன்''. நண்டு (21, 22, 23,) முதலை (41), ஆமை (43, 44) நீர் நாய் (63), நாரை (70), எருமை (93, 99), ஆகியவை, தலைவனது இழிபெருங் காமத்திற்கு உள்ளுறை உவமமாக அமை கின்றன. மணமான சின்னாட்களுக்குள் ஒரு தலைவன் பரத்தனா கின்றான் (22). நெடுந்தொலை சென்று பன்னாட்கள் தங்கி மீண்டு வந்த சின்னாட்களில் பரத்தமை எய்துகின்றான். பரத்தைய ருள்ளும் ஒருத்தினைய விட்டு மற்றொருத்தியை நாடுகின்றான் மற்றொருவன் (61). பரத்தையர் வீடே கதி என்று பன்னாள் தங்கி விடுகின்றான் பிறிதொருவன் (70). புறவொழுக்க அடையாளங் களுடன் இல்லம் திரும்புகின்றான் மற்றும் ஒரு தலைவன். ஓரம் போகியார் பாடல்களில் இங்ஙனம் பல்வேறுபட்ட பரத்தமைத் தலைவர்களைக் காண்கின்றோம்.

மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்
வண்டின் மாண்குணம் மகிழ்நன்கொண் டான்கொல்
அன்ன தாகலும் அறியாள்
எம்மொடு புலக்குமவன் புதல்வன் தாயே[43]

இவ்வாறு தலைமகனது தண்டாப் பரத்தமையைக் கண்டு ஒரு பரத்தையே இறும்பூது எய்துகின்றாள் அவனது ஒழுக்க மின்மையை அவளும் பொறுக்கவில்லை. ஆயினும், ஓர் எல்லையை அடைந்தபின், திருந்துவதே வாழ்வு என்று எண்ணும் நல்ல தலைவர்களையும் காட்டுகின்றார் ஓரம்போகியார். பரத்தமை எல்லை கண்டு நுகர்ந்த தலைமகன் ஒருவன் அதனைக் கைவிட முயல்கின்றான்.

தண்டுறை யூரன் தெளிப்பவும்
உண்கண் பசப்பது எவன்கொல் அன்னாய்[44]

'புறத்தொழுக்கம் இனி எனக்கு இல்லை' என்று தலைமகன் தெளிப்பவும், உண்கண் பசப்பது சரியன்று எனத் தோழி தலைவி யைத் தெருட்டுகின்றாள். பரத்தமையை முற்றிலும் கடிந்த தலைவர்களை ஐந்து செய்யுட்களில் காண்கின்றோம்.[45] இத் தகைய தலைவர்களைக் கொண்டு கவிஞர் நூலைத் தொடங்குத லால் எந்நிலையரும் நன்னிலைக்குத் திரும்பலாம்; திரும்ப வேண்டும் என்பது இவர்தம் கருத்தாதல் தெளிவு.

43. ஷை -
44. ஷை - 21
45. ஷை (1-5)

வாழி யாதன், வாழி அவினி
நெல்பல பொலிக பொன்பெரிது சிறக்க
எனவேட் டோளே யாயே.[46]

என்பது தோழி கூற்று. நல்வாழ்வுக்குத் திரும்பிய தலைவன் தோழியை நோக்கி ஒருநாள் "நான் பரத்தனாய்த் திரிந்த காலத்து நீங்கள் என்னைப்பற்றி என்ன நினைத்தீர்கள்?" என்று கேட்டமைக்குத் தோழி கூறிய மறுமொழி இது. அத்துடன் விட்டாளா?

நனைய காஞ்சிச் சினையயாமே சிறுமீன்
யாணர் ஊரன் வாழ்க
பாணனும் வாழ்க எனவேட் டேமே.[47]

என்று ஆயம் நினைத்தவற்றையும் வெளியிடுகின்றாள். தலைவன் நிலை திரிந்த காலத்தும் தலைவி தன் கடமை நிலை, எண்ண நிலை திரிதல் கூடாது என்பது கவிஞரின் உறுதிப்பாடு.

தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப.[48]

என்பது தலைவிக்குத் தொல்காப்பியர் கூறும் இலக்கணம் அன்றோ?

உள்ளுறை என்னும் இலக்கியக் கருவி மருதத்திணை பாடுவோர்க்கு மிகவும் இன்றியமையாதது. ஐம்பது பாடல்கட்கு மேலாக உள்ளுறை அமைத்துப் பாடியவர் ஓரம்போகியார்; இலக்கிய அழகை மிகுவிக்கும் இக் கருவியைக் கையாளும் திறனால் இயற்கை வனப்பு, உவமைத் தன்மை, நாகரிகப் பண்பு, புலமைக் கூர்மை முதலியவை இவர் பாடல்களில் பளிச்சிட்டுக் காட்டும். அடிகளால் குறைவுடைய ஐங்குறுநூற்றுப் பாடல்களில் உள்ளுறை அமைப்பது அருமை யாகும். ஆனால் ஓரம்போகியார் இதனை அற்புதமாக அமைத்துக் காட்டுகின்றார்.

பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற்
கழனி யூரன் மார்பு (4)

---

46. ஷை - 1
47. ஷை - 1
48. கற்பியல் - 32

கரும்புநடு பாத்தியிற் கலித்த ஆம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புனல் ஊர 65

[கலித்த - தழைத்த; சுரும்பு - வண்டு]

பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉம் ஊர (63)

என்ற பாடற் பகுதிகளில் இந்த அருமைப்பாட்டைக் கண்டு மகிழலாம்.

## (vii), அம்மூவனார்

இவர் 127 அகப்பாடல்களின் ஆசிரியர். அகத்திணைப் பாட்டெண்ணிக்கையில் கபிலருக்கு அடுத்தவராக நிற்பவர். புறத்திணை பாடாப் புலவர். இவர் பாடல்கள் அகநானூறு (6), நற்றிணை 10), குறுந்தொகை (11), ஐங்குறுநூறு (100) என்ற நான்கு தொகை நூல்களிலும் இடம் பெற்றுள்ளன. 'குறிஞ்சிக் கபிலன்' என்பது போல இவர் **நெய்தல் அம்மூவன்** எனச் சிறப்பிக்கப் பெறுவர். இவர்தம் பாடல்கள் நெய்தல் திணைக் கருப்பொருள்களை நுனித்தாய்ந்து ஆட்சி செய்திருத்தலைச் செவ்விதின் புலப்படுத்தும்.

அம்மூவனார் நெய்தல் திணைக்குரிய இரங்கற் பொருளைப் பாட வேண்டியிருப்பினும், புணர்தல் இருத்தல் ஊடல் என்ற பிற உரிப் பொருள்களையும் நெய்தற் சூழ்நிலையில் வைத்துப் பாடியுள்ளார். இது இவர்தம் தனிச் சிறப்பு.

பெருங்கடல் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி நெய்தல் சிதைக்கும் துறைவன்
'நல்லன்' என்றி யாயின்
பல்லிதழ் உண்கண் பசத்தல்மற் றெவனோ.[49]

என்பது கணவனது பரத்தொழுக்கம் பற்றித் தலைவி புலந்து கூறும் பாடலாகும். இது நெய்தல் நிலத்து ஊடல் உரிப்பொருள் குறித்தது. இருப்பினும் கடற்கரை, காக்கை, இருங்கழி, துறைவன் என இப்பாடலில் நெய்தல் திணைச் சூழலை அமைத்திருத்தல்

49. ஐங். 170

காணலாம். புணர்தலுக்கு மலைப்பாங்கும், ஊடலுக்கு வயவிடமும், இருத்தலுக்குக் காட்டுச் சார்பும் அமைத்தல் வேண்டும் என்ற **புலநெறி வழக்கத்தைத் தழுவாது இயல்பு நெறிப்படி பாடிய வித்தகர்** இவர். இவர் பாடல்கட்கு நெய்தல் நில மக்களே தலைமக்கள். ஆதலின் எல்லா உரிப்பொருளுக்கும் களமாக ஒரு திணையையே கொண்டனர். பரத்தையரைக்கூட 'நெய்தலங் கண்ணி' (ஐங். 135) என்று சுட்டியுரைப்பர்.

தலைவியொருத்தி உடன்போக்கில் செல்கின்றாள்; மெல்லக் கடத்திச் செல்லும் தலைவன் இடைச்சுரத்தில் கூறுகின்றான்:

வருமழை காத்த வானிற விசும்பின்
நுண்துளி மாறிய உலவை அங்காட்(டு)
ஆல நீழல் அசைவு நீக்கி
அஞ்சுவழி அஞ்சாது அசைவழி அசைஇ
வருந்தாது ஏகுமதி; வால்இழைக் குறுமகள்!
இம்மென் பேரலர் நும்மூர்ப் புன்னை
வீமலர் உதிர்ந்த தேன்நாறு புலவின்
கானல் ஆர்மணல் மரீஇக்
கல்லுறச் சிவந்தநின் மெல்லடி உயற்கே.[50]

[வான்நிறம்-வெளியநிறம்; கரிய நிறமுடைய விசும்புமாம்; உலவை-காற்று; அசைவு நீக்கி-இளைப்பாறி; அசைஇ-தங்கி; ஏகுமதி-ஏகுவாயாக; வால் இழை-தூய அணிகள்; பேர்அலர்-பெரிய பழிச்சொல்; கானல்-கடற்கரைச்சோலை; மரீஇ-நடந்து; உயற்கு-வருந்தாதிருக்கும் பொருட்டு]

இப்பாடலை 'வருமழை........ அங்காட்டு' என்று பாலைத் திணையில் பாடத் தொடங்கிக் கிளவித் தலைவியை 'வால் இழைக் குறுமகள்...உயற்கே' என்பதனால் நெய்தல் நிலத்தினளாக அமைத்துப் பாடியிருத்தலைக் கண்டு மகிழ்க. நெய்தல் திணையில் பாலை உரிப்பொருளாகிய உடன்போக்குப் பிரிவை அமைத்துப் பாடியிருக்கும் அருமைப்பாட்டை நுகர்ந்து மகிழ்க.

அம்மூவனார் தம் பாடல்களில் படைத்துக் காட்டும் தலைவியர் மன உறுதியையும் உணர்ந்த அடக்கத்தையும் அணிகலன்களாகக் கொண்டவர்கள். தீமைக்குப் பணியார்; தம் பண்பிலும் மாறார். தலைவி ஒருத்தியின் பெற்றோர் வேறொரு

---

50. நற். 76.

வனுக்கு மணம் பேசத் துணிந்தனர். இதனைச் செவியுறுகின்றாள் இளமங்கை; மனம் கலங்குகின்றாள்; யாதும் பேசிற்றிலள்; பாலும் உண்ணாது பழங்கண் கொண்டிருக்கின்றாள்.

தண்ணந் துறைவன் நல்கின்
ஒண்ணுதல் அரிவை பாலா ரும்மே.[51]

[நல்கின்-தண்ணளி செய்யின்; பால்ஆரும்-பால் பருகுவாள்]

இது தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது. 'துறைவன் நல்கின் பாலாரும், நல்கானாயின் இறந்துபடும்' என்கின்றாள். இது குறிப்பெச்சம்.

இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியர்எம் கணவனை
யானா கியர்நின் நெஞ்சு நேர்பவளே.[52]

[இம்மை-இப்பிறப்பு; மறுமை-வேறு பிறப்பு; நீஆகியர்-நீயே ஆகுக; யான் ஆகியர்-யான் ஆகுக: நெஞ்சு நேர்பவள்-மனத்திற்கு ஒத்த காதலி]

இது ஒரு தலைவியின் மன உறுதி. தலைவன் பெரும்பரத்தன். இவன் இன்பத்துறையில் எளியன் ஆயினும் தலைவி நெஞ்சு மாறிற்றிலள்; இல்லறத்தையும் துறந்திலள். தம்முடைய அன்பு பிறவிதோறும் தொடரவேண்டும் என்ற பெரு விருப்பினள்.

இதுவே தமிழர் கண்ட இல்லற நாகரிகம். ''இம்மை மாறி மறுமையாயினும்'' என்ற உறுதித் தொடரைக் கேட்கும் எந்த ஆடவனது மனமும் சிறிதாவது சிந்திக்குமன்றோ? மானம் மிக்க ஆண்தகை சிந்திப்பான் என்று சொல்லவும் வேண்டுமா?

ஈண்டு நானிருந் தின்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்துதன் மேனியைத்
தீண்ட லாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டினாள் தொழுது, என்று விளம்புவாய்.[53]

என்று சீதையின் வாயில் வைத்துத் தமிழர் கண்ட இல்லற நாகரிகத்தைப் பேசுவான் கம்பன்.

---

51. ஐங். 168.
52. குறுந். 49
53. கம்ப. சுந்தர. சூளா. 35

சாதல் அஞ்சேன்; அஞ்சுவல் 'சாவின்
பிறப்புப் பிறிதாகுவ தாயின்
மறக்குவேன் கொல்என் காதலன்' எனவே,[54]

"நான் இறப்பதற்கு அஞ்சுகிற்பேன் அல்லேன்; அவ்வாறு இறந்துழி இனிவரும் பிறப்பு மக்கட் பிறப்பின்றி வேறொரு பிறப்பாகி மாறிவிடின் என் காதலனை அப்போது மறப்பேனோ என்று அவ்வொன்றனுக்கே அஞ்சா நிற்பேன்" என்று கழறு கின்றாள் இன்னொரு தலைவி. இங்ஙனம் பெண்ணுள்ளத்தைத் தமிழ்ச் சமுதாயம் வளர்த்த மாண்பு இது.

விழுமியோர் நட்புபற்றிச் சங்கச் சான்றோர் பெரிது, உயர்ந்தது, இனிமைபயப்பது, எனக் சாற்றியுள்ளனர்.

நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று;
நீரினும் ஆரள வின்றே.[55]

என்று குறுந்தொகையும்,

தாமரைத் தண்தாது ஊதி, மீமிசைச்
சாந்தில் தொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை;[56]

என்று நற்றிணையும் கூறுதல் காணலாம். அம் மூவனார்,

கடலினும் பெரிதெமக்கு அவருடை நட்பே.[57]

என்று கூறுவர். தலைவனை விட்டுத் தலைவி வாழ இயலாதவள்; அவனது அருளையே நாடுபவள் என்பதை அம்மூவனார் அழகிய உவமங் கொண்டு புலப்படுத்துவர்.

தாய்உடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு
'அன்னாய்' என்னும் குழவி போல
இன்னா செயினும் இனிதுதலை அளிப்பினும்
நின்வரைப் பினள், என் தோழி;
தன்னுறு விழுமம் களைஞரோ இலளே.[58]

54. நற். 397.
55. குறுந். 3
56. நற். 1
57. ஐங். 184
58. குறுந். 397.

[உடன்று-மாறுபட்டு; அலைத்தல்-வருத்துதல்; இன்னா-இன்னாதவற்றை; தலையளிப்பினும்-தலையளி செய்தாலும்; வரைப்பினள்-எல்லைக் குட்பட்டவள்; விழுமம்-துன்பம்; களைஞர்- நீக்குபவர்]

'அன்னை அலைப்பினும், அணைப்பார் பிறரின்றி அவள் மாட்டே செல்லும் குழவிபோல, நீ அருளின்றிப் பிரியினும் நின்மாட்டே செல்லும் காதலுடையாள் தலைவி' என்று உவமையை விரித்து உகிழ்க.

அரிசினத்தால் ஈன்றதாய்
அகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி
அதுவேபோன் றிருந்தேனே.[59]

[அரிசினம்-மிகுந்த கோபம்]

என்ற குலசேகரப் பெருமாள் பாசுரத்திலும் இக்கருத்து பிரதிபலிப்பதைக் காணலாம்.

அம்மூவனார் **திணைக் கலப்பு மணத்தைத் தம் பாடல்களில்** குறிப்பிடுகின்றார். உமணக்குடி குமரியர் இருவர் இவர்தம் இரு பாடல்களில் தலைவியராக வருகின்றனர். தந்தையோடு மலை நாட்டிற்கு உப்பு விற்கச் செல்லுகின்றாள் ஓர் உமணப் பெண் 'நெல்லின் நேரே வெண்கல் உப்பு' எனப் பண்டமாற்று விலையைப் பகர்கின்றாள். சங்கு வளையல்கள் ஒலிப்ப வீசி நடக்கும் அவள் ஒசிந்த நடையிலும், ஒலி வேற்றுமை அறியும் மனையிலுள்ள நாய் வேற்றுக்குரலென்று குரைக்கக் கேட்டு வெருவும் அவள் மருண்ட பார்வையிலும் உள்ளத்தைப் பறிகொடுக்கின்றான். உப்பு வண்டியை இழுத்துச் செல்லும் காளைபோல் வெய்துயிர்க்கின்றான். இயற்கைப் புணர்ச்சியும் நடைபெற்று விடுகின்றது. இவன் இதனைப் பாங்கனுக்கு உரைப்பதாகப் பாடல் தொடுத்துள்ளார் அம்மூவனார்.[60] இது நெய்தல் தலைவிக்கும் குறிஞ்சித் தலைவனுக்கும் இடையே நடைபெற்ற காதல் தொடுப்பு.

---

59. பெரு. திரு. 5:1
60. அகம்-140.

நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும்
அவ்வாங் குந்தி அமைத்தோ ளாய்நின்
மெய்வாள் உப்பின் விலைஎய் யாம்[61]

[நேரே-ஒப்பாகும்; நுவலும்-கூறி விற்கும்; அ-அழகிய வாங்கு உந்தி-வளைந்த கொம்பூழ்; அமைதோள்-மூங்கில் போன்ற தோள்; எய்யாம்-அறிந்திலம்.]

இதுவும் ஒரு கலப்புமணப் பாட்டு. நெய்தல் தலைவிக்கும் முல்லைத் தலைவனுக்கும் நிகழும் காதலைப் புனைந்துகாட்டுவது. 'நெல்லுக்கு உப்பு நேர்' என்று கூவி விற்கும் உமணக் குமரியைக் கண்டு, "கடலுப்பின் விலையைக் கூறினாய்; அறிந்தேன். நின் மெய் வாழ் உப்பின் விலைதான் தெரிந்திலது" என்று குறும்பாகக் கேட்பவன்போல் காதற் குறிப்பால் கேட்டான். இரட்டுறமொழிதலாகச் சொல்லைப் பயன்படுத்தல் சங்க காலத்தில் அருகிய வழக்கு. ஈண்டு 'உப்பு' என்பது புணர்ச்சி இன்பத்தைக் குறிக்கும்

ஊடிப் பெருகுவங் கொல்லோ நுதல் வியர்ப்பக்
கூடலில் தோன்றிய உப்பு.[62]

என்ற குறளில் 'உப்பு' என்னும் சொல் இன்பம் என்ற பொருளில் வழங்கியுள்ளமை அறிக. புணர்ச்சியினால் தோன்றிய வியர்வை உலர்ந்து படிந்த உப்பு பின்னர் இன்பம் என்ற பொருளைப் பெற்றது.

'மாணலந் தா என வகுத்தலை'[63]த் தோழிக்குரிய கூற்றாகக் கூறுவர் தொல்காப்பியர். அதாவது தோழி தலைவனிடம் சினந்து பேசுங்கால் "நீ முன்போல் நன்முறையில் பழகவில்லை. ஆதலின் எம்பால் பெற்ற இன்பத்தினைத் தந்து செல்வாயாக" என உரைப்பதாகும். இத்தகைய போக்கு அன்பின் அடிப்படையில் அமைவதாகும். இளஞ்சிறார்களிடையே சிறு பூசல் நிகழுங்கால் கொடுத்த பொருளைத் திரும்பக் கேட்கும் இத்தகு போக்கைக் காணலாம். தொல்காப்பியர் வகுத்த இந்நெறியைப் பின்பற்றி அம்மூவனார் இரண்டு பாக்கள் யாத்துள்ளார்.

61. ஐங்-390.
62. குறள்-1328
63. கற்பியல்-9

வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பசிதின, அல்கும் பனிநீர்ச் சேர்ப்ப
நின்னொன் றிரங்குவென் அல்லேன்;
தந்தனை சென்மோ கொண்டஇவள் நலனே.[64]

[குருகு-கொக்கு; மடநடை-மெல்லிய நடை; காணிய-காண; அல்கும் - நலியும்; தந்தனை - வழங்கி விட்டு; சென்மோ - போவாயாக]

கடல்கெழு மாந்தை அன்ன, எம்
வேட்டனை அல்லையால் நலந்தந்து சென்மே.[65]

[வேட்டனை அல்லையால் - விரும்பியொழுகு வாயல்லை யாயின்]

இது, முன்னோர் மொழி பொருளைப் பொன்னேபோல் போற்று தற்கு ஒரு சான்றாகவும் அமைகின்றது. 'மாணலம்தா' என்ற கருத்து நரிவெரூஉத்தலையார் பாடலிலும் (குறுந். 236) சாத்தன் பாடலிலும் (ஷை-349) வந்துள்ளமை கண்டு மகிழ்க.

## (viii). நல்லந்துவனார்

**நெய்தல் திணையைச் சிறப்பித்துப் பாடவல்ல இக்கவிஞர் கோமான்** 38 அகப்பாடல்களின் ஆசிரியர். நெய்தற் கலியில் 33ம், அகநானூற்றில் ஒன்றும் (43), நற்றிணையில் ஒன்றும் (88), பரி பாடலில் மூன்றுமாக (6, 11, 20) இவர் யாத்த அகங்கள் காணப் பெறுகின்றன. இவர் நெய்தற் கலியை இயற்றியதுடன் அந்நூலில் ஐந்திணைக்கும் உரிய கலிப்பாக்களைக் கோத்தவர். காதலியின் இரங்கலைப் பாடுவதிலும், காம ஆராமையால் தோன்றும் கடந்த செயல்களைப் பாடுவதிலும் 'தமக்கு நிகர் தானே' என்று விளங்கு பவர். அம்மூவனாரும் உலோச்சனாரும் நெய்தல் திணையைப் பாடியவர்கள் எனினும், நெய்தல் சூழ்நிலையில் அதற்குரிய இரங்கலை மட்டிலும் பாடியவர்கள் அல்லர்; புணர்தல் முதலாய்

64. ஐங். 159
65. நற். 395

பிற உரிப் பொருள்களையும் அந்தச் சூழ்நிலையில் வைத்துப் பாடியவர்கள். இவர்தம் பாடல்கள் முதல் கருப் பொருளால் நெய்தல் திணையாகின்றன. **நல்லந்துவனாரின் கலிப்பாடல்கள் முதல் கரு உரி என்ற முப்பொருள்களாலும்** நெய்தல்களாகின்றன. சங்கப் புலவர்கள் எவருக்கும் இல்லாத தனிச்சிறப்பு **அகத்திணையுள் ஒரு பிரிவான பெருந்திணைக்கு இலக்கியம் செய்து காட்டியவர் நல்லந்துவனார்.** இவர்தம் பத்துக் கலிப்பாக்கள் இல்லையாயின் பெருந்திணையின் தன்மைகளை அறிய முடியாமல் தொல்காப்பியத்தில் வரும் பெருந்திணை இலக்கண அறிவுடன் அமைந்து விடுவோம்.

இவ்விடத்தில் அகத்திணைப் பாகுபாட்டை நினைவு கூர்தல் சாலப் பொருத்தமாகும். கைக்கிளை நிகழா ஒழுக்கம்; பெருந்திணை கழிபேரொழுக்கம்; ஐந்திணை இயல் பொழுக்கம். களவிலும் கற்பிலும் தலைவியின் வருந்தும் மன நிலைகளை— வருத்த உணர்வுகளை—ஐந்திணையின் எல்லைக் கோட்டளவிற்குச் சென்று கவிதைகள் அந்துவனார் புனைவர்; எனினும், பெருந்திணைக் கோட்டினைத் தீண்டாதவாறு நிறுத்திக் கொள்வர். நாணுடை ஐந்திணைத் தலைவியர் காமக் காழ்ப்பால் நாண் துறக்கும்போது பெருந்திணைப் பெண்டிராகிவிடுவர் என்ற திணைத் தன்மையை முன்னரே தெளிந்துள்ளோம்.[66]

நல்லந்துவனார் படைத்துக் காட்டும் ஐந்திணைத் தலைவன் களவு வாழ்க்கையில் பெரு விருப்பினன். திருமணத்தை விரைந்து முடித்துக் கொள்ளும் நாட்டமில்லாதவன். இவன் போக்கு தலைவியின் பெற்றோருக்கும் ஊராரின் அலருக்கு அஞ்சும் பெண்ணுள்ளத்திற்கும் சிறிதும் ஒவ்வாது. அவள் பெரிதும் துயருருவாள்; களவில் ஒழுகும் குமரிக்கு ஒரு பெருந்துயர் உண்டெனின் அது வரைவு நீட்டிப்பேயாகும், ஆகவேதான் அந்துவனார் 16 நெய்தற் கலிகளை **வரைவுத் துறைகளாகவே** பாடியுள்ளார். களவில் இரங்கல் உணர்வை எத்துணையளவு காட்டக் கூடுமோ அத்துணையளவு காட்டியுள்ளார். நெய்தற் கலியில் தரவுப் பகுதிகளை விடத் தாழிசைப் பகுதிகள்தாம் இரங்கல் வளம் மிக்கவை.

வரைவு நீட்டிப்பினால் தலைவியின் ஆற்றாமையைத் தோழி தலைவனுக்குப் புலப்படுத்துகின்றாள்:

66. இந்நூல்-பக். (297-300).

கண்டவர் இல்லென உலகத்துள் உணராதார்
தங்காது தகைவின்றித் தாம்செய்யும் வினைகளுள்
நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் அறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை.[67]

'நின் மறைவை யாரும் அறியார் என்று நாள் கடத்த வேண்டாம் தன்நெஞ்சு தன் செயலை அறியவேண்டுமன்றோ?' என்று தோழி தலைவனை இடித்துரைக்கின்றாள். இதனால் தலைவன் எவ்வளவு நாள் களவினை நீட்டித்திருக்க வேண்டும் என்பது புலப்படுகின்ற தன்றோ? ''மலர்கள் பூத்துக் குலுங்கும் புன்னை நறும் பொழிலில் ஒருத்தியின் புதுநலத்தைத் துய்த்த நீ மணவரைவை நாடிற்றிலை; நின் குடிமைக்கும் வாய்மைக்கும் புகழ்மைக்கும் பெரிய பழி யில்லையா?'' என்று தோழி தலைவனை அடுக்கிக் கேட்கின்றாள் (கலி-132). இதனாலும் தலைவன் களவியலில் மிகுதியாக ஒழுகும் நாட்டமுடையவன் என்பதை உணர முடிகின்றது. பெண்ணலத் தையுண்டு அவளை மணவாது கைவிடுதல் பாலையுண்பவர்கள் பாலையுண்டு அதனைக் கொண்டிருக்கும் குவளையைக் கவிழ்த்து விடுதல் போலாகும் எனவும் (கலி - 133), நோய்க்கு மருந்து இன்ன தென்பதை அறிந்தும் பணம் கருதிக் காலத்தை நீட்டிக்கும் மருத்துவன் போலாம் எனவும் (கலி - 129) தோழி கசந்து கூறுத கால் அவளது வருத்த உணர்ச்சி தெளிவாகின்றது.

நாணினகொல் தோழி நாணினகொல் தோழி
இரவெலாம் நற்றோழி நாணின என்பவை
வாணிலா ஏய்க்கும் வயங்கொளி எக்கர்மேல்
ஆனாப் பரிய அலவன் அளை புகூஉம்
கானற் கமழ்ஞாழல் வீயேய்ப்பத் தோழிஎன்
மேனி சிதைத்தான் துறை.[68]

[வாள்நிலா - ஒளியையுடைய நிலா; ஏய்க்கும் - ஒக்கும்; வயங்கு ஒளி - விளங்குகின்ற ஒளி; எக்கர் - மணல்மேடு; அலவன் - நண்டு; அளை - வளை; கானல் - கடற்கரை; ஞாழல் வீ - தாழம் பூ; ஏய்ப்ப - ஒப்ப; மேனி - உடல்]

சிறந்த இலக்கிய நயம் செறிந்த நெய்தல் இலக்கியத்திற்கு ஓர் எடுத்துக்காட்டான பாடல் இது. களவை நீட்டித்தற்கு நாணித் தலை குனிய வேண்டியவன் தலைவன்; காதலியின் மேனி மெலி

67. கலி-125.
68. ஷை - 131

வதற்கும் கவல வேண்டியவன் அவன். அவன் அவை செய்யாது வாளா இருந்தனன். உயர்த்திணைத் தலைமகன் செய்யாது ஒழிந்தவற்றை அவனது கடல் துறையில் வாழும் அஃறிணை நண்டுகள் செய்துகாட்டுகின்றன. தலைமகன் மேனி மெலிவினைக் கண்டு சகிக்காது அவை பொந்துக்குள் நுழைந்து விடுகின்றன. போகாதிருந்தால் 'உங்கள் துறை மகன் செய்ததைக் காண்' என்று தலைவி கேட்க நேரிடின் நாண வேண்டுமன்றோ? தலைவன் நாண வேண்டிய செயலுக்கு நண்டுகள் நாணின என்று கூறி அஃறிணையை உயர்திணைப்படுத்திக் காட்டி இலக்கியத்தின் தரத்தை உயர்த்துவர் அந்துவனார்.

இவ்விடத்தில் சில அகத்திணை மரபுகளை நாம் புரிந்து கொள்ளல் இன்றியமையாதது. தலைவன் வரவினை நீட்டிப் பானேயன்றி மறுக்கான்; மறுக்கும் நினைவுடையவனும் அல்லன். இறுதிவரை களவாகவே ஒழுகி இன்புற்றுத் தலைவியைக் கை விட்டு விடுவான் என்பதும் பொருளன்று. அப்படி எண்ணிதான் தோழி வரைவினை நெருங்குகின்றாள் என்பதும் கருத்தன்று. அவன் மணப்பான் என்பதில் ஐயம் கொள்ளாள். ஐயப்படுவதாக மொழிவது அகத்திணையாகாது. ஊரலர் கருதியும், தலைவன் வரும் வழியின் ஏதத்தை நோக்கியும், நொதுமலர் வரவு எண்ணியும் தலைவியின் பிரிவுத்துயர் கண்டும் தோழி வரைவினை விரைந்து முடிக்க விரும்புவாள் என்பதுவே அகத்திணை இலக் கணம். வரைதல் உறுதியாதலின் களவின்பம் என்னும் துணிவின் பத்தை நீட்டித்து அதனால் பெறும் மகிழ்ச்சியை அடைவதே அவனது ஆர்வமாகும். அலரால் வரும் அவமானத்தையும் வழியில் நேரிடும் இடையூறுகளையும் பிறர் மணம் பேசி விடுவார் என்ற கவலையையும் அவன் பொருட்படுத்துவதில்லை. இவற்றை உளங் கொண்டால்தான் அகத்திணைக் கொள்கையின் உண்மை தெளி வாகப் புலனாகும்.

பிரிவுத் துன்பத்தால் உழலும் தலைவி மாலையைப் பழிக் கின்றாள். இத்தகைய பழிப்பினை நெய்தற்கலியின் தாழிசை களில் காணலாம்; இரக்கத் துடிப்பினை - நாடியினை- அங்குக் கேட்கலாம். "வெள்ளத்தில் அகப்பட்டுக் கரையேற மாட்டாத மானினது மருமத்தைப் பார்த்து அம்பு தொடுக்கும் கொடியவர் உண்டா? போரில் தோற்று வருந்துவாரை மேலும் இகழ்ந்து நகுவார் உண்டா? வெந்த புண்ணிலே வேலைச் செருகுவார்

உண்டோ? மானைக் காக்க வேண்டும்; வருந்துவாருக்கு ஆறுதல் சொல்லவேண்டும்; புண்ணுக்கு மருந்தளிக்க வேண்டும். இவை செய்யாவிடினும் மேலும் கெடுதல் செய்யலாமா?'' (கலி120) என்று மாலையை நோக்கி வருந்துகின்றாள் ஒரு தலைவி. ''இம்மாலைக் காலம், ஒன்றையும் கல்லாமல் மூத்தவனுடைய ஞானக்கண் இல்லாத நெஞ்சு போலவே புற்சென்ற இருள் உலகில் பரத்தலைத் தாரா நிற்கும். இம்மாலைக் கண்ணே என் செயலறு நெஞ்சு கொதித்து எனக்குக் காமத் தீயைக் கொளுத்தும்; என் நெஞ்சம் அவனை உள்ளி அழிதலோடே தன் நினைவின்றியும் குவியும்; பூவின் அழகைக் கொண்ட என் உண்கண் தனிமையைக் கொண்டு வருந்தும்'' (கலி - 130)—இப்படி மற்றொரு தலைவி இரங்கிக் பேசுகின்றாள். தலைவனது நீள் பிரிவிற்கு ஆழ்துயர் உறும் தலைவியை மேலும் அல்லற் படுத்துகின்றது மாலைக் காலம் என்று இரங்குவர் அந்துவனார். கூடியுள்ள காதலர்க்குப் பின்னும் புணர்ச்சியின்பம் அளித்தலும், பிரிந்திருக்கும் காதலர்க்கு மேலும் வருத்தும் துன்பத்தை நல்குதலும் ஆகிய ஓரவஞ்சனையைக் கொண்டது மாலை என்பதாக நெய்தற் தலைவி கருதுகின்றாள்.

வாலிழை மகளிர் உயிர்பொதி அவிழ்க்கும்
காலை யாவது அறியார்
மாலை என்மனார் மயங்கி யோரே.[69]

என்று ஒரு தலைவி மாலைக் காலத்தைப்பற்றித் தோழிக்கு உரைக் கின்றாள். ''இது மாலை அன்று; புணர்ச்சியில் மயங்கிக் கிடப்ப வரே மாலை என்பர். மலர்களை அவிழ்க்கும் காலம் ஒன்று இருப்பதுபோல மகளிரின் உயிர்களை உடம்பினின்று பிரிக்கும் இறுதிக் காலம் ஒன்று உண்டு. அதுதான் இக்காலம்.'' என்று மாலைப் பொழுதுக்கு ஆற்றாதவள் ஒரு புதிய காலம் படைக் கின்றாள் தான் தெளிந்தவள் போல, மற்றையோரை மயங்கி யோர் என்று தூற்றுகின்றாள்.

''நல்லந்துவனார் ஒருவரே சங்கப் பனுவலில் பெருந்திணைப் பாடல்கள் யாத்தவர். ஐந்திணைத் தலைவியரின் பிரிவுணர்ச்சி களை எல்லைக் கோடளவும் சென்று பன்மாணும் பாடவல்ல புலவர்க்கே பெருந்திணை பாடும் எண்ணமும், பாடவல்ல எளிமையும் ஏற்படும். களவியலில் மடல் ஏறி வரும் தலைவனது நாணிய செயலையும், கற்பியலில் ஊரறிய வெளிவந்து உற்ற

69. ஷை - 119

பெருங் காமத்தை உரைத்துத் திரியும் தலைவியின் நாணில் செயலையும் பொருளாகக் கொண்டு பெருந்திணை பாடினார் அந்துவனார். தன்மேல் விருப்பம் இல்லாக் குமரியை நச்சி ஒருவன் மடலூர்வது இல்லை. விருப்பம் ஒத்த நல்லாளை மணப்பதற்கே ஊரறியமடல் ஏறுகின்றான் ஆதலின், அன்பின் அகத்திணையாம் என அறிக. கணவன் அல்லாத ஒருவன்மேல் கொண்ட காமக் கனிவால் ஓர் இல்லாள் புறம் போந்து புலம்புவது இல்லை. மணந்த ஆடவனது பிரிவு பொறாது வளர்ந்த மெய்ச் சுரத்தால் ஊரறியக் காமப்பறை சாற்றுகின்றான் ஆதலின் அன்பின் அகமேயாம். முன்னது களவிற் பெருந்திணை; பின்னது கற்பிற் பெருந்திணை. **நாணில் காமத்தால் பெருந்திணை யாயிற்று** எனவும், **அன்பு ஒத்த காதலால் அகத்திணை யாயிற்று** எனவும் தெளிக. எனவே, அன்பும் நாணமும் ஐந்திணையாம் என்றும், அன்பும் நாணமின்மையும் பெருந்திணையாம் எனவும் வேறு படுத்தி உணர்க. ஐந்திணைக் காதலர் போலப் பெருந்திணைக் காதலர்களும் அன்புடையர், கற்புடையவர். ஐந்திணைக்கு இல்லாத பெருந்திணைக்கே உரிய இலக்கணம் நாணமின்மை. எனினும்நீங்கிய நாணத்தை மீளப் பெற்றுப் பெருந்திணையர் ஐந்திணையராக நல்வாழ்வு வாழலாம். சமுதாயப் பழி யாதும் இல்லை. இவ்வுண்மைகளையெல்லாம் அந்துவனாரின் பத்துப் பாடல்கள் (கலி 138-147) என்ற விளங்கக் காட்டுகின்றன''[70] என்ற டாக்டர் வ. சுப.மாணிக்கனாரின் விளக்கம் கொண்டு பெருந்திணையை இனங்கண்டு தெளிக.

மணமாகிய ஓர் ஐந்திணைத் தலைவியின் ஆராக் காமவுணர்வையே பொருளாகக் கொண்டு கவிதைகள் தொடுப்பர் பெருந்திணைப் புலவர்கள். பெருந்திணைத் தலைவி கழிகாமம் மிக்க கழிபடர் பேச்சினள். ஞாயிறு, திங்கள், கடல், காற்று எல்லாம் அவளுக்கு முன்னிலைப் பொருள்களாகின்றன. காமம் காழ்க் கொண்டவளாதலின் அவள் பேச்சுகள் முன்பின் மலைவாகின்றன. அறிவுக்குப் புறமாய் அவளின் காமவேக்காட்டிற்கு ஒத்தனவாகின்றன. கதிரவனை நோக்கிப் பேசும் பேச்சில் காதல் மயக்கத்தில் உளறும் கழிபடர் கிளவிகளைக் கேட்கலாம்(கலி-142). தன் கணவனைத் திங்களுள் இருக்கும் முயல் காட்டாவிடில் அதனைக் கவ்வ வேட்டை நாயை ஏவுவதாகவும் வேட்டுவருள்ள இடத்துச் சென்று ஒரு முயல் இருப்பதாகக் கூறுவதாகவும்,

70. **தமிழ்க் காதல்** (இரண்டாம் பதிப்பு) பக். (443-44)

திங்களோடே முயலைச் சேர்த்து விழுங்கும்படி அரவத்தை ஏவுவ தாகவும் கூறுகின்றாள். தன்மேலுற்ற காற்றினை நோக்கித் தன் கணவன் இருக்குமிடத்தைக் காட்டாவிடில் தன் கண்ணீரைத் தெளித்து அதன்கண் எழுகின்ற அழலாலே அதன் மேனியைச் சுடு வதாகச் செப்புகின்றாள். கடலை நோக்கித் தன் கணவன் உள்ள விடத்தைக் காட்டாவிடில் தன் காற்புறத்தாலே அதன் நீரை யெல்லாம் இறைத்து வெறும் மணலாகச் செய்து விடுவதாகத் தெரிவிப்பாள் (கலி-144).

தலைவியின் கழிபெருங் காமத்தைப் பொறுத்தமான சொற் களால் புலப்படுத்துவர் கவிஞர் கோமான். தன்னுடைய தோளைப் புகழ்ந்து நெகிழ்ந்தவன் நினைவு தவிர 'நன்று இது தீது இது' என்று பாகுபாடு அறியமுடியாத நிலையிலிருப்பதாகத் தலைவி தெளிவாகத் தெரிவிக்கின்றாள். "என் கொழுநன் இரவுக் கனவில் தோன்றினான். கைப்பிடியாகப் பற்றிக் கொண்டு விழித் தேன். பற்றிய கையிலுள்ளே கரந்துவிட்டான்" என்று உளறிக் கொட்டுகின்றாள் (கலி-142). பின்மேகத்தைப் பார்த்துப் பேசுகின் றாள்: "என் காமம் அணுத்தோறும் கலந்தது. உடல் அணுவெல் லாம் கொதிக்கின்றன. சிறிது பொழுது பெருமழை பெய்தாலும் சாலாது. கடல் நீரை முகந்து எப்போதும் கொட்டிக்கொண்டிரு" என்கின்றாள் (கலி-145). ஐந்திணைத் தலைவியிடம் தோன்று வதைப் போலவே பெருந்திணைத் தலைவியிடமும் பிரிவு மெய்ப் பாடுகள் தோன்றும். "பகலாங்கண் பையென்ற மதியம்போல் நகலின்று நன்னுதல் நீத்த திலகத்தள்" "மேனி மறைத்த பசலை யள்" என்ற இரு மெய்ப்பாடுகளைப் புலனாக்குவர் அந்துவனார் (கலி-143). நெற்றிப் பொட்டினையே அழித்துக் கொள்வள் என்பது கரை கடந்த காமப் பேதைமையைக் காட்டும். நுதல் கண் முலை முதலான சில உறுப்புகளில் பசலை படரும் என்று கூறாது மேனி முழுதும் பசலைப் போர்வை கொண்டனள் என்பன அவள்தன் காமப் பித்தினைப் பறை சாற்றும்.

அந்துவனாரின் **பெருந்திணைப் பாக்கங்களின் இறுதியடி களை ஆழ்ந்து சிந்தித்தால் பெருந்திணை ஐந்திணையாதலைக் கண்டு மகிழலாம்.** பிரிந்த காதலன் மீண்டும் வீடு வந்து சேர்ந் தான்; தலைவி அவன் மார்பை அணைந்து காமம் தணியப் பெற்று கலங்கிய நீர்போல் தெளிந்து நலம் பெற்றாள் (கலி-142), மலை பல கடந்து சென்ற தலைவன் மீண்டு வந்ததும் காமம் அருளி இழந்த நலத்தை இனிய அகமகிழ்ச்சியோடு எய்தினள் (கலி-143),

கணவன் விரைந்து வந்ததனால் காமப் பிணியும் நுதல் பசப்பும் நீங்கின (கலி-144), பாயல் கொள்ளாது உறக்கத்தைக் கெடுத்த வன் வரக் கண்டதும் மாயவன் மார்பிலுள்ள திருமகள்போல் அவன் மார்பை ஆரத்தழுவ, ஞாயிற்று முன்னர் இருள் கெடுவது போல் அவளது காமத்துயர் சுவடற்று மறைந்தொழிந்தது (கலி-145), கோடையில் மழைத் துளி பெற்ற வானம்பாடிபோல், நல்லெழில் மார்பன் முயங்க ஆயிழை பண்பு தளிர்த்தாள் (கலி-146) பிரிவுற்ற காதலன் வந்ததும் தலைவியின் அழுந்தின துயரம் எல்லாம் மறைந்தது; போன நாணம் மீண்டது; பித்துச் சிரிப்பும் ஒழிந்தது (கலி-147) என்று இறுதிச் சுரிதகங்கள் குறிஞ்சியாக முடி கின்றன. இப்படித்தான் பெருந்திணைப் பாடல்கள் இறவேண்டும் என்பதை அந்துவனாரின் பாடல்கள் அறுதியிடுகின்றன; இங்ஙனம் புணர்தலாக முடிவதுதான் பெருந்திணைப் பாடல்களின் மாறாப் பண்பு ஆகும். தலைவனது வரவு கூறாது தலைவியின் புலம்பல் களையே விளம்பிச் செல்வது பெருந்திணைப் பாடலின் இலக்கணம் ஆகாது.

பெருந்திணைத் தலைவி ஒருத்தி பேசுகின்றாள்.

மகளிர்
தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்
நீள்சுரம் போகியார் வல்லைவந் தளித்தலும்
ஊழ்செய் திரவும் பகலும்போல் வேறாகி
வீழ்வார்கண் தோன்றும் தடுமாற்றம் ஞாலத்துள்
வாழ்வார்கட் கெல்லாம் வரும்[71]

[மாந்தர்-ஆடவர்; துயர்கூர-வருத்தம் மிக; நீத்தல்-பிரிதல்; சுரம்-பாலை நிலம்; வல்லை-விரைவாக; அளித்தல்-அருள் செய்தல்; வீழ்வார்கள்-விரும்புவார்கள்]

இரவும் பகலும்போல, காதலர்தம் வாழ்க்கையில் பிரிவும் புணர் வும், இன்பமும் துன்பமும், மாறி மாறி வரும். புணர்ந்து இன்புற்ற வர்கள் பிரிந்து துன்புறுபவர்களை இகழ்தல் ஆகாது; அங்ஙனம் இகழின் அவர்க்கும் ஒரு நாள் பிரிவும் இகழ்வும் வரும் என்பது உலக இயல்பு. இங்ஙனம் "சகடக்கால்போலவரும்"[72] அரியதோர் அறத்தை அந்துவனார் பெருந்திணைப் பாடலில் அனைவர்க்கும் உணர்த்துவர்.

71. ஷை-145.
72. நாலடி-2.

### (ix). ஓதல் ஆந்தையார்

இப்புலவர் பெருமகனார் 103 அகப்பாடல்களை நல்கியுள்ளார். இவர் புறம்பாடாப் புலவர். களவில் இவர் பாடல்களில் பாங்கன் இடம் பெறவில்லை. கற்பில் தலைவன், தோழி, தலைவி என்ற மூவருமே இடம் பெறுகின்றனர். பாலைத் திணைத் துறைகளைப் பல படவும் பண்படவும் வடித்துக் காட்டும் திறனுடையவர்; உடன் போக்குத் துறைகளை அமைத்துக் காட்டுவதில் நிகரற்ற வராகத் திகழ்கின்றார்; தாயின் புலம்பல்களை மிகச் சிறப்பாக உணர்த்துகின்றார்.

உடன்போக்கில் தலைவனும் தலைவியும் கூடியிருப்பினும், இன்னும் திருமணம் ஆகாதவர்களானமையால் பிரிவோமோ பெற்றோரால் பிரிக்கப் பெறுவோமோ என்ற பிரிவுணர்ச்சி இருவர் தம் உள்ளத்தே ஊடுருவிச் சென்று கொண்டிருக்குமாதலின் உடன் போக்கு குறிஞ்சித் திணையின்பாற்படாமல் பாலைத் திணையாயிற்று.

இடைச்சுர மருங்கின் அவள்தமர் எய்திக்
கடைகொண்டு பெயர்தலின் கலங்கஞர் எய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை[73]

என்றலின் உடன் போக்கில் உள்ளத்துயர் உண்டு என்பது அறியப் பெறும். இவர் இந்தக் களவுப் பாலையையும் கற்புப் பாலையையும் அறமும் திறமும் பொருந்தப் பாடியதனால் சிறந்த பாலைப் புலவராகத் திகழ்கின்றார். இவர்தம் ஐங்குறு நூற்றுப் பாலைத் திணைப் பாடல்களால் கற்றோர்க்கு அகத்திணை இலக்கிய வளத்தின் பெருமை தெளிவாகும். மரபுநிலை திரியாமல் அகத்துறைகளைப் படைத்துக் காட்டலாம் என்ற புத்தாற்றல் தோன்றும்.

குறுந்தொகையில் ஒரு பாடல். தான் திரும்புவதற்குரிய காலமாகத் தலைவன் குறித்துச் சென்ற கார்ப்பருவத்தைக் கண்டு தலைவி வருந்துவாள் எனக் கவன்ற தோழியை நோக்கித் தலைவி,

கானம் காரெனக் கூறினும்
யானோ தேறேனவர் பொய்வழங் கலரே.[74]

73. அகத்திணை-44 (இளம்)
74. குறுந்-21.

[கார்-கார்ப் பருவம்; தேறேன்-தெளியேன்; வழங்கலர்-கூறார்]

என்று கூறித் தான் ஆற்றியிருத்தலைப் புலப்படுத்துகின்றாள். இது **கற்பில் பாலை.**

ஐங்குறு நூற்றில் ஒரு பாடல். தலைவி இற்செறிப்பு, காவல் மிகுதி, நொதுமலர் வரைவு முதலியவற்றைத் தாங்க முடியாமல் உடன் போக்கிற்கு உடன்பட்டுத் தலைவனுடன் செல்லுகின்றாள். அவர்கள் பாலை நிலப் பரப்பில் அரிதிற் பெற்றதொரு சோலையிலே இளைப்பாறுகின்றனர். அச் சிறுபொழுதில் தலைவி பாதிரிப் பூக்களாலாகிய மலர் மாலை தொடுக்கின்றாள். அவளுடைய கலைத்திறங் கண்ட தலைவன் அவளைப் பெரிதும் புகழ அவள் நாணிக் கண்புதைக்கின்றாள். இதனைக் காட்டும் சொல்லோவியம்:

உயர்கரைக் கான்யாற் றவிர்மண லகன்றுறை
வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரல் மகளே
கண்ணினும் கதவநின் முலையே
முலையினும் கதவநின் றடமென் றோளே.[75]

[கான்யாறு-காட்டாறு; அவிர்மணல்-விளக்கமுடைய எக்கர்; குவைஇ-குவித்து; தொடலை-மாலை; தைஇய-புனைந்த; கதவ-வெகுளி மிக்கன]

'நின்னுடைய விழிகளைவிட வெகுளி மிக்கன நின் முலைகள்; முலைகளை விட வெகுளி மிக்கன நின் மெல்லிய தோள்கள். அங்ஙனமிருக்க இவற்றை விடுத்து விழிகளை மட்டிலும் புதைத்தல் எற்றிற்கு'' என்று கூறி அசதி யாடி மகிழ்கின்றான் தலைவன். இது **களவில் பாலை.**

இவர்தம் உடன்போக்குத் துறைப்பாடல்கள் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன; படிக்கப் படிக்க வாயில் தேனூறுகின்றன. நிகழ்ச்சிகள் சிந்தைக்கு விருந்தாக அமைந்து சிந்தனையையும் கிளர்ந்தெழச் செய்கின்றன. உடன்போக்கில் சென்ற தலைவியின் தாய் படும் அவல நிலையினையும் அவள் காட்டும் அன்பினையும் தெளிந்த அறிவினையும் இப்பாடல்களில் காணலாம். இப்

75. ஐங். 361,
76. ஷை-(371-400).

பாடல்களை ஒரே மூச்சில் படித்தால் தாயின் உள்ளோட்டங்களைப் புதிர்க் கதிர்ப் (x-ray) படங்கள் போல் தோன்றக் காணலாம். தன் அருமை மகளின் உடன் போக்கைத் தாய் ஒப்புகின்றாள்; 'அறன் நெறி இது' எனத் தெளிந்த மகளைப் போற்றுகின்றாள்; தன் மகள் செல்லும் பாலை வழி மழை பெய்து இனியதாகுக என்று வாழ்த்துகின்றாள் (371). மகளின் செலவுக்கு அவள் வருந்தவில்லை. உண்மையை முன்னதாகச் சொல்லியிருப்பின் 'நம் இல்லத்திலேயே வதுவை நிகழ்விப்போமே. அப்படி நிகழ்ந்திருப்பின் அவளுக்கும் இன்பம் ஆய மகளிர்க்கும் பேரின்பம். இப்பொழுதோ தலைவனுடன் புணர்ந்து செல்லுதலால் வரும் ஓரின்பமேயன்றி ஆறிடையூற்றான் அவட்கும் துன்பம்; அந்நம்பிக்கும் துன்பம்; நமக்கும் எல்லையிலாத் துன்பம், என்று நொந்து கொள்ளுகின்றாள் (379). 'முடியகம் புகாக் கூந்தலள், கடுவனும் அறியாக் காடிறந் தோளே' என்று அவள் இளமையை நினைந்து இரங்குகின்றாள் (374).

இதுவெண் பாவைக் கினியநன் பாவை
இதுவென் பைங்கிளி எடுத்த பைங்கிளி
இதுவென் பூவைக் கினியசொற் பூவையென்
றலம்வரு நோக்கி னலம்வரு சுடர்நுதல்
காண்டொறும் கண்டொறும் கலங்கி
நீங்கினளோ (375)

என்று சொல்லிக் கவல்கின்றாள். 'என் மகள் உடன் போதற்கு அவள் காரணம் இல்லை; அவனும் காரணம் ஆகான்; நானும் காரணம் இல்லை. பின் யார் காரணம்? 'அறன் இல் பாலே' என்று விதியை வெகுண்டு உரைக்கின்றாள் (376). காக்கை கரைந்தால் விருந்து வரும் என்ற நம்பிக்கை இற்றையார்க்குப் போலப் பண்டைத் தமிழர்க்கும் இருந்தது. ஆகலின், 'உடன்போகிய காளையும் அஞ்சில் ஓதியும் வரக் கரைவாய் நினக்கும் நின் சுற்றத்தினர்க்கும் ஊனுடை உணவைப் பொற்கலத்தில் படைப்பேன்' என்று சிறு கருங் காக்கையை வேண்டுகின்றாள் (391). சிலம்பு கழி நோன்பு தலைவன் வீட்டில் நிகழினும் வதுவை நன் மணம் தன் இல்லத்தில் நிகழவேண்டும் என்பது ஒருதாயின் விருப்பம் (399). பெண்ணின் தாய்க்கும் விடலையின் தாய்க்கும் எதிருணர்ச்சி இயல்பாகச் சமுதாயத்தில் இருப்பதை இன்றும் காணலாம் அகவிலக்கியத்தில் தலைவியின் பெற்றோர் இடம்

பெறுவர். தலைவனின் பெற்றோரைப்பற்றியும் அவளது காத லொழுக்கத்தைக் குறித்து அன்னவர் கொள்ளும் கருத்து யாது என்பது பற்றியும் புலவர் பேசுவதில்லை.

நினைத்தொறும் கலிழும் இடும்பை எய்துக
... ... ... ... ... ...
வெஞ்சுரம் என்மகள் உய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே (373)

என்று கவிஞர் தலைவனது தாய்மேல் தலைவியின் தாய்க்குச் சினம் உண்டு என்று வெளிப்படுத்துவர். 'அவள் இத்தகைய மகனை ஈன்றதனாலன்றோ என்மகள் இன்று கடுஞ்சுர வழியில் செல்ல நேர்ந்தது' என்று தலைவியின் தாய் வளைத்துத் தொடுத்து வாயாடுவதைப் பாடலில் காண்க. மேற்குறிப்பிட்ட முப்பது பாடல் களிலும் மகள் உடன் போக்குத்துறையில் வைத்துத் தாயர்தம் (நற்றாய், செவிலி) எண்ணவோட்டங்களைப் பல்வேறு வகையில் ஓதலாந்தையார் புனைந்து காட்டுவதைக் கண்டு மகிழலாம்.

### (x). பாலைபாடிய பெருங்கடுங்கோ

இவர் சேரமான் மரபின்வழி வந்தவர். பெருங்கடுங்கோ என்பது இவரது இயற்பெயர். பாலைத்திணை ஒன்றையே பாடியவர். அதனை மிகவும் சிறப்பித்துப் பாடும் ஆற்றலுடையவர். இக் காரணம்பற்றியே இவர் **பாலை பாடிய பெருங்கடுங்கோ** என்று சிறப்புப் பெயரையும் பெற்றார். இவர் கொடையிலும், வீரத்தி லும், தமிழ்ப் புலமையிலும் சிறந்த செந்தமிழ்ப் புரவலர். இவர் பாடியனவாகக் கிடைத்துள்ள 67 பாடல்களில் கலித்தொகையில் 35ம் (பாலைக்கலி முழுதும்), குறுந்தொகையில் 13ம் (16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398), நற்றிணையில் 10ம் (9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391), அகநானூற்றில் 12ம் (5, 99, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379) உள்ளன.

பாலைப் புலவன் களவில் உடன் போக்குத் துறையை மிகவும் விரும்பிப் பாடுவான். இங்குத் தலைவனது உள்ளப் புனைவுக்கும் இலக்கியப் புனைவுக்கும் புலமை விளையாட்டிற்கும் அதிக இடம் உண்டு. ஆயினும் பெருங்கடுங்கோ, பாலைக் கலியில் களவுத்

துறைக்கு இடம் தரவில்லை. உடன் போக்கு சிறந்த களவுப்பாலை யாகும். நற்றாயின் புலம்பல்களை இத்துறையில் கேட்டுமகிழலாம். அவலச்சுவை மிக்க பாடல்களைப் புனைவதற்கு இங்கு அதிக வாய்ப்பு உண்டு. "சந்தனம் பூசிக்கொள்வார்க்கன்றித் தான் பிறந்த மலையிடத்திற்குப் பயன்படாதவாறு போலவும், முத்துக்கள் அணிவார்க்குப் பயன்தர வல்லவேயன்றின தாம் தோன்றின கடலுக்குப் பயன்படாதன வாறுபோலவும், ஏழு நரம்பின் இனிய ஓசைகள் பாடுவார்க்குப் பயன்படுவனவேயன்றி தாம் பிறந்த யாழிற்குப் பயன்படாதனவாறு போலவும் தும்மகளும் பயன்படுங் காலத்து நுமக்குப் பயன்படாள்; கற்புக்கடம் பூண்டு கணவனோடு சென்றாள்" (கலி-9) என்று முக்கோற்பகவர் அறங்கூறும் களவுத் துறையில் செவிலித்தாய் இடம் பெறுகின்றாள். **35 பாலைக் கலியிலும் களவுத்துறையில் வரும் பாடல் இஃது ஒன்றேயாகும்.** ஆயினும், பிறதொகை நூல்களில் இத்துறைபற்றிய பெருங் கடுங்கோவின் பாடல்கள் சில இருக்கத்தான் செய்கின்றன.

பாலையின் சில காட்சிகளைப் பிரிவுத் துறைகளில் இடங்கட் கேற்பப் புனைந்து காட்டலில் வல்லவர் பெருங்கடுங்கோ. பிரிந்து சென்ற தலைவன் காட்டில் செங்காற்பல்லித் தன் துணையை அழைத்தலையும் (குறுந்-16), ஆண்யானை தன் பிடிக்கு யாமரத்தின் பட்டையை உரித்து நீரைப் பருகச் செய்வதையும் (குறுந்-37), கன்றொடு மடப்பிடியைத் தழுவிய தடக்கை வேழம் வேங்கையின் பொன்போன்ற பூங்கொத்தாலாகிய கவளத்தை ஊட்டுதலையும் (நற்-202), ஆண் யானையின் பிளிறலைக் கேட்ட பெண் யானை புலம்புதலையும் (நற்-318), குடம்பையின்கண்ணே பார்ப்புகளை ஈன்று அவற்றிற்குக் காவலாயுள்ள புறவின் வயவுநடைப் பேடை உண்ணுமாறு அதன் செங்காற் சேவல் முதுபாழில் தானே விளைந்து உதிர்ந்த நெற்கதிர்களைக் கொடுத்தலையும் (நற்-384) ஞெமை மரத்தின்மீதுள்ள சிலம்பிக் கூடு மேல்காற்றால் அசைய அதனை மேகம் எனக் கருதி மயங்கும் யானைகளைக் காணும் தலைவர்தாம் பொருளல்லதனைப் பொருளாகக் கருதியதனை நினைவர் என்பதையும் (அகம்-111), 'நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் சென்றஇடத்தில் தங்கார்; தண்ணிய நறிய குவளை மலர் மாலைசூட்டிய நின் கூந்தலில் பொருந்திய துயிலை நம்மிடத்தே தங்கிப் பெறுதலை மறந்து ஆண்டுத்துயிலுதல் இயலுமோ?' என்று கூறுவதையும் (அகம் 223) எடுத்துக்காட்டி விரைவில் அவர்திரும்பி விடுவார் என்று தலைவன் பிரிவால் வருந்தி நிற்கும் தலைவியை

ஆற்றுவிக்கும் தோழியைக் காண்கின்றோம். பெருங் கடுங் கோவின் 67 பாடல்களில் 40 பாடல்கள் தோழி கூற்றாக அமைந் திருக்கும் அருமைப்பாட்டைக் கண்டு மகிழ்கின்றோம். தலைவியின் ஆராக் காதலைத் தலைவனுக்கு எடுத்துக் காட்டி அன்பாலும் அச்சத்தாலும் அவன் செலவை அழுங்குவித்தாள் எனப் பல பாடல்கள் அமைகின்றன.

**உடன்போக்குக் காட்சிகளை மிக்க அருமைப்பாட்டுடன் சித்தரிப்பர் பெருங் கடுங்கோ.** பாதிரியின் மலரைத் தலைவியின் கூந்தலுக்குள் செருகி அக் கூந்தலின்மீது மாமலரைச் சூட்டினான் தலைவன். "நின் வளையல்கள் ஒலிக்கக் கை வீசவும், சிலம்பொலி கேட்க மெல்லிய அன்ன நடைகொண்டும் சிறிது முன்னே நட; நின் பின்னழகைக் கண்டு மகிழ்வேன்" என்று தலைவன் தலைவியை வேண்டுகின்றான். தலைவன் முன்னே செல்வதும் தலைவி பின்னே ஒதுங்குவதுதான் தமிழ்ச் சமுதாய வழக்கு. ஆதலின், தலைவி வழக்கத்திற்கு மாறாக முன்னே செல்ல நாணினாள்; தலை குனிந்தாள். அதுகண்டு தலைவனும் முன்னே செல்லாது நின்று கொண்டான். யார் முன் செல்வது என்ற பூசலில் இருவரும் நடவாமல் உட்கார்ந்து விட்டனர். இக்காட்சியைக் கவிஞர்,

அணிமாண் சிறுபுறம் காண்கம் சிறுநனி
ஏகென, ஏகல் நாணி ஒய்யென
மாகொல் நோக்கமொடு மடங் கொளச் சாஅய்
நின்றுதலை யிறைஞ்சி யோளே அதுகண்டு
யாமுந் துறுதல் செல்லேம் ஆயிடை
அருஞ்சுரத் தல்கி யேமே[77]

[அணிமாண்-அழகு மாண்புற்ற; சிறுபுறம்-முதுகு; சிறுநனி-சிறிது தூரம்; ஏகல் - செல்லல்; ஒய்யென - விரைவாக; மாகொள் - மானையொத்த; சாஅய் - தலை இறைஞ்சி; முந்துறுதல் - முன்னே செல்லல்; ஆயிடை - அவ்விடத் திலேயே; அல்கியேம் - தங்கினோம்]

என்று காட்டுவர். உடன் போக்கின் தொடக்கத்துத் தலைவன் காதலிக்குச் சுட்டும் காட்சியை நற்றிணையில் காணலாம்.

கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்

77. அகம்-261

செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே.[78]

[கண்டிசின் - காண்பாயாக; அறுமீன் - கார்த்திகை நாள்; நெடுங்கொடி - நீண்ட விளக்கு வரிசை; அணிந்த - அழகு செய்யப்பெற்ற]

என்ற பாடற் பகுதி காண்க. "நாம் இப்போது சென்று கொண்டிருக்கும் காடு உந்தையது. கார்த்திகை விளக்கு வரிசை போல மலர்ந்திருக்கும் கோங்கம் பூக்களைக் காண்பாயாக" என்று நயவுரை மொழிகின்றான் காதலன். இத்தகைய ஒரு காட்சியை அகப்பாடலும் சித்திரிக்கின்றது.

கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பின்
பிடிமிடை களிற்றில் தோன்றும்
குறுநெடுந் துணைய குன்றமும் உடைத்தே.[79]

[தொடிசிதை மருப்பு - பூண் சிதைந்த கோடு; களிற்றில் - களிறுகளைப் போல; துணைய - அளவினையுடைய; குன்றம் - குன்றுகள்]

இப்பாடலின் முற்பகுதியில் கோங்க மலர்களுடன் புனலிப் பூ சேர்ந்து கிடப்பதையும் பாதிரியினின்றும் உதிர்ந்த பூக்கள் வெண் கடப்ப மலர்களுடன் கலந்து கிடப்பதையும் சுட்டிக் காட்டி இவை பரவுக் கடன் பூண்ட தெய்வமுடைய திருக்கோயிலின்கண் கலந்து கிடக்கும் மலர்களை ஒத்துள்ளன என்று கூறுகின்றான் தலைவன். இந்த இரண்டு காட்சிகளிலும் தாம் செல்லும் காடு தலைவியின் தந்தைக்குரிய காடு என்று குறிப்பிடப்பெறுவதை உன்னுக. தலைவிக்குக் குடும்பப் பிரிவுச் சோர்வு தோன்றாமை பொருட்டே இங்ஙனம் கூறுகின்றான் என்பதை அறிக.

வீரத்தினும் காதல் சிறந்தது போலப் பொருளினும் காதல் பெரிது என்று காட்டுவர் இக் கவிஞர். இவர் பாடிய பெரும் பான்மையான கலிப் பாடல்களில் பொருளுக்கும் இளமைக்கும் உரிய போராட்டத்தைக் கணவன் மனைவிக்கிடையே வைத்துப் பலவாறு புனைந்து காட்டுவர். தலைவனின் நோக்கம் பொருள் குவித்தல் அன்று. கடமைகளைத் திறம்பட ஆற்றுவதற்கே பொருளை நாடுகின்றான். முன்னோர் வைத்த தாயப்

78. நற். 202.
79. அகம்-99

பொருளைக் கொண்டு இல்லறம் செய்வதைச் சிறுமையாகக் கருது கின்றான்; இது தமிழர்தம் தலையாய கொள்கை என்பதை அவன் அறிந்தவன். ''உள்ளது சிதைப்போர் உளரெனப் படர்அர்'' (குறுந். 283), ''உள்ளாங்கு உவத்தல் செல்லார்'' (அகம். 111), ''வினையே ஆடவர்க்குயிரே'' (குறுந். 135) என்பன அவனது பெரு மித எண்ணங்களைக் காட்டுபவை. எனவே, தலைவனது பொருள் வேட்கை குறை கூறும் தன்மைய தன்று. பொருள் இல்லாக் கணவனை இல்லாளும் வேண்டாளன்றோ?

அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும் புனையிழை என்றுநம்
இருளேர் ஐம்பால் நீவி யோரே
நோய்நாம் உழக்குவ மாயினும் தாம்தம்
செய்வினை முடிக்க தோழி,[80]

[அறன் கடை - பாவம்; பிறன்கடை - பிறர்பால்; இருள்ஏர் - இருண்ட]

'இரந்தார்க்கு ஈதலும், பிறர்பால் சென்று இரவாமையும் பொருளினால்தான் ஆகும் என்று கருதிய தலைவர் தனது பிரிவால் நாம் நோயுழப்போம் ஆயினும் பொருளீட்டும் வினையினை முடித்து வருவாராக என்று கூறுகின்றாள் தலைவி. இதில் தலைவனது அறவுணர்வு, மானவுணர்வு, பொருளுணர்வு எல்லாம் காதலுணர்ச்சியினும் மிக்கோடுவதைக் காண்கின்றோம். தலைவிக்கு இது மகிழ்ச்சி தரவில்லை என்பதும் பெறப்படுகின்றது. தலைவனது பொருள் வேட்கையும் தலைவியின் காம வேட்கையும் முரண்பட்டனபோல் தோன்றினும் முடிவில் நல்வாழ்வுக்கு அரண் செய்கின்றன.

காழ்விரி கவையாரம் மீவரும் இளமுலை
போழ்திடைப் படாமல் முயங்கியும் அமையாரென்
தாழ்கதுப் பணிகுவர் காதலர்; மற்றவர்
சூழ்வதை எவன்கொல் அறியேன் என்னும்[81]

[கதுப்பு-கூந்தல்]

இக் கலித்தாழிசையில் குறிப்பிடப் பெறும் தலைவன் தலைவியின் காதலை நன்கு உணர்ந்தவன். இளைய முலையை ஒருபோதும்

80. ஷை-155
81. கலி-4

இடையீடுபடாமல் தழுவுகின்றான்; வேட்கை தணியானாய் கூட்டத்தால் தாழ்ந்த கூந்தலைக் கோலஞ் செய்கின்றான்; நீவிக் கொடுக்கின்றான். இனிப் பன்னாள் புணர்ச்சியின்பம் கிடைக்காதே என்ற ஏக்கத்தால் மீதூர்ந்த இன்பச் செய்கைகளில் ஈடுபடுகின்றான். கணவனுடைய கழிபெருங் களிப்பு பிரிவுக் குறிப்புடையது என்பதனைத் தலைவியும் உணர்ந்து கொள்கின்றாள்.

ஓங்கல் வெற்பிற் சுரம்பல இறந்தோர்
தாம்பழி யுடைய ரல்லர்; நாளும்
நயந்தோர்ப் பிணித்தல் தேற்றா வயங்குவினை
வாளேர் எல்வளை நெகிழ்த்த
தோளே தோழி தவறுடை யவ்வே.[82]

[ஓங்கல் வெற்பு - உயர்ந்தமலை; சுரம் - காடு; இறந்தோர் - கடந்து சென்றவர்; நாளும் - எஞ்ஞான்றும். நயந்தோர் - விரும்பி வந்தவர்; பிணித்தல் தேற்றா - விடாது பற்றிக் கொள்ளுதலை அறியாத; வினை - தொழில் திறம் வாய்ந்த]

இதில் ''பிரிவோர் பழியுடையரல்லர்; அவரைப் பிணிக்க அறியாத என் தோள்களே தவறுடையன'' என்று தலைவி வாயால் அமிழ்தம் பொழியா நிற்பர் கவிஞர்.

பொருள்வயிற் பிரிதலுக்குத்தான் காதலி இசையாள் என்பதைத் தெரிந்த தலைவன் சொல்லாதே செல்லத் துணிகின்றான். இக் குறிப்பினை அறிந்த தோழி, ''யாழின் நரம்பறுந்தால் நல்லிசை நின்று விடும்; ஊழ் மாறினால் பெருந்திருவும் ஒரு நொடியில் அழிந்துபடும்; தலைவனது மனம் மாறின் அரசியல் மதிப்பு ஓடிப் போகும்; ஆகவே, அழியும் செல்வத்தை ஆர்வத்தோடு காமப் பருவத்துத் தேட முனையற்க'' என்கின்றாள்.

தன்னகர் விழையக் கூடின்
இன்னுறல் வியன்மார்ப அதுமனும் பொருளே[83]

விருந்தினரைப் பாதுகாத்துத் தலைவியுடன் கூடிய வாழ்வே நீடிய பொருள் என்ற தோழியின் அறிவுரை கேட்டுத் தலைவன் செல வழுங்கினான். முன்னொரு காலத்தில் பொருள் முற்றி வந்த தலைமகன் பின்னும் பொருள் தேட விரும்பிய நெஞ்சிற்குச் சொல்லுகின்றான்:

82. அகம்-267
83. கலி-8

பரிதியம் செல்வம் பொதுமை யின்றி
நனவின் இயன்ற தாயினும் கங்குற்
கனவின் அற்றதன் கழிவே அதனான்
விரவுறு பன்மலர் வண்டுசூழ்பு அடைச்சிச்
சுவன்மிசை அசைஇய நிலைதயங் குறுமுடி
ஈண்டுபன் னாற்றம் வேண்டுவயின் உவப்பச்
செய்வுறு விளங்கிழைப் பொலிந்த தோள்சேர்பு
எய்திய கனைதுயில் ஏற்றொறுந்திருகி
மெய்புகு வன்ன கைகவர் முயக்கின்
மிகுதிகண் டன்றோ இலனே.[84]

[பரிதிஅம் செல்வம் - புவி முழுதாளும் செல்வம்; இயன்றது- கை கூடியது; கங்குல் - இரவில்; கழிவு - போக்கு; விரவுறு- கலப்புற்ற; அடைச்சி - சூடி; சுவல் மிசை - பிடரின் மீது - உறுமுடி - பெரிய கூந்தல்; ஈண்டு - செறிந்த; உவப்ப - மகிழ; இழை - அணி; தோள் சேர்பு-தோளை அணைந்து; ஏற்றொறும் - ஏற்குந்தொறும் ]

''புவி முழுதாளும் செல்வம் எய்தப்பெறினும், அது கனவினைப்போல் தோன்றி மறையும் தன்மைத்து. ஆயினும், என் தலைவியின் தோளை அணைந்து உடலோடு உடல் புகுமாறு கொள்ளும் முயக்கத்தினும் மேம்பட்ட பொருளை யான் கண்டதில்லேன்'' என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறு கின்றான்.

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.[85]

என்ற குறளின் கருத்தும் ஈண்டு எண்ணத்தக்கது.

தலைவனின் பிரிவுண்மை அறிந்த தலைவி காதலனை மயங்குந் தன்மையுடைய கோலத்துடன் வந்து அவன்மீது சாய்ந்து முயங்கி வருந்துவதாக இவர் அமைக்கும் காட்சி நீத்தாரையும் நிலைகுலையச் செய்து விழைவிக்கும் திறத்த தாகும்.[86] தலைவனது பிரிவுக் குறிப்பை அறிந்த தலைவி உண்மையல்லாத புன்முறுவலுடன் தலைவன் பொருள்வயிற் பிரிதலை உடன்படாத எண்ணத்துடன் அவன் அழையாமலே

84. அகம் - 379
85. குறள்-1103
86. அகம்-5.

அருகில் வந்து ஓவியம் வாளாது நிற்பதுபோல நிற்கின்றாள் ஆகத் தடக்கிய புதல்வனுடன். கண்ணில் நீர் குளமாகி அவள் பார்வையை நடுங்கச் செய்கின்றது.

பரல்முரம் பாகிய பயமில் கானம்
இறப்ப எண்ணுதி ராயின் அறத்தா(று)
அன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
அன்னவாக எண்ணுநள் போல
முன்னம் காட்டி முகத்தில் உரையா

[பால்-பருக்கைக் கற்கள்; முரம்பு மேட்டு நிலம்; இறப்ப-கடந்து செல்ல; அறத்தாறு-அறநெறி; தொன்றுபடுகிளவி-இயற்கைப் புணர்ச்சியின்போது சொன்ன சொல்; அன்னவாக-சொல்லிய அளவில் கழிக; முன்னம்-குறிப்பு]

பிரிவிற்குத் தான் உடன் படாமையைக் குறிப்பால் புலப்படுத்து வாள்போல் பெருமூச்சு விடுகின்றாள். அந்த வெப்பத்தால் புதல்வனின் புல்லிய தலையிலணிந்திருந்த செங்கழுநீர் மாலை பவளம் போன்ற தன்னுருவினை இழந்து பொலிவற்றதாகி விடுகின்றது. இத்தோற்றத்தைக் காண்கின்றான் தலைவன். ''நாம் அண்மையில் இருக்கவும் இவ்வாறு வருந்தும் இயல் பினளாகிய இவள் நாம் பிரிவோமாயின் உயிர் வாழ்ந்திராள்'' என்று கருதிச் செலவழுங்குகின்றான்.

செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே
வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்.[87]

[அழுங்கல்-தவிர்தல்; வன்புறை-வற்புறுத்தல்]

என்ற தொல்காப்பிய விதிக்கு இலக்கியமாகின்றான். இப்பாடலி லுள்ள பாலை ஓவியம் பாங்காக அமைந்திருப்பது படித்து அநுபவிக்கத் தக்கது.

சங்கப் பனுவலில் உடன்போக்குத் துறைக்கண் அரிய ஒரு புதுச் செய்தியைப் பெருங்கடுங்கோ தருகின்றார்.

புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்
கிடிஎென இடிக்கும் கோற்றொடி மறவர்
வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது

87. கற்பியல்-44

அமரிடை உறுதர நீக்கிநீர்
எமரிடை உறுதர ஒளித்த காடே.[88]

[புறவு-காடு; அணிகொண்ட-அழகமைந்த; பூநாறும்-மலர் மணம் வீசும்: கிடின்-ஒருவித ஓசை; தொடி-வீரவளை; வடி-கூர்மை; உறுதர-வந்த பொழுது]

இதில் இரண்டு செய்திகள் வருகின்றன. முதற்கண் தலைவனுக்கும் மறவர்கட்கும் உண்டான போரில் தலைவன் வெல்லுகின்றான். அதன்பின்னர் தலைவியின் சுற்றத்தார் வருவதைக் கண்டு, காட்டிற்குள் ஒளிந்து கொள்ளுகின்றான்.[89]

அமர்வரின் அஞ்சேன் பெயர்குவென்
உமர்வரின் மறைகுவென் மாஅ யோளே[90]

[அமர்-போர் (ஆறலைக் கள்வருடன்); உமர்-நின் உறவினர்]

என்ற மதுரை மருதனிள நாகனார் பாடலில் இரண்டாவது கருத்து வந்துள்ளதைக் காணலாம்.

தலைவன் வீரன் என்பதையும், வீரமும் காதலும் உறழ்ந்த போது காதலுக்காக வீரத்தை மறைத்துக் கொள்ளுபவன் என்பதையும் அறிகின்றோம். இந்த எடுத்துக்காட்டுகள்,

இடைச்சுரம் மருங்கின் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்தலில்[91]

[மருங்கு-இடை; தமர்-உறவினர்; கடை-பின்; பெயர்தல்-நீங்கல்]

என்ற தொல்காப்பியரின் குறிப்பிற்கு இலக்கியங்களாகின்றன.

அகத்திணை ஒரு சிறந்த காதல் திணை. இளமை காதல் பருவம். ஆதலின் கடமைக்கேனும் பிரிவதை அக விலக்கியம் உடன்பட்டுப் பாடாது. பிரிவது நுவலினும் பிரிவுணர்ச்சியுள் புணர்வெண்ணம் இழையோடும். தனி இயற்கையைச் சான்றோர்

88. நற். 48.
89. மருதன் இளநாகனார் நற்றிணையில் (பாடல் 362) இந்த இரு செய்திகளையும், ஓதலாந்தையார் ஐங்குறு நூற்றில் (பாடல்-312) இரண்டாவது செய்தியை மட்டிலும் குறிப்பிட்டுள்ளனர்.
90. நற்.362
91. அகத்திணை-44

பாடாதது போலவே, அகத்திணைக்கண் இல்லாளின் இல்லறக் கடன்களைக் காமத் தொடர்பு படுத்தாது பாடியதில்லை· கணவனின் வினைக்கடன்களையும் தலைவியின் உள்ளோட்டம் இல்லாது புனைந்ததில்லை. பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற உரிப்பொருள்பற்றிய பாடல்கள் யாவும் பசிவழிப்பட்ட தொழில்கள் போலக் காமப் புணர்ச்சியின் அடிப்படையில் எழுந்தனவாகும். புணர்ச்சிக் குறிப்பும் வேட்கையும் காதலி அல்லது காதலன் நினைவு இல்லாத பாலைப் பாடல்களே இல்லை எனலாம்.

பெருங் கடுங்கோவின் பாலைப் பாடல்கள் யாவற்றிலும் **புணர்ச்சி மயக்கம் இழையோடுவதைக்** காணலாம். அருகிருக்கும் போதே அல்லல் உறுபவள் பிரிந்தால் உயிர் தரியாள் என்று தலைவன் செலவழுங்கும் பாடலிலும் (அகம்-5), பூவேய்ந்த தலைவியின் கூந்தலில் தூங்கிய துயிலைத் தலைவன் மறந்து உறங்கான் என்று தோழி கூறும் பாடலிலும் (அகம்-223), சுரங் கடந்தோரைப் பழித்தல் ஆகாது, அவரைப் பிணித்துக் கட்டும் ஆற்றல் இல்லாத தோள்களே பழியுடையன என்று தலைவி நொந்து கொள்ளும் பாடலிலும் (அகம்-267) இன்ப உள்ளங்கள் பளிங்கிடுகின்றன. ஆகவே, எல்லா அகப்பாடல்களும் முன்னும் பின்னும் புணர்ச்சியை நோக்கியே அமைகின்றன என்று தெளியலாம். திருவள்ளுவப் பெருமானும் காமத்துப்பால் இறுதிக் குறளில்[92] 'கூடி முயங்கப் பெறின்' என்று தலைக்கட்டியிருத்தல் இதற்கு ஒரு பெரிய சான்றாக அமைகின்றது.

---

92. குறள்-1330

# துறையால் சிறப்புப் பெயர் பெற்றோர்

துறைபாடிய பெருமையால் சிறப்புப்பெயர் பெற்ற இரு சங்கச் சான்றோர் காணப்பெறுகின்றனர். அவர்களுள் ஒருவர் மடல் பாடிய மாதங்கீரனார்! மற்றொருவர் வெறி பாடிய காமக் கண்ணியார். இவர்கள் இருவரைப்பற்றி இந்த இயலில் சிறிது கூறுவோம்.

## (i) மடல்பாடிய மாதங்கீரனார்

இந்நூல் பக்கம் (118-120) காண்க.

இவ்விடத்தில் திருமங்கையாழ்வாரின் மடலூர்தல்பற்றிய கருத்தினை ஆராய்வது பொருத்தமாகும். ஆடவன் மகளிரைக் குறித்து மடலேறலாமேயன்றி பெண் ஆடவனைக் குறித்து மடலூரலாகாது என்பது தமிழ் நெறியில் விதிக்கப்பெற்ற ஒரு வரம்பாகும்.

எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்
பொற்புடை நெறிமை இன்மை யான[1]

என்பது தொல்காப்பியம். திருவள்ளுவரும்,

கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.[2]

என்று இந்நெறியினை வலியுறுத்துவதைக் காணலாம்.

திருமங்கையாழ்வார் பிராட்டி தசையை அடைந்து பரகால நாயகி ஆனபின்னர் மடலூரப் புகுதல் பொருந்துமோ என்ற வினா

1. களவியல்-38 (இளம்)
2. குறள்-1137.

எழுகின்றது. இந்த ஆழ்வார் அருளியுள்ள **சிறிய திருமடல்**, **பெரிய திருமடல்** என்ற இரண்டு பிரபந்தங்களிலும் ஆழ்வார் நாயகி மடலேறத் துணிவதாகக் கூறப்பெறுகின்றது. இதனைத் தமிழ் மரபினை மீறிய ஒரு புரட்சி என்று கருதலாமா என்பது வினா. இரண்டு மடல்களிலும் ஆழ்வார் நாயகி 'மடலூர்வன் மடலூர்வன்' என்று சொல்லி அச்சமுறுத்தினாரேயன்றி அச் செயலை முற்றமுடிய நடத்தினதாகக் கூறவில்லை. சிறிய திருமடலில்,

ஓரானைக் கொம்பொசித்து ஓர்ஆனைக் கோள்விடுத்த
சீரானை செங்கண் நெடியானை தேன் துழாய்த்

தாரானை தாமரைபோல் கண்ணானை—எண்ணருஞ்சீர்
பேரா யிரமும் பிதற்றி பெருந்தெருவே

ஊரார் இகழிலும் ஊராது ஒழியேன்நான்
வார்ஆர்பூம் பெண்ணை மடல்.[3]

[முதல் ஆனை-குவலயா பீடம்; இரண்டாவது ஆனை-கசேந்திரன்; கோள்விடுத்த-இடரைப் போக்கின; இகழினும்-பழித்தாலும்; ஊராது ஒழியேன்-ஊர்ந்தே தீருவேன்]

என்று கூறுவதாலும், பெரிய திருமடலிலும்,

உலகறிய ஊர்வன்நான்

முன்னி முளைத்தெழுந்து ஓங்கி ஒளிபரந்த
மன்னியபூம் பெண்ணை மடல்.[4]

என்று கூறுவதாலும் இதனை அறியலாம். நம்மாழ்வாரும் பராங்குச நாயகி நிலையில் இம்மடலேறுதலைச் குறிப்பிடும் பொழுது,

தோழீ! உலகு தோரலர் தூற்றி
கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே.[5]

[கோணை-மினுக்கு; குதிரி-அடங்காத பெண்]

என்றும்,

3. சிறிய திருமடல்-இறுதிப் பகுதி.
4. பெரிய திருமடல்-இறுதிப் பகுதி.
5. திருவாய்-5.3: 9.

யாம்மடல் ஊர்தும் எம்மாழி
அங்கைப் பிரானுடை
தூமடல் தண்ணந் துழாய்மலர்
கொண்டு சூடுவோம்
யாம்மடம் இன்றித் தெருவு
தோறயல் தையலார்
நாமடங் காப்பழி தூற்றி
நாடும் இரைக்கவே.[6]

[ஆழி-சக்கரம்; தூமடல்-பரிசுத்தமான இதழ்; மடம்-ஒடுக்கம்; தையலார்-பெண்கள். நா மடங்காப் பழி-நாக்கு இடைவிடாது சொல்லும் பழிமொழி; இரைக்க-இரைச்சல் போகும்படி]

என்றும் கூறுவது ஈண்டு ஒப்புநோக்கி அறியத் தக்கது. எனவே ஆழ்வார்கள் தமிழ் நெறியினை அறியாது கூறினர் என்று கொள்வதற்கில்லை. ஆகவே, ஆழ்வார்கள் கூற்றினைப் புரட்சிப் போக்கு என்று சொல்வதும் ஒவ்வாது.

திருமங்கை ஆழ்வார் தாம் தமிழ் நெறியினை அறிந்திருப்பதாகவும், வடமொழி நெறியினைப் பின்பற்றியே இத்துணிவினை மேற்கொண்டதாகவும் கூறுகின்றார்.

மான்நோக்கின்
அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்
மன்னும் மடலூரார் என்பதோர் வாசகமும்
தொன்னுரையில் கேட்டறிவ துண்டுஅதனையாம்தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்.[7]

[அலர்-பழிச்சொல்; ஏச-தூற்ற; தெளியோம்-நினைக்க மாட்டோம்]

என்று பெரிய திருமடல் பகுதியால் இதனை அறியலாம். ‘‘மடலூர்தல் என்பது ஆசை மிகுதியால் மேற்கொள்ளும் செயல், ஆசையை வரம்பிட்டுக் காக்க யாராலும் இயலாது. அரசராணைக்கும் அது கட்டுப்படுமோ? வேலியடைத்தால் நிற்குமோ வேட்கை? அளவு கடந்த வேட்கையின் காரணமாக விளையக் கடவதான

6. திருவாய்-5.3:10
7. பெரிய திருமடல்.

மடலூர்தலை ஆண்கள்தாம் மேற்கொள்ளலாம், பெண்கள் மேற்கொள்ளாலகாது என்று வரம்பு கட்டுவது காதலின் இயல்பை அறியாதவர்களின் செயலாகும் என்பது ஆழ்வாருடைய திருவுள்ளம்'' என்று கொண்டால் ஆழ்வார் புரட்சியான போக்குடையவர் என்று கருதலாம்.

### (ii) வெறிபாடிய காமக் கண்ணியார்

இந்நூல் பக்கம் (123-134) காண்க.

'வெறிவிலக்கு' பற்றிய நம்மாழ்வாரின் திருவிருத்தப் பாசுரம் ஒன்றும், திருவாய்மொழிப் பாசுரங்கள் இரண்டும் ஈண்டுக் காட்டுதல் சுவை பயக்கும்.

சின்மொழி நோயோ கழிபெருந்
 தெய்வம்;இந் நோய்இனது என்று
இன்மொழி கேட்கும் இளந்தெய்வம்
 அன்றிது; வேல! நில்நீ;
என்மொழி கேள்மின், என்அன்னைமீர்!
 உலகேழும் உண்டான்
சொன்மொழி, மாலைஅந் தண்ணந்
 துழாய்கொண்டு சூட்டுமினே.[8]

[சின்மொழி - சில பேச்சுகளே பேசவல்ல இவள்; கழிபெரு - மிகப் பெரிய; இனது - இப்படிப் பட்டது; இளந் தெய்வம் - சிறு தெய்வம்; நில் - பூசையை நிறுத்துக; சொல்மொழி - திருநாமம்; தண்அம் - குளிர்ந்த அழகிய]

என்பது திருவிருத்தப் பாசுரம். நாடகப் பாணியில் அமைந்துள்ளது இப்பாசுரம். நடுவீட்டின் ஒரு பக்கம் வெறியாடுகளன் அமைத்து வேலன் வெறியாட்டத்திற்கு ஆயத்தமாகின்றான். மற்றொரு பக்கம் வெறியாடலைக் காண்பதற்காக அன்னையரும், 'அரிநரைக் கூந்தல் செம்முதுச் செவிலியரும்' பிறரும் குழுமியுள்ளனர். தலைவியும் தோழியும் வேறோர் அறையில் உள்ளனர்.

8. திருவிருத். - 20

வெறியாடலால் அலராகுமே எனத் தலைவி மனம் கவல்கின்றாள். தோழி அவளைத் தேற்றுகின்றாள்.

தாயரின் செயலைத் தடுப்பதற்காக நடுவீட்டிற்கே வந்து விடுகின்றாள். தோழி வேலனை நோக்கி இவ்வாறு பேசுகின்றாள்: "இந்த நங்கைக்கு இப்போது நேர்ந்துள்ள நோய் சிறு தெய்வடிம யாக வந்ததன்று; 'கூராழி வெண் சங்கேந்தி வரும்' கழிபெருந் தெய்வத்தால் உண்டானது. இத் திருமாளிகை தேவதாந்தரபரர் புகும் திருமாளிகையன்று காண். ஆகவே, உன் வெறியாடலை நிறுத்துக; கடையையும் கட்டுக" என்கின்றாள். இங்கே இன்சுவை மிக்க பெரியவாச்சான் பிள்ளையின் உரையும் காணத் தக்கது; "அர்த்த ரஹிதமான மொழி கேட்கும் இளந் தெய்வம் அன்று இது; தனக்கு இல்லாததை உண்டாகக் சொல்லப்புக்கால் கேட்டுக் கொண்டாடும் தெய்வம் அன்று இது; கைக் கூலி கொடுத்துக் கவிபாடுவித்துக் கொள்ளும் தேவதைகளன்று" என்பது.

உடனே குழுமியிருக்கும் பெண்கள்பக்கம் திரும்பி இவ்வாறு பேசுகின்றாள்: "அன்னைமீர்! நீங்கள் மூத்தவர்களேயாயினும், நான்அகவையில்சிறியவளாயினும், இவள் தன்மையைஉண்மையாக அறிந்தவளாதால் என் சொற்களைக் கேட்பீர்களாக. உலகேழும் உண்டானின் திருநாமத்தைச் சொல்லுதலைச் செய்து கொண்டு அவனது அழகிய குளிர்ந்த திருத்துழாயைச் சூட்டுவீர்களாக" என்கின்றாள். "ஒருங்காகவே உலகு ஏழும் விழுங்கி உமிழ்ந்திட்ட, பெருந் தேவன பேர் சொல்லகிற்கில், இவளைப் பெறுதிரே"[9] என்று திருவாய்மொழியிலும் பேசுவர் இவ்வாழ்வார். நோயாளி கட்கு உட்செலுத்துவதொரு மருந்தும் மேலிற் பூசுவதொரு மருந்தும் பயன்படுத்துவது போல எம்பெருமானது திருநாமங்களை அவள் செவிவழியே உள்புகும்படி உச்சரித்து, மேலுக்கு அவன் அணிந்து கொண்ட திருத்துழாய் மாலையைக் கொணர்ந்து சூட்டுங்கள் என்று பரிகாரம் கூறுகின்றாள் தோழி.

மேலும், திருவாய்மொழிப் பாசுரங்களும் ஈண்டு அறியத் தக்கன.

திசைக்கின்ற தேயிவள் நோய்இது
மிக்கபெருந் தெய்வம்
இசைப்பின்றி நீரணங் காடும்
இளந்தெய்வம் அன்றிது

9. திருவாய் 4. 6: 4.

திசைப்பின்றி யேசங்கு சக்கரம்
என்றிவள் கேட்கநீர்
இசைக்கிற் றிராகில் நன்றேஇல்
பெறும்;இது காண்மினே.[10]

[திசைக்கின்றதே - அறிவு கெட்டதே; இசைப்பு - தகுதி; அணங்காடும் - வெறியாடும்: திசைப்பு - மனக் குழப்பம்; கேட்க - காதில் விழும்படியாக: இசைக்கிற்றீர் ஆகில் - சொல்ல வல்லவர் ஆனால்; நன்றே - நலமாகவே; இல் - குடியிருப்பு]

''இவள் நோய் தீர வேண்டுமாகில் மனக் குழப்பமின்றி எம் பெருமானுடைய திவ்வியாயுதங்களை இவள் செவிப்படுமாறு சொல்லுவதே யாகும்'' என்கின்றாள். இவ்விடத்தில் ஓர் ஐதிகம் பட்டர் காலத்தில் **ஆய்ச்சிமகன்** என்றொரு பாகவதர்; அவர் நோவு கண்டு உணர்ச்சியற்றுக் கிடக்கும் காலத்தில் பட்டர் அவரைப் பார்க்க எழுந்தருளினாராம்; அப்போது அந்த ஆய்ச்சி மகன் அடியோடு அறிவு நடையாடாதபடி இருப்பதைக் கண்ட பட்டர் அவர் அழகிய மணவாளனிடத்தில் மிக்க பக்தியுடையவர் என்பது காரணமாக அவருடைய திருச் செவியிலே மெல்ல ஊதினாப் போலே 'அழகிய மணவாளப் பெருமாளே சரணம்' என்றாராம்; அதனால் உணர்ச்சியுண்டாய் நெடும்போதெல்லாம் அவர் அந்தச் சொல்லையே சொல்லிக் கொண்டிருந்தாராம். என்பது.

இதுகாண்மின் அன்னைமீர் இக்கட்டு
விச்சிசொல் கொண்டுநீர்
எதுவானும் செய்து அங்கோர்
கள்ளுமிரைச்சியும் தூவேன்மின்;
மதுவார் துழாய்முடி மாயப்
பிரான்கழல் வாழ்த்தினால்
அதுவே இவள்உற்ற நோய்க்கும்
அருமருந்து ஆகுமே.[11]

[எதுவானும் - கெட்டதாக இருப்பினும்; தூவேல்மின் - ஆராதனையாக வைத்தல் வேண்டா; மது ஆர் - தேன்

10. ஷை 4. 6: 2.
11. ஷை. 4. 6. 3.

பொருந்தின; கழல் - திருவடிகள்; உற்ற - அடைந் திருக்கும்.]

"தவறுதலான செயல்களைச் செய்யாமல் எம்பெருமானின் திருவடிகளை வாழ்த்துவதாகின்ற பரிகார முறைமையை அநுட்டித்தால் இவளுடைய நோய் தீரும்" என்கின்றாள். 'காண்மின்' என்றது 'கேண்மின்' என்ற பொருளில் வந்ததாகவும் கொள்ளலாம். நீர் - மறந்தும் புறந்தொழாத குடியில் வந்தவர்களாகிய நீங்கள் என்றபடி. 'எதுவாயினும் செய்து' என்பதனால் 'வாயால் அதனைச் சொல்லுவதற்கும் கூசுகின்றாள். "தோளினைமேலும் நன்மார் பின் மேலும்...புனைந்த தண்ணந்துழாயுடையம்மானது"[12] திருவடிகளை நினைந்து "உன் சேவடி செவ்வி திருக்காப்பு"[13] என்று பல்லாண்டு பாடுமளவே போதும் என்கின்றாள்.

12. ஷை 1. 9: 7.
13. பெரியாழ். திரு. காப்பு.

# உவமையால் பெயர் பெற்றோர்

சங்கச் சான்றோர்களாகிய சில அகத்திணைப் புலவர்களின் பெயர்கள் அறியக் கூடவில்லை. தன்னலமற்றுத் தம்மையும் மறந்து, தம் பெயர்களைக்கூடக் குறிப்பிடாது சென்றவர்கள் சிலர். இவர்தம் பாக்களைப் பயின்று, அப் பாக்களில் வரும் உவமையினை உணர்ந்து, அவற்றால் அவர்கட்குத் திருநாமம் சாத்திய பெரு மக்களின் நன்றி மறவாத புலமை நலத்தைப் போற்றுவோம்; நாமும் புகழ் பெறுவோம். இங்ஙனம் உவமை யால் பெயர் பெற்றோர் பதிநால்வர்.

## (i). அணிலாடு முன்றிலார்

தலைவன் பிரிந்த காலத்தில் தலைவியின் மேனியிற் பொலிவு இழந்த வேறுபாட்டைக் கண்டு கவல்கின்றாள் தோழி. அதற்குச் சமாதானம் கூறுவதாக அமைகின்றது தோழியின் பேச்சு. இயல் பாகவுள்ள சிறப்போடு மிகுதியான சிறப்பை விழாக் காலத்தில் ஒரூர் கொண்டிருக்கும். அங்ஙனமே தலைவன் தன்னருகில் இருக்கும்போது தன் இயற்கை நலங்களோடு சிறப்பாக விளக்கம் பெற்றிருப்பதாகக் கூறுகின்றாள் தலைவி. வெம்மையின் கொடுமைக்கும் ஆறலை கள்வர்களின் ஏதத்திற்கும் அஞ்சி ஊரினர் வேற்றிடம் சென்றால் அவ்வூர் பொலிவிழந்து நிற்கும். தலைவன் தன்னை விட்டுப் பிரிந்துள்ளபோது தனிமையுள்ள வீட்டைப் போன்று தான் பொலிவிழந்து வருந்துவதாகக் கூறு கின்றாள் தலைவி.

அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்
மக்கள் போகிய அணிலாடுமுன்றில்

**புலம்பில்** போலப் புல்லென்(று)
அலப்பென் தோழி அவர் அகன்ற ஞான்றே[1]

[அத்தம் - பாலை நிலம்; நண்ணிய - பொருந்திய; சீறூர் - சிறிய ஊர்; முன்றில் - முற்றம்; புலம்பு - தனிமை; இல் - வீடு; புல்லென்று - பொலிவிழந்து]

என்பது தலைவி கூற்று. அணில்கள் பேரச்சம் உடையவை; தாம் ஏறி மகிழும் மரத்தின் கிளைகள் சிறிது அசையினும் அஞ்சும். மக்களோ பிறஉயிர்களோவருவதைஉணரின் ஓடிஒளியும்இயல்பின. மக்கள்நிழலைக்காணினும் அவைமருண்டு ஓடும். ஆதலின்மக்களோ பிற உயிர்களோ பயிலும் இடங்களில் அவை இயங்கா. இவ்வாறு அஞ்சும் இயல்புடைய அணில்கள் பல கூடி அச்சமற்று ஆடி மகிழும் என்றால் அவ்விடம் மக்கள் வாழ்விழந்த வெற்றிடமாதலே வேண்டும். இத்தகைய இடமே '**அணிலாடு முன்றில் புலம்பில்**'. இந்த அழகிய உவமை அமைத்த சிறப்பால் இப்புலவர் பெருமான் **அணிலாடு முன்றிலார்** என்ற சிறப்பான திருநாமத்துடன் பெருமை பெற்றுத் திகழ்கின்றார்.

### (ii) ஓரேர் உழவனார்

தலைவன் தான் மேற்கொண்ட முயற்சியின் காரணமாக தலைவியை விட்டு நெடுந் தொலைவிலுள்ள ஓரிடம் சென்றான். முயற்சி முற்றுப் பெற்றபின் தன் ஊர் திரும்ப நினைக்கின்றான். உடனே செல்ல வேண்டும் என விரைகின்றான். இவ்விரைவைக் விஞர் ஓர் உழவனை உவமை கூறி விளக்குகின்றார்.

ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோள்
பேரமர் கண்ணி இருந்த ஊரே
நெடுஞ்சேண் ஆரிடை யதுவே; நெஞ்சே
ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத் (து)
**ஓரேர் உழவன் போலப்**
பெருவிதுப்பு உற்றன்று நோகோ யானே.[2]

[ஆடு - அசைகின்ற; அமை - மூங்கில்; புரையும் - ஒத்த; வனப்பு - அழகு; பணைத்த - பருமையை உடைய; கண்ணி-

1. குறுந். 41
2. ஷை. 131

கண்ணையுடையவள்; சேண் - தொலைவு; ஆர்இடையது- அடைதற்கரிய இடத்தில் உள்ளது; புனம் - நிலம்; விதுப்பு- விரைவு; நோகு - வருந்துவேன்]

என்பது பாடல். ஓர் ஏரினை மட்டிலும் கொண்டுள்ளவன் ஈரம் வீண்படாமல் உழுதற்கு விரைதலைப்போல தன் நெஞ்சம் தலைவியை உரிய பருவத்தே (கார்காலத்தே) கண்டு அளவளாவ விரைகின்றதாகக் கூறுகின்றான். பல ஏருடையான் சிறிது சோம்பி யிருப்பினும் ஏவலாளர் துணைகொண்டு குறுகிய கால அளவில் உழுதுவிடல் கூடும்; ஓர் ஏர் உழவனோ அவ்வோரேரைக் கொண்டே ஈரம் வீண்படாமல் உழ வேண்டியவனாதலின் விரைந்து செயற்படுவான். ஆதலின் அவனை உவமை கூறினான் தலைவன். ஓரேர் உழவன் என்றது ஓரேரும் அதனால் உழப்பெறும் சிறு நிலமும் உடையவனைக் குறித்தது. தன் நெஞ்சு விரைந்தும், நெடுந்தொலைவு காரணமாகத் தான் உடனே சென்று காண்பதற் குரிய நிலையில் இன்மையின் "நோகோ யானே" என்கின்றான். தலைவனின் விரைகின்ற உள்ளத் துடிப்பிற்கு ஓர் ஏர் உழவனின் உள்ளத் துடிப்பை உவமை காட்டி விரைகின்ற உள்ளத்தையும் உழவின் சிறப்பையும் ஒருங்கே விளக்கிய கவிஞர் பெருமான் **ஓரேர் உழவனார்** என்ற நிலையான சிறப்புப் பெயர் பெறு வாராயினர்.

### (iii) கயமனார்

பரத்தையிற் பிரிந்த தலைவன் தோழியிடம் வாயில் வேண்டு கின்றான். தோழி, "நின் பரத்தமையாகிய கொடுமையால் தலைவி துன்புறுவளாயினும், நீ செய்த குற்றத்திற்குத் தான் நாணி எமக்கும் அறிவியாமல் மறைத்துக் கற்பொழுக்கத்தில் சிறப்புற்றுள்ளாள்; ஆதலின் சினந்திலள்" என்றுகூறித்தலைவியைக் கண்டு மகிழ்தல் இயலும் என்பதை அவனுக்குப் புலப்படுத்து கின்றாள்.

பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்
**கயம்மூழ்கும்** மகளிர் கண்ணின் மானும்

தண்ணந் துறைவன் கொடுமை
நம்முன் நாணிக் கரப்பா டும்மே.[3]

[பசுஅடை - பசிய இலைக்கு மேலே; நிவந்த - உயர்ந்து தோன்றும்; கணைக்கால் - திரட்சியையுடைய காம்பு; இனம்மீன் - கூட்டமாகிய மீன்கள்; இரும் - கரிய; ஓதம் - வெள்ளம்; மல்குதொறும் - அதிகரிக்குந் தோறும்; கயம்- ஆழமான குளம்; கரப்பு ஆடும் -மறைத்துப் பேசுகின்றாள்]

உப்பங் கழியில் இலைகட்கிடையே நெய்தற் பூ மலர்ந்துள்ளது. கடல்நீர் பொங்குந்தொறும் கழியில் நீர் அளவு சற்று உயரும்;கடல் அலைகள் ஒய்ந்து அடங்குந்தொறும் கழிநீர் சற்றுக் குறைந்து தோன்றும். கழிநீர் ஏறி இறங்குவதற்கேற்ப கழியில் மலர்ந்துள்ள நெய்தல் மலர் நீருள் மறைந்தும் நீர் மேல் எழுந்து தோன்றியும் மாறி மாறிக் காட்சி தரும். இக்காட்சி குளத்தில் நீராடும் மகளிர் நீருள் மூழ்கி எழுங்கால் தோன்றும் அவர்தம் கண்களின் காட்சியோடு ஒத்திருக்கும். ஆகவே, கவிஞர் கழிநீரில் மறைந்தும் வெளிப்போந்தும் மாறிமாறிக் காட்சி நல்கும் நெய்தல் மலர் கயத்துள் மூழ்கி மூழ்கி எழும் மகளிரின் கண்களைப் போன்று உள்ளன என்று உவமை கூறுகின்றார். இதனால் இவர் **கயமனார்** என்ற சிறப்புப் பெயருடன் வழங்கப்பெறுகின்றார். சிறப்பில்லாத நெய்தற் பூக்கள் சிறப்புடைய மகளிர் கண்களை மானும் என்றமையால் சிறப்பில்லாத பரத்தையர் தலைவனுக்குச் சிறப்புடைய தலைவியை ஒத்தனர் என்னும் குறிப்பும் இவ்வுவமையால் பெறப் படுவதைக் கண்டு மகிழ்க.

### (iv) கல்பொரு சிறுநுரையார்

ஒருசமயம் தலைவன் ஏதோ ஒரு நிமித்தத்தின்பொருட்டு தலைவியை விட்டுப் பிரிகின்றான்; பிரிந்து சென்ற தலைவன் குறிப் பிட்ட காலத்தில் வரவில்லை. தலைவி மிகவும் மனம் கவல் கின்றாள். தோழி அவளை ''ஆற்றி இருத்தல் வேண்டும்'' என் கின்றாள். இதற்குத் தலைவி முன்னிலைப் புறமொழியாகக் கூறும் மறுமொழி பாடலில் அமைகின்றது.

3. ஐங்.- 9

காமம் தாங்குமதி என்போர் தாமஃ(து)
அறியலர் கொல்லோ அனைமது கையர்கொல்
யாமெங் காதலர் காணே மாயிற்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
**கல்பொரு சிறுநுரை** போல
மெல்ல மெல்ல இல்லா குதுமே.[4]

[தாங்குமதி - பொறுத்து ஆற்றுவாயாக; மதுகையர் - வன்மையுடையவர்; துனி - துயர்; பெரு நீர் - மிக்க வெள்ளம்]

இதில் பிறரை நோக்கிக் கூறுவாள்போல் தலைவி கூறுகின்றாள்: "காம நோயைப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று சிலர் அறிவுரை கூறுகின்றனர். அவர் காமத்தின் தன்மையை அறியாத பேதையர். நல்லாண்மையையும் நாணையும் அழிக்க வல்ல ஆற்றலுடையது காமம்; கணவரைப் பிரிந்து தனித் துறையும் மகளிரைத் தெறூஉம் இயல்புடையது அது. அதனைப் பொறுக்கு ஆற்றல் எனக்கில்லை. காதலரைச் சிறிதுபோது காணாவிடினும் உள்ளம் உறுதுயர் கொண்டு விடுகின்றது; உள்ளத் துயருக்கேற்ப உடல் நலனும் சிறிதுசிறிதாகக் குன்றத் தொடங்குகின்றது. புதுப் புனலில் மிதந்து வரும் பருத்த நுரைத்திரள் ஆற்றின் கரைக்கண் அமைந்த கல்மீது மோதுந்தொறும் மோதுந்தொறும் அதன் அளவு சிறிது சிறிதாகக் குறைந்து இறுதியில் இருந்த இடமும் தெரியாமல் மறைவதைப் போல நானும் விரைவில் அழிந்தொழிவேன்" என்கின்றாள். 'கல்பொரு சிறு நுரை' என்ற அழகிய உவமையமைத்த புலவரும் **கல்பொரு சிறுநுரையார்** என்ற சிறப்புப்பெயர் பெறுவாராயினர்.

## (v). கவை மகன்

தலைவி—தலைவனின் ஒப்புயர்வற்ற காதல் ஒழுக்கத்திற்கு உறுதுணையாக நிற்கின்றாள் தலைவியின் உயிர்த் தோழி. தலைவியின் பருவம் அறிந்து அவளைக் காக்கும் பண்பாடுணர்ந்த தாய் தன் மகளை இற்செறிக்கின்றாள். தலைவன் அதனால் இரவுக்

4. குறு. 290

குறியை மேற் கொள்ளத் துணிகின்றான். இந்நிலையில் தோழி இரவுக்குறியை மறுப்பாள்போல் வரைவு கடாவுகின்றாள். இச் செய்தியை விளக்கும் தோழி கூற்றாக அமைந்த குறுந்தொகைப் பாடல்;

கொடுங்கால் முதலைக் கோள்வல் ஏற்றை
வழிவழக் கறுக்கும் கானலம் பெருந்துறை
இனமீன் இருங்கழி நீந்தி நீநின்
நயனுடை மையின் வருதி: இவள்தன்
மடனுடை மையின் உயங்கும்; யான்அது
**கவைமகன்** நஞ்சுண் டாஅங்கு
அஞ்சுவல் பெரும!என் நெஞ்சத் தானே,[5]

[கொடுகால் - வளைந்த கால்; கோள்வல் - கொல்லுதல் வல்ல; ஏற்றை - ஆண்; வழிவழக்கு - வழியில் செல்லுதல்; அறுக்கும் - நீக்கும்; இனமீன் - திரளாகிய மீன்; இரு கழி - கரிய கழி; நயன் - அன்பு; வருதி - வருகின்றாய்; மடன் - அறியாமை; உயங்கும் - வருந்துவாள்; கவை மகன் - இரட்டைக் குழவிகள்; அஞ்சுவன் - அஞ்சுவேன்]

இதில் தோழி கூறுகின்றாள்: ''நீயோ ஆற்றின் அல்லல் கண்டும் நின் அன்புடைமையால் அஞ்சாது வரத் துணி கின்றனை; அத்தகைய அன்புடைய நின்னை 'வாரற்க' என்று கூற என் மனம் அஞ்சுகின்றது. ஆனால் அவளோ நின் அன்பின் ஆழத்தையோ ஆற்றலின் பெருமையினையோ அறியாளாய் நீ கொடிய வழியில் இரவில் வருதலை எண்ணி எண்ணி வருந்துகின்றாள். அவள் வருத்தம் மிகுமாறு 'வருக' என்று கூறவும் என் உள்ளம் அஞ்சு கின்றது; 'வாரற்க' என்று கூறிய நின் உள்ளம் வருந்தும் என்றும் அஞ்சுகின்றேன். என்ன செய்வதென்று அறியாது விழிக்கின்றேன்'' என்கின்றாள்.

தலைவன்—தலைவி இருவரின் உள்ளத் துடிப்பினையும் உணர்ந்துள்ளமையால் எதுவும் செய்ய மாட்டாது வருந்தும் தன் நிலைக்கு இரட்டைக் குழந்தைகளை உடையாள் ஒரு தாய் அவ்விரு குழந்தைகளும் ஒரே சமயம் நஞ்சுப் பொருளை உண்டக் கால் எந்தக் குழந்தைக்கு நஞ்சுதீர் மருந்தை முதலில் அளிப்பது என அறியாது துடிக்கும் தாயின் துயரினை உவமை காட்டித் தன் உள்ளத் துடிப்பைத் தோழி ஒருவாறு உணர்த்துகின்றாள்; தான்

5. குறு - 324

இருவர் திறத்தும் இரக்கமுடையவள் என்பதைப் புலப்படுத்து கின்றாள்.

இவ்வுமையால் இரண்டு மகவினுக்கும் ஒருங்கே நஞ்சு தீர்க்கும் மருந்து தருதலே தக்கதாகின்றது. அது போலவே, தலைவன் தலைவி ஆகிய இருவருக்கும் நன்மை தரும் வரைவே ஏற்புடைத்து என்பதைப் பெற வைக்கின்றாள். கவை மகனின் செய்தியை உவமையாக எடுத்தாண்ட சிறப்பால் இயற்பெயர் மறைந்த இப் புலவரை அவர் கூறிய உவமையையே பெயராக ஆக்கி மகிழ்ந்தனர் அக்கால அறிவுடையோர். புலவரும் **கவைமகன்** என்ற சிறப்புப் பெயருடன் திகழ்கின்றார்.

## (vi.) காலெறி கடிகையார்

தமிழ் நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் ஏற்ப பொருள் தேடச் செல்ல எண்ணுகின்றான் தலைவன். பிறகு வாழ் நாளது சிறுமையையும் இளமையின் அருமையையும் கருதிச் செலவு தவிர் கின்றான். இவன் தன் நெஞ்சிற்கு உணர்த்தும் வகையில் குறுந் தொகைப் பாடல் அமைகின்றது.

இருங்கண் ஞாலத்து ஈண்டுபயப் பெருவளம்
ஒருங்குடன் இயைவ தாயினும் **கரும்பின்**
**காலெறி கடிகைக் கண் அயின் றன்ன**
வாலெயிறு ஊறிய வசையில் தீநீர்க்
கோலமை குறுந்தொடிக் குறுமகள் ஒழிய
ஆள்வினை மருங்கிற் பிரியார்; நாளும்
உறன்முறை மரபின் கூற்றத்து
அறனில் கோள்நற் கறிந்தசி னோரே,[6]

[இருகண் - பெரிய இடம்; ஞாலம் - பூமி; ஈண்டு பயம் - தொக்க பயனையுடைய; பெருவளம் - பெரிய செல்வம்; இயைவது - பொருந்துவது; கால் எறி - அடிப் பகுதியில் வெட்டிய; கடிகைக்கண் - துண்டத்தை; அயின்றன்ன - உண்டாற் போன்ற; வால் எயிறு - வெள்ளிய பல்; வசை இல் - குற்றமற்ற; கோல் அமை - திரட்சி அமைந்த;

6. குறு. 267

தொடி - வளையல்; ஒழிய - நீங்கி இருப்ப; ஆள்வினை மருங்கின் - முயற்சியின் பொருட்டு]

பொருள் தேடச் செல்ல நினைப்பவன் உள்ளத்தில் துணைவியின் பேரழகும், அவள் தரும் பேரின்பமும் அவன் உள்ளத்தே உருப் பெற்று நிற்கலாயின. வளையணிந்து வனப்பில் மிகுந்து இளமை எழில் தோன்ற நிற்கும் அவள் அழகு அவன் கண்ணிற்கு விருந்தாய் அமைந்தது. அந்த அழகு அவள் தரும் இன்பத்தையும் நினைப் பூட்டிற்று. அவள் வாயில் ஊறும் உமிழ் நீர் தரும் இன்பத்தை எண்ணுகின்றான். பொருள்வயிற் பிரியின் இந்த இன்பத்தை இழக்க நேரிடுமே என்று ஏங்குகின்றான். இளமை கழிந்து துய்க்கும் இன்பம் இன்பம் ஆகாது. இளமையிற் சிறந்த வளமையும் இல்லை; இளமை கழிந்த பின்றை வளமை காமம் தருதலும் இன்று. இவ்வாறு எண்ணுகின்றவன் இளமையின் சிறுமையையும் அதன் அருமையையும் சிந்திக்கின்றான்.

ஒருவனது வாழ்நாள் கழிந்த பின்னர் ஒரு நாழிகையும் வாழ விடான் கூற்றுவன். பொருள் கருதிப் பிரிந்து செல்பவர் உயிரோடு மீள்வர் என்பதற்கு உறுதி இல்லை; நிலையற்றது இவ்வாழ்வு. ஆகவே கிடைத்தற்கரிய, கழிந்தால் மீண்டும் பெறலாகாத, இளமைக் காலத்திலேயே நுகர வேண்டிய இன்பங்களை நுகர்தல் வேண்டும் என்றே அறிவுடையோர் அனைவரும் எண்ணுவர். உலகமே ஒன்று திரண்டு வந்தா லொத்த பெரும் பொருளே பெறு வதாயினும், அப்பொருள் கருதி அவ்விளமை இன்பம் அழியப் பிரிய எண்ணார். இவ்வாறு அவன் உள்ளம் பலவற்றை எண்ணி எண்ணி எதையும் துணிய மாட்டாது இரங்குகின்றது.

தன்னால் காதலிக்கப்பெற்றாள் ஒருத்தியின் வாலெயிறு ஊறிய நீர் தரும் இன்பம் பாலும் தேனும் கலந்த கலவை நீர் தரும் இன்பத்தை யொக்கும் என்று காதலன் பாராட்டுவன்.[7] ஆனால் நாம் கூறும் தலைவன் தன் துணைவியின் வாலெயிறு ஊறும் நீரின் சுவைக்கு நிகரான சுவையுடைப் பொருளாகக் கரும்பினைக் கூறுகின்றான். இனிய சுவையுள்ள பொருள்களுள் தலையாயது கரும்பு. மிக மிக இனியாரை உருவகமாக 'என் கரும்பே', 'என் கட்டிக் கரும்பே' என்று வழங்குவது உண்டன்றோ? நச்சினார்க் கினியர் 'கணவருக்கு மெய் முழுவதும் இனிதாயிருத்தலின்

7. குறள் - 1121

(மனைவியைக்) கரும்பென்றார்' என்று உரை கூறுவர்[8]. அடிக் கரும்பு மிக்க சுவையுடையது. இதனை நன்கு அறிந்த தலைமகன் தன் மனைவியின் வாலெயிறு ஊறும் நீருக்கு கரும்பின் அடிப் பகுதியின்—கால் எறிகடிகையின்—மிகச்சுவையினைத் தரும் நீருக்கு உவமை கூறுகின்றான். இவ்வாறு உவமை காட்டிய சிறப்பால் உவமையமைத்த கவிஞரின் இயற்பெயரை மறந்து **காலெறி கடிகையார்** என்ற அவர் கூறிய உவமையினையே அவருக்குப் பெயராக வைத்துப் போற்றுவாராயினர் அவர் காலத்தில் வாழ்ந்த அறிஞர் பெருமக்கள்.

### (vii). குப்பைக் கோழியார்

மங்கள குணங்கள் நிறைந்த மகள் ஒருந்தி பெற்றோரும் உற்றோரும் அறியாமல் ஆண்மகன் ஒருவனிடம் காதல் உறவு கொண்டிருந்தாள். பருவம் எய்திய இவளைத் தாய் இற்செறிப்பு செய்தாள். இதனால் இருவரும் ஒருவரை யொருவர் சந்திக்க இயலாது செயலற்றவர்களாயினர். தன்னிலையைத் தாய்க்கு உணர்த்துமாறு தோழியை வெளிப்படையாகக் கேட்டால் அவள் பெண்மைக்குச் சால்பன்று. ஆகவே, தான் கூறுவனவற்றைக் கேட்கும் அளவில் தோழிநிற்கும் காலம் நோக்கி எங்கோ பார்த்துப் பேசுவதுபோல் கூறுவாளாயினள்:

"அவர்பால் நான் கொண்டுள்ள காதலோ பெரிது; அவரைக் காண இயலா நிலை இப்போது வந்துற்றது. இதனால் உண்டான நோய் என் உடலையும் அழிக்கத் தொடங்கிவிட்டது. என் உடல் அழிவதாயினும் அவரைச் சென்று அடைதல் என்னால் இயலாது; அவர் என்பால் வந்து என் துயர் துடைப்பதும் அவரால் இயலாது. இந்நிலையில் என்னை நலியும் இக்காதல் நோய் தன் முழு ஆற்றலையும் காட்டி என்னை வருத்தட்டும்; மேலும் அழிக்க ஒன்றும் இல்லாத நிலையில் தன் ஆற்றலை இழந்து தானே அழியட்டும். இடைப் புகுந்து அதனை அழிப்பார் எவரும் இலரே; என் செய்வேன்" எனத் தன் வருத்தம் தோன்றுமாறு பேசுகின்றாள். தலைவியின் குறிப்பினை அறிந்த அவள் ஆருயிர்த்தோழி 'அறத்தொடு நிற்பதே என் கடன்' என்று துணிகின்றாள். இந்த அழகிய நிகழ்ச்சியை விளக்கும் குறுந்தொகைச் சொல்லோவியம்:

8. சீவக சிந். 2453 பாடலின் உரை.

கண்தர வந்த காம ஒள்ளெரி
என்புற நலியினும் அவரொடு பேணிச்
சென்றுநாம் முயங்கற் கருங்காட் சியமே;
வந்(து)அஞர் களைதலை அவர்ஆற் றலரே
உய்ந்தனர் விடாஅர்; பிறிந்துஇடை களையார்
**குப்பைக் கோழித் தனிப்போர் போல**
விளிவாங்கு விளியி னல்லது
களைவோர் இலையான் உற்ற நோயே.[9]

[ஒள்எரி - ஒள்ளிய தீ; என்புஉற - என்பைப் பொருந்துபடி; நலியினும் - வருத்தினும்; பேணி - விரும்பி; அருங்காட் சியம் - அரியேமாயினம்; அஞர் - துன்பம்; உற்ற-அடைந்த; உய்த்தல் - செலுத்துதல்; களையார் - நீக்கார்; விளி வாங்கு - அழியும் வழி]

ஒருவனோடு ஒருத்தி கொள்ளும் தொடர்பிற்கு முதற்காரணம் கண்; ஆதலின் காதல் நோயைக் 'கண்தர வந்த காமம்' என்றார். இக்காதல் நோய் கண்டாரின் உள்ளுறுப்புகளையும் உடலையும் உருக்கி அழிக்கும் இயல்பாதலின் இக்காதல் நோயை 'காம ஒள் எரி' என்றும் கூறினார். இக் காமநோயைக் களைவார் எவரு மின்றி விடப்பெற்ற நிலையினை விளக்க ஓர் அழகிய உவமையை எடுத்தாள்கின்றார் கவிஞர்.

கோழிச்சண்டை என்பது, கோழிகளைச் சண்டையிட விட்டு மக்கள் பெருங் கூட்டமாகக் கூடி நின்று கண்டு களிப்பர். போருக் கென்றே வளர்க்கப்பெறும் கோழிகளைத் தவிர குப்பைகளை மேய்ந்து வரும் கோழிகளும் போரிடும்; ஆனால் அவற்றின் போர் கண்டு மகிழ்பவரும் இலர்; அப்போரினை இடைநின்று தடுப்பாரும் இலர். போரை அவை தாமே தொடங்கும். காண்பாரைப் பெறாமலே போரிடும்; அவை தாமே ஓய்ந்தும் அடங்கும். இக் கோழிப் போரினை உணர்ந்த கவிஞர் தலைமகள் கொண்ட காம நோய் களைவார் எவரையும் பெறாமல் விடப் பெற்ற நிலையினை விளக்க, பிறரால் விடப் பெறாமல், கண்டு மகிழ்வாரையும் பெறாமல், இடையிட்டு நீக்குவாரும் இல்லாமல், தாமே தொடங்கி, தனியிடத்தே போரிட்டு, தாமே ஓய்ந்து ஒழியும் குப்பைக் கோழிகளின் போரை உவமையாகக்கொண்டார்.

---

9. குறுந். 305

இந்த அழகிய உவமையை அமைத்த புலவரும் குப்பைக் கோழியார் என்ற அழகிய பெயரைப் பெற்றுத் திகழ்வாராயினர்.

### (viii). கூவன் மைந்தன்

யாதோ ஒரு நிமித்தத்தின் பொருட்டுத் தலைவன் வேற்று நாடு சென்றிருந்தான். அதனால் தலைவி பெருந்துயருற்று வருந்தினாள். தனித்துறையும் தன்துயர் கண்டு வருந்திலள். இவள் தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி. ஏதமின்றி இனிது திரும்ப வேண்டுமே என்பதுதான் அவள் கொண்ட வருத்தம், உறக்கமின்றி உறுதுயர் உற்றனள். தலைவியின் நிலை கண்டு அவள் ஆருயிர்த்தோழியும் துயர் உறுவாளாயினள். இது தலைவிக்கு வேலேறுபடத் தேளேறு மாய்ந்தாற் போலாயிற்று. ''என் துயரை ஒருவாறு ஆற்றினும் ஆற்றுவன்; தோழியின் துயர் நிலையைக் கண்டு உளம் பொறாது அழுவதன்றி அதைத் துடைக்கும் ஆற்றல் இல்லையே'' என வருந்துகின்றாள். இந் நிலையை விளக்கும் குறுந்தொகைப் பாடல்:

கவலை யாத்த, அவல நீளிடைச்
சென்றோர் கொடுமை எற்றித், துஞ்சா
நோயினும் நோயா கின்றே; கூவல்
குராஅன் படுதுயர் இராவில் கண்ட
உயர்திணை ஊமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் தோழி நோய்க்கே.[10]

[கவலை யாத்த-கவர்த்த வழிகளில் யா மரங்களையுடைய; அவலம்-நுன்பம்; நீள்இடை-நீண்டவழி; எற்றி-நினைந்து; நோய்ஆகின்று-மிக்க துன்பமாகின்றது; கூவல்-கிணறு; குரால்ஆன்-குரால் நிறமுள்ள (பலவித புள்ளிகளையுடைய) பசு; உயர்திணை ஊமன்-ஊமையாக இருப்பவன்; பொறுக் கல்லேன்-பொறுக்கும் ஆற்றல் இல்லேனாயினேன்]

ஒரு நல்ல பசு; இராக் காலத்தில் கிணற்றில் விழுந்துவிட்டது. இதனை ஓர் ஊமன் கண்ணுறுகின்றான். குரலிட்டுப் பிறரை உதவிக்குக் கூவி அழைக்கமுடியாத நிலை. இருட்காலமாதலால்

10. ஷை-224

ஓடிச்சென்று எவரையேனும் அழைத்து வர இயலாத நிலை. ஊமன் நிலையைத் தலைவியின் துயர் நிலைக்கு ஒப்பிட்டு விளக்குகின்றார். கவிஞர். துயர் கூற இயலா நிலையிலுள்ள தலைவிக்குக் குராற் பசு கூவலில் விழக்கண்ட ஊமனை உவமை கூறிய இச்சிறப்பினால் **கூவல் மைந்தன்** என்ற சிறப்புப் பெயர் பெற்றுத் திகழ்கின்றார் இப்பாடலை யாத்த ஆசிரியர்.

## (ix). செம்புலப் பெயனீரார்

ஒருவனும் ஒருத்தியும் ஊழின் வலியால் ஒருவரையொருவர் கண்டனர். 'வட கடல் இட்ட நுகம் ஒருதுறை தென்கடல் இட்ட ஒரு கழி சென்று கோத்தாற்போல' இயற்கைப் புணர்ச்சி புணர்ந் தனர். இருவரும் சிறிதுபோது உரையாடி மகிழ்ந்திருந்தனர். 'தலைவன் பிரிவானோ?' என்ற அச்சம் தலைவிக்கு ஏற்பட்டது, தலைவியிடம் இக்குறிப்பு வேறுபாடு கண்ட தலைவன் ஆறுதல் மொழி பேசுகின்றான். இதனை விளக்குகின்றது இக்குறுந் தொகைப் பாடல்.

யாயும் ஞாயும் யாரா கியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
**செம்புலப் பெயல்நீர் போல**
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே.[11]

[யாய்-என் தாய்; ஞாய்-நின் தாய்; தாய்-அவர் தாய்; எந்தை-என் தந்தை; நுந்தை-நுன் தந்தை; தந்தை-அவர் தந்தை; கேளிர்-உறவினர்; செம்புலம்-செம்மண் நிலம்; பெயல் நீர்-பெய்த மழைநீர்; தாம்-தாமாகவே; கலந்தன-ஒன்றுபட்டன]

இருவரின் உறவு செம்மண்ணும் அதில் பெய்த மழைநீரும் சேர்ந்து உண்டான கலவைபோல் ஒன்று கலந்து விட்டன என்ற அழகிய உவமையால் விளக்குகின்றார் கவிஞர். இந்த உவமையில் நிலத்தோடு நீர் வந்து சேரவில்லை; நீரோடும் நிலம் வந்து சேர

11. ஷை-40

வில்லை. நிலத்தின் இயல்பை நீர் பெற்றுவிட வில்லை; நீரின் இயல்பை நிலமும் அடைந்துவிட வில்லை. இரண்டுமே ஒன்று கலந்தன; இரண்டுமே தம் இயல்பு இழந்தன. இங்கே தனி நீரும் இல்லை; தனிப் புலமும் இல்லை. நீரின் ஓடும் தன்மையும் இல்லை; நிலத்தின் திண்மைப் பண்பும் இல்லை. நீரும் நிலமும் மறைய சேறு என்ற புதுப்பொருள் தோன்றிற்று. இங்கே நீரின் தன்மையும் உண்டு; நிலத்தின் தன்மையும் உண்டு. இரு பொருளும் அவற்றின் இரு இயல்புகளும் இரண்டறக் கலந்து காட்சி அளித்தன. இங்ஙனம் உண்மைக் காதலர்தம் உள்ளத் தன்மையை உள்ளவாறு உணர்த்த வல்ல பொருள் செறிந்த உவமையை அமைத்த புலவரை அக்கால அறிஞருலகம் அவ்வுவமையைக் கொண்டே **செம்புலப் பெயனீரார்** எனப் பெயரிட்டுப் பெருமை கொண்டது.

## (x) தனிமகனார்

தலைவன் தலைவியிடம் ''ஆற்றி இருக்க; ஆண்டு நில்லாது அண்மையில் மீள்வேன்'' என்று உரைத்து சென்றனன். தலைவன் பால் கொண்ட காதலாலும், கற்பின்சிறப்புணர்ந்தகாரணத்தாலும் நாண்நிறை முதலிய பெண்மைக் குணங்களை இழந்து நிற்கின்றாள் தலைவி. நாண் அகத்தில்லா அவள் உடல் உயிற்ற பாவை போலாகி விட்டது. அவளுக்குத் தோன்றாத் துணையாக இருந்த உள்ளமும் அவள்பால் நில்லாது அவனிருக்கும் இடம் தேடிச் சென்று விட்டது; ஆனால் உயிர் மட்டிலும் எல்லாம் அழியவும் அழியாது கிடக்கும் அவள் பாழ் உடலைக் காத்துக் கிடக்கின்றது. இவ்வாறு தனித்துத் துயருற்று வாடும் தலைமகள் ஒருத்தியின் நிலைக்கு வாழ்வோரெல்லோரும் ஓடிப் போமாறு முழுதும் பாழுற்ற் ஓர் இடத்தைக் காத்து நிற்கும் **தனிமகன்** ஒருவனை உவமை கூறுகின்றார் நற்றிணைப் புலவர் ஒருவர்.

'நெஞ்சம் அவர்வயின் சென்றனெ, ஈண்டு ஒழிந்து
உண்டல் அளித்து என்உடம்பே; விறல்போர்
வெஞ்சின வேந்தன் பகையலைக் கலங்கி
வாழ்வோர் போகிய பேரூர்ப்
பாழ்காத் திருந்த **தனிமகன்**' போன்றே.[12]

12. நற் - 153

[அவர் வயின் - அவர் பக்கம்; ஒழிந்து - நீங்கி; அளித்து - காக்கப்படும் தன்மையது; விறல் போர் - வலிய போர்; கையலை - படை அலைத்தலால்; போகிய-அகன்று விட்ட; பாழ் பேரூர் - பாழ் நகரம்]

பகைவரின் படை அலைத்தலால் ஊர் முழுதும் பாழ்பட்டது; அங்கு வாழ்ந்திருந்த மக்கள் யாவரும் வேற்றிடத்திற்கு ஓடிச் சென்றனர். அந்தப் பாழுற்ற இடத்தைத் தனிமகன் ஒருவன் காத்து நிற்கின்றான். தனிமகன் இத்தலைவியின் உயிருக்கு உவமை. பாழிடத்தைத் தனிமகன் காத்து நிற்பதுபோல் தலைவியின் பாழ் உடலை உயிர் காத்து நிற்கின்றது. இத்தகைய அரிய உவமையால் புலவர் **தனிமகனார்** என்ற சிறப்புப் பெயர் பெற்றுத் திகழ்கின்றார்.

### (xi). தேய்புரி பழங்கயிற்றினார்

அண்மையில் திருமணம் முடித்துக் கொண்ட இளைஞன் ஒருவன் பொருள்வயிற் பிரிகின்றான். அறவோர்க் கெதிர்தலும், அந்தணர் ஓம்பலும், துறவோர்க் கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இல்லறத்தார்க்கு இயல்புடைய பண்பாம் என்பதை நன்கு அறிந்தவன் அவன். ஆகவே பொருள் வயிற் பிரிந்து செல்லுகின்றான். பிரிகின்றபோது அவள் வருந்தியே வழியனுப்பினாள். அவள் அன்பிற்கும் அழகிற்கும் மேலாக அவள் கொண்ட துயர்நிலை அவன் உள்ளத்தை மிகவும் வருத்துவதாயிற்று.

கானகத்தில் நடந்து சென்றபோது அவன் காதல் உணர்வும் கடமை உணர்வும் போரிடத் தொடங்குகின்றன. காதல் உணர்வு பேசுகின்றது: ''மேகம் போன்ற கூந்தல் அழகுதான் என்ன; மையுண்டு மருண்டு நோக்கும் கண்களின் எழில் தான் என்ன! கண்விழிக் கேற்ற இமைகள்; காதல் போதையை உண்டாக்குவதற்கு ஏற்ற வண்ணம் சிறிது திறந்திருக்கின்றன; மலரும் முகைபோல் கொஞ்சம் திறந்துள்ளன. என்னே அவற்றின் பொலிவு!' என்று எண்ணுகின்றது. 'உள்ளத்தைப் பிணித்தவனிடத்துத் திரும்பி விடுவோம்' '' என்று கூறுகின்றது. கடமை உணர்வு இதனைமறுத்துப்பேசுவதுபோல்,''தொடங்கியவினையைஇடையே

கைவிடுதல் அறியாமை மட்டும் அன்று; நம் செயல் பிறரால் இகழவும்படும். ஆகவே, விரைந்து எதனையும் முடிவு செய்து விடாதே'' என்று கூறும். 'இந்தப் போராட்டத்தால் உடம்பு நலிவது தானா?' என்று எண்ணுவான் தலைவன். இந்நிலையை நற்றிணை,

'புறந்தாழ்பு இருண்ட கூந்தல், போதின்
நிறம்பெறும் ஈரிதழ் பொலிந்த உண்கண்
உள்ளம் பிணிகொண் டோள்வயின் நெஞ்சம்
செல்லல் தீர்க்கம் செல்வாம்' என்னும்;
'செய்வினை முடியாது எவ்வம் செய்தல்
எய்யா மையொடு இளிவுதலைத் தரும்என
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல்' என்னும்; ஆயிடை
ஒளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
**தேய்புரி பழங்கயிறு போல**
வீவது கொல்லென் வருந்திய உடம்பே.[13]

[புறம் - பின் புறம்; தாழ்வு - தாழ்ந்து; செல்லல் - துன்பம்; தீர்க்கம் - தீர்ப்போம்; எவ்வம் - இகழ்ந்து விட்டு விடுதல்; எய்யாமை - அறியாமை; இளிவுதலை - இகழ்ச்சியை; உறுதி - உறுதிப்பாடு; தூக்க - ஆராய; விரையல் - விரையாதே; மருப்பு - யானைக் கொம்பு; வீவது - அழிவது]

என்று விளக்குகின்றது. இந்தத் தலைவனின் நிலை ஓர் அழகான உவமையினால் விளக்கப்பெறுகின்றது. இரண்டு பெருமதக் களிறுகளின் போராட்டத்திற்கு இடையே அகப்பட்டுக் கொண்டது ஒரு கயிறு; அதுவோ பழங் கயிறு; நைந்து தேய்ந்து போன புரிகளைக் கொண்ட கயிறு. களிறுகள் அவற்றைப் பற்றிக் கொண்டு ஈர்ப்பதனால் புரிகள் ஒன்றன்பின் ஒன்றாக அறுந்து கொண்டே வரத் தொடங்குகின்றன. இந்தக் கயிற்றினைக் காதல் உணர்வும் கடமை உணர்வும் மாறுபட்டுப் பொரும் நிலைக் களனாக அமைந்துள்ள உடலுடன் ஒப்பிடுகின்றார் கவிஞர். கயிறு போல உடலும் அழிய வேண்டியது தானா என்பது தலைவனின் கூற்று. இந்த அருமையான உவமையினை அமைத்த கவிஞர் தாம் அமைத்த உவமையாலேயே **தேய்புரி பழங் கயிற்றினார்** என்ற பெயரால் திகழ்வாராயினார்.

13. ஷை, 284.

## (xii). மீனெறி தூண்டிலார்

தலைவன் ஒருவனும் தலைவி யொருத்தியும் களவொழுக்கத்தில் ஒழுகி வருகின்றனர். தலைவன் வரையாது களவொழுக்கத்தை நீட்டிக்கின்றான். இதனால் தலைவன் இரவுக்குறி வரும் ஏதத்தை எண்ணி அஞ்சுகின்றாள் தலைவி. இதனால் அவள் உடல் நலம்குன்றுகின்றது. ''நலங் குன்றுவது ஏன்?'' என்று தோழி வினவுகின்றாள். தோழிக்குத் தலைவி, ''தலைவன் என் பெண்மை நலத்தைக் கொண்டான். இனி அவன் வரைந்து கொண்டாலன்றி, அதனைப் பெறேன்'' என்கின்றாள். இக் கருத்து அடங்கிய குறுந் தொகைப் பாடல்;

யானே, ஈண்டை யேனே; என்நலனே
ஏனல் காவலர் கவணொலி வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
**மீனெறி தூண்டிலின் நிவக்கும்**
கானக நாடனொடு ஆண்டொழிந் தன்றே.[14]

[ஈண்டையேன் - இவ்விடத்திலுள்ளேன்; ஏனல் - தினைப் புனம்; வெரீஇ - அஞ்சி; கானம் - காடு; கழை - மூங்கில்; மீன் எறி-மீனைக் கவர்ந்துகொண்ட; ஆண்டு-அவ்விடத்து; ஒழிந்தன்று - நீங்கியது]

இதில் தலைமகனுடைய காட்டைப் பற்றிக் கூறுங்கால், ''அது யானைகள் நிறைந்தது. மூங்கிலும் அங்கே நிறைய உண்டு. யானைகள் மூங்கில்களைப் பற்றி வளைத்து அவற்றின் தழைகளை உண்ணும். தினைப் புனக் காவலர் வீசும் கவண் கல்லின் ஒலி கேட்டு மூங்கில்களைக் கைவிட்டு ஓடும். அந்த மூங்கில்கள் விண்ணோக்கிப் பாயும்'' என்பர். இங்ஙனம் மூங்கில்கள் பாய்வதை ஓர் அழகிய உவமையால் விளக்குவர் கவிஞர். தூண்டில் கொண்டு மீன் பிடிப்போன் தூண்டிலில் மீன் சிக்கியவுடன் அதனை விரைந்து மேலே தூக்குவன்; இந்நிலையில் அத்தூண்டிற்கோல் விரைவாக மேலெழும். யானையின் பிடியினின்றும் விடுபட்ட மூங்கில் விண் நோக்கி விரைவதற்கு 'மீனெறி தூண்டில்' விரைவாக மேலெழுவதை உவமை கூறியுள்ளார். இந்த அரிய உவமையால் கவிஞரும் **மீனெறி தூண்டிலார்** என்ற சிறப்புப் பெயரால் வழங்கப் பெறுவாராயினர்.

---

14. குறுந். 54.

(xiii). **விட்ட குதிரையார்**

தலைவியின் அன்பைப் பெற்ற தலைமகன் ஒருவன் களவொழுக்க நெறியிலேயே மேலும் சில நாட்களைக் கழிக்க எண்ணினான். இது அரிய செயல் என்பதை அவன் அறியினும், அவன் உள்ளம் களவொழுக்க இன்பத்தையே நாடுவதாயிற்று. தலைவியின் ஆருயிர்த் தோழியை நாடித் தன் விருப்பத்தைப் புலப்படுத்தினான். அவளும் குறியமைப்பதாக ஒப்புக் கொண்டாள். ஒப்புக் கொண்டவள் தலைமகளைக் கண்டாள்; தலைமகள் தலைவனைக் காணமாட்டாமையால் கொண்ட துயரும் சினமும் உடையளாய்க் காணப்பெற்றாள். மக்களின் உள்ளப் பண்பைத் தெள்ளிதின் உணர்ந்தவளாதலின், தோழி தலைவனைப் பழிப்பதுபோல் ''தலைமகன் அறிவற்றவன்; அவனை எண்ணி வருந்தும் நம் வருத்தத்தினைச் சிறிதும் அறியாதுளனே'' என்று கூறுகின்றாள். இது தலைவியைச் சிறிது நெகிழச் செய்கின்றது. இதனைக் குறிப்பாலறிந்ததும், ''நாம் வருந்துகின்றோம் இவ்வாறு; அவனாவது வருத்தமின்றி வாழ்கின்றானா? அவனும் நம்மைப் போலவே நலனை நாடி அதனையே எண்ணி வருந்துகின்றான். அவனைக் கண்டு வந்தோர் வெம்மையால் வாடி வருந்தும் நம் ஆனேறு போல், அவனும் மெலிந்து வாடுவதாகக் கூறினர். என்னே அவன் அறியாமை!'' என்கின்றாள். இதனைக் காட்டும் குறுந்தொகைப் பாடல்:

> **விட்ட குதிரை விசைப்பின் அன்ன**
> விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்
> யாம்தற் படர்ந்தமை அறியான்; தானும்
> வேனில் ஆனேறு போலச்
> சாயினன் என்பநம் மாணலம் நயந்தே.[15]

[விசைப்பு - துள்ளி எழும் எழுச்சி; விசும்பு - வானம்; பசுங் கழை - பசிய மூங்கில்; தன் படர்ந்தமை - தன்னை நினைந்து மெலிதலை; வேனில் - வெய்யில் காலம்; சாயினன் - மெலிந்தனன்; ஆனேறு - இடபம்; மாண்நலம் - மாட்சிமைப்பட்ட நலம்.]

இதில் வேனிலின் வெம்மையால் துன்புற்ற ஆனேறு, காம நோயால் துன்புற்ற தலைவனுக்கு உவமையாக வந்துள்ளது.

15. ஷை. 74.

"வளைக்குங்கால் வளைந்த தேனும், இயல்பில் விசும்பு தோயும் உயர்வை யுடைய மூங்கிலைப் போல, தலைவன் நம் மாணலம் நயந்து நம்மைப் பணிந்து ஒழுகினானெனினும், இயல்பாகத் தலைமையை உடையன்" என்பது குறிப்பு. மேலும், மூங்கில் விசைத்தெழுதலுக்கு குதிரையின் விசைப்பை உவமை கூறியுள் ளார் கவிஞர். இந்த உவமைச் சிறப்பினால் இச் செய்யுளை இயற்றிய சான்றோர் **விட்ட குதிரையார்** என்ற சிறப்புப் பெயர் பெறலாயினர்.

## (xiv). வில்லக விரலினார்

பரத்தையிற் பிரிந்தான் தலைவன் ஒருவன். தலைவி இதனை அறிந்தாள். தான் தலைவனைப் புறம்போகாவாறு பிணித்துக் கொண்டதாகத் தலைவி தன்னைக் குறை கூறியதாக அறிந்தாள் பரத்தை. தலைவியின் செயல் கண்டு தலைவியின் பாங்காயினார் கேட்ப வருந்திக் கூறுவாள்; "தலைவனை ஆசை காட்டி ஆட் கொண்டேன் என்ற பேச்சு வருகின்றது. நான் அத்தகை யாளல்லள்; தலைவர்மாட்டு எனக்கு அன்பு உண்டு என்பது உண்மையே. ஆயின் அதற்காகத் தலைமகள் வருந்த அவரை வலிந்து பெறவோ அவர் என் இல்லத்திலேயே இருக்கவோ விரும்புவேனல்லேன்; ஈண்டு அவரே வந்தார்; வந்தாரை மகிழ்ந்து வரவேற்று வாழ்வதில் தவறு இல்லை என்பது என் கருத்து. பிரிந்து செல்ல அவர் விரும்புவாராயின், அவர் செல்லத் தடை யாக இரேன்; இப்படி நானிருக்கத் தலைவி என்னைப் பழிப்பது ஏனோ?" என்கின்றாள். இந்நிகழ்ச்சியைச் சித்திரித்துக் காட்டும் குறுந்தொகைச் சொல்லோவியம்:

> பொய்கை ஆம்பல் அணிநிறக் கொழுமுகை
> வண்டுவாய் திறக்கும் தண்துறை யூரனொடு
> இருப்பின் இருமருங் கினமே; கிடப்பின்
> **வில்லக விரலிற்** பொருந்தி;அவன்
> நல்லகம் சேரின் ஒருமருங் கினமே.[16]

---

16. குறு. 370

[பொய்கை - மானிடர் ஆக்காத நீர் நிலை; அணி நிறம் - அழகிய நிறம்; முகை - மலரும் பருவத்ததாகிய அரும்பு; மருங்கு - உடல்; கிடப்பின் - துயின்றால்; வில் அகம் விரலின் - வில்லை அகப்படப் பிடித்த விரல்கள்]

"தலைவனோடு இருக்குங்கால் ஈருடம்பினேமாகியும், துயிலும்போது ஒருடல்போல் ஒன்றியும், பிரிந்து செல்லுங்கால் எம் முடலாகிய ஒருடலினேமாகியும் இருப்பேம்" என்கின்றாள். ஆம்பல்போது மலரும் செவ்வியறிந்து வண்டு வாய்திறக்கும்; இது, தலைவன் எம்மொடு இருக்குங்கால் அவன் எம் உள்ளத்திற்கேற்ப ஒழுகுவான் என்ற குறிப்பினது.

வில்லைப் பிடித்த விரல்கள் ஒன்றோடொன்று மிகச் செறிந்திருக்கும்; அதனைக் கூறியது கவவுக்கை நெகிழாமல் அணைந்து நிற்றலை உணர்த்துவதற்காக. செறிவுக்கு வில்லக விரலைக் கூறினமையின் இச்செய்யுளை இயற்றிய நல்லிசைப் புலவர் **வில்லக விரலினார்** என்ற சிறப்புப் பெயர் பெறுவாராயினர்.

# நயஞ்செறிந்த தொடரால் பெயர் பெற்றோர்

**சி**ல புலவர்கள் தாம் விட்டுப் போன பாடல்களில் அரிய நயம் செறிந்த தொடர்களை அமைத்துள்ளனர். பண்டைப் பெரியோர் இத்தொடர்களை அமைத்து அவர்கட்குத் திருநாமம் சாற்றி மகிழ்ந்தனர். அகத்திணைப் பாடல்களைப் பாடிய இத்தகையோர் ஐவர்.[1] இவர்களைப்பற்றியும் ஈண்டு அறிவோம்.

## (i). ஓரில் பிச்சையார்

தலைவியைப் பிரிந்த தலைவன் வாடை வீசும் பருவத்தில் திரும்பி வருவதாகக் கூறிச் சென்றிருந்தான். கடமையுள்ளம் அவன் பிரிந்ததற்கு இசைந்ததாயினும் அவள் அன்புள்ளம் அவன் பிரிவினைப் பொறாது வருந்துவதாயிற்று. அவள் வேறு, தான் வேறு என்று வாழ்ந்தறியாத தோழி ஒருத்தி அவளுக்கு உண்டு. இவள் தலைவியின் துயரைத் தன் துய்ரெனக் கருதுபவள். இவள் அறிவரை[2] நாடி வாடை வீசும் காலம் எப்பொழுது வரும் என் வினவுகின்றாள்; ''பெரியீர், எம் தலைவர் வாடை வீசும் குளிர் காலத்தே வருவதாகக் கூறி சென்றார். அக்காலம் என்று வரும் என்று அருள் கூர்த்து கணித்துக் கூறுவீர்களாக. கூறுவீராயின் உங்கட்குப் புண்ணியம் உண்டு. நீங்கள் உங்கள் உணவிற்காக வேண்டி ஊர் முழுதும் அலைந்து திரியாமல், குற்றம் தீர்ந்து விளங்கும் தெருவில், நாய் உறைதல் அறியா நன்மை மிக்க வீடு

1. புறத்திணைப் பாடல்களைப் பாடிய இத்தகையோர் இருவர். அவராவார் **கூகைக் கோழியார்** (புறம் - 364), **தொடித்தலை விழுத்தண்டினார்** (புறம் - 243) என்போராவர்.
2. இவர்பற்றிய குறிப்பினை இந்நூல் பக். 394 இல் காண்க.

ஒன்றிலேயே செந்நெல் அரிசியாலாய சோற்றையும், தூய வெண்ணிற நெய்யையும் பெற்று வயிறார உண்டு, பனிக்காலத்தே விரும்பிக் குடித்தற்கு வெப்பம் பொருந்திய நிரையும் செப்புக் கலத்தில் வேண்டும் அளவு பெற்று மகிழ்வீராக'' என்கின்றாள். இந்நிகழ்ச்சி தாங்கிய குறுந்தொகை ஓவியத்தைப் பிறிதோரிடத்தில் காண்க.[3] இப்பாடலில், பல வீடுகளில் சென்று ஐயம் பெற்றுண்ணும் இரவலரது பிச்சை போலாது அறிவர் பெற்றுண்ணும் உணவு ஒரு வீட்டில் பெறும் உணவு ஆதலின் 'ஓரில் பிச்சை' என்று சிறப்பிக்கப் பெற்றது. இதனால் நயம் செறிந்த இத் தொடரை அமைத்து இப் பாடலை இயற்றிய புலவரை **ஓரில் பிச்சையார்** என்று அக்காலச் சான்றோர் வழங்குவாராயினர்.

### (iii). கங்குல் வெள்ளத்தார்

தலைவன் யாதோ ஒரு காரணம்பற்றி தலைவியை விட்டுப் பிரிந்து வெளி நாடு சென்று விட்டான். தலைவி தனித்து வாழ்கின்றாள். ஒரு நாள் மாலை; மாலைக் காட்சிகள் தன் மனத் துயரைத் தூண்டி விட்டதாக வருந்தி நிற்கின்றாள். அருகிலிருந்த ஆருயிர்த் தோழி ஆற்றியிருப்பதே மகளிர்க்கு அறம் ஆகும் என்பதை நன்கு அறிந்தவள்; அவள் கூறுவாள்; ''மாலைக் காட்சிகளால் மதிமருண்டு மனத்துயர் கொண்டு வருந்துவது மகளிர்க்கு அழகன்று; ஆற்றியிருத்தலே அறமாகும்'' என்கின்றாள். அதனைச் செவிமடுத்த தலைவி ''ஆற்றியிருக்கவே நான் விரும்புகின்றேன். ஒருவாறு இம் மாலையைக் கழித்துவிட்டாலும்' இம்மாலையைத்தொடர்ந்து வரும் இரவு, கங்குல், எல்லை காணா நிலையினது. அதிகத் துன்பம் செய்யவல்லது'' என்று தன் உள்ளத்தினைத் திறந்து காட்டுகின்றாள். இந்நிகழ்ச்சியைச் சித்திரிக்கும் குறுந்தொகைப் பாடல்:

எல்லை கழிய முல்லை மலரக்
கதிர்சினம் தணிந்த கையறு மாலை
உயிர்வரம் பாக நீந்தின மாயின்

3. இந்நூல் பக். 395.

எவன்கொல் வாழி தோழி
**கங்குல் வெள்ளம்** கடலினும் பெரிதே[4]

[எல்லை-பகல்: கழிய-நீங்க: கதிர் சினம்-சூரியனதுவெப்பம்; தணிந்த-குறைந்த; கையறு-செயலறுதற்குரிய; வரம்பு-எல்லை; நீந்தினம்ஆயின்-கடந்தோமாயின்; கங்குல்-இரவு; வெள்ளம்-மிகுதி]

மாலையைக் கடலாகவும், அதனைத் தொடரும் இரவினை அதன் வரம்பாகவும் வைத்துக் கூறினாள் தலைவி. ஒரு சிறு பொழுதை அடுத்து வரும் மற்றொரு சிறு பொழுதைக் கரையாகக் கூறும் இப்பாடலை நினைந்து பரிமேலழகர் 'கூடிய ஞான்று பிரிவ ரென்று அஞ்சப் பண்ணிய காலை, அஃது ஒழிந்து இஞ்ஞான்று **கங்குல் வெள்ளத்திற்குக் கரையாய்** வாரா நின்றது' (குறள் 1225) என்று உரை எழுதினர்.

தமிழில் மிகப்பெரும் எண்களைக் குறிக்கும் எண்ணுப் பெயர் களுள் **தாமரை வெள்ளம் ஆம்பல்** என்பன சிறப்புடையன. அளவிடற்கரியது என்ற காரணத்தினாலேயே மழை பெய்யுங்கால் பெருகிவரும் பெருநீரை 'வெள்ளம்' என்று வழங்கினர். இச் செய்யுளில் கணவனைவிட்டுத் தனித்து வாழும் மகளிர்க்கு மிக நீண்டு தோன்றும் இரவினைக் குறிப்பிடக் **கங்குல் வெள்ளம்** என்ற தொடர் மேற்கொள்ளப்பெற்ற பெருமையினால் இதனை அமைத்து இயற்றிய கவிஞரின் இயற்பெயர் எப்படியோ மறைந்து, **கங்குல் வெள்ளத்தார்** என்ற சிறப்புப் பெயரினைப் பெற்றுத் திகழ் கின்றார்.

### (iii). **குறியிறையார்**

யாதோ ஒரு காரணம்பற்றித் தன்னை விட்டுப் பிரிந்த தலைவனையே நினைந்து வருந்துகின்றாள் தலைவி யொருத்தி. தலைவனைத் தோழி பழித்து தலைவியைத் தேற்றுகின்றாள். பழித்தலை அகப்பொருள் நூலார் 'இயற்பழித்தல்' என்று கூறுவர். இந்நிகழ்ச்சியைக் காட்டும் குறுந்தொகைச் சொல் லோவியம்:

4. ௸-387

முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி
நறவுமலி பாக்கத்துக் குறமகள் ஈன்ற
**குறையிறைப்** புதல்வரொடு மறுவந் தோடி
முன்னாள் இனிய தாகிப் பின்னாள்
அவர்தினை ப்புனம் மேய்ந்தாங்குப்
பகையா கின்(று) அவர் நகைவிளை யாட்டே[5]

[இருபிடி-கரிய பெண்யானை; கயதலை; மெல்லிய தலை; நறவு-கள்; மலி-மிக்க; குறி இறை புதல்வர்-குறிய கைகளை யுடைய பிள்ளைகள்; மறுவந்து ஓடி-சுற்றி ஓடி; மேய்தந் தாங்கு-மேய்ந்தாற் போல]

இதில், "குறவர் குழந்தைகளோடு விளையாடி மகிழ்ச்சியை விளைவித்த யானைக் கன்று பின் அவருக்குரிய தினையை உண்டு அவருக்குத் துன்பத்தை விளைவித்தது போல முன்னாள் நின்னோடு அளவளாவி மகிழ்ந்த தலைவனது நட்பு அப்பொழுது இன்பத்தைப் பயந்து இப்பொழுது நின் அழகு கெடுவதற்கு ஏது வாயிற்று" என்று இயற்பழிக்கின்றாள். தலைவனைத் தோழி பழிக்கும் அளவிற்குத் தன் ஆற்றாமை துணையாயிற்றே என்பதை அறிந்து அஞ்சும் தலைவி உள்ளம் தெளிந்து உறுதி கொள்வாள் என்பதற்காகவே தோழி இந்த உத்தியைக் கையாளுகின்றாள்.

தலைமகளைத் தேற்றுவதற்காகவே தலைவனைப்பற்றிச் சிறிது வன்சொல் வழங்குகின்றாள் தோழி. இதனால்தான் குறவர் செயலைக் குறிப்பிடுகின்றாள். ஆயினும், தலைவனை வெறுத்தல் வேண்டும் என்ற கருத்தினள் அல்லள்; தோழிக்கு அது கருத்தன்று என்பதை அறிவிக்கவே, குறச் சிறுவர்களை **குறுகிய முன்கையினர்—குறியிறைப் புதல்வர்**—என்று குறிப்பிட்டார் கவிஞர். குறுங்கையர்பால் பேரறிவு காணல் அரிது; பேரறிவுடையார் நீண்டகைகளைப் பெற்றிருத்தல் இயல்பாகும். குறவர் செயல் அறச் செயலற்றது. "அவர் செயல் நமக்குப் பொருந்தாது" என்பதைக் **குறியிறை** என்ற ஒரு சொற்றொடராலேயே விளங்க வைத்தார் கவிஞர். இதனால் இப்பாடலை இயற்றியவர் **குறியிறையார்** என்ற சிறப்புப் பெயரால் வழங்கப் பெற்றார்.

5. குறு-394

### (iv). நெடுவெண் நிலவினார்

களவுக் காலத்தில் தலைவனொருவன் இரவில் வந்து தலைவியிடம் அவள் தமர் அறியாமல் பழகிக் கொண்டிருந்தான். அவனை எப்படியாவது தலைவியை விரைந்து வரைந்து கொள்ளச் செய்துவிட வேண்டும் என்பது தோழியின் எண்ணம். இரவில் வரும் தலைமகன் வேங்கை மலர்கள் உதிர்ந்து புலிகளைப்போல் தோன்றும் பாறைகளைக் கண்டு பழகியவனேனும், ஒருநாள் உண்மையான புலியையும் இரவு மயக்கத்தால் வேங்கை மலர் உதிர்ந்த பாறை எனக் கருதிவிடுதலும் கூடும். அப்படிப்பட்ட நிலை ஏற்படின் தலைவியின் நிலை என்னாகும் என அஞ்சுகின்றாள். முன்னிலைப் புறமொழியாக நிலவிடம் பேசுவதுபோல் இரவுக் குறியை மறுக்கின்றாள். வரைந்து கொள்ளலே நேர்வழி என்று குறிப்பால் புலப்படுத்துகின்றாள். இந்நிகழ்ச்சியைச் சித்திரிக்கும் அழகிய குறுந்தொகைச் சொல்லோவியம்:

கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டின்
எல்லி வருநர், களவிற்கு
நல்லை யல்லை, நெடுவெண் நிலவே![6]

[கரு கால்-கரியஅடி; வீ-மலர்; உகு-உதிர்ந்த; துறுகல்-குண்டு கல்;இரு-கரிய; குருளை-குட்டி: எல்லி-இரவின்கண்; நல்லை-நன்மைத் தருவாய்]

இதில் தோழி நிலவினை நோக்கி. ''நிலவே, தலைவர் தலைவியைக் காண அரிய காட்டைக் கடந்து வந்துள்ளார். அவர் தலைவியை அடைந்து இன்புறாவாறு இடையில் தடையாய் நின்று காய்கின்றாய். ஒளி வீசத் தொடங்கிய நீ விரைவில் மறைந்தாவது போவாய் என்றால் நீண்டு கொண்டே போகின்றது நின் ஒளி. ஆகவே, தலைவருக்கு நீ நல்லது செய்கின்றாயல்லை'' என்று பேசுகின்றாள்.

இங்கு நிலவு உண்மையில் தலைவனுக்கு இடையூறாய் இருந்தது என்றாலும், அது இரண்டு வகையில் தலைவனுக்குத் துணைபுரிகின்றது. ஒன்று: காட்டில் புலி எது, துறுகல் எது என்பதை அறியத் துணைபுரிகின்றது. இரண்டு; தலைவியின்

---

6. குறு-47

களவொழுக்கத்தினை ஊரிலுள்ளார் கண்டுகொள்வதற்குத்துணை செய்து, களவொழுக்கத்திற்குத் தடை விதித்து மணங்கொள் முயற்சியில் தலைமகனைக் கொண்டு செலுத்தும் தோழியின் முயற்சிக்கும் துணை நிற்கின்றது. இதனால் தோழி நிலவினை 'நெடு வெண் நிலவு' என்று பாராட்டினாள் என்ற கருத்து தோன்றப் பாடியுள்ளமையால் இப்பாடலை நல்கிய கவிஞரும் அத்தொடர் அமைந்த பெயரால் **நெடுவெண் நிலவினார்** என்று வழங்கப் பெறுவாராயினர்.

## (v) பதடி வைகலார்

யதோ ஒரு வினையின்பொருட்டுத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றவன் அவ்வினை முற்றுப்பெற்றதும் தன் ஊர் திரும்புகின்றான். அப்போது பாகனிடம் அவன் ''மணந்து கொண்ட மனைவியொடு மனையில் இருந்து அவளோடு உறங்கி எழுந்த நாட்களே பயனுடைய நாட்கள்; அவைதாம் உண்மையில் வாழ்ந்த நாட்கள்; அவளை நீங்கித் தனித்துறைந்த நாட்கள் யாவும் பயனின்றிக் கழித்த நாட்கள் ஆகும்; அவை யாவும் பதடி நாட்கள்'' என்று கூறுகின்றான். இச்சிறு நிகழ்ச்சியைக் காட்டும் குறுந்தொகைச் சித்திரம்:

> எல்லாம் எவனோ **பதடி வைகல்**!
> பாணர் படுமலை பண்ணிய எழாலின்
> வானகத் தெழுஞ்சுவர் நல்லிசை வீழப்
> பெய்த புலத்துப் பூத்த முல்லைப்
> பசுமுகைத் தாது நாறும் நறுநுதல்
> அரிவை தோளிணைத் துஞ்சிக்
> கழிந்த நாள் இவண் வாழும் நாளே.[7]

[பதடி-கருக்காய்; எவன்-என்ன பயனை உடையன; வைகல்-நாட்கள்; படுமலை-படுமலைப் பாலை என்ற பாலைப் பண்(12-ல் ஒன்று); எழால்-இசை; நல்சுவர்-நல்ல உச்ச ஒலியை ஒப்ப ஒலி; வீழ-உண்டாக; புலம்-கொல்லை;

7. ஷை-323.

முகை-அரும்பு; அரிவை-பெண் (தலைவி); இணை-இரண்டு; துஞ்சி-துயின்று; இவண்-இவ்வுகிலகில்]

இங்ஙனம் தலைவியுடன் இன்புறாத நாட்களைப் **'பதடி வைகல்'** என்று தலைமகன் கூறுவதாக அமைந்த சிறப்பால் இப்பாடலின் ஆசிரியர் தன் இயற்பெயர் மறைய, **பதடி வைகலார்** என்ற சிறப்புப் பெயரால் நிலைத்த புகழுடன் திகழ்கின்றார்.

அகத்திணைக் கொள்கைகள் முற்றும்

# பின்னிணைப்பு—1

## பயன்பட்ட நூல்கள்

### (i). தமிழ் நூல்கள்

அண்ணங்கராச்சாரிய சுவாமிகள், பி. ப: நாலாயிரம் - திவ்வி யார்த்த தீபிகை, காஞ்சிபுரம்.

அருணாசலம், ப: தொல்காப்பியர் (தமிழ்ப் புத்தகாலயம் சென்னை-5)

இராகவய்யங்கார், மு: தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.

இளங்கோ அடிகள்: சிலப்பதிகாரம்—நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை (பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்க வெளியீடு)

இளவழகனார்: பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை (தென்னிந்திய சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகம்) சென்னை-1)

இறையனார்: இறையனார் அகப் பொருள் - நக்கீரர் உரை (கழக வெளியீடு)

கம்பர்: கம்ப ராமாயணம் (வை. மு. கோபால கிருஷ்ண மாச்சாரியர் உரை - பதிப்பு)

கல்லாடர்: கல்லாடம் (இராஜம் பதிப்பு -மர்ரே அண்டு கம்பெனி,

சங்க இலக்கியம்: அகநானூறு - நாவலர் ந. மு. வேங்கட சாமி நாட்டார் உரை (கழக வெளியீடு).

ஐங்குறு நூறு - பெருமழைப் புலவர் பொ. வே. சோம சுந்தரனார் விளக்க உரை (கழக வெளியீடு)

கலித்தொகை - நச்சினார்க்கினியர் உரை (பாகனேரி தன வைசிய இளைஞர் தமிழ்ச் சங்க வெளியீடு)

குறுந்தொகை - டாக்டர் உ. வே. சாமி நாதய்யர் உரை - பதிப்பு.

நற்றிணை - பின்னத்தூர் நாராயணசாமி அய்யர் உரை- பதிப்பு.

பரிபாடல் - குறிப்புரை, டாக்டர் உ. வே. சாமி நாதய்யர் உரை.

பத்துப் பாட்டு - நச்சினார்க்கினியர் உரை. (உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு)

பதிற்றுப் பத்து - ஔவை துரைசாமிப் பிள்ளை உரை (கழக வெளியீடு)

புறநானூறு - ஔவை துரைசாமிப் பிள்ளை உரை (கழக வெளியீடு)

சீத்தலைச் சாத்தனார்: மணிமேகலை - நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை (கழக வெளியீடு)

சுப்பிரமணிய பிள்ளை, கா: தனிப் பாடல் திரட்டு - முதற்பகுதி.

சுப்பு ரெட்டியார், ந. டாக்டர்: முத்தொள்ளாயிர விளக்கம் (திருவேங்கவன் பல்கலைக் கழக வெளியீடு, திருப்பதி)
இல்லற நெறி; (தமிழ்ப் புத்தகாலயம், சென்னை - 5

தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை (பழநியப்பா பிரதர்ஸ். 14, பீட்டர் சாலை, சென்னை - 14)

சொக்கலிங்கம், ராய: காதற் பாட்டு (இலக்கியப் பதிப்பகம், காரைக்குடி)
காந்தி கலித்துறை அந்தாதி - ஆசிரியர் வெளியீடு.

சோமசுந்தர பாரதியார், ச. நாவலர்: தொல்காப்பியம் அகத்திணையியல் உரை. (நாவலர் புத்தக நிலையம், மதுரை - 1)

தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியல் உரை (நாவலர் புத்தக நிலையம், மதுரை - 1)

தொல்காப்பியம் - உவம இயல் உரை (நாவலர் புத்தக நிலையம், மதுரை - 1)

திருத்தக்க தேவர்: சீவக சிந்தாமணி - நச்சினார்க்கினியர் உரை. (டாக்டர் உ. வே. சாமி நாதய்யர் பதிப்பு)

திருவள்ளுவர்: திருக்குறள் - பரிமேலழகர் உரை - வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் விளக்க உரை.

தொல்காப்பியர்: பொருளதிகாரம் - இளம்பூரணர் உரை (கழக வெளியீடு)

பொருளதிகாரம் - அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல்-நச்சினார்க்கினியர் உரை (நச்சினார்க் கினியம்)

தொல்காப்பியர்: பொருளதிகாரம் - மெய்ப்பாட்டியல், உவம இயல், செய்யுளியல், மரபியல் - பேராசிரியர் உரை (பேராசிரியம்)

பதினெண்கீழ்க்கணக்கு: கடிகை, கடுகம், மாமூலம் உரை (கழக வெளியீடு)

நாலைந்திணை உரை (கழக வெளியீடு)

நந்திக் கலம்பகம்: பு. சி. புன்னைவன நாத முதலியார் உரை (கழக வெளியீடு)

நாற்கவிராச நம்பி: அகப் பொருள் விளக்கம் (கழக வெளியீடு)

பலபுலவர்கள்: அகநானூற்றுச் சொற் பொழிவுகள் (கழக வெளியீடு)

ஐங்குறு நூற்றுச் சொற் பொழிவுகள் (கழக வெளியீடு)

கலித்தொகைச் சொற் பொழிவுகள் (கழக வெளியீடு)

குறுந்தொகைச் சொற் பொழிவுகள் (கழக வெளியீடு)

நற்றிணைச் சொற் பொழிவுகள் (கழக வெளியீடு)

பரிபாடல் சொற்பொழிவுகள் (கழக வெளியீடு)

மாணிக்க வாசகர்: திருவாசகம் - ச. தண்டபாணி தேசிகர் குறிப்புரை (தருமை ஆதீன வெளியிடு)

மாணிக்க வாசகர்: திருக்கோவையார் - உரை (ஆறுமுக நாவலர் பதிப்பு)

மாணிக்கம், வ. சுப. டாக்டர்: தமிழ்க் காதல் (பாரி நிலையம், சென்னை - 1]

வரதராசன், மு. டாக்டர்: இலக்கிய ஆராய்ச்சி. (பாரி நிலையம் சென்னை-1)

(ii) English Works

Editorial Committee : *Studies in Arts and Sciences* (Diamond Jubilee Souvenir of Prof. N. Subbu Reddiar.

Manickam, V. Sp. Doctor: *The Tamil Concept of Love* (The SISSWP society, Ltd, Madras - 1)

Pillai, S.K : *The Ancient Tamil* - Part I

Thani Nayakam, Rev. Father: *Nature in Ancient Tamil Poetry.*

# பின்னிணைப்பு - 2

## சில முக்கிய துறைகளின் விளக்கம்

**அலர்:** பக்—97

**அல்ல குறிப்படுதல்:** பக் (94—96)

**அறத்தொடு நிற்றல்:** பக் (155—169)

**இடந்தலைப்பாடு:** பக் (56—65)

**இயற்கைப் புணர்ச்சி:** பக் (48—55)

**இரவுக்குறி:** பக் (91—94)

**இரவுக்குறி இடையீடு:** பக் (96—97)

**இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல்:** பக் (86-87)

**இற்செறிப்பு :** புணர்ச்சியால் தலைமகளின் உடல் வேறுபாடு கண்டு, தலைவனைச் சந்திக்க இடமின்றிப் பெற்றோர், தலைவியை (அவள் வயது முதிர்ச்சியை நோக்கி) வீட்டினுள் இருத்துகை யாகும். இரவும் பகலும் தாய் தந்தையின் கடுங் காப்புக்கு இல்லக் குமரியை உள்ளாக்குவது தமிழர் நாகரிகமாகும். ஒருகால் பெற்றோர் இசைவு பெற்று வெளிச் செல்லினும் விடாது தோழியும் உடன் செல்வாள். மகளிர் உணவு விடுதியிலுள்ளவர்கள் வெளிச் செல்ல நேருங்கால் இருவர் அல்லது மூவர் சேர்ந்து செல்லும் மரபினை விடுதிக் காப்பாளர் (Warden) அமைத் துள்ளமை ஈண்டு எண்ணத் தக்கது. எ-டு: குறுந். 141, 401; திருக் கோவை-133.

**உடன் போக்கு:** பக் (180—192)

**ஒருவழித்தணத்தல்:** பக் (169—190)

**ஓம்படை:** பக் 184

**கழறி உரைத்தல் :** கழறுதல் என்பது அன்புடையார் மாட்டுத் தீயன கண்டால் அவ்வன்பில் தலைப் பிரியாத சொற்களால் நெருங்குவது. கழறுதல் - இடித்துரைத்தல்; கழறுமாறு: குன்றம் உருண்டாற் குன்றி வழியடையாகாதவாறு போலவும், யானை தொடுவுண்ணின் மூடுங்கலம் இல்லது போலவும், கடல் வெதும்பின் வளாவுநீர் இல்லது போலவும், எம்பெருமான், நின் உள்ளம் அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடியின் வரைத்தன்றிக் கைம்மிக்கு ஓடுமே யெனின் நின்னைத் தெருட்டற் பால நீர்மையார் உளரோ? இப் பெற்றியாய நீ இன்னதோர் இடத்து இன்னதோர் உருவு கண்டு

'என் உணர்வு அழியப் போந்தேன்'' என்றல் தக்கின்று' எனல். (இறை. 3-ன் உரை). எ-டு: திருக்கோவை-20; நற். 95; குறுந் 184, 206.

**கழற்றெதிர்மறை :** இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவன் ஆற்றானாய்ச் சொல்லும் சொற்கள் 'கழற்றெதிர்மறை' என்ற துறையாகப் பேசப்பெறும். கழறுதல்-பாங்கன் இடித்துரைத்தல். எதிர்மறை-தலைவன் எதிர்மறுத்துரைத்தல். 'நண்ப, என்னாற் காணப்பெற்ற வடிவை நீ கண்டிலை; கண்டனையாயின் இங்ஙனம் கழறாய்' என்று மறுத்துரைத்து வருந்தாநிற்பன் எ-டு: திருக்கோவை - 23; குறுந். 58.

**கற்பொடு புணர்ந்த கௌவை :** தலைவி தலைவனுடைய உடைமையாய்க் கற்பொடு கூடியிருத்தலை அயலார் விரவிய சேரியினர் பலரும் அறிதல். கவ்வை - அலர். இது 'செவிலி புலம்பல்' முதலாகச் செவிலி பின் தேடிச் சேறல்' ஈறாக ஐவகைப் படும் (தஞ்சைவாணன் கோவையில் விளக்கம் காண்க).

**காமம் மிக்ககழிபடர் கிளவி** :காமம் மிக்க-(பிரிவினால்) காதல் விஞ்சுவதனால்; கழி - மிக; படர் - துன்புறுகின்ற; கிளவி - சொல் என்பது இதன் பொருளாகும். தலைமகனைக் காணலுற்று வருந்தா நின்ற தலைமகள் தனது வேட்கை மிகலாற் கேளாதனவற்றைக் கேட்பனவாக விளித்து... கூறா நிற்றல் என்பர் பேராசிரியர் (திருக்கோவை - 174ன்உரை). அதாவது, காமம் மிக்கதனாலுண்டாகிய பெருந் துன்பம் காரணமாகக் கேட்டலும் அதற்கு மறுமொழி கூறலும் இல்லாத புள் முதலியவற்றை நோக்கிக் கூறுதல். ''அவ்வகை வேட்கையளாய் நின்று புன்னைக் கானும் அன்னத்திற்கானும் கடலிற்கானும் கழிக்கானும் அவ்வகை பிறவற்றிற்கானும் தன்கட் பொறை தணிப்பனவாகச் சிந்தித்துச் சொல்லுவதாயிற்று......இதனைத் தலைமகன் கேளா வருமேல் எனின், 'இங்ஙனம் வந்தொழுக இவள் ஆற்றாளாம்' என்று ஒருவகையின் முற்பட்டுப் பிற்றைஞான்று வரைவொடு புகுவானாம்; தோழி கேட்குமேயெனின், தலைமகனை முன்னின்று வரைவு கடாவுவாளாம்; யாருங் கேட்பாரில்லை யெனின், ஆற்றுதலைப் பயக்கும். என்னை, மூடி வேவா நின்றதோர் கலத்தை மூய்திறந்த விடத்து அகத்து நின்ற வெப்பம் குறைபடும்; அதுபோல இவட்கும் அயர்வுயிர்ப்பாம், அச்சொற்கள் புறப்படுதலான் என்பது. இம் மூன்றினுள் ஒன்றாகாமை இல்லை என்பது. தலைமகன் கேட்பின்

இன்னதொன்றாம், தோழி கேட்பின் இன்னதொன்றாம், யாரும் கேட்பாரில்லையாயின் இன்னதொன்றாம் என்று பயன் சிந்தித்துச் செல்லுமோ எனிற், சொல்லாள்; குழவி அழுதாற் போல வேட்கை மிகுதியாற்சொன்னவிடத்து அப்பயன் நிகழும். குழவி அழுகின்றது, 'எனக்குப் பால் தம்மின்; நீர்ஆட்டுமின்' என்றழாது, துக்கம் வந்ததாக அழும்; அழ, அறிவார் பயம் எய்துவிப்பர் என்பது'' (இறை. 30ன் உரை). எ-டு: குறள், 1210; குறுந். 107; திருக்கோவை. 174.

**காமனைப் பழித்தல் :** பிரிந்து வாழ்பவரிடம் காமன் தன் கைவரிசையைக் காட்டுகின்றான். அவன் தன் தீங்கரும்பு வில்லை வளைத்து, வண்டுகளை வரிசையாகக் கோத்த நாணைப் பூட்டி, தேன்பிலிற்றும் மலர்க்கணைகளைத் தெரிந்து, இடம் பார்த்து எய்கின்றான். அந்த மலரம்பு வச்சிரக் கணையைவிடப் பொல்லாததல்லவா? தனிமை வாழ்க்கையில் அக்கொடிய அம்பினால் தாக்கப்பட்டவர் அவனை இகழ்ந்து பேசுகின்றனர். இதுவே 'காமனைப் பழித்தல்' துறையாகும். காந்தி கலித்துறை அந்தாதியில் ஒரு பாடல்:

எரிந்தனை அந்நாள் எனச்சொலு
வார்அதை யான்அறியேன்;
விரிந்தமெய்ச் சீர்த்திகொள் மேதினிக்
கேதனி மேன்மைதரும்
அருந்தவக் காந்தி அமர்குறித்
தேபிரிவு ஆற்றும்எனை
வருந்திடில் மாளுவை வள்ளலின்
ஆணை! மெய்! மன்மதனே.
[சீர்த்தி - புகழ்; மேதினி - பூமி]

''மன்மதா, ஒரு காலத்தில் நீ வெந்தொழிந்தாய் என்பர்; அஃது எனக்குத் தெரியாது. உண்மையான புகழைக் கொண்ட காந்தியடிகளின் உரைவழி நின்று பிரிவு பொறுத்து வாழும் என்னையும் வருத்துவது என்று நீ கருதினால் உனக்கு அழிவு காலம் வந்து விட்டது. இஃது உண்மை; அந்த வள்ளலின்மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன்; வீணாக அழியாதே''- என்று தலைவி அல்லது தலைவனின் கூற்றாக அமைகின்றது இப்பாடல்.

**குறையுற உணர்தல் :** பக் (82-84).

**செலவழுங்கல் :** செல்லுதலைத் தவிர்ந்தது என்பது இதன் பொருள். 'செலவிடை அழுங்கல் செல்லாமையன்றே' (கற்பு - 44)

என்பது தொல்காப்பியம். இளங்காதலர்கட்குப் பிரிதல் என்பது முகவாட்டமும் உயிர்வாட்டமும் தரும் கொடுஞ் செயலாகும். பருவத்தாரின் இம் மனநிலை பருவம் வாராதர்க்குத் தோன்றாது; பருவங் கடந்தார்க்கோ மறந்து போகும். 'உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே' (குறுந். 18) என்றவாறு தலைவி ஆழ்ந்தகன் றடங்கிய காமச்செறிவு உடையவள். 'நம் பிரிவு அறியா நலனொடு சிறந்த நற்றோள்' (அகம் - 41) என்னுமாறு பிரிவென்ற ஒரு நிலையுண்டு என்பதையே அறியாதவள். இம் மடமகளின் ஒப்புதலின்றிப் பிரிந்து செல்லல் இயலாத, கூடாத செயல். பிரிவிற்கு முந்திய சில நாள் இரவுப் புணர்ச்சிகளில் கணவன் மிகையாகச் செய்யும் காதலாரவாரம் பிரிவுக் குறிப்பு உண்டு என்பதாக அறிவுடை நங்கையொருத்தி ஐயப்பட்டு அழுகின்றாள்; இன்ன வருத்தத்தைக் கண்ட தலைவன் செலவினைத் தவிர்க்கின்றான். எ-டு: அகம்-5; பட்டினப்பாலை அடி (218-220); (300-301); குறுந். 135, 256, 267)

**சேட்படை :** சேண்+படை. சேண் - அகற்சி; படை - நிகழ்தல். எனவே, காப்பு மிகுதி சொல்லித் தலைவனை அகலுமாறு செய்தல். சேட்படுத்துதலாவது அகற்றுதல்; தூர விடல். இங்குச் சேட்படுத்துதல் என்பது அணுக்கமாய் நினைத்த அவளது நெஞ்ச நினைப்பையே என்றுகொள்க. இஃதுஆசிரியர் தொல்காப்பியனார் கூறும் ''தோழி நீக்கலினாய நிலைமை நோக்கி'' (கள-11) என்ற துறைச் சொற்றொடரின்கண் அடங்கும். பக். (104-115)

**தகைஅணங்குறுத்தல் ;** தகை - அழகு; அணங்கு உறுத்தல்- வருத்தமுறச் செய்தல். அணங்குறுத்தல் என்பது அணங்குறச் செய்ததைச் சொல்லுவதைக் குறிப்பிட்டதாயிற்று. களவியலில் வரும் துறை. எ-டு: குறள் - 1081; (109-ம் இயல் முழுவதும் கொள்க).

**தாய் இரங்கல் :** தாயார் வருந்துதல் என்பது இதன் பொருள். மகள் செயல் கண்டு தாயார் வருந்துவதாகக் கூறப் பெறுவது 'தாய் இரங்கல்' என்னும் துறை. இதனை நற்றாய் இரங்கல் என்றும் நவில்வர். அசதிக் கோவையில் நற்றாய் இரங்கல் துறையில் ஒரு பாடல்:

அற்றாரைத் தாங்கிய ஐவேல்
அசதி, அணிவரைமேல்
முற்றா முகில்முலை, எவ்வாறு
சென்றனள் முத்தமிழ்நூல்

கற்றார்ப் பிரிவும்கல் லாதார்
இணக்கமும் கைப்பொருள் ஒன்று
அற்றார் இளமையும் போலே
கொதிக்கும் அருஞ்சுரமே.

''ஏதும் இல்லாதாரைக் காப்பாற்றுகின்ற அசதி என்ற வள்ளலின் மலையினிடத்தே, என் மகள் எப்படி நடந்தாளோ? முத்தமிழ் வல்ல வித்தகரைப் பிரிந்தால் உள்ளம் கொதிப்பது போலவும், கல்லாதாரோடு சேர்ந்து வாழும்போது சுடுவது போலவும், கையில் பணம் இல்லாதவனுடைய இளமைப் பருவம் ஒன்றையும் அநுபவிக்க வொட்டாமல் அனலாகக் கொளுத்துவது போலவும் என் சிறு பெண்-முற்றா முகிழ் முலை-சென்ற பாலைநிலம் நெருப்பைக் கக்குமே; அதைக் கடந்து எவ்வாறு சென்றனளோ?'' என்று தாய் இரங்குகின்றாள்.

**திங்களைப் பழித்தல்:** பிரிந்தோரைச் சுடும் சந்திரனைப் பழித்துப் பேசுதல் திங்களைப் பழித்தலாகும். திங்கள் இயற்கையில் தண்ணளியுடையது. அது புணர்ந்தோர்க்கு இன்பமும், பிரிந்தோர்க்குத் துன்பமும் தருகின்றது. காந்தி கலித்துறை அந்தாதியில் ஒரு பாடல்:

இழிவு பிறன்மனை எய்தல்
எனும்அறிவு இன்றி,உறு
பழியும் உணர்கிலை; பண்டு
குருபெரும் பன்னியை,நீ
அழிதல் வினைசெய்தை என்பர்;
அதுகொடு மோகனனின்!
வழுவில் தவமுடை என்னை
மதியே! சுடவலையே?

''பிறன்மனை நோக்குதல் இழிவு என்ற அறிவே இல்லாமல், வரக்கூடிய பழியையும் பாராமல், அந்நாள் குருபெரும் மனைவியை அழிகாரியம் செய்தாய் நீ என்பர்; அந்த வீரத்தை மனத்தில் கொண்டு குற்றமற்ற தவமுடைய மோகன தாசனின் அடியேனாகிய என்னைச் சுடப் பார்க்கின்றாய்; மதியே! இஃது உன்னால் நடவாத காரியம்' என்று பேசுகின்றான் காந்திவழி நின்ற மெய்யடியான்.

**தூது போக்கல்:** தூதாக அனுப்புதல் என்பது இதன் பொருள். காதலிக்குக் காதலன், அல்லது காதலனுக்குக் காதலி

தூது விடுதல் இத்துறையாகும். தோழனை, அல்லது தோழியை —மேகத்தை — கிளியை—வண்டை—குயிலை — நாரையை இன்ன பிறவற்றை, அன்றித் தன் நெஞ்சை, தூது செல்லச் சொல்லிப் பேசும் துறை இது.

கடமை காரணமாகக் காதலியைப் பிரிந்து சென்ற காதலன் கடமையை முடித்துக் கொண்டு திரும்புகின்றான் வீடு நோக்கி. தேர் பறந்துதான் வருகின்றது; மனவேகத்துடன் போட்டி போட முடியவில்லை. மேலே பறந்து ஓடிக் கொண்டிருக்கும் முகிற் கூட்டங்களை நோக்கி அவற்றைத் தூது விடுகின்றான். இது பற்றி நந்திக் கலம்பகத்தில் ஒரு பாடல்:

ஓடுகின்ற மேகங்காள்!
 ஓடாத தேரில் வெறும்
கூடு வருகுதென்று
 கூறுங்கோள்!—நாடியே
நந்திச்சீ ராமனுடை
 நன்னகரில் நல்நுதலைச்
சந்திச்சீர் ஆமாகில்
 தான்.

''ஓடுகின்ற மேகங்களே! ஓடாமல் ஆமைபோல் நகர்ந்து வருகின்ற தேரில் ஒரு வெறுங்கூடு வருகின்றது என்று என் காதலிக்குச் சொல்லி வையுங்கள்' என்று கூறுகின்றான் தலைவன்.

**நாணிக் கண் புதைத்தல்:** வெட்கிக் கண்களைப் பொத்திக் கொள்ளுதல் என்பது இதன் பொருள். காதலி வெட்கத்தால் கண்களை மூடிக் கொள்ளுகின்றாள். ''ஏன் இப்படி? வேண்டாம் இது; கண்களைத் திற'' எனக் காதலன் கூறும் கூற்றே நாணிக் கண் புதைத்தலாகும். ஒரு துறைக் கோவை என்பது ஒரு நூல்; 400 கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் கொண்டது; முழுதும் 'நாணிக் கண்புதைத்தல்' என்ற ஒரே துறைபற்றிய பாடல்களே. இவற்றில் ஒரு பாடல்:

ஆவியும் பூவும் தகரமும்
 தேனும் அணிந்துநறு
நாவியும் சேர்குழ லீர்!தள
 வாய்ரகு நாதன்வரைக்

காவியங் கைபுனைந் தீர்!விடுத்
தீர்தனம்! கஞ்சமலர்த்
தேவியும் போல்நின் றீர்!விருப்
பேதுங்கள் சிந்ததைக்கே.

[தகரம் - மயிர்ச்சாந்து; நாவி - கஸ்தூரி குழல் - கூந்தல்; காவி - காந்தள் மலர்; தனம் - கொங்கை; கஞ்ச மலர்தேவி- திருமகள்; விருப்பு - உள்ளக் கிடக்கை]

''கண்ணைக் கையால் பொத்தி மூடினீர்; மார்பகத்தை மூட மறந்தீர்! திருமகள்போல் நிற்கின்றீர். உங்கள் உள்ளக் கிடக்கை தான் என்ன?'' என வினவுகின்றான் காதலன் (தளவாய் இரகு நாதன் பாட்டுடைத் தலைவன்)

**நாணுத்துற வுரைத்தல்:** தோழியால் தலைவி களவொழுக்கத்திற்குக் கிட்டுதற்கு அரியள் என்று மறுத்து அகற்றப்பெற்று ஆற்றானாய தலைமகன் தோழிக்குத் தன் நாண் துறவு உரைத்தலும், அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் தன் நாண் துறவுரைத்தலுமாகும். நாண் துறவுரைத்தல்-'மடன்மாவேறுவேன்' என்றாற்போன்று நாணைத் துறந்தமை தோன்றும் பேச்சுகளைப் பேசுதல். தோழி அறத்தொடு நிற்பதாகக் கூறுவதும் இதுவே யாகும். எ-டு: குறள் 1131.

**நொதுமலர் வரைவு** (பக் 134 – 141)

**பாங்கி மதியுடன்பாடு** பக் (80—87)

**பாலனைப் பழித்தல்:** தான் பெற்ற பிள்ளையை இகழ்ந்து பேசுதல் என்பது இதன் பொருள். பிள்ளைப் பேறு காரணமாகத் தன்னிடம் இன்பம் துய்க்க முடியாமல் காதலன் தன்னை விட்டு நீங்கினானாக, அது காரணத்தால் பிள்ளையை நோக்கிக் கூறும் தாயின் 'கூற்றே பாலனைப்பழித்தல்' துறையாகும்.

அரும்பால கா! முனம் பூமணம்
சொற்பொருள், ஆகம்உயிர்,
கரும்பாம் சுவை,எள்ளும் எண்ணெயும்
போலொத்த காதலரைப்
பெரும்பாலில் நல்லன்னம் கங்கா
சலத்தைப் பிரிப்பது போல்
சுரும்பாம் புலவர் யமன்ஆலை
செக்கெனத் தோன்றினையே.[1]

1. தனிப்பாடல் திரட்டு - முதற்பகுதி - செய். 44

''அருமையான மகனே, அந்த நாளில்—நீ பிறப்பதற்கு முன்னர், நானும் நின்தந்தையும் (காதலரும்) பூவும் மணமும் போல— சொல்லும் பொருளுமாக—உடம்பும் உயிரும் என்ன – கரும்பும் அதில் பொருந்தும் சுவையுமாக—எள்ளும் அதனுள் இருக்கும் எண்ணையும் என்று சொல்லும்படிப் பிரியா இயல்பு கொண்டு வாழ்ந்தோம். நீரை விட்டுப் பாலைப் பிரித்தெடுக்கும் அன்னப் பறவைபோல் நீ வந்தாய் எங்களைப் பிரிவு செய்ய. பூவும் மணமுமாக இருந்த எங்களைப் பிரிக்க வண்டாகவும், சொல்லும் பொருளுமாக வாழ்ந்த எங்களை வேறுபடுத்தப் புலவனாகவும், உடலையும் உயிரையும் பிரித்தெடுக்கும் எமனாகவும், கரும்பையும் சுவையையும் தனித்தனியாக்கும் ஆலையாகவும் எள்ளை விட்டு எண்ணெயை எடுக்கும் செக்காகவும் நீ வந்து தோன்றினாய்!'' என்கின்றாள் (இது பல பட்டடைச் சொக்க நாதப் புலவர் பாடியது).

**பிரிவச்சம்:** தலைவி தலைவன் பிரிவான் என அஞ்சுவதும், தலைவன் அவளைப் பிரிவு அஞ்சுவிப்பதும் பிரிவச்சமாகும். தலைவன் 'நின்னிற் பிரியேன், பிரியின் ஆற்றேன்' என்று சொல்வான். தலைவன் பிரிவதை இறையனார் களவியலுரையாசிரியர் ''கருங்குழற் கற்றை மருங்குற இருத்தி, அளகமும் நுதலும் தகை பெற நீவி, ஆகமும் தோளும் அணி பெறத் தைவந்து, குளிர்ப்பக் கூறித், தளிர்ப்ப முயங்கிப்'' பிரிவான் என்று மிக நயம்படக் கூறுவர். இதுவே பிரிவச்சம். எ-டு: குறுந். 300.

**பிரிவாற்றாமை;** துணைவர்கள் ஒருவரை யொருவர் பிரிந்திருத்தலைச் சகியாமைபற்றிக் கூறப் பெறுவது இத்துறை. புதிதாக மணந்து கொண்ட இருவரின் காதல் வாழ்வுக்குக் குறுக்கே காந்தியின் போர் வந்து கலந்து விட்டது. காதலன் போர்க் கோலம் கொள்ளுகின்றான்; காதலி கலங்கிக் கண்ணீர் பெருக்குகின்றாள். அவளைத் தேற்றி ஆறுதல் மொழி பகர்கின்றான் அவன். காந்தி கலித்துறை அந்தாதியில் ஒரு பாடல்:

பெண்ணரசே!என் பிரிவுக்கு
இரங்கல் பெருமையல;
கண்ணொளியே!உயர் காந்தி
களத்தில் கலந்திடவே

எண்ணிஉ ளேன்;நான் வரும்வரை
நீநம் இனித்ததமிழ்
நண்ணும் இலக்கியத் தேன்குடித்து
ஆறுக நாயகியே.

''பெரிய காந்தியின் அமர்க்களம் குறுக நான் எண்ணும்போது நீ வருந்தவே கூடாது; நான் திரும்பும் வரை நீ நம்முடைய தித்திக்கும் இலக்கியத் தமிழ்த் தேனைப் பருகி ஆறுதல் பெறுக'' என்று இயம்புகின்றான் தலைவன்.

ஒரு தலைவன் பிரிந்து போவேன் என்று அடிக்கடிச்சொல்லியும் பிரியாதிருந்தான். பின்னொருநாள்போவேன்என்றுஉரைத்தபோது, வழக்கம்போல் சும்மாசொல்லுகின்றான் என்று எண்ணிய தலைவி 'போய் வாருங்கள்' என்று தானும் வழக்கம்போல் மொழிந்தனள். இத்தடவை அவள் இசைவுதந்தாள் எனக் கருதிக் கொண்டு தலைவன் உடனே புறப்படுவிட்டான். எதிர்பாரா இப்பிரிவினை அவளால் தாங்க முடியவில்லை, அழுதாள்; ஆறாகக் கண்ணீர் பொழிந்தாள்; அது குளமாகப் பெருக்கெடுத்தது. முலைகள் கரைகளாக அமைந்த கண்ணீர்க் குளம் நாரைகள் மேயும் நன்னில மாயிற்று. எ-டு: குறுந்-325,

**பொழுது கண்டு மயங்கல்:** மாலைப் பொழுது வருத்துவ தால் பிரிந்தவர் மயங்கி வருந்துதல்பற்றிக் கூறுவது இத்துறை. பிரிந்த காதலரை வாட்டுவது மாலைக் காலமே யல்லவா? காதல் நோய் காலையிலே அரும்பும்; பகல் முழுதும் மொட்டாக இருக்கும்; மாலையிலே நன்றாக மலரும்,

சிவப்பிரகாசரின் ஒரு பாடல்:

நந்தா மதுகைப் பழமலை
யார்வெங்கை நாடனையாய்!
வந்தாவி அம்புயம் வாட்டும்முன்
நாளில்அம் மாலைதந்து
சிந்தா குலமுற வேதனித்
தாரைச் செறுக்கும்;மதன்
செந்தா மரையை மலர்த்தும்;இம்
மாலைச் சிறு பொழுதே.

[மதுகை - பலம்; பழ மலை - விருத்தாசலம்; அம்புயம் - தாமரை; ஆகுலம் - துன்பம்; மதன் -மன்மதன்]

''இந்த மாலைச் சிறு காலம் தடாகத்திலுள்ள தாமரையை வாட்டமடையச் செய்யும்; முன் காலத்தில் இக் காம மயக்கத் தைத் தந்து இன்று தனிமையாக விட்டுச் செல்லப் பட்டாரைத் தாக்கும்; மதனவேளின் செந்தாமரை முகத்தை மலரச் செய்யும் இம் மூன்றையும் செய்யும் மாலையின் எல்லை சிறிதே எனினும் அஃது ஆற்றும் செயல் பெரிதாகவே இருக்கின்றது'' என்கின்றாள் பொழுது கண்டு மயங்கும் தலைவி யொருத்தி.

**மடல் ஊர்தல்:** தலைவியின் நற்குறிப்பு அறிந்தபின் காதலர்கள் பகலும் இரவும் காணவும் கூடவும் தோழி வழி செய் வாள். தலைவியின் அருமையைத் தலைவன் உணரவும், தலைவனின் உறுதியைத் தான் உணரவும் இக் கூட்டத்திற்கு அதிகமாக இடம் கொடாள். வேண்டுமென்றே கூட்டம் நிகழாத வாறு நாள் கடத்துவாள். இந்நிலையில் அவன் மடலேறத் துணிந்து தன் கருத்தைத் தோழிக்கு வெளியிடுவான். மடல்மலி என்பது பனங்கருக்கால் செய்யப்பெற்ற ஒரு குதிரை. இக் குதிரைக்கு ஆவிரம்பூ மாலையும் மணியும் அணிதல் உண்டு. காமுற்ற பெண்ணை எய்தப்பெறாத ஆடவன் மார்பில் எலும்பு மாலையும் தலையில் எருக்கம் பூ மாலையும் கொண்டு மடல்மாமேல் ஏறித் தெருவில் வருவான். இவ்வழக்கு 'மடலூர்தல்', 'மடலேறுதல்' எனப்படும். இதனால் ஊரார் இருவர் காதல் ஒழுக்கத்தை அறிவர். காதலன்பால் இரக்கம் கொள்வர்; பெண்ணின் பெற்றோரைக் குறை கூறுவர். பெரும்பாலும் மடலேற்றம் நிகழாதபடி மணங்கள் முடிந்துவிடும். எ-டு: குறுந் 17, 182.

**மடல் கூற்று:** சேட்படுக்கப்பெற்று ஆற்றானாய தலை மகன் இனி வேறு வழி இல்லாமையால் மடல் ஏறியாவது தலை மகளை அடைதல் வேண்டும் என்று கூறுவதுதான் மடற் கூற்று என்பது. எ-டு. திருக்கோவை - 74; குறள், 1131.

**மடல்திறம்:** பக் (115-123),

**மடலேறுதல்:** அகத்திணை இலக்கியத்தில் 'மடல்' அல்லது 'மடல்மா' பனங் கருக்கால் செய்யப்பெற்ற குதிரையைக் குறிக்கும். இக்குதிரைக்கு ஆவிரம்பூ மாலையும் மணியும் அணிதல் உண்டு (குறுந். 173). தான் காமுற்ற பெண்ணை எய்தப் பெறாத ஆடவன் உடலெலாம் நீறு பூசி மார்பில் எலும்பு மாலை யையும் தலையில் எருக்கம் பூமாலையையும் கொண்டு தன் உருவத் தையும் தலைவியின் உருவத்தையும் எழுதிய படம் ஒன்றைக்

கையிலேந்தி மடல் மீது இவர்ந்து தெருவில் வருவான் (ஷ்-17). இதுவே 'மடலேறுதல்' எனப்படும். இதனால் தலைவனின் மனத் திட்பத்தையும் அவன் காதலுக்கு இலக்கான நங்கையையும் ஊரார் அறிவர்; மேலும் அரம்போலும் கூரிய பனங்கருக்குப் பட்டுப்பட்டு அவன் மேனியினின்றும் பெருகி வரும் குருதியொழுக்கினைக் கண்டு அவன்மீது இரக்கமும் கொள்வர். 'இன்னவளுக்கும் இன்னவனுக்கும் நட்பு உண்டு' என்பதை அறிந்து அதனை வெளிப்படப் கூறிப் பழிப்பர்; அது கேட்டுத் தமர் மணம் புரிவிப்பர் (கலி - 142). இத்தகைய நிகழ்ச்சி நடை பெறாமலேயே பெரும்பாலான மணங்கள் நிறைவு பெற்றுவிடும் என்று கொள்ளலாம்.

தலைவனின் பொங்கிய காதலுக்குத் தோழி செவி சாயாத போதும், இருவரும் சந்திக்கக் களம் அமைத்துத்தர அவள் மறுத்த போதும், தலைவனின் கையுறையை ஏற்க மறுத்தபோதும், இன்னும் பலவாறும் கூட்டம் நிகழாதவாறு நாட்கடத்தும் போதும் தலைவன் தோழியிடம் மடலேறும் தனது திட்டத்தை வெளியிடுவான். தலைவியின் அருமையைத் தலைவன் உணரவைப் பதற்கும், தலைவனின் உறுதியைத் தான் உணரவேண்டும் என்பதற்குமே தோழி இங்ஙனம் காலம் கடத்துவாள். இத் திட்டத்தை அறியும் தோழி சிறிது கலக்கத்தை அடைவாள், அதன் பின்னர் தோழியின் துணையால் களவு நீட்டிக்கும்; ஆயினும், விரைந்து மணம் முடிக்கும் திட்டத்தில் குறிக் கொண்டே நிற்பாள் தோழி.

**மடல் விலக்கு:** மடலேறத் துணிந்தமை கேட்ட தோழி இனி இவன் மடலேறவும் உட்கொண்டு, தன் நாணினை விட்டு வந்து மடலேறினால் அவன் அருள் என்னவாகும் என்று கூறியும் (திருக்கோவை - 77), தலைவியின் உருவத்தில் மொழி, நடை எழுதுதல் இயலாது என்று கூறியும் (78), அவயவங்களை எழுதுதல் அரிது (79), தலைவியின் எண்ணமறிந்து வருவேன், அதுவரை பொறுத்திடுக எனக் கூறியும் (80), தலைவன் குறையை முடித்துத் தருவதாகக் கூறியும் (81) மடல் ஏறுதலை விலக்குவள். இதுவே மடல் விலக்கு எனப்படும். எ - டு : திருக்கோவை, (77- 81).குறள். 1132.

**முன்னிலைப் புறமொழி:** இது, கூறப்பெறும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் முன்னே இருப்பவும், அவரை விளித்துக் கூறாமல், வேறொருவரையேனும், பிறிதொரு பொருளையேனும்

விளித்துக் கூறுதல். முன்னிலைப் புறமொழி எல்லா வாயிற்கும் உரியது (தொல். பொருள் - கற். 26). தோழி நிலவை நோக்கிக் கூறியது, குறுந். (47); தலைவி கூறியது குறுந். 152, 290; தோழி கூற்று கலி - 22.

**முன்னுற உணர்தல்:** பக். (84-86).

**வண்டோச்சி மருங்கணைதல்:** வண்டை ஓட்டிக் கொண்டே பக்கத்தில் நெருங்குல் என்பது இதன் பொருள். தன்னால் காதலிக்கப்பெற்றவள் ஒரு தனியிடத்தே நிற்கின்றாள். அவள் குறிப்பை அறிய அவளுக்கு அணித்தே அணுக விரும்புகின்றான் காதலன். திடீரென எப்படி அவள் சூழல் அணைவது? அம் மெல்லியல் முடித்த கூந்தலில் நறுமலர் நிறைய சூடியிருக் கின்றாள்; அம்மலரிடத்தே மதுவுண்ண வண்டுகள் மொய்த்திருக் கின்றன. ''ஓ! வண்டுகாள்! அம்மென் கொடியை ஏன் வதைக் கின்றீர்கள்? ஓடுங்கள்!'' என்று கூறி வண்டுகளை விரட்டிக் கொண்டே கையை உயர்த்திய வண்ணம் அவள் பக்கம் அணைந்து விடுகின்றான் தலைவன். இதற்குப் பாக்கள் வண்டை ஓட்டும் துறையில் பாடப்படுகின்றன.

காந்தி கலித்துறை அந்தாதியில் ஒரு பாடல்:

நாகு செழித்திட நண்ணும்
முரட்டுக் கதர்சுமந்து
வாடிய சிற்றிடை நொந்தரும்
எண்கண் மணிவருந்தக்
கூடி அவர்நறுங் கூந்தல்
மலர்மொய்த்துக் கொல்லுகின்றீர்!
கேடு வரும்இனி ஓடுமின்!
வண்டீர்! கிளிமொழிக்கே.

[வாடிய - வாட்டமடைந்த; கண்மணி - தலைவி; கிளி மொழி - தலைவி.]

வண்டுகளை ஓட்டுவதுபோல் கிள்ளைப் பேச்சினளின் மருங்கே பொருந்துகின்றான் காதலன்.

**வரைவுகடாதல்:** பக் (142—155).

**வரைவு மலிதல்:** திருமணம் செய்து கொள்ளுதற்கு மேற் கொள்ளும் முயற்சி. தோழி தலைவியை நோக்கி, 'நின் மன்றலுக்

குரிய முயற்சிகள். நடைபெறுகின்றன; நீ கவலற்க' என்று கூறுவது இத்துறையின் பொருளாகும். இத்துறை பல்வேறு வகையாக அமைக்கப்பெறும் எ-டு; குறுந், 51, 297, 351, 361.

**வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதல்:** களவுத் தலைவன் திருமணமாகிய சடங்கை இடையே வைத்துக்கொண்டு அதற்கு வேண்டிய பொருளைத் தேடப் பிரிதலாம் இத்துறை. இங்குத் தலைவன் வறியனோ என்ற ஐயம் எழக் காரணம் உண்டு; முன்னோர் தேடி வைத்த பொருள் மிகுதியாக இருப்பினும் அதனை நுகர்வோன சிறியோனென்றும் முயற்சியற்ற சோம்பன் என்றும் இகழப்படுவனாதலாலும், தான் முயன்று தேடிய பொருளை நுகர்தலே உத்தமமாதலாலும் பொருள் தேடப் பிரிவன் என்க. இதுவே பிரிதற்கு அடிப்படைக் காரணம். 'வரை பொருட் பிரிதல்' என்ற தலைப்பில் திருக்கோவையாரில் பல பாடல்கள் உள்ளன. இத்துறைப் பாடல்கள் கற்பனை வளம் செறிந்து பல்வேறு விதமாக அமையும். எ டு: குறுந் 143, 236, 237, 397; குறள் 1149; திருக்கோவை. 267, 268.

**வன்புறை:** வன்புறை என்பது வற்புறுத்தல் எனப் பொருள் படும். இத்துறையில் நம்பி அகப்பொருள் பல கிளவிகளைப் பேசும். எ-டு; குறுந். 73, 285, 300, 387.

**வாயில் நேர்தல்:** வாயில்-தூது; நேர்தல்-உடன்படுதல். தலைவியே தலைவன் விட்ட தூதிற்கு உடன்படுவாள். களவுக் காலத்தில் தோழி தலைவன் வேண்டுகோட்கு இசைவதில்லை. காமம் காழ்க்கொண்ட இளைய நெஞ்சங்கட்கு எண்ணிப்பார்க்கும் அறிவு சில நாளைக்குத் தோன்றாது. இருவர் செய்கையைத் தோழிதான் அறிவு நிலையில் நின்று நாடுவாள். இவள் போக்கு திருமணத்தையே நாடி நிற்கும். தலைவன் தலைவியைச் சந்திப் பதில் கட்டுப்பாடுடன் செயற்படுவாள். அடிக்கடி வாயில் நேர்வ தில்லை. கற்பு வாழ்க்கையிலும் பரத்தையிற் பிரிந்து திரும்பும் தலைவனுக்கு தலைவியின் குறிப்பறிந்து வாயில் நேர்தல் உண்டு. ஆகவே, தோழிக் கூட்டத்தில் வாயில் நேர்தல் பாடல்கள் குறை வாகவே இருக்கும். எ-டு; குறுந், 10, 33, 45, 258; அகம்-96இன் விளக்கம்; அகம்-176.

**வாயில் மறுத்தல்:** களவுக் காலத்தில் பெரும்பான்மை யான சந்தர்ப்பங்களில் தோழி வாயில் மறுப்பாள். கற்புக் காலத்

தில் தலைவியின் குறிப்பறிந்து வாயில் மறுப்பாள். பரத்தையிற் பிரிந்து மீண்டுவரும் தலைவனுக்குத் தலைவியும் வாயில் மறுப்பதுண்டு. வாயில் மறுத்தல் பாடல்கள் வாயில் நேர்தல் பாடல்களை விட அதிகமாகக் காணப்பெறும் எ-டு: குறுந், 61, 139, 202; ஐங். 51, 54; 47, நற். 360.

திருநறையூர்பற்றிய பெரியதிருமொழிப் பாசுரம் ஒன்றிற்கு விளக்கம் தரும் முறையில் பராசரபட்டரின் நிர்வாகத்தை பெரிய வாச்சான் பிள்ளை மிகஅழகாக எடுத்துக்காட்டும்போது இத்துறை அருமையாக அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம்.

பள்ளி கமலத்திடைப்பட்ட
பகுவாய் அலவன் முகம்நோக்கி
நள்ளி ஊடும் வயல் (6-7;6)

தாமரைப் பூவில் பாயல்கொண்டிருந்த ஆண் நண்டின் முகத்தைப் பார்த்துப் பெண் நண்டு பிணங்கும் என்பது பாசுரப்பகுதியில் குறிப்பிட்டுள்ள பொருள். பட்டரின் விளக்கம்: ஓர் ஆம்பல் மலரில் நண்டு தம்பதிகள் இனிது வாழ்கின்றன. ஒரு நாள் ஆண் நண்டுக்குக் (அலவன்) கருக்கொண்டுள்ள தன் பேடைக்கு (நள்ளி) இனிய பொருள்களைக் கொண்டுவந்து தரவேண்டும் என்று ஆசை உண்டாயிற்று. தாமரைப் பூவிலிருந்து மகரந்தத்தைத் திரட்டிக் கொணர்ந்து கொடுக்க நினைந்து மெல்ல நகர்ந்து தாமரைப் பூவை அடைந்தது; அப்போது பகலவன் மறையவே, அத்தாமரை மலர் மூடிக்கொள்ள அதனுள்ளே அகப்பட்டுக் கொண்டது. தாமரையை மலர்த்தி எப்படியாவது வெளிக் கிளம்ப முயன்றும் இயலவில்லை. அடுத்த நாள் சூரியன் தோன்றும் வரையில் காத்திருக்கவேண்டியதாயிற்று. இரவெல்லாம் மலரினுள் புரண்டு பொழுது விடிந்ததும் வெளிப் போந்தது. தாதும் சுண்ணமும் உடலில் ஒட்டிய நிலையில் தன் மனைக்கு விரைந்து வந்து சேர்ந்தது. பகற்பொழுதில் ஆம்பல் மலர் மூடிக்கொள்ளுமாதலால் ஆண் நண்டு அங்கு வந்து சேரும் சமயமும் பெண் நண்டு கிடக்கும் ஆம்பல் மலர் மூடிக்கொள்ளும் சமயமும் ஒன்றாக இருந்தது. இதனைப் பார்த்தால், ஆண் இரவில் வேறிடத்தில் தங்கி வந்தபடியாலும், உடம்பில் சுவடு இருந்தபடியாலும், ஊடல்கொண்டு கதவை அடைத்துக் கொண்டது என்று எண்ணும்படியாக இருந்தது. 'வாயில் மறுத்தல்' என்ற துறை இதில் அடங்கியிருத்தலைக் கண்டு மகிழலாம்.

**வாயில் வேண்டல்:** ஏதோ ஒருவகையால் பிணங்கியிருக்கும் தலைவியை அடைதற் பொருட்டு அவளை இணங்கச் செய்யுமாறு தலைவன் தோழியை வேண்டல். சில சமயம் பாணனைத் தூதாக விட்டும் வாயில் வேண்டுவான். வாயில்-தூது, எ-டு; குறுந். 33.

**வெறியாட்டு:** பக் (123—134)

**வெறிவிலக்கு:** தலைவியின் மன வாட்டத்தையும் உடல் வேறுபாட்டையும் கண்ட தாயர் கட்டுவிச்சியின் குறியால் இவை தெய்வத்தினாலாயிற்று என்று துணிந்து வேறியாடலினால் இதை உறுதி செய்ய வெறியாட்டிற்கு ஏற்பாடு செய்வர். தோழி அறத்தொடு நின்றோ வேறு வழிகளை மேற்கொண்டோ இதனை நிறைவேற்றவிடாமல் தடுக்க முயல்வாள். இதுவே 'வெறி விக்கு' என்று வழங்கப்பெறும்.

## பின்னிணைப்பு—3
## பொருட்குறிப்பு அகராதி
(எண், பக்கஎண்)

# பிழை—திருத்தம்

குறிப்பு: கவனக்குறைவால் பிழைகள் நேர்ந்து 'பிழைமலிந்த சருக்கம்' ஆயிற்று. முக்கிய பிழைகட்குமட்டிலும் திருத்தம் போடப் பெற்றுள்ளது. விடப்பெற்றுள்ள நிறுத்தற் குறிகளைப் பெய்து படித்துக்கொள்க.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 9 | செல்லுதல் | சொல்லுதல் |
| 38 | 6 | மெழிாப | மொழிப |
| 98 | 16 | அம்பர் | அம்பற் |
| 129 | 2 | கெழுகை | கெழுதகை |
| 129 | 3 | டஉையோன் | உடையோன் |
| 142 | 1 | Vii | Viii |
| 148 | 32 | புறமொழியாக | புறமொழியாக[148] |
| 159 | 26 | பாங்கிகுக் | பாங்கிக்கு |
| 160 | 1 (அ.கு) | திருக்கோடையார் | திருக்கோவையார் |
| 165 | 16 | தலைவியையை | தலைவியை |
| 174 | 1 (அ.கு) | வகையில் படர்ந்து | வகையில்; படர்ந்து |
| 177 | 17 | அன்றுஎனவே | அன்று. எனவே |
| 193 | 1 | மரபுகன் | மரபுகள் |
| 203 | 24 | விரைபொருட்... | வரைபொருட்... |
| 208 | 4 (அ.கு) | களவிளல் | களவியல் |
| 222 | 25 | அவனை ஒன்று | அவனை ஒன்றும் |
| 232 | 10 | நன்றாய்க்குக் | நற்றாய்க்குக் |
| 254 | 1 | அறயாமையைக் | அறியாமையைக் |
| 263 | 20 | 6 | (6) |
| 269 | 1 | VI | IV |
| 273 | 7 (அ.கு) | 274 பக்கத்திற்குக் கொண்டுபோகவும் | |
| 279 | 22 | மனறவது | மறைவது |
| 314 | 1 (அ.கு) | களி | கலி |
| 316 | 29 | மகளே | மகனே |
| 323 | 11 | கூந்தலுுடையவள் | கூந்தலுடையவள் |

| | | | |
|---|---|---|---|
| 331 | 30 | ஒப்பரவு | ஒப்புரவு |
| 343 | 2 (அ.கு) | ஐற்குறு | ஐங்குறு |
| 445 | 11 | பொதுதற்கு | பொதுவற்கு |
| 479 | 5 | பத்துபாட்டில் | பத்துப்பாட்டில் |
| 481 | 5-6 | தலைவியாக...ம் | தலைவியாகவும் |
| 484 | 1 | இறைச்சிப் பொருன் | இறைச்சிப்பொருள் |
| 485 | 12 | கூறியுள்ளார்கள் | கூறியுள்ளார்கள்[1] |
| 487 | 20 | செய்வாயாக | செய்வாயாக'' |
| 489 | 12 | இது | இது: |
| 494 | பாடல் (4) | ஒய்குவரை | ஓங்குவரை |
| 495 | 6 | லோழி | தோழி |
| 543 | 1(தலை) | அகத்திணையால் | திணையால் |
| 552 | 29 | இாங்கல் | இரங்கல் |
| 553 | 11 | வாம்மைக்கும் | வாய்மைக்கும் |
| 564 | 8 | சித்தரிப்பர் | சித்திரிப்பர் |
| 578 | 4 | வாழ்த்வதுதாகின்ற | வாழ்த்துவதாகின்ற |
| 580 | 22 | விஞர் | கவிஞர் |
| 588 | 22 | களிப்பர் | களிக்கும் ஒரு விளையாட்டு. |
| 589 | 19 | குராஆள்(பா) | குராஅன் |
| 598 | 13 | என் | என |
| 599 | 3 | நிரையும் | நீரையும் |
| 599 | 12 | (iii) | (ii) |
| 601 | 3 (பா) | குறையிறைப் | குறியிறைப் |
| 603 | 10 | யதோ | யதோ |
| 608 | 4 | றிற்றல் | நிற்றல் |
| 613 | 10 | பறறி | பற்றி |
| 615 | 2 (பா) | இரம்கல் | இரங்கல |
| 616 | 14 | புறப்படு... | புறப்பட்டு... |
| 617 | 14 | மடல்மலி | மடல்மா |
| 620 | 9 | நுகர்வோன | நுகர்வோன் |
| 624 | 22 | ஓரில்பிச்சையர் | ஓரில்பிச்சையார் |
| 624 | 11 | வெறியாடிய | வெறிபாடிய |
| 624 | 46 | சௌதமனார் | கௌதமனார் |

# பேராசிரியர் டாக்டர் ரெட்டியாரின் நூல்கள்

**ரியம் :**

1. தமிழ் பயிற்றும் முறை.
2. கவிதை பயிற்றும் முறை.
3. அறிவியல் பயிற்றும் முறை.
4. கல்வி உளவியல்.
5. யுனெஸ்கோ : அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

**இலக்கியம் :**

6. கவிஞன் உள்ளம்.
7. காலமும் கவிஞர்களும்.
8. காதல் ஓவியங்கள்.
9. அறிவுக்கு விருந்து.
10. முத்தொள்ளாயிர விளக்கம்.
11. பரணிப் பொழிவுகள்.
12. அறிவியல் தமிழ்.
13. வேமனர்.
14. சி. ஆர். ரெட்டி.
15. திருக்குறள் கருத்தரங்கு மலர் - 1974 (பதிப்பு)
16. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
17. கம்பனில் மக்கள் குரல்
18. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்.
19. மேகானி.
20. குர்ஜாட அப்பா ராவ்.

**சமயம் :**

21. மலைநாட்டுத் திருப்பதிகள்.
22. தொண்டைநாட்டுத் திருப்பதிகள்.
23. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்:
24. வடநாட்டுத் திருப்பதிகள்,
25. சோழநாட்டுத் திருப்பதிகள்- முதல் தொகுதி
26. சோழநாட்டுத் திருப்பதிகள்—இரண்டாம் தொகுதி
27. சில நோக்கில் நாலாயிரம்.
28. முத்தி நெறி